# எஸ். ராமகிருஷ்ணன் கதைகள்

(இரண்டாம் தொகுதி)

## எஸ். ராமகிருஷ்ணன்



உயிர்மை
பதிப்பகம்

விலை ரூ. 410

உயிர்மை பதிப்பக வெளியீடு 485

எஸ்.ராமகிருஷ்ணன் கதைகள் (இரண்டாம் தொகுதி) ⁄ சிறுகதைகள் ⁄ ஆசிரியர் : எஸ். ராமகிருஷ்ணன் ⁄ © எஸ். ராமகிருஷ்ணன் ⁄ முதல் பதிப்பு : டிசம்பர் 2014 ⁄ வெளியீடு : உயிர்மை பதிப்பகம், 11/29 சுப்பிரமணியம் தெரு, அபிராமபுரம், சென்னை –600 018 தொலைபேசி : 91 – 44 – 24993448, மின்னஞ்சல் : uyirmmai@gmail.com, இணையதளம்: www.uyirmmai.com ⁄ அச்சாக்கம் : மணி ஆஃப்செட், சென்னை 600 077

S.Ramakrishnan Kathaikal (Part-II) ⁄ Short Stories ⁄ Author S. Ramakrishnan ⁄ © S. Ramakrishnan ⁄ Language: Tamil ⁄ First Edition : Dec.2014 ⁄ Demy 1x8 ⁄ Paper : 18.6 kg maplitho ⁄ Pages : 432 ⁄ Published by : Uyirmmai Pathippagam, 11/29 Subramaniam Street, Abiramapuram, Chennai - 600 018, India. Tele/Fax : 91-44 -24993448, e-mail : uyirmmai@gmail.com, Website: www.uyirmmai.com ⁄ Printed at Mani Offset, Chennai 600 077 ⁄ Price : Rs. 410

**ISBN : 978-93-81975-74-9**



# எஸ். ராமகிருஷ்ணன்

எஸ். ராமகிருஷ்ணன், விருதுநகர் மாவட்டம் மல்லாங்கிணறு கிராமத்தில் 1966இல் பிறந்தார். முழுநேர எழுத்தாளரான இவர் தற்போது சென்னையில் வசிக்கிறார்.

**சிறுகதைத் தொகுப்புகள்**: *எஸ். ராமகிருஷ்ணன் கதைகள், நடந்து செல்லும் நீரூற்று, பதினெட்டாம் நூற்றாண்டின் மழை, அப்போதும் கடல் பார்த்துக்கொண்டிருந்தது, நகுலன் வீட்டில் யாருமில்லை, புத்தனாவது சுலபம், வெளியில் ஒருவன், காட்டின் உருவம், தாவரங் களின் உரையாடல், வெயிலை கொண்டு வாருங்கள், பால்ய நதி, மழைமான், குதிரைகள் பேச மறுக்கின்றன, காந்தியோடு பேசுவேன், நீரிலும் நடக்கலாம், எஸ்.ராமகிருஷ்ணன் கதைகள்* (இரண்டாம் தொகுதி), *எஸ்.ராமகிருஷ்ணன் கதைகள்* (மூன்றாம் தொகுதி)

**நாவல்**: *உபபாண்டவம், நெடுங்குருதி, உறுபசி, யாமம், துயில், நிமித்தம், சஞ்சாரம்*

**கட்டுரைத் தொகுப்புகள்**: *விழித்திருப்பவனின் இரவு, இலைகளை வியக்கும் மரம், என்றார் போர்ஹே, கதாவிலாசம், தேசாந்திரி, கேள்விக்குறி, துணையெழுத்து, ஆதலினால், வாக்கியங்களின் சாலை, சித்திரங்களின் விசித்திரங்கள், நம் காலத்து நாவல்கள், காற்றில் யாரோ நடக்கிறார்கள், கோடுகள் இல்லாத வரைபடம், மலைகள் சப்தமிடுவதில்லை, வாசகபர்வம், சிறிது வெளிச்சம், காண் என்றது இயற்கை, செகாவின் மீது பனி பெய்கிறது, குறத்தி முடுக்கின் கனவுகள், என்றும் சுஜாதா, கலிலியோ மண்டியிட வில்லை, சாப்ளினுடன் பேசுங்கள், கூழாங்கற்கள் பாடுகின்றன, எனதருமை டால்ஸ்டாய், ரயிலேறிய கிராமம், பிகாசோவின் கோடுகள், இலக்கற்ற பயணி, காஃப்கா எழுதாத கடிதம், உணவு யுத்தம், ஹிரோஷிமாவில் மணி ஒலிக்கிறது, புல்லினும் சிறியது*

**திரைப்பட நூல்கள்**: *பதேர் பாஞ்சாலி - நிதர்சனத்தின் பதிவுகள், அயல் சினிமா, உலக சினிமா, பேசத்தெரிந்த நிழல்கள், இருள் இனிது ஒளி இனிது, பறவைக் கோணம், சாமுராய்கள் காத்திருக்கிறார்கள், நான்காவது சினிமா*

**குழந்தைகள் நூல்கள்**: *கால் முளைத்த கதைகள், ஏழு தலை நகரம், கிறுகிறு வானம், லாலிபாலே, நீளநாக்கு, தலையில்லாத பையன், எனக்கு ஏன் கனவு வருது, காசுகள்ளன், பம்பழாபம், சிரிக்கும் வகுப்பறை, அக்கடா, அண்டசராசரம், சாக்ரடீஸின் நூலகம்*

**உலக இலக்கிய பேருரைகள்**: *ஆயிரத்தொரு அரேபிய இரவுகள், ஹோமரின் இலியட், ஷேக்ஸ்பியரின் மெக்பத், ஹேமிங்வேயின் கடலும் கிழவனும், தஸ்தாயெவ்ஸ்கியின் குற்றமும் தண்டனையும், லியோ டால்ஸ்டாயின் அன்னா கரீனினா, பாஷோவின் ஜென் கவிதைகள்*

**வரலாறு**: *எனது இந்தியா, மறைக்கப்பட்ட இந்தியா*

**நாடகத் தொகுப்பு**: *அரவான், சிந்துபாத்தின் மனைவி, சூரியனை சுற்றும் பூமி*

**நேர்காணல் தொகுப்பு**: *எப்போதுமிருக்கும் கதை, பேசிக்கடந்த தூரம்*

**மொழிபெயர்ப்புகள்**: *நம்பிக்கையின் பரிமாணங்கள், ஆலீஸின் அற்புத உலகம், பயணப்படாத பாதைகள்.*

**தொகை நூல்**: *அதே இரவு, அதே வரிகள்* (அட்சரம் இதழ்களின் தொகுப்பு). *வானெங்கும் பறவைகள்*

**ஆங்கிலத்தில் வெளிவந்துள்ள நூல்**: *Nothing but water, Whirling swirling sky*

**இணையதளம்**: www.sramakrishnan.com

**மின்னஞ்சல்**: writerramki@gmail.com

# முன்னுரை

சிறுகதைகள் எப்போதுமே சவாலான வடிவமாக இருக்கிறது. பழக்கம் காரணமாக ஒரு நல்ல சிறுகதையை எழுதிவிட முடியாது. இன்று சிறுகதையின் மையம் மாறியிருக்கிறது. என் கதைகள் சூதாடி யின் கையிலிருக்கும் சீட்டுக்கட்டுகளைப்போல கிடைப்பதை வைத்துக்கொண்டு வேறுவேறு சீட்டுகளை எடுத்தும் மாற்றியும் கைவிட்டுமே உருவாகிறது. இதில் உள்ள புதிர்மைதான் எழுத்தாளானாக என்னை வசீகரிக்கிறது. தினசரி வாழ்க்கையில் ஒளிந்திருக்கும் விசித்திரத்தையும் விந்தையின் ஊடாக வெளிப் படும் அன்றாட உலகத்தையுமே நான் கதையின் முக்கிய சரடாகக் கொள்கிறேன்.

சிறுகதையின் இன்றைய சவால், கதைக்கான மொழி மற்றும் சொல்முறை. இரண்டும் மிக புதியதாக இருக்க வேண்டியிருக்கிறது. அத்துடன் எழுத்தாளனின் அகப்பார்வையே கதையின் முக்கிய ரசவாதம். வெறுமனே கதை சொல்வது மட்டும் கதையின் வேலை யில்லை என்றுதான் தோன்றுகிறது.

தொடர்ந்து சிறுகதைகள் எழுதுவது என்னை உத்வேகப்படுத்து கிறது. காரணம், ஒவ்வொரு கதையும் ஒரு சவால். அதை எதிர் கொள்ளும் நிமிடத்தில் மனது கொள்ளும் பரபரப்பும் திகைப்பும் பயமும் சந்தோஷமும் முக்கியமானது.

தண்ணீருக்குள் நீந்தும் மீனைப் படம் வரையும் சிறுவன் மீனை எளிதாக வரைந்துவிடுவான். ஆனால் தண்ணீரை வரைவது எவ்வ ளவு கடினமானது என்பதை வரையும்போதுதானே உணர்கிறான். அதுதான் புனைகதை ஆசிரியன் நிலையும். கதாபாத்திரங்களை எளிதாக உருவாக்கிவிடலாம். ஆனால் அவர்கள் உயிரோட்டமாக உலவும் வாழ்வு வெளியை எழுத்தில் கொண்டுவருவது கடினம்.

நான் எப்போதுமே உலகின் வெளிச்சம் படாத மனிதர்களின் மீதே கவனம் கொள்பவன். இந்தத் தொகுப்பில் இடம்பெற்றுள்ள பல கதைகளில் வரும் மனிதர்கள் முதன்முதலாக இலக்கியத்தில் இப்போதுதான் பதிவு செய்யப்பட்டிருக்கிறார்கள்.

அதுபோலவே பெண்களின் அகவலிகள், வேதனைகள், நிராசைகள் குறித்து தொடர்ந்து எனது கதைகள் பேசுகின்றன. பெருநகர வாழ்வின் குழப்பங்களும் வலிகளும் இதில் சில கதைகள் எழுதக் காரணமாக இருந்துள்ளன.

அவமதிக்கப்படும் மனிதன் எப்போதும் தான் தனியாள் என்றே உணர்கிறான். தன் வலியை வெளிப்படுத்தும் சொற்கள் கூட தன்னிடமில்லை என்று வருந்துகிறான். உலகம் கருணையற்றது என்று தனக்குத் தானே சொல்லிக்கொள்கிறான். இந்த நிர்க்கதியும் ஆற்றாமையும் இயலாக் கோபமும்தான் சமகால இலக்கியத்திற்கான முக்கிய பாடுபொருளாகக் கருதுகிறேன்.

2005 முதல் 2009 வரை நான் எழுதிய சிறுகதைகளின் தொகை நூலிது. இக்கதைகளில் சில ஆங்கிலம், ஹிந்தி, ஜெர்மன், பெங்காலி, தெலுங்கு, பிரெஞ்சு, கன்னடம், மலையாளம் என வேறு மொழிகளில் மொழியாக்கம் செய்யப்பட்டிருக்கின்றன. சில குறும்படமாக எடுக்கப்பட்டுள்ளன.

புனைவின் சாத்தியங்களை விஸ்தரித்துக்கொண்டே செல்லும் இக்கதைகள் எனக்குத் தந்த உற்சாகத்தையும் உத்வேகத்தையும் உங்களுக்கும் தரும் என்றே நம்புகிறேன்.

இக்கதைகள் வெளியான நாட்களில் படித்துப் பாராட்டிய எழுத்தாளர்கள் வண்ணநிலவன், வண்ணதாசன், பிரபஞ்சன், அ.முத்துலிங்கம், இறையன்பு, பவா செல்லதுரை, ஜி. குப்புசாமி. சா. தேவதாஸ், இயக்குனர் வசந்த், துளசிதாசன், கனடா செல்வம், தோழர் எஸ்.ஏ. பெருமாள், கவிஞர் தேவதச்சன், நண்பர்கள் மனுஷ்ய புத்திரன், ஆடிட்டர் சந்திரசேகர், என்னையும் எழுத்தையும் நேசிக்கும் மனைவி சந்திரபிரபா, பிள்ளைகள் ஆகாஷ், ஹரி மற்றும் இதனை வெளியிடும் உயிர்மை பதிப்பகம், செல்வி மற்றும் பதிப்பக நண்பர்கள் அனைவருக்கும் எனது மனம் நிரம்பிய நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**எஸ். ராமகிருஷ்ணன்**

# உள்ளே...


| | | |
|---|---|---|
| 1. | பிழை திருத்துபவரின் மனைவி | 13 |
| 2. | பனாரஸ் | 19 |
| 3. | மூன்று குடும்பக் கதைகள் | 26 |
| 4. | நடந்து செல்லும் நீரூற்று | 32 |
| 5. | உடலறிதல் | 43 |
| 6. | ஒரு நகரம், சில பகல்கனவுகள் | 50 |
| 7. | சிறு துயர் | 64 |
| 8. | பி. விஜயலட்சுமியின் சிகிச்சைக் குறிப்புகள் | 72 |
| 9. | சேர்ந்திசைப்பவர்கள் | 84 |
| 10. | பதினைந்து வயதில் ஒருவன் | 92 |
| 11. | அன்றைக்கு ஞாயிற்றுக்கிழமை | 103 |
| 12. | கிளைவிடும் சரித்திரங்கள் | 115 |
| 13. | வீட்டிற்கு அப்பால் எதுவுமில்லை | 121 |
| 14. | என்னை சாம்பல் கிண்ணம்போல உபயோகிக்கிறார்கள் | 129 |
| 15. | நற்குடும்பம் | 138 |
| 16. | சௌந்திரவல்லியின் மீசை | 147 |
| 17. | ஆண்களின் தெருவில் ஒரு வீடு | 156 |
| 18. | மஞ்சள் கொக்கு | 166 |
| 19. | வீட்டு ஆணி | 169 |
| 20. | நம்மில் ஒருவன் | 171 |
| 21. | பதினெட்டாம் நூற்றாண்டின் மழை | 179 |
| 22. | எழுதத் தெரிந்த புலி | 198 |
| 23. | மூன்று பால்ய கதைகள் | 200 |
| 24. | பேராலயம் | 205 |
| 25. | ஹசர் தினார் | 208 |
| 26. | ஜி. சிந்தாமணிக்கும் தேவிகாவிற்கும்சம்பந்தமில்லை | 214 |
| 27. | காதுள்ள கடவுள் | 222 |
| 28. | உதிரிப் பொய்கள் | 229 |
| 29. | வாலை வெட்டுவதற்கு முன்பு நாயும் இரண்டு மனிதர்களும் | 238 |
| 30. | எல்லா நாட்களையும் போல | 244 |

31. திரும்பிச் செல்லும் மலைகள் 253
32. சற்றே மகிழ்ந்து கொள்க 260
33. இல்மொழி 264
34. கூந்தலில் எரியும் நெருப்பு 267
35. பேசும் மீன் 278
36. புத்தன் இறங்காத குளம் 280
37. இந்த ஊரிலும் பறவைகள் இருக்கின்றன 287
38. அப்பா புகைக்கிறார் 303
39. விசித்ரி 313
40. காதல் மேஜை 322
41. எப்படி என்று மட்டும் கேட்காதீர்கள் 324
42. நிழல்வனம் 326
43. எழுத்து பறவை 327
44. இரு கை ஓசை 329
45. காலி பாட்டில் 331
46. நகுலன் வீட்டில் யாருமில்லை 333
47. பெரு நகரத்தவளைகள் 336
48. காலிடை பறவை 339
49. கனவை விதைப்பவள் 341
50. சித்திரமீன் 343
51. பெயரில்லாத கரப்பான்பூச்சி 345
52. வீட்டிற்குள் ஓடும் ஆறு 348
53. பேச்சரவம் 350
54. நேற்று சம்பத்தின் நாவலில் வரும்
தினகரனை வழியில் பார்த்தேன் 351
55. உபதே6யார் 355
56. மதுக் கோப்பைகள் 361
57. கதை இல்லாத மிருகம் 362
58. கண்ணீர்பூட்டு 365
59. மஞ்சள் பட்டம் 367
60. சுயபுலம்பல் 368
61. மறக்கப்பட்ட தீவு 369
62. காதில்லாத அரசன் 371
63. நீலநிறத் தாடி 373
64. இயல்பு 375

65. மிருகாமம் 379
66. ஆலோசகன் 381
67. நுனி நாக்கு 383
68. காட்சிக் கூண்டு 385
69. மதியநேரத்து நாய் 391
70. தும்மலோசை 392
71. சிறுசொல் 394
72. மர ஊஞ்சல் 397
73. பகலின் முதுகு 399
74. தப்பித்த சொற்கள் 401
75. படிக்கத் தெரிந்த தவளை 403
76. புகையும் புத்தகம் 405
77. உச்சாடனம் 406
78. உலகின் குற்றங்கள் 408
79. வளர்ப்பு மிருகங்கள் 410
80. வஸ்திரம் 412
81. புனிதப்பூனை 414
82. ரப்பர் பந்து 416
83. ஆல்பெர் காம்யூவிற்கான சிகரெட் 418
84. சிறகுள்ள பொறியாளன் 420
85. உறுமீன் 422
86. ஆப்தன் 424
87. கைமூடி திறந்து 426
88. மழை எறும்பு 427
89. தூர திருஷ்டி 430

# பிழை திருத்துபவரின் மனைவி

அவளுக்கு அச்சடிக்கப்பட்ட காகிதங்களைப் பிடிக்காமல் போய் பல வருடங்களாகிவிட்டது. குளியல் அறைச் சுவர்களில் ஒளிந்து திரியும் கரப்பான் பூச்சிகளைவிடவும் காகிதங்கள் மிகுந்த அருவை தருவதாகிவிட்டன. சில வேளைகளில் அவள் தன் ஆத்திரம் தீரும் மட்டும் காகிதங்களைக் கிழித்துப் போடுவாள். காகிதங்கள் ஒருபோதும் எதற்கும் எதிர்ப்பு தெரிவிப்பதில்லை. கரப்பான் பூச்சிபோல சிதறி யோடவோ, மீசையைத் துண்டித்துக்கொண்டு தப்பித்துக்கொள் வதற்கோ காகிதங்கள் முயற்சிப்பதேயில்லை.

காகிதங்கள் கிழிக்கப்படும் மெல்லிய ஓசை தருகிறதேயன்றி வேறு எதிர்ப்புக் குரல் எதையும் வெளிப்படுத்துவதில்லை. அதைக்கூட அவளால் சகித்துக்கொள்ள முடிவதில்லை. இதற்காக அவள் காகிதங் களை நீரில் ஊற விட்டுவிடுவாள். அவள் வரையில் அதுதான் காகிதங்களுக்குத் தரப்படும் மிக மோசமான தண்டனை. சமையல் செய்யும்போது இரும்பு வாளியில் உள்ள தண்ணீரில் காகிதத்தைப் போட்டுவிட்டால் மாலை பார்க்கும்போது அது கரைந்து துகள்துகளாக மிதந்து தண்ணீரில் கலந்துபோயிருக்கும்.

காகிதங்கள் கரையும்போது அதில் அச்சடிக்கப்பட்ட வாசகங்கள் எங்கே போய்விடுகின்றன? உப்பு, தண்ணீருக்குள் கரைந்துபோய் விடுவதைப் போல கண்ணுக்குத் தெரியாமல் கரைந்து போயிருக்குமா? அவள் வாளித் தண்ணீரை வெறித்துப் பார்த்துக்கொண்டிருப்பாள். சில நேரம் யோசிக்கும்போது வியப்பாக இருக்கும். காகிதங்களுக்கும் வார்த்தைகளுக்கும் உள்ள உறவு எத்தகையது? காகிதங்கள் தன் மீது எழுதப்படும் வரிகளுக்கு சம்மதம் தருகிறதா என்ன? காகிதங் களுக்கும் அதில் பதிந்துள்ள சொற்களுக்கும் நடுவில் இடைவெளியிருக் கிறதா? இப்படி யோசிக்கத் துவங்கியதும் நான் ஏன் இதுபோன்ற வீண் யோசனைகளை வளர்த்துக்கொண்டு போகிறேன் என்று தன் மீதே அவளுக்கு ஆத்திரமாக வரும்.

அவள் வீட்டில் அச்சடிக்கப்பட்ட காகிதங்கள் நிரம்பியிருக்கின்றன. அவள் தனது பதினேழாவது வயதில் மந்திரமூர்த்தியைத் திருமணம்

செய்துகொண்டு சென்னைக்கு வரும்வரை பாடப்புத்தகங்களைத் தவிர வேறு எதையும் கண்டதேயில்லை. அதுவும் அவளது ஊரில் பெண்கள் உயர்நிலைப் பள்ளி இல்லை என்பதால் ஐந்தாம் வகுப்போடு படிப்பை நிறுத்திக்கொண்டுவிட்டாள்.

ஆறேழு வருடங்கள் அவள் தீப்பெட்டி ஒட்டும் வேலை, ரப்பர் கொட்டை உடைக்கும் வேலைக்குப் போய்க்கொண்டிருந்தாள். தீப்பெட்டி ஆபீஸில் ரேடியோ இருந்தது. அதில் ஒலிபரப்பாகும் சினிமா பாட்டுகள் அவளுக்கு ரொம்பவும் பிடிக்கும். அந்த நாட்களில் சீட்டு போட்டு ஒரு ரேடியோவை சொந்தமாக வாங்கிவிடுவதற்கு அவள் ரொம்பவும் ஆசைப்பட்டாள். ஆனால் ஒவ்வொரு முறை சீட்டு எடுக்கும்போதும் ஏதாவது ஒரு செலவு வந்து சேர்ந்துவிடும். இதனால் அவள் திருமணத்தின்போது கட்டாயம் ஒரு ரேடியோ வாங்கித் தர வேண்டும் என்று வற்புறுத்தி வாங்கிக்கொண்டுவிட்டாள். ஆனால் மந்திரமூர்த்திக்கு ரேடியோ கேட்பது பிடிக்காது என்பதால் அது எப்போதுமே அணைத்து வைக்கப்பட்டேயிருந்தது.

திருமணமாகி சென்னைக்கு வந்த சமயத்தில் அவளுக்கு மந்திர மூர்த்தியைக் காண பயமாக இருக்கும். அவர் அப்போது ராயல் அச்சகத்தில் வேலை செய்துகொண்டிருந்தார். அவரது பையில் ஒரு பென்சிலும் அழி ரப்பரும் எப்போதுமிருக்கும். சில நேரம் சிவப்பு மை பேனா வைத்திருப்பதைக்கூட கண்டிருக்கிறாள்.

அவளுக்குப் பிழை திருத்தம் செய்வது என்பதைப் பற்றி எதுவுமே தெரியாது. எப்போதாவது இரவில் மந்திரமூர்த்தி தரையில் தலை யணை போட்டுப் படுத்தபடியே காகிதங்களில் பென்சிலால் சுழிக்கும் போது அவள் கவனமாகப் பார்த்துக்கொண்டேயிருப்பாள். அவர் தனக்குத் தானே பேசிக்கொண்டிருப்பது போலவே இருக்கும். சில நேரங்களில் அவர் சப்தமாகச் சிரிப்பதுகூட கேட்கும். பின்னிரவு வரை அவர் பிழை திருத்தம் செய்துகொண்டிருப்பார். பிறகு எழுந்து பின்வாசலைத் திறந்துகொண்டு வெளியே போய் மூத்திரம் பெய்து விட்டு உள்ளே வந்து படுத்துக்கொள்வார்.

அவளது உடலில் அவரது விரல்கள் ஊரும்போது பிழை திருத்தம் செய்வது தேவையில்லாமல் நினைவிற்கு வரும். அவர் காமத்தில் பெரிய நாட்டம் கொண்டவரில்லை. அதை ஒரு சம்பிரதாயம் போல ஈடுபடுவதும், உடல் வியர்த்துப்போனதும் முகம் திருப்பிக் கொண்டு உறங்கிவிடுவதும் அவளுக்கு எரிச்சல் ஊட்டுவதாகயிருக்கும். உறக்கத்தில்கூட சில நேரம் அவரது விரல்கள் அசைந்தபடி இருப்பதை யும் முகம் இறுக்கமடைந்திருப்பதையும் அவள் கண்டிருக்கிறாள்.

மந்திரமூர்த்தி யாரோடும் பேசுவது கிடையாது. அவர் காலை ஆறு மணிக்கெல்லாம் பிழை திருத்தத் துவங்கிவிடுவார். திருத்திய காகிதங்களுடன் வீட்டை விட்டு அவர் வெளியேறிச் செல்லும்போது அவரது மஞ்சள் பையில் திருத்திய பிரதிகளும் மதிய உணவுமிருக்கும். அவரது அலுவலகம் ராயப்பேட்டைப் பகுதியில் இருந்தது. அவருக்

கென்று நண்பர்களோ தெரிந்தவர்களோ எவருமேயில்லை. வெளியிலும் அவர் போவது கிடையாது. அவருக்கு இருந்த ஒரே பழக்கம் வெற்றிலை போடுவது. அதற்காக சிறிய லெதர் பை ஒன்றை வைத்திருந்தார். அந்தப் பையில் இருந்து பத்து நிமிஷத்திற்கு ஒரு முறை இரண்டு வெற்றிலைகளைக் கிள்ளி வாயில் போட்டுக்கொள்வார்.

ஒருமுறை அவளை தான் வேலை செய்யும் அச்சகத்தில் நடைபெற்ற விழாவிற்காக அழைத்துப் போயிருந்தார். அங்கே மிகப் பெரிய இயந்திரம் ஒன்றில் காகிதம் உருளையாகச் சுற்றப்பட்டிருப்பதையும் அந்தக் காகித உருளையிலிருந்து வெங்காயத்தில் தோல் உரிக்க உரிக்க வந்துகொண்டிருப்பது போல காகிதம் வழிந்துகொண்டே யிருப்பதையும் அவள் மிரட்சியோடு பார்த்துக்கொண்டிருந்தாள். அந்தக் காகித உருளை முழுவதும் அச்சடிக்கப்பட்டுவிடும். அத்தனை யும் அவர்தான் பிழை திருத்தம் செய்ய வேண்டுமில்லையா? அவள் தன் கணவரிடம் அதைப் பற்றிக் கேட்டதும் அசட்டுத்தனமாக உளறாதே என்றபடியே அவர் பைண்டிங் செய்யும் பகுதிக்குச் சுற்றிக்காட்ட அழைத்துச் சென்றார்.

அவள் வயதில் நாலைந்து பெண்கள் காகிதங்களை வரிசை வரிசையாக அடுக்கி ஒட்டிக்கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு எவ்வளவு சம்பளம் கிடைக்கும் என்று கேட்டாள். மந்திரமூர்த்தி பதில் சொல்லாமல் அது நமக்கு சரிப்படாது என்றார். அச்சகத்தின் கடைசியில் இருந்த கழிப்பறைக்கு அவள் போகும்போது வழியில் தரையில் காகிதங்கள் சிதறிக் கிடந்தன. அதன் மீது யாவரும் மிதித்து நடந்து போய்க்கொண்டிருந்தார்கள்.

தென்பக்கமாக ஒரு சிறிய இரும்புக் கதவு திறந்து கிடப்பதைக் கண்டாள். உள்ளே எட்டிப் பார்த்தபோது கழித்துப்போட்ட உபயோகமற்ற காகிதங்கள் ஒரு அறை முழுவதும் நிரம்பியிருந்தன. அவளுக்கு பயமாக இருந்தது. நீரூற்று பொங்குவதைப் போல காகிதங்கள் பொங்கி வழிந்துகொண்டிருக்கிறதா? இந்தக் காகிதங்கள் எல்லாம் எங்கே போய்ச் சேரும்? அவள் கழிப்பறைக்குப் போன பிறகும் அந்த யோசனையில் இருந்து விடுபட முடியாமலிருந்தாள்.

அந்த அச்சகத்தில் அவளது கணவர் மட்டுமே பிழை திருத்துபவராக இருந்தார் என்பது ஏன் என்று அவளுக்குப் புரியவே யில்லை. ஒரு நாள் மந்திரமூர்த்தி பிழை திருத்தி வைத்திருந்த காகிதங்களை அவருக்குத் தெரியாமல் எடுத்துப் பார்த்தாள். அநேகமாக வரிக்கு வரி தவறுகள் அடையாளம் காணப்பட்டு அதைச் சுற்றி ஒரு வட்டம் போடப்பட்டும் அடித்து மாற்றியும் இருந்தன. அவளுக்கு அந்தக் காகிதத்தைப் பார்க்கும்போது ஏதோ குழந்தை விளையாட்டு போலத் தோணியது. சில வேளைகளில் மந்திரமூர்த்தி எல்லா எழுத்தாளர்களைவிடவும் மிகப் பெரிய அறிவாளி போன்று தோன்றினார். ஒருவேளை தான் அவரைப் புரிந்துகொள்ளவில்லையோ என்றுகூட அவளுக்குத் தோணியது. அவள் பயத்தோடு அந்தக்

காகிதத்தை அதே இடத்தில் வைத்துவிட்டு அவருக்கு சாப்பாடு வைத்தாள்.

மந்திரமூர்த்தியின் கண்களில் பிழைகள் எத்தனை சிறியதாக இருந்தாலும் எப்படி பட்டுவிடுகின்றன? இந்த குணம் அவருக்கு காகிதங்களோடு மட்டும் இருக்கிறதா, இல்லை தன்னையும் அவர் இதுபோன்று நுணுக்கிப் பார்த்துக்கொண்டுதானிருக்கிறாரோ? ஆரம்ப நாட்களில் அவள் மாலை நேரங்களில் வீட்டு வாசல்படியில் வந்து உட்கார்ந்துகொண்டு தெருவை வேடிக்கை பார்த்துக்கொண்டிருப் பாள். வீடு திரும்பும் மந்திரமூர்த்தியின் முகம் அதைக் கண்டதுமே கடுமையடைவதை அவள் கண்டிருக்கிறாள். வீடு வந்து சேர்ந்ததும் அவர் தனது பிழை திருத்தும் காகிதங்களை எடுத்து வைத்துக்கொள் வார். அவள் தரும் காபியையோ, காரத்தையோ எப்போது சாப்பிடு கிறார் என்றுகூடத் தெரியாது. ஏன் அவர் இப்படி எழுத்துக் களுக்குள் தன்னை முடக்கிக்கொண்டுவிட்டார் என்று குழப்பமாக இருக்கும்.

மந்திரமூர்த்திக்கு உணவில்கூட அதிக கவனமிருப்பதில்லை. ஈர வேஷ்டியைக்கூட சில நேரங்களில் அணிந்துகொண்டு வேலைக்குப் புறப்பட்டுப் போகின்றவராகயிருந்தார். எப்போதாவது அவள் தயக்கத்துடன் அவர் வேறு வேலை ஏதாவது பார்க்கக் கூடாதா என்று கேட்கும்போது அவர் முறைத்தபடியே இந்த வேலையில் என்ன பிரச்சினை என்று கேட்பார். அவளால் விளக்கிச் சொல்ல முடியாது.

மந்திரமூர்த்தி அச்சகத்திற்குச் செல்லாமல் ஒரு நாளும் இருந்ததே கிடையாது. அவள் உடல்நலமற்றுக் கிடந்த நாட்களில்கூட கஞ்சி வைத்துக் கொடுத்துவிட்டு அவர் அச்சகத்திற்குக் கிளம்பிப் போய் விடுவார். பாயில் கிடந்தபடியே அவள் பல்லைக் கடித்துக்கொண்டு கிடப்பாள். எதற்காக இதைப் போன்ற ஒருவரைத் தான் திருமணம் செய்துகொண்டோம்? ஒரு எழுத்து மாறிப்போகின்றதைப் பற்றி கவலைப்படும் ஒரு நபர் தன்னை ஏன் கவனிக்க மறந்துபோகிறார்? என்று ஆத்திரமாக வரும்.

மந்திரமூர்த்தி அதைப் பற்றி யோசிப்பதேயில்லை. எப்போதாவது அவராக சினிமாவிற்குப் போய்வரலாம் என்று சொல்வார். அதுபோன்ற நேரங்களில் அவள் அவசரமாகப் புடவையை மாற்றிக்கொண்டு வெளியே வருவாள். திரையரங்கத்தின் வாசலில் நின்றபடியே போஸ்டர் களில் உள்ள எழுத்துக்களை, வேர்க்கடலை மடித்துத் தரும் காகிதங் களைக்கூட அவர் உன்னிப்பாக கவனிப்பதையும் அவரது உதடுகள் தவறுகளை முணுமுணுப்பதையும் அவளால் கேட்க முடிந்திருக்கிறது.

சினிமா தியேட்டரில் அவர் சிரித்து அவள் கண்டதேயில்லை. எப்போதும் தீராத யோசனையுடன் அவரது முகம் உறைந்துபோயிருக் கும். சினிமா முடிந்த மறுநிமிஷமே வீடு திரும்பிவிட வேண்டும் என்பதில் அவருக்கு மிகுந்த பதட்டமாக இருக்கும். சினிமா பார்த்து வந்த இரவுகளில் அவர் அவளோடு உறவு கொள்வது கிடையாது

என்பது ஏன் என அவளால் புரிந்துகொள்ளவே முடியவில்லை.

அவர்களுக்குத் திருமணமாகி பதினைந்து ஆண்டுகளுக்கும் மேலாகிவிட்டிருந்தது. இப்போது வரை குழந்தைகளில்லை. அவள் தனியாகவே வீட்டிலிருந்து பழகிவிட்டிருந்தாள். எப்போதாவது அவளாக ஒரு எலுமிச்சம் பழத்தைக் கையில் எடுத்துக்கொண்டு நடந்தே தட்சணாமூர்த்தியை தரிசிப்பதற்காகச் சென்று வருவாள். அதுபோன்ற நேரங்களில் அவள் கடவுளிடம் என்ன வேண்டுவது என்பதுகூட அவளுக்கு மறந்துபோயிருந்தது. சில நேரங்களில் சன்னதியின் முன்பாக நின்றுகொண்டு கடவுளை வெறித்துப் பார்த்துக் கொண்டிருப்பாள். ஆத்திரமாகும் நாட்களில் அச்சடிக்கப்பட்ட காகிதங்கள் யாவும் உலகிலிருந்து ஒழிந்துபோய்விட வேண்டும் என்று கடவுளிடம் பிரார்த்தனை செய்வாள். அவளது கோபம் கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து பென்சில்களின் மீது, ரப்பரின் மீது என நீண்டுகொண்டே போனது.

இரண்டு வருடங்களுக்கு முன்பு ஒரு நாள் பகலில் என்ன செய்வது என்று தெரியாமல் வீட்டில் இருந்த காகிதங்கள் ஒவ்வொன் றாக எடுத்துக் கிழித்தபடியே இருந்தாள். மாலையில் வீடு திரும்பிய மந்திரமூர்த்தி காகிதங்கள் இறைந்து கிடந்த அறையைக் கண்டதும் சற்றே கோபமான குரலில் 'தங்கம்மா... உனக்கு பேப்பரைக் கிழிக்க ஆசையிருந்தால் குப்பைத் தொட்டிக்குப் போ. அங்கே நிறைய கிடக்கும். இன்னொரு தடவை இதுபோல செய்யாதே' என்றபடியே அவர் தனது மேஜையில் உட்கார்ந்துகொண்டு பையில் இருந்த காகிதங்களைப் பிழை திருத்தம் செய்யத் துவங்கினார். அவள் கத்தி அழுதாள். அந்த சப்தம் அவருக்குக் கேட்டதாகவே தெரிய வில்லை. அவர் திருத்திய காகிதங்களைத் தனியாக எடுத்து வைத்துக் கொண்டிருந்தார். அன்றிரவு அவள் உறங்கவேயில்லை. அவளுக்குக் காகிதங்களில் இருந்து சொற்கள் உதிர்ந்து விழுவது போன்றும், அவளது கையில், கால்களில், உடல்களில் சொற்கள் ஒட்டிக்கொண்டு இருப்பது போன்றும் தோன்றியது.

அதன்பிறகு அவளை மருத்துவரிடம் அழைத்துப் போனார் மந்திரமூர்த்தி. அவள் கலக்கத்துடன் தனக்கு பயமாக இருப்பதாகச் சொன்னாள். ஒரு வார காலம் உறங்குவதற்கு மாத்திரைகள் தந்து அனுப்பினார் மருத்துவர். கண்களை அழுத்தும் உறக்கத்தின் ஊடாகக் கூட ஒரு நிழலைப் போல அவர் பிழை திருத்திக்கொண்டிருப்பது அவளுக்குத் தெரியும். அழுவதற்குக்கூட முடியாமல் அவள் உறங்கிப்போய்விடுவாள்.

ஒரு ஆண்டு காலம் அவளை சொஸ்தப்படுத்துவதற்காக வாரம் தோறும் பொது மருத்துவமனைக்கு அழைத்துப் போகும்படியான சூழ்நிலை உருவானது. அவள் மௌனமாகத் தெருவில் நடந்து வருவாள். மருத்துவமனை வரும்வரை அவர் எதுவும் பேசிக்கொள்ளவே மாட்டார். புறநோயாளிகள் பிரிவில் அவளை உட்கார வைத்துவிட்டு

அவர் எதிரில் இருந்த வாகை மரத்தை வெறித்துப் பார்த்தபடி யிருப்பார்.

வெள்ளை, மஞ்சள் நிற மாத்திரைகள் சகிதமாக அவர்கள் வீடு திரும்பிய மறுநிமிஷம் அவர் தனது அச்சகத்திற்குப் புறப்பட்டுப் போய்விடுவார். மாத்திரைகளில்கூட ஏதோ பெயர்கள் அச்சடிக்கப் பட்டிருக்கின்றன. அந்தப் பெயர்கள் பிழை திருத்தப்பட்டதா இல்லை திருத்தப்படாததா என்று உற்றுப் பார்த்துக்கொண்டிருப்பாள். மாத்திரைகள் வயிற்றில் கரைந்துபோகும்போது இந்தப் பெயர்களும் தனக்குள் கரைந்துபோய்விடும் இல்லையா என்று யோசனை எழும். அவள் கண்களை மூடிக்கொண்டு மாத்திரையை விழுங்குவாள்.

காகிதங்கள் மெல்ல அவளுக்கு வெறுப்பையும் கோபத்தையும் வளர்த்துக்கொண்டேயிருந்தன. உலகில் உள்ள எல்லா அச்சு எழுத்துக் களையும் அழித்துவிட விரும்பியது போல அவள் ஆவேசப்படத் துவங்கினாள். இதற்காக அவரோடு பேசுவதையும் அவள் தவிர்த்து வந்தாள். எப்போதாவது அவர் தண்ணீர் கேட்கும்போதுகூட அவள் அந்த சொல்லைக் கேட்டதேயில்லை என்பது போல அவரைப் பார்த்தபடியே இருப்பாள். அவராக எழுந்து தண்ணீர் குடித்துவிட்டு வந்து உட்கார்ந்துகொள்வார்.

இரவுகளில் உறங்க விருப்பமின்றி அவள் பாயில் உட்கார்ந்து கொண்டேயிருப்பதை அவர் கவனித்தபோதுகூட தன் வேலையை நிறுத்த மாட்டார். ஒரு நாள் அவள் அவரது முதுகின் பின்னால் வந்து நின்றபடியே அவரது வேலையை கவனிக்கத் துவங்கினாள். ஆவேசமாக மிருகம் ஒன்று தனது இரையை வேட்டையாடுவதைப் போல அவர் சொற்களைத் தன் கையில் உள்ள பென்சிலால் அடித்தும் திருத்தியும் மாற்றிக்கொண்டேயிருந்தார்.

அவள் ஆத்திரத்துடன் கேட்டாள், காகிதத்தில் அப்படி என்ன தானிருக்கிறது? அவர் திரும்பிப் பார்க்காமலே 'எனக்குத் தெரிய வில்லை' என்றார். அவள் காகிதங்களை உற்றுப் பார்த்தபோது வார்த்தைகள் உடைந்தும் விலகியும் தனியே நடனமாடுவது போலிருந் தது. திடீரென அவரைக் கட்டிக்கொண்டு அழத் துவங்கினாள். அவரது கையில் இருந்த பென்சில் தவறி கீழே விழுந்து முனை உடைந்தது. அவர் அவளது கைகளை விலக்கிவிட்டு கீழே கிடந்த பென்சிலை எடுத்து மிகக் கவனமாக சீவத் துவங்கினார். அவர் முன்பு ஆயிரம் பக்க நாவல் ஒன்று பிழை திருத்தத்திற்காகக் காத்துக்கொண்டிருந்தது. தங்கம்மாளின் அழுகை வீடெங்கும் கரைந்து ஓடிக்கொண்டிருந்தது.

# பனாரஸ்

—— ✻ ——

அன்றைக்குக் காலையிலிருந்தே மழை பெய்துகொண்டிருந்தது. கங்கையின் படித்துறைகளில் மழைக்குள்ளாகவும் யாத்ரீகர்கள் நீராடிக்கொண்டிருந்தார்கள். அதுபோன்ற நாட்களில் படகோட்டிகள் படித்துறை ஓரமாக படகை நிறுத்திவிட்டு அருகாமை மண்டபங்களில் ஏறி நின்றபடி மழையை வேடிக்கை பார்த்தபடியிருப்பார்கள்.

அன்றைக்கு காலையில் துவங்கிய மழை நிற்கவேயில்லை. பார்த்துக் கொண்டிருந்தபோதே பனாரஸ் வெளிச்சத்திலிருந்து நழுவி இருளுக்குள் போய் விழுந்துகொண்டிருந்தது. வழக்கமாக இரைச்சலிடும் பண்டாக் களின் குரல் அடங்கி யாவும் வெறிச்சோடியிருந்தது. மணிகர்ணிகாவில் மட்டும் புகை அடங்கவேயில்லை. இறந்துபோன எவரையோ எரித்துக் கொண்டிருக்கிறார்கள் போலும். கங்கை மிகுந்த சீற்றத்தோடு ஓடிக் கொண்டிருந்தது. பின்னிரவில் மழை கொஞ்சம் கொஞ்சமாக வெறித்து அடங்கியது. ஆனாலும் முணுமுணுப்பது போன்று மழையின் மெலிதான குரல் மட்டும் அடங்கவேயில்லை.

பிரதான படித்துறைகளைத் தாண்டிய அசி ஹட் மேடையிலிருந்து யாரோ குரல் கொடுப்பது போலிருந்தது. நதியில் ஒரேயொரு படகு மட்டும் அலைந்துகொண்டிருந்தது. படகோட்டிக்கொண்டிருந்தவன் சலனமில்லாமல் நதியை பார்த்துக்கொண்டிருந்தான். படகு தண்ணீரின் வேகத்தில் இழுபட்டுக்கொண்டிருந்தது. திரும்பவும் அந்தக் குரல் அசி ஹட்டிலிருந்து தெளிவாகக் கேட்டது. படகு இருளுக்குள்ளாகவே அசைந்து வரத் துவங்கியது.

அசி ஹட்டில் இந்த நேரம் யார் இருப்பார்கள். படிகளை மூழ்கடித் துக்கொண்டு நதி ஓடிக்கொண்டிருக்கும்போது அங்கே நிற்பவன் யாராக இருக்கக்கூடும். படகு மெதுவாகப் படித்துறையை நோக்கி வந்தபோது ஒரு மனிதன் ஈரத்திற்குள்ளாக நின்றபடியே கத்திக்கொண்டிருந்தான். அவன் படகு தன்னை நெருங்கி வருவதைக் கவனித்திருக்கக்கூடும். தான் கிழக்குக் கரையிலிருந்த ராஜ் ஹட்டிற்குப் போக வேண்டும் என்று கத்தினான்.

படகு தத்தித் தத்தி அசி ஹட்டின் படிகளுக்கு அருகாமையில் வருவதற்குள் அந்த மனிதன் தண்ணீருக்குள் இறங்கி படகினை நோக்கி வந்துகொண்டிருந்தான். இருளில் அந்த யாத்ரீகனின் உருவம் தெளிவாகத் தெரியவில்லை. ஆனால் அவன் மிகுந்த அவசரத்திலிருப்பது புரிந்தது. கங்கையின் மீது திரை மூடியது போல இருள் கவிழ்ந்திருந்தது. தொலைவில் பாங்க் அடித்துவிட்டு யாரோ பாடும் குரல் கரையில் தனியே கேட்டுக்கொண்டிருந்தது. படகில் அந்த யாத்ரீகன் ஏறிக்கொண்ட போது கவனித்தான். அந்த படகோட்டி நனையவேயில்லை. அது எப்படி என்று குழப்பமாகயிருந்தது. மழையும் ஈரமும் பீடித்த நதியில் அலைந்திருக்கிறான். ஆனால் எப்படி அவன் உடல் நனையவேயில்லை.

படகு புறப்பட்ட சில நிமிஷங்களில் யாத்ரீகன் தனது சட்டைப் பையிலிருந்து துழாவி ஒரு பீடியை எடுத்துப் பற்ற வைத்துக்கொள்ள முயன்றான். காற்று நெருப்பைப் பற்ற வைக்க விடாமல் அணைத்து கொண்டேயிருந்தது. தன்னிடமிருந்த தீக்குச்சிகளை உரசிப் பார்த்து இயலாமல் படகோட்டியிடம் தீப்பெட்டி வைத்திருக்கிறாயா என்று கேட்டான். படகோட்டி பதில் பேசாமல் அவனையே பார்த்துக் கொண்டிருந்தான். யாத்ரீகன் அளவுக்கு அதிகமாக பாங்க் குடித்திருக்க வேண்டும். அவனது கண் இமைகள் வீங்கிப்போய் முகம் சுருங்கிப் போனது போலிருந்தது.

யாத்ரீகன் அப்போதுதான் படகில் தன்னைத் தவிர இன்னொருவன் இருப்பதை கவனித்தான். படகோட்டிக்கு அருகாமையில் அமர்ந்தபடி ஒரு சிறுவன் தன் கையில் சிறிய தகரக்குவளை ஒன்றை வைத்தபடி படகினுள் ஏறும் தண்ணீரை வாரி வாரி இரைத்து நதிக்குள் ஊற்றிக் கொண்டிருந்தான். அந்தச் சிறுவனுக்கு பன்னிரண்டு வயதிருக்கக் கூடும். மெலிந்துபோனவனாகயிருந்தான். ஒரு இயந்திரத்தைப் போல அவன் கைகள் சீராக தண்ணீரை வாரி வாரி வெளியே கொட்டிக்கொண்டேயிருந்தன.

சிறுவனிடம் பெயரைக் கேட்டபோது பதில் சொல்லாமல் வேலை செய்துகொண்டிருந்தான். இரண்டாவது முறையாகக் கேட்டபோது அவனும் பயந்தவனைப் போலவே அந்த யாத்ரீகனை வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தான். யாத்ரீகன் கிழக்கே இன்னமும் மழை பெய்துகொண்டிருக்கிறதா என்று கேட்டான். அதற்கும் அவர்கள் பதில் அளிக்கவேயில்லை. படகோட்டி நதியின் சீற்றத்தை மீறி வலிமையோடு தனது துடுப்பைச் செலுத்திக்கொண்டிருந்தான்.

யாத்ரீகன் இருளுக்குள்ளாகவே நதியை உற்று நோக்கிக்கொண்டிருந்தான். கிழக்கிலிருந்து பலமானதொரு மின்னல் வெட்டு தோன்றி மறைந்தது. படகோட்டி அப்போதுதான் யாத்ரீகனை முழுமையாகப் பார்த்தான். யாத்ரீகன் அடர்ந்த தாடி வளர்த்திருந்தான். அவன் கண்கள் பழுப்பேறியிருந்தன. கழுத்தில் ருத்ராட்ச மாலைகள் அணிந்திருந்தான். உடல் யோகம் பயின்றவனைப் போல உரமேறியிருந்தது. அவன் பற்கள் காவியேறியிருந்தன. பனாரசின் எந்தப்

படித்துறையிலும் இவனைப் போல நூறு பேரைப் பார்க்கலாம் என்பது போலிருந்தது தோற்றம். படகு மெதுவாகக் கிழக்குக் கரையை நோக்கிப் போய்க்கொண்டிருந்தது. படகோட்டி கேட்காமலே யாத்ரீகன் அரண்மனைக்கு அருகேயுள்ள ராஜ் கட்டில் விசேஷ பூஜை நடக்க இருக்கிறதென்றும் அதில் கலந்து கொள்வதற்காகப் போவதாகச் சொல்லிக்கொண்டிருந்தான்.

படகு ஒரு இலை தண்ணீரில் மிதந்து போவது போல எடையற்று போய்க்கொண்டிருந்தது. கிழக்குக் கரையில் பிரேதங்களை வைத்து நடக்கும் ரகசிய பூஜைகள் காலம்காலமாகவே தொடர்ந்து நடந்து கொண்டுதான் வருகின்றன. குறிப்பாக இறந்துபோன கன்னிப் பெண்ணின் உடலைக் கொண்டுவந்து வாழை இலையில் உடலைப் படுக்க வைத்து பிரேதத்தின் வாயில் எண்ணெயிட்டு நிரப்பி நெற்றியில் விளக்கிட்டு மந்திர உச்சாடனங்களுடன் பூஜை செய்துகொண்டிருப் பார்கள். இதற்காகப் பிரேதங்களை திருடிக்கொண்டு வந்து விற்கின்ற பிச்சைக்காரர்கள்கூட பனாரசில் இருந்தார்கள்.

பனாரசின் கிழக்குக் கரையும் மேற்குக் கரையும் வேறுவேறு காலங் களில்தான் வாழ்ந்து கொண்டிருந்தது. கிழக்குக் கரையில் எப்போதுமே மூர்க்க சந்நியாசிகளும் ரகசிய உச்சாடனங்களும் தொடர்ந்துகொண் டிருந்தன. மேற்குக் கரையில் பனாரஸ் ஒரு பசுவைப் போல சாந்தமான கண்களுடன் உலவிக்கொண்டிருந்தது.

இருளுக்குள் போய்க்கொண்டிருந்த படகிலிருந்த யாத்ரீகன் தண்ணீரில் எதையோ கண்டவனைப் போல சொன்னான்

'படகைக் கொஞ்சம் மேற்கே திருப்பி ஓட்டு . . . ஏதோ தண்ணீரில் மிதந்து போய்க்கொண்டிருக்கிறது.'

படகோட்டி அவன் குரலுக்கு செவி சாய்க்கவேயில்லை. கங்கையின் சீற்றத்தில் பிரேதங்களே அடித்துச் செல்லப்பட்டுக்கொண்டிருக்கும் போது என்ன மிதந்துகொண்டிருக்கக்கூடும். ஆனால் அந்த யாத்ரீகன் காட்டிய இடத்தில் ஒளித் திட்டு போல நீல வெளிச்சம் மிதந்து கொண்டிருந்தது. படகோட்டிக்குப் படகை அந்தப் பக்கம் திருப்பி யோட்ட விருப்பமேயில்லை. ஆனால் அந்த மனிதன் கண்டிப்பான குரலில் மேற்கே படகைத் திருப்பு என்று உரத்த குரலில் சொன்னான்.

சிறுவனும் படகிலிருந்தபடியே அந்த வெளிச்சத்தைப் பார்த்தபடி யிருந்தான். படகு மெதுவாக மேற்குக் கரையை நோக்கிப் போகத் துவங்கியது. படகோட்டி துடுப்பை மிக மெதுவாகப் போட்டுக் கொண்டிருந்தான். படகு அந்த நீல வெளிச்சம் வந்த இடத்தின் அருகாமைக்கு வந்தபோது தண்ணீரில் அப்படி எதுவும் தெரியவில்லை. யாத்ரீகன் குழப்பத்துடன் இங்கே தெரிந்த வெளிச்சம் எங்கே போனது என்று சுற்றிலும் திரும்பி பார்த்துக்கொண்டிருந்தான். கிழக்குக் கரையில் நின்றுகொண்டிருந்த நாய்கள் இடைவிடாமல் குரைத்துக்கொண்டிருந்த சப்தம் அவர்களுக்குத் தெளிவில்லாமல் கேட்டது.

முன்பு பார்த்த நீல வெளிச்சம் இப்போது கையெட்டும் தொலைவில் இன்னொரு இடத்தில் தெரிந்தது. யாத்ரீகனுக்கு ஏன் அந்த நீல வெளிச்சம் இடம் விட்டு இடம் நகர்ந்து போய்க்கொண்டிருக்கிறது என்று குழப்பமாக இருந்தது. படகைத் திரும்பவும் கிழக்குக் கரையை நோக்கி ஓட்டச் செய்தான். சிறுவன் இப்போது விளையாடுபவனைப் போல தன் கையிலிருந்த தகரக் குவளையை நதியினுள் விட்டு தண்ணீரை அள்ளி நதியிலே விட்டபடியிருந்தான். யாத்ரீகன் சிடுசிடுப் பானவன் போல நீ கிழக்குக் கரைக்குப் போவதற்குள் பூஜை முடிந்து விடப் போகிறது என்று கத்தினான். அப்போதும் படகின் வேகம் அதிகமாகவேயில்லை.

மழை நாளின் இரவு என்பதால் வானில் நட்சத்திரங்கள்கூட இல்லை. படகோட்டி கங்கையில் பனிரெண்டு வயது முதல் அலைந்து கொண்டுதானிருக்கிறான். இவனைப் போன்று எத்தனையோ பயணி களை அவன் கண்டிருக்கிறான். ஒருமுறை அவன் படகில் ஒரு குடும்பம் நள்ளிரவில் ஏறிக்கொண்டு ஆற்றின் நடுவில் போய் பூஜை செய்ய வேண்டும் என்று சொன்னது. அவனும் ஆற்றினுள் அவர்களை அழைத்துக்கொண்டு போனபோது படகை நடு ஆற்றில் நிறுத்திவிட்டு படகில் வந்தவர்களில் அதிக வயதாகி இருந்த ஒரு மனிதரை யாவரும் வணங்கினார்கள்.

பிறகு அவரது உடலைச் சுற்றி ஒரு துணியை அவிழ்க்க முடியாத படி கட்டி காலில் ஒரு கயிற்றில் கருங்கல்லையும் சேர்த்துப் பிணைத்து அவரை அப்படியே தூக்கி ஆற்றில் போட்டார்கள். பிறகு கூடையில் கொண்டுவந்திருந்த செவ்வந்திப் பூக்களையும் மாலைகளையும் ஆற்றில் வீசி எறிந்து கங்கையை வணங்கினார்கள். அந்த வயசாளி தண்ணீருக் குள் தன் சாவை தானே தேடிச் சென்றுகொண்டிருந்தபோது அவர் களின் படகு கங்கையில் மிதந்துகொண்டுதானிருந்தது. விசித்திரம் பெருகியோடிக்கொண்டிருக்கும் கங்கையாற்றினை படகோட்டி பால்யத் திலிருந்தே உற்றுப் பார்த்தபடிதானிருக்கிறான்.

திரும்பவும் மழை பெய்யும் போலிருந்தது. காற்றில் ஈர வாடை கசிந்து வரத் துவங்கியது. அவர்களின் படகு ஆற்றின் எந்தத் திசையில் சென்றுகொண்டிருக்கிறது என்று யாத்ரீகனால் தெளிவாக அறிந்து கொள்ள முடியவில்லை. இடிந்து கிடந்த அரண்மனையின் பின்பக்கம் போனபோது யாத்ரீகன் தன் கண்களை இடுக்கிக்கொண்டு பார்த்தான். நெருப்பு மூட்டப்பட்டிருப்பதோ, சாதுக்களின் பாடல் சப்தமோ எதுவுமே கேட்கவில்லை. அவன் குழப்பத்துடன் எங்காவது நெருப்பு எரிவது போன்று உனக்குத் தெரிகிறதா என்று கேட்டான். படகோட்டி இல்லை என்று தலையசைத்தான்.

இது என்ன இடம் என்றே குழப்பமாகயிருந்தது. யாத்ரீகன் கண்களை இடுக்கிக்கொண்டே பார்த்தான். வழக்கமாகத் தெரியும் இடிந்து போய் நிற்கும் காவல் கோபுரம்கூட கண்ணில் தென்படவில்லை. படகு இப்போது கிழக்குக் கரையை ஒட்டி நெருங்கிச் சென்றது. திடீரென

நிலவு வெளிச்சத்தில் தெரிவது போல தண்ணீரில் தாமரை வடிவக் கட்டிடத்தின் நிழல் தெரியத் துவங்கியது. வானில் நிலவு இல்லை. ஆனால் எப்படி இதுபோன்றதொரு பிரதிபிம்பம் தண்ணீரில் தெரிகிறது என்று தெரியாமல் அதையே பார்த்துக்கொண்டிருந்தான். பிம்பம் மீன் அசைவது போல தண்ணீரில் அசைந்துகொண்டேயிருந்தது.

படகு கரையை நெருங்கியபோது அதன் அருகாமையில் ஒரு படித்துறை இருந்தது. அது பெண்களின் படித்துறையைப் போலிருந்தது. நதியின் சீற்றத்தினுள் நின்று பெண்கள் குளிப்பதற்கு வசதியாக இரும்புச் சங்கிலி போட்டிருந்தார்கள். யாத்ரீகன் குழப்பத்துடன் அதைக் கவனித்துக்கொண்டிருந்தான்.

இடிபாடுகளுக்குள் எங்காவது நடமாட்டம் தெரிகிறதா என்று அவன் கண்கள் தேடிக்கொண்டிருந்தன. எங்கும் நடமாட்டம் இருப்பதாகத் தெரியவில்லை. ராஜ் ஹட்டில் பூஜைகள் நடந்து வருடக்கணக்கில் ஆகியிருக்கின்றன. எப்போதாவது மன்னரின் வாரிசுகள் எவராவது வந்தாலேயன்றி அங்கே மற்றவர்கள் நடமாடுவதுகூட அனுமதிக்கப் படுவதேயில்லை. யாத்ரீகன் தன் குழப்பத்தை வெளிக்காட்டிக் கொள்ளாமல் படகை இன்னும் கொஞ்ச தூரம் ஓட்டிச் செல்லும்படியாகச் சொன்னான். அப்போதும் அரண்மனையோ, வேறு படித்துறைகளையோ காண முடியவில்லை. பிறகு சந்தேகத்துடன் யாத்ரீகன் கேட்டான், நீ பனாரஸைச் சேர்ந்தவன்தானே?

படகோட்டி தலையசைத்தான். அவனுக்குத் தெரியும் ராஜ் ஹட்டிற்குப் பிறகு படித்துறைகள் இல்லை. கங்கையின் மேற்குக் கரையில் உள்ள ஒன்றிரண்டு கிராமங்களில்கூட இதுபோன்ற முறையான படிக் கட்டுகள் கிடையாது.

திரும்பவும் மின்னல் வெட்டும் மழைக்காற்றும் சேர்ந்துகொண்டது. படகோட்டி யாத்ரீகன் கேட்காமலே படகைக் கிழக்குக் கரையோரமாகவே ஓட்டத் துவங்கினான். சிறுவன் இப்போது வேலை செய்யவில்லை. கைகளை ஒடுக்கி உட்கார்ந்துகொண்டு யாத்ரீகனை வெறித்துப் பார்த்தபடியிருந் தான். படகு மெதுவாகக் கிழக்குக் கரை கிராமங்களை நோக்கி செல்லத் துவங்கியது. ஆற்றில் அந்த நீல வெளிச்சம் இப்போது ஆங்காங்கே தோன்றுவதும் மறைவதுமாகயிருந்தது. மழை வலுத்துப் பெய்யத் துவங்கியது.

மழையின் ஊடாக ராஜ் ஹட்டை எங்கே தேடுவது என்று அவர்களுக்குப் புரியவில்லை. படகும் அதிக ஆட்டம் காணத் துவங்கியது. மேற்குக் கரைக்குத் திரும்பிப் போய்விடலாம் என்று யாத்ரீகன் விருப்பமற்ற குரலில் சொன்னான்.

அவர்கள் படகு திரும்பவும் அசி ஹட்டிற்குப் போனபோது யாத்ரீகன் தனது சட்டைப் பையில் உள்ள சில்லறைகளை எண்ணிப் பார்த்து அவனிடம் கொடுத்துவிட்டு மழைக்குள்ளாகவே ஆற்றில் குதித்து படித் துறையை நோக்கி நடந்து போக ஆரம்பித்தான். படகில்

இருந்த வயதானவனும் அவனோடு இருந்த சிறுவனும் சில்லறைகளை எண்ணிக் கொண்டிருந்தார்கள்.

யாத்ரீகன் படித்துறையின் மேல் ஏறி நடந்து அருகாமையில் இருந்த மண்டபத்திற்கு வந்து சேர்ந்தான். மண்டபத்தில் ஒரு பந்த விளக்கு எரிந்துகொண்டிருந்தது. இந்தப் பின்னிரவில்கூட குளித்து ஈரம் சொட்டும் உடலோடு தனது திரிசடையைப் பின்னல் இட்டுக்கொண்டிருந்த ஒரு சந்நியாசியை அவன் கண்டான். சந்நியாசி அவன் புகைக்க விரும்பு கிறானா என்று கேட்டு தன் அருகாமையில் இருந்த புகைக்குழலை அவனுக்குத் தந்தான். யாத்ரீகனும் இரண்டு இழுப்புகள் இழுத்துவிட்டு தான் ராஜ் ஹட்டில் நடக்க இருந்த பூஜைக்குப் போனதாகவும் அங்கே திடீரென ஒரு பெண்கள் படித்துறை இருப்பதாகச் சொன்னான்.

தனது திரிசடையை முடிந்துகொண்டிருந்தவன் சட்டென அவன் பக்கம் திரும்பிக் கேட்டான், ‘பெண்கள் படித்துறையா?’ யாத்ரீகன் ஆமாம் என்று தலையாட்டினான். திரிசடைக்காரன் வெளிறிய முகத்துடன் அங்கே ஒரு தாமரை வடிவ மாளிகை இருந்ததா? என்று திரும்பவும் கேட்டான். யாத்ரீகன் புகைக்குழாயை உறிஞ்சியபடியே அதற்கும் தலையசைத்தான். திரிசடைக்காரன் முகம் குழப்பமேறியது போல நிறம் மாறியது. யாத்ரீகனிடமிருந்த புகைக்குழாயை வாங்கி உறிஞ்சி விட்டு யார் உன்னை அந்த இடத்திற்கு அழைத்துப் போனார்கள் என்று கேட்டான்

அசிஹட்டின் படகோட்டி என்றான் யாத்ரீகன். திரிசடைக்காரன் திகைப்போடு தனது தொண்டையைச் செருமியபடியே அவனோடு படகில் ஒரு சிறுவனும் இருந்தானா என்று கேட்டான். ஆமாம் என்று சொன்னதும் திரிசடைக்காரன் சிரித்தபடியே சொன்னான்,

“உன்னைக் கூட்டிப்போனவன் யார் தெரியுமா. அவனது பெயர் விப்ளன். அவன் இறந்துபோய் ஐம்பது வருடங்கள் ஆகின்றன. மழை நாட்களில் விப்ளன் கங்கையைச் சுற்றிக்கொண்டேயிருப்பான் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். நீ படகில் பார்த்தது அவனது பேரன். அந்தச் சிறுவன் கங்கையின் வெள்ளத்தில் சிக்கி அடித்துப் போய்விட்டான். அவனை மீட்பதற்காக விப்ளன் வெள்ளத்தில் குதித்து அவனும் சுழலில் சிக்கி இறந்துபோய்விட்டான் என்கிறார்கள். உன்னைப் போலவே சிலர் விப்ளனைப் பார்த்திருப்பதை விவரித்திருக்கிறார்கள். நீ அதிர்ஷ்டக் காரன். காலத்தின் பின்னால் போய் திரும்பியிருக்கிறாய்.”

யாத்ரீகனால் நம்ப முடியவேயில்லை. அவன் பயத்தை மறைத்துக் கொண்டபடியே கேட்டான்

“அந்தத் தாமரை வடிவ அரண்மனையும் பெண்கள் படித்துறையும் கூட நிஜமில்லையா?”

“விப்ளன் உனக்குக் காட்டிய அரண்மனை காசிராஜன் தன் மனைவிக்குக் கட்டிக்கொடுத்த கமலவிலாசம். அது தண்ணீருக்குள்

மூழ்கி நூற்றாண்டுகளாகிவிட்டது. அழிவற்றதாக அந்த அரண்மனை தண்ணீருக்குள்ளாகவே மூழ்கிக் கிடப்பதாகவும் இதுபோன்ற நாட்களில் அது தன் பிம்பத்தை வெளிப்படுத்தும் என்பார்கள். நீ பார்த்தது அந்தப் பிம்பத்தைத்தான்” என்றான்.

யாத்ரீகனால் நம்ப முடியவேயில்லை. அவன் புகைக் குழலை வாங்கி வேகமாக உறிஞ்சியபடியே திரும்பவும் கேட்டான். “நீ சொல்வது எல்லாம் நிஜமானதா? அந்தப் படகோட்டி உயிரோடு இல்லையா?”

திரிசடைக்காரன் சிரித்தான்.

“கங்கையின் விசித்திரம் பற்றி உனக்குத் தெரியாது. இங்கே தண்ணீரில் மூழ்கி இறந்துபோகின்றவர்கள் நீல வெளிச்சத்தைப் போன்று தோன்றி அலைந்துகொண்டிருப்பார்கள் என்கிறார்கள். நல்லவேளை அதை நீ பார்க்கவில்லை” என்றான்.

அதைக் கேட்டதும் யாத்ரீகனுக்கு உடல் வியர்க்கத் துவங்கியது. அவன் கைகள் தன்னை அறியாமல் நடுங்க ஆரம்பித்திருந்தன. அவன் இருளுக்குள்ளிருந்த கங்கையைத் திரும்பிப் பார்க்க விரும்பினான். ஆனால் கண்கள் திரும்ப மறுத்து பந்த வெளிச்சத்தைப் பார்த்துக் கொண்டேயிருந்தன. மழை வலுத்துப் பெய்யத் துவங்கியது. பந்தம் காற்றில் அணைந்துபோய் மண்டபமே இருட்டாகியது. மழை இரவெல்லாம் விடாமல் பெய்துகொண்டேயிருந்தது. பயமும் குழப்பமுமாக யாத்ரீகன் சுருண்டு படுத்துக் கிடந்தான்.

காலை வெயிலின் வெளிச்சத்தில் கங்கை மினுக்கத் துவங்கும் வரை யாத்ரீகன் அசதியும் களைப்புமாக உறங்கிக் கிடந்தான். பிறகு அவன் விழித்தபோது அவன் படுத்துக் கிடந்த இடத்தின் அருகே எருமைகள் தண்ணீரில் இறங்குவதற்காகச் சென்றுகொண்டிருந்தன. அவன் படுத்திருந்த இடத்தில் குப்பைமேடு மட்டுமேயிருந்தது. கங்கையில் படகுகள் சலனமில்லாமல் மிதந்து போய்க்கொண்டிருந்தன.

யாத்ரீகன் தன்னைச் சுற்றிலும் தேடிப் பார்த்தான். பெரிய குப்பை மேட்டைத் தவிர வேறு எதுவுமே தென்படவில்லை. அவன் திகைப்போடு இரவில் பாரத்த மண்டபம், திரிசடை கொண்ட சாமியார் எதையும் காணவில்லையே என்று குழம்பிப் போய் பார்த்துக் கொண்டிருந்தான். தொலைவு வரை கட்டிடங்கள் எதுவுமேயில்லை. கங்கையில் அன்றைக்கு வெள்ளப்பெருக்கு அதிகமாகயிருந்தது. பகல் வெளிச்சம் மீன்களைப் போல நதியில் துள்ளி விளையாடிக் கொண்டிருந்தது. கரையோரமாக ஒதுங்கிய செவ்வந்திப் பூக்கள் நதியில் இழுபட்டபடியே மிதந்துகொண்டிருந்தன. எது நிஜம் எது மாயம் எனத் தெரியாத யாத்ரீகன் கூச்சலிட்டபடியே கரையேறி ஓடத் துவங்கியிருந்தான்.

# மூன்று குடும்பக் கதைகள்

## 1. பீங்கான் நாரைகள்

மூப்பத்தியெட்டு வருஷமாக அம்மா தரையை வெறித்துப் பார்த்துக் கொண்டேயிருக்கிறாள். தனது பதினேழாவது வயதில் அம்மா ஒரு நாள் சமையல் செய்து கொண்டிருந்தபோது அப்பா பர்மா விலிருந்து கொண்டுவந்திருந்த தேநீர் கோப்பையைக் கைதவறி உடைய விட்டதில் இருந்து இப்படி தரையை வெறித்துப் பார்க்கத் துவங்கினாள் என்கிறார்கள். அப்போது நான் பிறக்கவேயில்லை. அந்தத் தேநீர் கோப்பை சீனா களிமண்ணில் தயாரிக்கப்பட்டது. அதில் இரண்டு நாரைகளின் உருவம் தங்கநிறச் சித்திரமாகத் தீட்டப்பட்டிருந்ததாக அப்பா சில முறை சொல்லியிருக்கிறார். அநேகமாக திருமணமான புதிதில் தங்களது காதலை வெளிப்படுத்திக் கொள்வதற்காக அப்பா அந்தத் தேநீர்க் கோப்பையை வாங்கிக் கொண்டு வந்திருக்கக்கூடும். சம்பவம் நடந்த அன்று அம்மா சூடான தேநீரைக் கோப்பை நிறைய ஊற்றியதால் கையில் எடுக்க முடியாமல் தவறி கீழே போட்டிருக்கிறாள். அப்பா உடைந்து கிடந்த தேநீர் கோப்பையைக் கண்டதும் அவள் கன்னத்தோடு ஓங்கி ஒரு அறை கொடுத்துவிட்டு, உருப்படாத கழுதை பர்மா கப்புடி ஒரு நிமிசத்திலே உடைச்சிட்டே ... அடக்க ஒடுக்கமா இல்லாம திம்மானி மாதிரி நடந்தா இப்படித்தான் ஆகும் என்று வாய்க்கு வந்தபடி திட்டியிருக்கிறார். அம்மாவிடம் சலனமேயில்லை. திருமணத்திற்கு முன்பு வரை அப்பா பர்மாவில் மர வணிகம் செய்து கொண்டிருந்தார். ஆனால் திருமணத்திற்குப் பிறகு அவர் பர்மாவிற்குப் போகவில்லை. நன்மை தருவார் கோவில் சந்தில் சிறியதாக ஒரு போட்டோ ஸ்டுடியோ வைத்துக்கொண்டு இங்கேயே வாழத் துவங்கிவிட்டார். பின் நாளில் அம்மாவை அவர் எடுத்திருந்த ஒன்றிரண்டு புகைப்படங் களில்கூட அவள் தரையை வெறித்தபடிதானிருக்கிறாள். அப்பாவிற்கு அது ஒன்றும் பெரிய விஷயமாக ஒருபோதும் தோன்றவேயில்லை. அப்பா மட்டுமில்லை. வீட்டில் இருந்த சித்தப்பாக்களோ ஆச்சியோ யாருமே அதை ஒரு பொருட்டாக நினைக்கவேயில்லை. எப்போதாவது வேற்று ஆட்கள் யாராவது வீட்டிற்கு வரும்போதுதான் அம்மா எப்போதும் தலையைக் குனிந்துகொண்டேயிருக்கிறாள் என்ற விஷயம்

கவனத்திற்கு வரும். அப்பா அது ஒரு வியாதி என்று சொல்லி சமாளித்துவிடுவார். அம்மா தரையை வெறித்தபடி என்னதான் பார்த்துக்கொண்டிருக்கிறாள் என்று யாருக்கும் தெரியாது. ஆனால் அவளது பார்வை பூமியில் ஏதோ முக்கியமான காரியம் ஒன்று நடந்துகொண்டிருப்பது போல அத்தனை கூர்மையாகயிருக்கும். இரவிலும்கூட அம்மா சமையற்கட்டின் உள்ளே வெறும் தரையில் முகத்தை பூமியை நோக்கிப் பார்த்தபடிதான் படுத்திருப்பாள். அம்மாவின் குடும்ப வாழ்க்கையில் இதனால் பெரிதாக எந்த மாற்றமும் வந்துவிடவில்லை. ஆறு குழந்தைகள் பிறந்திருக்கின்றன. அதில் ஒன்று பிறந்த சில வாரங்களிலே இறந்தும் போயிருக்கிறது. அவள் குழந்தைகளைக்கூட தலையை நிமிர்ந்து பார்த்ததேயில்லை. அம்மா குனிந்தேயிருந்து இருந்து அவளது கழுத்தே அறுபட்ட வாழைமட்டை தொங்குவது போல கீழ்நோக்கித் தொங்கிக்கொண்டிருக்கத் துவங்கியது. அம்மா சமையல் அறைக்குள்ளாகவே தனது வாழ்க்கையைக் கழித்தாள். எப்போதாவது கைதவறி ஒரு டம்ளரோ கரண்டியோ விழுந்தவுடன் அவள் மிகுந்த ஆவேசத்துடன் பூமியைத் திட்டிக்கொண்டிருப்பதைக் காணும்போது தெரிந்த யாரோ ஒரு ஆளோடு பேசிக்கொண்டிருப்பது போலவேயிருக்கும். வீட்டில் பகலும் இரவும் அப்பாவின் குரல் எதையாவது சாப்பிடவோ குடிக்கவோ யாசித்துக்கொண்டேயிருந்தது. அபூர்வமாக வீட்டில் யாரும் இல்லாத நாட்களில்கூட அம்மா வாசலைத் தாண்டி வெளியே போனதே யில்லை. அவளுக்கு உலகம் நேர்கொண்டு பார்க்க விருப்பமற்றதாகப் பதிந்துவிட்டது. சில நேரம் அம்மாவைப் போல நானும் தலை யைக் குனிந்தபடியே நின்று பார்ப்பேன். ஏதோ ஒரு குற்ற மனப்பாங்கு மனதில் கசியத் துவங்கி, மெல்ல அழுத்தத் துவங்கிவிடும். ஒரு சாதாரண பீங்கான் கோப்பையை உடைத்ததற்காக எதற்காக இப்படி யொரு தண்டனையைக் கொடுத்துக்கொண்டிருக்கிறாள் என்று யோசித்துக்கொண்டேயிருப்பேன். என்னால் அவளது இயல்பைப் புரிந்துகொள்ளவே முடியாது. காலம் வீட்டிலிருந்து ஒவ்வொரு வராக வெளியேற்றத் துவங்கியது. திருமணமும் வேலையும் வீட்டினுள் வளைய வந்த எங்கள் அக்காக்களையும் என்னையும் வேறுவேறு ஊர்களுக்கு இடம் மாற்றியது. சாவு ஒரு விருந்தாளியைப் போல வீட்டில் நுழைந்து அதன் விருப்பமான மனிதர்களைக் கவ்விக்கொண்டு சென்றது. ஆச்சி இறந்தபோதோ, சித்தப்பாவின் மரணத்திலோ அம்மாவிடம் சிறிய மாற்றம்கூட ஏற்படவேயில்லை. அப்போதும் அம்மா தலை குனிந்துகொண்டேதானிருந்தாள். வயோதிகம் முற்றி அம்மாவும் அப்பாவும் மட்டுமே அந்த வீட்டில் இருந்தார்கள். அப்போதும் கூட அம்மாவின் சமையல் வேலை ஓயவேயில்லை. அவள் கரப்பான் பூச்சிகளோடும், ஈரத்தில் நமத்துப்போன தீக்குச்சி களோடும் பேசிக்கொண்டிருப்பதை அப்பா கேட்டிருக்கிறார். அவருக்கு சில சமயம் அம்மாவைப் பார்க்க பயமாகயிருக்கும். தனக்கும் வயதாகிவிட்டது என்று அவளுக்குத் தெரிந்திருக்குமா, எதற்காக

இத்தனை வைராக்கியமாக இருக்கிறாள் என்று அவளைப் பார்த்த படியே யோசித்துக்கொண்டிருப்பார். அவள் முறிந்த தானியக் கதிர் போல தலைகவிழ்ந்து கொண்டிருப்பாள். அம்மா யாரையும் குற்றம் சொன்னதோ திட்டியதோயில்லை. கோடைக் காலத்தின் பின்பாதியில் ஒரு நாளிரவு அப்பா குளியலறைக்குள் விளக்கு போடாமல் நடந்துபோய் வழுக்கி விழுந்ததில் அடிபட்டு மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டார். அன்றைக்குக்கூட அம்மா வீட்டில் சமைப்பதை நிறுத்தவேயில்லை. அப்பா இறந்து அவரது உடல் வீட்டிற்குக் கொண்டுவரப்பட்ட போதுகூட அவள் அதே சமையல் கட்டின் உள்ளே தரையைப் பார்த்துக் குனிந்தபடியே அழுதுகொண்டி ருந்தாள். அவரது உடலை எடுத்துக்கொண்டு வெளியே போகும் நிமிஷத்தில் அவள் விடுவிடுவென முன்வாசலுக்கு வந்து அந்த உடலின் முன்பாக வந்து நின்றவளாக முதன்முறையாகத் தலையை நிமிர்த்திப் பார்த்து "நான் வேணும்னு பீங்கான் கோப்பையை உடைக்கலைங்க. ." என்று சொல்லிவிட்டு தலையைத் திரும்பவும் கவிழ்த்திக்கொண்டாள். அப்பாவிடமிருந்து இப்போது எந்த எதிர்ப்பும் வரவேயில்லை. அம்மா பெருமூச்சிட்டுக் கொண்டபடி தனது அழுகையைச் சேலையால் துடைத்தபடியே துஷ்டி கேட்டு வந்தவர் களுக்குக் கடுங்காப்பி போடுவதற்காக அடுப்பைப் பற்ற வைக்கத் துவங்கினாள். அப்பாவின் உடல் வீட்டை விட்டு வெளியே தெருவில் போய்க்கொண்டிருந்தது. அன்றோடு தனக்கு திருமணமாகி நாற்பத்தி இரண்டு வருடங்கள் முடிந்து நான்கு மாதங்கள், ஏழு நாட்கள் ஆகியிருந்தது அம்மாவிற்கு நன்றாகவே நினைவிலிருந்தது.

## 2. ஙப் போல் வளை

அம்மாவிடம் மதியச் சாப்பாட்டின்போதே தாத்தாவை இன்றைக்கு ராத்திரி கொல்லப்போவதாக அப்பா சொல்லிக்கொண்டிருந்தார். நானும் சின்ன அக்காவும் அதைக் கேட்டுக்கொண்டிருந்தோம். அம்மா மறுப்போ ஆதரவோ எதுவுமே சொல்லவில்லை. சாப்பாட்டை மென்றபடியே அப்பா கடுகடுத்த குரலில் "அந்த ஆளு கடைக்கு வர்ற வரைக்கும் நான் ஒரு மசிருகூட சம்பாதிக்க முடியாது. கல்லா விலே கிடக்கிற சில்லறையைக்கூட கணக்கு பாத்து வச்சிட்டுப் போறான். இப்படியே என்னாலே பாத்துட்டு இருக்க முடியாது சௌந்திரம். பெத்தவன்னா. அவன் இம்சையை எத்தனை நாள் சகிச்சிக்கிட்டு இருக்கிறது. இன்னைக்கு ராத்திரி அவன் கழுத்தை நெரிச்சிக் கொல்லப் போறேன். வெளியே யாருக்கும் தெரியாம மறைச்சிட்டு நாளையில இருந்து நான் கடைக்குப் போயிருவேன்" என்று சொல்லிக்கொண்டிருந்தார். அம்மா சாப்பிட்ட தட்டைக் கழுவுவதற்காக உள்ளே எடுத்துக்கொண்டு போனபோது கடையிலிருந்து தாத்தா சைக்கிளில் வந்து இறங்கி ஓரமாக மரநிழலில் நிறுத்திப் பூட்டிக்கொண்டிருந்தார். அப்பா அவரைப் பார்க்காதது போல

வெளியே போக முயன்றபோது “எதுக்குடா வெயிலில் கிளம்பிப் போறே . . . கடையைப் பூட்டிட்டு வந்துட்டேன்” என்று தாத்தா சொன்னதை அப்பா கேட்கவேயில்லை. அம்மா எப்போதும் போலவே அன்றும் மாலையில் உதிரி மல்லிகைப் பூ வாங்கிக் கட்டி தலையில் வைத்துக்கொண்டு அடுத்த வீட்டுப் பெண்ணோடு ஏதோ ஊர்க்கதை பேசிக்கொண்டிருந்துவிட்டு இரவில் அப்பா கடையை எடுத்துவிட்டு வரும் பத்தரை மணி வரைக்கும் காத்துக்கொண்டிருந்தாள். அப்பாவும் தாத்தாவும் ஒரே சைக்கிளில்தான் வீடு திரும்பினார்கள். அப்பா குளித்துவிட்டு சாப்பிட வருவதற்குள் தாத்தா சாப்பிட்டு முடித்து விட்டு தனது முழங்கால் வலி மாத்திரைகளைச் சாப்பிட்டுவிட்டு படுத்துக்கொண்டார். அப்பாவும் அம்மாவும் உறக்கம் வராமல் பாயில் படுத்துக் கிடந்தார்கள். வெளியே யார் வீட்டிலே ரேடியோ பாடிக்கொண்டிருந்தது எங்கள் காதில் விழுந்தது. அப்பா ரகசியமான குரலில் “அந்த ஜன்னலை எழுந்து போய் சாத்திட்டு வா. . .” என்று சொன்னார். அம்மா மெதுவாக எழுந்து போய் ஒவ்வொரு ஜன்னலாகச் சாத்திவிட்டு வந்து படுத்துக்கொண்டாள். அப்பா ஓரத்தில் எரிந்து கொண்டிருந்த சிம்னி விளக்கை ஊதி அணைத்ததும் வீடு முழுவதும் இருள் பீச்சியடிக்கத் துவங்கியது. அப்பா மெதுவாக இருட்டிற்குள் நடந்து போய்க்கொண்டிருந்தார். அம்மா அதைக் கவனிக்காதது போல சுருண்டு படுத்துக்கொண்டாள். அப்பா கையில் உமித் தலையணையே இருந்தது. அப்பா நடந்து சென்றபோது வழியில் கிடந்த தாத்தாவின் வெற்றிலை உரலை மிதித்திருக்கக்கூடும். அது பலத்த சப்தத்துடன் உருண்டு ஓடியது. அப்பா கையில் தலையணையோடு இருளில் நின்று கொண்டிருந்தார். தாத்தா தனது படுக்கையின் அடியில் இருந்து தீப்பெட்டி ஒன்றை எடுத்து உரசிக் காட்டினார். அந்த வெளிச்சத்தில் இறுக்கமும் ரௌத்திரமும் நிரம்பிய அப்பாவின் முகம் தெரிந்து மறைந்தது. தாத்தா தொண்டையைச் செருமிக்கொண்டவராக “குடிக்க தண்ணி கொண்டாடா” என்று சொன்னார். அப்பா தலை யணையைக் கீழே போட்டுவிட்டு இருட்டிற்குள்ளாகவே நடந்து போய் குடிக்க தண்ணீர் கொண்டுவந்து தந்தார். இதற்குள் தாத்தா பூட்டியிருந்த ஜன்னல்களைத் திறந்து விட்டு வானில் தெரியும் ஒன்றிரண்டு நட்சத்திரங்களைப் பார்த்தபடியே இருந்தார். பிறகு ஒரு செம்பு தண்ணீரையும் வாங்கிக் குடித்துவிட்டு வெளிக் கதவைத் திறந்து மூத்திரம் போய்விட்டு வந்து படுத்துக்கொண்டார். மறுநாள் காலை தாத்தா கடைக்குப் போகவேயில்லை. சில வாரங்களில் தாத்தா ரொக்கப் பணம் முழுவதையும் அம்மாவிடமே கொடுத்து வைக்கத் துவங்கினார். இது நடந்து ஆறு மாதங்களுக்குப் பிறகு நாங்கள் குடும்பத்தோடு திருச்செந்தூருக்குப் போய் சாமி கும்பிட்டோம். அதன் பிறகு தாத்தாவின் எழுபத்தி ரெண்டு வயது வரை அப்பா அவரை மிக அன்போடும் பொறுப்போடும் கவனித்துக்கொண்டார். தாத்தாவும் தனது மகனும் மருமகளும் போல அன்பானவர்கள் யாருமில்லை என்று பேச்சுக்குப் பேச்சு சொல்லிக்கொண்டிருப்பார்.

அவர்களது அந்நியோன்யம் ஊருக்கே ஒரு வழிகாட்டுதல் போலிருந்தது. எங்கள் குடும்பத்தில் அதன் பிறகு எவருக்குள்ளும் எந்த சச்சரவும் நடக்கவேயில்லை.

## 3. இல்லறம்

என்னால் அப்படி நடந்துகொள்ள முடியாது என்று தேன்மொழி இந்த மலைநகருக்கு வந்த இரண்டு தினங்களுக்குள் நாலைந்து முறை சொல்லிவிட்டாள். ஆனாலும் அவன் விடாப்பிடியாக அதையே கேட்டுக்கொண்டிருந்தான். அவர்கள் இருவருக்கும் திருமணமாகி நாலைந்து நாட்களே ஆகியிருந்தன. அவன் முதல் இரவில் "ஆடைகளே இல்லாமல் பிறந்த மேனியாக உன்னைப் பார்க்க விரும்புகிறேன்" என்று அவளிடம் கேட்டான். அவள் மறுத்து தலையசைத்தபடியே "அப்படி என்னால் இருக்க இயலாது. கூச்சமாகயிருக்கிறது" என்று சொன்னாள். அவனுக்கு கொஞ்சம் ஆத்திரமாக வந்தது. அவனாகவே அவளது உடைகளைக் களைந்து எறியத் துவங்கினான். அவளும் முரட்டுத்தனமாக எதிர்க்கத் துவங்கினாள். இதனால் கட்டிலில் இருந்து தள்ளியதில் அவன் கீழே விழுந்தான். அவள் அதைப் பற்றிக் கவலைப்படாமல் சிரித்துக்கொண்டிருந்தாள். அவன் அடிபட்ட கையை உதறிக்கொண்டே கத்தினான், "நான் உன் புருஷன்டி என்கிட்ட எதுக்குடி மறைக்கிறே?" அவள் பதில் பேசவில்லை. படுக்கையில் சுருண்டு படுத்துக்கொண்டாள். அவன் பசியோடு தட்டில் வைத்திருந்த ஆப்பிளைக் கடித்துக் குதறித் தள்ளினான். பிறகு அவளது விருப்பத்தைப் பற்றிய கவலையின்றி கையைப் பிடித்து முறுக்கி அணைத்தபடி அவள் உடல் மீது இயங்கத் துவங்கினான். அவளிடமிருந்த எதிர்ப்புணர்வு மெதுவாக அடங்கிப் போனது. மறுநாள் இரவு அவர்கள் ரயிலில் தேனிலவிற்காகப் பயணமானார்கள். அவன் ரயில் பெட்டிக்குள்ளாகவே அவளோடு உறவு கொள்ள விரும்பியவனைப் போல "எல்லோரும் உறங்கிய பிறகு நீ கழிப்பறைக்கு வந்துவிடு" என்றான். அவள் எழுந்து போகவே யில்லை. அவன் அந்த இரவில் மட்டும் பத்து சிகரெட்டிற்கும் மேலாகப் புகைத்திருக்கக் கூடும். கடுகடுவெனயிருந்தான். பெர்த்தில் சுருண்டு படுத்திருந்த அவளது இடுப்பில் நகத்தால் ஆழமாகக் கிள்ளினான். அவள் கத்தவே யில்லை. அவர்கள் மலைநகரின் சரிவில் இருந்த நட்சத்திர விடுதியில் தங்குவதற்காக அறை எடுத்துக்கொண்டார்கள். பெட்டிகளை உள்ளே வைத்துவிட்டு ரூம் பாய் வெளியேறிய மறு நிமிஷம் அவன் ஆத்திரத்தோடு "ராத்திரி பூரா நொந்துபோய் கிடந்தேன் தெரியும்லே" என்றபடியே மூர்க்கமும் காம வேகமுமாக அவளைப் படுக்கையில் தள்ளிக் கூடிவிட்டு அப்படியே உறங்கத் துவங்கினான். அவள் எழுந்தபோது படுக்கையில் மூத்திர வாடை அடித்தது. குமட்டிக்கொண்டு வந்தது. அப்படியே குளியலறையை நோக்கி ஓடினாள். உள்ளேயிருந்த கண்ணாடியில் பார்த்தபோது முழங்கையில் இடித்து கீறல் ஏற்பட்டிருந்

தது. வலியில் அழுகை வந்தது. தண்ணீரை திறந்துவிட்டபடியே சில நிமிஷங்கள் அழுதுவிட்டு உள்ளே வந்து சோபாவில் சுருண்டு படுத்துக்கொண்டாள். அவன் விழித்து எழுந்தவுடனே பல் துலக்கு வதற்குள் அவளைக் கட்டிக்கொண்டு ஒரு முத்தம் கொடுத்துவிட்டு சிரித்தான். அவள் பலவீனமான முகத்துடன் சிரித்தாள். அவன் காலை உணவை முடித்துக்கொண்டு அவளை அழைத்துக்கொண்டு புல்தரை நீண்டுள்ள ஒரு பூங்காவிற்கு அழைத்துச் சென்றான். அவளைப் புல்தரையில் உட்கார வைத்து நிறைய புகைப்படங்கள் எடுத்துக் கொண்டான். பிறகு அவள் காதில் "இப்படியே புல்தரையில் படுத்துக் கொண்டு உறவு கொண்டால் எப்படியிருக்கும் தெரியுமா?" என்று சொல்லிச் சிரித்தான். அவளுக்கு உடம்பில் நடுக்கம் ஏற்படத் துவங் கியது. புல்தரை பக்கம் திரும்பிப் பார்க்க முடியவேயில்லை. மதியம் அவன் அறைக்குத் திரும்பிய பிறகு தனது நண்பன் ஒருவனுக்கு போன் செய்து, பீர் குடித்துவிட்டு உறவு கொண்டால் நன்றாகயிருக்குமா என்று ஏதோ ஆலோசனைகள் கேட்டுக்கொண்டிருந்தான். பிறகு சாப்பிட்டுவிட்டு அறையின் கதவுகளை மூடி அவளோடு திரும்பவும் கூடினான். மாலை அவர்கள் ஒரு ஆங்கிலப் படத்திற்குப் போனார்கள். அங்கும் அவளிடம் "உன்னை முழுசாகப் பார்க்க வேண்டும் என்று சொன்னது நினைவிருக்கிறதா" என்று கேட்டான். அவள் பதில் சொல்லவேயில்லை. அன்றிரவு அவன் வெற்றிவீரனைப் போல அவள் உடலை நிர்வாணமாக்கி வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்த போது அவளுக்கு வந்த அழுகையை அடக்கிக்கொண்டிருந்தாள். அவன் சில நிமிஷங்கள் அந்த உடம்பை வெறித்துப் பார்த்துக்கொண்டி ருந்துவிட்டு ஏமாற்றம் அடைந்தவன் போல ஒரு சிகரெட் பற்ற வைத்துப் புகைத்துவிட்டு அவளைப் படுக்கையில் தள்ளினான். தேனிலவிற்காக ஆறு நாட்கள் அவனோடு மலைநகரில் தங்கியிருந்தாள். அதற்குள் இருபது தடவைக்கும் மேலாக அவர்கள் ஒன்றாகக் கூடி யிருந்தார்கள். மலையை விட்டுக் கீழே இறங்கி வரும்போது அவள் உடல் வெளிறிப் போய் முகமெல்லாம் அசதி கொண்டது போல இருந்தாள். அவன் பஸ்ஸின் இன்னொரு சீட்டில் இருந்த கல்லூரி மாணவியை வேடிக்கை பார்த்தபடியே வந்தான். அடுத்த சில நாட்களில் அவன் தனது விடுமுறை முடிந்து அலுவலகம் செல்வதற்காக ஆயுத்தம் ஆனான். தேன்மொழியும் அவனோடு புதுக் குடித்தனம் செய்ய மாநகரை நோக்கிப் புறப்பட்டாள். சந்தோஷமா வச்சிக்கிடுங்க மாப்பிள்ளை என்று சொல்லி அவனிடம் ஒப்படைத்துவிட்டு தேன் மொழியின் குடும்பமே பிரியாவிடை கொடுத்தது. தேன்மொழியும் மற்ற பெண்களைப் போல அம்மா வீட்டை விட்டுப் போகும் துக்கத் தில் அழுதுகொண்டிருந்தாள். அதன்பிறகு எல்லாப் பெண்களைப் போலவே அவளும் இனி தன் உடல் தன்னுடையதில்லை என்று ஒத்துக்கொண்டவளைப் போல அவன் இச்சையின் போக்கில் தன்னை ஒப்படைத்துக்கொள்ளத் துவங்கினாள். அவர்களது இனிமை யான இல்லற வாழ்க்கை இப்படித்தான் துவங்கியது.

# நடந்து செல்லும் நீரூற்று

பல வருடங்களாகவே திருவேங்கடம் மிக மெதுவாகத்தான் தெருவில் நடந்து போய்க்கொண்டிருக்கிறார். அதுவும் தரை நகர்ந்து போய்விடுமோ என்ற அச்சம் கொண்டவரைப் போல காலை அழுத்தி ஊன்றிக்கொண்டும் நடக்கிறார். சில நேரங்களில் அவர் தரையை எத்தி எத்திப் பார்ப்பதும் உண்டு. பூமியிடமிருந்து அவர் என்ன எதிர்பார்க்கிறார் என்று எவருக்கும் தெரியாது. ஆனால் ஏமாற்றம் அடைந்தவரைப் போல அவ்வப்போது பெருமூச்சு விட்டுக் கொள்கிறார். நகரம் எப்போதும் போலவே தன் பரபரப்பும் அதிவேகமு மாக விரைந்துகொண்டேயிருக்கிறது. அந்த நகரின் சாலைகள் மாறாத அழுக்கடைந்தும் எச்சில் கறை படிந்துமேயிருக்கின்றன.

குனிந்து நடப்பவர்கள் கண்களில் சாலைகள் வேறு உருவம் கொண்டுவிடுகின்றன போலும். திருவேங்கடம் தன் மகள் வீட்டில் வசிக்கிறார். ஆறேழு வருடமாகவே அந்த ஒரே பாதையில்தான் நடந்து வந்துகொண்டிருக்கிறார். வீட்டிலிருந்து கிளம்பினால் ஹிந்தி பிரச்சார சபா செல்லும் சாலை. அதன் முடிவில் பாண்டி பஜாரின் பூக்கடைகள். அங்கிருந்து வடக்காக நடந்து ஜி.என்.செட்டி ரோடு வழியாக அவர் அபிபுல்லா சாலையில் உள்ள தான் வேலை செய்யும் டயர் கம்பெனிக்குச் சென்றுவிடுவார்.

மாலை வீடு திரும்பும்போது மட்டும் ஜி.என்.செட்டி சாலையில் உள்ள பூங்காவில் அரை மணி நேரம் உட்கார்ந்துகொள்வார். அதுவும் ஒரே பெஞ்சில்தான். அநேகமாக அது பொதுப் பூங்கா என்றபோதும் அங்கிருந்த ஒவ்வொரு பெஞ்சிற்கும் உரிய வாடிக்கையாளர்கள் இருந்தார்கள். நாட்கணக்கில் பழகிப் பழகி சமீபமாக அந்த பூங்காவில் உள்ள இலையசையாத மரங்கள்கூட பிளாஸ்டிக்கால் ஆனதுதானோ என்ற சந்தேகம் வந்துகொண்டிருக்கிறது. அந்த மரங்கள் எப்போது இலை உதிர்க்கின்றன, எப்போது பூக்கின்றன என்று தெரிவதேயில்லை. புழுதி படிந்த இலைகளும் வாகனப் புகை படிந்த சிறு செடிகளும் அந்தப் பூங்காவின் நிஜத் தன்மையைக் கொஞ்சம்கொஞ்சமாக கலைத்துக் கொண்டிருக்கின்றன.

திருவேங்கடத்திற்கு ஐம்பத்தைந்து வயதாகிறது. சில வருடமாக அவர் நண்பரின் கார் டயர் கம்பெனி ஒன்றில் வேலை செய்துகொண்டிருக்கிறார். அவரது வாழ்வில் மறக்க முடியாத இரண்டு சம்பவங்களிருக்கின்றன. அந்த நிகழ்வுகளின் தொடர்ச்சியைக் கண்டுபிடிப்பதற்காகவே அவர் இன்றைக்கும் நடந்துகொண்டிருக்கிறார்.

வாழ்வைப் பற்றிய கனவுகள் அவருக்கு ஒருபோதுமிருந்ததில்லை. அவர் கயத்தாறில் உள்ள அத்தையின் வீட்டில் இருந்துகொண்டே படித்தார். படிக்கும் நாட்களில் அவருக்கு சில நாட்கள் தான் என்னவாகப் போகிறோம் என்ற மெல்லிய கனவு உருவாகும். அதுபோன்ற நேரங்களில்கூட அவர் தன்னை ஒரு பள்ளி ஆசிரியராகக் கற்பனை செய்துகொண்டதற்கு மேலாக எதையும் நினைத்துவிடவில்லை.

பள்ளிப் படிப்பை முடித்த கையோடு அவரை மாமா தனது ஜவுளிக்கடையில் வேலைக்குச் சேர்த்துக்கொண்டார். அப்போதுதான் தெருவை வேடிக்கை பார்க்கும் பழக்கம் உண்டானது. பேருந்து நிறுத்தத்திற்கு அருகாமையில் உள்ள சிறிய ஜவுளிக்கடை என்பதால் மதிய நேரங்களில் யாரும் வரவே மாட்டார்கள். மாமாவும் உறங்குவதற்காகச் சென்றுவிடுவார். திருவேங்கடம் கடைப்பலகையில் சாய்ந்து உட்கார்ந்துகொண்டு சாலையை வேடிக்கை பார்த்தபடியே இருப்பார்.

சாலையோரத்தில் வெள்ளரிக்காய் விற்பவன்கூட கூடையை அங்கேயே விட்டுவிட்டு மரத்தடியில் துண்டை விரித்து உறங்கிக் கொண்டிருப்பான். சுழிக்காற்று சுற்றுவது போல மெல்ல வெறுமை தெருவில் சுற்றத் துவங்கி கொஞ்சம்கொஞ்சமாக விரிந்து அவரையும் பற்றிக்கொள்ளும். அதுபோன்ற தருணங்களில் மேஜையின் மீது வைத்திருந்த தண்ணீர் சொம்பை எடுத்துக் குடிப்பதுகூட ஆயாசம் தரும் செயலாகிவிடும்.

திருவேங்கடம் அப்போது ஒற்றைத் தட்டு வேஷ்டியும் மடித்துவிட்ட வெள்ளைச் சட்டையும்தான் அணிந்திருப்பார். இருபது வயதிலே அவரிடமிருந்த வசீகரம் கொஞ்சம்கொஞ்சமாக அவரை விட்டு உலர்ந்துகொண்டு வரத் துவங்கியது. பகலைப் பார்த்துப் பார்த்து பழகிப்போய் நிறைய மதியங்களில் அவர் தன்னை முழுமையாக வெறுமையிடம் ஒப்படைத்துவிட்டாரோ எனும்படியாக யாருமற்ற சாலையை வெறித்துப் பார்த்தபடியிருப்பார். சிறு சலனம்கூட அவரிடமிருக்காது. சில நேரங்களில் காகங்கள் சாலையைக் கொத்தி அலைவதைக் கண்டபோதும்கூட அவர் முகத்தில் அசைவிருக்காது.

பகல்நேர வெறுமையும் பாதி இருட்டும் காற்றில்லாத இறுக்கமும் வணிகர்களின் முகங்களில் என்றும் அழிக்க முடியாத வடுவைப் போல படிந்துவிடுகின்றது என்பதற்கு அவரே சாட்சியைப் போலிருந்தார். நாளாக நாளாக அவரது நடவடிக்கைகளில் அது எதிரொலிக்கத் துவங்கியது. வீட்டிலிருந்து கொண்டுவரும் ஒரு சொம்பு தண்ணீரில் பாதியைக்கூட அவர் குடிப்பது கிடையாது.

ஒவ்வொரு நாளும் வீடு திரும்பும்போது மீதமிருந்த தண்ணீரை மறக்காமல் கையில் எடுத்துக்கொண்டு போய்விடுவார்.

கடைக்கு வரும் பெண்களில் சிலர் அவரைத் தற்செயலாக உரசும் போதோ அல்லது அவரது முன்பாகவே ஜாக்கெட்டின் பொத்தானை அவிழ்த்து மார்பு தெரிய குழந்தைக்குப் பால் கொடுக்கும் போதோகூட அவரிடம் சலனமேயிருக்காது. பெண்கள் அவரை எப்போதும் இறுக்கமாயிருக்கும் தராசின் படிக்கற்களைப் போலதான் கருதினார்கள். திருவேங்கடம் இல்லாத நேரங்களில் மாமா அவரது இந்தக் குணத்தைப் பற்றி ரொம்பவும் பெருமை பேசுவதைப் பற்றி கடையாள் சொல்லி திருவேங்கடமே கேட்டிருக்கிறார்.

இந்தக் குணத்திற்காகத்தானோ என்னவோ பள்ளியில் படித்துக் கொண்டிருந்த மனோன்மணியை அவருக்கே மாமா கட்டிக்கொடுத்து அந்தக் கடையை முழுதாக அவரிடமே ஒப்படைத்துவிட்டார். திருமண நாளில்கூட திருவேங்கடத்தின் முகத்தில் அயர்ச்சியும் சலிப்புமே மிஞ்சியிருந்தது. அவர் அன்றைக்கும் மதியமே கடையைத் திறந்து வைத்துவிட்டார் என்பதை பலரும் கேலி செய்தார்கள், ஆனால் திருவேங்கடத்திற்கு உண்மையில் திருமணம்தான் முடிந்துவிட்டதே, இனியும் எதற்காக தேவையில்லாமல் சும்மா உட்கார்ந்திருக்க வேண்டும் என்றுதான் தோன்றியது.

அன்றிரவில் மனோன்மணியை அவர் கட்டியணைத்தும் முத்த மிட்டதும்கூட ஒரு கட்டாயம் கருதித்தான் என்பது போலிருந்தது. புதுப்பெண்டாட்டியைக் கூட்டிக்கொண்டு முதல் முறையாக மதுரை கோவிலுக்குப் போய்விட்டு வரும்படியாக மாமா அனுப்பி வைத்த நாளில்கூட அவர் மதுரைத் தெருக்களில் இருந்த சில்லறை வணிகர் களை உற்று நோக்கியபடியேதான் வந்தார். எலுமிச்சைப் பழம் விற்கும் ஒரு ஆளிடம் நிறைய நேரம் எதையெதையோ கேட்டுக் கொண்டிருந்தார். மனோன்மணிக்கு அவரது முகத்தைப் பார்க்க பயமாக இருந்தது.

காலையில் இருந்து மதுரையில் சுற்றியலைந்தபோதும் அவர்கள் ஹோட்டலில் சாப்பிடவில்லை. ஒரு சர்பத்கூட குடிக்கவில்லை. மனோன்மணிக்கு ஆத்திரமாக வந்தது. அவள் வெயில் தாங்க முடியாமல் நகர பேருந்து நிலையத்தில் நொங்கு விற்பவனிடம் இரண்டு ரூபாய்க்கு நொங்கு வாங்கிச் சாப்பிட்டாள். திருவேங்கடம் வெயிலில் நுரைத்துக்கொண்டிருக்கும் பதநீர் பானையைப் பார்த்துக் கொண்டேயிருந்தார். வெள்ளைத் துணியால் வாய் கட்டப்பட்டிருந்த அந்தப் பானையின் மீது கிறங்கிக் கிடந்தன ஈக்கள். வீடு திரும்பிய இரவில் மனோன்மணி நிறைய அழுதாள். ஆனால் திருவேங்கடம் தூங்கிவிட்டார். அதன் பிந்திய இரண்டு தினங்கள் அவள் அவரோடு பேசவேயில்லை. ஆனால் அதை அவர் கவனித்தாரா இல்லையா என்பதுகூட அவளுக்குத் தெரியவில்லை.

திருவேங்கடத்திற்கு மகள் பிறந்தபோது திருநெல்வேலி பொது

மருத்துவனைக்குப் போய்ப் பார்ப்பதற்காகக் கிளம்பிய நாளில் மட்டும் அரை நாள் கடையை அடைத்துவிட்டுப் போனார். அதுவும் காலையில் கடையைத் திறந்து வைத்து ரெண்டு மணி வரை வியாபாரம் பார்த்துவிட்டு அதன் பிறகுதான் கடையை எடுத்து வைத்தார். நகரப் பேருந்தைப் பிடித்து அவர் திருநெல்வேலிக்குப் போய் மருத்துவமனையில் குழந்தையைப் பார்த்தபோது குழந்தையை அத்தை குளிப்பாட்டிய ஈரத்தோடு மடியில் போட்டுத் துடைத்துக் கொண்டிருந்தார். அதன் கண்கள் பளிங்கு போல மின்னின. பிறந்த குழந்தையின் வாசனை என்று ஒன்று தனியாக இருப்பதை அவர் அப்போதுதான் உணர்ந்தார்.

மனோன்மணி அவர் ஆசையாகக் குழந்தையைப் பார்ப்பார் என்று நினைத்தாள். ஆனால் அவர் கையில் குழந்தையைத் தந்தபோது இரண்டு நிமிஷம் மௌனமாகப் பார்த்துக்கொண்டிருந்துவிட்டுத் திரும்பவும் அத்தையின் கைகளில் கொடுத்துவிட்டார். மனோன்மணி அதற்கும் அழுதாள். திருவேங்கடம் அதன் பிறகு அரை மணி நேரம் மருத்துவமனையின் வளாகத்தில் இருந்த மரத்தடியில் நின்று கொண்டிருந்தார். காப்பி சாப்பிடும் நேரத்தில் அவரைத் தேடியபோது ஊருக்குப் போய்விட்டதாகச் சொல்லிய மனோன்மணியின் அப்பா, ‘அவன் அப்பிடிதான் இருப்பான், விட்டுத் தள்ளு’ என்றார்.

பதினைந்து நாட்களுக்குப் பிறகு ஒரு இரவு குழந்தை வீறிட்டு அழத் துவங்கியது. உறங்கிக்கொண்டிருந்த திருவேங்கடம் சள்ளைபட்டுக் கொண்டு அவளிடம், ‘குழந்தையை அமத்துனா என்ன’ என்று கத்தினார். அவள், ‘பால் குடித்தா வாந்தி வந்துருது. நான் என்ன செய்யட்டும்’ என்று சொன்னாள். அவர் எரிச்சலுடன் புரண்டு படுத்துக்கொண்டார். அழுகை சப்தம் நீண்டுகொண்டேயிருந்தது. அவர் ஆத்திரத்தில் படுக்கையில் கிடந்த குழந்தையின் கிலுகிலுப்பை ஒன்றைத் தூக்கி எறிந்தார்.

மனோன்மணி குழந்தையைத் தூக்கிக்கொண்டு சமையற்கட்டிற்குப் போனாள். அம்மாவும் அவளுமாக குழந்தையின் அழுகையைக் கட்டுப்படுத்த முயற்சிக்கும் சப்தம் கேட்டது. ஆனால் அழுகை கட்டுப்படவில்லை. மனோன்மணியின் அப்பா பக்கத்து வீட்டில் வசம்பு வாங்குவதற்காகக் கதவைத் திறந்துகொண்டு வெளியே போனார். இதற்குள் மனோன்மணியின் அம்மா எதையோ அம்மியில் அரைத்துக்கொண்டிருக்கும் சப்தம் கேட்டது. இருட்டிற்குள்ளாகவே மனோன்மணியின் அலறல் சப்தம் கேட்டது.

அவர் எழுந்து சமையற்கட்டிற்குப்போய் பார்த்தபோது குழந்தையின் கழுத்து தொங்கிக் கிடந்தது. மனோன்மணியும் அவளது அம்மாவும் குழந்தையை மடியில் போட்டுக்கொண்டு அழுதுகொண்டிருந்தார்கள். அவர் பித்தளைப் பானையை ஒட்டி நின்றபடியே அந்தக் குழந்தையைப் பார்த்துக்கொண்டிருந்தார். அதன் கால்கள் அசைவற்றிருந்தன. மாரிலும் தலையிலும் அடித்துக்கொண்டு மனோன்மணி அழுது

கொண்டிருந்தாள். குழந்தையை அவளிடமிருந்து வாங்கி அவளது அம்மா நெஞ்சைத் தடவிவிடுவதும் வாயில் ஊதிவிடுவதுமாக இருந்தாள். குழந்தையின் தலைமயிர் மட்டும் காற்றில் அசைந்து கொண்டிருந்தது.

திறந்து கிடந்த கதவைத் தள்ளிக்கொண்டு யாரோ உள்ளே வருவது தெரிந்தது. பக்கத்து வீட்டில் இருக்கும் முத்துசாமியின் மனைவி, 'என்னக்கா. என்ன ஆச்சு ...' என்றபடியே உள்ளே வந்தவள் குழந்தையைப் பார்த்த நிமிசத்தில் வீறிட்டு அழத் துவங்கினாள். 'என்ன பெத்தாரே அய்யோ செல்லம் ... யக்கா இப்படியாகி போச்சேக்கா' என்ற குரல்கள் சிதறிக்கொண்டிருந்தன. அவர் அந்தக் குழந்தையைத் தொட்டுக்கூட பார்க்கவில்லை. பயமாகவும் நடுக்கமாகவு மிருந்தது. அவர் சுவரை ஒட்டி நின்றுகொண்டேயிருந்தார். வெளியே போய்விட வேண்டுமா அல்லது அங்கேயே நிற்கலாமா என்றுகூடத் தெரியாத குழப்பத்திலிருந்தார்.

இதற்குள் மனோன்மணியின் அப்பா வசம்பு வாங்கிக்கொண்டு வந்தவர் அழுகைக் குரலைக் கேட்டதும் தலையில் அடித்துக்கொண்டு வீறிட்டு அழத் துவங்கினார். திருவேங்கடம் இருளுக்குள்ளாகவே நின்றுகொண்டேயிருந்தார். அழுகையும் வேதனையுமாக மனோன்மணி யின் அப்பா அருகில் வந்து திருவேங்கடத்தை எக்கிப் பிடித்து 'பிள்ளையை அநியாயமாகக் கொன்னுட்டயேடா என்று கத்தி மாறி மாறி அடித்தார். திருவேங்கடம் அவரைத் தடுக்கவேயில்லை. விடியும்வரை வீட்டில் அழுகைக் குரல் விட்டு விட்டுக் கேட்டுக் கொண்டே வந்தது. திருவேங்கடம் இருட்டிற்குள்ளாகவே நடந்து தனது ஜவுளிக்கடைக்கு வந்து சேர்ந்தார். மூடிக் கிடந்த கடையின் முன்னால் உட்கார்ந்துகொண்டு இருட்டில் நெளிந்துகொண்டிருக்கும் சாலையைப் பார்த்தபடியே இருந்தார்.

காலையில் குழந்தையை ஒரு தொட்டில் கட்டி சுமந்துகொண்டு போய் புதைத்து வந்தார்கள். அன்று ஒரு நாள் அவர் கடையைத் திறக்கவில்லை. இது நடந்து பத்து நாட்களுக்குப் பிறகும் மனோன்மணி சமையற்கட்டின் தரையில்தான் படுத்துக் கிடந்தாள். அவளது முகம் வற்றிப்போயிருந்தது. மாரில் பால் கட்டிக்கொண்டுவிட்டது என்று பகல் நேரங்களில் அவளது அம்மா அவளை அழைத்துக்கொண்டு வீட்டின் பின்பக்கச் சந்து வழியாகக் கூட்டிப் போவாள். நெறிகட்டிய மார்பிலிருந்து பாலை சுவரில் பீச்சும்போது வலியைவிடவும் அவளுக்கு குழந்தை இறந்த துக்கம் அதிகமாக இருக்கும். குமுறி அழுவாள்.

சில நாட்கள் திருவேங்கடம் தன் அறையில் குழந்தையின் அழுகை கேட்டுக்கொண்டேயிருக்கிறதோ என்று நினைத்தார். அது உண்மை என்பது போல அவரது காதருகே தூக்கத்தில்கூட அந்தச் சப்தம் கேட்டுக்கொண்டேயிருந்தது. அவர் திடுக்கிட்டு எழுந்து பார்க்கும்போது படுக்கை காலியாக இருக்கும். அந்தச் சம்பவம் அவரது சுபாவத்தை மாற்றத் துவங்கியது.

அவர் வீட்டிலிருந்து கிளம்பிக் கடைக்குச் செல்வதற்குப் பதிலாக தினமும் சுடுகாட்டிற்குப் போகத் துவங்கினார். குழந்தையைப் புதைத்த புதைமேட்டின் அருகாமையில் போய் சில நிமிசம் உற்றுப் பார்த்துக்கொண்டிருப்பார். ஏன் தன்னால் அழ முடியவில்லை என்று அவருக்கு ஆத்திரமாக வரும், அவர் அப்படியே நடந்து நந்தவனப் பாதை வழியாகப் போய் அரளிப் பூக்கள் சிலவற்றைப் பறித்து கையில் எடுத்துக்கொண்டு கடைக்கு வந்து சேர்வார்.

கடையின் சாவியைக் கையில் வைத்துக்கொண்டு திறக்காமல் மூடிய கதவுகளைப் பார்த்தபடியே நெடுநேரம் நின்றிருப்பார்.

சில நேரங்களில் கடையைத் திறந்து வைத்த பிறகும்கூட அவரது கவனம் கடையில் இருக்காது. அவர் யாரோ அழுதுகொண்டே யிருக்கும் சப்தத்தைக் கேட்டுக்கொண்டேயிருந்தார். சில நேரம் பகல் நேரங்களில் தெருவில் ஓலைக் கொட்டான்களைக் காற்று அடித்து இழுத்துச் செல்வதைக் காணும்போது அவருக்கு ஆத்திரமாக இருக்கும். விடுவிடுவென கடையை விட்டு இறங்கி அவர் அந்த பிய்ந்துபோன ஓலைக் கொட்டானைக் கையில் எடுத்துக்கொண்டு வந்து கடையில் போடுவார். அவரது நடையில், முகத்தில் எல்லாவற்றி லும் சினம் தொற்றிக்கொள்ளத் துவங்கியது. அவர் தன் மீதே கோபப்பட்டுக்கொண்டேயிருந்தார்.

கோடை முற்றிய நாள் ஒன்றில் அவர் காலையில் கடையைத் திறக்காமல் நடந்தே எங்காவது போய்விடவேண்டும் என்றவரைப் போல நடந்து போகத் துவங்கினார். எவ்வளவு நேரம் நடந்தார் என்று தெரியாது. ஆனால் அவர் ஒரு ஆட்டுச் சந்தையை அடைந்த போது வெயில் ஏறியிருந்தது. ஆங்காங்கே ஆடுகளை வைத்துக்கொண்டு கிராமத்துவாசிகள் நின்றிருந்தார்கள். ஆட்டிற்காக ஒடித்த அகத்திக் குலைகளும் அழுகிய காய்கறியும் ஒரு இடத்தில் குவிந்து கிடந்தன. ஆட்டுக்குட்டி ஒன்றின் வாயில் புனலை வைத்துத் தண்ணீர் புகட்டிக் கொண்டிருந்தான் ஒரு தரகன். எங்கும் ஆடுகளின் சப்தம். திருவேங்கடம் ஒரு புளிய மரத்தடியில் உட்கார்ந்துகொண்டார்.

தரகர்களின் குரல்களும் ஆட்டுக்குட்டிகள் வெறிச்சியில் ஏற்படுத்தும் சப்தமும் ஒன்றுகலந்திருந்தன. அவர் சலனமற்று அதைப் பார்த்த படியே இருந்தார். மாலை வெயில் ஓய்ந்த பிறகு விற்காத ஒன்றிரண்டு ஆடுகளைக் கூட்டிக்கொண்டு வியாபாரிகள் கலைந்துகொண்டிருந் தார்கள். திருவேங்கடத்திற்கு நாவறட்சியாக இருந்தது. ஆனாலும் அவர் தண்ணீர் குடிக்கக் கூடாது என்ற பிடிவாதம் கொண்டவரைப் போல உட்கார்ந்திருந்தார்.

அன்றிரவு முழுவதும் அந்த ஆட்டுச் சந்தையில் கிடந்தார். ஆட்டுச் சாண வாடையும் மக்கிப்போன காய்கறிக் குப்பையும் பீடித்த அந்த இடத்தில் இருள் கொப்பளித்துக்கொண்டிருந்தது. பூமிக்குள் நாம் புதைந்துபோய்விட்டோமோ எனும்படியான அமுக்க மிருந்தது. விடிகாலையின் மென்வெளிச்சத்தில் அங்கிருந்த புளிய

மரங்கள் ரம்மியமாகத் தெரிந்தன. இளவெளிச்சத்தில் அவர் எழுந்து சந்தையை விட்டு வெளியே வந்தபோது சாலைகளில் லேசான இருட்டு பதுங்கியிருந்தது.

அவர் காலில் ஒரு கல் இடறியது போல காலை உதறிக்கொண்டு ஓங்கி மிதித்து நடந்தார். அப்போது அவரது வலது கால் தரையில் பட்ட இடத்திலிருந்து ஒரு நீரூற்று பொங்கி வரத் துவங்கியது. அவரால் நம்ப முடியவில்லை. அந்த நீரூற்று ஆறடி உயரத்திற்குப் பொங்கிக்கொண் டிருந்தது. எப்படி அது தன் கால்பட்டு பொங்கத் துவங்கியது என்று அவருக்கே புரியவில்லை. அவர் அந்த நீரூற்றை வியப்போடு பார்த்துக்கொண்டிருந்தார். நீரூற்று எல்லாத் திசைகளிலும் பொங்கி வழிந்துகொண்டிருந்தது. அவர் ஆசையோடு அந்த நீரூற்றில் இருந்து கைகளால் தண்ணீர் அள்ளி தன் முகத்தினைக் கழுவிக்கொண்டார். அது சாந்தம் தருவதாக இருந்தது. இரண்டு கைகளையும் ஒன்றுசேர்த்து தண்ணீரை அள்ளிக் குடித்தார். உடல் முழுவதும் குளிர்ச்சி ஏறியது.

காலை வெயில் பரவத் துவங்கியபோது தெருவில் ஜன நடமாட்டம் ஆரம்பமாகியிருந்தது. யாராவது அந்த நீரூற்றைப் பார்க்கிறார்களா என்று கவனித்தார். சாலையின் நடுவில் ஏற்பட்டுள்ள இவ்வளவு பெரிய நீரூற்றை யாரும் பார்க்கவேயில்லை என்பது வியப்பாக இருந்தது அவர் தன்னைக் கடந்து செல்பவர்களைப் பார்த்தபடி யிருந்தார். அவர்கள் எவரும் நீரூற்றைப் பார்க்கவேயில்லை. ஒரு வேளை அது தன் கண்ணிற்கு மட்டும்தான் தெரிகிறதா? இந்தத் தண்ணீர் நிஜமில்லையா? அவர் சுற்றிலும் திரும்பிப் பார்த்தார். ஒரு சிறுவன் அவரை வியப்போடு பார்த்தபடியே எதிரில் நின்று கொண்டிருந்தான்.

அவனை அழைத்து அந்த நீரூற்றைக் காட்டிவிடலாம் என்பது போல அவர் கைதட்டிக் கூப்பிட்டபோது சிறுவன் வர மறுத்து எதிர்த் திசையில் ஓடினான். அவர் திரும்பியபோது அந்த நீரூற்று மறைந்துபோயிருந்தது. அவர் அந்த இடத்தைப் பார்த்தபடியே இருந்தார். நீரூற்று இருந்ததற்கான அடையாளமேயில்லை.

விடுவிடுவென வீடு திரும்பிய திருவேங்கடம் மறுநாளில் இருந்து தனது துக்கத்தை மறந்து கடையை திறக்கத் துவங்கினார். இரண்டு மாதங்களுக்குப் பிறகு மாமாவிடம் தன் மனைவியை அழைத்துக் கொண்டு தனி வீடு பார்த்துப் போவதாகச் சொன்னார். மனோன் மணிக்கு அவரது மாறுதல் புரியவேயில்லை. திருவேங்கடம் சரியாக யார் என்ன சொன்னாலும் அதன் பிறகு இரவு எட்டு மணிக்கு கடையை அடைத்துவிட்டு வீடு வந்துவிடுவார். காலையும் ஒன்பது மணிக்குத்தான் கடையைத் திறப்பார். வாரம் வியாழக்கிழமை கடை விடுமுறை. மனோன்மணியின் கர்ப்பம் மறுபடியும் கூடியது. இந்த முறையும் அவளுக்குப் பெண் குழந்தை பிறந்தது.

திருவேங்கடம் அந்தக் குழந்தையை இரவெல்லாம் தானே படுக்கையில் போட்டுத் தட்டிக்கொடுத்து உறங்க வைப்பார். சில நேரம் கைக்குழந்தையைக் கடைக்குத் தூக்கிக்கொண்டு போய்விடுவார். மனோன்மணியே சடைத்துக்கொண்டு, 'வீட்ல பொம்பளையா இல்லே. எதுக்கு இப்படி செய்றீக. எல்லாரும் என்னை கேலி செய்றாக' என்று சொன்னபோதும் அவர் கேட்டுக்கொள்வதில்லை.

அவராகவே தனது மகள் சித்ராவைக் குளிக்க வைப்பார். திருவேங்கடத்தின் வாழ்க்கை திரும்பவும் தன் பழைய அச்சில் சுழலத் துவங்கியது. நாலு வயது வரை சித்ராவை அவர் தோளை விட்டு கீழே இறக்கி விட்டதே கிடையாது. கடையில்கூட சித்ரா அவரது மடியில் உட்கார்ந்தபடியேதானிருந்தாள். பள்ளியில் சேர்ந்த முதல் நாளில் கூட திருவேங்கடம் ஒன்றுக்கு நாலு தடவை பள்ளியில் இடைவேளை விட்டுவிட்டார்களா? மதியச் சாப்பாட்டுக்கு விட்டுவிட்டார்களா என்று கடைக்கும் பள்ளிக்குமாக நடந்துகொண்டிருந்தார்.

மனோன்மணிக்கு அவரது சுபாவத்தைப் புரிந்துகொள்ள முடியவேயில்லை. இரவு உறக்கத்தில்கூட அவருக்கு ஒரு விசித்திரப் பழக்கமிருந்தது. பாதித் தூக்கத்தில் எழுந்து சித்ரா நன்றாக உறங்கிக்கொண்டிருக்கிறாளா என்று பார்த்துக்கொள்வார். இதற்காக நாலு தடவையாவது எப்படியும் அவருக்கு விழிப்பு வந்துவிடும். சில நேரங்களில் அவர் ஜன்னல் கதவுகளை எழுந்து போய் சாத்திவிட்டு வருவதையும், விலகிக் கிடக்கும் சித்ராவின் பாவாடையை சரி செய்துவிட்டு போர்வையால் பொத்திவிடுவதையும் மனோன்மணி காணும்போது வியப்பாக இருக்கும்.

கடையில் அவரது இருப்பு முன்பைப் போலவே ஒரு கட்டுப்பாட்டிற்குள்ளாகவே இருந்தது. வாரம் வெள்ளிக்கிழமை மட்டும் அவர் பிச்சைக்காரர்களுக்கு காசு போடுவதற்கு என்றே தனியாக பத்து ரூபாய் சில்லறை மாற்றி வைத்துக்கொள்வார். அன்று கடையேறிய பிச்சைக்காரர்கள் அத்தனை பேருக்கும் கையில் கிடைத்த நாணயத்தைத் தந்துவிடுவார். சித்ரா கல்லூரி படிப்பிற்காக மதுரைக்குப் போகும் நாள் வரை அவரது சுபாவத்தில் பெரிய மாற்றம் கூடவேயில்லை.

அதற்கு மேல் படிக்க வைப்பதைவிடவும் சொந்தத்தில் எவரையாவது திருமணம் செய்துகொடுத்துவிடலாம் என்று மதுரையில் இருந்த அவரது உறவினர் வீட்டிற்கு ஆள் அனுப்பிவிட்டார். ஊரே சொல்லியது அவரது சொத்து சுகம் யாவும் சித்ராவிற்குத்தான் என்று. அதை நிரூபிப்பது போலதான் சித்ராவின் திருமணமும் நடந்தது. மாப்பிள்ளை பொதுப்பணித் துறையில் பொறியாளராக வேலை செய்வதால் ஏகப்பட்ட அதிகாரிகள் கூட்டம் வந்திருந்தது. அவரால் அந்த சந்தோஷத்தைத் தாங்க முடியவில்லை.

தான் ஒரு பிள்ளையைப் பொறுப்பாக வளர்த்து சரியான இடத்தில் திருமணமும் செய்துகொடுத்தாகிவிட்டது, ஒரு தகப்பனாக நான் தவறு செய்துவிடவில்லை என்று அவராகவே மனதிற்குள் சொல்லிக் கொண்டார். இவ்வளவு பெரிய சந்தோஷத்தை எப்படிச் சொல்லி மற்றவர்களுக்குப் புரிய வைப்பது என்று புரியவில்லை.

அன்றைக்கும் வீட்டிலிருந்து கிளம்பி சிவன் கோவில் வழியாக நடந்து புளிய மரங்களை அடுத்த பாதையில் நடந்து சென்றார். சந்தோஷத்தில் வழியில் இருந்து மஞ்சணத்திச் செடிகளில் இருந்து இலைகளைப் பறித்து வீசினார். காற்றில் முகம் அலைவுற அவர் ஊரை விட்டு வெகுதூரம் சென்ற பிறகு திரும்பிப் பார்த்தார். அப்படியே அதைப் பார்த்துக்கொண்டேயிருக்க வேண்டும் போலிருந்தது. இரவு வரை அங்கேயே இருந்தார்.

இருட்டிய பிறகு அவர் இருளுக்குள்ளாகவே நடந்து அவர் வீடு நோக்கி வந்தபோது அவரது வீட்டில் இப்போது ரிக்கார்டு பாடிக்கொண்டிருப்பது கேட்டது. தெருவில் வாழை மரங்கள் நார் நாராகக் கிழிபட்டுக் கிடந்தன. வீட்டை நெருங்கும்போது காலில் ஏதோ நெளுக் என மிதிபடுவது போலிருந்தது.

காலை விருட்டென அவசரமாக முன் வைத்தபோது அவரது கால் பட்டு ஒரு நீருற்று அவரது உயரத்திற்குச் சமமாகப் பொங்கி எழுந்தது. அவர் அதை உற்றுப் பார்த்துக்கொண்டேயிருந்தார். நீருற்றேதான். முன்பு பார்த்த அதே அளவில். அவர் தயக்கத்துடன் கைகளை அதில் நீட்டினார். தண்ணீர் நிஜமானதுதான். அது கைகளில் நழுவி ஓடியது. அவர் இன்றைக்கும் ஒரு கை தண்ணீர் அள்ளிக் குடித்தார். அதே சுவையாகத்தானிருந்தது. என்ன இது. எப்படி இந்த நீருற்று பொங்குகிறது. அவர் சில நிமிஷங்கள் அதைப் பார்த்துக்கொண்டேயிருந்தார். மகளை மட்டுமாவது அழைத்து அதைக் காட்டிவிட வேண்டும் போலிருந்தது. அவசரமாக அவர் வீட்டை நோக்கி நடந்தார்.

இரண்டு எட்டு வைப்பதற்குள் யோசனை வந்தது. ஒருவேளை இந்த நீருற்றும் மறைந்து போயிருந்தால். அவர் திரும்பிப் பார்த்தார். நீருற்று பொங்கி வழிந்து தரையில் தண்ணீர் ஓடிக்கொண்டிருந்தது. அவர் அவசரமாக வீட்டை நோக்கி நடந்து வாசலில் நின்றபடியே சித்ரா சித்ரா என்று கத்தினார். வீட்டிலிருந்து வெளியே வந்த மனோன்மணி லேசாகக் கோவித்துக் கொள்வது போல, 'என்ன மனுசன். இப்போதான் பாப்பா தூங்குறதுக்கு போயிருக்கு. இப்போ போயி கூப்பிடுறீங்க' என்றாள். அவர் தன் மனைவியின் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு போனார்.

தெருவில் இப்போது அந்த நீருற்று இல்லை. அத்தோடு தண்ணீர் ஓடியதற்கான சுவடுமில்லை. மனோன்மணி எதற்காக அவளைக் கூட்டிவந்ததாகக் கேட்டுக்கொண்டேயிருந்தாள். அவரால் பதில் சொல்ல முடியவில்லை. அவர் பேசாமல் வீடு திரும்பினார். அதன்

பிறகு அவராகவே மகளுக்கு திருநெல்வேலியில் ஒரு வீடு எடுத்துக் கொடுத்து மருமகனை வேலையில் மாறுதல் வாங்கிக்கொண்டு வரச் செய்தார். தினமும் மதியம் கடை எடுத்து வைத்துவிட்டு பஸ்ஸில் கிளம்பி மகள் வீட்டிற்குப் போய்விடுவார்.

ஆனால் அந்த நாட்களிலே அவர் தரையைப் பார்த்து நடக்கும் பழக்கம் துவங்கியது. சில நேரங்களில் அவருக்கு ஆச்சரியமாக இருக்கும், தனது காலில் ஏதோ சக்தியிருக்கிறது. இல்லாவிட்டால் எப்படித் தண்ணீர் ஊற்று எடுத்து பீச்சியடிக்கும். என்ன சக்தி அது. எப்படி அது சாத்தியமானது என்று யோசித்துக்கொண்டே யிருப்பார். நாலு வருஷத்தின் பின்பு பேத்தியும் பிறந்தாள். சித்ரா தன் கணவனோடு சென்னைக்கு மாறுதல் ஆகிப் போன பிறகு அவரால் ஊரில் நிலைகொள்ள முடியவில்லை. கடையை கணபதிக்கு விற்றுவிட்டு சென்னைக்கு மனைவியைக் கூட்டிக்கொண்டு போய் விட்டார்.

மகள் வீட்டில்தான் வாசம். ஆனாலும் ஏதாவது வேலை செய்ய வேண்டுமே என்பதற்காகக் கடையத்துக்காரர் வைத்திருந்த டயர் கம்பெனியில் போய் உட்கார்ந்துகொண்டு ஏதாவது வேலைகள் செய்வார்.

சென்னைக்கு வந்த நாளில் இருந்தே அவருக்கு இன்னும் ஒரு முறை அந்த நீருற்றை பார்த்துவிட வேண்டும் என்ற ஆசை எழுந்தது. இதற்காகவே அவர் ஒரே பாதையில் நடந்து வந்தார். தினமும் ஒரே நேரத்தில் நடந்து வருபவராகயிருந்தார். ஆனால் சென்னைக்கு வந்து ஆறு வருடங்கள் ஆகியும் அந்த நீருற்றை அவரால் உருவாக்க முடிந்ததேயில்லை. ஆரம்ப நாட்களைப் போலவே அலுப்பும் எரிச்சலும் அவரைப் பற்றிக்கொள்ளத் துவங்கியது. ஆனாலும் அவர் அதை முன்பைப் போல வெளிக்காட்டிக்கொள்ளவே யில்லை.

ஒரு நாள் அவர் தனது அலுவலகத்தில் இருந்து பூங்காவிற்கு வந்தபோது தனக்குத் தெரிஞ்ச சாயலில் இருந்த ஒரு வயதானவரைப் பார்த்தார். அருகில் போய் கூப்பிடலாம் என்று நினைத்தபோது அது வேறு யாரோ போலிருந்தது. சிமெண்ட் பெஞ்சில் இருந்த வயதானவர் தனது கையில் குடையை வைத்திருந்தார். இன்னொரு கையில் ஒரு சில்வர் தூக்குவாளி இருந்தது. ஏதோ வியாபாரம் செய்கின்றவர் என்று தெரிந்துகொண்டார்.

அந்த நபர் காலையில் இருந்து அலைந்து திரிந்திருக்கிறார் என்பது அவரது முகக்குறிப்பிலே தெரிந்தது. வயதானவர் தனது எவர்சில்வர் வாளியைத் திறந்து அதில் இருந்த சில்லறைகள் யாவையும் கொட்டி ஒவ்வொன்றாக எண்ணிக்கொண்டிருந் தார். திருவேங்கடம் அவரையே பார்த்துக்கொண்டிருந்தார். பெரியவர் சில்லறைகளைத் தனித்தனியான பிளாஸ்டிக் பையில் போட்டுக் கட்டிவிட்டு மொத்த மாக யாவற்றையும் தூக்குவாளிக்குள் ஒன்றாகப் போட்டு மூடினார்.

என்ன வியாபாரம் செய்கிறார் என்று கேட்க வேண்டும் போலிருந்தது. அந்த வயதானவர் மிக நெளிந்துபோன ஒரு வாட்டர் பாட்டிலில் இருந்து கொஞ்சம் மிச்சம் வைத்திருந்த தண்ணீரை அண்ணாந்து குடித்துக்கொண்டு அந்த பாட்டிலையும் தன் அருகில் வைத்துக் கொண்டார். அவரை இன்றைக்குத்தான் முதன்முறையாக தான் பார்ப்பது தெரிந்தது. தொலைக்காட்சியில் எட்டு மணிச் செய்திகள் ஒளிபரப்பாகத் துவங்கின. அந்த வயதானவர் எழுந்து வெளியே நடக்கத் துவங்கினார்.

திருவேங்கடமும் தன் வீட்டிற்குப் போவதற்காகப் பூங்காவை விட்டு வெளியே வந்தார். சரியாகப் பூங்காவின் வாசலில் அந்த வயதானவர் தனது குடையால் தரையை ஓங்கி ஒரு குத்துக் குத்தியதும் ஒரு நீரூற்று பொங்கி வரத் துவங்கியது. அந்த நீரூற்று அவரது உயரத்திற்கு இருந்தது. வயதானவர் அந்த நீரூற்றில் இருந்து தண்ணீரை அள்ளி முகம் கழுவிக்கொண்டு கொஞ்சம் குடித்தும் கொண்டார்.

திருவேங்கடத்தால் நம்ப முடியவில்லை. நீரூற்றை தான் மட்டுமில்லை, மற்றவர்களாலும் உருவாக்க முடிகிறதே. அடுத்தவர் உருவாக்கிய நீரூற்று என் கண்ணுக்குத் தெரிகிறது. அது நிஜம் என்றால் மனிதர்கள் யாவரும் தாங்கள் நடந்து செல்லும் பாதையில் நீரூற்றை உண்டாக்கக்கூடியவர்கள்தானா?

அவர் வேகமாக அந்த நீரூற்று பொங்கிய இடத்தின் அருகாமைக்குச் சென்றார். இப்போது அங்கே நீரூற்று இல்லை. ஆனால் லேசான ஈரத்தடம் தெரிந்தது. தொலைவில் அந்த வயதானவர் கையில் சில்வர் வாளியுடன் மெதுவாகத் தரையை உற்று நோக்கிக்கொண்டே நடப்பவரைப் போல நடந்து போய்க்கொண்டிருந்தார்.

திருவேங்கடத்திற்கு லேசாக மயக்கம் வருவது போலிருந்தது. சாலை அவரது கண்ணை விட்டுத் தப்பி மறைவது போலிருந்தது, கண்ணைக் கசக்கிக்கொண்டு பார்த்தபோது அந்த வயதானர் தொலைவில் போய்க்கொண்டிருந்தார். அவரைக் கூப்பிட்டுப் பேச வேண்டும் போலிருந்தது. ஆனால் அதற்குள் அந்த வயதானவர் இருளில் மறைந்திருந்தார். தான் கண்டது நிஜம்தானா என்ற சந்தேகம் திருவேங்கடத்தை பீடித்துக்கொண்டது. குழப்பத்துடன் அவர் இருட்டைப் பார்த்துக்கொண்டிருந்தார்.

திடீரென்று தான் பழையபடி ஊருக்குப் போய் ஜவுளி வியாபாரத்தை ஆரம்பித்துவிடலாம் என்ற எண்ணம் அவருக்குள் தோன்றத் துவங்கியது. அந்த யோசனை நிமிசத்துக்கு நிமிசம் வளர்ந்து அவரை வலுவாகப் பற்றிக்கொண்டது. ஏனோ திருவேங்கடத்திற்கு நீண்ட நாட்களுக்குப் பிறகு மிகுந்த துக்கமாக இருந்தது. செய்வதறியாமல் அவர் இருளை நோக்கி நடக்கத் துவங்கினார்.

# உடலறிதல்

எப்போது பல் விழுந்துவிடும் என்று தெரியாத பயமாக இருந்தது சின்னுவிற்கு. இரண்டு நாட்களாகவே அவளது கடைவாய்ப் பல்லில் ஒன்று ஆடிக்கொண்டேயிருந்ததால் ஒரு பக்கக் கன்னமே வீங்கிப் போய் வலி கடுகடுப்பாக இருந்தது. அவள் ஆறாம் வகுப்போடு பள்ளிப் படிப்பை நிறுத்திவிட்டு கடலை மிட்டாய் கம்பெனியில் வேலை செய்துகொண்டிருந்தாள்.

சாப்பிடும்போது பல் விழுந்துவிட்டால் வயிற்றுக்குள் போய்விடும் என்று அகிலா சொன்னதில் இருந்து அவளுக்குச் சாப்பிடுவதற்கே பயமாக இருந்தது. ஒருவேளை உறங்கும்போது பல் விழுந்துவிட்டால் என்ன நடக்கும். வயிற்றுக்குள் போய்விடுமா? சின்னு தானாகப் பல்லைப் பிடுங்கி எடுத்துவிடலாம் என்று அவ்வப்போது ஆட்டிப் பார்த்துக்கொண்டேயிருந்தாள். பல்லைச் சுற்றிலும் ரத்தம் கன்றிப் போனது போலிருந்தது.

பற்களின் மீது ஆத்திரமாக வந்தது. எதற்காக இந்த சனியன் விழுந்து தொலைக்கிறது. காது, கண்கள், மூக்கு எல்லாம் விழுகின்றதா என்ன? பல் மட்டும் ஏன் விழுந்து முளைக்க வேண்டும். பல்லில் பாதிக்கும்.மேலாக கண்ணுக்கும் தெரியாமல் வேறு கடைவாய்க்குள் ஒளிந்துகொண்டிருப்பதால் அது எப்படியிருக்கும் என்றுகூட அவளுக்குத் தெரியாது. எதற்காக இத்தனை பற்கள் இருக்கின்றன என்றுகூட சில நேரம் யோசித்துக்கொண்டிருப்பாள். அதுவும் வலி கண்ட நாளில் இருந்து பல்லைப் பற்றிய வெறுப்பு வளர்ந்து கொண்டேயிருந்தது.

அவள் வீட்டில் செங்கலைத் தட்டித்தான் பல் விளக்குவார்கள். அதுவும் ஒரு சிரட்டையில் தூளாக்கிப் போட்டு வைத்திருப்பார்கள். பெரிய அண்ணன் மட்டும் தனியாக பேஸ்ட் வாங்கி வைத்திருக்கிறான். அதை மற்றவர்கள் எடுத்துவிடக் கூடாது என்பதற்காக அவன் ஓட்டில் சொருகி வைத்திருந்தான். அவளும் சின்ன அக்காவும் எப்போதுமே ஒன்றாகச் செங்கற்பொடியால் பல் விளக்குவார்கள். சின்னுவிற்கு கைவிரல்களால் பல் விளக்கும்போது ஏற்படும் சப்தத்தை ரொம்பவும் பிடிக்கும்.

திருமகள் கடலை மிட்டாய் கம்பெனியில் அவளைப் போன்று பனிரெண்டு சிறுமிகள் பேக்கிங் செக்‌ஷனில் வேலைக்கு இருந்தார்கள். மிட்டாய் அச்சில் வார்ப்பதற்கும் பிரித்துப் போடுவதற்கும் நாலைந்து ஆம்பிளைகள் வேலை செய்துகொண்டிருந்தார்கள். அதில் ஒரு ஆள் சின்னுவோடு ஐந்தாம் வகுப்பு படித்த சிந்தாவின் அண்ணன். அவன் மட்டும் எப்போதாவது ரகசியமாக வெல்லப்பாகை அவளுக்குச் சாப்பிடுவதற்குத் தருவான்.

அவர்கள் வேலை கடலை மிட்டாய்களை எண்ணி அடுக்கி பாக்கெட் போடுவது மட்டுமே. இதற்காக மரப்பலகையில் கடலை மிட்டாயை வார்த்து தட்டி வைத்திருப்பார்கள். அறை முழுவதும் வெல்ல மணம் கமழ்ந்துகொண்டிருக்கும். வேலைக்கு வருபவர்களைக் கண்காணிப்பதற்காக முத்தியாலு அய்யா இருந்தார். அவர் ஸ்டூல் சேரில் உட்கார்ந்தபடியே நாள் முழுவதும் பேப்பர் படித்துக்கொண்டே யிருப்பார். பொம்பளைப் பிள்ளைகள் மூத்திரம் போக வேண்டும் என்றால்கூட அவரைக் கேட்டுத்தான் போக வேண்டும். ஒரு நாளைக்கு ரெண்டு தடவைக்கு மேலாக அதற்கும் அனுமதிக்க மாட்டார். அதைவிடவும் யாராவது வாயை மெல்லுவது தெரிந்தால் முத்தியாலு அருகில் வந்து வாயைத் திறந்து காட்டச் சொல்வார். அது அவமானம் தருவதாக இருக்கும். வாய்க்குள் விரலை விட்டு பரிசோதிப்பதுகூட நடந்திருக்கிறது.

சின்னு ஆறாம் வகுப்பு லீவில் இந்த வேலைக்கு வந்து சேர்ந்தாள். இரண்டு மாதம் லீவு முடிந்து அவள் ஏழாம் வகுப்பில் சேர்வதற்குக் கிளம்பிய நாளில் மிட்டாய் கம்பெனி அண்ணாச்சி வீட்டிற்கு வந்து அவளுக்காகத் தான் இரண்டாயிரம் அட்வான்ஸ் கொடுப்பதாகச் சொன்னதும் அவளது படிப்பை நிறுத்திவிட்டார்கள். பழகிய வேலை என்பதால் சின்னு ஒத்துக்கொண்டுவிட்டாள்.

நாலு நாட்களுக்கு முன்பு சின்னு கடலை மிட்டாய் கம்பெனியில் உள்ள கக்கூசிற்குப் போனபோது அதன் சுவற்றின் மீது புதிதாக ஒரு டூத்பிரஷ் வைக்கப்பட்டிருந்ததைக் கண்டாள். யாராவது லோடு ஏற்ற வரும் டிரைவர் வாங்கி வைத்துவிட்டுப் போயிருக்கக்கூடும். அதை எப்படி எடுப்பது என்று தெரியாமல் எக்கி எக்கி குதித்துப் பார்த்தாள். கை தொட முடியாத உயரத்திலிருந்தது. விளக்குமாற்றுக் குச்சியால் தட்டிவிட்டால் உள்ளே விழுந்துவிடுமோ என்று பயமாகவும் இருந்தது.

கக்கூஸின் இரும்பு வாளியைத் திருப்பிப் போட்டு அதன் மீது ஏறி எக்கி எடுத்தாள். வாளியின் அடிப்பாகம் பிய்ந்து ஓட்டையாகி அவள் கால் உள்ளே போனது. லேசான சிராய்ப்புக் காயத்துடன் யாரும் பார்ப்பதற்குள் அவள் டூத்பிரஷை எடுத்து இடுப்பில் சொருகிக் கொண்டு வேகவேகமாக தன் இடத்திற்குப் போய் உட்கார்ந்து கொண்டாள்.

யாராவது பார்த்திருப்பார்களோ என்று பயமாக இருந்தது.

ஆனால் பிரஷைப் பற்றி யாரும் கேட்டுக்கொள்ளவேயில்லை. கேஷியர் மட்டும் இரும்பு வாளியை யாரோ டிரைவர் பிய்த்துப் போட்டுவிட்டுப் போயிருக்கிறான் என்று கத்திக்கொண்டிருந்தார். அவளுக்கு சந்தோஷமாக இருந்தது. இடுப்பில் இருந்த டூத்பிரஷை யாருக்கும் தெரியாமல் எடுத்து தன் தூக்குவாளிக்குள் போட்டுக்கொண்டாள்.

சாயங்காலம் வரை அவளுக்கு வேலையே ஓடவில்லை. மாலை வீடு திரும்பும்போது அவள் வேண்டுமென்றே ரயில்வே லைனைத் தாண்டி தான் போவதாகச் சொல்லிவிட்டு அவசர அவசரமாக நடந்தாள். அவளோடு வேலைக்கு வரும் பிள்ளைகள் ரயில்வே லைனைத் தாண்டி வர மாட்டார்கள். திடீரென ரயில் வந்துவிட்டால் என்ன செய்வது என்று பயமாக இருக்கும்.

அன்று சின்னு ரயில்வே லைனைத் தாண்டிப் போவதற்காக இரண்டு பக்கமும் பார்த்துக்கொண்டாள். தண்டவாளமும் வீழ்ந்து கிடக்கும் ஆகாசத்தையும் தவிர வேறு எதுவும் தெரியவில்லை. தண்டவாள ஓரங்களில் இருந்த கம்பிகளின் மீது படாமல் தாண்டிப் போக வேண்டும். அந்தக் கம்பியில் மாட்டிக்கொண்டால் கீழே விழுந்துவிடக்கூடும் என்பதால் அவள் ஒரு கையால் அந்தக் கம்பிகளை அமுக்கிக்கொண்டு பாவாடையைத் தூக்கி இடுப்பில் சொருகிக் கொண்டு தாண்டினாள். அப்படியும் காலில் கம்பி பட்டு விங் விங் என்று சப்தம் எழுப்பியது.

அவள் தண்டவாளத்தின் மரக்கட்டையின் மீதாக நடந்தபடியே அடுத்த பக்கம் வந்தபோது வேலிக் கருவேல மரங்கள் அடர்ந்திருந்தன. சைக்கிள் போவதற்கான வழி போல ஒற்றையடிப் பாதை மட்டுமேயிருந்தது. அவள் வேலிமுள் பாதைக்குள் வந்த பிறகு யாரும் தன்னைப் பார்க்கிறார்களா என்று சுற்றிலும் பார்த்துவிட்டு தூக்குவாளியைத் திறந்து உள்ளே இருந்த டூத்பிரஷை எடுத்துப் பார்த்தாள். மஞ்சள் நிறத்தில் இருந்தது. அதைக் கையில் பிடித்ததும் அவளறியாமல் சிரிப்பு வந்தது. அவள் வெறும் பிரஷ்ஷால் பல்லை விளக்கிப் பார்த்துக்கொண்டாள். பல்லில் பிரஷ் படும்போது கூச்சமாக இருந்தது. திரும்பவும் பிரஷைத் தூக்குவாளிக்குள் போட்டுக்கொண்டு மிக சந்தோஷமாகத் தூக்குவாளியைக் காற்றில் ஆட்டியபடியே தனது வீட்டிற்கு நடந்து போனாள்.

சின்னு வீட்டிற்குள் நுழைந்தபோது லைட் போட்டிருந்தார்கள். மஞ்சள் நிற குண்டு பல்பு எரிந்துகொண்டிருந்தது. அவள் தூக்கு வாளியைக் கழுவுவதற்காகப் போட்டுவிட்டு சிமெண்ட் தொட்டியை நோக்கி நடந்து போனாள். எக்கி உள்ளே பார்த்தபோது தொட்டியில் பாதி அளவு தண்ணீர் இருந்தது. அவள் ஈயப் போணியால் தண்ணீர் மோந்து அதில் பிரஷை முக்கி எடுத்து செங்கற்பொடியை வைத்து தேய்த்தாள். பொடி பிரஷ்ஷில் ஒட்டவேயில்லை. தானும் அண்ணனைப் போல ஒரு பேஸ்ட் வாங்கி வைத்துக்கொள்ள வேண்டும் என்று நினைத்தாள். அன்று பல் துலக்கிய பிறகு துண்டை

வைத்து பல்லை நன்றாக துடைத்து விட்டாள். கண்ணாடியில் பல்லைப் பார்த்தபோது சிரிப்பாக வந்தது.

எப்படி இவ்வளவு அழகாகப் பல் வாய்க்குள் அடுக்கப்பட்டிருக்கிறது. பல்லிற்கு வேர் இருக்கிறது என்கிறார்களே, அப்படி என்றால் அது ஒரு செடியா என்ன? பல்லை ஒரு செடி என்று நினைத்ததுமே அவளுக்கு சிரிப்பாக வந்தது. பல் பூ பூக்குமா? பல் விதையுள்ள செடியா? விதையில்லாத செடியா? பல்லிற்கு தான் சாப்பிட்ட பொருட்களைப் பற்றி நினைவிருக்குமா என மனம் போன போக்கில் யோசித்துக்கொண்டிருந்தாள்.

அதன் பிறகு காலையிலும் மாலையிலும் ரகசியமாக அந்த பிரஷ்ஷால்தான் பல் துலக்கினாள், தனது டூத் பிரஷை யாரும் பார்த்துவிடக் கூடாது என்பதற்காகவே பிளாஸ்டிக் காகிதத்தில் சுற்றி ஒளித்து வைத்துவிட்டுச் சென்றாள். ஆனாலும் அவள் வேலைக் குச் சென்றிருந்த பகலில் பிரஷ்ஷை சின்ன அக்கா கண்டுபிடித்து அவள் புது பிரஷ் வாங்கியிருப்பதாக அம்மாவிடம் மாட்டிவிட்டபோது ஏதுடி காசு என்று அம்மா காதைப் பிடித்து திருகி மண்டையில் கொட்டியதும் சின்னு உண்மையை சொல்லிவிட்டாள்.

ஆத்திரமான அம்மா அவள் முதுகில் இன்னொரு அறை போட்டு விட்டு கையில் இருந்த பிரஷ்ஷைப் பிடுங்கி எரிந்துகொண்டிருக்கும் விறகு அடுப்பில் தூக்கிப் போட்டாள். பிளாஸ்டிக் உருகும் வாடை வீடெங்கும் பரவியது. பெரிய அக்கா, சின்ன அக்கா இருவரும் கூட அவளை அன்றிரவு வரை திட்டிக்கொண்டேயிருந்தார்கள்.

ஆத்திரத்தில் பல்லை எல்லாம் பிடுங்கிப் போட்டுவிடலாமா என்று சின்னு முயற்சித்தாள். ஆனால் பல்லை அசைக்கவே முடிய வில்லை. இது நடந்து ஒரு இரண்டு நாளின் பிறகான காலையில் தான் அவள் பல்லில் இருந்து ரத்தம் வடிவதைக் கண்டாள். கம்பெனிக்கு வேலைக்கு வந்தபோதுகூட அந்த வலி நீண்டுகொண்டே யிருந்தது. அகிலா அவள் பல்லைப் பார்த்துவிட்டு பல் ஆடிக்கிட்டு இருக்குடி, தானா விழுந்துரும் என்றாள். சாப்பிடும்போதும் சிரிக்கும் போதும் அந்த பல்வலி உயிர் போவதாகயிருந்தது.

பகலும் இரவும் சின்னு பயந்துபோயே இருந்தாள். உறக்கத்தில் தன் விரல்களால் பல் இருக்கிறதா இல்லையா என்று தொட்டுப் பார்த்துக்கொள்வாள். கவர்மெண்ட் ஆஸ்பத்திரிக்குப் போனால் பல்லைப் பிடுங்கி எடுத்துவிடுவார்கள், ஆனால் பல்லைப் பிடுங்கும் போது ரத்தம் கொப்பளித்துக்கொண்டு வரும் என்று மார்த்தாள் சொன்னதைக் கேட்ட பிறகு அங்கே போவதற்கே பயமாக இருந்தது.

சின்னுவின் வலி மட்டுப்படவேயில்லை. இதனால் பத்ரகாளியம்மன் கோவில் வழியாக வேலை விட்டு வரும்போது பல் நல்லபடியாக விழுந்துவிட வேண்டும் என்று சூடம் வாங்கிக் கொளுத்திப் பிரார்த் தனைகூட செய்துகொண்டாள். மறுநாள் காலை டீக்குடிக்கும் போது பல் தானே விழுந்துவிட்டது.

அப்போது சின்ன அக்கா மட்டும் வீட்டில் இருந்தாள். அவள் பல்லை அப்படியே ஒரு சாணி உருண்டைக்குள் வைத்து யார் கண்ணிலும் படாத ஒரு இடத்தில் கொண்டுபோய் போட்டுவிட்டு வரும்படியாகவும் யாராவது ஒரு ஆள் கண்ணில் பட்டுவிட்டால் கூட அந்தப் பல் திரும்பவும் முளைக்காது என்று சொன்னாள். சின்னுவிற்கு திரும்பவும் பயமாக இருந்தது.

அவள் தன் பல்லைக் கையில் வைத்துக்கொண்டு பார்த்தபோது அது ஒரு விதை போலவே இருந்தது. அவள் பல்லை அமுக்கிப் பார்த்தாள். அது உறுதியாக வடிவேறியிருந்தது.. சின்னு பல்லைக் கையால் பொத்திக்கொண்டு நடந்து பால்காரர் வீட்டிற்குப் போனாள். அவரது பின்வாசலில் கிடந்த சாணம் உலர்ந்துபோயிருந்தது. தன் ஒரு கையில் பல்லை வைத்துக்கொண்டு மறு கையால் சாணியைச் சிறியதாக எடுத்தாள். அதற்குள் பல்லை வைத்து உருட்டிக்கொண்ட போது யார் கண்ணிலும் படாத இடம் என்றால் எங்கே என்று அவளுக்குக் குழப்பமாக இருந்தது. வீட்டின் அருகாமையில் எப்போதும் யாராவது நடமாடிக்கொண்டு தானிருப்பார்கள். வேறு எங்காவது கொண்டுபோய் போட்டுவிடலாம் என நினைத்து அங்கிருந்து நடக்கத் துவங்கினாள்.

தன் வீட்டைச் சுற்றிய தெருக்கள், ரயில்வே லைன் ஒட்டிய பகுதி, கார் மெக்கானிக்கின் செட்டின் பின்புறத்தில். சினிமா தியேட்டரை ஒட்டிய மூத்திர சந்தில், காய்கறி மார்க்கெட்டின் குப்பைமேட்டிற்குப் பின்னால், பஸ் டிப்போவின் எதிரில் இருந்த புளியந்தோப்பில் என கையில் பல்லை ஒளித்துவைத்த சாணி உருண்டையோடு சுற்றியலைந்துகொண்டிருந்தாள். எல்லா இடத்திலும் யாராவது ஒரு ஆளோ, ஒரு நாயோ, ஒரு ஆடோ, அணிலோ ஏதோவொன்று அலைந்துகொண்டிருந்து.

யார் கண்ணிலும் படாத இடம் எங்கேயிருக்கும் என்று குழப்பமாக இருந்தது. எதற்காக எல்லா இடங்களிலும் மனிதர்களில் அலைந்து கொண்டேயிருக்கிறார்கள் என்று எரிச்சலாகவும் வந்தது. அவள் அந்த நகரின் குறுக்கும் நெடுக்குமாகப் பகல் முழுவதும் அலைந்து கொண்டிருந்தாள். சில நேரம் அவள் அறியாமலே கையில் இருந்த சாணி உருண்டை தொலைந்துவிடுமோ என்றுகூட பயமாக இருந்தது. தெரிந்தவர்கள் யாராவது அவளைக் கடந்து போகும்போதுகூட அவள் அவர்களைக் காணாதவள் போலவே நடந்து போய்க் கொண்டிருந்தாள். திடீரென உலகம் ரொம்பவும் சின்னதாகிப் போய்விட்டது போலிருந்தது.

வீடுகள், கடைகள், தள்ளுவண்டிகள், கோவில்கள், பள்ளிக்கூடங்கள், மருத்துவமனைகள், சாலையோரக் கடைகள், வாகனநிறுத்துமிடங்கள், மரங்கள், தண்ணீர்த்தொட்டிகள், சைக்கிள்கள், கார்கள், ரயில், பசுக்கள், காய்கறிக் கடைகள், பேக்கரி, குப்பைத் தொட்டிகள், சிலைகள், தெரு நாய்கள், லாரிகள், கோவில்கள், தேவாலயங்கள்,

வங்கிகள், ஐவுளிக்கடைகள், நகரப் பேருந்துகள், புகைப்பட ஸ்டுடியோக்கள், பூங்காங்கள், விளையாட்டு மைதானங்கள், பூக்கடைகள் என எங்கும் யாராவது நடமாடிக்கொண்டுதானிருந்தார்கள்.

எவர் கண்ணிலும் படாத இடம் என்று ஒரு கை அகல இடம் கூட இல்லையா? எல்லா ஊரும் இப்படித்தான் இருக்குமா? அவள் சோர்ந்துபோய் ரயில்வே கேட் அருகே உள்ள பாலத்தின் மீது சாய்ந்து நின்றுகொண்டாள். காற்றில் அவளது தலைமயிர் கலைந்துபோயிருந்தது.

பற்களின் மீது ஆத்திரமாக வந்தது. மாலை வெயில் சாலையில் வடிந்துகொண்டிருந்தது.

அவள் பைபாஸ் ரோட்டில் உள்ள ரைஸ் மில் பின்னால் யாரும் இருக்க மாட்டார்கள் என்று நினைத்து மேடேறி ரைஸ் மில் செல்லும் பாதையில் நடந்தாள். வேகவேகமாக நடந்து ரைஸ் மில் முன்பாக வந்தபோது ஐந்து மணி சங்கு ஊதியது. அவள் தும்பைச் செடிகள் பூத்துக் கிடக்கும் ரைஸ் மில்லின் பின்பக்கமாக நடந்து போனபோது எக்கச்சக்க காலி அட்டைப்பெட்டிகள், ஈரத்தில் நனைந்து இற்றுப்போன சாக்குகள் கிடந்தன. கிழித்துப் போடப் பட்டிருந்த காலண்டர் காகிதங்களில் ஒன்று பறந்துகொண்டிருந்தது.

அவள் தன் கையில் இருந்த பல்லை வீசி எறியலாமா என்பதற்காக சுற்றிலும் பார்த்தாள். தொலைவில் ஒரு சிறுவன் எருமைகளை மேய விட்டுக்கொண்டு அவளையே பார்த்துக்கொண்டிருந்தான். அவன் பார்த்துக்கொண்டிருக்கிறானே, என்ன செய்வது என்று குழப்பமாக வந்தது. இந்த இடத்தில் போட வேண்டாம். பெட்ரோல் பங்க் இருக்கும் பகுதியில் ஆள் நடமாட்டம் இருக்காது, அங்கே போய் போட்டுவிடலாம் என்று அவள் தும்பைச் செடி ஒன்றைக் கையில் பறித்தபடியே இன்னும் கொஞ்ச தூரம் நடந்து சென்றாள்.

அவள் பெட்ரோல் பங்க்கைக் கடந்தபோது அங்கே ஒரு டிராக் டரைப் பிரித்துப் போட்டு சிலர் வேலை செய்துகொண்டிருந்தார்கள். காலையில் இருந்து அவளது கையில் வைத்திருந்த சாணி உருண்டை உலர்ந்து இறுகிப்போயிருந்தது. இனி என்ன செய்வது என்று தெரியாமல் அவள் வீட்டிற்கே திரும்பிவிடலாம் என்று இருட்டுக்குள்ளாக நடந்து வரத் துவங்கினாள்.

இந்தப் பல்லால்தான் இத்தனைப் பிரச்சினையும் என்று திரும்பத் திரும்பத் தோணிக்கொண்டேயிருந்தது. நாளைக்கு மிட்டாய் கம்பெனிக்கு வேலைக்குப் போக வேண்டும் என்பது வேறு அந்த எரிச்சலை அதிகப்படுத்தியது.

அவள் வீடு வந்து சேர்ந்தபோது பெரிய அக்கா பாத்திரம் கழுவிக்கொண்டிருந்தாள். அவள் சின்னு தயங்கி நிற்பதைக் கண்ட வளைப் போல கையில் என்னடி வச்சிருக்கே என்று கேட்டாள். சின்னு மென்று விழுங்கியபடி மெதுவான குரலில் சொன்னாள். பல்லு

விழுந்துருச்சிக்கா. அதான் சாணி உருண்டையில எடுத்து வச்சிருக்கேன்.

பெரிய அக்கா முறைத்தபடியே சொன்னாள். ஏன் பல்லை இப்படி கையில வச்சிருந்தா அது தானா முளைச்சி வந்துருமா.. தூக்கி வீசிட்டு வந்து கையைக் கழுவுடி.

சின்னு தயங்கித் தயங்கிச் சொன்னாள். யார் கண்ணுலயும் படாம போடாட்டி பல்லு முளைக்காதுனு செல்வியக்கா சொல்லுச்சி. பெரிய அக்கா ஆத்திரத்தோடு அவள் கையிலிருந்த சாணி உருண்டையைப் பிடுங்கி இருட்டிற்குள் வீசி எறிந்தபடியே எல்லா இடமும் கண்ணுல படாததுதான் போ போயி வேலையைப் பாரு என்றாள். இருட்டுக் குள்ளாகப் பார்க்கும்போது அவள் சொல்வது நிஜம் போலதானிருந்தது.

சின்னு குனிந்து ஈய வாளியில் இருந்த தண்ணீரை அள்ளி முகம் கழுவினாள். வாயைக் கொப்பளிக்கும்போது ஓட்டைப் பல் வழியாகத் தண்ணீர் வெளியேறுவது சிரிப்பாக வந்தது. அந்த ஓட்டைப் பல் ஏற்படுத்திய இடைவெளியை நாவால் தடவிவிட்டாள். மிக சுகமாக இருந்தது. அவள் திரும்பவும் கையில் தண்ணீர் அள்ளி வாய் முழுவதும் நிரப்பி ஓட்டைப் பல் வழியாக ஒழுக விட்டாள்.

அக்கா பாத்திரங்களைக் கழுவி வைத்தபடியே தண்ணியை வீணாக்காதே கழுவுன பாத்திரத்தை எடுத்து உள்ளே கொண்டு போயி வை ரெண்டாது ஆட்டம் படத்துக்குப் போகலாம் என்றாள். சின்னுவிற்கு சிரிப்பாக இருந்தது.

அவர்கள் சரஸ்வதி தியேட்டருக்கு இருட்டுக்குள்ளாக நடந்து போகும்போது சின்னுவின் தோள் மீது கையைப் போட்டபடியே வந்த செல்வியக்கா அக்கா அவள் ஓட்டைப் பல்லோடு சிரிப்பது ரொம்ப அழகாக இருக்கிறது என்றாள்.

பாதிப் படம் நடந்துகொண்டிருக்கும்போது செல்வியக்காவிடம் திரும்ப தனக்கு பல்லு முளைக்குமா என்று சின்னு கேட்டாள். அவள், முளைக்கவே முளைக்காது. நீ தொணதொணனு பேசாம படம் பாரு என்று சொல்லியபடி படம் பார்க்கத் துவங்கினாள்.

படம் நடந்துகொண்டிருக்கும்போதே சின்னு எழுந்து தண்ணீர் குடிக்க வெளியே போனாள். வேப்பமரத்தடியில் இருந்த சிறிய குழாயைத் திருகி நைந்துபோய் கிடக்கும் பித்தளை டம்ளரில் தண்ணீர் பிடிக்கும்போது ஏதோ தொண்டையை அடைப்பது போலிருந்தது. அவளுக்குத் திடீரென அழ வேண்டும் போலிருந்தது.

சின்னு இருட்டிற்குள் நின்றபடியே அழுதுகொண்டிருந்தபோது உள்ளே சினிமா ஓடிக்கொண்டிருந்தது. டம்ளரில் தண்ணீர் நிரம்பி கீழே வழிந்துகொண்டிருந்தது.

# ஒரு நகரம், சில பகல்கனவுகள்

இந்த நகரில் மின்வெட்டு சர்வசாதாரணமாகிப்போயிருந்தது. அதிலும் கோடைக்காலத்தில் ஏற்படும் மின்வெட்டுகூட அங்கிருப்பவர்களுக்குப் பழகிப்போய்விட்டது. மின்சாரமற்றுப்போன மதிய நேரங்களில் மரங்களில் இலை அசைவதே இல்லை. ஒரு வேளை இந்த நகரில் மரங்கள் எப்போதுமே இலை அசைப்பது இல்லையோ என்றுகூடத் தோன்றுகிறது. இறுக்கமும் நெருக்கடியுமான பகல்நேரத்தில் உறக்கம் ஒரு மலைப் பாம்பைப் போல ஊரையே கவ்விக்கொண்டுவிடுகிறது. அதிலும் நூற்றுக்கணக்கில் லாட்ஜ்களிருந்த டவுன் ஹால் ரோட்டில் மதிய நேரம் தெளிவற்ற மஞ்சள் நிறத்தில் தரையெங்கும் பிசுபிசுப்பாக வழிந்துகொண்டிருக்கிறது. தலைக்கு முக்காடு இட்டபடியே தர்பூஸ் பழம் விற்கும் பெண்கள், கரும்புச் சக்கைகளைப் பிழிந்து போட்டபடியே இருக்கும் இயந்திரம், காகம் கூட பறக்காத ஆகாசம், சப்தம் எழுப்பாத தேவாலயத்து மணி, சாலையை வெறித்துப் பார்த்துக்கொண்டிருக்கும் சிலைகள் என எங்கும் வெயில் வரைந்த சித்திரங்கள் நீண்டுகொண்டிருக்கின்றன. சாலையோர ஓவியன் தெருவில் கரியால் வரைந்துபோன கிருஷ்ணன் உருவத்தில் வீசியெறியப்பட்டிருந்த காசுகள்கூட சூடேறி நெளிகின்றன. கோடைக்காலத்திய மதியம் அழுகிய முட்டையின் முடைநாற்றத்தைப் போல பரவிக்கொண்டிருக்கிறது. கானல் தார்ச்சாலைகளில் அலையோடிக்கொண்டிருக்க ஆயிரம் வருடம் பழையதான இந்த கோவில் நகரம் ஒரு கிழட்டு வேசையைப் போல தன் வயதை மறைக்கும் மினுமினுப்போடு பல் இளித்துக்கொண்டிருக்கிறது.

### பயோனியர் லாட்ஜ் — ஒரு வரலாற்றுச் சுருக்கம்

இதுவரை அந்த லாட்ஜில் தங்கிப்போயிருந்தவர்களின் எண்ணிக்கை நிச்சயம் இரண்டு லட்சத்தைத் தாண்டியிருக்கும். 1934ல் ஆரம்பிக்கப் பட்டபோது அந்த லாட்ஜில் தங்குவதற்காக ஆள் பிடிப்பதற்கு ரயிலடியில் இரண்டு புரோக்கர்களிருந்தார்கள். அந்த நாட்களில் லாட்ஜில் தங்குவது மிகுந்த அவமானகரமான செயல். செண்ட்

மற்றும் ரெமி பவுடர் விற்பவர்களும், நாடக புரோக்கர்களும், ஏலம் விடுகின்றவர்களும் மட்டுமே லாட்ஜில் அறையெடுத்து தங்குவார்கள். யாத்திரைக்கு வரும் பயணிகள்கூட அன்னசத்திரங் களில்தான் தங்குவது வழக்கம். இதற்காகவே கோவிலைச் சுற்றிலும் நாலைந்து அன்னசத்திரங்களிருந்தன.

தேவதானப்பட்டியைச் சேர்ந்த பெருமாள் ரெட்டியார்தான் லாட்ஜின் முதல் உரிமையாளராக இருந்தவர். அவரிடமிருந்து கைமாறி மாறி இப்போது அதை அனுபவித்து வரும் ஒத்தக்கடை மாரியப்பன் வகையறா அந்த இடத்தைக் கடன் பத்திரம் மூலம் சுவீகரித்துக்கொண்டிருந்தார்கள் என்பது வெளியே சொல்லப்படாத நிஜம். பயோனியர் லாட்ஜின் சிறப்பு ஒவ்வொரு ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு முறையும் மாறிக்கொண்டேயிருக்கிறது.

1940களில் இந்த லாட்ஜிற்கு சவுடி சந்திரா வந்து போகிறாள் என்பது மிகப் பிரபலமாக இருந்தது. அவளது சிவப்பு நிற ஆஸ்டின் கார் மதியம் நாலு மணிக்கு லாட்ஜ் வாசலில் வந்து நிற்கும். அவள் கார் கதவைத் திறந்து விடுவதற்காக அறைப்பையன்கள் காத்துக்கொண்டேயிருப்பார்கள். அவள் எப்போதுமே சிவப்பிலோ அல்லது மஞ்சளிலோ பர்மா சில்க் புடவைகள்தான் உடுத்திக்கொண்டு வருவாள். உடலின் வசீகரத்தை அதிகப்படுத்தும் அந்தப் புடவையில் இருந்த பூக்கள் காண்பவர் கண்களில் அசைந்துகொண்டிருந்தன. அவை எல்லாம் சிறுவயல் செட்டியார் வாங்கித் தந்தவை என்று பேசிக்கொள்வார்கள். சவுடி சந்திரா நல்ல உயரமாக இருப்பாள். அவள் செருப்பு அணிந்திருந்தாள் என்பது அன்று ஆச்சரியமாக இருந்தது. அவளது கூந்தல் இடுப்பு வரை தொங்கிக்கொண்டிருக்கக் கூடியது. விசித்திரமாக அவள் ஒரு தேவாங்கு ஒன்றை எங்கு சென்றபோதும் உடன் கொண்டுசென்றாள். அந்த தேவாங்கு மெலிந்துபோனதாகயிருந்தது.

அவள் மிக மெதுவாக நடந்து லாட்ஜின் உள்ளே நடந்து போவாள், பெருமூச்சும் ரகசிய ஆசைகளும் அவள் பின்னால் உதிர்ந்து கிடக்கும். அவள் போன பிறகு வாத்தியக் கருவிகளைத் தூக்கிக்கொண்டு குதிரை வண்டியில் ஒரு கோஷ்டியினர் வந்து சேர்வார்கள். முக்கிய பிரமுகர்களுக்காக மட்டும் மாடி அறையில் சதிர்க் கச்சேரி நடப்பதாகச் சொல்லிக்கொள்வார்கள். அதை உறுதிப்படுத்துவது போல எப்போ தாவது பாட்டுச் சப்தம் கேட்கும். மாலை நாலு மணியில் இருந்து இருட்டும்வரை சவுடி சந்திரா அங்கேயிருப்பாள். அவள் வெளியே போகும்போது சிறுவயல் செட்டியார் கார் வரை வந்து வழியனுப்பி வைப்பார். அப்போது அறைப்பணியாளர்களாக இருந்த சிலர் அவள் சீமை பிராந்தி குடிக்கிறாள் என்றும், ஆம்பளையைப் போல பேண்ட் போட்டுக்கொண்டு நடனமாடுகிறாள் என்றும் சில கதை களைச் சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

சவுடி சந்திராவைப் பார்ப்பதற்காகவே அந்த விடுதியில் வந்து

தங்குபவர்கள் அதிகமிருந்தார்கள். இங்கே வந்து சதிர் ஆடும் நேரத்தைத் தவிர மற்ற வேளைகளில் சவுடி சந்திரா என்ன செய்வாள். அவள் வீடு எங்கேயிருக்கிறது. உண்மையில் அது போல சதிராட்டம் உள்ளே நடக்கிறதா என்று நூறு கேள்விகள் அந்த லாட்ஜைச் சுற்றிலும் இருந்துகொண்டேயிருந்தன. ஆனால் இந்த மர்மத்தின் சுழிதான் பயோனியர் லாட்ஜை வாழ வைத்துக்கொண்டிருந்தது.

சவுடி சந்திரா சில வருடங்களுக்குப் பிறகு புத்தம் புதிதான பிளைமோத் காரில் வந்து இறங்கினாள். இப்போது சிறுவயல் செட்டியாரிடமிருந்து மாறி வத்தலகுண்டு சாயபு வசம் வந்துவிட்டாள் என்றார்கள். ஆனால் சிறுவயல் செட்டியாரைப் போல சாயபு கார் வரை வந்து அவளை அனுப்பி வைப்பதில்லை. மாறாக ஒவ்வொரு நாளும் அவள் வீட்டிற்குக் கிளம்பும்போதும் ஒரு கூடை நிறைய ரோஜாப் பூக்களைத் தூக்கிக்கொண்டு ஒரு ஆள் பின்னாடிச் செல்வதைப் பலரும் கண்டிருக்கிறார்கள். வத்தலகுண்டு சாயபு எப்படியிருப்பார் என்றுகூட யாரும் பார்த்ததேயில்லை. நீண்ட நாட்களுக்கு ரகசியங்களின் நீருற்றைப் போலிருந்தாள் சவுடி சந்திரா.

ஒரு நாள் சவுடி சந்திரா அதே லாட்ஜின் வாசலில் காரில் வந்து இறங்கும்போது காலையில் இருந்து லாட்ஜின் வாசலில் காத்துக்கொண்டிருந்த கை ரிக்ஷாக்காரன் ஒருவன் விடுவிடுவென அருகில் போய் அவளது அடிவயிற்றோடு கத்தியால் குத்திச் சொருகி விட்டு அவள் தலைமயிரில் கொஞ்சம் கொத்தாக அறுத்து எடுத்துக் கொண்டு நடந்து போனதும் இதுபோன்ற ஒரு மதிய நேரத்தில்தான் நடந்தேறியது. அந்த ஆள் சவுடி சந்திராவின் கணவன் என்றும், அவளை விட்டுவிட்டுச் சதிராட வந்துவிட்டாள் என்று சிலரும், சிறுவயல் செட்டியார் அனுப்பிய ஆள்தான் அவளைக் குத்தியவன் என்றும் அதனால்தான் அவளது கூந்தலில் கொஞ்சம் வெட்டி எடுத்துக்கொண்டுபோய்விட்டான் என்றும் சொல்லித் திரிந்தார்கள்.

ஆனால், அந்தச் சம்பவம் நடந்த நாள் முதல் சவுடி சந்திராவைக் குத்திய இடம் இந்த லாட்ஜ்தான் என்று பெயர் ஏற்பட்டுப்போனது. அதனால்தானோ என்னவோ அங்கு வந்து தங்கும் ஒவ்வொருவரும் சவுடி சந்திராவைப் பற்றிய கதைகளை ஆர்வத்துடன் கேட்டுப் போயினர். சில நேரம் அறைப்பணியாளர்கள் மிதமிஞ்சிய போதை யில் சவுடி சந்திரா கத்தியால் குத்தப்பட்டுக் கீழே விழுந்தபோது தான் அவளைத் தூக்கிப் பிடித்ததாகவும் அப்போதும் அவளது உடம்பில் ரோஜாப் பூ வாசனை அடித்தாகவும் சொல்லிக்கொண் டார்கள். அது ரோஜாப் பூவின் வாசனையல்ல, தேனும் எலுமிச்சையும் கலந்ததொரு வாசனை என்றும், இதுபோன்ற சதிர் ஆடும் பெண்கள் தேனைத் தேய்த்துக் குளிப்பது வழக்கம் என்றும் பேசிக்கொள்வது முண்டு.

சவுடி சந்திராவைப் பற்றி வெளிப்படையாகச் சொல்லிய கதை களைத் தவிரவும் சில மறைமுகமாகப் பேசப்பட்டன. அதில் ஒன்று

சவுடி சந்திராவைக் கொல்லச் சொன்னதே வத்தலகுண்டு சாயபுதான் என்றும், அவரது பையனுக்கும் சவுடி சந்திராவிற்கும் கள்ள உறவு ஏற்பட்டுவிட்டதாகவும் அதற்காக அவளைக் கொல்ல ஏற்பாடு செய்ததாகவும் சொன்னார்கள். எது நிஜம் என்பதைத் தாண்டி இந்த நாள் வரை சவுடி சந்திராவைக் கொன்றவன் கைது செய்யப்பட வில்லை என்பதோடு அவளது சாவிற்கு யாரும் நியாயம் கேட்டுப் போராடவுமில்லை. ஆனால் காலம் சவுடி சந்திராவின் பெயரை மெல்ல பலரது உதடுகளில் இருந்து மறக்கடிக்கத் துவங்கியது. அதன் பிறகு பயோனியர் லாட்ஜ் சூதாட்டத்திற்குப் பிரசித்தி பெற்றதாகிப் போனது.

அதுவும் இருநூற்றி இருபத்திரெண்டாம் நம்பர் அறையில் சில வருட காலமாக சூதாட்டம் இரவு பகல் என முடிவற்று நடந்து கொண்டேயிருந்ததாகவும், வேறுவேறு ஊர்களிலிருந்து ஆட்கள் வருவதும் தோற்பதுமாக விளையாட்டு நடந்துகொண்டிருந்ததாகப் பேசிக்கொண்டார்கள். சூதாட்ட அறை இரண்டாவது தளத்தின் கிழக்குப் பக்கமிருந்தது. அங்கே வட்ட வடிவமான பெரிய மேஜை போட்டிருந்தார்கள். சூதாட்ட அறைக்கு இரண்டு பக்கமிருந்த அறைகளிலும் வேசைகள் தங்க வைக்கப்பட்டிருந்தார்கள். சூதாட் டத்தில் வென்றவன், தோற்றவன் யாராக இருந்தாலும் தனது மனஅழுத்தத்தைக் குறைத்துக்கொள்ள பெண்களோடு அவசரமாகப் படுத்து எழுந்தார்கள். சூதாட்ட அறையின் பணியாளராக இருந்த நீலகண்டன், தான் ஓய்வு பெற்றுச் செல்லும் நாள் வரை அந்த அறையில் நடந்த விஷயங்கள் எதையும் எவரிடமும் சொல்லவே யில்லை.

சூதாட்ட அறையில் பெண்கள் அனுமதிக்கப்படுவதில்லை என்று எழுதப்படாத விதியிருந்தது. அந்த விதியை மீற முற்பட்டதாக திருவலம் ஜமீன் வேலாயுத பாண்டியனை வெளியே தூக்கி எறிந்து விட்டார்கள் என்றுகூட ஒரு தகவலிருக்கிறது. பயோனியர் லாட்ஜில் சூதாடித் தோற்றுப்போய் தேவகோட்டையைச் சேர்ந்த இராம. ராமநாதன் தனது பர்மா தேக்கால் ஆன பங்களாவையும் கூண்டு வண்டியையும் இழந்தார் என்றும் அவர் அப்படியே யாருக்கும் சொல்லாமல் ராமேஸ்வரத்தில் போய் மொட்டை அடித்துவிட்டு பர்மாவிற்கு திரும்பவும் கப்பல் ஏறிவிட்டார் என்றும் சொல்லிக் கொண்டார்கள்.

அந்த நாட்களில் நகரக் காவல்துறை சூப்ரெண்டாக இருந்த எல்லீஸ் ஒருமுறை சூதாட்ட அறைக்குள் நுழைந்தபோது தூக்கமற்று வீங்கிய கண்களும், உலர்ந்த உதடுகளுடன் ஆறு பேர் விளையாடிக் கொண்டிருந்ததையும் அவர்களது முன்பாக மேஜை நிறைய பணம் நிரம்பிக் கிடந்ததைக் கண்டதாகவும், அவர்கள் எல்லீஸ் வந்ததைப் பற்றி கவனம் கொள்ளவேயில்லை என்றும், அன்று நடந்த சூதில் பாலவநத்தம் ஜமீன்தார் கொண்டாநாயக்கர் ஏழரை லட்ச ரூபாய்

சம்பாதித்துக்கொண்டு போனார் என்றும் இன்று வரை பேசிக் கொள்கிறார்கள்.

ஆனால், எஸ்லீஸ் அந்தச் சூதாட்ட விடுதிக்கு ஒரு முறைகூட வந்ததேயில்லை என்றும் அவர் ஒரேயொரு நாள் தனது காவலர்களுடன் உள்ளே நுழைந்து சூதாட்ட அறையை இழுத்து மூடி அங்கிருப்பவர்களை கச்சேரிக்கு அடித்து இழுத்துப் போனதாக மணியம் லாட்ஜின் உரிமையாளர் நாகரத்தினம் பல முறை சொல்லியும் எவரும் அதை நம்பவேயில்லை.

அதன் பிறகு பயோனியர் லாட்ஜ் ரகசிய ஆண்மைக் கோளாறு சிகிச்சைக்கான மருத்துவர் சிவபதியைக் காண வரும் இடமாகவும், சில வருடங்கள் குலுக்குச் சீட்டு நடத்தும் இடமாகவும், அதன் பிந்திய சில வருடங்களில் தற்கொலை செய்துகொள்ள வருபவர்களுக்கான இடமாகவும் மாறிக்கொண்டேயிருந்தது.

பயோனியர் லாட்ஜில் இதுவரை இறந்து போன ஜோடிகளின் எண்ணிக்கையே முப்பதைத் தாண்டியிருக்கும். அதில் எர்ணாகுளத்தில் இருந்து ஓடிவந்து இறந்துபோன சாரம்மாதான் மிகக் குறைந்த வயதுடையவள். இறந்துபோகும்போது அவளுக்கு வயது பதினைந்து. அவளோடு இறந்து கிடந்த பரமேஸ்வரன் நாயருக்கு வயது நாற்பத்தியெட்டு. அதையும் காதல் தற்கொலை என்றுதான் போலீஸ்காரர்கள் குறிப்பேட்டில் எழுதிக்கொண்டு போனார்கள்.

பயோனியர் லாட்ஜை யாரும் வாங்க விரும்பவேயில்லை. அதுவாக ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறை வேறு ஒரு ஆளின் கைக்குப் போய் விடுகிறது. பயோனியர் லாட்ஜின் உள்ளே இருக்கும் வேம்பையும் வராந்தாவில் உள்ள பழைய புகைப்படங்களையும் எந்த உரிமையாளர் வந்தபோதும் மாற்றவேயில்லை. இன்றைக்கும் பயோனியர் லாட்ஜில் தங்குவதற்கென்றே வருபவர்களிருந்தார்கள். அதுவும் சினிமா படப் பெட்டி கொண்டுவருபவர்கள், ஏலச்சீட்டு நடத்துபவர்கள், செருப்பு வியாபாரிகள், கைரேகை ஜோதிடம் பார்ப்பவர்கள், கந்து வட்டிக் காரர்கள் என்று அதன் நிரந்தர உறுப்பினர்கள் இருபது அறைகளில் தங்கியிருந்தார்கள்.

பயோனியர் லாட்ஜ் காலத்தின் முன்னும் பின்னும் ஊர்ந்தபடியே இருக்கிறது. உண்மையில் அது ஒரு நினைவடுக்கைப் போல மாறியிருக்கிறது. சிலர் இப்போதும் அதன் முன்பு வந்து நின்றபடியே கடந்த காலத்தில் அதன் அறைகளில் தாங்கள் அனுபவித்த பெண்களைப் பற்றி நினைத்துக்கொள்கிறார்கள். சிலர் அங்கே நடந்த ஏலச்சீட்டை நினைவுகொள்கிறார்கள். சிலர் அங்கு எப்போதோ வந்து தங்கியிருந்த சிரிப்பு நடிகரைக் காண வந்த நாளை நினைவு கொள்கிறார்கள். பயோனியர் லாட்ஜிற்கு வயதாகிவிட்டது என்று எவரும் சொல்வதேயில்லை. நேற்று புதிதாக முளைத்த டெம்பிள் டவர்களை விடவும் அது இளமையோடு இருப்பதாகவே நம்புகிறார்கள். அதற்குக் காரணம் பயோனியர் லாட்ஜில் கண்ணுக்குத் தெரியாமல் பொங்கிக்

கொண்டிருக்கும் ரகசியங்கள்தான்; பயோனியர் லாட்ஜின் மதியப் பொழுதுகள் சோடா பாட்டிலுக்குள் இருக்கும் நீலநிறக் கோலியைப் போல வெளியே வராமலும் உள்ளே விழுந்து விடாமலும் அசைந்து கொண்டேயிருக்கின்றன.

**பகல்கனவு 1:**

நன்மை தருவார் கோவில் சந்தினை நோக்கி நடந்து கொண்டிருந்தான் முத்துசாமி. குடை ரிப்பேர் பார்க்கும் வயதான ஆளைத் தவிர தெருவில் வேறு யாருமேயில்லை. மதிய வெயில் உக்கிரமாகயிருந்ததால் ஒரு மணிக்கு எல்லாம் சாப்பாட்டுக்குக் கடையை மூடிவிட்டுப் போய்விட்டார்கள் போலும். சவீதா டெய்லர் கடையில் மட்டும் பாட்டு சப்தம் கேட்டுக்கொண்டிருந்தது. வீடுகளை ஒட்டி விழுந்து கிடந்த நிழல் வழியாக அவன் நடந்து போனான். தொலைவில் கோவில் சிலைகள் வெயிலுக்கு பயந்து கண்களை மூடிக்கொண்டு தலைகவிழ்ந்து நின்றிருந்தன.

முத்துசாமி கையில் வைத்திருந்த ஐந்து ரூபாய் வியர்வையில் கசங்கிப்போயிருந்தது. மீனாட்சி மெஸ்ஸில் இருந்து சாப்பாடு எடுத்துக்கொண்டு வெளியே வந்த அழகர் வலது கையில் கேரியரும், இடது கையில் வாழை இலையை மடங்காமல் பிடித்தபடியே முத்துசாமியைப் பார்த்து 'எங்கடா போறே' என்று கேட்டான். முத்துசாமி பதில் சொல்லாமல் அருகில் நடந்து வந்து அழகன் கையில் வைத்திருந்த பிளாஸ்டிக் காகிதத்திற்குள் போடப்பட்டிருந்த அப்பளத்தைக் கொஞ்சம் பிய்த்துத் தின்றபடியே 'முந்நூற்றி பனிரெண்டுக்கா' என்று கேட்டான். அழகர் மறுத்து தலையாட்டிய படியே 'மேனேஜருக்கு' என்று சொன்னான்.

அழகரின் சட்டைப் பையைத் தட்டிப் பார்த்தான் முத்துசாமி. சில்லறைச் சப்தம் கேட்டது. அழகர் சிரித்துக்கொண்டே 'காசு என்னிதில்லே. போற வழியில பீடா வாங்கணும்' என்றான். முத்துசாமி எதுவும் கேட்காமலே அவன் சட்டைப் பைக்குள் கையை விட்டு ஒரு ரூபாய் காசை வெளியே எடுத்தான். அழகர் திமிறியபடியே காசை பையில போடுறா என்று கடுத்த குரலில் சொன்னான். அப்போது அழகர் கையில் இருந்த பாத்திரத்தில் கேரியரில் சாம்பார் வழியத் துவங்கியது. முத்துசாமி சிரித்தபடியே, 'மோரு மிச்சம் இருந்தா வச்சிரு வந்து குடிச்சிகிடுறேன்' என்றபடியே அவன் சட்டைப் பையில் காசைத் திரும்பவும் போட்டுவிட்டு நடந்தான். தெருவில் அழகர் வெயிலைப் பொருட்படுத்தாமல் பாட்டு பாடிக் கொண்டே நடந்து போவது கேட்டது.

நகரப் பேருந்து ஒன்று புழுதியைக் கிளப்பியபடியே முத்துசாமியைக் கடந்து போனது. வரிசையாக உள்ள பழக்கடைகளை எல்லாம் தாண்டி முத்துசாமி கோட்டைமேடைக்குப் பக்கத்தில் தள்ளு வண்டியை நிறுத்தியிருந்த ஏகாம்பரம் பழக்கடை முன்பாக வந்து

நின்றான். ஏகாம்பரம் ஒரு ஆப்பிள் பழத்தை அழுக்கடைந்துபோன துணியால் துடைத்து ஸ்டிக்கர் ஒட்டிக்கொண்டிருந்தான். திராட்சைப் பழங்களில் கூட சூடு கொதித்துக்கொண்டிருந்தது. முத்துசாமி உதிர்ந்து கிடந்த திராட்சைப் பழத்திலிருந்து ரெண்டை எடுத்து வாயில் போட்டபடியே 'நாட்டுப்பழம் குடுங்கண்ணே' என்று ஐந்து ரூபாயை நீட்டினான்.

ஏகாம்பரம் நிமிர்ந்து பார்த்தபோது வெயில் தெருவினைக் கண்ணுக்குத் தெரியாத கத்தியால் அறுத்துக்கொண்டிருந்தது. கழுத்தடியில் இருந்த வியர்வையைத் துடைத்தபடியே ஏகாம்பரம் காசைக் கையில் வாங்கிக்கொண்டு 'நாட்டுப்பழம் இல்லை. ரஸ்தாளி வாங்கிக்கோ' என்றான்.

முத்துசாமி அந்தப் பதிலைப் பற்றி அக்கறைப்படாமல் உரித்துப் போட்டிருந்த பலாப்பழத்தைச் சுற்றிலும் எத்தனை ஈ மொய்க்கின்றது என்று எண்ணிக்கொண்டிருந்தான். ஏகாம்பரம் எரிச்சல் அடைந்தவனைப் போல, 'டேய் முத்துசாமி ரஸ்தாளி பிய்க்கவா' என்று திரும்பவும் கேட்டதும் முத்துசாமி மறுத்து தலையாட்டியபடி, 'வேண்டாம். காசை திரும்ப குடுங்க' என்றான். ஏகாம்பரம் குனிந்து பழக்கூடையில் கிடந்த பேரிக்காய் ஒன்றை எடுத்து நீட்டியபடியே 'செவ்வாழை வாங்கிட்டு போடா. தேனா இனிக்கும்' என்றான்.

முத்துசாமி 'எவ்வளவு' என்று கேட்டான். 'ரெண்டு பழம் நாலு ரூவா' என்று சொல்லியபடியே தாரில் இருந்து இரண்டு செவ்வாழைப் பழங்களைப் பிய்த்துக் கொடுத்தான். அந்தப் பழங்களைப் பார்க்கவே முத்துசாமிக்குச் சிரிப்பாக வந்தது. முகர்ந்து பார்த்தான். இதுவரை அறியாத வாசனையாக இருந்தது. கைக்கு ஒன்றாக இரண்டு வாழைப் பழங்களையும் வைத்துக் கத்திச்சண்டை போடுவது போல மோத விட்டுக்கொண்டு பயோனியர் லாட்ஜை நோக்கி நடந்தான். அவன் நாலு வருடமாகவே லாட்ஜ்களில் வேலை செய்துகொண்டிருக்கிறான். அதுவும் இதே சாலையில் உள்ள வேறுவேறு விடுதிகள். சில நேரம் அவனுக்குத் தான் இப்போது எந்த விடுதியில் வேலை செய்கிறோம் என்ற நினைப்புகூட மறந்துபோய்விடும். காரணம் எல்லா லாட்ஜ்களும் வெளியில்தான் வேறுவேறாகத் தெரிகின்றன. உள்ளே எல்லா லாட்ஜ்களும் ஒன்றுபோலதானிருக்கின்றன. லாட்ஜில் வந்து தங்குகின்றவர்கள் யாவருமே ஏதோ விதத்தில் மனக்கசப்பு கொண்டவர்கள்தான். அவர்கள் எவரும் இயல்பில் இருப்பதேயில்லை. அல்லது லாட்ஜிற்கு வந்ததும் இயல்பை மறந்துவிடுகிறார்கள்.

உண்மையில் எல்லா லாட்ஜ்களுக்கும் இடையில் சிலந்திவலை போல கண்ணுக்குத் தெரியாத மெல்லிய வலை பின்னப்பட்டிருக்கிறது. எந்த லாட்ஜில் தங்கியிருந்தாலும் அந்த அறைகள் ஒன்றுபோலதான் உள்ளன. எந்த லாட்ஜிலும் ஒரு வாரத்திற்கு மேலாகத் தங்கினால் லாட்ஜின் பளபளப்பான வர்ணக் காகிதம் ஒட்டப்பட்ட சுவர்களுக்குப் பின்னால் உள்ள அழுக்கும் பெருமூச்சும் கேட்கத் துவங்கிவிடுகிறது.

லாட்ஜ்கள் என்பதே ஒரு மாபெரும் மூத்திரப் பிறைதான் என்று அவனாக நினைத்துக்கொண்டான். எல்லா லாட்ஜ் அறை களுக்கும் இரண்டு சாவிகளிருக்கின்றன. கண்காணிப்பதற்கு ஏதுவாக கதவிற்கு மேலாகத் துளைகள் உள்ளன. தூக்கு மாட்டிக்கொண்டு செத்துவிடக் கூடாது என்பதற்காக உத்திரங்களே இருப்பதில்லை. முத்துசாமி இப்படிச் சம்பந்தமற்று எதையெதையோ நினைத்துக் கொண்டபடியே வெயிலில் நடந்து வந்துகொண்டிருந்தான்.

பரோட்டா கடையின் பெரிய தோசைக்கல் வெயிலில் காய்ந்து கொண்டிருந்தது. பழைய பேப்பர் கடையை ஒட்டிய படிக்கட்டில் ஒரு ஆள் வெயிலை மறந்து சுருண்டு உறங்கிக்கொண்டிருந்தான். அவன் வாயில் இருந்து கோழை வழிந்தபடியே இருந்தது. அவனது தேய்ந்துபோன நீலநிறச் செருப்புகள் அங்கொன்றும் இங்கொன்றுமாகக் கிடந்தன.

முத்துசாமி லாட்ஜின் உள்ளே நுழையும்போது கரண்ட் கட்டாகி யிருந்ததால் ஆங்காங்கே ஆட்கள் கதவைத் திறந்து வைத்தபடியே ஓலை விசிறியால் விசிறிக்கொண்டிருந்தார்கள். படிக்கட்டின் அடியில் ஒரு ஓரமாக காலி பீர் பாட்டில்கள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. முத்துசாமி இரண்டாவது மாடிக்கு ஏறிப் போகும்போது வழியில் இருந்த கண்ணாடியில் தன்னை ஒரு முறை பார்த்துக்கொண்டான். தலை செம்பட்டை படிந்துபோயிருந்தது. குளிர்பான விளம்பரத்திற் காகத் தரப்பட்ட கறுப்பு பனியனும் காவி கலர் டவுசரும் அணிந்திருந் தான். கண்ணாடியில் யாரோ மேலே ஏறி வருவது தெரிந்தது.

முத்துசாமி சுதாரித்துக்கொண்டு வேகவேகமாக அறைகளை நோக்கி நடக்க ஆரம்பித்தான். இருநூற்றி நாற்பத்திரண்டாம் அறையின் முன்பாக வந்து கதவைத் தட்டும் முன்பாக இரண்டு வாழைப் பழங்களையும் பனியனில் துடைத்துக்கொண்டான். கதவைத் தட்டியதும் சட்டை போடாத உடம்போடு பருத்த வயிறைக் காட்டிக் கொண்டு அறையில் இருந்த ஆள், பாதி கதவைத் திறந்துகொண்டு நின்றான். முத்துசாமிக்கு அந்த ஆளின் தொப்பையைப் பார்க்கச் சிரிப்பாக வந்தது. அவன் நிமிர்ந்து பார்க்காமலே செவ்வாழைப் பழத்தை நீட்டியபடியே 'தேனா இனிக்கும் சார். சாப்பிடுங்க' என்றான். அந்த ஆள் முத்துசாமியின் கன்னத்தோடு சேர்ந்து ஒரு அறை கொடுத்தபடியே 'நாட்டுப்பழம் வாங்கிட்டு வாடான்னா இந்த மசிரை எதுக்கு வாங்கிட்டு வந்திருக்கே' என்றான்.

முத்துசாமிக்கு வலி காதை அடைப்பது போலிருந்தது. அவன் அழுகையைக் கட்டுப்படுத்திக்கொண்டு 'நாட்டுப்பழம் இல்லே' என்றான். அந்த ஆள் 'மிச்ச சில்லறை எங்கடா' என்றான். முத்துசாமி தனது டிராயர் பையில் இருந்து இரண்டு ஐம்பது பைசாக்களை எடுத்துத் தந்தான். அந்த ஆள் இரண்டையும் தன் கையில் எடுத்துப் பார்த்துவிட்டு ஒரு எட்டணாவை அவன் கையில் தந்தபடியே அறைக் கதவை அடைத்துச் சாத்தினான். முத்துசாமிக்கு வேதனை

மட்டுப்படாமலே இருந்தது.

இந்த ஐம்பது பைசா மீது ஒண்ணுக்கு இருக்க வேண்டும் போல ஆத்திரமாக இருந்தது. யாராவது தன்னைப் பார்க்கிறார்களா என்று சுற்றிலும் பார்த்தான். படியின் இடதுபுறமிருந்து அவனைப் போலவே அறைப்பையனாக உள்ள சொக்கு தண்ணீர்க் குவளையுடன் நடந்து வந்துகொண்டிருந்தான். முத்துசாமி மூடப்பட்டிருந்த அறைக் கதவைப் பார்த்தபடியே மனதிற்குள்ளாகக் கெட்ட வார்த்தைகளால் திட்டிக் கொண்டேயிருந்தான். சொக்கு அருகில் வந்தபடியே 'என்னடா முத்துசாமி' என்று கேட்டான். முத்துசாமி ஆத்திரத்தோட 'ஒக்காலி அடிக்கறான்டா' என்று சொன்னான்.

சொக்கு அது சகஜம் என்பவனைப் போல அவனை விட்டு விலகி நடக்கத் துவங்கியபோது முத்துசாமி மட்டும் கையில் வைத்திருந்த எட்டணாவை டவுசர் பையில் போட்டபடியே இனிமேல் எந்த நாயுக்கும் தான் வேலை செய்யக் கூடாது, கூப்பிட்டாலும் போகக் கூடாது என்றபடியே வேம்பின் கிளைகளை நோக்கி நடந்தான். கன்னம் சிவந்துபோயிருக்கக்கூடும் போல வலியாக இருந்தது. அவன் கண்களை மூடிக்கொண்டான். காற்றின் குளிர்ச்சி கொஞ்சம் கொஞ்சமாக கசிந்து வரத் துவங்கியது.

யோசிக்க யோசிக்க அந்த ஆளின் உருவம் மறைந்து அவனை அடித்த ஆண்கள், பெண்கள், குடிகாரர்கள், சீட்டு விளையாடுபவர்கள், ஓரினப்புணர்ச்சியாளர்கள், பழம் விற்பவர்கள் என்று பலரும் நினைவிற்கு வரத் துவங்கினார்கள். பின் யாவும் மறைந்துபோகத் துவங்கி காய்ந்து சருகாகிய வேப்பிலைகள் வெயிலில் முடமுடத்துக் கொண்டிருக்கும் சப்தம் மட்டுமே கேட்டுக்கொண்டிருந்தது.

**பகல்கனவு 2:**

கடையை எடுத்து வைத்துவிட்டு லாட்ஜிற்கு வரும்போதே யாரும் தன்னைப் பின்தொடர்ந்து பார்க்கிறார்களா என்று திரும்பித் திரும்பிப் பார்த்தபடியே நடந்து வந்தார் நியூடோன் ஸ்டுடியோ உரிமையாளர் கந்தப்பன். அவருக்கு ஐம்பது வயதைக் கடந்திருந்தது. லாட்ஜின் முன்பாக நின்று வெற்றிலை வாங்குவதைப் போல நோட்டம் விட்டார். ஒரேயொரு மஞ்சள் பல்ப் மட்டுமே எரிந்துகொண்டிருந்தது.

பழனியில் இருந்து மாதம்தோறும் வந்து ஆண்மைக் குறைவு சிகிச்சை செய்யும் மருத்துவர் சிவபதியின் அறையினுள் மங்கிய வெளிச்சம் தெரிந்தது. கந்தப்பன் மெதுவாக இருட்டிற்குள்ளாகவே நடந்து அறை வாசலின் முன்பு வந்து நின்று பார்த்தார். உள்ளே யாருமேயில்லை. அவர் விருட்டென உள்ளே நுழைந்தபோது உள்ளிருந்து வத்தல்கடை முருகேசனும் இன்னொரு ஆளும் ஏதோ சூரணம் வாங்கிக்கொண்டு நின்றிருந்தார்கள். கந்தப்பன் அவர்களைப் பார்த்து சிரித்துக்கொண்டார். கந்தப்பன் உள்ளே போனபோது

மருத்துவர் மட்டுமே தனியாக இருந்தார். ஆள் சிவப்பாக நூறு கிலோ எடையுள்ள மனிதரைப் போலிருந்தார். அவர் இரண்டு கைகளிலும் வாட்ச் கட்டியிருந்தது வேடிக்கையாக இருந்தது.

மருத்துவர் கந்தப்பனிடம் எத்தனை நாளா இந்தப் பிரச்சினை இருக்கிறது என்று கேட்டார். கந்தப்பன் மறுத்தபடியே தனது பிரச்சினை அதில்லை என்று சொல்லியபடியே சுற்றிலும் பார்த்துக்கொண்டு அறைக் கதவைச் சாத்திவிட முயன்றார். டாக்டர் 'அதெல்லாம் தேவையில்லை, சொல்லுங்கள்' என்றதும் அவர் தயங்கித் தயங்கி தனக்குப் பதினெட்டு வயதில் திருமணமாகிவிட்டது, தற்போது வயது ஐம்பத்திரெண்டு, தனது மகளுக்கே திருமணம் செய்து கொடுத்தாகிவிட்டது, ஆனால் இப்போது சில மாதங்களாகவே பகலில் அதுவும் குறிப்பாக பின்மதியங்களில் தனக்கு காமவுணர்ச்சி அதிகமிருப்பதாகச் சொன்னார். டாக்டர் அதை எப்படி தீர்த்துக் கொள்வீர்கள் என்று கேட்டதும் கந்தப்பன் பதில் சொல்லவில்லை.

டாக்டர் கந்தப்பனுக்கு நாற்பது நாட்கள் மருந்து கொடுத்துவிட்டுக் கடைக்கு லீவு போட்டுவிட்டு சில நாட்கள் வெளியூர் போய்விட்டு வரச் சொன்னார். கந்தப்பன் 'ராமேஸ்வரம் போய் வரலாமா' என்று கேட்டார். டாக்டர் சிரித்துக்கொண்டே, 'கோட்டயம் போய் விட்டு வாருங்கள்' என்றார். கந்தப்பனுக்குச் சிரிப்பாக வந்தது. டாக்டர் அதைக் கண்டவரைப் போல 'ஏற்கனவே போயிருக்கீங்களா' என்று கேட்டார். கந்தப்பன் சிரித்துக்கொண்டே, 'ஒன்று ரெண்டு வாட்டி சோக்காளிகளோட போயிட்டு வந்திருக்கேன்' என்றார். அதன்பிறகு டாக்டரும் கந்தப்பனும் நெடுநேரம் பழைய கதைகளைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். டாக்டர், தான் சவுடி சந்திராவிற்கு வைத்தியம் பார்த்திருப்பதாகவும் அவள் தன்னிடமிருந்துதான் தங்க பஸ்பம் வாங்கி சாப்பிட்டாள் என்றார். கந்தப்பன் வெளியேறிப் போகும்போது இரண்டு லேகியங்களும் கொஞ்சம் சூரணமும் வாங்கிக்கொண்டு போனார். வாசலுக்குப் போனபோது யாரோ இருளில் ஒளிந்து வந்துகொண்டிருப்பது தெரிந்தது. அது வெண்கலப் பாத்திரக்கடை தெய்வநாயகம் என்று தெரிந்தும் அவரைக் கண்டு கொள்ளாதவரைப் போல இருளுக்குள்ளாகவே நடந்து போகத் துவங்கினார் கந்தப்பன்.

***பகல்கனவு 3:***

வெற்றிலைகளைத் தண்ணீரில் கழுவியபடியே இன்றைக்கு எப்படியாவது அந்த ஏலச்சீட்டுக்காரனைக் குத்திவிட வேண்டியது தான் என்று நினைத்துக்கொண்டேயிருந்தான் அபூபக்கர். பீடா வாங்குவதற்காக வந்து நிற்பவர்களின் குரல் அவன் காதில் விழவே யில்லை. எப்படியும் கொஞ்ச நேரத்தில் அந்த சீட்டுக்காரன் வந்து சேர்வான். அவனிடம் எதுவும் பேசவே கூடாது. கிட்டத்தட்ட எட்டாயிர ரூபாய் ஏமாற்றியிருக்கிறான். அப்படியே அடிவயிற்றோடு

சொருகிவிட வேண்டும் என்று நினைத்தபடியே வெற்றிலையின் ஓரத்தை வெண்கலப் பிடியுள்ள கத்தியால் வெட்டத் துவங்கினான். தேங்காய்ப்பூ, வெள்ளி ஜரிகை, குல்கந்து என்று ஒவ்வொரு டப்பாவில் இருந்தும் கொஞ்சம் அள்ளி வெற்றிலையில் தூவிக்கொண்டே ஆள் வருகிறானா என்று பார்த்துக்கொண்டான். தொலைவில் சைக்கிள் தெரிந்தது. சீட்டுக்காரன் 'அம்மா மெஸ்'ஸில் சாப்பிட்டுவிட்டு பீடா போடுவதற்காக வந்துகொண்டிருக்கிறான். அவனது சைக்கிளில் தொங்கிக்கொண்டிருந்த பச்சைநிற லெதர் பை காற்றில் ஆடிக்கொண்டிருக்கிறது. சீட்டுக்காரன் ஏதோ நினைப்பில் போனவன் போல அபூபக்கரைக் கடந்து போனான். அபூபக்கருக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. அவனாக கைதட்டிக் கூப்பிட்டான். சைக்கிள் நின்று சீட்டுக்காரன் திரும்பிப் பார்த்துவிட்டு 'சாப்பிட்டு வர்றேன்' என்றபடியே சென்றான்.

அபூபக்கர் கையில் வழிந்த குல்கந்தைக்கூட துடைக்காமல் காத்துக் கொண்டேயிருந்தான். பசு மாடு ஒன்று வெயிலை மேய்ந்தபடியே சாலையில் அலைந்துகொண்டிருந்தது. சீட்டுக்காரன் வியர்த்து வழிந்த முகத்தைக் கர்சீப்பால் துடைத்தபடியே 'பீடா வேண்டும்' என்று கையை நீட்டினான். அபூபக்கர் சற்றும் யோசிக்காமல் தனது கையில் இருந்த கத்தியை அவனது அடிவயிற்றோடு சேர்த்து சொருகி னான். ரத்தம் வேஷ்டி எங்கும் வழியத் துவங்கியது. சீட்டுக்காரன் கத்தினான்.

அபூபக்கர் மாறி மாறிக் குத்திவிட்டு கத்தியைத் தூர எறிந்துவிட்டு விடுவிடுவென நடந்து அருகில் இருந்த சினிமா தியேட்டருக்குள் நுழைந்தான். ஏதோ ஆங்கிலப் படம் ஓடிக்கொண்டிருந்தது. மின் விசிறியின் கீழாக உள்ள நாற்காலியாகப் பார்த்து உட்கார்ந்து கொண்டான். பயம் கலைந்துபோய் சிரிப்பாக வந்தது. சினிமா ஓடிக்கொண்டிருக்கும்போது ஏனோ காரணம் இல்லாமல் வெற்றிலை கள் வெயிலில் காய்ந்துகொண்டிருக்கும் என்ற நினைப்பு அபூபக்கருக்கு வந்துகொண்டிருந்தது. இருட்டிற்குள்ளாகவே யாராவது தெரிந்த முகங்களிருக்கிறதா என்று பார்த்தான். யாரும் தெரியவில்லை. தியேட்டல் ஒரு பெண்கூட இல்லை என்பது மிகவும் வேதனை தருவதாக இருந்தது. சில நிமிடங்களுக்குப் பிறகு அவன் தியேட்டரே தன்னைத் திரும்பிப் பார்க்கும்படியாக எழுந்து நின்று ஓங்கிக் கத்தினான். இருளுக்குள் அவன் குரல் தனியே கேட்டுக்கொண்டிருந்தது.

**பகல்கனவு 4 :**

ராகினி கதவு தாழிடப்பட்டிருக்கிறதா என்று மறுமுறையும் சோதித்துப் பார்த்துக்கொண்டாள். விநாயகம் நன்றாக உறங்கிக்கொண்டிருக் கிறான். சேலத்திலிருந்து அவர்கள் கிளம்பி இரவுப் பேருந்தைப் பிடித்து வந்து சேர்ந்திருக்கிறார்கள். பயணவழி முழுவதும் அவன் பேசிக்கொண்டே வந்தான். ஒரு நாள் வாழ்ந்துவிட்டு அந்த அறையிலே

செத்துவிட வேண்டியது என்று அவர்கள் முடிவுசெய்திருந்தார்கள். அதன்படியே அந்த நகரில் அவர்கள் ஒரு சிறிய அறையை எடுத்துக் கொண்டார்கள். காலையில் ஒரு முறை இருவரும் உடலுறவு கொண்டார்கள். பிறகு அவன் எழுந்து வெளியே சென்று பூச்சிமருந்து பாட்டில் ஒன்றும் கொஞ்சம் பூந்தியும் வாங்கிக்கொண்டு வந்திருந்தான். கேரியரில் சாப்பாடு கொண்டுவரச் சொல்லி சாப்பிட்டார்கள். சாப்பிட்ட சில நிமிடங்களில் அவன் தூங்கத் துவங்கிவிட்டான். அவள் ஜன்னலைப் பிடித்தபடியே வெளியே தெரியும் சாலையைப் பார்த்துக்கொண்டிருந்தாள். ஒரு டீக்கடை முன்பாக கிழவி இரும்பு வாளியில் தண்ணீர் வைத்தபடியே குளித்துக்கொண்டிருப்பது தெரிந்தது. பேக்கரி ஒன்றின் கண்ணாடிக்குள் வரிசைவரிசையாகக் கேக்குகள் அடுக்கப்பட்டிருப்பது தெரிந்தது. இரண்டு மாணவிகள் ஒருவர் தோளோடு மற்றவர் கை போட்டபடியே நடந்து போய்க் கொண்டிருந்தார்கள்.

அவள் ஜன்னலைச் சாத்திவிட்டு விநாயகத்தை ஒட்டிப் படுத்துக் கொண்டாள். சில நிமிஷங்களில் அவனது கை அவள் மீது படரத் துவங்கியது. அவள் அதை அனுமதித்தாள். வெக்கையுடன் அவளது உடலின் மீது அவன் இயங்கிக்கொண்டிருந்தபோது அவள் மின்சார மற்று நின்றுபோயிருந்த மின்விசிறியைப் பார்த்தபடியே இருந்தாள். விநாயகம் திரும்பவும் உறங்கத் துவங்கியிருந்தான். அவள் எழுந்து ஜன்னலைத் திறந்துவிட்டாள். அப்படியும் காற்று வரவேயில்லை. குளிக்கலாம் என்பதுபோல பாத்ரூம் கதவைத் தள்ளித் திறந்தாள். உள்ளே இரும்பு வாளி தலைகீழாகக் கவிழ்த்தி வைக்கப்பட்டிருந்தது. அவள் வாளியைத் திருப்பி வைத்து தண்ணீர்க் குழாயைத் திறந்து விட்டாள். தண்ணீர் வரவில்லை. முகம் கழுவிக்கொள்ளலாம் என்பவள் போல அந்தக் குழாயைத் திருகியதும் அதிலும் காற்றே வந்தது. ஒரு துளி தண்ணீர்கூட அறையில் இல்லை என்பது எரிச்சல் தருவதாகயிருந்தது.

அவள் கதவைத் திறந்து யாராவது அறைப்பையன்களிருக்கிறார்களா என்று பார்த்தாள். எவருமேயில்லை. தானாக காரிடார் முழுவதும் நடந்தாள். அங்கிருந்த கண்ணாடியில் தன்னை ஒரு முறை பார்த்துக் கொண்டாள். யாரோ அவளைப் பார்ப்பது போலிருந்தது. அவள் திரும்பிப் பார்த்தபோது யாருமேயில்லை. அவள் ஆத்திரத்துடன் சாவதற்கு முன்பு குளிக்கக்கூட முடியாதா என்று நினைத்துக் கொண்டாள். எல்லா அறைகளும் மூடிக் கிடந்தன. அவள் தன் அறைக்குத் திரும்பி வந்தபோது மின்சார விசிறி சுற்றிக் கொண்டிருந்தது. விநாயகத்தைக் காணவில்லை. அவள் பதட்டத்தோடு வெளியே வந்து நின்று சாலையைப் பார்த்தாள். எங்கே போயிருப்பான் என்று தெரியவில்லை. தான் படியருகேதானே நின்றிருந்தோம், எப்படி தன்னைக் கடந்து போனான் என்று அவளுக்குக் குழப்பமாக இருந்தது. அவள் திகைப்போடு அவசரமாக அறையைச் சாத்திவிட்டுப் படியிறங்கி கீழே வந்தாள்.

ஒருவேளை விநாயகம் ஊருக்குத் திரும்பிப் போயிருப்பானா? அவளுக்கு நடுக்கமாக இருந்தது. அவள் பல்லைக் கடித்துக்கொண்டு விநாயகத்தை சாலையெங்கும் தேடத் துவங்கினாள். டீக்கடையின் முன்பு குளித்து முடித்திருந்த கிழவி தன் நரைத்த கேசத்தை வெறுங் கையால் உணர்த்தியபடியே அவளைப் பார்த்துக்கொண்டிருந்தாள். திடீரென அவளுக்கு சாவதை விடவும் அவனைத் தேடுவது மிகப் பயங்கரமானதாக மாறத் துவங்கியிருந்தது. திசை தெரியாதவளைப் போல நடந்து போகத் துவங்கினாள் ராகினி.



வெயில் அடங்கியிருந்தது. பயோனியர் லாட்ஜின் வரவேற்பு அறையில் இருந்த சாமி படங்களுக்கு பூ கொண்டுவருபவள் தனது கூடையில் இருந்து கதம்ப மாலையை வெட்டி எடுத்து மேஜையில் வைத்துவிட்டு நடந்தாள். மாலை பேப்பர்களைக் கையில் சுருட்டியபடியே அறைப் பையன்கள் லாட்ஜிற்குள் நடந்துகொண்டிருந்தார்கள். அழகர் டீ வாங்கிக்கொண்டு வந்தபடியே வேம்பின் நிழல் வரும் இடத்தில் படுத்து உறங்கிக்கொண்டிருந்த முத்துசாமியை எழுப்பி அவன் மதியம் சாப்பிட்டானா என்று கேட்டான். முத்துசாமி சிரித்தபடியே, 'இன்னைக்கு அய்யா முட்டை பிரியாணி சாப்பிட்டு தூங்கிட்டேன்' என்றான். அழகர் மிகுந்த ஆர்வத்துடன் 'அரை பிளேட்டா, கால் பிளேட்டா' என்று கேட்டான். முத்துசாமி சிரித்தபடியே 'அரை பிளேட் இருபத்தைந்து ரூவா . . . நூற்றிப் பதினெட்டுக்கு வாங்கிட்டு வந்தேன். அப்படியே எனக்கு சாப்பிடச் சொல்லிக் குடுத்திட்டாரு. சாப்பிட்டதும் அசதியா வந்துச்சா இங்க வந்து படுத்துட்டேன். நல்ல தூக்கம். எதோ கெனாகூட கண்டேன். என்னனு சரியா தெரியலை. நீ சாப்பிட்டயா' என்று சோம்பல் முறித்தான்.

அழகர் சிரித்தபடியே 'நானும் கொஞ்சம் பீர் குடிச்சேன்' என்றான். அப்போது ஒரு பெண் இருநூற்றிப் பதினெட்டாம் அறையில் இருந்து வெளியே எட்டிப் பார்த்தபடியே 'குளிக்க தண்ணீ வராதா' என்று கேட்டாள். முத்துசாமி அவளுக்குப் பதில் சொல்வதற்காக அருகில் போனான். அந்தப் பெண் மேஜையில் கிடந்த சில்லறைகளில் இருந்து ஐந்து ரூபாயை எடுத்து அவனிடம் தந்தபடியே ஒரு ஷாம்பூ வாங்கிக்கொண்டு வரச் சொல்லியபடியே 'விநாயகம் உனக்கு ஏதாவது வேணுமா' என்று கேட்டாள். அவன் படுக்கையில் புரண்டபடியே 'ரெண்டு சிகரெட் வேணும் ராகினி' என்றான். முத்துசாமி படுக்கையை கவனித்தபோது அதில் தலையணை கசங்கிக் கிடந்தது. ஆங்காங்கே தலைமயிர்கள் உதிர்ந்து கிடந்தன. அந்தப் பெண் அதைக் கவனித்தவள் போல விநாயகத்தின் முதுகில் ஒரு அடி கொடுத்து மணி ஐந்து ஆச்சி எந்திரிங்க என்றாள். அவன் நீ தூங்கலயா என்று கேட்டான். அவள் கண்ணாடியில் தனது முகத்தைப் பார்த்தபடியே 'கரண்டு போனதுகூட எனக்குத் தெரியாது. நல்லா தூங்கிட்டேன். ஏதோ

கெட்ட சொப்பனம். அதான் முழிப்பு வந்துச்சி. குளிக்கப் போனா தண்ணியே இல்லை' என்றாள்.

முத்துசாமி கையில் பத்து ரூபாயோடு லாட்ஜை விட்டு வெளியே வந்தபோது நியூடோன் ஸ்டுடியோவின் உரிமையாளர் கந்தப்பன் வாசலில் நின்றபடியே முகம் கழுவிக்கொண்டிருந்தார். மெலிந்து போய் ஒரு கை சூம்பிப்போன ஒரு பெண் அவருக்கு சொம்பில் தண்ணீர் மோந்து தந்தபடி அருகில் நின்றுகொண்டிருந்தாள். கந்தப்பன் அவளைப் பார்த்துக்கொண்டே தானே நடந்ததை எதையோ நினைத்துச் சிரித்தபடியே முகம் கழுவிக்கொண்டிருந்தார். பீடாக்கார அபூபக்கர் காலி டப்பாக்களை ஒரு வயர்க்கூடையில் போட்டு எடுத்துக்கொண்டு கிளம்பும்போது கந்தப்பன் அவனிடம் 'இந்த வெயிலில் எப்படித்தான் நின்னு வியாபாரம் பாக்கயோப்பா' என்றார். 'வியாபாரம் எங்கே பாக்குறேன். நின்னுகிட்டே தூங்குனதுதான் மிச்சம்' என்றபடியே அவன் சைக்கிளை உருட்டிக்கொண்டு நடக்க ஆரம்பித்தான்.

மாலை வெளிச்சம் சாலையைச் சுத்தம் செய்வது போல ஊர்ந்து கொண்டிருந்தது. கோவிலுக்குச் செல்பவர்கள் கிழக்கு நோக்கி நடந்துகொண்டிருந்தார்கள். கடந்துபோன மதிய நேரத்தின் சுவடின்றி நகரம் இயங்கத் துவங்கியிருந்தது.

# சிறு துயர்

சுவரில் ஊர்ந்துகொண்டிருக்கும் பல்லியைப் பார்த்தபடியே படுத்துக் கிடந்தேன். அம்மா எதையோ சொல்லிக்கொண்டேயிருந்தாள். அவள் பேசுவது என் கவனத்திலே இல்லை. அம்மா என்னை உலுக்கியபடியே முழுப் பரீட்சை மட்டுமாவது எழுதிவிட்டு வந்து விடலாம் என்று சொன்னாள். நான் பதில் பேசாமல் பாயில் சுருண்டு படுத்துக் கிடந்தேன். என் தலையைத் தடவிவிட்டு ஐந்தாம் வகுப்பு முழுப் பரீட்சை மட்டும் எழுதிட்டா போதும், பிறகு ஒரு மாசம் லீவு. வீட்லயே இருக்கலாம் என்றாள். நான் பதில் பேசவே யில்லை. பல்லி கண்ணிலிருந்து மறைந்திருந்தது.

பள்ளிக்கூடம் போய் ஒரு மாத காலமாகிவிட்டது. வீட்டில் இதே பாயில்தான் படுத்துக் கிடக்கிறேன். காமாலை கண்டு என் உடல் வற்றிப்போய் உடம்பு முழுவதும் வேப்பிலை வாசம் அடித்துக் கொண்டிருக்கிறது.

தக்கையைப் போல உடல் எடையற்றுப்போய்விட்டது. மஞ்சள் படிந்த என் விரல்கள் எனக்கே அச்சம் தருவதாகயிருந்தன. இரண்டு நாட்களுக்கு முன்பாக ஒரு பகலில் விட்டத்திலிருந்து இறங்கி வந்த மரப்பல்லி ஒன்றைப் பார்த்துக்கொண்டேயிருந்தேன். அது சுவரில் பரபரப்பாக அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருந்தது. பிறகு தொப் என்று அருகில் விழுந்தது. பல்லியின் வால் மட்டும் துண்டிக்கப்பட்டு படபடவென துடித்துக்கொண்டிருக்க பல்லி வேகமாக சுவரில் ஏறியது. மரப்பட்டைகளை நினைவுபடுத்தும் நிறத்திலிருந்த அந்தப் பல்லியைக் காண்பதே பயமாக இருந்தது. கண்களை மூடிக்கொண்ட போது பல்லி கண்களுக்குள் ஊர்ந்துகொண்டிருப்பது போலிருந்தது. பயத்தில் கண் திறந்து பார்த்தபோது அது சுவரில் இல்லை. ஆனால் அதன் பிறகு சில நேரம் நான் அந்தப் பல்லி நிழல் போல சுவரில் ஊர்ந்து போய்க்கொண்டிருப்பதைக் கண்டேன். ஒருவேளை அது நிஜமா அல்லது பிரமையா என்றுகூட எனக்குத் தெரியவில்லை.

கண்களை மூடி என்னால் உறங்க முடியவில்லை. சில நேரம்

ஏதோ ஒரு கிணற்றுத் தண்ணீருக்குள் சிக்கி மூச்சுத் திணறுவது போலிருந்தது. பகல் முழுவதும் அம்மா என் அருகில் உட்கார்ந்தபடியே இளநீரை டம்ளரில் வைத்து புகட்டிக்கொண்டேயிருந்தாள். இரவில் என்னை அறியாமலே நான் படுக்கையில் மூத்திரம் போயிருந்தேன். பாதி உறக்கத்தில் கண் விழிக்கும்போது வீட்டின் கதவு திடீரென மிக தொலைவில் இருப்பது போல தோன்றும். அம்மாவின் குரல்கூட ஏதோ ஆழத்திலிருந்து அழைப்பது போல இருக்கும்.

எப்போதும் உடலில் மஞ்சள் பிசுபிசுப்பு வழிந்தபடியே இருந்தது. அம்மா சப்தம் இல்லாமல் அழுதுகொண்டிருந்தாள். எப்போதாவது பள்ளிக்குப் போகும் வழியில் தேசிங்கு என் வீட்டிற்கு வருவான். அருகில் உட்கார்ந்தபடியே பள்ளியில் நடந்ததைப் பற்றி ஒவ்வொன்றாக சொல்லிக்கொண்டிருப்பான். அவன் உதடுகள் அசைவது மட்டும் தெரியுமே அன்றி பேசுவது மனதில் பதியாது. என்னைத் தொட்டு விடக் கூடாது என்று பயந்தவன் போல தேசிங்கு தள்ளியே உட்கார்ந்திருப்பான்.

நாட்கள் கடந்து போகப் போக பகலில் படுத்தே கிடப்பது மிகவும் எரிச்சல் ஊட்டுவதாகயிருந்தது. குளிப்பதைத் தவிர வேறு வேலையே இல்லை. வீட்டை விட்டும் வெளியே போக முடியாது. பகல் நேரத்தில் உறக்கம் பிடிக்காமல் புரண்டுகொண்டிருக்கும்போது ஜன்னல் வழியாக வெயில் வீட்டிற்குள் இறங்கிக்கொண்டிருப்பதைப் பார்த்துக்கொண்டிருப்பேன். கைதவற விட்ட பாதரசத்தைப் போல தரையில் அங்குமிங்கும் வெளிச்சம் ஊர்ந்துகொண்டிருக்கும். என் காலடி வரை வரும் வெயில் அப்படியே பின்னால் திரும்பிப் போய்விடும். அந்த நேரத்தில் அடுப்படியில் அம்மா வெண்ணெய் இல்லாதபடியே மோர் கடைந்துகொண்டிருப்பாள்.

இந்த ஒரு மாத காலமாக என் உடலை நானே உற்றுப் பார்த்துக் கொண்டேயிருக்கிறேன். கை, கால்கள், நாக்கு, விரல்கள், நகங்கள் என யாவும் வியப்பாக இருக்கிறது. அதிலும் பாதி தூக்கமும் விழிப்புமாக உலகம் கரைந்துபோன நிலையில் உடல் ஒரு காகிதத்தைப் போல தட்டையாகிப் போயிருந்தது. அதிலும் உடம்பில் ஆடை யில்லாமல் ஈரத் துண்டை மட்டும் போர்த்திக்கொண்டு படுத்திருக்கும் போது உடலைக் காண்பது திகைப்பூட்டுவதாகயிருந்தது.

அன்றொரு நாள் பள்ளிக்கூடத்திலே வயிற்றைக் குமட்டிக்கொண்டு வாந்தியெடுத்தேன். எனக்குத் துணையாக சிவசுவை டீச்சர் கிணற்றடிக்கு அனுப்பி வைத்தாள்.

சிவசு ஓட்டை வாளியைக் கிணற்றில் விட்டு தண்ணீர் இறைத்தபடியே வயிறு வலிக்குதாடா என்று கேட்டான். என்னால் பதில் பேச முடிய வில்லை. கண்களில் பூச்சி பறந்துகொண்டிருந்தது. அடிவயிற்றோடு சேர்ந்து ஒரு வலி இறுக்கிப் பிசைந்துகொண்டிருந்தது.

சிவசு வாளியில் இருந்த தண்ணீரில் கொஞ்சம் அள்ளி தன் முகத்தைக் கழுவிக்கொண்டு என்னிடம் வாயைக் கொப்பளிக்கும்படியாகச் சொன்னான்.

என்னால் குனிந்து வாளியில் உள்ள தண்ணீரைக் கைகளால் அள்ள முடியவில்லை. சிவசு வாளித் தண்ணீரைத் தூக்கி என் கைகளில் ஊற்றினான். அது முழங்கை வழியாக வழிந்து யூனிபார்ம் சட்டையை நனைத்து கால் வழியாக இறங்கியது. தண்ணீரின் குளிர்ச்சி சற்றே வலியை அடக்கியது போலிருந்தது.

வகுப்பறைக்குத் திரும்பி வந்தபோது டீச்சர் கேட்காமலே சிவசு நான் மஞ்சள் கலரில் வாந்தி எடுத்ததாகச் சொன்னான். டீச்சர் போர்டில் எழுதிப்போட்டிருந்ததை அழித்துக்கொண்டிருந்தாள். அவளது கூந்தலில் இருந்த மல்லிகைப் பூ அவிழ்ந்து தொங்கிக் கொண்டிருந்தது. இப்போது வலி குறைந்திருக்கிறதா என்று டீச்சர் கேட்பாள் என பார்த்துக்கொண்டிருந்தேன். ஆனால் அவள் என்னைத் திரும்பிப் பார்க்கவேயில்லை. தலைகவிழ்ந்தபடியே உட்கார்ந்து கொண்டேன். திரும்பவும் வயிற்றை வலிப்பது போலவேயிருந்தது. வலி தாங்க முடியாமல் அழுதுவிடுவேனோ என்று பயமாக இருந்தது. வகுப்பில் அழக் கூடாது என்று பல்லைக் கடித்துக்கொண்டிருந்தேன்.

டீச்சர் போர்டில் கேள்விபதில்கள் எழுதிப்போட்டுக்கொண்டிருந்தாள். என்னால் பெஞ்சில் உட்கார்ந்திருக்க முடியவில்லை. வலி கொஞ்சம்கொஞ்சமாக என்னை மீறி எழுந்துகொண்டிருந்தது. தலையைக் கவிழ்ந்தபடியே காலடியில் வைத்திருந்த எனது ஊதா நிறப் பையைப் பார்த்துக்கொண்டிருந்தேன். பையின் கைப்பிடி ஒன்று அறுந்துபோயிருந்தது. அதை இன்னொரு கைப்பிடியோடு சேர்த்து முடிச்சு போட்டு வைத்திருந்தேன்

என் அருகில் உட்கார்ந்திருந்த தேசிங்கும் குள்ளராமனும் போர்டைப் பார்த்துப் பார்த்து நோட்டில் எழுதிக்கொண்டிருந்தார்கள். நான் வாயில் கையை வைத்து அடைத்துக்கொண்டு அழத் துவங்கினேன். மாணவிகளில் யாராவது பார்க்கிறார்களா என்று கூச்சமாகவும் இருந்தது. டீச்சர் தன் கையில் அப்பியிருந்த சாக்பீஸ் தூசுகளைத் தட்டிவிட்டுக்கொண்டபடியே தனது நாற்காலியில் போய் உட்கார்ந்துகொண்டாள்

திடீரென நான் இப்போதே செத்துப்போய்விடுவேனோ என்ற பயம் ஏற்படத் துவங்கியது. இந்த பயம் வந்ததும் வகுப்பறையே கண் முன்பாகக் கரைந்துபோவது போன்றும், உடலில் வலி அதிகமானது போன்றும் தோன்றியது. பல்லைக் கடித்தபடியே சப்தம் போடாமல் அழுதேன். என்னால் அழுகையைக் கட்டுப்படுத்த முடியவில்லை.

என் பின்னால் உட்கார்ந்திருந்த தாமரைக்கண்ணன் எழுந்து மணிகண்டன் அழுகிறான் டீச்சர் என்று கத்தியபோது எழுதிக் கொண்டிருந்த மாணவிகளில் சிலர் வேகமாகத் திரும்பிப்

பார்த்தார்கள். டீச்சர் தன் இருக்கையை விட்டு நகராமலே என்னடா செய்யுது என்று திரும்பவும் கேட்டாள். என்னால் பதில் பேச முடியவில்லை. விசும்பலும் அழுகையுமாக நின்றுகொண்டிருந்தேன். மாணவிகள் என்னைப் பற்றி ஏதோ பேசிக்கொண்டிருந்தார்கள்.

டீச்சர் அருகில் வந்து என் நெற்றியில் கை வைத்து காய்ச்சல் அடிக்கிறதா என்று பார்க்க மாட்டாளா என்று ஆசையாக இருந்தது. ஆனால் டீச்சர் சாணியில் காலை வைத்தபோது ஏற்படும் முகச் சுழிப்பைப் போல என்னைப் பார்த்து முகம் கோணியபடியே மணிகண்டன் வீடு யாருக்குடா தெரியும் என்று கேட்டாள். தேசிங்கு கையை உயர்த்தினான்.

தேசிங்கை என்னுடைய பையை எடுத்துக்கொள்ளும்படியாகச் சொல்லிவிட்டு வீட்டிற்குக் கிளம்பச் சொன்னாள். வகுப்பை விட்டு வெளியே வந்தபோது மாலை வெயில் வராந்தாவில் ஊர்ந்து கொண்டிருந்தது. நாலாம் வகுப்பில் படிக்கும் ஒரு சிறுமி கையில் ரிஜிஸ்தரை வைத்தபடியே ஹெட்மாஸ்டர் அறைக்குப் போய்க் கொண்டிருந்தாள். தேசிங்கு என் பையைத் தோளில் மாட்டியபடியே ஸ்கூல் கேட் வரை வந்தவன் அங்கிருந்த ஒரு கல்லில் பையை வைத்துவிட்டு அவசரமாக வகுப்பறையை நோக்கி ஓடினான்.

பள்ளிக்கூடத்தின் பெரிய கேட்டின் முன்பாக நின்று கொண்டிருந் தேன். இப்போது அழுகை அடங்கியிருந்தது. வலியும் காணமல் போனது போலிருந்தது. பள்ளிக்கூடத்தைத் திரும்பிப் பார்த்தபோது ஏனோ வெட்கமாக இருந்தது. சுந்தரி நான் அழுததைப் பற்றி என்ன நினைத்திருப்பாள். கேலி செய்வாளா என்ன? சி.நிர்மலா வேண்டுமானால் கேலி செய்யக்கூடும். ஆனால் சுந்தரி அப்படி செய்ய மாட்டாள். கைகளை உயர்த்தி சோம்பல் முறித்தபடியே தேசிங்கு வருகிறானா என்று பார்த்துக்கொண்டிருந்தேன். தேசிங்கு பஸ் ஓட்டுவது போல காற்றில் கைகளை அசைத்து திருப்பியபடியே என்னை நோக்கி வந்துகொண்டிருந்தான்.

உங்க வீட்டுக்குப் போயிட்டு வர்றதுக்குள்ளே மணியடிச்சிருச்சின்னா என் பையை நவநீதனை எடுத்துட்டு வரச் சொல்றதுக்குதான் போனேன் என்றான். நாங்கள் இருவரும் பள்ளிக்கூடத்தை விட்டு நடந்து போகத் துவங்கியபோது குருவிகளின் படையொன்று கிழக்கிலிருந்து மேற்காகப் பறந்து போய்க்கொண்டிருந்தது. வழியில் டூரிங் தியேட்டரில் வல்லவன் ஒருவன் இன்றே கடைசி என நோட்டீஸ் ஒட்டப்பட்டிருப்பதைக் கவனித்தபடியே நடந்து போனோம்.

வீட்டில் அம்மா உறங்கிக்கொண்டிருந்தாள். வாசலில் படுத்துக் கிடந்த நாய் என்னைக் கண்டதும் எழுந்து வாலாட்டியது. தேசிங்கு கதவைத் தள்ளியடிபயே அமுதாக்கா என்று சப்தமாகக் கூப்பிட்டான். நான் அம்மாவைப் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டதே கிடையாது. யாராவது வெளியாட்கள் கூப்பிடும்போது எனக்கும் அப்படிக் கூப்பிட ஆசையாக இருக்கும். ஆனால் அதை அடக்கிக்கொண்டுவிடுவேன்.

தேசிங்கின் சப்தம் அம்மாவை விழிக்கச் செய்தது. அவள் பாதி திறந்து கிடந்த கதவு வழியாக யாரு என்று கேட்டாள். நான்தான்மா என்றேன். இதற்குள் தேசிங்கு யக்கா மணிகண்டன் பள்ளிக்கூடத்தில வாந்தியெடுத்துட்டான், டீச்சர் வீட்ல கொண்டுபோயி விட்டுட்டு வரச் சொன்னாங்க என்று சப்தமாகச் சொன்னான்.

அம்மா பதறி எழுந்துகொள்வது தெரிந்தது. தேசிங்குவின் காலை நாய் நக்கத் துவங்கியிருந்தது. அவன் கூச்சத்தில் நெளிந்து கொண்டிருந்தான். அம்மா அவிழ்ந்து கிடந்த தன் கூந்தலைக்கூட முடிந்துகொள்ளாமல் என் அருகில் வந்து நின்று கழுத்தடியில் கையை வைத்துப் பார்த்தாள். பிறகு தலையைத் தடவிவிட்டபடியே என்னய்யா செய்யுது என்று கேட்டாள். என்னால் பதில் சொல்ல முடியவில்லை. அழுகை முட்டிக்கொண்டு வரத் துவங்கியது.

பள்ளிக்கூடத்தில் சேர்த்து வைத்த மொத்த அழுகையையும் கொட்டித் தீர்த்துவிட வேண்டும் என்பது போல சப்தமாக அழத் துவங்கினேன். அவளுக்கு என் அழுகையின் அர்த்தம் புரியாமல் என்னய்யா எதுக்குய்யா அழுகுறே. அம்மா இருக்கேன்ல என்று முதுகைத் தடவிவிட்டுக்கொண்டிருந்தாள். சமாதானமாக முதுகைத் தடவும் கைகளை மீறி வெடித்து அழுதுகொண்டிருந்தேன்.

தேசிங்கு மௌனமாக அம்மாவைப் பார்த்துக்கொண்டிருந்தான். சுவரோரமாகச் சாத்தி வைக்கப்பட்டிருந்த பாயை எடுத்து விரித்து அதன் மீது அவளது இரண்டு சேலைகளை மடித்துப் போட்டு என்னைப் படுத்துக்கொள்ளச் சொன்னாள் அம்மா. நான் சுருண்டு படுத்துக்கொண்டேன்.

தேசிங்கு பள்ளியில் நடந்ததை விரிவாகச் சொல்லிக்கொண்டிருந்தான். அம்மா வேதனை கவிந்த முகத்தோடு மதியம் சாப்பிட்டானா இல்லையா என்று விசாரித்துக்கொண்டிருந்தாள் தேசிங்கு ஆதங்கத்துடன் நான் வேணும்னா கடையில போயி பன்ரொட்டி வாங்கிட்டு வரட்டுமாக்கா என்று கேட்டான். அம்மா வேண்டாம் என்று மறுத்தபடியே தன் முந்தானையில் முடிந்து வைத்திருந்த சில்லறைகளில் இருந்து ஒரு பத்து பைசாவை மட்டும் எடுத்து அவனிடம் கொடுத்து நீ ஏதாச்சி வாங்கித் தின்னுகோ என்றாள். தேசிங்கு சிரித்த முகத்தோடு வாங்கிக்கொண்டான்.

பிறகு ஒரு தூக்குவாளியை எடுத்துக்கொண்டு காபி வாங்க கிளம்பிப் போனாள். அன்றிரவு பக்கத்து வீட்டிலிருந்த சிந்தாமணி அக்கா வந்து பார்த்துவிட்டு. பிள்ளைக்கு மஞ்சக்காமாலை கண்டிருக்குக்கா. கையைப் பாருங்க, மஞ்ச மஞ்சளா இருக்கு என்றாள்.

என் கைகளை விரித்துக் காட்டச் சொன்னாள் அம்மா. லேசாக ரேகை ஓடியது போல மஞ்சள் நிறம் படியத் துவங்கியிருந்தது. மூத்திரம் போகும்போது கடுக்குதாய்யா என்று கேட்டாள். ஆமாம்

என்று தலையை அசைத்தேன். காமாலைக்கு மருந்து அரைத்துத் தரும் பெத்தையா வீட்டுக்கு அழைத்துப் போகும்படியாக சிந்தா மணியக்கா சொன்னாள். பார்த்துக்கொண்டிருக்கும்போதே அம்மாவிற்கு அழுகை பொங்கி வரத் துவங்கியது. அவள் தன்னை மீறி அழத் துவங்கினாள். சிந்தாமணியக்கா அம்மாவின் கைகளைப் பிடித்தபடியே எல்லாம் சரியா போயிரும்கா என்று திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருந்தாள்.

சில நிமிசத்தின் பிறகு அம்மா தன் கண்களைத் துடைத்துக் கொண்டாள். அழுகை பாதியில் அடங்கிப்போயிருந்தது. சிம்னி விளக்கைப் பாதி குறைத்துவிட்டு வெள்ளைத் துண்டு ஒன்றை என் மீது போத்திவிட்டு பெத்தையா வீட்டுவரை போய்வருவதாகச் சொன்னாள் அம்மா.

அன்று துவங்கிய காமாலை அதன் பிறகு முற்றிக்கொண்டே யிருந்தது. அம்மா ரெண்டு நாளைக்கு ஒரு முறை கீழாநெல்லியை அரைத்துத் தந்தபடியிருந்தாள். ஆனாலும் காமாலை கட்டுப்பட வில்லை. விரல்கள் மஞ்சளேறியிருந்தன. என் மீது போர்த்தியிருந்த வெள்ளைத் துண்டு முழுவதும் மஞ்சள் அப்பிப்போயிருந்தது. வெயிலில் வேப்பிலைகள் உலர்ந்து சருகாவது போல உடல் கொஞ்சம்கொஞ்சமாக வற்றிக் கொண்டு வந்தது.

அம்மா பரீட்சை எழுதப் போவதற்கு முந்திய நாள் தேசிங்கை வீட்டிற்கு வரச் சொல்லி ஒன்றிரண்டு கேள்விபதிலை மட்டுமாவது படித்துக்காட்டச் சொன்னாள். பாடம் எதுவும் என் நினைவில் இல்லை. சுவர் பல்லியும் பகல் வெளிச்சமும் ஒடிந்த வேப்பிலைகளும் தவிர வேறு யாவும் மறந்துபோய்விட்டிருந்தது. கண்ணாடியில் என் முகத்தைப் பார்த்துக் கொள்வது எனக்கே பயமாகயிருந்தது.

பரீட்சை துவங்கிய நாளில் அம்மாவின் விரல்களைப் பிடித்தபடியே தெருவில் நடந்து போகத் துவங்கினேன். அம்மா புதுப் பேனா வாங்கி வந்திருந்தாள். பையை அவளே தூக்கிக்கொண்டு வந்தாள். முதன்முதலாகப் பள்ளிக்குப் போவது போல நடுக்கமாகயிருந்தது. என் பள்ளிக்குள் நுழைந்தபோது அது இதற்கு முன்பு நான் பார்த்தேயிராத கட்டிடம் போன்றிருந்தது. அங்கிருந்த மாணவர்கள், வகுப்பறை எதுவும் எனக்கு பரிச்சயமற்றது போன்றேயிருந்தது.

ஹெட்மாஸ்டரைப் பார்த்து அனுமதி வாங்கிய பிறகுதான் பரீட்சை எழுத விட முடியும் என்று டீச்சர் சொன்னதால் நானும் அம்மாவும் ஹெட்மாஸ்டர் அறையில் உட்கார்ந்து இருந்தோம். முழுப் பரீட்சைக்கான கேள்வித்தாள்கள் பாக்கெட் பாக்கெட்டாக ஒரு மேஜையில் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன.

டீச்சர்கள் வகுப்புவாரியாக கேள்வித்தாள்களை வாங்கிக்கொண்டு போனார்கள். ஹெட்மாஸ்டர் என்னிடம் பரீட்சை எழுதிருவியாடா என்று கேட்டார். நான் தலையசைத்தேன். அம்மா பரீட்சை அட்டையும் பேனாவையும் எடுத்துக் கையில் கொடுத்தாள். நான் வகுப்பிற்குப் போனபோது மாணவர்கள் பரீட்சை எழுதிக் கொண்டிருந்தார்கள். வழக்கமாக நான் உட்காரும் இடத்தில் திருஞானம் உட்கார்ந்திருந்தான்.

டீச்சர் என்னைக் கடைசி பெஞ்சில் உட்காரச் சொன்னாள். மாணவிகளில் ஒருத்தி என்னை நிமிர்ந்து பார்த்தாள். கேள்வித்தாளைக் கையில் வாங்கியதும் நடுக்கம் வரத் துவங்கியது. பரீட்சை அட்டையில் இருந்த வெள்ளை பேப்பரைப் பார்த்தபடியே இருந்தேன். திடீரென காய்ச்சல் வருவது போலத் தோன்றியது. கேள்விகளுக்கான பதில் எதுவும் நினைவிற்கு வரவில்லை. அம்மா ஒரு ஓரமாக வந்து நின்றால்கூட போதும், பரீட்சை எழுதிவிடலாம் என்பது போல ஏக்கமாக இருந்தது.

பதில் எழுதாமல் தலைகவிழ்ந்தபடியே உட்கார்ந்திருந்தேன். அதை கவனித்தவள் போல டீச்சர் என்னடா எழுதலையா என்று கேட்டாள். நான் விக்கித்துப்போன குரலில் எங்கம்மாவைப் பாக்கணும் என்றேன். ஏன் அவங்க வந்து உனக்குப் பதிலா பரீட்சை எழுதப் போறாங்களா என்று டீச்சர் கேலி செய்தாள். மாணவிகளில் யாரோ சிரித்தார்கள். என் கால்கள் நடுங்கிக்கொண்டிருந்தன. வகுப்பறை திடீரென மங்குவது போல இருந்தது. டீச்சர் பரீட்சையை ஒழுங்காக எழுதும்படியாக மிரட்டிவிட்டுப் போனாள்.

தேசிங்கு எங்கே உட்கார்ந்திருக்கிறான் என்று பார்த்தேன். அவன் முன்பெஞ்சில் வேகவேகமாக எழுதிக்கொண்டிருந்தான். அவன் அருகிலாவது என்னை உட்கார வைத்திருக்கக் கூடாதா என்று தோன்றியது. பரீட்சை பேப்பரில் என் பெயரும் முருகன் துணை என்று மட்டுமே எழுதியிருந்தேன். வேறு ஒரு வரிகூட எழுத முடியவில்லை. அம்மா வீட்டிற்குப் போயிருப்பாளா இல்லை வெளியில் காத்துக்கொண்டிருப்பாளா? என்னால் தனியாக வீட்டிற்குப் போக முடியுமா? இல்லை வழியில் மயங்கி விழுந்துவிடுவேனா என்று குழப்பமாக இருந்தது.

பரீட்சை முடிந்து பேப்பர் வாங்கும்போது டீச்சர் என் அருகில் வந்து நின்று என் பேப்பரைப் பார்த்தாள். பிறகு அதைப் பிடுங்கிக் கொண்டு முருகன் துணைன்னு எழுதிட்டா பரீட்சையில பாஸ் பண்ணிருவியா என்று கேட்டாள். இதைக் கேட்டு பலரும் சிரித்தார்கள். டீச்சர் என்னை ஹெட்மாஸ்டர் அறைக்கு அழைத்துக்கொண்டு போனாள்.

அவர்கள் பேசிக்கொண்டிருக்கும்போது நான் சப்தமில்லாமல் வெளியேறி வீட்டை நோக்கி ஓடத் துவங்கினேன். மரங்கள் தாவி வந்து என் மீது மோதுவது போலிருந்தது. தெரு மிகவும் நீண்டு

போய்க்கொண்டேயிருந்தது. பரீட்சை அட்டையைக்கூட எடுக்காமல் வீட்டை நோக்கி ஓடிக்கொண்டிருந்தேன். வீட்டில் அம்மா திருகையில் எதையோ திரித்துக்கொண்டிருந்தாள். அவள் மீது போய் விழுந்தேன்.

என்னய்யா பரீட்சை எப்படி எழுதுனே என்று கேட்டாள். அழுதபடி அம்மாவின் சேலையை எடுத்துப் போட்டு படுத்துக் கொண்டு நான் செத்துப்போகப் போறேன்மா என்று சொன்னேன். அய்யோ என் புள்ளை என்னமோ சொல்லுதே என்று அம்மா தானும் அரற்றத் துவங்கினாள்.

அன்றிரவு தேசிங்கு என் அம்மாவிடம் டீச்சரை மிக மோசமாகத் திட்டிக்கொண்டிருந்தான். அம்மாவும் அந்த டீச்சரைக் கடுமையான வசைகளால் திட்டிக்கொண்டிருந்தாள். என்னுடைய டீச்சர் அப்படிப் பட்டவள் இல்லை என்று சொல்ல வேண்டும் போலிருந்தது. ஆனால் நான் சொல்லவில்லை.

யாவும் அடங்கிய பிறகு சிம்னி விளக்கு வெளிச்சத்தில் நான் மிக மெதுவாக அந்தக் கேள்வித்தாளை எடுத்துப் பார்க்கத் துவங்கினேன். பெரும்பான்மை கேள்விகளுக்குப் பதில் தெரிந்திருந்தது. மனதில் ஒவ்வொன்றாக பதில் எழுதத் துவங்கினேன். அம்மா வாசலில் நின்று சிந்தாமணியக்காவிடம் டீச்சரைப் பற்றிப் புகார் சொல்லிக்கொண்டிருந்தாள். காய்ச்சலிருக்கிறதா என்று ஒரேயொரு தரம் என்னை டீச்சர் தொட்டுப்பார்த்திருக்கக் கூடாதா என்று மட்டும் ஆதங்கம் மனதில் இருந்துகொண்டேயிருந்தது. பள்ளியில் இருந்து என்னைத் துண்டித்த உடலின் மீது ஆத்திரமாக வந்தது. அத்தோடு இந்த பள்ளியை விட்டு வேறு பள்ளிக்கு மாறப் போவதைப் பற்றிய பயம் இப்போதே வேர் விடவும் துவங்கியிருந்தது.

# பி. விஜயலட்சுமியின் சிகிச்சைக் குறிப்புகள்

ஆனங்குளத்தில் உள்ள ராமவர்மா வைத்தியசாலைக்கு சிகிச்சைக்காகக் கொண்டுவரப்பட்டபோது பி. விஜயலட்சுமி முப்பத்தியாறு கிலோ எடையுள்ளவளாக இருந்தாள். அவளுக்குத் திருமணமாகி இரண்டு ஆண்டுகள் முடிந்திருந்தன. சிகிச்சை அளிக்கப்பட்ட காலம் நாற்பது வாரம். அந்த நாட்களில் அவளோடு ஆர்யமாலா என்ற பணிப்பெண் மட்டுமே உடனிருந்தார். பி. விஜயலட்சுமிக்கு அளிக்கப்பட்ட சிகிச்சை பற்றி அவளது பெற்றோருக்கு எதுவும் தெரியாது. அவளது கணவரான வைகுந்தராமன் மட்டும் மாதம் இரண்டாவது ஞாயிற்றுக்கிழமையில் அவளைப் பார்ப்பதற்கு அனுமதிக்கப்பட்டிருந்தார்; ஆனால் அவர் பெரும்பாலும் வருவதேயில்லை. மருத்துவச் செலவிற்கான தொகை மட்டும் மருத்துவமனை பெயருக்கே காசோலையாக அனுப்பப்பட்டு வந்தது.

**சிகிச்சைக்குக் கொண்டுவரப்பட்ட நாள்:**

ஆனங்குளத்தில் உள்ள ராமவர்மா வைத்தியசாலையில் பி. விஜயலட்சுமி 21.4.2003 அன்று பின்னிரவில் நாலு மணிக்கு உள்நோயாளியாக அனுமதிக்கப்பட்டாள். அன்று அவள் டி.என்.3792 என்ற டாக்சியில் ஏற்றிக் கொண்டுவரப்பட்டிருந்தாள். அவள் வந்த இரவு கொச்சினைச் சுற்றியுள்ள பகுதிகளில் நல்ல மழை பெய்துகொண்டிருந்ததால் கார் ஓட்டுனர் வழி தவறி நெடுங்காடு என்ற இடத்திற்குச் சென்று சுற்றியலைந்து விசாரித்தபோது அது போல ராமவர்மா வைத்தியசாலை இங்கே இல்லை என்றும் அது அடுத்த ஊரான சர்ப்பக்காவில் இருக்கக்கூடும் என்றார்கள்.

வயல்வெளிகளில் கார் ஊர்ந்து போய்க்கொண்டிருந்தபோது பின்சீட்டில் சுருண்டு கிடந்தாள் பி. விஜயலட்சுமி. அவளது காலில் லேசாகக் குளிர்காற்று உரசிக்கொண்டிருந்தது. தலைமயிர் சுற்றிய பித்தளை வளையம் ஒன்று அவளது இடது காலைக் கவ்விப்

பிடித்தபடியிருந்தது. பித்தவெடிப்பேறிய அவளது பாதங்களை மடக்கிவிட்டு அருகில் உட்கார்ந்திருந்தாள் பரிமளம். யாரோ கதவைத் தட்டுவது போல மழை கார் மீது தன் விரல்களால் தட்டியபடியே வந்தது. அவளை மருத்துவமனையில் அனுமதிப்பதற்காக விஜய லட்சுமியின் மாமனார் வரதராஜப் பெருமாள் துணைக்கு வந்திருந்தார். அவரும் சர்க்கரை நோயாளி என்பதால் உறக்கத்தைக் கட்டுப்படுத்துவது இயலாததாக இருந்தது. கார் புனலூர் தாண்டும்போதே உறங்கி யிருந்தார்.

காரை ஓட்டிவந்த சுப்பு மட்டும் எப்போதாவது பின்சீட்டில் இருந்த விஜயலட்சுமியைப் பார்த்துக்கொண்டே வந்தான். ஒரு சாயலில் அவன் குடியிருந்த லயன் வீட்டில் இருந்த கணபதி புலவன் மகளைப் போலவே அவள் இருந்தாள். பி. விஜயலட்சுமியின் தோற்றம் உருக்குலைந்திருந்தது. அவளது தலைமயிர் எண்ணெய் வைக்கப்படாமல் சிடுக்கேறியிருந்தது. நெற்றி ஏறிப்போய் கழுத்து எலும்புகள் வெளியே துருத்திக்கொண்டிருந்தன. அவளது வலது கையில் பெரிய காயம் ஒன்று சீழ்வடிந்துகொண்டிருந்தது. தண்ணீருக் குள் விழுந்த பஞ்சைப் போல அவள் உடம்பு சுருங்கிப் போயிருந்தது. அவளது கண்கள் மஞ்சளேறியிருந்தன. இமைகள் பருத்து வீங்கி அவள் பல நாட்களாக உறங்காமலேயிருக்கிறாள் என்பது பார்த்த நிமிஷத்திலே தெரிந்தது.

சர்ப்பக்காவில் உள்ள வைத்தியசாலையைத் தேடி டாக்சியில் சென்று சேர்ந்தபோது வெளிவாசலை மூடியிருந்தார்கள். மழைக் குள்ளாகவும் ஏதோவொரு மூலிகைச் செடியின் வாசனை கமழ்ந்து கொண்டிருந்தது. நோயாளியை உள்ளே கூட்டிக்கொண்டு போய் விடலாமா எனத் தெரியாமல் டிரைவர் வெளியில் இருந்தபடியே ஹார்ன் அடித்துக்கொண்டிருந்தான். யாரும் வரவில்லை. மழை சப்தத்தில் கேட்காமலிருக்கக்கூடும் போலிருந்தது. பாதி உறக்கத்தில் இருந்த வரதராஜப் பெருமாள் ஹார்ன் சப்தத்தில் விழித்துக்கொண்டு உள்ளே போய் கேட்டுவரச் சொன்னார்.

டிரைவர் மழைக்குள் இறங்கி ஓடத் துவங்கியபோது பி. விஜயலட்சுமி மழைக்குள் அசைந்தபடியே இருக்கும் ஒரு கேந்திப்பூச் செடியைப் பார்த்துக்கொண்டேயிருந்தாள். மழையின் வேகத்தைத் தாங்க முடியாமல் கேந்திச் செடி வளைந்துகொண்டிருந்தது. டிரைவர் உள்ளே ஓடியபோது ஒரேயொரு எண்ணெய் விளக்கு மட்டுமே எரிந்துகொண்டிருந்தது. அவன் பலத்த குரலில் சப்தமிட்டான். உள்ளிருந்து அறுபது வயதைக் கடந்த ஒரு ஆள் வெறும் மேலோடு வெளியே வந்து நின்று, யார் வேணும் என்று மலையாளத்தில் கேட்டார். சங்கரன்கோவிலில் இருந்து தான் வருவதாகவும் நோயாளியைக் கொண்டுவந்திருப்பதாகவும் சொன்னான். ஏற்கனவே முன்பதிவு செய்யப்பட்டிருக்கிறதா என்று கேட்டதற்கு அதைப் பற்றி தனக்குத் தெரியாது என்றும், நோயாளி ஒரு பெண் என்றும்

சொன்னான். அந்த ஆள் உள்ளேயிருந்த லைட்டைப் போட்டு பெரிய பேரேடு ஒன்றைப் புரட்டிப் பார்த்துக்கொண்டிருந்தபோது அறையின் மூலையில் வைக்கப்பட்டிருந்த பாடம் பண்ணப்பட்டிருந்த முதலை ஒன்றைக் கண்டான். அறையில் ஆள் உயர விளக்கு ஒன்று இருந்தது. சுவரில் நடனமாடும் பெண்ணின் சித்திரம் ஒன்று தீட்டப்பட்டிருந்தது. மருத்துவமனை ஆள் 'பொண்ணுக்கு என்ன கோளாறு' என்று கேட்டான். டிரைவர் தயங்கியபடியே சித்தபிரமை என்று சொன்னதும் அதற்கு வைத்தியசாலை ஆள் 'ஆனங்குளம் வைத்தியசாலைக்கு இல்லே நீங்கள் போகணும்' என்றான். டிரைவர் அது எங்கேயிருக்கிறது என்று கேட்டதும் 'நீங்கள் வழி தவறி வந்துவிட்டீர்கள். இப்படியே நாற்பது கிலோமீட்டர் கிழக்காகப் போனால் மெயின் ரோடு வந்து சேரும். அங்கிருந்து மேற்காகப் பனிரெண்டு கிலோமீட்டர் தொலைவில் இருக்கிறது' என்று சொல்லி விட்டு எரிந்துகொண்டிருந்த லைட்டை அணைத்தான்.

டிரைவர் மழைக்குள்ளாகவே வாசலுக்கு வந்தபோது காரின் பின்கதவு திறந்து கிடந்தது. பின்சீட்டில் இருந்த பரிமளம் கீழே இறங்கிப் போய் ஒரு செடியின் மறைவில் குத்துக்காலிட்டு உட்கார்ந்து மூத்திரம் பெய்துகொண்டிருந்தாள். அவளது முதுகில் மழை பெய்து கொண்டிருந்தது. பி. விஜயலட்சுமி அந்த கேந்திச் செடியை விட்டு கண்ணை விலக்கவேயில்லை. தலையில் விழுந்த மழைத்துளியைத் தட்டிவிட்டபடியே பரிமளம் காரில் ஏறிக்கொண்டு 'என்னப்பா ஆச்சு?' என்றாள். 'அந்த ஆஸ்பத்திரி வேற எங்கயோ இருக்காம்' என்றபடியே காரை எடுத்தான் டிரைவர். பரிமளம் தனது பருத்த கையால் பி. விஜயலட்சுமியின் தலையில் ஒரு அடி கொடுத்தபடியே, 'இந்த எழவைக் கட்டி இழுக்குறதுக்குள்ளே என் தாலி அறுந்துபோகுது' என்றாள். பி. விஜயலட்சுமியின் கவனம் அப்போதும் அந்தச் செடியின் மீதே இருந்தது. மழையின் வேகம் கொஞ்சம்கொஞ்சமாக அதிகரிக்கத் துவங்கியிருந்தது.

மிக மெதுவாக கார் ஊர்ந்து சென்றது. ஒரு செக்போஸ்டில் கார் நின்றபோது வரதராஜப் பெருமாள் தனக்குப் பசிக்கிறது என்றார். டாக்சி டிரைவரும் அவரும் இறங்கி சாலையோர உணவகத் தில் பிஸ்கட் சாப்பிட்டார்கள். ஆனங்குளத்தைத் தேடி அவர்கள் போய்ச் சேர்ந்தபோது மழை பெய்து முடித்திருந்தது.

வைத்தியசாலை நூற்று நாற்பது ஏக்கர் பரப்பில் மிகப் பெரியதாக இருந்தது. நுழைவாயிலில் யானை சிலை ஒன்றிருந்தது. இரவெல்லாம் பெய்த மழையில் நனைந்து அந்த சிலை நிஜ யானையைப் போன்றே யிருந்தது. தாழ்வான ஓடு வேய்ந்த கட்டிடங்கள். சிறியதும் பெரியது மான குடியிருப்புகள். செதுக்கி வளர்க்கப்பட்டிருந்த பெரிய புல்தரை, வளைந்து செல்லும் மரங்கள், அடர்ந்த சாலைகள் என அது ஒரு தனி உலகமாக இருந்தது. கார் உள்ளே சென்றபோது இரவுப் பணியாளர்கள் விழித்திருந்தனர். ஏதோ தைல எண்ணெய் காய்ச்சிக் கொண்டிருப்பது போல மணம் கமழ்ந்து வந்துகொண்டிருந்தது.

வரதராஜப் பெருமாள் அவர்கள் நீட்டிய பேரேடுகளில் கையெழுத்து போட்டுக்கொண்டிருந்தார்.

முண்டு அணிந்த ஒரு வயதான பெண் காரின் கதவைத் திறந்து பி. விஜயலட்சுமியை எழுப்பியபோது அவள் அங்கிருந்த கல்வாழையின் இலை அசைவதைப் பார்க்கத் துவங்கியிருந்தாள். முண்டு அணிந்தவள் பரிமளத்திடம் 'நீங்கள் அவளது அம்மாவா?' என்று கேட்டாள். அதற்கு பரிமளம் எரிச்சலுடன் 'அந்த நாய்கள் தன் வேலை முடிஞ்சிருச்சினு எங்க தலையில கட்டிட்டுப் போயிட்டாங்க. நாங்கதான் உசிரைக் கொடுக்கிறோம்' என எரிச்சல் அடைந்தபடியே 'நான் இவ அத்தை' என்றாள். முண்டு அணிந்தவள் விஜியைக் கை கொடுத்து தூக்கியபோது ஒரு பள்ளிச் சிறுமியைத் தூக்குவது போலவே இருந்தது. ஒரே ஜாக்கெட்டைப் பல மாதமாக அணிந்திருந்த காரணத்தால் அவளது முதுகில் பட்டை போல தடம் விழுந்திருந்தது. பி. விஜயலட்சுமியின் பொருட்கள் என்று ஒரு பழைய வயர் கூடையில் அடைத்து எடுத்துவரப்பட்டிருந்த பொருட்களைப் பரிமளம் தன் கையில் எடுத்துக்கொண்டாள்.

முண்டு அணிந்தவள் மழைத் தண்ணீர் தேங்கியிருந்த பாதையில் விஜயலட்சுமியைத் தன்னோடு சாய்த்துக்கொண்டு நடந்தபோது விஜயலட்சுமிக்கு நடக்கவே கால் கூசுவதை உணர்ந்தாள். உடம்பில் பிசுபிசுப்பும் துர்நாற்றமும் வந்துகொண்டிருந்தது. கிழக்கு பார்த்த ஒரு அறையின் கதவைத் திறந்து உள்ளே விஜயலட்சுமியைப் படுக்கையில் உட்கார வைத்தபோது பரிமளம் பெருமூச்சு விட்டபடியே 'கதவை மூட வேண்டாம். அவ தூங்கவே மாட்டா. நிலைகுத்தினது மாதிரி உட்கார்ந்தே இருப்பா' என்றாள். முண்டு அணிந்தவள் தலையசைத்தபடியே அறையின் பூட்டை மேஜையின் மீது வைத்துவிட்டு வெளியேறினாள்.

வரதராஜப் பெருமாள் அந்த அறைக்கு வந்து சேர்ந்தபோது விஜயலட்சுமி சுவரைப் பார்த்தபடியே ஒட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். பரிமளம் இரவிலே கிளம்பிப் போய்விடுவதா, இல்லை காலையில் புறப்படலாமா என்று கேட்டாள். இருவரும் அதைப் பற்றிப் பேசிக்கொண்டேயிருந்தார்கள். முன்பு வந்த அதே முண்டு அணிந்த பெண் இப்போது ஒரு பிளாஸ்டிக் வாளியும் கொசுவர்த்திச் சுருள் ஒன்றும் கொண்டுவந்து வைத்தபடியே 'ஆம்பளைகள் இங்கே தங்குவதற்கு அனுமதியில்லை' என்றாள். வரதராஜப் பெருமாள் தாங்கள் இரவிலே கிளம்புவதாகச் சொல்லியபடியே இரண்டு நாட்களுக்குள் அவளுக்குத் துணையாக யாராவது ஒரு ஆளை ஊரிலிருந்து அனுப்பி வைப்பதாகச் சொன்னார். முண்டு கட்டியவள் அதைக் கேட்டுக்கொண்டதாகவே தெரியவில்லை. வரதராஜப் பெருமாள் கிளம்பும்போது அந்தப் பணிப்பெண்ணிடம் 'இவளுக்குப் பச்சைத் தண்ணி ஆகாது. குளிக்க வச்சா கத்துவா' என்று சொல்லியபடியே டாக்சியை நோக்கி நடந்தார்.

மழைக்குப் பிந்திய இரவு என்பதால் வானில் நட்சத்திரங்களே இல்லை. டிரைவர் அந்த வைத்தியசாலையை விட்டு வெளியே வந்தபோது வரதராஜப் பெருமாள் 'இதுக்கு மாசம் ரெண்டாயிரம் ஆகும். இந்த சனியனைக் கட்டிகிட்டு வந்ததுக்கு என்னவெல்லாம் தொரட்டை அடைய வேண்டியதிருக்கு பாரு' என்றார். பரிமளம் பின்சீட்டில் தனி ஆளாக சாய்ந்து படுத்தபடியே 'மூளைக்கோளாறு ரொம்ப நாளாவே இருந்திருக்கணும். நம்ம தலையில கெட்டி வச்சிட்டாங்க. இனிமே இவ செத்தாலும் பிழைச்சாலும் நமக்கென்ன? விடு' என்றாள். கார் பிரதான சாலைக்கு வந்தபோது விடியத் துவங்கியிருந்தது. வரதராஜப் பெருமாளுக்கு திரும்பவும் பசிக்கத் துவங்கியிருந்தது. அவர் ஏதாவது சாப்பிட வேண்டும் என்று ஹோட்டலில் நிறுத்தச் சொன்னார். டிரைவர் ஆற்றுப் பாலத்தைக் கடந்து போனபோது அப்படியே வண்டியை நிறுத்திவிட்டு குளித்து ஒரு தூக்கம் போடலாம் என்று நினைத்தான். காரில் இருந்த இரண்டு பேரும் உறங்கியிருந்தார்கள். சாலை ஈரத்தில் நனைந்து கிடந்தது. ஏனோ அவனுக்கு பி. விஜயலட்சுமியைப் பற்றிய வருத்தம் உண்டானது. அவன் பாதி தூக்கமும் மனதில் வலியுமாக வண்டியை சங்கரன்கோவிலை நோக்கி ஓட்டிப் போய்க்கொண்டிருந்தான்.

**நோய்க்குறிகள்**

பி. விஜயலட்சுமி கடந்த ஒரு வருட காலமாக உளவியல் மருத்துவர் டாக்டர் செல்வமகேந்திரனிடம் சிகிச்சை பெற்றிருக்கிறாள். அவரது மருத்துவக் குறிப்பின்படி அவளுக்கு ஏற்பட்டிருப்பது அதீத பயம் மற்றும் மனச்சிதைவு. இதற்கான காரணங்களாக அவர் கருதுபவை:

1) விஜயலட்சுமி திருமணம் நடந்த நாளில் இருந்து ஒரு மாத காலம் பகலிரவு என பேதமில்லாமல் வன்புணர்ச்சிக்கு உள்ளாக்கப் பட்டிருக்கிறாள். அதனால் அவளது பால்உறுப்பு அழற்சி அடைந்திருக் கின்றது. அத்தோடு அவளது உடலில் பதினோரு இடங்களில் காயங்கள் ஏற்பட்டிருக்கின்றன. முன்பல்லில் ஒன்று பாதி உடை பட்டிருக்கிறது.

2) விஜயலட்சுமி கடந்த 11.7.2002 முதல் தொடர்ந்து நாற்பத்திரெண்டு நாட்கள் தூங்காமல் இருந்திருக்கிறாள். ஆரம்ப நாட்களில் அவள் படுக்கையில் கிடந்தபடியே உறக்கம் வராமல் புரண்டு படுத்திருக்கிறாள். அதன்பிறகு அவள் படுத்துக்கொள்வதேயில்லை. சுவர் ஓரமாகவே இரவு முழுவதும் நின்றுகொண்டேயிருந்திருக்கிறாள். யாராவது அவளை அழுத்தி உட்கார வைத்தால்கூட தானாக எழுந்து நின்று கொண்டுவிட்டிருக்கிறாள். இதற்காக அரசு பொது மருத்துவமனையில் மூன்று நாட்கள் சிகிச்சை அளிக்கப்பட்ட பிறகு அவள் எழுந்து நிற்பதில்லை. மாறாக கர்ப்பசிசுவைப் போல கைகால்களை ஒடுக்கிக்கொண்டு உட்கார்ந்திருந்திருக்கிறாள்.

*3) 2002ஆம் வருட ஆகஸ்டு மாதத்தில் ஒருமுறை அவளை திருவந்தியம் கோவிலுக்கு அழைத்துப் போயிருந்தபோது அவள் இடைவிடாமல் மூத்திரம் பெய்தபடியே இருந்திருக்கிறாள். அதனால் ஆத்திரமாகி அவளை அடித்ததில் இடது தொடையில் பெரிய காயம் ஏற்பட்டிருக்கிறது.*

*4) பி. விஜயலட்சுமி திருமணமாகி வந்த இரண்டு மாதங்களில் நாலைந்து முறை கணவனோடு சண்டையிட்டிருக்கிறாள். ஒவ்வொரு சண்டையின் முடிவிலும் அவளை கணவனோ அல்லது அவனது வீட்டு ஆட்களோ தாக்கியிருக்கிறார்கள். ஒருமுறை வீட்டில் உள்ள ஒரு ஆண் (யார் என்று தெரியவில்லை) தனது ஆண் உறுப்பை அவளது முகத்தில் தேய்த்திருக்கிறார். அன்று அவள் தற்கொலை செய்ய முயற்சி செய்து கண்டுபிடிக்கப்பட்டு சமையல் பொருட்கள் போட்டு வைக்கும் அறையில் மூன்று நாட்கள் அடைத்து வைக்கப் பட்டிருக்கிறாள்.*

*5) இரண்டு முறை அவளுக்கு கர்ப்பச்சிதைவு ஏற்பட்டிருக்கிறது. முதல் முறை திருமணமான நாற்பதாவது நாளும் இரண்டாவது முறை கரு வளர்ந்து 95 நாட்கள் ஆன பிறகும் ஏற்பட்டிருக்கிறது. அந்த நாட்களில் அவள் வீட்டில் இருந்தவர்கள் எல்லோரையும் கடுமையாகத் திட்டியிருக்கிறாள். சில நேரங்களில் அவள் அழுவது நாள்கணக்கில் நீடித்திருக்கிறது.*

*6) 2002ஆம் ஆண்டின் மே மாதத்தில் அவள் வேலைவாய்ப்பு அலுவலகத்தில் உள்ள தனது பதிவு எண்ணை நீட்டிப்பதற்காக சென்னை செல்ல வேண்டும் என்று சொல்லியிருக்கிறாள். அதை அனுமதிக்க மறுத்ததோடு அவள் தானே கிளம்பிப் போய்விடக்கூடும் என்று அவளது சான்றிதழ்கள் யாவையும் எரித்துவிட்டார்கள் என்றும், அன்றிரவு அவள் திரும்பவும் தற்கொலை செய்ய முயன்று காப்பாற்றப்பட்டு தயாளன் ஆர்எம்பி என்ற மருத்துவரிடம் சிகிச்சைக் குக் கொண்டுசெல்லப்பட்டிருக்கிறாள். அந்தச் சிகிச்சை முடிந்து வந்த சில வாரங்களுக்குப் பிறகு அவளது உடலில் ஆங்காங்கே காரணமில்லாமல் பருத்து வீங்கத் துவங்கியிருந்தது. இதற்கான சிகிச்சை அளிக்கப்படவேயில்லை.*

*7) தூக்கமின்மை, நடந்த விஷயங்களைத் திரும்பத் திரும்பச் சொல்வது, கற்பனையான பயம் மற்றும் தான் இறந்துபோய்விட்டதாக நம்புவது உள்ளிட்ட பல நோய்க்கூறுகள் அவளிடம் துல்லியமாக வெளிப்படுகின்றன.*

*உளவியல் மருத்துவரின் இந்த நோய்க்கூறுகள் பற்றிய அவதானிப்பு களைப் போல அவளது கணவன், மாமனார், மாமியார், சின்ன அத்தை மற்றும் அந்த வீட்டின் வேலைக்காரி ஆகியோர் அவதானித்த அவளது நோய் குறிப்புகள்:*

*1) விஜயலட்சுமிக்கு திருமணத்தின்போது இருபத்தைந்து வயது*

முடிந்திருக்கிறது. ஆனால் அதைப் பெண் வீட்டில் இருபது என்று பொய் சொல்லியிருக்கிறார்கள். இதை அவளது கணவன் வைகுந்த ராமன் சான்றிதழ்களில் இருந்து கண்டுபிடித்தான். அதைப் பற்றி விஜயலட்சுமியிடம் கேட்டபோது வைகுந்தராமனுக்குக்கூட முப்பத்தைந்து வயது முடிந்துவிட்டிருக்கிறது, ஆனால் பொய் சொல்லித் தானே கல்யாணம் செய்திருக்கிறான் என்று வீண்வாதம் செய்தாள். இதனால் அவளை வைகுந்தராமன் கண்டிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அன்றிரவு இந்த சண்டை காரணமாக அவள் உடலுறவு கொள்வதற்கு அனுமதி மறுக்கவே வைகுந்தராமன் அவளைக் கட்டிலில் இருந்து கீழே தள்ளி வன்புணர்ச்சி மேற்கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அப்போது அவள் பிடித்துத் தள்ளியதில் வைகுந்தராமனின் முந்நூறு ரூபாய் பெறுமானமுள்ள ஆல்வோ கடிகாரத்தின் கண்ணாடி உடைந்துபோனது குறிப்பிடத் தக்கது.

2) விஜயலட்சுமி வீட்டில் உள்ள யாருக்கும் தெரியாமல் தபாலில் எம்ஏ படிக்க முயன்றிருக்கிறாள். அப்படி அவளுக்கு வந்த பாடப் புத்தகங்களை அவள் ஒளித்து வைப்பதற்கு இடமில்லாமல் படுக்கையின் அடியில் வைத்திருந்ததைத் தற்செயலாக அவளது மாமனார் வரத ராஜப் பெருமாள் கண்டுபிடித்து விசாரித்தபோது அவள் 'படிப்பது தவறு ஒன்றும் இல்லையே' என்று வார்த்தைக்கு வார்த்தை எதிர்வாதம் செய்தபோது அவர் வேறு வழியில்லாமல் அவளது செவுளில் இரண்டு அடி தர வேண்டியதாகியது. அன்றிரவும் விஜயலட்சுமி வன்புணர்ச்சிக்கு உள்ளாகினாள். ஆனால் அவள் மற்ற நாட்களைப் போல இல்லாமல் ஆடைகளே இல்லாமல் வீட்டின் ஹாலுக்கு வந்து தனது மாமனார் முன் நின்றபடியே 'நீதானடா சொல்லிக் குடுக்குறே' என்று மரியாதையின்றி கத்தியிருக்கிறாள்.

3) விஜயலட்சுமியின் தம்பி விடுமுறைக்கு வந்த நாளில் அக்காவின் கட்டிலில் ஒரு மதியம் உறங்கிக்கொண்டிருந்ததைக் கண்டு வைகுந்த ராமன் அவனை அடித்து எழுப்பி விரட்டவே அந்தப் பிரச்சினையை விஜி பெரிதாக எடுத்துக்கொண்டு கத்தியிருக்கிறாள். அப்போது அவளை வைகுந்தராமன் அடிக்க முற்பட அதை விஜியின் தம்பி தடுத்திருக்கிறான். வேறு வழியில்லாமல் அந்தப் பையன் கழுத்தைப் பிடித்துத் தள்ளி இனிமேல் அவனோ, அவளது வீட்டு ஆட்களோ அவளைத் தேடி வரக் கூடாது என்று விரட்ட வேண்டிய நிலை ஏற்பட்டது.

4) விஜயலட்சுமிக்கு சினிமா பாட்டுகளைக் கேட்பதும் பாடுவதுமான பழக்கமிருந்திருக்கிறது. எப்போதும் ஏதாவது ஒரு சினிமா பாடலைப் பாடிக்கொண்டேயிருந்ததால் அதைத் தடுப்பதற்கு வேறு வழியில்லாமல் அவளது உதட்டில் சூடு போட வேண்டிய நிர்ப்பந்தம் வீட்டில் உள்ளவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது.

5) விஜயலட்சுமி கணவனையும் மற்றவர்களையும் சிறைக்கு அனுப்ப திட்டம் போட்டு தற்கொலை செய்துகொள்ள முயன்றபோது அதைத்

தடுத்து அவளைப் பொது மருத்துவமனையில் சேர்த்து மின்சார சிகிச்சை கொடுக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. அந்த வகையில் செலவு மட்டும் பனிரெண்டாயிரம் ஆனது. அதை மாமனார் வீட்டில் வைகுந்தராமன் பெருந்தன்மையாகக் கேட்கவேயில்லை.

6) கணவரை உடல் உறவில் திருப்திப்படுத்த முடியாத தன்மையும், வீட்டில் வேலைகள் செய்யாமல் கற்பனையில் மூழ்கிக் கிடப்பதும், புத்தகம் படிப்பதும் அவளது முக்கிய நோய்க்குறிகள்.

**பி. விஜயலட்சுமியின் வாழ்வில் நடந்த சில சம்பவங்கள்:**

2002ஆம் வருடம் மார்ச் மாதம் 8ஆம் தேதி செய்துங்கநல்லூர் பெத்தையா – செல்லம்மாள் தம்பதியின் குமாரத்தியான பி. விஜய லட்சுமி என்ற விஜயாள் பி.ஏ.விற்கும், சங்கரன்கோவில் பூவிளங்கும் பெருமாள் பேரனும் வரதராஜப் பெருமாளின் சிரேஷ்ட பையனும் கூட்டுறவு வங்கியில் உதவி மேலாளராகப் பணிபுரியும் வைகுந்தராமன் பிகாம்., டிகோப். அவர்களுக்கும் சுந்தரேஸ்வரர் திருமண மண்டபத்தில் காலை 9 முதல் 10.30 வரையான முகூர்த்தத் தில் திருமணம் நடைபெற்றது. அந்த விழாவில் வைகுந்தராமனின் நண்பர்கள் நூற்றுக்கும் மேற்பட்டவர்களும் விஜயலட்சுமியோடு படித்த கண்மணி, விமலா என்ற இருவர் மட்டும் கலந்துகொண்டு சிறப்பித்தது குறிப்பிடத் தக்கது. விஜயலட்சுமியின் திருமணத்திற்காக நாற்பது பவுன் நகையும் 50 ஆயிரம் ரொக்கப் பணமும் ஒரு யமஹா பைக்கும் வாங்கித் தருவது என்று நிச்சயிக்கப்பட்டிருந்த வண்ணம் யாவும் இனிதாக நிறைவேற்றி வைக்கப்பட்டது. விருந்தில் விஜயலட்சுமி இன்னொரு அப்பளம் கேட்டபோது வைகுந்தராமன் ‘ஏண்டி சாப்பாட்டுக்கு அலையுறே’ என்றதும் அவனது குடும்பமே சிரித்தது.

திருமண நாளின் மதியத்தில் விஜயலட்சுமியும் வைகுந்தராமனும் புதுத் தலையணை, போர்வை சகிதமாக ஒரு அறையில் தங்க வைக்கப்பட்டபோது வைகுந்தராமன் அவளிடம் தான் பத்து நாட்களாக ஜிம்மிற்குப் போய் உடம்பைத் தயார் செய்து வைத்திருப்ப தாகவும் அதனால் இன்றிரவு அவள் பல முறை உடல்உறவுக்குத் தயாராக இருக்க வேண்டும் என்றும் கூறினான். அவள் பதிலே சொல்லவில்லை.

இரவு அவள் படுக்கைக்குச் சென்றபோது அவளது வலது கையை முறுக்கியபடியே அவன் ஒரே கடியில் முழு ஆப்பிள் ஒன்றைத் தின்றபோது அவளுக்கு பயமாக இருந்தது. அவளின் விருப்பம் கூடுவதற்குள் அவன் தனது செயலை முடித்துவிட்டு தட்டில் வைத்திருந்த பழங்கள் யாவையும் தின்று தீர்க்கத் துவங்கினான். அவள் எழுந்து மூத்திரம் பெய்துவிட்டு வர விரும்பினாள். அதற்கு கதவைத் திறந்து வெளியே போக வேண்டும். உள்ளே வருவதற்குள் போய்விட்டு வந்திருந்தால் என்ன என்று அவன் கத்தினான். அவள் சுருண்டு படுத்துக்கொண்டாள். விடிந்து எழுந்தபோது அவளது

உடலில் நாலைந்து சிறு காயங்களிருந்தன. அதைவிடவும் அவன் பாதி கடித்துப் போட்டிருந்த ஆப்பிள் சதைகள் ஆங்காங்கே கிடந்ததைக் காணும்போது அருவருப்பாக இருந்தது. அவள் தூக்கக் கலக்கத்தோடு அவசரமாக மூத்திரம் பெய்வதற்காக வெளியே சென்றாள்.

திருமணமான பத்து நாட்களுக்குப் பிறகு அவர்கள் வைகுந்தராமனின் பாட்டி ஊருக்குச் சென்றிருந்தார்கள். அந்த வீடு மிகச் சிறியது. உள்ளே ஒரு நார்க் கட்டில் போட்டிருந்தார்கள். அதில் இருவர் படுக்க முடியாது. ஆனாலும் அவனது கட்டாயத்தால் அவள் அதில் ஒட்டிக்கொண்டு படுக்க வேண்டியதாகியது. இரவில் அவனது ஆத்திரத்தால் அவளது கால்முட்டியில் கட்டில் குத்தி ரத்தம் கொட்டியது. இந்த கிராமத்தில் எந்த டாக்டரைப் பார்ப்பது என்று அவன் திட்டியதோடு அப்படியே விட்டுவிட்டான் அங்கிருந்த மூன்று நாட்களும் அவளால் வலது காலை அசைக்கவே முடியவில்லை. ஊருக்கு வந்ததுமே அவளுக்கு காய்ச்சல் வந்துவிட்டது. அவன் ஆத்திரத்தில் அவள் காய்ச்சலைப் பற்றிப் பொருட்படுத்தாமல் அவளோடு உறவு கொண்டான். மறுநாள் அவள் மருத்துவரிடம் காட்டியபோது அவர் உடனே மருத்துவமனையில் அனுமதிக்கும் படியாகச் சொன்னார். வைகுந்தராமன் அவளை மருத்துவமனையில் அனுமதித்துவிட்டு ஊருக்கு போன் செய்து அவளது அப்பாவை வரச் சொல்லிவிட்டு தனக்கு அலுவலக வேலை இருப்பதாக சென்னைக்குக் கிளம்பிச் சென்றான்

வீட்டுப் பிரச்சினைகளில் இருந்து மனதை திசைதிருப்புவதற்காக விஜயலட்சுமி வாடகை நூலகம் ஒன்றில் உறுப்பினராகச் சேர்ந்தாள். அங்கே உள்ள புத்தகத்திலே மிக அதிகமான பக்கங்கள் கொண்ட ஏதாவது ஒரு புத்தகத்தை வீட்டிற்கு எடுத்து வந்து வாரக்கணக்கில் படித்துக்கொண்டிருப்பாள். அப்படி ஒரு நாள் அவள் 'யாருக்காக மணி ஒலிக்கிறது' என்ற புத்தகத்தை எடுத்து வந்து வாசித்துக் கொண்டிருந்தபோது வீட்டுப் பெண்களைப் போல அவள் வேலைகள் செய்யாமல் எதற்கு படித்துக்கொண்டேயிருக்கிறாள் என்று ஆத்திரமாகக் கத்திய வைகுந்தராமன் உடனடியாக அந்த நாவலைப் பிடுங்கி கிழித்து அடுப்பில் போட்டபோது அவள் வேண்டும் என்றே தனது தலையை சுவரில் பலம் கொண்ட மட்டும் முட்டிக்கொண்டாள். ஆனால் அப்போதும் அவளது மண்டை உடையவேயில்லை. அத்தோடு அவளது ஆத்திரமும் தீரவில்லை.

ஒரு நாள் மதியம் சாப்பாடு போடும்போது தட்டில் ஒரு தலைமயிர் ஒட்டிக்கொண்டிருந்ததைக் காரணம் காட்டி விஜயலட்சுமியின்

மாமனார் வரதராஜப் பெருமாள் அன்றிலிருந்து அவள் தரையில் போட்டு சாப்பிட வேண்டும் என்று கத்தினார். அதை வைகுந்த ராமனும் ஆமோதித்ததோடு அப்போதே அவள் தரையில் போட்டு சாப்பிட வேண்டும் என்றான். அன்றிலிருந்து விஜயலட்சுமி தானாகவே தரையில் சாப்பிடத் துவங்கினாள். அதைப் பின்நாட்களில் ஒருவரும் தடுக்கவேயில்லை.

வைகுந்தராமன் அலுவலகத்திலிருந்து வரும்வரை இரவில் அவள் படுக்கையில் சும்மா உட்கார்ந்துகொண்டு ஸ்ரீராமஜெயம் எழுதிக் கொண்டிருக்கிறாள் என்பதால் தேவையற்ற மின்சாரச் செலவு ஏற்படுகிறது என்று மின்விளக்குகளை அணைக்கச் சொல்லி சண்டை யிட்ட பிறகு அவள் தனது அறையில் எப்போதுமே விளக்கு போடாமல் இருட்டிலே இருக்க பழகத் துவங்கினாள். இந்தப் பழக்கம் பகலிலும் நீண்டுவிடவே அவளாக வீட்டு ஜன்னல்களை ஆணி வைத்து அடித்து ஒருபோதும் திறக்க முடியாதபடி மூடி விட்டாள்.

துணி துவைக்கும் சோப்பு மற்றும் அவளுக்கான எண்ணெய், பவுடர், சீப்பு போன்றவற்றை அவர்கள் தங்களது அலமாரியில் வைத்துப் பூட்டிக்கொண்ட நாளில் இருந்து அவள் ஒரே உடையில் நாள்கணக்கில் இருக்கவும் குளிப்பதற்கு மறுக்கவும் துவங்கினாள்.

ஒவ்வொரு முறை கர்ப்பம் கூடி கலைந்தபோதும் அவள் தனது பிறக்காத குழந்தைக்கு ஒரு பெயரிட்டு அதை தான் வளர்ப்பது போன்று கற்பனையாகச் செயல்படத் துவங்கினாள். இதற்காகவே அவள் அடி வாங்கியதும் சில முறை நடந்தேறியிருக்கிறது.

**வைத்தியசாலையில் சில தினங்கள்:**

விஜயலட்சுமி வைத்தியசாலைக்கு வந்த நாலு வாரங்கள் யாரோடும் பேசவேயில்லை. ஒரு இரவு அவள் தனது அறையினுள் வந்துவிட்ட தவளை ஒன்றை இரவு முழுவதும் அருகில் உட்கார்ந்து பார்த்துக் கொண்டேயிருந்தாள். தவளை கண்ணை மூடுவதையும் திறப்பதையும் காண்பது வசீகரமாக இருந்தது. விடிகாலையில் அந்தத் தவளை அறையை விட்டு படியில் தாவிக் குதித்தது. அப்போது அவளும் படிக்கு வந்து நின்றாள். தவளை இன்னொரு குதி குதித்து செடிக்குள் மறைந்தபோது அவள் சந்தோஷத்துடன் கைதட்டினாள்.

ஒரு நாளிரவு அறையின் ஜன்னல் வழியாக நிலா வெளிச்சம் தரையில் ஊர்ந்துகொண்டிருந்தது. விஜயலட்சுமி தனது கைகளை அந்த வெளிச்சத்தில் காட்டினாள். நிலா வெளிச்சம் கைகளில்

ஊர்ந்து போகத் துவங்கியது. நிலா அறையில் நகர நகர அவளும் தன் கைகளை நீட்டிக்கொண்டேயிருந்தாள். அன்று இரவு அவள் உடலில் நடுக்கம் அதிகமானது.

ஒரேயொரு முறை அவள் எண்ணெய்க் குளியல் செய்வதற்காக அழைத்துப் போகப்பட்டபோது வழியில் கிடந்த சிவப்புத் துணியைக் காட்டி 'இது பாம்பில்லை, துணி' என்ற ஒரேயொரு வார்த்தை பேசினாள். அதன்பிறகு பல வாரங்கள் பேசவேயில்லை.

பலா மரத்தில் ஒரு நாளைக்கு எத்தனை எறும்புகள் ஏறுகின்றன, எத்தனை எறும்புகள் இறங்குகின்றன என்று பகல் முழுவதும் எண்ணிக் கொண்டேயிருந்தாள். ஏறிய எறும்புகளில் பத்துக்கும் மேற்பட்டவை கீழே இறங்கவேயில்லை என்பது அவளுக்கு வருத்தம் தருவதாக இருந்தது.

கூட்டுப் பிரார்த்தனைக்காக அழைத்துப் போகப்பட்டபோது அவள் மனம் உருகி, தான் ஒரு கொசுவாக மாறிவிட்டால் மற்றவர்களின் ரத்தத்தை உறிஞ்சி வாழலாம் என்று பிரார்த்தனை செய்தாள்.

இருளிலிருந்து வெளிச்சத்திற்கும், மௌனத்திலிருந்து பேச்சிற்கும் அவள் நகர்ந்து வருவதற்கு ஆறு மாதங்களுக்கும் மேலானது. ஆனாலும் அவளது உடலில் உள்ள தழும்புகளைக் கண்ணாடியில் கண்டதும் அவள் முகம் வெளிறி ஒடுங்கிப்போவதை ராஜ வைத்தியத்தாலும் குணப்படுத்த முடியவேயில்லை.

**பின்குறிப்பு:** 21.12.2003 மதியம் இரண்டு மணிக்கு ஆனங்குளத்தில் உள்ள வைத்தியசாலைக்கு வந்து சேர்ந்த ஐம்பது வயதைத் தாண்டிய நபர் நரைத்த தலைமயிரும் கவலை தோய்ந்த முகமும் கொண்டிருந் தார். அவரது கண்களில் துக்கம் படிந்திருந்தது. நடுங்கும் குரலில் தான் விஜயலட்சுமியின் தகப்பன் என்றும், தங்களிடம் விஜயலட்சுமி படிப்பதற்காக சென்னைக்கு அனுப்பி வைக்கப்பட்டிருப்பதாக வைகுந்த ராமன் சொல்லி ஏமாற்றிவிட்டான் என்றும், அவளை தான் ஒரு முறையாவது பார்க்க வேண்டும் என்றும் சொன்னார். வைத்தியசாலை ஆட்கள் அதற்கு அனுமதி தர மறுத்துவிட்டார்கள். அந்த வயசாளி தன்னை மீறி அழுதபடியே 'என் பொண்ணுய்யா' என்று கத்தினார். வழியில்லாமல் ஒரு முறை அவளைப் பார்ப்பதற்கு அனுமதித்தார்கள். அவர் பார்த்தபோது சிறிய பச்சைநிற அங்கி அணிந்தபடியே அவள் படியில் உட்கார்ந்திருந்தாள். அவளது தலைமயிர் கொட்டிப் போயிருந் தது. அவள் தன் அப்பாவைப் பார்த்ததும் பலவீனமான குரலில் 'நீயும் இங்கே வந்துட்டயாப்பா' என்று கேட்டாள். அவர் பதில்

சொல்ல முடியாமல் கதறி அழுதார். அன்றிரவு வைத்திய சாலையில் இருந்த பணிப்பெண்ணிற்குப் பணம் கொடுத்து யாரும் அறியாமல் தன் பெண்ணை அவர் அங்கிருந்து கூட்டிப் போய் விட்டார் என்றும் ஒருவேளை அவர்கள் ஆந்திராவில் உள்ள மதன பள்ளியிலோ, கர்நாடகாவில் உள்ள கொல்லூரிலோ, மஹாராஷ்டி ராவில் உள்ள சீரடியிலோ காணக்கூடும் என்றும் சொல்கிறார்கள். உங்கள் பயணங் களில் தலைமயிர் கழிந்த, வெறித்த பார்வை கொண்ட ஒரு பெண்ணை யும் அப்பாவையும் நீங்கள் சந்திக்கக்கூடுமாயின் தயவுசெய்து அவர் களைக் கடந்து போய்விடுங்கள். அவர்கள் யாவரிட மிருந்தும் விலகி இருக்க விரும்புகிறார்கள். அல்லது சாவைத் தேடி நடந்து கொண்டிருக்கிறார்கள். ஆகவே அவர்கள் நமது நற்குடும்பத்தின் சந்தோஷ வாழ்வை எவ்விதத்திலும் தொல்லை செய்ய மாட்டார்கள். அவர்கள் போகட்டும், விட்டுவிடுங்கள்.

# சேர்ந்திசைப்பவர்கள்

சென்ற ஞாயிற்றுக்கிழமை ஆங்கில நாளிதழ் ஒன்றில் இணைப்பாகத் தரப்பட்ட இலக்கியப் பக்கங்களில் குறிப்பிட்டிருந்த சப்தபாலை என்ற இசை நிகழ்ச்சியைப் பற்றித் தெரிந்துகொள்வதற்கு காரணமாக யிருந்தது எக்மோர் புனித மாதா தேவாலயத்தின் வயலின் இசைக் குழுவின் நிகழ்ச்சிகள் சிலவற்றைக் கேட்டிருக்கிறேன் என்பதுதான். மாலை ஆறரை மணிக்கு ம்யூசியத்தின் உள்அரங்கு ஒன்றில் நடை பெறுவதாகயிருந்த அந்த நிகழ்ச்சியைப் பற்றி நான்கு வரிகள் மட்டுமே அதில் வெளியாகி யிருந்தது. யார் அதை நடத்துகிறார்கள் என்றோ, அது என்ன வகையான இசை நிகழ்ச்சி என்றோ அறிந்துகொள்ள முடியவில்லை.

அந்த இசைக்குழுவைப் பற்றிய செய்தியை வாசித்த பிறகு அதை எப்படியாவது கேட்க வேண்டும் என்ற ஆசை அதிகமானது. எனது அலுவலகப் பணி சற்றே வியப்பானது. ஒரு ஜெர்மனி நிறுவனமொன்றின் இந்திய அலுவலகப் பிரிவில் நான் பணியாற்று கிறேன். இந்த பீடிகை அந்த நிறுவனத்தைப் பற்றிய பெரிய மனப் படிமத்தை உங்களிடம் உருவாக்கிவிடக்கூடும். அதற்குள் அதைப் பற்றி மற்ற விபரங்களைச் சொல்லிவிடுகிறேன். அந்த நிறுவனம் இரண்டாம் உலக யுத்த காலத்தில் காகிதப் பற்றாக்குறை உண்டாகும் போது காகிதம் தயாரிக்கும் சிறிய இயந்திரங்களை உற்பத்தி செய்தது. அந்த காகித இயந்திரங்களில் பதினாறு இன்னமும் நல்ல முறையில் இயங்கிக்கொண்டிருக்கிறது. இந்த பதினாறு இயந்திரங்களைப் பராமரிப்பதற்காக நாங்கள் எண்பத்தியாறு நபர்கள் இந்தியாவின் பல்வேறு மாநிலங்களில் வேலை செய்துகொண்டிருக்கிறோம். சூரத்தில்தான் நானும் வேலைக்குச் சேர்ந்தேன்.

அங்கிருந்து பன்னிரண்டு வருடங்களுக்கு முன்பாக சென்னைக்கு மாற்றலாகியிருந்தேன். எனது அலுவலகம் நெடுங்காடி வங்கிக் கட்டிடம் ஒன்றின் பின்பக்கமிருக்கிறது. அதற்கு இப்போதும் ஜெர்மனில் தான் பெயர்ப்பலகையிருக்கிறது. எனது அலுவலகத்தில் நாங்கள் மூன்று பேர் மட்டுமே வேலை செய்கிறோம். ஆனால் நாங்கள் ஒருவருக்கொருவர் அலுவலக விஷயங்கள் தவிர்த்து வேறு எதையும்

பேசிக்கொள்வதில்லை. எங்களது வாடிக்கையாளர்கள் இயந்திரப் பழுது காரணமாக அழைக்கும் நேரங்களைத் தவிர மற்ற நாட்களில் நாங்கள் அறுபதாண்டு முந்தைய அலுவலகத்தின் கணக்கு வழக்கு களைப் பார்த்துக்கொண்டிருப்போம். அந்த கம்பெனியின் கணக்குகள் இன்றும் முழுமையாகக் கணக்கிட்டு முடியவில்லை என்பதால் அதை இன்றும் வேலையின் பகுதியாகச் செய்துகொண்டிருக்கிறோம்.

மாலையில் நடைபெறும் இசை நிகழ்ச்சிக்குச் செல்வதென முடிவு செய்துவிட்டு சப்தபாலை என்ற சொல்லை மனதிற்குள்ளாக உச்சரித்துக்கொண்டேயிருந்தேன். ம்யூசியத்திற்கு நான் பேருந்தில் சென்று இறங்கியபோது வாசலில் இரண்டு பெண்கள் இனிமையாகப் பேசியபடி நடந்து சென்றார்கள். அவர்களின் இடுப்பிலிருந்து வெல்வெட் நாடா ஒன்று தனியே தொங்கிக்கொண்டிருந்தது வேடிக்கை யாகயிருந்தது. இதுபோன்ற இசை நிகழ்ச்சிகளுக்கு இளம் பெண்கள் அதிகம் வருவார்கள் என்று ஏனோ தோணியது. நான் ம்யூசியத்தின் உள்ளே நடந்தபோது மரங்களில் இருந்த உதிர்ந்த இலைகள் நிரம்பியிருந்தன.

ம்யூசியத்தில் உள்ள மரங்களுக்கும் அதிக வயதான தோற்றம் உண்டாகிவிடுகிறது. படியொன்றில் அருகிலிருந்த இரும்பு பீரங்கியின் மீது கையை ஊன்றியபடி இரண்டு இளைஞர்கள் பேசிக்கொண்டிருந் தார்கள். நான் உள்அரங்கினைத் தேடி ம்யூசியத்தின் பின்வாசல் வழியாக நடந்துகொண்டிருந்தேன். ம்யூசியக் கட்டிடத்தின் பின் பக்கத்தைக் காணும்போது அது மருத்துவமனையின் பின்பக்கத்தை நினைவுபடுத்துவதாகயிருந்தது. கிழிந்து கிடந்த துணிகளும் காகிதமும் பாலீதின் காகிதங்களும் காபி கப்புகளும் நிரம்பியிருந்தன. பெரிய கற்தூண் அருகில் தலை மட்டுமில்லாத சிற்பமொன்றிருந்தது. நான் அதை ஒரு நிமிடம் நின்று பார்த்துக்கொண்டேயிருந்தேன். என்னைக் கடந்தபடி கைகோர்த்து வந்த இளஞ் சோடிகளின் சிரிப்பு என்னை அந்த இடத்திலிருந்து அப்புறப்படுத்தியது. அந்தப் பெண்ணும் மிக இறுக்கமான உடையணிந்திருந்தாள். பையனின் தலைமயிர் செம்பட்டை நிறத்திலிருந்தது. அவள் விட்டு விட்டுச் சிரித்தபடி நடந்துகொண்டிருந்தாள்.

ம்யூசியத்தின் உள்அரங்க வாசலுக்கு வந்தபோது அதன் மரக் கதவுகள் பூட்டியிருந்தன. இங்கேதான் நிகழ்ச்சி நடப்பதாகயிருந்ததே என்று சட்டைப் பையில் மடித்து வைத்திருந்த விளம்பரத்தை எடுத்துப் பார்த்தேன். அதில் ம்யூசியத்தின் உள் அரங்கு என்றுதான் போட்டிருந்தது. மணியைப் பார்த்தேன். ஆறு மணியைத் தாண்டி யிருந்தது. ஒருவேளை தாமதமாக நடைபெறக்கூடுமோ என்று யாருமில்லாத மரப்படிகளில் அமர்ந்துகொண்டு எதிரேயிருந்த மரத்தைப் பார்த்துக்கொண்டிருந்தேன். அந்த மரத்தின் அடியில் சாய்ந்து கிடந்த சைக்கிள்கூட ஒரு சிற்பத்தை நினைவுபடுத்துவது போலதானிருந்தது.

மரப்படிகளில் தூசி நிரம்பியிருந்தது. உள்அரங்கத்தில் நிகழ்ச்சிகள் அதிகம் நடைபெறுவதில்லை போலும். புறா விம்முவது போன்ற குரல் மட்டும் எங்கிருந்தோ கேட்டுக்கொண்டிருந்தது. செவ்வக வடிவத்திலிருந்த அரங்கமது. எழுந்து நான் மரக்கதவின் சாவித்துவாரம் வழியாக உள்ளே என்ன இருக்கிறது என்று எட்டிப் பார்த்தேன். உள்ளே மரப்பெஞ்சுகளும் திரைச்சீலையிடப்பட்ட மேடையும் தெரிந்தது. உள்ளே வெளிச்சமேயில்லை. தவறான விளம்பரமா, இல்லை நிகழ்ச்சி ஒத்திவைக்கப்பட்டுவிட்டதா என்று குழப்பமாக யிருந்தது. அரங்கினைச் சுற்றிலும் நடந்தேன். மேடைக்குச் செல்லும் சிறிய மரக்கதவு திறந்து கிடந்தது. வாசலில் மின்சார கேபிள் ஒன்று பெரிதாகக் கிடந்தது. அருகில் விரல்ரேகை பதிந்து போன ஒரு சோடி பாத்ரூம் ஸ்லிப்பர் செருப்புகள் கிடந்தன. நான் அந்தக் கதவின் வழியாக உள்ளே நுழைந்தேன். படுதாக்களும் அதை ஏற்றி இறக்குவதற்காகப் பெரிய கயிறுகளும் தொங்கிக்கொண்டிருந்த இடத்தருகே வந்து நின்றேன்.

அரங்க மேடையில் தொங்கும் திரை பழுப்பேறிப்போயிருந்தது. திரையை விலக்கிப் பார்த்தபோது அரங்கில் பார்வையாளர்கள் அமரும் இடம் முழுவதும் காலியாகத் தெரிந்தது. மேடைக்கு வந்துவிட்ட கூச்சத்தில் எனக்கு நானே வெட்கப்பட்டுக்கொண்ட வனைப் போல பாவனையாக உடலை வளைத்துக்கொண்டு காலி யிருக்கைகளைப் பார்த்துக்கொண்டிருந்தேன். வராந்தாவில் யாரோ வருவது போன்ற சப்தம் கேட்டது. அவசரமாகப் பின்வாசல் கதவு வழியாக வெளியே வந்தபோது அந்தச் செருப்புகளைக் காண வில்லை. நான் முன்வாசலில் ஏதாவது அறிவிப்பு வைத்திருக்கிறார்களா என்பதற்காக மரங்களின் ஊடாக நடந்து வெளியே வந்தேன். கேலரியின் படிக்கட்டுகளில் உட்கார்ந்திருந்தவர்களைத் தவிர வேறு எவரையும் காணவில்லை.

யாரிடமாவது கேட்கலாமா என்று தோணியது. வீட்டில் செய்வதற்கு என்னயிருக்கிறது, இங்கேயே காத்திருக்கலாம் எனத் திரும்பவும் உள்அரங்கிற்கு வந்து அதே இடத்தில் உட்கார்ந்துகொண்டேன். இப்போது அதே செருப்புகள் ஈரமடைந்து கிடந்தன. யாரோ என்னைத் தவிரவும் அங்கேயிருக்கிறார்கள் என்பதை அது உறுதிப் படுத்தியது. இருட்டில் யாவும் மூழ்கத் துவங்கியிருந்தன. ஒரு ஊற்றைப் போல இருள் கொப்பளித்துக்கொண்டிருந்தது. அந்தப் பகுதியிலே யாரும் நடமாட்டமேயில்லை. ஏன் இந்த இசை நிகழ்ச்சி நடைபெற வில்லை. என்ன நடந்திருக்கும். ஒருவேளை ஏதாவது தேசத்தலைவர்கள் இறந்துவிட்டார்களா. இல்லை திட்டமிட்டபடி நகருக்கு இசைக்குழு வந்து சேர முடியவில்லையா. இல்லை நிகழ்ச்சியின் தேதி தவறாக விளம்பரத்தில் அச்சடிக்கப்பட்டுவிட்டதா. அதுவுமில்லை யென்றால் இதே நகரில் வேறு ம்யூசியமிருக்கிறதா. என்ன காரணமாக யிருக்கும் என யோசிக்க யோசிக்க சாத்தியங்கள் பெருகிக் கொண்டிருந்தன.

திடீரென தோணியது. ஒருவேளை இதுபோன்ற விளம்பரம் கொடுத்துவிட்டு யாராவது வருவார்களா என்று பரிசோதனை செய்து பார்க்கிறார்களா. அல்லது இது ஏதாவது தடைசெய்யப்பட்ட இசை நிகழ்ச்சியா இருக்குமா என்று சற்றே பயம் உருவானது. யாரிடமும் இதைப் பற்றி விசாரிக்காமல் வெளியேறிப் போய்விட வேண்டும் என்று தோணியது. நான் வீட்டிற்கு வந்து சேர்ந்த போது அனைவரும் உறங்கச் சென்றிருந்தார்கள். நான் மேஜையில் உட்கார்ந்துகொண்டு அந்த பத்திரிக்கை விளம்பரத்தைக் கையில் வைத்தபடி யோசித்துக்கொண்டிருந்தேன். சப்தபாலை என்றால் என்ன? ஒரு இசைக்குழுவா? ஏன் இப்படியொரு விளம்பரம் தந்து விட்டு நிகழ்ச்சியை நடத்தாமல் விட்டுவிட்டார்கள் என்று குழப்பம் அதிகமாகிக்கொண்டிருந்தது. அன்றிரவு நானாக அந்தக் குழுவினரின் இசை நிகழ்ச்சி எப்படியிருந்திருக்கும் என்பதைப் பற்றிக் கற்பனை செய்துகொண்டபடி படுக்கையில் புரண்டுகொண்டிருந்தேன்.

அது நடந்து இரண்டு நாட்களின் பின்பாக ஒரு மதியநேரத்தில் ஆங்கில தினசரிக்கு போன் செய்து அந்த விளம்பரத்தில் குறிப்பிட்ட நிகழ்ச்சி ஏன் நடைபெறவில்லை என்று விசாரித்தேன். இது பற்றிய விபரங்களைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்றால் ஆனி தாமஸ் என்ற விளம்பரப் பிரிவு பெண்ணை நேரில் சந்தியுங்கள் என்று சொன்னார்கள். மதியமே ஆனி தாமஸைப் பார்ப்பதற்காகச் சென்றேன்.

நாற்பத்தைந்து கடந்த பெண்ணாகயிருந்தாள். அவளது மேஜையின் முன்பாக இருந்த மிகப் பெரிய பேரேடு போன்ற நோட்டை அதன் முன் நான் பார்த்தேயில்லை. அதில் எப்படி எழுதுவார்கள், படுத்துக் கொண்டா என்று தோன்றியது. அவளிடம் என் வருகையைக் கண்டுகொண்டது போலவே அடையாளமேயில்லை. தொண்டையை லேசாகச் செருமியபோது அவள் நிமிர்ந்து பார்த்துவிட்டு தன் கையிலிருந்த பென்சிலை என் முன்பாக நீட்டி என்ன வேண்டும் என்று கேட்டாள். நான் கையில் கொண்டுபோயிருந்த விளம்பரத்தைக் காட்டி அந்த நிகழ்ச்சி ஏன் ரத்தானது என்று விசாரிக்க வந்திருப்பதாகச் சொன்னேன். அவள் அந்த விளம்பரத்தைக் கையில் வாங்கிப் பார்த்து விட்டு அதன் வலதுபக்க ஓரத்தில் பதிவாகியிருந்த 312 என்ற எண்ணை உச்சரித்தபடியே இது சேரிட்டி நிறுவனங்களுக்காக நாங்கள் வெளியிடும் இலவச விளம்பரம், நீங்கள் அதற்குரிய சேரிட்டியை அணுகி விசாரித்தால்தான் காரணம் தெரியக்கூடும் என்றாள்.

அந்த நிறுவனத்தின் முகவரியைக் கேட்டபோது அதைத் தாங்கள் தர இயலாது. நான் அந்த நிகழ்ச்சிக்கு டிக்கெட் வாங்கியிருக்கிறேனா என்று கேட்டாள். இல்லை, அது ஒரு இலவச நிகழ்ச்சிதான் என்று சொன்னேன். பிறகு எதற்காக இப்படி நேரத்தைச் செலவழித்துந் கொண்டு வந்திருக்கிறேன் என்பது போல நிமிர்ந்து பார்த்தாள். உண்மையில் அது எதனால் ரத்து செய்யப்பட்டது என்று எப்படி

தெரிந்துகொள்வது என்று புரியவில்லை. செய்வதறியாமல் அவள் முன்பாக உட்கார்ந்திருந்தேன். அவள் ஏதோ யோசனைக்குப் பிறகு சொன்னாள்.

நீ நுங்கம்பாக்கம் ஏரித் தெருவில் உள்ள தேசிய நாளிதழ் காப்பகத்தைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாயா, அங்கே சென்று இந்த விளம்பரத்தைக் கொடுத்து விசாரித்துப் பார்த்தால் உனக்கு ஏதாவது தகவல் கிடைக்கக் கூடும் என்றாள்

அன்றிரவு வீடு திரும்பியபோது தோணியது. ஏன் நகரில் இன்னொரு ம்யூசியம் இருந்திருக்கக் கூடாது. அதைப் பற்றி எப்படி விசாரிப்பது. உடனே தொலைபேசி மையத்திற்கு போன் செய்து நகரில் உள்ள ம்யூசியத்தின் தொலைபேசி எண் தேவை என்று விசாரித்தேன். ஒரு பெண்குரல் வரிசையாக எண்களைச் சொல்லத் துவங்கியது.

நகரில் பத்திற்கும் மேற்பட்ட ம்யூசியங்கள் இருக்கின்றன என்று அப்போதுதான் தெரிந்துகொண்டேன். மறுநாள் அலுவலகம் சென்றதும் மிகுந்த கூச்சத்தோடு ஒவ்வொரு தொலைபேசி எண்ணாகத் தொடர்பு கொண்டு அங்கே உள்அரங்கம் ஏதாவது இருக்கிறதா என்று விசாரித் தேன். நகரில் வேறு எங்கும் உள்அரங்கமேயில்லை என்று உறுதிபடுத்திக் கொண்டேன். பதட்டமாகவும் குழப்பமாகவுமிருந்தது. ஆனி தாமஸ் சொன்ன காப்பகத்திற்கு ஏன் நேரில் சென்று பார்க்கக் கூடாது என்று தோணியது. உடனே அலுவலகத்தில் உடல்நலமில்லை என்று காகிதத்தில் எழுதிவைத்துவிட்டு தேசிய நாளிதழ் காப்பகத்திற்குச் சென்றேன்.

அங்கே நாளிதழ்கள் பெரிய பைண்ட் வால்யூம்களாகத் தைத்து வைக்கப்பட்டிருந்தன. எந்த வருடத்து இதழ்கள் தேவை என்று விசாரித்த வயதானவரிடம் கையிலிருந்த விளம்பரத்தைக் காட்டி இதுபோன்ற விளம்பரம் எப்போதாவது வந்திருக்கிறதா என்று கேட்டேன். அவர் பச்சை நிற லெதர் பைண்டிங் செய்யப்பட்டிருந்த அகலமான இதழ்க்கட்டு ஒன்றைக் கொண்டு வந்துகொடுத்துவிட்டு கடந்து போய்விட்டார்.

அந்தக் கட்டில் 1952லிருந்து 1998 வரையான விளம்பரப் பக்கங்கள் தனியே வெட்டி தொகுக்கப்பட்டிருந்தன. அதைப் புரட்டும்போது அயர்ச்சியாகவும் இத்தனை நிகழ்ச்சிகள் நகரில் நடந்து முடிந்திருக்கிறதா என்று அலுப்பாகவுமிருந்தது. பக்கங்களை முன்பின்னாகப் புரட்டிக் கொண்டு மட்டுமிருந்துவிட்டு யோசனையிலே இருந்தேன். தலை வலிக்கத் துவங்கியது. விரல் தொடும் பக்கம் ஒன்றைப் பிரித்து வாசித்தபோது காங்கோவிலிருந்து வந்த நடனக் குழுவின் நடனநிகழ்ச்சி பற்றி பெரிய விளம்பரமிருந்தது. அதன் அருகில் சிறியதாக என் கையிலிருக்கும் அதே விளம்பரம் வார்த்தை பிசகாமல் அப்படியே வெளியாகியிருந்தது. இதழ்க்கட்டை முகத்திற்கு அருகாமையில் வைத்துக்கொண்டு அந்த வாசகங்களை நெருக்கமாகப் பார்த்தேன்.

அதே சப்தபாலை என்ற இசை நிகழ்ச்சி பற்றியதுதான் அது.

அப்படியானால் இந்த நிகழ்ச்சி பல காலமாக நடந்து கொண்டு தானிருக்கிறதா. அப்படியானால் அந்த நிகழ்ச்சியைப் பார்த்த சிலர் இருக்கக்கூடுமல்லவா. அந்த இதழ்க்கட்டு முழுவதும் பார்த்த போது வெவ்வேறு காலங்களில் அதே விளம்பரம் வெளியாகியிருப்பதை அறிந்துகொள்ள முடிந்தது. அந்த வருடங்களைச் சிறிய காகிதத்தில் குறித்துக்கொண்டு வீடு திரும்பியபோது மனது மிகுந்த பரபரப்பும் சந்தோஷமுமாகயிருந்தது. மறுநாள் என் அலுவலகத்தில் வேலை செய்யும் பெண்ணிடம் நானாக அவளது பகுதியில் இசை நிகழ்ச்சிகளுக் குத் தவறாமல் செல்லக்கூடிய வயதானவர் யாராவது இருக்கிறார்களா என்று விசாரித்தேன். அவள் தனக்கு அப்படி யாரையும் தெரியாது என்றும் ஆனால் ஆலிவர் சாலையின் முனையில் ஒரு இசைக் கலைஞரின் வீடு இருப்பதைப் பேருந்தில் செல்லும்போது பார்த்திருப்ப தாகவும் சொன்னாள்.

குறிப்பிட்ட அந்த இசைக்கலைஞரின் வீட்டிற்கு நான் போனபோது அவர் உறங்கி எழுந்து வந்தார். அவரது பெயர் துளசிங்கம் என்று சொல்லிவிட்டு பெயர்ப்பலகையை உள்ளே வைத்திருப்பதாக சுவரைக் காட்டினார். வெண்கலத்தில் எழுதி மாட்டிவைக்கப்பட்டிருந்தது. நான் கூச்சமும் தயக்கமுமாக அவரிடம் என் கையிலிருந்த சப்தபாலை என்ற குறிப்பைக் காட்டி விசாரித்தேன். அவர் உரத்த குரலில் சடகோபா என்று கூப்பிட்டார். அவரைவிடவும் சற்றே வயதில் உயரமாகவும் பனியன் மட்டுமேயணிந்த இன்னொரு வயதானவர் வாசலுக்கு வந்து நின்று பார்த்தார். துளசிங்கம் என்னைக் காட்டி சாடையிலே ஏதோ விசாரிக்கிறார் என்று சொன்னார்.

சடகோபன் என்னருகே வந்து நின்றபடி என்ன வேண்டும் என்று ஆங்கிலத்தில் கேட்டார். நான் கையிலிருந்த காகிதத்தை அவரிடம் நீட்டினேன். அவர் அதை உன்னிப்பாகப் பார்த்துவிட்டு நான் இதைக் கேட்பதற்காக போன நாளில் அந்த இசை நிகழ்ச்சி ரத்தாகிவிட்டது. நீங்கள் பார்த்திருக்கிறீர்களா, நல்ல கச்சேரியா என்று கேட்டார். திகைப்பாகயிருந்தது. நீங்கள் இந்தகச் சேரிக்கு எந்த வருடம் சென்றீர்கள் என்று மட்டும் கேட்டேன். அவர் யோசனைக்குப் பிறகு, சொன்னார் 1952 நவம்பர் 5 என்று நினைக்கிறேன். வேறு எதையும் கேட்டுக் கொள்ள விருப்பமில்லை. அதன் பிறகு நான் இந்த நகரில் ஓராண்டு இந்த விளம்பரத்தை சட்டைப் பையில் வைத்தபடி யார்யாரையோ விசாரித்துக்கொண்டிருந்தேன். அநேகமாக யாவருமே பல்வேறு காலங்களில் இந்த இசை நிகழ்ச்சி நடைபெறவில்லை என்று உறுதியாகச் சொன்னார்கள். எனக்கு அதுதான் மிகுந்த உத்வேகம் தருவதாகயிருந்தது. நானாக அதைப் பற்றி தொடர்ந்து குறிப்பு போல எழுதத் துவங்கினேன்.

சப்தபாலை என்பது ஒரு கற்பனையான இசைக்குழு. நிஜத்தில் அப்படி எந்தவொரு இசைக்குழுவும் இருக்கவேயில்லை. இந்த

இசைக்குழுவை ஒரு எதிர்ப்பு இயக்கம் என்று வேண்டுமானால் சொல்லிக்கொள்ளலாம். வழக்கமாக நகரங்களில் நடைபெறும் கச்சேரிகளுக்கு எதிராக இந்த சேர்ந்திசைக் குழுவின் நிகழ்ச்சி உருவாக்கப்பட்டிருக்கிறது. நீங்கள் ஒரு அரங்கின் முன் காத்திருக்கும் போது அடையும் உணர்வுகள்தான் இந்த இசை நிகழ்ச்சி உருவாக்கும் விளைவு. இதுவும் ஒரு இசைதான். நீங்கள் காத்திருக்கிறீர்கள். பிறகு கற்பனை செய்கிறீர்கள். நீங்களாக அந்தக் குழுவை மனதில் உருவாக்குகிறீர்கள். பிறகு அந்தக் குழு இசைக்கும் பாடல்களையும் கற்பனை செய்துகொள்கிறீர்கள். முடிவில் இந்தக் கற்பனையை காலிசெய்துவிட்டு வெளியேறிவிடுகிறீர்கள். இதுதான் உண்மையான சங்கீத அனுபவம்.

சப்தபாலை என்பது ஒரு ராசிமண்டலம். உண்மையில் அது நமது பனிரெண்டு ராசிகளைக் குறிக்கிறது. கண்ணுக்குத் தெரியாமல் கிரகங்கள் நம் மீது கொள்ளும் இர்ப்பும் விளைவுகளும்தான் இசையாகக் குறிப்பிடப்படுகிறது. நிகழ்ச்சி நடைபெறுவதாகயிருந்த நாட்கள் யாவுமே கிரகமாற்றங்கள் நடைபெற்ற நாட்கள் என்பது குறிப்பிடத் தக்கது.

சப்தபாலை என்பது இசையைப் பல்வேறு உடல் உறுப்புகளுக்கு ஒப்பிட்டு நம் உடலில் உள்ள ஏழு முக்கிய உறுப்புகளும் ஒன்றோடு ஒன்று கொண்டுள்ள தொடர்பும் அதன் மர்மமான இயக்கமும் பற்றியதாகிறது. என்றால் நம் உடல் இயக்கத்தின் வழியே நாம் ஒரு இசையை உற்பத்தி செய்துகொண்டிருக்கிறோம் என்று சொல்லலாம்.

வட்டபாலை என்று சிலப்பதிகாரம் குறிக்கும் இசைதான் இந்த சப்தபாலை. இந்த இசையை நிகழ்த்தும்போது பார்வையாளர்களிடம் ஒரு நெகிழ்வு உருவாகிவிடும் என்றும் சில நேரங்களில் அவர்கள் தங்களை மறந்து புலன்வேட்டைக்கு உள்ளாகிவிடுவார்கள் என்றும் தோன்றுகிறது. அதன் காரணமாகவே அது தொடர்ந்து நடைபெறாமல் ஒத்திப்போடப்பட்டுக்கொண்டே வருகிறது.

சப்தபாலை என்பது ஒவ்வொருவரும் தேடிக் கண்டுபிடிக்க வேண்டிய புதிரின் ஒரு பகுதி. இதுவரை நடந்திருக்காததும் ஆனால் நடந்து விட்டதாக அறியப்படுவதும், இனிமேல் ஒருபோதும் நடக்காததும் ஆனால் நடந்துவிட சாத்தியமானதுமான ஒரு நிகழ்ச்சி இது என்பதால் அதை எப்படி நாம் வகைப்படுத்துவது என்பது சிக்கலானதே.

சப்தபாலை என்பது ஒரு சங்கேதம். அது எப்போதும் தேடப்பட்டுக் கொண்டிருப்பதைக் குறிப்பதாகயிருக்கிறது. ஆனால் தேடுபவன் மட்டும் காலம்தோறும் மாறிக்கொண்டேயிருக்கிறான். தேடுதல் முடிவடைவதேயில்லை. தேடப்படும் பொருள் குறித்து தேடுபவனுக்கு தெளிவாகத் தெரிவதில்லை என்பது தேடுதலுக்கு எவ்விதத்திலும் இடைஞ்சலாக இருக்கவேயில்லை.

சப்தபாலை என்பது ஒரு கனவு. இது நம் உடலுக்கு வெளியில் அலைந்து திரிகிறது. உடல் கனவை உற்பத்தி செய்வது போல நம்மைச் சுற்றியுள்ள வெளி இதுபோன்ற கனவுகளை உற்பத்தி செய்கிறது என்று சொல்லலாம்.

வாழ்வைப் பற்றிய ஏதோவொரு முக்கிய மர்மம் உடைபட்டுவிட்டது போலவும் அல்லது அதிக சிக்கலாகிக்கொண்டது போலவும் இரு நிலையை இசை நிகழ்ச்சிக்கான காத்திருப்பும் தேடுதலும் உருவாக்கு கிறது. இந்த இரண்டும்கூட வெறும் கற்பனையாகக் கூட இருக்கலாம். ஆனால் ம்யூசியம் என்பது காலத்தின் உறைவிடமல்ல. அது ஒரு விசித்திரமான கற்பனை. கடந்த காலம் முழுவதும் ஒரே அறையில் சேகரமாகியிருப்பது எத்தனை வியப்பானது. ஏன் அதை நாம் புரிந்துகொள்ளவேயில்லை.

இப்படியாக எனது குறிப்பேடுகளில் எதையோ கிறுக்கிக்கொண்டே யிருந்தேன். அதன் தொடர்ச்சியாக மனது ஆனந்தம் கொள்ளத் துவங்கியது. நான் குழந்தைகளின் மத்தியில் வைத்து என் மனைவி யின் கையைப் பிடித்து இழுத்து ஒரு நாள் வேடிக்கையாக அவள் நெற்றியில் முத்தமிட்டது வரை நடந்தேறியது. வீட்டில் உள்ளவர்கள் மட்டுமன்றி அலுவலகத்திலும் பேருந்திலும் என்னால் காற்றில் மிதந்து செல்வது போல லகுவாகவும் சிடுக்கின்றியும் போய்வர முடிந்தது.

திடீரென உலகம் இப்போதுதான் காற்றில் பறந்துகொண்டிருக்கும் ஒரு கோழி ரோமத்தைப் போல புத்தம் புதிதாகயிருந்தது. சேர்ந்திசைக் கலைஞர்கள் இசையைக் கேட்காமலே நான் அவர்களின் விசிறிகளில் ஒருவராகியிருந்தேன். இப்போதும் எனக்குப் புரியாதது அங்கேயிருந்த ஈரம் படிந்த பாத்ரூம் ஸ்லீப்பர்களைப் பற்றி மட்டும்தான். அதை யார் உபயோகப்படுத்தினார்கள். அந்த ஆள் யாராகயிருக்கக்கூடும். என்னைத் தவிர வேறு யார் இசையைக் கேட்க வந்திருந்தார்கள். புதிராகத்தானிருக்கிறது.

# பதினைந்து வயதில் ஒருவன்

நான் உங்கள் கதையைத்தான் சொல்ல விரும்புகிறேன். ஆனால் எனக்குத் தெரிந்தவன் ஆத்தியப்பன் என்பதால் அவன் வழியாக உங்கள் கதையைச் சொல்லலாமா என்று தோன்றுகிறது. ஆத்தியப்பனுக்குப் பதினைந்து வயதில் நடந்த சம்பவம் உங்களுக்கும் நடந்திருக்கக்கூடும். நீங்களும் அவனைப் போலவே இந்த நிகழ்ச்சி பற்றிய நினைவுகளை ஒளித்து வைத்திருப்பீர்கள். அல்லது அது சார்ந்த ரகசிய ஆசைகளையும் அவமானங்களையும் இனி நினைத்துப் பார்க்கக் கூடாது என்று முடிவு செய்திருப்பீர்கள். உங்களுக்கும் ஆத்தியப்பனுக்கும் உள்ள உறவு விசித்திரமானது. அவன் உங்களில் சிலரைக் கண்டு பயந்திருக்கிறான். அதுபோலவே உங்களில் சிலர் ஆத்தியப்பனை பயமுறுத்தவும் செய்திருக்கிறீர்கள். ஆத்தியப்பனின் வாழ்நாளில் இதுபோன்று அவமானப்படுவது ஒன்றும் முதல் முறையல்ல என்றபோதும் மழை வெறித்த பிறகும் நினைத்து நினைத்து உதிர்ந்துகொண்டிருக்கும் இலை நீர் போல அவனது வெவ்வேறு வயதில் இந்த சம்பவம் அவனை மிகவும் தீவிரமாக ஆக்ரமித்திருக்கிறது. அவன் நிலைகுலைந்திருக்கிறான். இன்று வரை ஆத்தியப்பனை ஆட்டி வைத்துக்கொண்டிருக்கும் ஒரு தீவிரப் பிரச்சினை புத்தகமொன்றிலிருந்து துவங்கியது என்பதே இதைக் கதையெனச் சொல்வதற்கான காரணம்.

**பதினைந்து வயதின் காலைப்பொழுது**

ஆத்தியப்பனிடம் ஐந்து ரூபாயிருந்தது. அதைக் காலையில்தான் வீட்டிலிருந்து திருடியிருந்தான். சாமி படத்திற்கு அடியில் யாரோ அந்த ரூபாய் நோட்டை மடித்து வைத்திருந்தார்கள். மஞ்சள் குங்குமம்கூட அப்பியிருந்தது. திருநீறு காலியாகிவிட்டதே என்று கிண்ணத்தை இறக்கிப் பார்த்தபோது அந்தப் பணம் மடிக்கப்பட்டு இருந்தது அவன் கண்ணில் விழுந்தது. ஐந்து ரூபாயைப் பார்த்த மறுநிமிஷம் அவன் மனதில் எப்படியாவது அந்தப் புத்தகத்தை வாங்கிவிட வேண்டியதுதான் என்று தோன்றியது. அவசரமாக

அவன் பணத்தை எடுத்து கணக்கு நோட்டின் அட்டையைக் கழட்டி அதற்குள் ஒளித்து வைத்துக்கொண்டான். அன்றைக்கு வழக்கத்தைவிட வேகமாகவே பள்ளிக்குக் கிளம்பினான். சாலையில் நடக்கும்போதே மனது எதை எதையோ கற்பனை செய்துகொண்டிருந்தது. தானாகச் சிரித்தபடியே வழக்கமான சாலையைத் தவிர்த்து ஐந்து விளக்கை நோக்கிச் செல்லும் பாதையில் நடந்தான்.

விக்டோரியா மகாராணியின் பட்டம் சூட்டும் நிகழ்ச்சியைக் கொண்டாடும் வகையில் அமைக்கப்பட்டது ஐந்து விளக்கு என்பார்கள். அந்த இடம் பெரிய திடலைப் போன்றிருந்தது. அதன் ஒரு பக்கம் பழைய இரும்பு விற்பவர்களும் பிள்ளையார் கோவிலுமிருந்தது. பகல் நேரங்களில் அங்கே பழரசம் விற்பவர்களும் பருத்திப்பால் விற்பவர்களும் தென்படுவார்கள். சில நேரங்களில் அந்தத் திடலில் கழைக்கூத்து ஆடுகின்றவர்கள் கயிற்றில் நடந்துகாட்டுவதைக்கூட கண்டிருக்கிறான். அதன் தெற்குப் பக்கமாக ஐஸ் பேக்டரிக்கும் வளையல் கடை ஒன்றுக்கும் இடையில் இருந்தது சீனன் கடை.

அதற்கு சீனன் கடை என்று எப்படிப் பெயர் வந்தது என்று தெரியவில்லை. ஆனால் கடையில் இருந்த ஆள் உடல் முழுவதும் வெண்ணிறமான புள்ளிகளாக விழுந்திருந்தது. அவன் தலைமயிர்கூட செம்பட்டை படிந்துபோயிருந்தது. சீனன் கடையில்தான் பள்ளி மாணவர்கள் காமிக்ஸ் புத்தகங்கள் வாங்குவார்கள். அதைத் தவிர மார்க்கெட்டிற்கு வரும் பெண்கள் சினிமா பாட்டுப் புத்தங்களையும் மாத நாவல்களையும் வாங்குவது உண்டு. ஆத்தியப்பனே சீனனிடமிருந்து நிறைய காமிக்ஸ் வாங்கியிருக்கிறான். ஆனால் சீனன் உட்கார்ந்திருக்கும் மரப் பெட்டியின் அடியில் ஏராளமான மஞ்சள் பத்திரிகைகளும் நிர்வாணப் படங்கள் கொண்ட புத்தகங்களும் வைத்திருந்தான் என்பது வள்ளிநாயகம் சொல்லித்தான் அவனுக்குத் தெரிய வந்தது.

ஒரு நாள் கஜேந்திர விலாஸ் மிட்டாய்க்கடையில் வேலை செய்யும் சரக்கு மாஸ்டர் வேஷ்டியைத் தூக்கிவிட்டு தொடை தெரிய உட்கார்ந்துகொண்டு அந்தப் புத்தகங்களில் நிர்வாணப் படங்கள் உள்ளதாகப் புரட்டிப் பார்த்து வாங்கிக்கொண்டிருப்பதை அவர்கள் அருகில் நின்று கவனித்துக்கொண்டிருந்தார்கள். சரக்கு மாஸ்டர் ஒவ்வொரு படமாகப் புரட்டிப் பார்த்துவிட்டு பருத்த ஸ்தனங்கள் கொண்ட பெண்ணிருந்த புத்தகத்தை விலை கேட்டான். ஐந்து ரூபாய் எனச் சொன்னதும் பதில் பேசாமல் பணத்தைக் கொடுத்து வாங்கி தனது டிராயர் பையில் சொருகிக்கொண்டு சைக்கிளை எடுத்தபடியே புறப்பட்டான்.

சரக்கு மாஸ்டர் இந்தப் புத்தங்களை எங்கே ஒளித்து வைப்பார் என்று தனக்குத் தெரியும், சாயங்காலம் கூட்டிக்கொண்டு போய் காட்டுகிறேன் பார் என்று வள்ளிநாயகம் சொன்னான். ஆத்தியப்பனால் நம்பவே முடியவில்லை. அன்று மாலை அவர்கள் இருவரும் அரளிப்

பூக்கள் உதிர்ந்து கிடக்கும் நந்தவனத்திற்குப் போனபோது அங்கு உள்ள புளியமரத்தின் பொந்து ஒன்றில் அந்தப் புத்தகம் மடித்து சொருகி வைக்கப்பட்டிருந்ததை வள்ளிநாயகம் எடுத்துக் காட்டினான்

இருவரும் திலாக்கிணற்றின் துவைகல்லில் உட்கார்ந்தபடியே அந்தப் புத்தகங்களில் இருந்த படங்களைப் புரட்டத் துவங்கினார்கள். ஆத்தியப்பன் உதட்டைக் கடித்தபடியே நிர்வாணமான பெண் உடலைப் பார்த்துக்கொண்டிருந்தபோது யாரோ சைக்கிளை நிறுத்தி விட்டு குளிப்பதற்காக நந்தவனத்திற்குள் வருவது தெரிந்தது. வள்ளி நாயகம் அவசர அவசரமாக அந்தப் புத்தகத்தை ஒளித்து வைத்துவிட்டு எதுவும் நடக்காதவன் போல அரளிக்காய் ஒன்றைக் கிள்ளியபடியே உட்கார்ந்துகொண்டான்.

நந்தவனத்திற்குள் வந்த நபர் எதற்காக அவர்கள் அங்கே உட்கார்ந்திருக்கிறார்கள் என்று கேட்டபடியே தனது சட்டைப் பையில் இருந்து ஒரு பொட்டலத்தை எடுத்து கையில் போட்டு கொஞ்சம்கொஞ்சமாகக் கசக்கத் துவங்கினான். ஆத்தியப்பன் அந்த ஆளையே பார்த்துக்கொண்டிருந்தான். அந்த ஆள் சிகரெட்டில் இருந்த துகள்கள் யாவையும் ஒன்றாகக் கையில் கொட்டி தான் கசக்கி வைத்திருந்த இலைகளையும் ஒன்றுசேர்த்துப் போட்டு நசுக்கத் துவங்கினான்.

வள்ளிநாயகத்தின் கண் புளியமரத்தின் மீதே இருந்தது. அந்த ஆள் சிகரெட்டினுள் திரும்பவும் அந்தத் துகள்களை அடைத்து புகைக்கத் துவங்கினான். இரண்டு இழுப்பிற்குப் பிறகு ஏதோ ஆத்திரம் ஆனவன் போல ஒரு கல்லை எடுத்துக்கொண்டு 'இங்கே எதுக்குடா நிக்குறீங்க? ஓடுங்க' என்று அவர்கள் மீது எறிந்தான். ஆத்தியப்பனும் வள்ளிநாயகமும் அங்கிருந்து வெளியேறி பேசியபடியே வீடு வரை வந்தார்கள். மறுநாள் காலை இருவரும் நந்தவனத்திற்குப் போனபோது அந்தப் புத்தகம் புளியமரப் பொந்தில் இல்லை. ஏமாற்றமாகயிருந்தது. ஐந்து ரூபாய் மட்டும் கிடைத்துவிட்டால் அதுபோலப் படங்கள் உள்ள புத்தகத்தை வாங்கிவிடலாம் என்று வள்ளிநாயகம் சொல்லிக்கொண்டேயிருந்தான். இன்றைக்குதான் அதுபோல ஐந்து ரூபாய் ஆத்தியப்பன் கைக்குக் கிடைத்திருந்தது.

சீனன் கடையைத் திறந்து ஊதுபத்தி காட்டிக்கொண்டிருந்தான். அவனது கடையின் முன்பாகத் தரையில் பரப்பிப் போட்டிருந்த அட்டை கிழிந்துபோன காமிக்ஸ் புத்தகங்கள் காற்றில் பறந்து கொண்டிருந்தன. வள்ளிநாயகத்தை அழைத்துக்கொண்டு வந்து விடலாமா என்று யோசனையாக இருந்தது. ஆத்தியப்பன் குனிந்து காமிக்ஸ் புத்தகம் தேடுபவன் போலவே காகிதங்களைப் புரட்டிக் கொண்டிருந்தான். சீனன் அவனை ஒரு முறை ஏறிட்டுப் பார்த்துவிட்டு பிறகு இரும்பு வாளியை எடுத்துக்கொண்டு எதிரில் உள்ள அடி குழாயில் தண்ணீர் அடிக்க கிளம்பிப் போனான். அவனுக்கு நாவறட்சி யானது போலிருந்தது. எப்படி சீனனிடம் அந்தப் புத்தகத்தைக்

கேட்பது என்று யோசனை செய்தபடியே நின்றிருந்தான்.

சீனன் தண்ணீரில் முகம் கழுவிக்கொண்டு இரும்பு வாளியைத் தூக்கிக்கொண்டு வந்து கடையின் உள்ளே வைத்துவிட்டு அவனிடம் 'என்ன புத்தகம்டா வேணும்' என்று எரிச்சலான குரலில் கேட்டான். ஆத்தியப்பன் தன் கணக்கு நோட்டிற்குள்ளிருந்து ஐந்து ரூபாயை எடுத்து அவனிடம் நீட்டியபடியே பேசாமல் நின்றான். சீனன் நோட்டைப் பிரித்தபோது அதிலிருந்து குங்குமம் உதிர்ந்தது.

சீனன் நோட்டைத் தன் புறங்கையால் துடைத்தபடியே 'படம் போட்டது வேணுமா, போடாதது வேணுமா' என்று கேட்டான். ஆத்தியப்பன் 'படம் போட்டது' என்று சொன்னதும் தான் உட்கார்ந் திருக்கும் மரப்பலகையைத் தூக்கிக்கொண்டு உள்ளே கையை விட்டு ஒரு புத்தகத்தை எடுத்துக் கொடுத்தான். என்ன புத்தகம் என்றுகூட ஆத்தியப்பன் பார்க்கவில்லை. யாராவது தன்னைப் பார்த்துக்கொண்டி ருக்கிறார்களா என்று மட்டும் சுற்றும்முற்றும் பார்த்தபடியே இருந்தான்.

கோவிலுக்குச் சென்றுகொண்டிருக்கும் பெண்களில் தனது அடுத்த வீட்டு சுசீலா அக்கா இருப்பதை கவனித்தான். அவள் தன்னைப் பார்த்திருப்பாளா என்று சந்தேகமாகயிருந்தது. புத்தகத்தைத் தனது பையில் திணித்தபடியே அவன் தேரடியைத் தாண்டியபோது பள்ளி யில் மணியடிக்கத் துவங்கியிருந்தது. அவன் குறுக்குச் சந்து வழியாக நுழைந்து பள்ளியைக் கடந்து மூலக்கடைப் பக்கம் நடந்து போகத் துவங்கினான். எங்காவது இந்த பள்ளிக்கூடப் பையை வைத்து விட்டால் நன்றாக இருக்கும் போலிருந்தது. ஆனால் எங்கே வைப்பது என்று தெரியவில்லை.

ரயில்வே சரக்கு ஏற்றும் இடத்தின் பக்கம் போய்விட்டால் நடமாட்டமே இருக்காது என்று தோன்றியது. அவசர அவசரமாக ரயில்வே குடோனை நோக்கி நடந்து போகத் துவங்கினான். ஒரு லாரி மட்டுமே தொலைவில் நின்றுகொண்டிருந்தது. நாலைந்து பேர் கிழிந்த சாக்குகளைத் தைத்துக்கொண்டிருந்தார்கள். ரயில்வே தண்டவாளங்களைத் தாண்டி இரும்பு சாமான்கள் குவித்துப் போட்டு வைத்திருந்த இடத்திற்கு வந்தபோது ஒரு காகம் மட்டுமே கரைந்து கொண்டிருந்தது. தொலைவு வரை நடமாட்டமேயில்லை.

பையை ஒரு இரும்புக் கம்பியில் மாட்டிவிட்டு படம் போட்ட புத்தகத்தை மட்டும் வெளியே எடுத்தான். மிக அவசரமும் படபடப்பு மாகப் புத்தகம் முழுவதையும் புரட்டினான். இருபத்திநாலு படங் களிருந்தன. அதில் இரண்டு படங்களில் மட்டும்தான் முழுவதும் நிர்வாணமான பெண்ணிருந்தாள். மற்ற படங்களில் பாதி திறந்த உடல் மட்டுமேயிருந்தது.

யாராவது தன்னைப் பார்க்கிறார்களா என்று சந்தேகமாகயிருந்தது. திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டான். பிறகு அந்தப் படத்தை நன்றாகப் பார்க்கத் துவங்கினான். சிரிப்பாக வந்தது. எதற்கு என்று தெரியாமல் அதைப் பார்த்து சிரிக்கத் துவங்கினான். பார்க்கப்

பார்க்க உடம்பில் செவ்வெறும்புகள் கடிப்பது போன்று லேசான வலி உண்டானது. திரும்பத் திரும்ப அந்தப் படங்களைப் பார்த்த படியே இருந்தான். வெயில் மண்டைக்குள் தாரைதாரையாக வழிவது போலிருந்தது.

திடீரென அருகில் யாரோ பேசுவது போன்று ஒரு குரல் கேட்டது. திடுக்கிட்டு திரும்பிப் பார்த்தபோது வெகுதொலைவில் ஒரு கிழவி தனியே பழைய காகிதம் பொறுக்கிக்கொண்டிருந்தாள். அவள் நாயை விரட்டும் சப்தம் இவ்வளவு தூரம் தாண்டி தனக்கு எப்படி துல்லியமாகக் கேட்டது என்று ஆச்சரியமாக இருந்தது. புத்தகத்தைக் கீழே வைத்து முகத்தில் அரும்பியிருந்த வியர்வையைத் துடைத்துக் கொண்டான். தன் அருகில் இருந்த வேப்ப மரம், அதன் பச்சைப் பசுமையான இலைகள், சுண்ணாம்பு உதிர்ந்து நிற்கும் ரயில்வே அலுவலகம், அலுமினிய நிறத்தில் உள்ள ஆகாசம், குத்துச் செடி காற்றில் ஆடிக்கொண்டிருப்பது என யாவும் இன்று துல்லிய மாகத் தெரிவது ஆச்சரியமாக இருந்தது. தன் கண்கள் ஏன் இவ்வளவு பிரகாசமாக ஆகிவிட்டன? எங்கோ தொலைவில் கேட்கும் குரலைக் கூட ஏன் செவி இத்தனை வேகமாக உள்வாங்கிக்கொள்கிறது என்று யோசித்தபடியே சுற்றிலும் பார்த்தான். யாரோ தன்னைப் பார்த்துக்கொண்டிருப்பது போன்ற உணர்வு இருந்துகொண்டே யிருந்தது. அருகில் காய்ந்து சுருண்டுபோன வாழை இலை ஒன்று இரும்புக் கம்பிகளுக்கிடையில் சிக்கி சப்தம் உண்டாக்கியபடியே இருந்தது. இத்தனை வருடங்களாக இல்லாமல் இன்று ஒரு நாளில் தன்னைச் சுற்றிய யாவும் துடைத்து வைத்தது போன்று மிகுபிரகாசமாக இருப்பது கண்ணை உறுத்தியது.

திரும்பவும் புத்தகத்தைப் புரட்டத் துவங்கினான். நிர்வாணமாக நின்றிருந்த பெண்ணின் உடல் மெழுகைப் போன்றிருந்தது. அவள் அடிவயிற்றுப் பூனை ரோமங்கள் வரை துல்லியமாகத் தெரிந்தன. இது வெறும் புத்தகம் என்று அவன் மனதிற்குத் தோன்றவேயில்லை. அதே நேரம் அது நிஜம் என்றும் அவன் மனது நம்ப மறுத்தது. அப்படியானால் நிஜமும் கற்பனையும் இல்லாமல் வேறு ஏதோ வொன்று இருக்கிறதா என அந்தப் பெண்உடலைப் பார்த்தபடியே இருந்தான்.

பூரானுக்கு உடல் முழுவதும் கால்கள் இருப்பது போல தன் உடல் முழுவதும் இச்சை கீறிக்கொண்டு முளைப்பது போலிருந்தது. பாசி படர்ந்த குளத்திற்குள் மூழ்கி சிக்கிக்கொண்டது போல அந்தப் புத்தகத்திற்குள் நுழைவதும் வெளியே வருவதுமாக இருந்துகொண்டே யிருந்தான். அருகாமையிலிருந்த மரத்திலிருந்து காகம் கரைந்தபடியே இருந்தது ஆத்திரமாக வந்தது. ஒரு கல்லை எடுத்து வீசி எறிந்தான். காகம் பறந்துபோன பிறகு அந்த இடத்தில் அவனைத் தவிர யாருமே இல்லை என்பது ஆசுவாசமாகயிருந்தது. ஆனால் அப்போதும் தன்னை யாரோ கவனிக்கிறார்கள் என்றே தோணியது.

செம்மண் தரையில் படுத்துக்கொண்டு அந்தப் புத்தகத்தைப் புரட்டத் துவங்கினான். அந்தப் பெண் உடல்கள் எல்லாம் நிஜமான வைதானா? இல்லை, அவை பொம்மைகளா என்று சந்தேகமாக யிருந்தது. உற்றுப் பார்த்தபடியிருந்தான். தன்னைத் தவிரவும் கூட யாரோ இருப்பது போன்று உணர்வு உண்டாகத் துவங்கியதும் மனது படபடக்க ஆரம்பித்தது.

வெகுதொலைவில் கேங்மேன்கள் ஒரு தள்ளுவண்டியைத் தள்ளிய படியே வந்துகொண்டிருப்பது தெரிந்தது. வள்ளிநாயகத்தை அழைத்துக் கொண்டு வந்திருக்கலாம். ஆனால் அவன் இதைப் பற்றி யாரிடமாவது சொல்லிவிட்டால் என்ன செய்வது என்று திரும்பவும் பயம் தலைக் கேறியது. அவன் எழுந்து இரும்புக் கிராதியில் மூத்திரம் பெய்தபடியே தொலைவைப் பார்த்தபடியே இருந்தான்.

திடீரென உலகம் மிகப் பெரியதாக, தனக்குக் கொஞ்சமும் தொடர்பில்லாத நூற்றுக்கணக்கான பொருட்கள் நிரம்பியதாகத் தோன்றியது. உடம்பில் ஏதோவொரு இடத்தில் ஆணி குத்தியது போன்று வலிக்கத் துவங்கியது. கைகளால் முதுகைத் தடவிப் பார்த் தான். எங்கே எனத் தெரியவில்லை. ஆனால் ஏதோ ஒரு இடத்தில் ரத்தம் கசிந்து வருவது போன்று தோன்றியது. கைகளால் நன்றாகத் தடவிப் பார்த்துக்கொண்டான். ரத்தம் வருவது போலத் தெரியவில்லை. ஏதாவது இரும்பு குத்தியிருக்கக்கூடும் என்று சுயசமாதானம் செய்துகொண்டான்.

பிறகு அந்தப் புத்தகத்தை முதலில் இருந்து கடைசிப் பக்கம் வரை புரட்டினான். பெண்ணின் தலையை மட்டும் கைவிரலால் மூடிவிட்டு அந்த உடலைப் பார்த்தபடியிருந்தான். செத்துக் கிடக்கும் பிரேதத்தைப் போலத் தோன்றியது. உடனே கையை எடுத்துவிட்டான். தூரத்துச் சாலையில் சைக்கிளில் ஒரு பெண் செங்கல் நிறச் சேலை காற்றில் பறக்க வருவது தெரிந்தது. காற்றில் படபடக்கும் சேலை அவன் உடலை முறுக்கேற்றுவதாகயிருந்தது. அவசரமாக அந்தப் புத்தகத்தைத் திரும்பவும் எடுத்து புரட்டிப் பார்த்துக்கொண்டான். ஒரு சிற்பத்தைப் போல திறந்து கிடந்தது அந்தப் பெண்உடல். அவன் வெறித்துப் பார்த்தபடியே இருந்தான். முதுகிலிருந்து லேசாக ரத்தம் வழிவது போன்ற உணர்ச்சி வந்துகொண்டிருந்தது.

தொலைவில் தெரிந்த பெண் தன் பார்வையிலிருந்து மெல்ல மறைந்து போய்க்கொண்டிருந்தாள். ஆத்திரமாக வந்தது. தான் எதற்காக இந்தப் படங்களைப் பார்த்துக்கொண்டிருக்கிறேன் என்று அவன் எரிச்சல்பட்டுக்கொண்டான்.

### பதினைந்து வயதின் மதியப்பொழுது

சாப்பிட வேண்டும் என்றே தோன்றவில்லை. அவன் தனது புத்தகப் பையையும் டிபன் பாக்சையும் தையல் மாலில் உள்ள சிங்காரம்

டெய்லர் கடையில் வைத்துவிட்டு தெருவில் இறங்கியபோது வெயில் தரையில் வழிந்தோடிக்கொண்டிருந்தது. இப்போதும் முதுகில் லேசாக ரத்தம் வழிந்துகொண்டிருப்பது போலிருந்தது. கையால் தொட்டுப் பார்த்துக்கொண்டான். அப்படி ரத்தம் எதுவும் வரவில்லை என்று தெரிந்தது. சட்டையைக் கழட்டிப் பார்க்கலாமா என்று நினைத்தான். இதற்காகவே அசன் கடைச் சந்திற்குள் நடந்து போனான். உள்ளே ஒரு பெண் நின்றபடியே மூத்திரம் பெய்துகொண்டிருந்தாள். சப்த மில்லாமல் அதை கவனித்துக்கொண்டிருந்தான் ஆத்தியப்பன். அந்தப் பெண் சிறுநீர் கழித்து முடித்த பிறகு திரும்பிப் பார்த்தாள். ஆத்தியப் பன் நிற்பது தெரிந்தது. தூ என்று சாக்கடையில் காறி உமிழ்ந்தபடியே சந்தின் இன்னொரு பக்கம் நடந்து போகத் துவங்கினாள்.

ஆத்தியப்பன் சாக்கடையை மிதித்து நடந்து சந்தின் பாதி தூரத்திற் குள் சென்று தன் சட்டையைக் கழட்டிப் பார்த்தான். சட்டையில் வியர்வைதான் வடிந்து போயிருந்தது. திடீரென தன் உடலை தானே பார்த்துக்கொள்வதேகூட நரம்புகளை முறுக்கேற்றுவதாக யிருந்தது. சட்டையை அவசர அவசரமாகப் போட்டுக்கொண்டு சந்தை விட்டு வெளியே வந்தபோது வெள்ளரிக்காய் விற்கும் பெண்கள் தலையில் முக்காடு போட்டபடியே உட்கார்ந்திருந்தார்கள். யாரைப் பார்த்தாலும் உடல் மட்டுமே தெரிந்தது. திடீரென பெண்களை மிக நெருக்கமாகப் பார்ப்பது போலிருந்தது. எங்கு பார்த்தாலும் பெண்களாக இருப்பது போலிருந்தது.

அவன் வெள்ளரிக்காய் விற்கும் பெண்களை உற்றுப் பார்த்தபடியே இருந்தான். அவர்கள் வெயில் வடியும் உடலுடன் குத்துக்காலிட்டு உட்கார்ந்திருந்தார்கள். உடலும் உடலின் வளைவுகளும் அவனுக்குள் நடுக்கத்தை உருவாக்கத் துவங்கின. அவன் தானும் வெயிலில் உட்கார்ந்தேயிருந்தான். சினிமா விட்டு ஆட்கள் வெளியே வந்து கொண்டிருந்தார்கள். அதில் நைலக்ஸ் சேலை அணிந்த ஒரு பெண் சிரித்தபடியே வந்துகொண்டிருந்தாள். அந்தச் சிரிப்பு அவன் உடலைத் துளையிடுவதாகயிருந்தது. எங்காவது போய் உடனே அந்தப் புத்தகத் தைத் திரும்பப் புரட்டிப் பார்க்க வேண்டும் போலிருந்தது. எங்கே போவது என்று தெரியாத யோசனையுடன் சாலையில் நடந்து போய்க்கொண்டிருந்தான். ஊர் முழுவதும் ஓரே இரைச்சலாகத் தோன்றியது. எதற்காக இவ்வளவு கூச்சலிடுகிறார்கள் என்ற எரிச்ச லோடு அவன் பழைய பேருந்து நிலையத்தினுள் சென்றான். இரண்டு பள்ளி மாணவிகள் பேருந்திற்காக நின்றுகொண்டிருந்தார்கள். அவர் களை வெறித்தபடியே நின்றுகொண்டிருந்தான். அவர்கள் ஏதாவது சொல்வதும் சிரிப்பதுமாக இருந்தார்கள். தார் உருகி சாலையில் போகின்றவர்களின் கால்களில் அப்பிக்கொள்வது போல காணும் காட்சிகள் யாவும் தன் உடலோடு அப்பிக்கொள்வது போன்றிருந்தது.

பழைய பேருந்து நிலையத்தை விட்டு வெளியேறி நடந்தபோது அவனது சித்தப்பா சைக்கிளில் கடந்து போய்க்கொண்டிருந்தார்.

மனதிலிருந்த பயம் வடிந்துபோய் வெறி போல தலையில் ஏதோ ஏறிக்கொண்டிருந்தது. என்ன செய்வது என்று தெரியாமல் அவன் அங்குமிங்கும் அலைந்துகொண்டேயிருந்தான். திடீரென சூரியன் மிக நெருக்கமாகத் தன் தலைக்கு மேலாக எரிந்துகொண்டிருப்பது போலிருந்தது. சினிமா தியேட்டரை ஒட்டிய மாவு மில் ஒன்றுக்குள் அவன் நடந்துபோனபோது ஒரு லாரியில் மூட்டையை ஏற்றிக் கொண்டிருந்தார்கள். மாவரைப்பதற்கு எப்போது வர வேண்டும் என்று கேட்டுப் போக வந்திருப்பதாகப் பொய் சொன்னான். உள்ளே போய் கேட்கும்படியாக சொன்னார்கள். உள்ளே போனபோது யாருமேயில்லை. தரையெங்கும் கோதுமை மாவு படிந்திருந்தது. அங்கிருந்த மண்பானையில் தண்ணீர் அள்ளிக் குடித்துவிட்டு மாவு படிந்திருந்த மரப்பெஞ்சில் உட்கார்ந்து கொண்டான். சினிமா ஓடிக்கொண்டிருக்கும் சப்தம் கேட்டுக்கொண்டிருந்தது.

தன் டவுசர் பையிலிருந்து அந்தப் புத்தகத்தை திரும்பவும் வெளியே எடுத்துப் பார்த்தான். நிர்வாணமாக இருந்த பெண்ணின் கண்கள் அவனையே உற்று நோக்கிக்கொண்டிருப்பது போலிருந்தது. அந்தப் பெண்ணின் பெயர் என்னவாகயிருக்கும்? அவள் எந்த ஊரில் இருப்பாள்? தன்னை இப்படியொருவன் பார்த்துக்கொண்டிருப்பதை அவள் அறிவாளா என்று யோசித்துக்கொண்டேயிருந்தான். பிறகு அந்தப் படங்களை அவசரத்திற்கு எடுத்துக்கொள்வது போன்ற இடத்தில் ஒளித்து வைக்க வேண்டும் என்று நினைத்துக்கொண்ட படியே வெளியே வந்தபோது மாவு அரைப்பதற்காக ஒரு பெண் நடந்து வந்துகொண்டிருந்தாள். முப்பது வயதைக் கடந்திருக்கக் கூடும். அவள் நல்ல திரேகியாக இருந்தாள். அவளையே முறைத்துப் பார்த்துக்கொண்டிருந்தான் ஆத்தியப்பன். அவள் பச்சரிசி அரைப்ப தற்கு எவ்வளவு காசு என்று அவனிடம் கேட்டாள். ஆத்தியப்பன் பதில் சொல்லவேயில்லை. அந்தப் பெண் கரண்ட் இல்லையா என்று கேட்டபடியே உள்ளே போனாள். தான் திடீரென அவளை ஏதாவது செய்துவிடக்கூடுமோ என்று பயமாக இருந்தது. அந்தப் பெண் இயந்திரங்களை நோக்கி நடந்துகொண்டிருந்தாள். வெயில் வாசல் வரை வந்து எட்டிப் பார்த்துக்கொண்டிருந்தது.

## பதினைந்து வயதின் மாலைப்பொழுது

ஆத்தியப்பன் நிர்வாணப் புத்தகத்தை ஒளித்து வைப்பதற்காக சப்பாணிமேடு வரை நடந்து சென்றான். அந்த மேட்டுப்பகுதியில் அங்கொன்றும் இங்கொன்றுமாக மட்டுமே வீடுகளிருந்தது. சிறியதும் பெரியதுமாக நிறைய பாறைகள் உருண்டு கிடந்தன. சில நாட்கள் அவர்கள் விளையாடுவதற்காக அந்தப் பகுதிக்குச் சென்றிருக்கிறார்கள். எந்தப் பாறையின் அடியில் ஒளித்து வைப்பது என்று யோசனையாக இருந்தது.

ஒரு பாறையின் மீது ஏறி நின்று பார்த்தபோது பேருந்துகள் சாலையில் செல்வது விளையாட்டு பொம்மைகள் சுற்றிக்கொண்டிருப்பது போலிருந்தது. அடையாளத்திற்காக ஒரு கல்லை எடுத்து பாறை மீது தனது பெயரின் முதல் எழுத்துகளைக் கிறுக்கினான் ஆத்தியப்பன். பாறையின் அடியில் புத்தகத்தை ஒளித்து வைப்பதற்கு முன்பு அந்த நிர்வாணப் படங்களை ஒரு முறை பார்த்துக்கொண்டான். கண் முன்னே மீன் தண்ணீரில் நீந்திக்கொண்டிருப்பது போன்ற உணர்ச்சியைத் தந்தது அந்த படம். அவன் பாறையின் அடியில் புத்தகத்தை வைத்துவிட்டு தன்னை யாராவது பார்க்கிறார்களா என்று திரும்பிப் பார்த்தான். காய்ந்த சருகுகள் காற்றில் பறந்து கொண்டிருந்ததைத் தவிர வேறு இயக்கமேயில்லை.

அவசர அவசரமாகத் தனது பையை எடுப்பதற்கு ஆத்தியப்பன் தையல் மாலை நோக்கி வந்துகொண்டிருந்தபோது வள்ளிநாயகம் தள்ளுவண்டிக்காரனிடம் பருத்திப்பால் வாங்கி குடித்துக்கொண்டிருப்பது தெரிந்தது. அவனிடமிருந்து கொஞ்சம் பருத்திப்பால் வாங்கிக் குடிக்கலாம் என்றபடியே ஆத்தியப்பன் அருகில் போய் நின்றதும் அவன் சிரித்தபடியே 'ஏண்டா ஸ்கூலுக்கு வரலை?' என்று கேட்டான். பதில் சொல்லாமல் ஆத்தியப்பன் சிரிப்பதைக் கண்டதும் 'சினிமாவுக்குப் போனயா' என்று கேட்டான். ஆத்தியப்பன் இல்லை என்று தலையாட்டியபடியே அவனிடமிருந்த பருத்திப்பாலை வாங்கிக் குடித்தபடியே ரகசியம் போலச் சொன்னான். 'ஐந்து ரூபா குடுத்து நான் ஒரு பொஸ்தகம் வாங்கினேன்.' வள்ளிநாயகம் நம்ப முடியாமல் கேட்டான் 'வெள்ளைக்காரிக படம் போட்டதா?' ஆத்தியப்பன் சிரித்தான்.

வள்ளிநாயகம் ஆவலை அடக்க முடியாமல் 'எங்கடா வச்சிருக்கே' என்று கேட்டான். ஆத்தியப்பனுக்கு அந்த நிமிஷத்தில் தான் மிகப் பெரிய ஆள் என்பது போலத் தோன்றியது. வேண்டும் என்றே இன்னொரு நாள் காட்டுவதாகச் சொன்னான். வள்ளிநாயகம் அவனிடம் கெஞ்சும் குரலில் தனக்கு ஒரேயொரு தரம் எடுத்துக் காட்டும்படியாகக் கேட்டான். ஆத்தியப்பன் மறுக்க முடியாமல் சப்பாணிமேட்டிற்குக் கூட்டிப் போனபோது அங்கே எருமைகளைக் குளிப்பாட்டிக்கொண்டிருந்தார்கள். எந்தப் பாறையில் ஒளித்து வைத்தான் என்று சந்தேகமாகயிருந்தது.

இருவரும் ஒவ்வொரு பாறையாகத் தேடத் துவங்கினான். இருட்டும் வரை அவர்கள் தேடியும் அந்தப் புத்தகத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அந்தப் புத்தகத்தில் என்ன படமிருந்தது, அதிலிருந்த பெண் எப்படியிருந்தாள் என்று வள்ளிநாயகம் மாறி மாறிக் கேட்டுக் கொண்டேயிருந்தான். ஆத்தியப்பன் தான் கண்ட நிர்வாண உடல்களைப் பற்றி ஏதேதோ சொல்லத் துவங்கினான்.

படத்தைவிடவும் தான் வார்த்தைகளால் சொல்லத் துவங்கியபோது தான் அதிகமாக உணர்ச்சிகள் முறுக்கேறுவதை உணர்ந்தான். வள்ளி

நாயகம் ஏமாற்றத்தோடு தான் நாளை லீவு போட்டுவிடுவதாகவும் இருவரும் தேடி அந்தப் புத்தகத்தை எடுத்துவிடலாம் என்று சொன்னான். இருவரும் இருட்டிற்குள்ளாகவே ஒரு பாறையில் உட்கார்ந்து அந்தப் புத்தகம் பற்றியே பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போதும் தன் உடலில் உஷ்ணம் கொப்பளிப்பது போன்ற உணர்ச்சி மட்டும் ஆத்தியப்பனுக்கு இருந்து கொண்டேயிருந்தது. வள்ளிநாயகம் ஆதங்கத்துடன் 'நாம அந்த பொஸ்தகத்துக்குள்ளே போக முடிஞ்சா நல்லா இருக்குமில்லே' என்று சொன்னான். வேடிக்கையாக இருந்தபோதும் ஆசையாகவும் தானிருந்தது.

ஆத்தியப்பன் தன் பையை எடுத்துக்கொண்டு வீடு வந்து சேர்ந்த போது என்றுமில்லாமல் இன்று வீடு மிகச் சிறியதாகத் தோன்றியது. திடீரென தன் வீட்டில் இருப்பவர்களில் எத்தனை ஆண்கள், எத்தனை பெண்கள் என்று கண்கள் தானே பேதம் பிரிக்கத் துவங்கியது. வீட்டிலிருந்த சித்தி, அக்கா, அம்மா என யாவரும்கூட பெண்களாக மட்டுமே தென்படத் துவங்கினார்கள். கொடியில் கிடந்த சேலைகள், உள்ளாடைகள் யாவும் முதன்முதலாகக் காண்பவை போலவே தோன்றத் துவங்கின. பெண் குரல்கூட முன் கேட்காதது போலவே இருந்தது. அருகாமை வீடுகளில், தெருக்களில் என எங்கு பார்த்தாலும் பெண்களாக நிரம்பியிருப்பது போன்றும் தோன்றியது.

அவன் காபிகூட குடிக்காமல் வீட்டிலிருந்து வெளியேறி ஓடினான். திடீரென பயமாக இருந்தது. ஐந்து ரூபாயை எடுத்ததைப் பற்றிக் கண்டுபிடித்திருப்பார்களா? இன்றைக்கு பள்ளிக்கூடம் போகவில்லை என்பதை யாராவது வீட்டில் வந்து சொல்லியிருப்பார்களா என்று யோசனையாக இருந்தது. இதற்கிடையிலும் அந்தப் புத்தகத்தை எங்கே ஒளித்து வைத்தோம் என்று நினைவு தேடிக்கொண்டேயிருந்தது. உடம்பில் ஆங்காங்கே ரத்தம் பீறிட்டு கசிந்து வருவது போன்ற உணர்ச்சி தோன்றிக்கொண்டேயிருந்தது. உறங்கும் நேரம் வரை வீட்டிற்கு வரக் கூடாது என்று நினைத்தபடியே வெளியே போகத் துவங்கினான்

### பதினைந்து வயதின் இரவுப்பொழுது

ஆத்தியப்பன் உறங்கப் போகும்வரை யாரும் எதுவும் கேட்டுக் கொள்ளவேயில்லை. அவன் பாயை விரித்துப் படுத்துக்கொண்டபோது சித்தப்பா சைக்கிளை உள்ளே தூக்கி நிறுத்தும் சப்தம் கேட்டது. அவர் முகம் கழுவக்கூட போகாமல் சமையலறைக்கு வந்து ஆத்தி யப்பன் தூங்கிவிட்டானா என்று கேட்பது தெரிந்தது. ஆத்தியப்பன் கண்களை மூடிக்கொண்டான். சித்தப்பா அவனுக்காக பரோட்டா வாங்கி வந்திருப்பது தெரிந்தது. ஆனால் எழுந்து சாப்பிடப் போக வில்லை. அம்மாவோ சித்தியோ யாரும் எதையும் கேட்டுக்கொள்ளவே யில்லை. ஏன் இன்றைக்கு இப்படியிருக்கிறார்கள்? யாராவது தனது

தவறைக் கண்டுபிடிக்க மாட்டார்களா, ஏதாவது திட்ட மாட்டார்களா என்று ஆதங்கமாகயிருந்தது. சித்தப்பா சாப்பிட்டுவிட்டு ரேடியோவில் ஏதோ பாட்டு கேட்கத் துவங்கினார். அவனுக்குத் தூக்கம் வரவே யில்லை. தான் கடையில் வாங்கியது வெறும் புத்தகமில்லை, அது ஒரு ரகசிய சாலை என்று பட்டது. அவன் அதைப் பற்றி நினைத்துக் கொண்டே படுத்துக் கிடந்தான். அப்பா நெடுநேரத்திற்குப் பிறகு வீட்டுக் கதவைத் தட்டும் சப்தம் கேட்டது. அவரும் வந்த சில நிமிஷங்களிலே சாப்பிட்டுவிட்டு உறங்கத் துவங்கினார். அது அவன் குற்றவுணர்ச்சியை இன்னும் அதிகமாக்கியது.

திடீரென ஆத்தியப்பனுக்குத் தன் உடலில் இன்னொரு தலை முளைத்திருப்பது போலத் தோன்றியது. உடம்புகூட முன்னைப் போல இல்லாமல் கிளைகிளையாக எல்லா பக்கமும் விரிந்துகொண்டி ருப்பது போலிருந்தது. காட்டாறு போல உடம்பில் ரத்தம் வேகமாகி ஓடுவதை உணரத் துவங்கினான். அவனுக்கு ஏனோ பயமாகவும் வருத்தமாகவும் இருந்தது. தான் ஒரு மண்புழுவைப் போல நெளிந்து கொண்டிருப்பதாக உணர்ந்தான். அவன் படுத்திருந்த இடத்தில் பிசுபிசுவென ரத்தம் கசிந்து ஓடுவது போலத் தெரிந்தது. இருட்டிற் குள்ளாகவே அவன் எழுந்து தரையைத் தடவிப் பார்த்துக்கொள்ளத் துவங்கினான். வீட்டின் இன்னொரு அறையில் ரகசியமாகச் சிரிக்கும் ஒரு பெண் குரலும் ஆண் குரலும் கேட்டது. அவன் விளக்கைப் போடாமல் தரையைத் தன் கைகளால் துடைத்துக்கொண்டிருந்தான். புத்தகங்கள் நிஜமானவையா, இல்லை வெறும் மயக்கமா எனத் தெரியாத குழப்பமாகயிருந்தது. இரவிலும் தலைக்கு மேலாக சூரியன் ஒளிர்ந்துகொண்டிருப்பது போன்றிருப்பதைப் பற்றி அவன் யாரிடம் சொல்வது எனத் தெரியாமல் தத்தளித்துக்கொண்டிருந்தான். பிறகு அவன் யாரிடமும் அதைப் பற்றிக் கேட்கவோ பகிர்ந்துகொள்ள வோயில்லை.

மற்ற யாவர்களையும் போலவே ஆத்தியப்பனுக்கும் இப்படித்தான் கழிந்தது அவனது பதினைந்து வயது.

# அன்றைக்கு ஞாயிற்றுக்கிழமை

சுகவனத்திற்கு ஞாயிற்றுக்கிழமைகளில் இருந்த ஒரே வேலை தினமணி பேப்பரை முழுமையாகப் படித்து முடிப்பதுதான். அன்று ஒரு நாள் மட்டும்தான் அவர் பேப்பரை விலைக்கு வாங்குவார். மற்ற நாட்களில் அலுவலகத்திற்கு பேப்பர் வருகின்ற காரணத்தால் அங்கேயே வாசித்து விடுவார். ஆனாலும் ஞாயிற்றுக்கிழமை போல முழுமையாக வாசிக்க நேரம் கிடைப்பதில்லை. அவரது வங்கியில் பணிபுரிபவர்களுக்காக ஒரு மகிழ்வறையிருந்தது. அங்கே எப்போதும் இரண்டு பேர் கேரம் ஆடிக்கொண்டேயிருப்பார்கள். சுகவனமும் தினமும் நாலு மணிக்கெல்லாம் தனது இருக்கையை விட்டு எழுந்து மகிழ்வறைக்குள் போய்விடுவார். யார் விளையாடிக்கொண்டிருந்தாலும் அவரைக் கண்டதும் விலகிக்கொண்டு இடம் தந்துவிடுவார்கள்.

ஐந்தரை மணி வரை அவர் கேரம் விளையாடுவார். அந்த நேரங்களில் மட்டுமே அவர் கொஞ்சம் சந்தோஷமாக இருப்பது போன்று தோன்றும். மகிழ்வறையில் எப்போதும் தனியே சதுரங்கம் ஆடிக்கொண்டிருப்பார் தனபால். அவர் அலுவலகத்திலும் எவரோடும் சேர்ந்து உணவருந்துவதோ, அல்லது டீ குடிப்பதோகூட கிடையாது. அலுவலகத்திற்கு ரயிலில் புறப்பட்டு வரும்போதுகூட இது போல தனியே சதுரங்கம் ஆடிக்கொண்டு வருவார் என்றும் அதற்காகவே கையடக்கமான மரத்தில் செய்து சதுரங்கப் பலகையை வைத்திருந்தார் என்றும் சக ஊழியர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

சுகவனத்தின் உலகில் வங்கிக் கணக்குகளும் வாடிக்கையாளர்களும் மட்டுமே நிரம்பியிருந்தார்கள். சென்ற ஆண்டில் விடுப்பே எடுக்காமல் பணிபுரிந்தமைக்காக அவருக்கு சிறப்புச் சான்று வழங்கப்பட்டிருந்தது. சுகவனம் பள்ளி நாட்களிலே இருந்தே இந்தப் பழக்கத்தைக் கைக்கொண்டு வந்தார். இதற்காகவே வங்கிக்கு மிக அருகில் இருக்கு மாறு வாடகைக்கு வீடு எடுத்துக்கொண்டார்.

சுகவனத்திற்கு பதினெட்டு வருடங்கள் சர்வீஸ் முடிந்திருந்தது. இதில் மூன்று ஆண்டுகள் கல்கத்தாவில் பணிபுரிந்திருந்தார். அந்த நாட்களில்தான் மீன் சாப்பிடும் பழக்கம் பரிச்சயமானது. அங்கிருந்து

மாறுதலாகி வந்த பிறகும் அந்த பழக்கம் ஒட்டிக்கொண்டுவிட்டது. இன்று வரை மீன் சாப்பிடாமல் அவர் ஒரு ஞாயிற்றுக்கிழமையைக்கூட தவற விட்டதேயில்லை. ஏனோ அவருக்கு மீன் சந்தை ரொம்பவும் பிடித்த இடமாகயிருந்தது. அந்த நகரில் இருந்த மீன் சந்தை மிகவும் குறுகியது. நடைபாதைகளில்கூட மீனைக் குவித்து வைத்திருப்பார்கள். குவியல்குவியலாக மீன்களைக் காணும்போது அவருக்கு வேடிக்கையாக இருக்கும். உயிரோடு உள்ள மீன்களை மட்டுமே அவர் வாங்குவார். அதுவும் ஒரே மீன் விற்பவனிடமிருந்து மட்டும்தான் வாங்குவார். அவர் வாடிக்கையாக வாங்கும் கடை தெற்கு மூலையில் இருந்தது.

சில நேரங்களில் சுகவனம் நடந்து போகும்போது தண்ணீரில் நெளிந்துகொண்டிருந்த விரால் மீன்கள் துள்ளி தரையில் வாலை அசைத்தபடியே ஓட முயற்சிப்பதைக் கண்டிருக்கிறார். அந்த மீனைக் கையில் பிடிப்பது எளிதானதில்லை. அது கையை விட்டு நழுவிக் கொண்டேயிருக்கக்கூடியது. அழுத்திப் பிடித்தபோதும் கூட அந்த மீனிடம் ஒரு துள்ளல் இருந்துகொண்டேயிருக்கும். ஏனோ அந்த மீனின் துள்ளல் அவருக்குப் புணர்ச்சி வேட்கையை நினைவுபடுத்திக் கொண்டேயிருந்தது.

ஞாயிற்றுகிழமைகளில் மீன் சந்தைக்குள் அவர் ஏழு மணிக்குள் நுழைந்துவிடுவார். அரை மணி நேரம் சந்தை முழுவதும் சுற்றிவருவார். அந்த வாரத்தில் புதிதாக ஏதாவது மீன் கடலில் பிடிபட்டிருக்கிறதா என்பதைக் காண்பதில் அவருக்கு விருப்பமிருந்தது. இந்த ஆறு வருடத்தில் ஒவ்வொரு வாரமும் அப்படி ஏதாவது சில மீன்கள் புதிதாக சந்தைக்கு வருவதைக் கண்டிருக்கிறார். அந்த மீன்களின் பெயர்களேகூட விசித்திரமானதாகயிருக்கும்.

மீன் விற்கும் பெண்கள் தொடை வரை சேலையை ஏற்றிவிட்டபடி தொடையில் சாம்பலைத் தடவிக்கொண்டு மீனைத் துடைத்து சுத்தம் செய்து தருவதைக் காணும்போது மெல்லிய சிரிப்பாக வரும். அவர் எட்டு மணிக்கு மீன் வாங்கிக்கொண்டு சந்தையை விட்டு வெளியே வந்து சிவன் கோவிலை ஒட்டிய கடையில் தினமணி பேப்பரை வாங்கிக்கொள்வார். அநேகமாக அவரைப் பார்த்ததுமே ஒரு பேப்பரை சப்தமில்லாமல் உருவி கண்ணாடி பாட்டிலின் மீது வைத்துவிடுவான் கடைப்பையன்.

வீடு திரும்பும் வழியில் ஒரு மீன் மசாலாப்பொடி பாக்கெட்டை கவனமாக வாங்கிக்கொள்வார். வீடு திரும்பி மனைவியிடம் மீனை சமைக்கக் கொடுத்த பிறகு தனது சாய்வுநாற்காலியில் சாய்ந்து கொள்வார். அத்தோடு ஞாயிற்றுக்கிழமையில் அவரது வேலை முடிந்துவிட்டது. மதிய சாப்பாட்டிற்கு எழுந்துகொள்வதைத் தவிர பகலில் அவர் அந்த இடத்தை விட்டு நகரவே மாட்டார்.

பல நேரங்களில் பேப்பரை விரித்து படித்தபடியேகூட உறங்கிப் போய்விடுவார். குழந்தைகளிடம் பேசுவதிலோ, தொலைக்காட்சி பார்ப்பதிலோ அவருக்கு விருப்பமிருக்கவில்லை. எப்போதாவது

மாலையில் ரயில்வே நிலையம் வரை நடந்து சென்று அங்கிருந்த சிமெண்ட் பெஞ்சில் இருட்டும்வரை உட்கார்ந்திருந்திருப்பார். அந்த நேரத்தில் தனக்குப் பதவி உயர்வு வந்தால் கிடைக்கப் போகும் சம்பளம் எவ்வளவு? ஓய்வு பெற்ற பிறகு எந்த ஊரில் தங்குவது? பிள்ளைகளுக்கு எங்கே பெண் எடுக்க வேண்டும்? என்பது போன்ற எதிர்காலக் கனவுகளைப் பற்றி யோசித்துக்கொண்டிருந்துவிட்டு வீடு திரும்புவார். எட்டரை மணியானதும் படுக்கைக்குச் சென்று விடுவார். அடுத்த ஐந்தாவது நிமிஷத்தில் அவர் உறக்கத்திற்குள் அமிழ்ந்துவிடுவார். வருடத்தில் எல்லா ஞாயிற்றுக்கிழமைகளும் இப்படித்தானிருந்தன. இந்த ஒரு ஞாயிற்றுக்கிழமையைத் தவிர.

சுகவனம் மீன் வாங்கப் புறப்பட்டபோது தனது வீட்டுச் சுவரில் ஒரு சைக்கிள் சாய்த்து வைக்கப்பட்டிருப்பதைக் கண்டார். அது யாருடைய சைக்கிள் என்று தெரியவில்லை. அருகாமை வீடுகளில் உள்ள எவரோதான் இப்படி சைக்கிளை நிறுத்திவிட்டுப் போயிருக்கக் கூடும் என்று தோன்றியது. யாருடைய சைக்கிள் என்று கேட்கலாமா என்று யோசித்தார். ஆனால் எதற்காக நாம் அதை விசாரித்துக்கொள்ள வேண்டும் என்று நினைத்தபடியே அவர் புறப்பட இருந்தபோது அவரது மனைவி வாசல் வரை வந்து அந்த சைக்கிள் ரங்கநாயகி டாக்டரின் டிரைவர் நிறுத்திவிட்டுப் போயிருப்பதாகச் சொன்னாள்.

அவர் வீடு இருந்த தெருவின் முட்டுச்சந்தில் ரங்கநாயகி டாக்டரின் வீடு இருந்தது. டிரைவர் எதற்காக இங்கே சைக்கிளை நிறுத்தியிருக் கிறான் என்று கேட்க விரும்பினார். ஆனால் அதைக் கேட்காமலே மீன் வாங்கப் புறப்பட்டுப் போனார்.

வழக்கத்திற்கு மாறாக அன்று மீன் மார்க்கெட்டில் அதிகக் கூட்டமிருந்தது. அவர் வாடிக்கையாக மீன் வாங்கும் கடையில் வேறு யாரோ ஒரு பெண் இருந்தாள். அவள் மீன் விலையை அதிகம் சொன்னாள். எபினேசர் ஏன் கடைக்கு வரவில்லை என்று அவளிடம் கேட்டபோது அவள் பதில் சொல்லாமல் அவன்தான் வியாபாரத்தைக் கெடுத்து வச்சிருக்கான், ஆளுக்கு ஒரு விலை வச்சி வித்தா யாவாரம் உருப்படுமா என்று திட்டினாள். வேறு கடையில் போய் மீன் வாங்கலாமா என்றுகூட யோசித்தார். ஆனால் ஒரு நாள்தானே என்று வழக்கம்போல மீன் வாங்கிக்கொண்டு அவர் பைக்கை எடுத்துக்கொண்டு பாதி வழியில் வந்தபோதுதான் பேப்பரை வாங்க மறந்துபோன விஷயம் நினைவிற்கு வந்தது. அவர் திரும்பவும் போய் கோவில் கடையில் பேப்பரை வாங்கிக் கொண்டு வீடு திரும்பி வந்தார்.

அப்போது அவர் வீட்டின் முன்பாக சைக்கிளை எடுத்து துடைத்துக் கொண்டிருந்தான் ரங்கநாயகியின் டிரைவர். அவன் மெலிந்துபோனவ னாக இருந்தான். கண்கள் கலங்கிய மஞ்சள் நிறத்திலிருந்தன.

சிறுவர்கள் அணியும் சட்டை போல பொம்மைகள் போட்ட சட்டை அணிந்திருந்தான். சுகவனத்தைப் பார்த்ததும் அவனாகவே டயர் பஞ்சராகிப் போச்சி, அதான் நிறுத்திட்டுப் போயிருந்தேன், சைக்கிள் கடை திறந்ததும் எடுத்துட்டு போயிடுறேன் எனச் சொன்னான்.

சுகவனம் தலையாட்டியபடியே வாசல் கேட்டைத் திறந்து தன் வீட்டினுள்ளே போனார். சில நிமிஷங்களில் டாக்டரின் டிரைவர் அவர் பின்னாடியே கேட்டைத் திறந்துகொண்டு வீட்டினுள் வருவது தெரிந்தது. சுகவனத்தின் மனைவி அவனிடம் ஏதோ பேசிக் கொண்டிருந்த சப்தம் கேட்டது. அவர் தினமணி பேப்பரைப் பிரித்தபடியே அவர்களை கவனிக்காதது போல இருந்தார்

சில நிமிஷங்களுக்குப் பிறகு அவரது மனைவி அருகில் வந்து உங்ககிட்டே ஏதோ கேட்கணுமாம் என்று சொன்னாள். அந்த டிரைவர் கையைக் கட்டிக்கொண்டு மிகுந்த தயக்கத்துடன் நின்றான். அவர் திகைப்போடு நிமிர்ந்து பார்த்துவிட்டு என்ன வேணும் என்று கேட்டார். அவன் மிகத் தயக்கத்துடன் கார் வாங்குவதற்கு அவர்களது வங்கியில் லோன் தருவார்களா என்று கேட்டான். அவர் எரிச்சல் அடைந்தவரைப் போல உனக்கெல்லாம் தர மாட்டார் கள் என்று சொன்னார். அவன் தனக்காக இரண்டு பேர்கள் ஜாமீன் போடுவார்கள் என்றும் தேவைப்பட்டால் தான் ஒரு லட்சம் வரை பணம் புரட்டி முன்தொகையாகக் கட்ட முடியும் என்றான். அவர் லோன் கிடைப்பது எளிதானதில்லை, அதற்கு நிறைய விதிமுறைகள் இருக்கிறது, அத்தோடு இதுபோன்ற விஷயங்களை வீட்டில் வந்து கேட்கக் கூடாது என்று குரலை உயர்த்திச் சொன்னதும் அவன் மௌனமாக வெளியேறி முன்வாசலைப் பூட்டிவிட்டு நடந்து போவது தெரிந்தது.

அவன் வாசலுக்குப் போனபோதுதான் கவனித்தார். அவன் போட்டிருந்த தேய்ந்துபோன நீல நிற ஸ்லீப்பர்கள் இரண்டும் வாசல்படி அருகே கழட்டிவிடப்பட்டிருந்தன. அவர் தனது மனை வியை அழைத்துச் சொன்னதும் அவள் தான் டிரைவரை எடுத்துக் கொள்ளச் சொல்வதாகச் சொன்னாள். சுகவனம் திரும்பவும் பேப்பர் படிக்கத் துவங்கினார்.

**ப**தினோரு மணிக்கு அந்த அலறல் சப்தம் கேட்டது. டாக்டர் வீட்டிற்கு அருகாமையில் இருந்த விஜயமல்லிகா தெருவில் நின்று கொண்டு கத்திக்கொண்டிருந்தாள். யாரோ ஒரு பெண் அவர்கள் வீட்டைக் கடந்து வேகமாகப் போய்க்கொண்டிருந்தாள். அவர்கள் வீடு இருந்த பகுதியைச் சுற்றிலும் அரசு அலுவலகக் கட்டிடங்களே யிருந்தன. குடியிருப்புகளாக உள்ளவை இருபது முப்பது வீடுகளே.

அதுவும் சுகவனத்தின் வீடு இருந்த தெருவில் பதினோரு வீடுகளே யிருந்தன. தெருவின் கிழக்காகக் கலால் வரித் துறையின் அலுவலகமும் வடக்கே மின்வாரியத் துறை அலுவலகமும் இருந்தது. விஜயமல்லிகா வின் கூச்சலைத் தொடர்ந்து சதாசிவ நாயுடுவின் வீட்டிலிருந்து அவரது மனைவியும் மருமகள்களும் தெருவில் நின்று அய்யோ அய்யோ என்று கத்திக்கொண்டிருந்தார்கள்.

சுகவனம் தனது மடியில் இருந்த பேப்பரை மடித்து வைத்துவிட்டு தெருவிற்கு வந்தபோது அவரது மனைவியும் தெருவில் நின்று கொண்டிருந்தாள். எல்லோரது முகத்திலும் அழுகையும் பதட்டமும் தெரிந்தது. பனியன் மட்டுமே அணிந்த இரண்டு ஆண்கள் கையில் பெரிய விறகுக்கட்டையுடன் ரங்கநாயகி டாக்டரின் வீட்டை நோக்கி ஓடினார்கள். அதற்குள் மின்வாரியத் துறையில் இருந்த வாட்ச்மேன்கள் இருவர் தொலைவில் ஓடி வருவது தெரிந்தது. ரங்கநாயகி வீட்டைச் சுற்றிலும் ஒரே கூச்சலாக இருந்தது. வரித் துறை அலுவலக வாட்ச்மேன்களில் ஒருவன் சப்தமாகக் கத்தினான்.

ஆள் உள்ளேதான் இருக்கான். வாசலை திறந்து விட்ராதீங்க.

வாசலைச் சுற்றி நின்றிருந்தவர்களில் ஒரு பெண் வேகமாக ஓடி ரங்கநாயகி வீட்டின் இரும்பு கேட்டை மூடினாள். உள்ளே டாக்டரின் கார் பாதி சுத்தம் செய்யபட்ட நிலையில் தண்ணீர் வழிய நின்றிருந்தது. இதற்குள் விஸ்வநாதன் வீட்டில் உள்ள தண்ணீர் டேங்க் வழியாக மின்வாரியக் காவலாள் டாக்டர் வீட்டிற்குள் நுழைவதற்கு முயற்சி செய்துகொண்டிருந்தான். அருகாமையில் இருந்த ஓர்க்ஷாப்பிலிருந்து இரண்டு மூன்று பேர் ஓடி வந்து கொண்டிருந்தார்கள்.

சுகவனத்திற்கு என்ன நடக்கிறது என்றே தெரியவில்லை. அவரது மனைவியும் இரண்டு பெண்களும் கையை உயர்த்தி ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். ஒரு பெண் விட்டு விட்டு அழுதுகொண்டிருப்பது தெரிந்தது. விஸ்வநாதன் வீட்டின் வழியாக ஏறி டாக்டர் வீட்டில் நுழைந்த ஆள் கத்தினான்

டாக்டரைக் கொன்னுட்டான். வீடு பூரா ஒரே ரத்தம். போலீசுக்கு போன் பண்ணிச் சொல்லுங்க.

தெருவில் இருந்த பெண்களில் ஒருத்தி வாய்விட்டு அய்யோ என்று கத்தும் சப்தம் கேட்டது. வாட்ச்மேன்களில் ஒருவன் வாசற் கதவைப் பிடித்தபடியே உள்ளே எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தான். சுகவனம் தன் வீட்டிற்குத் திரும்பிப் போய்விடலாமா அல்லது தெருவிலே நிற்கலாமா என்று யோசித்தபடியிருந்தார்.

சில நிமிஷங்களில் டாக்டர் வீட்டின் வாசற்கதவு திறக்கப்பட்டது. திறந்துவிட்ட மின்வாரிய ஆள் கொலையாளி உள்ளே ஒளிந்து கொண்டிருக்கிறான். அடிப்பதற்காக ஆளுக்கொரு கட்டை எடுத்துக் கொள்ளும்படியாகச் சொன்னான். கையில் கிடைத்ததெல்லாம்

பலரும் எடுத்துக்கொண்டு மாடியேறிப் போனார்கள். சுகவனம் நீண்ட யோசனைக்குப் பிறகு டாக்டர் வீட்டிற்குள் நுழைந்தார். கறுப்பு கிரானைட் பதித்த வீடு. பெரிய ஹால். அதில் எங்கு பார்த்தாலும் சாமிப் படங்களாக இருந்தது. பெரிய சோபா, ஒரு மூலையில் வெளிநாட்டிலிருந்து கொண்டுவரப்பட்டிருந்த மிக அகல மான டி.வி. சிடி பிளேயர். டெலிபோன். வீடு சுத்தமாக இருந்தது. ரங்கநாயகி டாக்டர் திருமணம் செய்துகொள்ளாமலே வாழ்ந்து கொண்டிருந்தாள். அவளுக்கு வயது ஐம்பதைக் கடந்திருந்தது. ஆள் நடுத்தர உயரத்தில் மெலிவான உடலமைப்பு கொண்டிருந்தாள். அவளது புகைப்படம் எதுவும் வீட்டில் காணப்படவில்லை.

இன்னொரு அறையில் உடற்பயிற்சிகள் செய்யும் கருவிகளிருந்தன. ஒரே சுவரில் இரண்டு கடிகாரங்கள் மாட்டப்பட்டிருந்தன. மாடியில் அவளது படுக்கையறை இருந்தது. அவர் மாடிப்படிகளில் ஏறிக் கொண்டிருக்கும்போது முன்னதாகவே மாடிக்கு ஏறியிருந்த ஒரு பெண் மூச்சிரைக்க படுபாவி இப்படி செஞ்சு போட்டானே என்று அழுதபடியே மூக்கைத் துடைத்துக்கொண்டு கீழே வந்துகொண்டிருந் தாள். சுகவனம் மேலே போகலாமா கீழே இறங்கிவிடுவதா என்று தெரியாமல் நின்றுகொண்டேயிருந்தார்.

மாடியின் மேற்குப் பக்கமிருந்த ஒரு அறைக்கதவை சிலர் தட்டிக் கொண்டு இருப்பது கேட்டது. ஒரு வாட்ச்மேன் வேகமாக கீழே இறங்கி ஓடினான். சில நிமிஷங்களில் யாரோ ஜன்னல் கண்ணாடியை உடைக்கும் சப்தம் கேட்டது. அதன் பின்பாக சுத்தியலால் இரும்புக் கம்பிகளை அடிக்கும் சப்தமும் கேட்டது.

சுகவனம் மாடியில் இருந்த படுக்கையறைக்குள் போனபோது ஆண்களும் பெண்களும் நெருக்கமாக இடித்துக்கொண்டு நின்றிருந்த னர். அவர்கள் முகங்களில் கலக்கம் கூடியிருந்தது. அவர்கள் எதையோ பார்த்துக்கொண்டிருந்தார்கள். தானும் எட்டிப் பார்க்க லாமா என்று சுகவனத்திற்கு தோணியது. அவர் முன் காலை ஊன்றி எட்டிப்பார்த்தபோது உள்ளே கேசம் விரிந்து கிடக்க வாயிலிருந்து ரத்தம் ஒழுக ரங்கநாயகி படுத்துக் கிடப்பது தெரிந்தது. அவளது கேசத்தில்கூட ரத்தம் படிந்திருந்தது. அவளது ஒரு கை மடங்கியிருந்தது.

வாட்ச்மேன் ஜன்னலை உடைத்தபடியே கத்தினான்.

கொலைகாரன் கத்தியோட உள்ள நிக்குறான். வெளியே நிக்குறவங்க அப்படியே கீழே இறங்கிப் போயிருங்க. தப்பிக்கும்போது குத்தினாலும் குத்திருவான்.

அவன் குரல் கேட்ட சில நிமிஷங்களில் மாடியிலிருந்தவர்கள் அவசரமாகக் கீழே இறங்கினார்கள். சுகவனம் இப்போது ரங்கநாயகியை முழுமையாகப் பார்த்தார். அவள் அடிவயிற்றில் கத்திக் குத்து விழுந்திருக்கிறது. வயிறு கிழிந்துபோய் குடல்கள் வெளியே பிதுங்கி சரிந்து கிடந்தன. உடலைச் சுற்றிலும் ரத்தம் பொங்கி வழிந்திருக்கிறது. அவள் உடலின் மீது இப்போதுதான் யாரோ சேலையைப் போட்டிருக்

கிறார்கள் என்பது தெரிந்தது. அவளது மயிர் அடர்ந்த பெண் உறுப்புகூடத் தெளிவாக தெரிந்தது. கால்களில் ஒட்டியிருந்த ரத்தம் உறைந்துபோயிருந்தது.

படுக்கைக்கு மிக அருகாமையில் வீழ்ந்து கிடந்தாள். படுக்கை மிக சுத்தமானதாக இருந்தது. அதில் வெண்ணிற உறைகளிட்ட நான்கு தலையணைகளிருந்தன. மெத்தையின் ஒரு புறத்தில் ஒரு ஆரஞ்சு நிறச் சேலையும் உள்பாவாடையும் தனியே எடுத்து வைக்கப் பட்டிருந்தது. அப்போதுதான் குளித்துவிட்டு வந்திருக்கிறாளோ என்று தோணியது.

அவளது வழக்கமான கண்ணாடி அணிந்த தோற்றத்திற்கும் இப்போது வீழ்ந்து கிடப்பதற்கும் இடையில் சம்மந்தமேயில்லாம லிருந்தது. அவள் இறந்து கிடக்கிறாள் என்பதே நம்ப முடியாதது போல இருந்தது. சுகவனம் பார்த்துக்கொண்டிருக்கும்போதே அருகாமையிலிருந்த அறைக்கதவு திறக்கப்பட்டு வாட்ச்மேன் ஒரு ஆளை கையைப் பின்னாடி கட்டி தள்ளிக்கொண்டு வெளியே வந்தான். சுகவனம் ஏறிட்டுப் பார்த்தபோது அது டாக்டரின் டிரைவர்.

வாட்ச்மேன் அவனை அடித்திருக்கக்கூடும். உதட்டிலிருந்து ரத்தம் வழிந்துகொண்டிருந்தது. டிரைவரின் சட்டைப் பையில் சமையலுக்குப் பயன்படுத்தப்படும் கத்தி ஒன்று தெரிந்தது. வாட்ச்மேன் அந்த டிரைவரின் பிடதியைப் பிடித்துத் தள்ளி கீழே கூட்டிப்போனான். வாசலில் நின்றிருந்த ஆட்கள் ஆவேசத்துடன் அந்த ஆளை நெருங்கி வருவது தெரிந்தது.

சுகவனம் கீழே வருவதற்குள் ஆளுக்கு ஆள் அவனை அடித்துக் கொண்டிருந்தார்கள். அவன் இத்தனை அடி வாங்கிய பிறகும் சப்தமிடவேயில்லை. உறைந்துபோய்விட்டவனைப் போல இருந்தான். சுகவனம் நெருங்கிச் சென்று பார்த்தார். அவன் முகத்தில் சலனமே யில்லை. எதற்காக அவன் டாக்டரைக் கொன்றான் என்று பலரும் திரும்பத் திரும்ப கேட்டுக்கொண்டேயிருந்தார்கள். அவன் பதில் சொல்லவேயில்லை. அவனைக் காவல் நிலையத்தில் கொண்டுபோய் ஒப்படைப்பதற்காக நாலைந்து பேர் தள்ளிக்கொண்டு புறப்பட்டபோது சுகவனத்தையும் அழைத்தார்கள். அவரது மனைவி சார் இன்னும் சாப்பிடவேயில்லை என்று சொன்னாள். அவர்கள் மறுபேச்சின்றி கடந்துபோனார்கள்.

டாக்டரின் வீடு திறந்தே கிடந்தது. யாரோ உள்ளே போவதும் வருவதுமாக இருந்தார்கள். சுகவனம் திரும்பிவந்து தனது சாய்வு நாற்காலியில் சாய்ந்துகொண்டபோது அவரது மனைவி மிகுந்த ஆதங்கத்துடன் சொன்னாள்.

அந்த டிரைவர் காசு கேட்டானாம். டாக்டர் இல்லைனு சொன்ன தும் ஆத்திரமாகி கத்தியாலே வயிற்றிலே பதினாலு குத்து குத்தியிருக் கான். டாக்டரும் கத்தியிருக்காங்க. ஆனா வெளியே கேட்கவே

யில்லை. பக்கத்து வீட்டு விஜயமல்லிகா கேட்டிருக்கா. உயிர் போற சப்தமில்லே. அதைக் கேட்டு பயந்துபோய் டாக்டர் வீட்டு காலிங் பெல்லை அடிச்சிருக்கா. ஆனா கதவை யாரும் திறக்கவேயில்லை. அவங்க வீட்டு வாட்டர் டேங்க் பக்கம் போயி எட்டிப் பாத்திருக்கா. உள்ளே கையில் கத்தியை வச்சிகிட்டு அந்த டிரைவர் நிக்குறானாம். பாவம் ஐம்பது வயதுகூட முடியலை. தனியா வாழ்ந்த பொம்பளை. இவ்வளவு சம்பாரிச்சி என்ன பிரயோசனம். பொட்டுனு நிமிசத்தில போயிட்டா.

சுகவனம் அதிர்ச்சியிலிருந்து மீள முடியாதவராக இருந்தார். அவர் தன் மனைவி பேசியது எதையும் கேட்டுக்கொள்ளவேயில்லை. அவர் அறியாமல் மனது நடுங்கத் துவங்கியிருந்தது. வாழ்நாளில் முதல் முறையாக அப்போதுதான் ஒரு கொலை செய்யப்பட்ட உடலை அவர் தன் கண்ணால் பார்க்கிறார். அதுவும் வயிறு கிழிபட்டு செத்துக் கிடப்பதைக் காணும்போதே கைகள் தன்னை அறியாமல் நடுங்கத் துவங்கியிருந்தன.

அந்த டிரைவரைப் பிடித்து வெளியே கொண்டுவரும்போது அவன் முகத்தில் இருந்த தீவிரம் வேறு அவரை ரொம்பவும் கலக்கமடைய வைத்திருந்தது. திடீரெனத் தோன்றியது. இப்படி தன்னையும் எவராவது ஒரு நிமிஷத்தில் கொலை செய்துவிட்டுப் போய்விட முடியுமில்லையா? வாழ்க்கை இவ்வளவுதானா? அந்த டாக்டர் குளித்துவிட்டு வெளியே வரும்போது இந்த கொலை நடக்கப்போகிறதைப் பற்றி நினைத்திருப்பாளா? யோசிக்க யோசிக்க உடலில் மெல்லிய நடுக்கம் உருவாகிக்கொண்டேயிருந்தது.

அவர் மனைவி சாப்பிடுகிறாரா எனக் கேட்டதற்குக்கூட அவர் பதில் பேசவேயில்லை. அன்று மதியத்திற்குள் ஒரு போலீஸ் ஜீப் நிறைய ஆட்கள் வந்திருந்தார்கள். அநேகமாக அருகாமை வீட்டிலிருந்த எல்லோரிடமும் போலீஸ்காரர்கள் விசாரித்துக்கொண்டிருந்தார்கள். சுகவனத்தின் மனைவிகூட கான்ஸ்டபிளிடம் தனக்குத் தெரிந்த விபரங்களைச் சொல்லிக்கொண்டிருந்தாள். பத்திரிகையாளர்களும் புகைப்படக்காரர்களும் வருவதும் போவதுமாக இருந்தார்கள். நகரின் வேறு பகுதியில் இருந்துகூட ஆண்களும் பெண்களும் டாக்டர் வீட்டிற்கு வந்து பார்த்து போய்க்கொண்டிருந்தார்கள்.

சுகவனம் அன்று மதியம் சாப்பிடவேயில்லை. பிள்ளைகள் வழக்கம் போல சாப்பிட்டுவிட்டு தெருவில் விளையாடிக்கொண்டிருந்தார்கள். சுகவனத்தின் மனைவி வீட்டிற்கு வருவதும் தெருவிற்குள் போய் யாரையாவது சந்தித்துவிட்டு வருவதுமாகவே இருந்தாள். பிறகு அவரிடம் சாவு வீட்டிற்குள் நுழைந்து வந்த நீங்கள் குளிக்க வேண் டாமா என்று கேட்டாள். அவர் குளிப்பதாகச் சொன்னார். அவள் குளியல் அறையில் துண்டும் சோப்பும் எடுத்து வைத்துவிட்டு தான் விஜயமல்லிகா வீடு வரை போய்விட்டு வருவதாகச் சொல்லிய படியே வெளியே கிளம்பினாள்.

சுகவனம் குளிப்பதற்காக ஆடைகளைக் களைந்தபோது பயமாக இருந்தது. இந்த உடல் இவ்வளவு உறுதியற்றதா? ஒரு கத்தி இதைத் துண்டுதுண்டாக்கிவிடும் என்றால் எதற்காக இதை இவ்வளவு பேணிப் பாதுகாக்க வேண்டியிருக்கிறது. கத்தி நுழையாதபடிக்கு உடம்பை எப்படி வைத்துக்கொள்வது? அவர் யோசனையோடு தண்ணீரை அள்ளி தலையில் ஊற்றினார்.

திடீரென டாக்டரின் நிர்வாண உடல் நினைவிற்கு வந்தது. அந்தத் தெருவில் இருந்த அத்தனை பேரும் அவளது நிர்வாணத்தைக் காண்பார்கள் என்று அவள் எப்போதாவது யோசித்திருப்பாளா? எதற்காக அவளுக்கு இந்தத் தண்டனை.? அவளது நிர்வாணம் அந்தக் கொலையாளிக்கு காமத்தை உண்டாக்கியிருக்குமா? அவளது வாழ்க்கை ஏன் இப்படி பாதியில் அர்த்தமற்று துண்டிக்கப்பட்டு விட்டது? அவர் குளித்துக்கொண்டேயிருந்தார். எவ்வளவு நேரம் தண்ணீரை ஊற்றிக்கொண்டேயிருந்தார் என்று தெரியவில்லை. பயமாகவும் கலக்கமாகவும் அழ வேண்டும் போலவுமிருந்தது.

அவர் குளித்துவிட்டு வெளியே வந்தபோது அவர் மனைவி சமையலறையில் தனியே அமர்ந்து சாப்பிட்டுக்கொண்டிருந்தாள். தரையில் ஒரு குவியலாக மீன்முட்களிருந்தன. அவர் தலை குனிந்த படியே அறைக்குச் சென்று உடை மாற்றத் துவங்கினார். அவள் சோப்பை ஏன் எடுத்துக்கொள்ளவில்லை என்று கேட்டாள். அவர் பதில் பேசவேயில்லை. தட்டிலிருந்த சாதத்தைச் சாப்பிட்டபடியே அவரது மனைவி சொன்னாள்:

காலையில் கூட நம்ம வீட்டுக்கு வந்து அந்த டிரைவர் நல்லாதானே பேசினான், எதுக்கு இப்படி செஞ்சான்?

அவருக்கு நடுக்கம் அதிகமாகத் துவங்கியது. காலையில் அவர் கடுமையாகப் பேசியதுகூட அந்தக் கொலைக்குக் காரணமாக இருந்திருக்குமா? ஏன் அவனிடம் அப்படி பேசினார்? அவனை ஏன் வங்கியின் வாடிக்கையாளராக மனது ஏற்றுக்கொள்ள மறுத்தது? அவர் வெளுத்த வேஷ்டியும் சட்டையும் போட்டுக்கொண்டார். ஈரம் படிந்த தலையை அப்படியே சீவிவிட்டுக்கொண்டு வாசலுக்கு வந்தபோது அவர் மனைவி சாப்பிடவில்லையா என்று கேட்டாள். அவர் தான் வெளியே போய்விட்டு வருவதாகக் கிளம்பினார்.

பைக்கை எடுத்துக்கொண்டு சாலைக்கு வந்தபோது எங்கே போவது என்று தெரியவில்லை. அவர் அறியாமலே பைக் மீன் சந்தையை நோக்கிப் போகத் துவங்கியது. பின்மதிய நேரத்தில் மீன் சந்தைக்குள் போனபோது யாருமேயில்லை. காகங்கள் மட்டுமே குப்பையில் கிடந்த மீன் துண்டுகளைக் கொத்திக்கொண்டிருந்தன. வழக்கமாக நடைபாதை ஓரங்களில் காணப்படும் பெண்களில் ஒருத்தியைக்கூட காணவில்லை. அவர் மீன் சந்தையின் உள்ளே நடந்து போனபோது ஒரேயொரு பெண் மட்டும் நாற்காலியில் அமர்ந்தபடியே சாப்பிட்டுக் கொண்டிருந்தாள். சாவின் துர்நாற்றம் நெருக்கமாக அடிப்பது

போன்று தோணியது. ஏன் மீன் சந்தைக்கு வந்தோம் என்று பயந்தவராக வெளியே நடந்தார். வழியில் வெயிலில் உலர்ந்துகொண்டிருந்த ஒரு மீனின் கண்ணைக் காகம் கொத்திக்கொண்டிருப்பது தெரிந்தது. மீனிடம் சலனமேயில்லை. உலகம் ஒரே நிமிஷத்தில் வாழ்வதற்கு கொஞ்சமும் தகுதியற்ற இடத்தைப் போலத் தோன்றியது.

திடீரென தோணியது. அந்தக் கொலையாளி அன்று காலையில் தன்னிடம் மட்டும்தானே பேசினான்? எதற்காக அவன் தன்னைத் தேர்ந்து எடுத்தான். அவன் சைக்கிளை எதற்கு என் வீட்டுச் சுவரில் சாய்த்து நிறுத்தினான். எதற்காகப் படிக்கட்டில் அவனது செருப்பை விட்டுப் போனான். இவையெல்லாம் அந்தக் கொலையைப் பற்றிய முன்னறிவிப்புகளா? இந்த நேரம் அந்த கொலையாளி சாப்பிட்டு இருப்பானா? அவன் இந்த சந்தைக்கு வந்து மீன் வாங்குகின்றவனா? அவன் மனைவி, குழந்தைகள் இந்நேரம் என்ன செய்து கொண்டிருப் பார்கள்?

யோசனைகள் அவரைக் கடுமையாக அழுத்தத் துவங்கின. வேறு எங்காவது நடந்து போகலாம் என்று தோணியது. வழக்கமாக பேப்பர் வாங்கும் கடையின் முன்பாக தனது பைக்கை நிறுத்திவிட்டு அவர் நகரின் உள்ளே நடந்து செல்லத் துவங்கினார்.

பெரும்பான்மைக் கடைகள் அடைத்து சாத்தப்பட்டிருந்தன. அவர் நகரின் பிரதான வீதிகளை விலக்கித் தெருக்களுக்குள் நடந்து போகத் துவங்கினார். திடீரென வீடுகள் பாதுகாப்பு அற்றவையாகத் தோன்றத் துவங்கின. இத்தனை இரும்பும் கற்களும் கொண்டு வீட்டைக் கட்டியதால்தானே உயிர் போகும் சப்தம்கூட அடுத்த வீட்டிற்குக் கேட்க மறுக்கிறது. அவர் தலைகவிழ்ந்தபடியே வெகுநேரம் நடந்தார். புறவழிச் சாலையை ஒட்டிய ஒரு பாலத்தில் வந்து அமர்ந்துகொண்டபோது இந்த ஆறு வருடத்தில் இப்படியொரு பாலம் இருப்பதை இப்போதுதான் முதன்முதலாகக் காண்பது நினைவிற்கு வந்தது.

வாழ்வைப் பற்றிய பயம் கொஞ்சம்கொஞ்சமாகத் தலைக்கு ஏறி சாவு எல்லா திக்கிலும் சுற்றிக்கொண்டிருப்பதாகத் தோன்றியது. ஏதோ ஒரு அதிர்ஷ்டம் மட்டுமே நம்மை வாழ வைத்துக்கொண்டிருக் கிறது என்று அவருக்குத் தோன்றியது. எதற்காக இந்த வேலை, வீடு, குழந்தைகள் என்று எல்லாமும் அச்சம் தருவதாக யிருந்தன. தனபால் போன்றவர்கள் இதை அறிந்துகொண்டதால் தான் தனியே சதுரங்கம் ஆடிக்கொண்டிருக்கிறாரா? இருட்டும் வரை அவர் அங்கேயே இருந்தார்.

பிறகு வீடு திரும்புவதற்காக நடந்து வந்தபோது நகரில் எப்போதும் போல இரவு உணவுக் கடைகளில் கூட்டம் நிரம்பி வழிந்து கொண்டிருந்தது. கொத்து பரோட்டா போடுகின்றவனின் கைகள் தோசைக்கல்லில் எழுப்பும் ஓசை தொலைவு வரை கேட்டுக் கொண்டிருந்தது. அவர் மெதுவாக வீடு நோக்கி நடந்து வந்தார்.

வழியில் ஒரு கடையில் தொங்கிக்கொண்டிருந்த மாலை தினசரியின் விளம்பரத்தில் டாக்டர் ரங்கநாயகி கண்ணாடி அணிந்தபடியே தனது மரணத்தின் சாட்சிப் பொருளாக இருந்தாள்.

அவள் உயிரோடு இருந்தபோது யாரும் அவள் வீட்டிற்குள் போய்ப் பார்த்ததேயில்லை என்று தோணியது. அவளும் யாரோடும் பேசியதுகூட இல்லை. அவர் வீடு திரும்பி வந்தபோது வழக்கத்திற்கு மாறாகத் தெரு மிக அமைதியாக இருந்தது. அவரது மனைவி, குழந்தைகள் உறங்கிப்போயிருந்தார்கள்.

அவர் அழைப்பு மணியை அழுத்தியபோது பாதி உறக்கத்தோடு வந்த அவரது மனைவி கதவைத் திறந்து விட்டவளாக பைக் எங்கே என்று கேட்டாள். அதை எடுக்க மறந்துபோனதைச் சொல்ல விரும்பாமல் பஞ்சர் என்று சொன்னார். அவள் உள்ளே போய்விட்ட பிறகு அவர் தயக்கத்தோடு வெளியே நின்றிருந்த டிரைவரின் சைக்கிள் இருக்கிறதா என்று பார்த்துக்கொண்டார். அந்த இடத்தில் சைக்கிள் இல்லை.

அவருக்காக சாப்பாடு எடுத்து வைத்துக்கொண்டிருந்தாள். சுகவனம் தான் சாப்பிட்டு வந்துவிட்டதாக சொல்லியபடியே உடையை மாற்றினார். அந்த டிரைவர் வீட்டுச் செலவுக்கு இருநூறு ரூபாய் பணம் கேட்டானாம். டாக்டர் தர மாட்டேன் என்றதால் ஆத்திரத்தில் தான் கொலை செய்துவிட்டதாகப் போலீசில் வாக்குமூலம் கொடுத்திருப்பதாகச் சொல்லியபடியே ஒரு கான்ஸ்டபிள் வந்து டிரைவரின் சைக்கிளை எடுத்துக்கொண்டுவிட்டான் என்று சொன்னாள் சுகவனத்தின் மனைவி.

அவர் படுக்கையில் சென்று படுத்துக்கொண்டார். நெடுநேரத்திற்கு உறக்கம் வரவேயில்லை. படுக்கையில் புரண்டபடியே கிடந்தார். இரவு நீண்டுகொண்டேயிருந்தது. பிறகு படுக்கையில் இருந்து வெளியே வந்து வாசற்கதவைத் திறந்து படியில் உட்கார்ந்து கொண்டபோது படியை ஒட்டிக் கிடந்த கொலையாளியின் செருப்புகள் கண்ணில் பட்டன.

இனி அவன் செருப்பு அணிந்து நடப்பானா? எல்லா கொலைக்கும் ஏதாவது ஒரு காரணம் இருக்கத்தான் செய்யுமில்லையா? உயிர் வாழ்வது எவ்வளவோ பெரிய விஷயமில்லையா? இனி இந்தச் செருப்புகளுக்கும் அவன் கால்களுக்கும் தொடர்பேயில்லையா? இவைகளும்கூட கொலையாளியின் செருப்புகள் என்று புறக்கணிக்கப் பட்டுவிடுமா?

அவர் இருளைப் பார்த்தபடியே உட்கார்ந்திருந்தார். பிறகு ஒரு வாரத்திற்கு லீவு போட்டுவிட்டு ஊருக்குப் போய்விட்டு வரலாம் என்று நினைத்தார். காலை பேப்பரில் மிச்சம் படிக்க வேண்டியது இரண்டு பக்கம் இருப்பது நினைவிற்கு வந்தது. தான் மதியத்திலிருந்து சாப்பிடவில்லை என்பது நினைவிற்கு வந்தது. கடைசியாக இன்று ஞாயிற்றுக்கிழமைதானா என்று சந்தேகமாக இருந்தது.

நெடுநேரம் அவர் செய்வதறியாமல் இருளைப் பார்த்தபடியே உட்கார்ந்திருந்தார். தெருவைக் கடந்து செல்லும் கூர்க்காவின் விசில் சப்தம் தனியே கேட்டது. அவர் உறங்குவதற்காக எழுந்தபோது அருகாமை வீட்டில் அலாரம் சப்தம் கேட்டது. யாரோ ஒரு பள்ளி மாணவி விடிகாலையில் எழுந்து பாடம் படிக்கத் துவங்கி யிருந்தாள். அவர் படுக்கைக்குப் போனபோது இதுவரை நடந்தது எல்லாம் ஒரு கனவாக ஏன் இருக்கக் கூடாது என்று நினைத்துக் கொண்டார். ஆனால் அதை மனது ஏற்றுக்கொள்ள மறுத்தது. சாவு எங்கிருந்தோ எட்டிப் பார்த்துக்கொண்டேயிருப்பது போலத் தோன்றி மனதை அழுத்தியது. அதைப் பற்றி நினைத்தபடியே அவர் உறங்கத் துவங்கியபோது அவரது வீட்டு அலாரம் அடிக்கத் துவங்கி மனைவி பால் வாங்குவதற்காக எழுந்து வெளியே போகத் துவங்கியிருந்தாள்.

# கிளைவிடும் சரித்திரங்கள்

*இமு சுல்தானின் கறுப்புச் சரித்திரம்*
*எனும் பக்கீர் சதாமுல்லாவின் ஜீவிதக் குறிப்புகள்*
*மொழியாக்கம் பவுல் ரெவர்ட் & ஏ.டி.ரீச்*
*முதல் பதிப்பு 2006*
*பதிப்பாளர்கள்: விண்ட் கோல்மென். லண்டன்.*
*விலை $60*

*1282ல் டெல்லி வந்த பாரசீகப் பயணிகளில் ஒருவரான அமீர் அன்சில் முகமது, இந்தியாவில் இரண்டு விதமாக சரித்திரம் பதிவு செய்யப்படுகின்றது. ஒன்று மன்னருக்கு விசுவாசமானது. மற்றொன்று உண்மையிலேயே நடந்தது. இதில் மன்னருக்கு விருப்பமானதை மட்டுமே வெளியிடுவார்கள் என்றும், மற்றதை புதைத்துவிடுவார்கள் என்றும் குறிப்பிடுகிறார். இதற்கு உதாரணமாக இமு சுல்தானின் வாழ்க்கைச் சரித்திரம் இரண்டு விதமாக எழுதப் பட்டிருக்கிறது. வெள்ளைச் சரித்திரம், கறுப்புச் சரித்திரம் என்று பாகுபாடு கொண்ட அந்த இரட்டை ஏடுகளில் ஒரே சம்பவம் இரண்டு முறைகளில் பதிவு செய்யப்பட்டிருக்கிறது என்றும் இதில் கறுப்புச் சரித்திர ஏடுகள் யாவும் சங்கேத மொழியில் அடையாளக் குறிப்புகளுடன் எழுதப்பட்டிருப்பதாகத் தெரிவிக்கிறார். அமீர் அன்சிலின் இந்தியாவைப் பற்றிய குறிப்புகளான தபாகத்–நி–நஸ்ரி என்ற நூலில் டெல்லி சுல்தான் பற்றிய விபரங்களை விரிவாகப் பதிவு செய்திருக்கிறார். அமீர் அன்சிலின் நூலை அரபி யிலிருந்து ஆங்கிலத்திற்கு மொழியாக்கம் செய்துள்ள ஹைடல்பெர்க் பல்கலைக் கழகப் பேராசிரியரான பவுல் ரெவர்ட் அன்சிலின் இந்தக் குறிப்புக்குப் பின்னால் பல உண்மைகள் ஒளிந்திருக்கின்றன என்று கருதி பதினோரு வருடங்கள் தேடி மூல ஏட்டை கண்டுபிடித்தபோது பக்கீர் சதாமுல்லா வின் ஜீவிதக் குறிப்புகள் என்ற பெயரில் உள்ள ஒரு ஏடு மறைக்கப்பட்ட வரலாறு என்பதைக் கண்டுபிடித்து அதை மொழியாக்கம் செய்து வெள்ளைச் சரித்திரம் ஒரு புறமும் கறுப்புச் சரித்திரம் மறுபுறமுமாக இரட்டைப் பதிப்பாக வெளியிட்டிருக்கிறார்.*

நூலில் இருந்து ஒரு பகுதி:

**வெள்ளைச் சரித்திரம் கருணை**

போற்றுதலுக்கு உரியவனும் மாபெரும் கருணையாளனுமான கடவுளின் விருப்பம் அப்படித்தான் அமைந்திருந்தது. டெல்லி சுல்தானாக இருந்த அசிம் அல் இமுவிற்கு கடந்த சில மாதங்களாகவே மனச்சிதைவு ஏற்பட்டு அவர் தன்னைச் சுற்றியுள்ளவர்களைக்கூட அடையாளம் காண முடியாதபடியான முற்றிய நோய்மையில் வீழ்ந்திருந்தார். அவரைக் கவனித்துக்கொள்வதற்காக இரண்டு பணிப்பெண்கள் மட்டுமே அனுமதிக்கப்பட்டிருந்தார்கள். மற்ற ஏவலாட்கள் யாவரையும் அரண்மனையை விட்டு வெளியேற்றி யிருந்தார்கள். அவர் தனது படுக்கையறை முதல் குளியலறை வரை யாரோ ஒளிந்துகொண்டு சதி செய்கிறார்கள் என்று சந்தேகப்பட்டவராக இருந்தார். நோய்மை முற்றிய நிலையில் அரசருக்கு உரிய பணிகள் யாவும் முடங்கிப்போகவே நியாய சபைகள்கூட முடக்கப்படும் நிலை உருவானது. தனது அறை ஜன்னல்களில் வந்து அமரும் புறாக்களைக்கூட சதிகாரர்கள் ஏவிவிட்ட யந்திரங்கள் என்று நம்பத் துவங்கும் நிலை சுல்தானுக்கு ஏற்பட்டது. அவர் கற்பனையாக யாரோ சிலரோடு உரையாடிக் கொண்டிருப்பதாகவும் பணியாளர்கள் சொன்னார். சுல்தான் குணமாவதற்காக நகரமெங்கும் சிறப்புப் பிரார்த்தனைகள் நடைபெற்றன. அந்த நிலையில் பக்கீர் சதாமுல்லா சுல்தானை நேரில் சந்தித்துவிட்டு திரும்பிவந்து அரசரின் மூளை கொதிப்படைந்து போயிருக்கிறது என்றும் அவரது முகம் வெளிறி உதடுகள்கூட நடுக்கமடைந்துவிட்டதாகவும் சொல்லி சுல்தானின் அந்திம நாட்கள் நெருங்கிக்கொண்டிருப்பதாகச் சொன்னார். அதைக் கேட்டு அரண்மனையே துக்கத்தில் ஆழ்ந்தது. ஆனால் ஞானியின் வாக்கின்படியே சுல்தான் அன்றிரவே தனது படுக்கையில் வீழ்ந்து இறந்துபோயிருந்தார். அரண்மனை வைத்தியர்கள் உறக்கத்திலேயே அவர் உயிர் பிரிந்திருந்ததை உறுதிசெய்தார்கள். புதிய சுல்தானாகப் பதவியேற்கும் இமுவின் மகன் ஷேகர் ஹசன் ஆயிரம் ஏழைகளுக்கு அன்னதானமும் தந்தையின் பெயரால் பெரிய பிரார்த்தனை மண்டபமும் கட்டப்போவதாக அறிவித்தான். அவனது ஆட்சிக்காலம் இந்திய அரசின் பொற்காலமாக இருந்தது.

**கறுப்புச் சரித்திரம் சதி**

தனது சொந்த மகனே தன்னைக் கொல்வதற்காக முயற்சி செய்து கொண்டிருக்கிறான் என்பது சுல்தான் இமுவிற்கு வேதனை தருவதாக யிருந்தது. அவர் இரண்டு நாட்களுக்கு முன்புதான் ஒரு சதியில் இருந்து தப்பியிருந்தார். பழரசங்களில் விஷம் கலந்துவிடக்கூடும் என்பதற்காக அவர் தன் கண் முன்னால் பழங்களை அறுத்து

பிழிந்து இனிப்பிட்டு அருந்தும் பழக்கம் கொண்டிருந்தார். அன்று பணிப்பெண் அவர் முன்னால் எலுமிச்சைப் பழங்கள் கொண்ட கிண்ணத்தை வைத்திருந்தாள். அந்த கிண்ணத்திலிருந்த எலுமிச்சைகளிலிருந்து அவர் ஒவ்வொன்றாக எடுத்து விரலால் கிள்ளி முகர்ந்து பார்த்தார். பிறகு அவரே எலுமிச்சைகளை வெட்டி துண்டுகளாக்கினார். பணிப்பெண் தலைகவிழ்ந்தபடியே நின்றுகொண்டிருந்தாள். அவர் வெட்டிய துண்டுகளைப் பிழிந்து இனிப்பிட்டுத் தரும்படியாகச் சொல்லிவிட்டு அங்கிருந்த பட்டுத் துணியில் கையைத் துடைத்துக் கொண்டார். அந்தப் பெண் பழங்களைப் பிழிந்தாள். இனிப்பிட்டாள். கோப்பையை அரசரிடம் தந்தாள். கோப்பையை வாயில் வைக்கும் முன்பாக சுல்தான் அன்றைக்கு ஒன்றுபோல நான்கு கோப்பைகள் கொண்டுவரப்பட்டிருப்பதைக் கவனித்தார். தன் கையில் இருந்த கோப்பையை அப்படியே பணிப்பெண்ணிடம் தந்து குடிக்கச் சொன்னார். அவள் தயக்கத்துடன் வாங்கிப் பருகிய சில நிமிஷங்களில் அவளது வாயில் நுரை தள்ளத் துவங்கி மயங்கி விழுந்தாள். கோப்பையில் விஷம் தடவப்பட்டிருந்தது தெரிந்தது. காவலர்களை அழைத்து அந்தப் பணிப்பெண்ணின் உடலைத் துண்டுகளாக்கி அதில் ஒரு பகுதியை அவளது குடும்பத்தினருக்கு அனுப்புங்கள். மற்றவை நாய்களுக்கு இரையாகப் போடுங்கள். இவளது தலை மட்டும் நகர சதுக்கத்தில் குத்தீட்டியில் சொருகி வைக்கப்பட்டு கழுகுகளுக்கு இரையாகட்டும். சதியின் பின்புலத்தில் இருப்பதாக சந்தேகப்படுகின்றவர்களை உயிரோடு புதைத்துவிடுங்கள் என்று கட்டளையிட்டார்.

அந்த மாளிகையில் எவர் தனது விசுவாசி, எவன் தன்னைக் கொல்லப்போகின்றவன் என்று சுல்தானுக்குக் குழப்பமாகவேயிருந்தது. இதற்காகவே அவர் தினமும் ஒரு படுக்கையை மாற்றிக்கொண்டார். தினம் ஒரு இடத்தில் தங்கினார். இரவில் பெண்களைக்கூட தன்னோடு இருக்க அனுமதிப்பதில்லை. தூங்கும்போதுகூட கவசம் அணிந்துகொண்டே உறங்கும் நிலை உருவாகியிருந்தது. கனவில்கூட யாரோ தன்னைத் துரத்திக் கொல்வதாகவே இருந்தது. அரண்மனையில் எங்காவது நிழல்களின் நடமாட்டம் அறிந்தால்கூட கூச்சலிடுபவராக யிருந்தார். அவரது மனக்கொதிப்பைப் போக்குவதற்காக பகலும் இரவும் இசைக்கலைஞர்கள் சாரங்கி வாசித்தபடியே ஒரு மறைவு அறையில் இருந்தனர்.

சுல்தானுக்கு சாவைவிடவும் தன்னை மறைந்திருந்து கொல்ல நினைக்கும் சதியின் மீது ஆத்திரமாக வந்தது. அவர் தனது எதிரிகளின் பட்டியலை மனதிற்குள்ளாகவே தயாரித்துக்கொண்டிருந்தார். அதில் சொந்த மனைவியில் இருந்து வேசைகள், மந்திரிகள், பணியாளர்கள், தான் கொன்ற அதிகாரிகள், தூதுவர்கள், இளம் பெண்கள், அறிவாளிகள், ரதம் ஓட்டுபவர்கள் என்று முடிவற்று போய்க்கொண்டேயிருந்தது. இத்தனை பேரில் எவன் தன்னைக் கொல்லப்போகின்றான் என்று குழப்பமும் உருவானது.

ஒரே ஆணையில் இந்த அரண்மனையில், நகரில் உள்ள அத்தனை ஆயிரம் பேரையும் கொன்றுவிடலாமா என்று தீவிரமாக யோசித்துக் கொண்டிருந்தார். சதி செய்பவர்களுக்கு என்ன விதமான தண்டனை கள் கொடுக்கலாம் என்பதைப் பற்றி விரிவாகக் கற்பனை செய்யத் துவங்கினார். தனது கற்பனைகளுக்கு உருக்கொடுத்து பார்ப்பதற்காக தினம் ஒருவரைத் தேர்வு செய்து மிக விசித்திரமான முறையில் கொல்லும் தண்டனை தந்தபடியிருந்தார். சாவு ஏன் இத்தனை விதமான வடிவங்களைக் கொண்டிருக்கிறது என்று அவருக்கு சாவின் மீதுகூட ஆத்திரமாக வந்தது. ஆனாலும் அவர் ஒரு நாளில் இரண்டு வேலைகளை மட்டும் தவறவிடாமல் வைத்திருந்தார். காலை எழுந்த உடன் பிரார்த்தனை செய்வது, மற்றது தனக்கு விருப்பமான தத்துவ விசாரணையில் ஈடுபடுவது. மனத் தடுமாற்றம் கொண்ட நாட்களில் மட்டும் நெசவு நெய்வதை வேலையாகக் கொண்டிருந்தார்.

முதல் சதியை முறியடித்த இரண்டு நாட்களுக்குப் பிறகு ஒரு அதிகாலையில் அவர் குளியல் அறைக்குள் சென்றார். உள்ளே தங்கத்திலான பெரிய குளியல் தொட்டியில் தண்ணீர் மீது ரோஜாப் பூக்கள் மிதந்துகொண்டிருந்தன. பன்னீரும் சந்தனமும் கலந்திருந்த வாசனை அறையெங்கும் கமழ்ந்துகொண்டிருந்தது. ஆடைகளைக் களைந்துவிட்டு தண்ணீரில் இறங்கும் முன்பாக ரோஜா இதழ்களை கவனித்தார். அது கருமை படிந்துபோகத் துவங்கியிருந்தது. தண்ணீருக்குள் இறங்காமலே தனது கிழட்டுத் தாதியை அழைத்தார். அந்தப் பெண் முக்காடு இட்டபடியே உள்ளே வந்து தலைவணங்கி நின்றாள். அவள் உடைகளைக் களைந்துவிட்டு அந்தத் தண்ணீரில் இறங்கி குளிக்கச் சொன்னார். அவள் மறுப்பின்றி தனது ஆடைகளைக் களைந்து தண்ணீருக்குள் இறங்கினாள். இரண்டு நிமிஷங்கள் அவள் முகம் சந்தோஷமாகயிருந்தது அதன் முடிவில் அவள் உடல் நீலமாகத் துவங்கியது. அதிலும்கூட விஷம் கலக்கப்பட்டிருக்கிறது.

ஆத்திரத்துடன் சுல்தான் கூச்சலிட்டார். அரண்மனையில் அது எதிரொலித்துக்கொண்டேயிருந்தது. அவரது உணவில், குளியல் அறையில், உடையில், புகைக் குழாயில் என விஷம் அவரைத் தொடர்ந்துகொண்டேயிருந்தது.

ஒரு வார காலம் தான் உபவாசம் இருக்கப்போவதாகச் சொல்லிய படியே நாள் முழுவதும் அவர் நெசவு நெய்தபடியே இருந்தார். பசியும் தாகமும் தாள முடியாத மனவேதனையுமாக இருந்தது. கதவுகள்கூட அடைத்து சாத்தப்பட்டிருந்ததால் காற்றும் தடை பட்டிருந்தது. எதற்காக தனக்கு இந்த தண்டனை என்று அவர் ஆண்டவனிடம் பிரார்த்தனை செய்தபடியே இருந்தார். அந்த அரண்மனையில் இருந்து தான் வெளியேறிப் போய்விட்டால் போதும் உயிர்தப்பிவிடலாம் என்றுகூட தோணியது. ஆனால் எப்படி வெளியேறுவது? சாரதிகள் நம்பகமானவர்களா? வழியில் எங்காவது மறைந்து தன்னை எவராவது கொல்ல முயன்றால்

என்ன செய்வது? குழப்பமாகயிருந்தது. வழக்கமாக அவர் தோட்டத்தில் தென்படும் புறாக்களைக்கூட அன்று காண முடியவில்லை. இன்று இரவு உறங்கக் கூடாது. விழித்தபடியேதான் இருக்க வேண்டும் என்று நினைத்துக்கொண்டார்.

மாலையானதும் அவரோடு தத்துவ விசாரம் செய்வதற்காக தினமும் ஒரு புதிய அறிவாளி வந்து காத்திருப்பது வழக்கம். அன்று பக்கீர் சதாமுல்லா அவரைக் காண வந்திருப்பதாகச் சொன்னார்கள். சுல்தான் அன்று கடவுளின் கருணையைப் பற்றிய விவாதத்தை மேற்கொள்வது என்று முடிவு செய்துகொண்டார். சதாமுல்லா சுல்தானின் அறைக்குள் நுழைந்து அவரை வாழ்த்தி ஒரு புனித நூல் ஒன்றைத் தந்து அது மனநிம்மதி தரக்கூடியதாக அமையும் என்றார். சதாமுல்லாவிடம் மனிதன் சாவைப் பற்றி ஏன் இவ்வளவு கவலைப்படுகிறான் என்று சுல்தான் கேட்டார். சதாமுல்லா சிரித்துக்கொண்டே கவலை சாவைப் பற்றியல்ல, அது தன் விருப்பமில்லாமல் நடக்கிறதே என்பதைப் பற்றித்தான். நீங்கள் விரும்பினால்கூட சாவு வராது. அது வரும் நேரத்தில் யாராலும் தடுக்க முடியாது என்பதே கடவுளின் கருணை என்றார். மன்னருக்கு அந்த பதில் சற்றே ஆறுதலாகயிருந்தது.

தன்னைச் சுற்றிய சதிவலைகளைப் பின்னுவதற்குக்கூட கடவுள்தான் அனுமதித்திருக்கிறாரா என்று சந்தேகமாக இருந்தது. அவர் சதா முல்லாவிடம் கடவுள் மீது எவ்வளவு நம்பிக்கை வைப்பது என்று கேட்டார். பக்கீர் சிரித்தபடியே கடவுள் உன் மீது எவ்வளவு நம்பிக்கை வைத்திருக்கிறார் என்பதுதான் முக்கியம், உனது விருப்பம் முக்கியமானதில்லை என்றார். சுல்தான் சற்றே ஆத்திரம் அடைந்த வரைப் போல உங்கள் மீது கடவுளுக்கு அதிக நம்பிக்கையிருக்கிறதா என்று கேட்டார்; பக்கீரிடமிருந்து பதில் வரவேயில்லை. சுல்தான் சற்றும் எதிர்பாராமல் தனது வாளை எடுத்து பக்கீரின் வலது கையையும் இடது காலையும் துண்டித்துவிட்டு கடவுள் தன் மீது அதிக நம்பிக்கை வைத்திருப்பதால் தான் தன்னை அரசனாக்கி இதுபோல ஒரு சாம்ராஜ்ஜியத்தை ஆளச் செய்து உன்னைத் தண்டிக்கும் உரிமையும் தந்திருக்கிறார் என்று சொல்லிச் சிரித்தார். அந்தச் சிரிப்பு நெடுநேரம் வரை அறையில் கேட்டுக்கொண்டேயிருந்தது

அன்றிரவு சுல்தான் இரவு முழுவதும் உறக்கமின்றி சதாமுல்லா தந்த நூலைப் புரட்டிப் படிக்கத் துவங்கினார். ஒவ்வொரு பக்கமாகப் படிக்கப் படிக்க மனது ஆறுதல்பட்டுக் கொண்டே வந்தது. உலகில் ஆண்டவனின் விருப்பம் இல்லாமல் ஏதும் நடைபெறாது என்று தைரியம் கூடிக்கொண்டே வந்தது. புத்தகத்தின் கடைசிப் பக்கங்கள் வந்தபோது அது வெறும் காகிதமாக இருந்தது. தான் அந்தக் காகிதங்களில் ஏதாவது எழுதலாம் என்று முடிவு செய்து மயிலிறகும் மைக் கூடுகளையும் கொண்டுவரச் சொன்னார்.

மனதின் ஆவேசத்தைப் பதிவு செய்வது போல மையைத் தொட்டுத்

தொட்டு எழுதத் துவங்கினார். திடீரென ஒரு நறுமணம் வீசத் துவங்கியது. எங்கிருந்து இந்த மணம் வருகிறது என்று அந்தக் காகிதத்தை முகர்ந்து பார்க்கத் துவங்கினார்.

அடுத்த நிமிஷம் மைக்கூட்டில் கலக்கப்பட்டிருந்த விஷம் அவரது நாசியில் ஏறத் துவங்கியது. சுல்தான் அது விஷம் என்று கூச்சலிடு வதற்கு முன்பாக இறந்துபோய்விட்டிருந்தார்.

இரண்டு நாழிகைக்குப் பிறகு சுல்தானின் மகன் அவரது அறைக்கு வந்து சுல்தான் இறந்துபோய்விட்டதை உறுதிசெய்தபடியே புதிய சுல்தானாகத் தன்னை அறிவித்துக்கொண்டான். எப்போதும் போலவே அரண்மனை கேளிக்கைகளும் உல்லாசமும் கொள்ளத் துவங்கியது, புதிய சுல்தான் கடவுளுக்கு நன்றி தெரிவித்துவிட்டு பதவியேற்றுக் கொண்டான். இப்படித்தான் கடவுளின் கருணை இந்திய மன்னர்களின் மீது பூரணமாக இருந்து வந்தது.

**பின்குறிப்பு:**

இந்த நூல் பற்றி அல்ஹராம் என்ற வார இதழின் ஞாயிற்றுப் பதிப்பில் சுல்தானிய வரலாற்றியல் அறிஞரான அபு—எல்—பாசில் தனது கடுமையான எதிர்வினையைப் பதிவு செய்திருக்கிறார். அதில் பக்கீர் சதாமுல்லா தண்டிக்கப்படவில்லை என்பதோடு இமு சுல்தானைப் பற்றிய இந்த ஏடுகள் யாவும் கற்பனையானவை. இது போல கற்பனையான ஏடுகளை அன்று அந்தப்புரங்களில் இருந்த அரபி கற்ற வேசைகள் எழுதினார்கள் என்றும் தன்னிடம்கூட இதுபோன்று பலால்கான் பற்றி அவரது வேசைகளில் ஒருத்தியாக இருந்த ஜான் பீபீ என்பவள் எழுதிய வதையின் சரித்திரம் என்ற ஏடு உள்ளது என்றும் அது வெறும் கற்பனை என்பதற்கு ஆதாரம் அன்றிருந்த டெல்லி நகரைப் பற்றிய தகவல்கள் முன்னுக்குப் பின் முரணாக அந்த நூலில் காணப்படுகின்றன. அத்தோடு சுல்தானின் வெற்றிகள் எதுவும் பதிவு செய்யப்படவில்லை என்று குறிப்பிட்டிருந் தார். இமு சுல்தான் டெல்லியில் உருவாக்கிய மாபெரும் கோட்டை களும் குளிர்கால அரண்மனைகளும் அவரது பெருமையை என்றும் உலகிற்குச் சொல்லக்கூடியவை. பவுல் ரெவர்ட் போன்றவர்கள் சரித்திரத்தைத் திசைதிருப்பும் காரியங்களில் ஈடுபட்டு வருகிறார்கள். அத்தோடு சரித்திரம் எப்போதுமே புத்தகங்களுக்குள் அடங்கி விடுவதில்லை என்றும் தெரிவித்திருந்தார்.

# வீட்டிற்கு அப்பால் எதுவுமில்லை

களப்பணியாளர்கள் அலுவலகத்திலிருந்து திரும்பி வரும்போது தணிகைக்கு அந்த அனுபவம் முதன்முறையாக உருவானது. சாலையைக் கடந்து வரும்போது தொலைவில் உள்ள பேருந்து நிறுத்தம் மட்டும் தெரிந்தது. அதன் அருகில் எப்போதுமிருக்கும் மரமோ, மருத்துவமனைக் கட்டிடமோ, பழைய புத்தகம் விற்கும் நரைத்த மனிதனோ எதுவுமே கண்ணில் படவில்லை. பேருந்து நிறுத்தம் மட்டும் தனித்துத் தெரிந்தது.

எப்படி அது என்று புரியாமல் உற்றுப் பார்க்கத் துவங்கினான். கண்ணுக்குத் தெரியாத கத்திரியொன்று எல்லாவற்றையும் வெட்டி எடுத்துவிட்டு பேருந்து நிறுத்தத்தை மட்டுமே தனியே காட்சிப்படுத்தி வைத்திருப்பது போலிருந்தது.

காலையிலிருந்து அலைந்து திரிந்ததின் களைப்பாக இருக்கக் கூடும் என்றபடியே தணிகை பேருந்து நிறுத்தத்தை நோக்கி நடக்கத் துவங்கினார். பேருந்து நிறுத்தத்தில் நாலைந்து ஆண்களும் பெண்களும் நின்றுகொண்டிருந்தார்கள். விளம்பரப் பலகை ஒன்றின் அருகில் நின்றபடியே திரும்பிப் பார்த்தபோது அருகாமையிலிருந்த சாலை கூட கண்ணில் படவேயில்லை. கடந்து வரும்போது இருந்த சாலை என்னவாகியிருக்கும் என்று குழப்பமாக இருந்தது.

முகத்தைத் துடைத்துவிட்டு கண்களைக் கூர்மையாக்கிக்கொண்டு பார்த்தபோது சாலையில் பதினேழாம் எண் பேருந்து வருவது தெரிந்தது. ஆனால் பேருந்தின் இரண்டு பக்கமும் வரும் கார்களோ ஆட்டோக்களோ எதுவும் அவருக்குத் தெரியவில்லை. அவருக்கு திடீரெனத் தனக்கு நாற்பது வயதைக் கடந்துவிட்டது நினைவிற்கு வந்தது.

கடந்த சில மாதங்களாகவே அவர் களப்பணியாளர்களை ஒருங்கிணைப்பதும் அவர்களுக்கான பணிவிபரங்களைப் பகிர்ந்து அளித்துக் கண்காணிப்பதுமாக இருந்தார். மனதில் எப்போதும் சம்பந்தமற்ற பட்டுவாடா பில்களும் தொகைகளும் தோன்றி வழிந்து கொண்டிருந்தன.

பேருந்து வந்து நின்றபோது நல்லவேளையாக அதிக கூட்டமில்லை என்று நினைத்தபடியே உள்ளே ஏறிக்கொண்டார். பேருந்தினுள் காலியாக இருந்த இருக்கையைத் தவிர வேறு எதுவும் அவர் கண்ணில் படவேயில்லை. அவசரமாக வேறு யாரும் உட்கார்ந்து கொள்வதற்குள் அந்த இருக்கையில் அமர்ந்துகொண்டார். அவரருகில் இருந்த மனிதன் சவரம் செய்யாதவனாக மடியில் பெரிய பெயிண்ட் டப்பா ஒன்றை வைத்திருந்தான். அவனைப்பற்றி யோசிப்பதற்கு நமக்கு என்ன தேவை என்றபடியே அவர் ஜன்னலின் வெளியே பார்க்கத் துவங்கினார்.

ஏழு வருஷமாக அதே பாதையில் அவர் போவதும் வருவதுமாக இருக்கிறார். பெரும்பான்மை நாட்களில் பேருந்தில் ஏறியபிறகு அவர் ஜன்னலுக்கு வெளியே கவனிப்பதேயில்லை. எப்போதாவது தற்செயலாகக் கண்ணில் படும் மேம்பாலத்தையும் அருகில் கடந்து செல்லும் பள்ளிப் பிள்ளைகளின் ஆட்டோக்களையும் கவனித்த போதும் அது அவரை ஈர்க்கவேயில்லை.

இந்த மனநிலை பேருந்தில் மட்டும் என்பதில்லை, எல்லா நேரத்திலும் கூடவேயிருந்தது. அவரது அலுவலகம் இயங்கிய பலமாடிக் கட்டிடத்தில் அவர்கள் வேலை செய்யும் ஆறாவது தளத்தைத் தவிர மேலும் கீழும் என்ன அலுவலகம் இருக்கிறது. அங்கே யார் வேலை செய்கிறார்கள் என்று தெரிந்துகொள்வதில் அவருக்கு ஒரு முறைகூட ஆர்வம் வந்ததில்லை.

அலுவலகத்தில் அவரது மேஜையும் அதை ஒட்டிய சிறிய குப்பைக் கூடையும் அருகில் இருந்த சிறிய பச்சைநிற பீரோவும் மட்டுமே அவரது உலகம். மதியம் சாப்பிட்டு முடிந்து மீதமான சாப்பாட்டை ஜன்னலுக்கு வெளியில் போடும்போது மட்டும் கீழேயொரு வேப்ப மரமிருப்பதைக் கவனித்திருக்கிறார். அப்போதும் வேப்பம்பூக்களோ, கிளை யிலிருந்த காகமோ அவர் கண்ணில் பட்டதேயில்லை.

தணிகைக்கு நாற்பத்தி மூன்று வயது நடந்து கொண்டிருக் கிறது. இருபத்தி நாலாவது வயதில் அவர் பூச்சிமருந்து கம்பெனி ஒன்றின் விற்பனைப் பிரதிநிதியாக வேலை செய்யத் துவங்கினார். அன்றிலிருந்து அவரது வேலை ஒவ்வொரு ஊராகச் சென்று நோய்க்கிருமிகள், பூச்சிகளைப் பற்றியும் தனது மருந்தை வாங்கி உபயோகிப்பதால் ஏற்படும் பயன்கள் பற்றியும் எடுத்துச் சொல்வதாக இருந்தது.

அந்த வயதில் சிறிய நகரங்களில் ஏதாவது ஒரு லாட்ஜில் தங்கியிருந்தபோதும் சினிமாவிற்கோ, அல்லது கடைத் தெருக்களுக்கோ செல்லும் பழக்கம் அவருக்கு இருந்ததில்லை. பெரும்பாலும் அறையைச் சாத்திக்கொண்டு சிறிய தும் பெரியதுமான காகிதங்களில் தனக்குக் கிடைக்கப் போகும் ஊக்கத் தொகையைக் கணக்கிட்டபடியே படுத்துக் கிடப்பார். அறையில் என்ன நிறத்தில் சுவரிருந்தது; லாட்ஜில் என்ன ஊதுபத்தி புகைந்துகொண்டிருந்தது என எதுவும் அவர் அறிந்ததே யில்லை.

தணிகைக்கு இருபத்தியாறாவது வயதில் திருமணமானது. பெண் பார்க்கப் போனபோது கூட அவர் அரை நிமிஷத்துக்கும் குறைவாகவே முத்துமீனாவைப் பார்த்தார். அதுகூட அவளது பச்சை கலர் புடவையும் இறுக்கமாக கையைப் பிடித்தது போல் அணிந்திருந்த ஜாக்கெட்டும் தெரிந்ததேயன்றி முகத்தை முழுவதும் கவனிக்க வேண்டும் என்று தோன்றவேயில்லை.

திருமணம் அவரை எந்த விதத்திலும் மாற்றவேயில்லை. தன் உடைகள், பற்பொடி, வெள்ளைத் துண்டு என்று தன் உலகத்தைக் கொஞ்சம் விட்டுக் கொடுக்காமல் அவர் முத்துமீனாவோடு சேர்ந்து வாழ்ந்துகொண்டிருந்தார். எப்போதாவதுதான் சோப் வைக்கும் இடத்தில் முத்துமீனாவின் சோப் இருக்கும்போது அவர் கோபமாகி அதைத் தூக்கி எறிவது நடந்திருக்கிறது. எதற்காக தான் மற்ற விஷயங்களைக் கவனிக்க வேண்டும் அல்லது தன்னை ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் எப்போதுமேயிருந்தது.

இரண்டு குழந்தைகள் பிறந்த பிறகு தணிகையின் அன்றாட வாழ்வில் பதற்றமும் குழப்பமும் அதிகமாகத் துவங்கியது. வீடு திரும்பிய இரவுகளில் தனது டயரி முழுவதும் பிள்ளைகளைப் படிக்க வைக்கவும் நகரில் சிறியதாக வீடு வாங்கவும் எவ்வளவு இலக்கைப் பூர்த்தி செய்ய வேண்டும். அப்படிப் பூர்த்தி செய்தால் எவ்வளவு ஊக்கத் தொகை கிடைக்கும் என்பதைப் பற்றிக் கணக்கிட்டுப் பார்த்தபடியே இருந்தார்.

அவர் வீடு இருந்த தெரு இரண்டு பக்கம் கடைகள் நிரம்பியது. அவர் குடியிருப்பின் வாசலில்கூட எலக்டிரிக்கல் கடையொன்றும் லாண்டரியொன்றுமிருக்கிறது. அந்தக் கடைகளில் அவர் ஒரு போதும் நின்று பேசியது கிடையாது. வளைந்தும் சுருண்டும் இருந்த பதினாறு வீடுகளில் ஒன்றில் அவர் குடியிருந்தார். பெரும்பாலும் அவரது வீட்டின் கதவு பூட்டப்பட்டேயிருக்கும். வாசலில் மகாத்மா காந்தி உருவம் பதிந்த திரைச்சீலை தொங்கிக்கொண்டிருக்கும். தன் வீடு என்பதற்கான ஒரே அடையாளமாக அந்த காந்தியைத்தான் கருதினார்.

வீட்டில் அவர் எப்போதும் உட்காரும் அதே மர நாற்காலியும் அருகிலுள்ள முக்காலியும் இதுவரை இடம் மாறியதேயில்லை. நகரிலுள்ள ஆர்ப்பரிக்கும் கடலைக்கூட அவர் ஒரு நிமிசம் நின்று அவதானித்ததேயில்லை.

எப்போதும் போலவே இன்றைக்கும் ஆயிரம் யோசனை களோடு பேருந்தில் வந்த அவர் தனது நிறுத்தம் வருவதற்குள் தன்னுணர்ச்சி மேலிட பேருந்தின் படிக்கட்டின் அருகில் வந்து நின்றுகொண்டார். ஆச்சரியமாக இருந்தது படிக் கட்டின் அருகில் உள்ள கண்டக்டர் இருக்கையோ அவரது உருவமோகூடத் தெரியவில்லை. ஆனால் மிக நெருக்கமாக விசில் ஊதும் சப்தம் மட்டும் கேட்டது.

தணிகை அவசரமாக பேருந்தை விட்டுக் கீழே இறங்கிக் கொண்டு சாலையைக் கடந்து மறுபக்கம் வர வேண்டும் என்பதற்காக இடப்பக்கம்

திரும்பிப் பார்த்தார். வெண்ணிற மான புகைமூட்டம் போலத் தெரிந்ததேயின்றி வாகனங் களோ, சாலைச் சந்திப்போ, அடுக்குமாடிக் கட்டிடங்களோ எதுவும் தென்படவில்லை.

சாலையின் குறுக்கே அவசரமாகக் கடந்து மறுபக்கம் போனபோது தன் வீட்டை நோக்கிச் செல்லும் தெரு மட்டுமே அவருக்குத் தெரிந்தது. அது போதும். வீட்டிற்குப் போய்விடலாம். ஒரு நாள் ஓய்வு எடுத்தால் களைப்பு சரியாகிவிடும் என்றபடியே அவர் தன் வீட்டை நோக்கி நடக்கத் துவங்கினார்.

தெருவும் காலியாகவே தெரிந்தது. அவரது வீட்டின் முன்னால் உள்ள எலக்டிரிக்கல் கடையும் அதன் வெளியே நிற்கும் மனிதர்களும் மட்டுமே கண்ணில் தெரிந்தார்கள். என்ன இழவு இது என்றபடியே மனப்பதற்றத்துடன் கடையை நோக்கி நடந்தார். சில நாட்கள் சாலையில் மணியோசை எழுப்பியபடியே கடந்து செல்லும் வேர்க் கடலைக்காரனின் வண்டி சப்தத்தை அவர் கேட்டிருக்கிறார். அந்தக் கடலைக்காரனை நிறுத்தி ஒரு நாள்கூட அவர் கடலை வாங்கியதே யில்லை. அவன் முகம்கூட அவர் நினைவில் இல்லை.

இன்றைக்கு அவர் வீட்டை நோக்கி நடந்து போகையில் அதே மணிச்சப்தம் கேட்டது. அவர் திரும்பிப் பார்த்தபோது தெருவில் யாருமேயில்லை. ஆள் இல்லாமல் சப்தம் மட்டும் வருகிறதா; இல்லை தன் மனது பழைய நிகழ்வுகளைக் கற்பனை செய்து கொள்கிறதா என்று புரியாத குழப்பத்தோடு அவர் குனிந்து தன் பாதத்தைப் பார்த்தார். தன் காலில் அணிந்திருந்த செருப்புகூட அவர் கண்ணில் படவில்லை.

நிஜம்தானில்லையா, அந்தச் செருப்பை வாங்கும் நாளில் அவர் உற்றுப்பார்த்ததோடு சரி, மற்ற நாட்களில் கவனித்ததே கிடையாது. எப்போதாவது அதன் வார் அறுந்துவிட்டால் செருப்பு தைப்பவனிடம் கழட்டித் தருவார். செருப்பு தைக்கும்போதுகூட அவர் கவனம் செருப்பில் இருந்த தில்லை. ஏதாவது களப்பணியாளரைப் பற்றியே நினைத்துக் கொண்டிருப்பார்.

இன்றைக்கு செருப்பும் கண்ணிலிருந்து மறையத் துவங்கி யது எரிச்சலாக வந்தது. தன் காலை உதறிப் பார்த்துக் கொண்டார். செருப்பு அணிந்திருப்பது தெரிந்தது. நிச்சயம் தான் இன்று அளவிற்கு அதிகமாக வேலை செய்திருக்கிறோம் என்று அவருக்கு உறுதியாகத் தெரிந்தது.

செருப்பு கண்ணில் தெரிந்தால் என்ன; தெரியாவிட்டால் என்ன காலில் செருப்பு இருக்கிறது என்ற உணர்வு போதும்தானே என்று ஆறுதல்படுத்திக்கொண்டு அவர் வீட்டின் முன்பாக வந்தபோது யாரோ ஒரு சிறுவன் வீசி எறிந்த பந்து அவர் மீது வந்து விழுந்தது போன்றிருந்தது.

அவர் தலையைத் திருப்பிப் பார்த்தார். அவர் வீட்டின் எதிரில்

இருந்த வீடோ அங்கிருந்த சிறுவர்களோ ஏன் அந்த இடத்தில் எப்போதுமே எரிந்துகொண்டிருக்கும் மஞ்சள்நிற பல்ப் ஒன்றோ எதுவுமே அவர் கண்ணில் படவில்லை. உலகம் ஏன் இப்படி கொஞ்சம் கொஞ்சமாக உதிர்ந்துகொண்டிருக்கிறது என்று ஆத்திரமாக வந்தது.

எந்தச் சிறுவன் அவர் மீது பந்து வீசியிருப்பான். அது என்ன வகையான பந்து. தன் வீட்டில்கூட பிள்ளைகள் பந்து வைத்து விளையாடுகிறார்கள் என்பது அவருக்குத் தெரியும். ஆனால் அந்தப் பந்தை அவர் ஒருமுறைகூடத் தொட்டுப் பார்த்திலலை. அதை எல்லாம் முத்துமீனா தான் வாங்கித் தருகிறாள். எப்போதாவது சமையல் அறைக்குள் நடக்கும்போது தண்ணீர்ப் பானையின் அடியில் உருண்டுபோன பந்தை எடுப்பதற்காக தன் பிள்ளைகள் குனிந்து இருப்பதைக் கண்டிருக்கிறார். என்ன நிறத்தில் அந்தப் பந்து இருக்கும் என்றோ, எந்த அளவில் இருக்கும் என்றோ அவர் அறிந்துகொண்டதே கிடையாது.

இன்று கதவின் முன்னால் தொங்கிக்கொண்டிருந்த திரைச்சீலையும் காந்தியின் உருவமும் துல்லியமாகத் தெரிந்தது. தன் குடியிருப்பில் எத்தனை சிறுவர்கள் இருக்கிறார்கள். அவர்களின் பெயர்கள் என்ன? என்ன விளையாடுகிறார்கள் என்று ஒரு நிமிஷம் யோசித்தார். யாரோ ஒரு சிறுவன் அவன் அருகில் வந்து 'சாரி அங்கிள்' என்றபடியே பந்தை எடுத்து ஓடும் சப்தம் கேட்டது. ஆனால் சிறுவன் தெரியவில்லை. அவர் அடக்க முடியாத கோபத்துடன் திரைச்சீலையில் இருந்த காந்தியின் உருவத்தைப் பார்த்தபடியே இருந்தார்.

ஏன் எப்போதுமே காந்தி சிரித்தபடியே இருக்கிறார். இவ்வளவு நாட்களாக இப்படிதான் இருந்தாரா இல்லை இன்றுதான் அப்படித் தோன்றுகிறதா என்று உற்றுப் பார்த் தார். வெளிறிப்போன பச்சை நிறத்தில் பொக்கை வாயோடு காந்தி நடந்து செல்லும் தோற்றம் தெரிந்தது. எங்கே நடந்து போய்க்கொண்டிருக்கிறார் காந்தி. அவர் காலில் செருப்பு அணிந்திருக்கிறாரா? அவர் கையில் வைத்திருக்கும் கம்பு என்ன மரத்தால் ஆனது என்று ஏதேதோ தோணியது.

திரைச்சீலையை ஒதுக்கித் தள்ளி அழைப்பு மணியை கை தானாகவே அமுக்கியது. உள்ளிருந்து முத்துமீனா நடந்து வரும் சப்தம் கேட்டது. கதவை அவள் திறந்து விட்டளா இல்லை தானாகத் திறந்துகொண்டதா என்று தெரியவில்லை. வீட்டின் உள்ளே வந்த மறுநிமிஷம் அவர் கதவை மூடித் தாழ்பாள் இட்டார்.

வீட்டில் அவரது சாய்வுநாற்காலி மட்டுமே தெரிந்தது. அறையில் வேறு எதுவும் கண்ணில் படவில்லை. நாற்காலி அருகில் இதன் முன்பாக என்ன இருந்தது. ஒரு பிளாஸ்டிக் சேர் கிடந்ததாக நினைவு. அதன் அருகில் இருந்த அலமாரி யில் முத்துமீனா நிறைய காலியான மருந்துப் புட்டிகளைப் போட்டு வைத்திருந்தாள். அந்த மருந்துப் புட்டிகள் என்ன நிறத்தில் இருந்தன. அதை எல்லாம் யார் குடித்தார்

கள் என்று யோசனை வந்தது.

அவர் தன் உடையை மாற்றிக்கொள்வதற்காகப் படுக்கை யறைக்குள் நடந்தார். சுவரில் தொங்கிக்கொண்டிருந்த அவரது திருமணப் புகைப்படம் கண்ணில் பட்டது. இந்தப் புகைப்படத்தை எந்த ஸ்டுடியோவில் எடுத்தோம். அன்றைக்கு என்ன கிழமை எதுவும் நினைவில் இல்லை. அநேமாக அந்தப் புகைப்படத்தை அவர் உற்றுப் பார்த்தே பல வருஷமாகிவிட்டிருந்தது.

இன்றைக்குத்தான் முதன்முறையாகப் பார்ப்பது போல அருகில் வந்து நின்று புகைப்படத்தையே பார்த்துக்கொண்டிருந்தார். புகைப்படத்தில் உள்ள அவரும் முத்துமீனாவும் வேறு யாரோ போலத் தெரிந்தார்கள். புகைப்படத்தில் அவர் தன் சட்டைப் பையில் ஒரு பேனா வைத்திருப்பதும் அது வெளியே தெரியாமல் இருப்பதும் உற்று கவனிக்கையில் தெரிந்தது. என்ன பேனா அது. எதற்காக தான் இன்று இப்படி அலைக்கழிந்தபடியே இருக்கிறேன் என்று தன்னைத் தானே திட்டிக்கொண்டபடியே அவர் மரபீரோவைத் திறந்து உள்ளிருந்து வேஷ்டி ஒன்றை எடுத்துக் கட்டிக்கொண்டார்.

ஹாலில் டிவி ஓடும் சப்தம் கேட்டது. அவர் எப்போதும் செய்திகள் மட்டுமே டிவியில் பார்க்கக்கூடியவர் என்பதால் மற்றநேரங்களில் தொலைக்காட்சி சப்தமாக மட்டும் கேட்கும். இன்றைக்கும் அந்த சப்தம் கேட்டது. ஏன் தான் மற்றநேரங்களில் தொலைக்காட்சி பார்ப்பதில்லை என்று அவராகவே கேட்டுக்கொண்டபடியே தன் நாற் காலிக்கு வந்தபோது முத்துமீனா காபியோடு நின்று கொண்டிருப்பது தெரிந்தது.

பல நாட்கள் காபி தரும்போது முத்துமீனா என்ன நிறத்தில் புடவை கட்டியிருந்தாள். முகத்தில் பவுர் போட்டிருந்தாளா என்று எதையும் அவர் கவனித்ததே யில்லை. இன்றைக்கு அவள் மட்டுமே தனித்துத் தெரியும் போது முத்துமீனாவின் முகத்தைக் கூர்ந்து பார்த்தார். அவளிடம் சலனமேயில்லை. காபியை பதற்றத்துடன் குடித்துவிட்டு தனது நாற்காலியில் சாய்ந்தபடியே கண்ணை மூடிக்கொண்டார்.

என்ன ஆயிற்று தனக்கு எதற்காக உலகம் துண்டிக்கப்பட்டுக் கொண்டே வருகிறது என்று அவருக்குப் புரியவில்லை. மின்விசிறியின் சப்தம் சீராகக் கேட்டுக்கொண்டிருந்தது. தலைக்கு மேலாக உள்ள மின்விசிறியைக்கூட அவர் நிமிர்ந்து பார்த்தே நாள் ஆகிப் போனது அப்போதுதான் நினைவிற்கு வந்தது. கண்ணை மூடியபடியே நெடுநேரம் படுத்துக் கிடந்தார்.

வாசலில் விளையாடி முடித்த அவரது பிள்ளைகள் படிப்பதற்காக வீட்டிற்குள் வந்து சேர்ந்தார்கள். கண்ணைத் திறந்தபோது தன் பிள்ளைகள் துல்லியமாகத் தெரிந்தார்கள். அருகில் அழைத்து அவர்களின் தலையைத் தடவிக் கொடுத்தபடியே பந்து விளையாடி னார்களா என்று விசாரித்தார். குழந்தைகள் இரண்டும் பயத்துடன்

'இல்லைப்பா சும்மா உட்கார்ந்து விளையாடினோம்' என்று பொய் சொன்னார்கள்.

முத்துமீனா அவர்களை புத்தகம் எடுத்துக்கொண்டு அருகில் வரச் சொல்லும் குரல் கேட்டது. அவர்கள் என்ன பாடம் படிக்கப் போகிறார்கள். அவர்களது பாடப் புத்தகத்தில் என்ன இருக்கிறது என்று ஏன் தான் இத்தனை நாட்களாகத் தெரிந்துகொள்ளவேயில்லை என்று தோன்றியது.

அன்றிரவு படுக்கைக்குப் போகும்வரை அவர் தனக்கு இன்று நடப்பது சிறு மயக்கம் என்று மட்டுமே நம்பிக் கொண்டிருந்தார். ஆனால் அதன் பிறகான நாட்களில் காய்கறிக்கடை, இஸ்திரி போடும் வண்டி, பேருந்து நிறுத்தம், அலுவலகக் கட்டிடம், அதிலிருந்த அவரது நாற்காலி, அவரது கண்காணிப்பில் உள்ள களப்பணியாளர்கள் அவர்களது பதிவேடுகள், உணவு எடுத்துச்செல்லும் கேரியர், வாட்டர் பாட்டில் என்று அவருக்குத் தேவையானது மட்டுமே கண்ணில் தெளிவாகத் தெரியத் துவங்கியது.

மற்ற யாவும் உலகிலிருந்து அப்புறப்படுத்தப்பட்டுவிட்டது போலவும் சாலைகள் அதில் பரபரப்பாக இயங்கும் வாகனங் கள் ஆயிரக்கணக்கில் வந்து போகும் மக்கள், உணவகங்கள், கடைவீதிகள், விளம்பரங்கள், மரங்கள், தெருநாய்கள், நடைபாதைவாசிகள் மேம்பாலங்கள் பிரம்மாண்டமான ஆகாசம், சூரியன் சந்திரன் எதுவுமே கண்ணில் படவில்லை.

சில நாட்களுக்குள் உலகம் தன்னிடமிருந்து பிரிந்து சென்றுகொண்டிருக்கிறது என்று அச்சமாகவும் உடனே இதைச் சரிப்படுத்திக்கொண்டுவிட வேண்டும் என்ற பயமும் தோன்றியது. யாரிடமும் இதைப்பற்றிப் பகிர்ந்துகொள்ளவும் முடியாது என்றானது. எப்போதாவது ரகசியமாகத் தன்னைக் கண்ணாடியில் பார்த்துக்கொள்ளும்போது முகத்தில் எந்த மாற்றமும் இல்லை என்பது மட்டுமே மெலிதான ஆறுதல் தந்துகொண்டிருந்தது.

எதற்கும் கண் மருத்துவரைப் பார்த்து வைத்துவிட வேண்டியது தான் என்று முடிவு செய்து அலுவலகத்திலிருந்து மூன்று மணிக்கே கிளம்பும்போது லிப்ட் மட்டுமே தெரிந்தது. வாசலுக்கு வந்தபோது ஒரேயொரு ஆட்டோ மட்டுமே பார்வையில் வந்து நின்றது. முன்பு எப்போதோ ஒருமுறை சென்ற கீழ்ப்பாக்கம் மருத்துவமனை எதிரில் இருந்த கண் மருத்துவர் நினைவிற்கு வர அங்கே பயணம் செய்யத் துவங்கினார்.

நீண்ட கருஞ்சாலைகளோ, அதன் பேரியக்கமோ எதுவுமே கண்ணில் படவில்லை. தண்ணீரின் மீது ஒரு நீர்ப்பூச்சி தனியே நடந்து செல்வதுபோல இவ்வளவு பெரிய நகரில் தான் ஒரு ஆளாகப் போய்க்கொண்டிருப்பது போலிருந்தது.

மருத்துவமனையில் நிறைய ஆட்கள் காத்திருந்தார்கள். அவர் தனது காத்திருப்போருக்கான அடையாள அட்டையை வாங்கிய

போது அவருக்கு முன்பாக எண்பத்து இரண்டு பேர் காத்திருப்பது தெரிய வந்தது. எப்படியும் தான் மருத்துவரைப் பார்ப்பதற்கு ஒன்பது மணிக்கு மேலாகிவிடும் என்றபடியே மருத்துவமனையின் பிளாஸ்டிக் நாற் காலியில் அமர்ந்தபடியே தலை கவிழ்ந்துகொண்டார்.

ஒவ்வொரு நோயாளியும் உள்ளே சென்றுவிட்டு வெளி யில் வரும்போது அவர்களின் சப்தம் கேட்டதேயன்றி முகம் தெரியவில்லை. அவருக்கு நேரமாக ஆக பயமும் நடுக்கமும் அதிகமாகிக்கொண்டே யிருந்தது. சுவரிலிருந்து காரைகள் உதிர்ந்துகொண்டிருப்பதுபோல காட்சிகள் தன்னிடமிருந்து மறைந்துகொண்டிருக்கின்றன என்ற அச்சம் மேலோங்கத் துவங்கியது.

அவர் தன் சட்டைப்பையில் வைத்திருந்த சிறிய கணக்கு நோட்டு ஒன்றைப் பிரித்து உற்றுப் பார்த்தார். இந்த மாதம் முடிக்க வேண்டிய இலக்கில் பாதிகூட முடியாமலிருந்தது. என்ன செய்வது என்று தெரியாத குழப்பமாக இருந்தது.

திடீரென தணிகைக்குத் தோன்றியது உலகம் இப்படித்தானே பகுதி பகுதியாக இதற்கு முன்னாலும் இருந்தது. எதற்காக இப்போது தான் தேவையில்லாத பதட்டம் கொண்டுவிட்டோம். அந்த எண்ணம் தோன்றியதும் நமக்குத் தேவையானது நமது அலுவலகம், வீடு, மனைவி, குழந்தைகள், தேவைப்படும் நபர்கள், கடைகள் இதற்கு மேலாக எதற்கு உலகின் காட்சிகள் என்று மனது சொல்லியது.

உண்மையில் உலகம் எதற்காக இத்தனை பெரிதாகவும் தொடர் பற்ற ஆயிரக்கணக்கான இயக்கங்களோடும் இருக் கிறது, அதனால் தனக்கு என்ன பலன் என்ற சலிப்பு வந்தது.

நல்லவேளை தனக்குத் தேவையான காட்சிகள் மட்டுமே தெரியத் துவங்கியிருக்கிறது. இது ஒரு அதிர்ஷடம், இதை எதற்காகக் கெடுத்துக் கொள்ள வேண்டும் என்று நினைத்தபடியே தனது காத்திருப்போர் அடையாள அட்டையைக் குப்பைக்கூடையில் தூக்கி எறிந்துவிட்டு வெளியே வந்தார். அவர் வீட்டிற்குச் செல்ல வேண்டிய பேருந்து வருவது தெரிந்தது.

சாலை தெரியாமல் பேருந்து மட்டுமே தனியாக வந்து கொண்டிருந் ததைக் காண மிக அழகாக இருந்தது. இப்போதுதான் உலகம் தனக்கு மிக நெருக்கமாக இருக்கிறது என்று புன்முறுவல் செய்தபடியே தணிகை பேருந்தில் ஏறி தன் இருக்கையில் அமர்ந்துகொண்டார். வீடு வரும் வரை அவர் தனக்குத்தானே சிரித்துக்கொண்டிருந்ததை மற்றவர்கள் கண்டுகொள்ளவேயில்லை. அதுதான் உலகின் இயல்பு இல்லையா?

# என்னை சாம்பல் கிண்ணம்போல உபயோகிக்கிறார்கள்

உங்களுக்கு என்னைப் பற்றித் தெரிந்து எதுவும் ஆகப் போவதில்லை. நீங்கள் என்னைப் பார்த்திருக்க மாட்டீர்கள். ஒருவேளை கவனித்திருந்தால்கூட என்னைப் பார்த்து முகம் சுழித்திருப்பீர்கள். காரணம் நான் உங்களைப் போல சலவை செய்த உடையை அணிந்திருக்கவில்லை. தினமும் முகச்சவரம் செய்யும் வழக்கம் எனக்குக் கிடையாது. எனக்கென்று அறை எதுவும் கிடையாது. எந்த வங்கியிலும் நான் கணக்கு வைத்திருக்கவில்லை. திருடும் பழக்கம் எனக்கிருக்கிறது. ஓசியில் வாங்கிக் கொடுத்தால் குடிப்பேன். யாராவது கஞ்சா வாங்கிக்கொண்டு வரச்சொன்னால் அதைக் கொஞ்சம் திருடி வைத்துக்கொண்டு பீடியில் ஏற்றிப் புகைப்பேன்.

எனக்குச் சொந்தமாக எதுவுமேயில்லை. ஆனால் நான் நினைத்தால் சாலையில் உள்ள எந்தக் கடையையும் கல்லால் எறிந்து உடைக்க முடியும். இங்குள்ள வங்கியில் நுழைந்து எவரிடமும் பணம் பறிக்க முடியும். சாலையில் வாகனத்தில் செல்பவர்களை அடித்து உதைக்க முடியும். நெடுஞ்சாலையில் மூத்திரம் பெய்ய முடியும். காய்கறி வாங்க வரும் பெண்களை அங்கேயே கட்டிப்பிடிக்க முடியும். வாகனங்களைத் திருட முடியும். செல்போன்களைப் பறித்துச் செல்ல முடியும். ஹோட்டலில் புகுந்து டம்ளர் திருட முடியும். சாலையோரக் கடையில் வயிறு முட்டத் தின்று விட்டு காசு கொடுக்காமல் கூச்சலிட முடியும். பிக்பாக்கெட் அடிக்கவும் கூலிக்கு அடியாளாக வேலை செய்யவும் சாத்தியமிருக்கிறது. இப்படி எனக்கு நூற்றுக் கணக்கான வழிகள் இருக்கின்றன.

இது எனக்கு மட்டுமல்ல அரசாங்க அலுவலகத்தில் வேலை செய்பவராகவோ, தனியார்த் துறை ஊழியராகவோ, மாணவராகவோ, குடும்பத்தலைவனாகவோ, தொழில் நடத்துகின்றவராகவோ உள்ள உங்களில் எல்லோருக்கும் இதே சாத்தியங்கள் இருக்கின்றன. உங்களில் சிலர் இதை ரகசியமாகச் செய்து வருவதும் எனக்குத் தெரியும்.

நான் உங்களைப் போல தைரியமானவன் இல்லை. எனக்கு எல்லாமே கற்பனைதான். நானாகக் கற்பனை செய்துகொள்வதோடு சரி. வேறு எந்தக் காரியத்திலும் இறங்கியதில்லை. அதனால்தான் என்னைப் பலரும் சாம்பல் கிண்ணம் போல உபயோகிக்கிறார்கள்.

சாம்பல் கிண்ணம் என்பது சிகரெட் பிடிக்காதவர் களுக்குப் பழக்கமில்லாதது என்பதால் உங்களுக்குத் தெரிந்த இன்னொன்றையும் சொல்கிறேன். என்னைக் கழிப்பறைக்குப் போட்டுச் செல்லும் செருப்பைப் போல பலரும் உபயோகிக் கிறார்கள். ஆனால் ஆண்களில் பெரும்பான்மையினர் சிகரெட் பிடிக்கின்றவர்கள். எனக்குத் தெரிந்த பெண்களும் சிகரெட் பிடிக்கின்றவர்கள்தான், ஆனால் அவர்கள் பொது இடங்களில் புகைபிடிப்பதில்லை.

சிகரெட் கிண்ணங்களைக் கண்டுபிடித்தவன் யார் என்று பல நேரம் யோசித்திருக்கிறேன். அவன் ஒரு அயோக்கியன் என்ற எண்ணம் நிச்சயமாக உண்டு. காரணம் சிகரெட் கிண்ணமாக இருப்பதைப் பற்றி அவன் அதிகம் யோசித்திருக்கவில்லை. எரிந்துபோன சாம்பலும் மீதமான சிகரெட்டும் காறி உமிழ்ந்த எச்சில் துணுக்குகளும் கொண்ட சாம்பல் கிண்ணத்தை யாருக்காவது பிடிக்குமா என்ன? ஒரு சாம்பல் கிண்ணத்தின் வாழ்நாள் எவ்வளவு? சிகரெட்டுகளின் எண்ணிக்கையை வைத்துக் கணக்கிடுவதா? இல்லை அதை உபயோகிப் பவர்களின் எண்ணிக்கையை வைத்துக் கணக்கிடுவதா?

அரவிந்த் சுப்ரமணியம் அறையில் உள்ள சாம்பல் கிண்ணத்தை ஒரே நேரத்தில் பதினோரு பேர் உபயோகிக்கிறார்கள். அது ஒரு பொதுக்கழிப்பறை போலத்தானிருக்கிறது. ஆனால் அதைப் பற்றி எவரும் கவலை கொள்வதில்லை. காரணம் யாருமே சிகரெட்டைப் பாதியில் விட்டுவைப்பதில்லை. அரவிந்த் சுப்ரமணியத்திற்கு உள்ள பெரிய ஆச்சரியம் சிகரெட் ஏன் சாம்பலாக மாறிவிடுகிறது என்பது தான். அவன் சில நேரங்களில் அந்தச் சாம்பலை என் வாயில் அள்ளிப் போட்டு என்னைச் சாப்பிட வைத்திருக்கிறான். நான் அதற்கெல்லாம் மறுப்பு சொல்வதில்லை. காரணம் அரவிந்த் சுப்ரமணியம் எனக்காக வாரம் நூறு ரூபாய் செலவு செய்கிறான்.

அவன் மீதம் வைத்த இட்லிகள், ரம் பாட்டில், காரசேவு எல்லாமும் எனக்குத்தான். நானாக இதுவரை கடையில் சென்று அவித்த வேர்க்கடலைகூட வாங்கியதில்லை. அது பிடிக்காது என்பதால் அல்ல. அதை வாங்கும் தகுதியை இன்னும் அடையவில்லை என்பதால். சாம்பல் கிண்ணத்தைப் பற்றிப் பேசத் துவங்கிய நான் அரவிந்த் சுப்ரமணியத்தைப் பற்றி ஏதோ பேசப் போய் அதை மறந்துவிட்டேன் இல்லையா? அப்படிச் சாம்பல் கிண்ணத்தை எளிதில் மறக்கக் கூடாது. உதாரணத்திற்கு ஒரு கதை சொல்கிறேன்.

## முதலில் அவன்

கதைக்குச் செல்வதற்கு முன்னால் அவனைப் பற்றிச் சொல்லிவிடு

கிறேன். அவன் பன்னாட்டு நிறுவனம் ஒன்றில் வேலை செய்துகொண் டிருக்கிறான். மாதச் சம்பளம் ஐம்பத் திரண்டாயிரம். அதில் நாற்பதாயிரம் ரூபாயைச் சேமிப்பில் போட்டுவிடுகிறான். மீதமான பணத்திற்குக் குடி, சாப்பாடு, உடை என்று வாழ்ந்துகொண்டிருக்கிறான். அவன் காதலிக்கும் பெண்ணிற்கு அவனைவிட ஒன்பதாயிரம் சம்பளம் அதிகம். அதனால் அவர்கள் இருவரும் எப்போதும் பிரிந்து போய்விடமுடியும் என்று தெரிந்தே காதலித்துக்கொண்டி ருந்தார்கள்.

அவன் பெயர் உங்களுக்கு எதற்கு. அவன் என்று சொல்லும்போது நீங்களாக யாரையோ நினைத்துக்கொள்வீர்கள். பெயர் வைத்து விட்டால் உங்களுக்கு ரொம்பவும் தெரிந்த மனிதன் போலாகி விடுவான். அப்படி அவன் ஆகக்கூடாது. ஒரு பெயரைத் தனக்குச் சொந்தமாக்கிக்கொள்ளும் அளவிற்கு அவன் சரியானவன் இல்லை.

அவனுக்கு ஒரு பழக்கமிருந்தது. கழிப்பறையில் அவன் மலம் கழித்து முடிப்பதற்கு நாலு சிகரெட் குடித்துவிடுவான். இதுபோன்ற நேரங்களில் அவன் கழிப்பறையில் இருந்த படியே தீக்குச்சி வேண்டும் என்று என்னைத்தான் அழைப் பான். நான் கழிப்பறையின் கதவைத் திறந்துகொண்டு உள்ளே அமர்ந்திருந்த அவனிடம் தீப்பெட்டியைத் தருவ துண்டு. சிலவேளைகளில் அவன் என்னையே பற்ற வைக்கச் சொல்வான். தீக்குச்சியால் சிகரெட் பற்றவைத்த பிறகு என் நாக்கை நீட்டச் சொல்லி அதில் தீக்குச்சியை அணைப் பான். நான் கத்தக் கூடாது. அவனைத் தவிர அந்த அறையில் யாரும் கத்துவதற்கு உரிமை கிடையாது. நான் தீக்குச்சிகளில் சிலவற்றை விழுங்கியிருக்கிறேன்.

அப்பேர்ப்பட்ட அவனுக்கு நிறைய நண்பர்கள் இருந்தார் கள். அவர்கள் ஞாயிற்றுக் கிழமைகளில் ஒன்றுகூடுவார்கள். காலையில் இருந்து சீட்டாடுவார்கள். சில நேரம் பியர் குடிப்பார்கள். இந்த இரண்டின் இடையிலும் சிகரெட் பிடித்தபடியே இருப்பார்கள். அப்போது ஒவ்வொருவரும் ஆளுக்கு ஒரு சாம்பல் கிண்ணம் வேண்டும் என்று அடம் பிடிப்பார்கள். இதற்காக வீட்டில் நாலைந்து பிளாஸ்டிக் டம்ளர்கள் வாங்கிப் போட்டிருந்தான். அந்த பிளாஸ்டிக் குவளைகளைவிடவும் பாதுகாப்பானது என்னுடைய உள்ளங் கை என்று அவர்களுக்குத் தெரிந்திருந்ததால் என் கைகளில் சாம்பலைத் தூவுவதும் உண்டு.

ஒரு நாள் அவன் அதிகம் குடித்திருந்தான். அப்போது அவனைத் தேடி அவன் காதலி பார்ப்பதற்காக வந்திருந்தாள். அவளும் பியர் குடிக்கக்கூடியவள் என்பதால் என்னை இரண்டு பியர்கள் வாங்கி வரும்படியாக அனுப்பி வைத்தான். நான் கடையில் இருந்து குளிர்ச்சி யில்லாத பியர்கள் வாங்கி வந்த காரணத்தால் என்னையே இரண்டு பியர்களையும் குடிக்கச் சொல்லிவிட்டு அவர்கள் புகைத்துக்கொண்டே யிருந்தார்கள். அந்தப் பெண் மிக வேகமாக சிகரெட் பிடித்தாள். அவளது வேகத்திற்கு ஈடு கொடுத்து அவனால் புகைக்க முடியவில்லை. அது அவனுக்கு ஆத்திரம் ஏற்படுத்தியிருக்க வேண்டும். நான்

குடித்துக்கொண்டிருந்த பாட்டிலைப் பிடுங்கி அவள் தலையில் மீதமான பியரை ஊற்றிவிட்டு இன்னொரு சிகரெட்டைப் பற்ற வைத்துக்கொண்டான்.

அவள் அவனிடமிருந்த சிகரெட்டைப் பிடுங்கிப் புகைத்த படியே கழிசடை என்று திட்டிவிட்டுச் சென்றாள். அவன் அந்தப் பெண்ணோடு சண்டையிட்டாலும் என் வகையில் நல்லவன். தன்னுடைய அறையில் பகல் நேரங்களில் நான் தங்கிக்கொள்வதற்கு அனுமதித்திருந் தான். இதற்காக நான் அறையைச் சுத்தம் செய்து அவனது உள்ளாடைகள் வரை துவைத்துப் போட வேண்டும். சில வேளைகளில் அவனது உள்ளாடைகளை நான் சாக்கடையில் எறிந்துவிட்டு காயப் போட்ட போது பறந்து போய்விட்டதாகக் கதை சொல்லியிருக்கிறேன்.

அவன் அறையில் பணம் வைத்துவிட்டுப் போவதே கிடையாது. எனக்கு ஆத்திரமாக வந்தது. பகலில் அறையில் பசியோடு நான் என்ன செய்வது. அவனுடைய இரண்டு ஜீன்ஸ் பேண்டுகள், மற்றும் காலணிகளைத் திருடிக்கொண்டு விற்றுவந்தேன். அதை அவன் கண்டுபிடிக்கவில்லை. ஒரு நாள் என்னைக் கடற்கரைக்குக் கூட்டிக் கொண்டுபோய் சுண்டல் வாங்கித் தந்தபடியே நீ யாரையாவது காதலித்திருக்கிறாயா என்று கேட்டான். நான் பொய்யாகச் சில பெண்களின் பெயர்களைச் சொன்னேன்.

அவன் என்னிடம் தன்னோடு வேலை செய்யும் பார்த்தா என்ற இளைஞனுக்கும் தனக்கும் நெருக்கமான உறவு ஏற்பட்டிருக்கிறது என்றும் பார்த்தா தன்னை இரண்டு முறைமுத்தமிட்டுவிட்டதாகச் சொன்னான். நான் பரிகாசத் துடன் இதைப் பற்றி அந்தப் பெண்ணுக் குத் தெரியுமா என்று கேட்டேன். அவன் அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. ஆனால் இதனால் ஏதாவது பிரச்சினை ஏற்படுமா என்று விசாரித்துச் சொல்ல முடியுமா என்று கேட்டான். நானும் தலையாட்டிக்கொண்டேன். ஆனால் யாரிடம் இதைப்பற்றி விசாரிப்பது.

அந்த வாரம் ஞாயிற்றுகிழமை பார்த்தா அறைக்கு வந்திருந்தான். மிகவும் டைட்டான பேண்ட் அணிந்து மீசையில்லாமல் இருந்தான். அவனைப் பார்க்கும்போது அவன் முத்தமிட்ட விஷயம் என் நினைவில் வந்தபடியே இருந்தது. என்னை அறியாமல் நான் சிரித்து விட்டேன். எதற்காக என்று அவன் என்னிடம் கேட்டபோது பார்த்தா பொம்பளை போலவே இருக்கிறான் என்றேன். அவனுக்கு அது ஆத்திரத்தை உண்டு பண்ணியிருக்கக்கூடும். அருகில் சாம்பல் கிண்ணமாக இருந்த பிளாஸ்டிக் டம்ளரில் பியரை ஊற்றி அதைக் குடிக்கும்படியாகச் சொன்னான். நான் குடித்துவிட்டு அவனுடைய அறையிலிருந்து எதையெல்லாம் திருடிச் சென்றேன் என்பதைப் பற்றி விரிவாகச் சொன்னேன்.

அவன் நம்பவில்லை. பொய் சொல்லாதே என்றபடியே என்னுடைய தாடையில் ஒரு குத்துவிட்டான். நான் கத்தவில்லை. அவனுக்குப்

பிடிக்காது என்று எனக்குத் தெரியும். பார்த்தாவும் அவனும் அறையின் கதவை மூடிக்கொண்டு என்னை எலியைத் துரத்தியடிப்பது போன்று அடித்தார்கள். நெற்றியில் காயம் பட்டபிறகு என்னை அறையை விட்டு வெளியே தூக்கிப் போட்டார்கள். அன்றிரவு நான் கழிப்பறையில் சுத்தம் செய்து வீசி எறியப்பட்ட காகிதம் போலக் கிடந்தேன். யாரும் என் அருகில் வரவேயில்லை. லாண்டரி வண்டி அடியில் இரவெல்லாம் படுத்துக் கிடந்தேன்.

அவன் மறுநாள் என்னைச் சந்தித்து பார்த்தாவைப் பற்றி யாரிடமாவது சொன்னால் திரும்பவும் அடிவிழும் என்றான். நான் ஐந்து ரூபாய் சாப்பிடுவதற்காக வேண்டும் என்றதும் பர்சிலிருந்து இருபது ரூபாய் தந்துவிட்டுச் சென்றான். அதன்பிறகு அவன் அறைக்குப் போகவில்லை. ஆனால் இப்போதும் அவன் சாம்பல் கிண்ணமாக பிளாஸ்டிக் டம்ளர்களைத்தான் உபயோகித்துக்கொண்டிருப்பான் என்பதுதான் எனக்குச் சங்கடம் தருவதாக உள்ளது.

**இந்தக் கதையில் வராத இன்னொருவன்.**

இவன் பெயருக்குப் பதிலாக கோக் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவன் ஒரு நாளைக்கு ஆறு குளிர்பானங்கள் குடிப்பான். பிறகு அந்த பாட்டில்களைத் திருப்பித் தர மாட்டான். பெட்டிக்கடைக்காரன் ஒவ்வொரு முறையும் இவன் அறைக்கு வந்து காலிபாட்டில்கள் கேட்கும்போது அதைத் தான் உடைத்துவிட்டதாகப் பொய் சொல்வது அவனது வழக்கம். அவனுக்குக் காலி பாட்டில்கள் பிடிக்கும். பல்வேறு விதமான குளிர்பானங்களின் காலி பாட்டில்கள் நூற்றுக் கணக்கில் தனது படுக்கையின் அடியில் வைத்திருக்கிறான்.

அவனுடைய அறையில் என்னைக் கொண்டு போய் விட்டவன் விஜயசேகரன். கோக்கும் விஜயசேகரனும் ஒரே மின்சார வண்டியில் பயணம் செய்யும்போது நண்பர்கள் ஆனவர்கள். எனக்குப் பிடிக்காத ஒரு விஷயம் நண்பராவது, நான் இதுவரை யாரிடமும் நண்பர் ஆனது கிடையாது. நண்பன் ஆவது என்றால் என்வரையில் ஓசியில் தின்பது என்றுதான் பொருள். நல்ல நண்பர்கள் உயிரைக் கொடுப்பார் கள் என்று விஜய பாஸ்கரன் பலமுறை சொல்லியிருக்கிறான். ஆனால் இதுவரை ஒருவன்கூட உயிரைக் கொடுத்து நான் பார்த்ததில்லை.

விஜயபாஸ்கரனுக்கு நிறைய நண்பர்கள். அதாவது நிறைய பொறுக் கித் தின்பவர்கள். அவர்களில் ஒருவன்தான் கோக். விஜய பாஸ்கரனும் கோக்கும் பேசத் துவங்கினால் உலகில் உள்ள எல்லா விஷயங்களைப் பற்றியும் பேசுவார்கள். சில நேரங்களில் கோக் அமெரிக்காவில் என்ன மாற்றங்கள் செய்ய வேண்டும் என்று தனது டயரியைத் திறந்து வைத்துக் கொண்டு குறிப்புகளைக் காட்டுவான். எனக்கு கோக்கை ரொம்பவும் பிடிக்கும். அவனுக்கும் என்னைப் போலவே திருடும் பழக்கமிருந்தது.

ஆனால் அவன் பெட்டிக்கடைகளில் மட்டுமே திருடு வான். அதுவும் சாக்லெட், கடலைமிட்டாய், வார இதழ்கள், வாழைப்பழம் போன்றவைதான். இதனால் அவன் திருடும் சாகசத்தைக் காட்டு வதற்காக என்னை அழைத்துக்கொண்டு போவான். நான் அவனோடு நின்றபடியே அந்த சாகசத்தைப் பார்த்து ரசிக்க வேண்டும். கோக் ஒரு நாள் என்னைத் தெருவில் கிடக்கும் வாழைப்பழத் தோல்களாக நூறு பொறுக்கிக்கொண்டு வந்தால் பத்து ரூபாய் பணம் தருவதாகச் சொன்னான்.

நான் எக்மோர் பகுதி முழுவதும் சுற்றியும் முப்பது வாழைப்பழத் தோல்களுக்கு மேல் கிடைக்கவில்லை. கோக் இதை எதிர்பார்த்திருக்க வேண்டும். நகரில் வாழைப்பழம் தின்பவர்கள் மிகவும் குறைந்து போய்விட்டார்கள் என்ற கருத்தை முன்வைத்து அவன் ஆங்கில நாளிதழ் ஒன்றிற்குக் கடிதம் எழுதத் துவங்கினான். நான் இப்போது பழம் சாப்பிடுகின்றவர்கள் தோலையும் சேர்த்துச் சாப்பிட்டு இருந்தால் என்ற சந்தேகத்தை எழுப்பினேன். அவன் காலி புட்டியொன்றை எடுத்து என் முழங்காலோடு அடித்தபடியே சொல்ற வேலையை மட்டும் செய்யுடா மசிரே என்று கத்தினான். அவன் அறையிலிருந்து தப்பி வரும்நாள் வரை நான் அதற்குப் பிறகு வாழைப்பழம் பற்றிப் பேச்சே எடுக்கவில்லை.

**இவர்களுக்குத் தெரிந்த டெய்லர்கடைப் பெண்.**

அவன், இவன், கோக், அவர்கள் என எல்லோருக்கும் தெரிந்த பெண் அந்த டெய்லர் கடையில் வேலை செய்பவள். பகலில் கடையில் வேலை செய்யும்போது அவளைப் பார்த்தால் இவளா இப்படி நடந்துகொள்கிறாள் என்று கேட்கத் தோன்றும். அமைதியாக அவள் காஜா போட்டுக் கொண்டிருப்பாள். மதிய நேரங்களில் அவளை யாராவது அழைப்பார்கள். அப்போது மட்டும் தனது சுடிதாரை சரி செய்துகொண்டு அமைதியாக வெளியே வருவாள். அவளை அழைத்து வரும் வேலை என்னுடையது. நான் இதற்காக டெய்லர் கடையின் முன்பாகப் போய் நின்றபடியே டெய்லரிடம் பேச்சு கொடுப்பேன். அவள் என்னைக் கடைக்கண்ணால் பார்த்தபடியே இருப்பாள்.

வெட்டுத்துணிகளைக் குனிந்து எடுப்பது போல அவளி டம் அவன் வரச்சொல்கிறான் என்று சொல்வேன். காசு தந்திருக்கிறானா என்று கேட்பாள். ஒருத்தனும் என்னிடம் காசு தருவதில்லை. நான் இல்லை என்றதும் அவள் எழுந்து தன்னுடைய கூந்தலை அங்கிருந்த கண்ணாடியில் சரி செய்துகொள்வாள். பிறகு என்னிடம் நீ போய் வாட்டர் பாக்கெட் வாங்கிக்கொண்டு வா என்று சொல்வாள். நான் வாட்டர் பாக்கெட் வாங்கிக்கொண்டு அங்கேயே நின்று கொண்டிருப்பேன்.

அவள் தன்னை அழைத்தவனுடன் கொஞ்ச நேரம் படுக்கையைப்

பகிர்ந்துவிட்டு வெளியே வரும்போது நான் வாங்கி வைத்திருந்த வாட்டர் பாக்கெட்டால் முகம் கழுவிவிட்டு, தலைவலி மாத்திரை ஒன்றும் டீயும் வாங்கிக்கொண்டு வரச் சொல்வாள். இதற்குப் பதிலாக அவள் செருப்பால் அடித்திருந்தால்கூட எனக்குப் பெரிதாகத் தோன்றியிருக்காது. அவள் என்னைப் பற்றி எவ்வளவு இழிவாக நினைத்துக்கொண்டிருக்கிறாள் என்று ஆத்திரமாக வரும்.

அதற்காக நான் தலைவலி மாத்திரை வாங்கித் தராமல் இருக்க மாட்டேன். மருந்துக்கடைக்குச் சென்று மாத்திரை வாங்கிக்கொண்டு கையோடு டீ வாங்கி வருவேன். எனக்கு அவளை ரொம்பவும் பிடிக்கும். எதற்காக என்று தெரியவில்லை. இந்த அவன், இவன், கோக்கு எல்லாமும் ஒழிந்து போனால் அவள் ஒழுங்காக டெய்லர் வேலை மட்டும் பார்ப்பாள் இல்லையா என்று கோபமாக வரும். அவள் மாலை நேரங்களில் தவறாமல் அருகில் உள்ள கோவிலுக்குப் போய்விட்டுத்தான் வீட்டிற்குக் கிளம்புவாள். நிறைய கஷ்டங்கள் உள்ள குடும்பமாக இருக்கும். அவள் யாரோடாவது கல்யாணம் பண்ணிக்கொண்டு போய்விட மாட்டாளா என்று நிறைய நேரம் யோசித்திருக்கிறேன். நான் நினைப்பது எல்லாம் நடந்துவிடுமா என்ன?

**நான் சந்தித்த சிறு சிறு குற்றங்கள்**

மின்சார ரயிலில் போகும்போது நேற்று ஒரு ஆளைப் பார்த்தேன். கையில் சிறிய ஆக்சா பிளேடு வைத்திருந்தான். அலுவலகம் போய் விட்டுத் திரும்பும் ஒரு அரசு அதிகாரி போன்றிருந்த ஆளின் பின்புறத்தில் தன் ஆக்சா பிளேடால் சொருகிவிட்டு ஓடும் ரயிலில் இருந்து குதித்து ஓடிவிட்டான். மின்சார வண்டியில் இருந்தவர்களில் எல்லோரும் ரத்தத்தைக் கண்டு பயந்து அலறினார்கள். ஒரு ஆள் அதைக் கவனிக்காமல் மாலை முரசு படித்துக்கொண்டிருந்தான். எனக்கு அவனை அப்படியே ரயிலை விட்டுத் தள்ளிவிட வேண்டும் போலிருந்தது. ஆனால் நான் அப்படிச் செய்யவில்லை. ஓடும் ரயிலில் எப்படித் தாவிக் குதிக்கிறார்கள் என்று ஆச்சரியமாக இருந்தது. அதைக் கற்றுக்கொள்ளத் தவறிய குற்றவுணர்ச்சி எனக்கு அதிகமாக இருந்தது.

பிரபலமான ஜவுளிக்கடை ஒன்றில் கடையை மூடும் சமயம் அங்கிருந்த தலையில்லாத பெண் பொம்மை ஒன்றிற்குக் கடையில் வேலை செய்யும் பையன் ஒருவன் ரகசியமாக முத்தமிட்டதை கேஷியர் கவனித்துவிட்டார். அவனிடம் அந்த விளம்பரப் பெண் பொம்மையின் விலை இருபதாயிரம் ரூபாய். அதைத் தொட்டுப் பார்க்கிறாயா என்று சொல்லி மாறிமாறி அறைந்ததோடு அரிப்பு எடுத்தால் கழுதையைத் தேடிக்கொண்டு போ என்றார். கழுதை கிடைப்பது

அவ்வளவு எளிதில்லை சார் என்று சொல்லியபடியே தனது செருப்பைத் தேடி அணிந்துகொண்டு போனாள் மூன்றாவது தளத்தில் வேலை செய்யும் பெண். அந்தப் பையன் அன்றிரவு கட்டாயம் குடிப்பான் என்பது எனக்கு வருத்தமாக இருந்தது. இன்னொரு பக்கம் அந்தப் பையனுக்கு இருந்த ஆசை போல எனக்கும் அதே பொம்மையை முத்தமிட ஆசையிருந்திருக்கிறது. அதை நிறைவேற்ற தைரியமில்லையே என்று கோபமாக வந்தது

அய்யப்பன்தாங்கல் பேருந்து நிறுத்தத்தில் உள்ள பழ வண்டிக்கார னிடம் ஐம்பது வயதான ஒரு ஆள் ஆப்பிள் பேரம்பேசி வாங்கிக் கொண்டிருந்தார். அவராகவே தேர்வு செய்த ஆறு ஆப்பிள்களை வாங்கிக்கொண்டு நூறு ரூபாய்த் தாளைக் கொடுத்து மீதம் வாங்கிக் கொண்டு பேருந்தில் ஏறினார். நானும் அதே பேருந்தில் ஏறினேன். அவரோடு வந்திருந்த மகளிடம் ஒரு ஆப்பிளைத் தின்பதற்காகத் தந்துவிட்டு, செல்லாத நூறு ரூபாய் நோட்டை மாற்றி விட்டேன் என்று சொல்லிச் சிரித்தார். அந்தப் பெண் தன்னிடம் ஒரு கிழிந்த பத்து ரூபாய் இருப்பதாகச் சொன்னாள். அது எம்மாத்திரம் என்றபடியே கிழிந்த நோட்டை எடுத்துப் போய் இரண்டு பயணச் சீட்டு வாங்கி வந்தார். அப்பாவும் மகளும் சிரித்துக்கொண்டார்கள். எனக்கு அந்த ஆளை அடிவயிற்றோடு உதைக்க வேண்டும் போலிருந் தது. ஆனால் அவர் எண்பது கிலோவிற்கும் மேல் எடை உள்ளவராக இருந்ததால் நான் கண்ணை மூடிக்கொண்டு அடுத்த நிறுத்தத்தில் இறங்கிவிட்டேன்

இரவுக்காட்சி முடிந்து திரும்பி வரும்போது பார்த்தேன். ஒரு ஆட்டோவில் வந்த மூன்று பேர் ஒரு பெண்ணோடு பேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். அந்தப் பெண், இரண்டு பேர் என்றால் மட்டுமே தான் வருவதாகச் சொல்லிக்கொண்டிருந்தாள். மறுநிமிடம் ஆட்டோவில் இருந்த ஒரு ஆளைக் கீழே இறக்கிவிட்டு அந்தப் பெண்ணை ஏற்றிக்கொண்டார்கள். சாலையில் இறக்கிவிடப்பட்ட அந்த ஆள் பரிதாபமாக ஆட்டோவைப் பார்த்துக்கொண்டிருந்தான். நானாக நடந்து போய் அவனுக்கு சிகரெட் வேண்டுமா என்று கேட்டேன். அவன் சலித்துக்கொண்டபடியே ஆட்டோ திரும்பி வரும் வரை அங்கேயே காத்திருக்க வேண்டும் என்றான். எனக்கு அவன் மீதும் கவலையாக இருந்தது. இதற்குப் பதிலாக அவன் அவர்களோடு சண்டையிட்டு அந்தப் பெண்ணைத் தூக்கிக்கொண்டு போயிருக்கலாம் என்று கற்பனை செய்தபடியே யாருடைய அறைக்குப் போவது என்று தெரியாமல் நடந்துகொண்டிருந்தேன்.

என்னைப் பற்றி இப்படி இஷ்டம் போலக் கற்பனை செய்து கொள்வதில் பெரிய சௌகரியம் உள்ளது. இதில் எது பொய், எது நிஜம் என்று நீங்களாகக் கற்பனை செய்துகொள்வதற்கு நிறைய சாத்தியங்கள் உள்ளன. நான் நிறைய பொய்களைச் சொல்லியிருக்கிறேன். ஆனால் பொய்கள் தானே உருவாகக்கூடியதில்லை. அவை பெரிய கண்டுபிடிப்புகள். நான் இந்த நகரத்தின் ஒரு கோடிப் பேர்களில் ஒருவனாக இருக்கிறேன். எனக்கென எந்த அடையாளமும் இல்லை. என் பொய்கள் என்னை வாழ வைத்துக்கொண்டிருக்கின்றன. இந்தப் பொய்கள் எதிலும் நீங்கள் உங்கள் பெயர்களைப் பொறுத்திப் பார்த்து உண்மை யாக்கிக்கொள்ளலாம். அப்படி நீங்கள் முயற்சிப் பீர்கள் என்பது எனக்குத் தெரியும். அதுதான் கதையின் நோக்கமும் இல்லையா?

# நற்குடும்பம்

அன்றைக்கு அப்பாவின் சம்பள நாள். நானும் சித்தியும் டவுன் பஸ்ஸில் வந்து இறங்கி பேருந்து நிலையத்தினுள் நடந்தபோது வெயில் தாரை தாரையாக வழிந்துகொண்டிருந் தது. வழக்கமாகத் தென்படும் வெள்ளரிக்காய் விற்பவர்களைக்கூட அன்று காண முடியவில்லை. மதியவேளை என்பதால் பேருந்துகள் காலியாக நின்றிருந்தன.

சக்கர வண்டியில் தள்ளித் தள்ளி ஊர்ந்தபடியே பிச்சை யெடுக்கும் குள்ளமான ஆள் மூத்திர சந்தை நோக்கிச் சென்றுகொண்டிருந்தான். பேருந்து நிலையத்தின் நடுவிலிருந்த சேர்மன் சிலை மட்டும் வெயிலுக்கு தன்னை ஒப்புக் கொடுத்தது போல சலனமின்றி உறைந்து போயிருந்தது.

அப்பா வந்து எங்களை அழைத்துபோகும் வரை பேருந்து நிலையத்தின் பயணியர் அறையில் காத்துக்கொண்டிருப்பது என்று சித்தியும் நானும் முடிவு செய்தபடியே அதை நோக்கி நடந்து சென்றோம். நடைமேடையில் ஊதா நிறத்தில் கட்டம் போட்ட சேலை கட்டிய ஒரு பெண் தரையில் உதிரி மல்லிகைப் பூக்களைக் கொட்டி நாரில் பூக்கட்டிக்கொண்டிருந்தாள். அவள் அருகிலிருந்த டீக்கடை யின் ஓரமாக ஒரு முண்டா பனியன் அணிந்த ஆள் வேகவேகமாக பல்லாரி வெங்காயம் வெட்டிக்கொண்டிருந்தான். அவன் முன்னால் ஒரு சிவப்பு பிளாஸ்டிக் வாளி நிறைய வெட்டிய வெங்காயங்கள் நிரம்பியிருந்தன. சித்தி எதையும் கண்டுகொள்ளாத வளைப் போல பயணியர் அறையின் உள்ளே எட்டிப்பார்த்தாள்.

அந்த அறை பழுப்பேறி, சுவரில் காரைகள் உதிர்ந்து திட்டு திட்டாகயிருந்தது. தரையில் மூக்குசளியும் வெற்றிலை எச்சமுமாக இருந்தது. பகலில்கூட அங்கு வெளிச்சம் வரவேயில்லை. அறையினுள் இரண்டு சிமெண்ட் பெஞ்சு களிருந்தன. ஒன்றில் வயதான பெண் ஒருத்தி சுருண்டு படுத்துக்கிடந்தாள். அவளது பித்தவெடிப்பேறிய பாதம் மட்டும் தனியே தெரிந்தது. இன்னொரு பெஞ்சில் யாரோ வாந்தியெடுத்து வைத்திருந்தார்கள். அதன் மீது ஈக்கள் மொய்த்தபடியே இருந்தன.

சித்தி தயங்கித் தயங்கி அந்த அறையினுள் கால் வைத்து நடந்தாள். பிறகு உத்திரத்தைப் பார்த்தபடியே ஃபேன் கிடையாதா என்று கேட்டாள். கிழக்கே உள்ள ஜன்னலைத் திறந்து வைத்தால் வேப்ப மரத்தின் காற்று வரும் என்று சொன்னேன். சித்தி அந்த அறையை அசூயை யாகப் பார்த்தபடியே வெளியே இருந்த பெஞ்சில் உட்கார்ந் திருக்கலாமா என்று கேட்டாள். இந்த அறையில்தான் நானும் அம்மாவும் பல முறை அப்பாவிற்காகக் காத்துக் கொண்டிருந்திருக் கிறோம். இந்த அறையில் அம்மாவின் தலையில் இருந்து சொட்டிய ரத்தக்கறை படிந்திருக்கிறது. எதற்காக வேறு இடத்திற்குப் போக வேண்டும்?

சித்தி பதிலற்ற என்னைத் தாண்டி வெளியே கிடந்த பெஞ்சில் போய் உட்கார்ந்துகொண்டாள். இந்த அறையில் இல்லாவிட்டால் அப்பா நம்மைத் தேடுவது சிரமமாகிவிடும் என்று சொல்லலாம் என்று நினைத்தேன். ஆனால் சொல்லவில்லை. எவ்வளவோ முறை பேருந்து நிலையத்தின் வடக்கு வாசல் பக்கமிருந்த தியேட்டர் முன்னால் நிற்கலாம் என்று சொன்னபோதெல்லாம் அம்மா அங்கே நின்றால் அப்பாவால் நம்மைத் தேட முடியாது என்று மறுத்திருக் கிறாள்.

நானும் அம்மாவும் ஒவ்வொரு மாதமும் அப்பாவின் சம்பள நாள் அன்று கிராமத்திலிருந்து பனிரெண்டு மணி டவுன்பஸ் பிடித்து கிளம்புவோம். என்னுடைய கையில் வயலட் நிற பிளாஸ்டிக் வாளி நிறைய கோதுமையிருக்கும். அம்மா காலியான இரண்டு பத்து லிட்டர் மண்ணெண்ணெய் கேன்களைத் தூக்கிக்கொண்டு வருவாள்.

வழக்கமாக நகருக்கு வந்ததும் தியேட்டரின் பின்புறமிருந்த ரைஸ் மில்லில் கோதுமையை அரைக்கக் கொடுத்துவிட்டு அப்பாவிற்காகக் காத்திருக்கத் துவங்குவோம். பேருந்து நிலையத்திற்குள் கறுப்பு பேண்ட் அணிந்து யார் நடந்து வருவது தெரிந்தாலும் ஓடிப்போய்ப் பார்ப்பேன். ஒரு மாதம்கூட அப்பா சொன்ன நேரத்திற்கு வந்ததே யில்லை. சில நாட்கள் நாங்கள் காத்திருந்து காத்திருந்து இரவு மணி ஒன்பதரையாகி கடைசிப் பேருந்து புறப்படும் வரை அப்பா வர மாட்டார்.

நானும் அம்மாவும் பேருந்துகளின் இடைவிடாத சப்தத் தைக் கேட்டபடியே காலி மண்ணெண்ணெய் கேனை கையில் வைத்துக் கொண்டு பசியோடு அப்பாவின் வருகைக்காகக் காத்திருப்போம். எத்தனையோ மனிதர்கள் கடந்து போவார்கள். அப்பா மட்டும் வரவே மாட்டார். இந்த இரவில்கூட அப்பா என்ன செய்வார் என்று தோன்றும்.

கடைசிப் பேருந்து கிளம்பும்போது அப்பா எங்கிருந்தோ வந்து சேருவார். அவர் பாதி இருட்டுப் படிந்த பயணியர் அறைக்குள் வந்து அழைக்கும் வரை அம்மா அதை விட்டு வெளியே வரவே மாட்டாள். அப்பா அவசரமான குரலில், 'அடுத்த வாரம் சாமான் வாங்கிக்கொள்ளலாம் பஸ் கிளம்பப் போகுது ஏறு' என்று சொல்வார். அம்மா மறுப்பு ஏதும் சொல்லாமல் வந்து பேருந்தில் ஏறிக் கொள்வாள்.

அப்பா ஏன் தாமதமாக வந்தார். எதற்காக எங்களை இப்படி பேருந்து நிலையத்தில் நாள் முழுவதும் காக்க விடுகிறார் என்று ஒருபோதும் கேட்டுக்கொண்டதேயில்லை. அடுத்தவாரமும் இது போல மதியம் வந்து நாள் முழுவதும் காத்துக்கொண்டிருப்போம். அன்றைக்கும் அப்பா அவர் நினைத்த நேரத்தில்தான் வந்து சேருவார். ஒரு முறைகூட தான் ஏன் தாமதமாக வருகிறார் என்று அப்பா சொன்னதேயில்லை.

**வெ**யில் வடியத்துவங்கியிருந்தது. சித்தி ஆங்காங்கே சிதறிக் கிடந்த பலாப்பழத்தின் தோலை மொய்ப்பதற்காக அலையும் ஈக்கள் தன் மீது ஓட்டுவதை விரும்பாதவள் போல கைகளால் விரட்டிக்கொண்டே யிருந்தாள். பிறகு என்னை அருகில் அழைத்து உட்காரச் சொன்னாள். அந்த பெஞ்சில் எப்போதும் ஆண்கள் மட்டுமே உட்கார்ந்திருப்பார்கள். அன்றைக்கும் அந்த பெஞ்சில் ஒரு ஆண் உட்கார்ந்திருந்தார். சித்தி அதைப் பற்றிக் கவலைப்படாமல் எப்படி அருகில் உட்கார்ந்திருக்கிறாள் என்று ஆச்சரியமாக இருந்தது. ஏனோ அன்றைக்கும் நிச்சயம் இரவாகும் வரை அப்பா வர மாட்டார் என்றே தோணியது.

**அ**ம்மாவும் நானும் பேருந்து நிலையத்தினை முழுமையாக அறிந்தி ருந்தோம். பேருந்து நிலைய கேண்டியனில் வேலை செய்யும் சிறுவர்கள், முறுக்கு சமோசா விற்பவர்கள், சலூனில் வேலை செய்யும் ஆள், பஸ் ஏஜெண்டுகள், ஒரு கை சூம்பிப்போன பிச்சைக்காரப் பெண், உள்ளிட்ட யாவரது பெயர்களும் எங்களுக்குப் பரிச்சயமாகியிருந்தது. கை சூம்பிப்போன பெண் சில நேரங்களில் அம்மாவிடம் தனது கைக்குழந்தையைப் பார்த்துக்கொள்ளும்படி சொல்லி விட்டு பேருந்தில் ஏறி பிச்சை எடுத்துக்கொண்டிருப்பாள்.

அம்மா யாருடனும் பேசுவதுமில்லை. அவள் வீட்டிலி ருந்து கிளம்பி திரும்ப வீடு வந்து சேரும்வரை அதிகபட்சம் பத்து வார்த்தை கள் பேசுவாள். அப்பாவின் சம்பள நாள் அன்று மட்டும் நான் பள்ளிக்கு லீவு போட்டுவிடுவேன். சில நேரங்களில் டீச்சர்கள்கூட என்னிடம் பஜாரில் லக்ஸ் சோப் வாங்கி வரச் சொல்லி அனுப்பு வார்கள். அந்த சோப் வாசனையாக இருக்கும். இதுபோன்ற வாசனை சோப்புகளை அம்மா ஏன் வாங்க மாட்டேன் என்கிறாள் என்று

கோபமாக இருக்கும்.

சிலவேளைகளில் அப்பா பலசரக்கு வாங்கி முடித்ததும் ஹோட்ட லுக்கு சாப்பிட அழைத்துச் செல்வார். ஒருமுறை ஹோட்டலில் நாங்கள் நுழைந்தபோது எல்லாமேஜைகளிலும் ஆட்கள் உட்கார்ந்து சாப்பிட்டுக்கொண்டிருந்தார்கள். நிறைய கூட்டம் இருக்கு. வீட்டுக்குப் போயிரலாம் என்று சொல்லியபடியே வெளியே அழைத்து வந்து விட்டார் அப்பா. பசியோடு நடந்து வரும்போது ஊரில் எத்தனையோ ஹோட்டல் இருக்கிறது. வேறு எங்காவது போகலாம் என்று ஏன் அம்மா சொல்வதேயில்லை என்று அவள் மீது ஆத்திரமாக வந்தது. அம்மா எதற்குமே விருப்பப் படாதவளாக இருந்தாள்.

சித்தி எழுந்து நின்று சோம்பல் முறித்தபடியே தனது ஹேண்ட் பேக்கினைத் திறந்து சில்லறைகளைக் கையில் எடுத்தாள். ஒவ்வொன் றாக எண்ணிப்பார்த்தபடியே என்னிடம் நீட்டி ஒரு ராணிமுத்து வாங்கி வரும்படியாகச் சொன்னாள். அம்மாவிற்குப் படிக்கத் தெரியும். ஆனால் அவள் ஒருபோதும் பேருந்து நிலையக் கடையில் புத்தகம் வாங்கியதேயில்லை. எப்போதாவது அவள் அபிராமி அந்தாதியிலிருந்து சில பாடல்களைப் பாடுவதைக் கேட்டிருக்கிறேன். அம்மா ஏன் புத்தகங்களை வாங்கிப் படிக்கவேயில்லை என்று அப்போதுதான் தோணியது.

பேருந்து நிலையத்தின் தண்ணீர்த்தொட்டியை ஒட்டியி ருந்த புத்தகக்கடையில் காசை நீட்டியபடியே வெளியே தொங்கிக்கொண்டி ருந்த காமிக்ஸ் புத்தகங்களைப் பார்த்துக் கொண்டிருந்தேன். ராணி முத்தை என் கையில் கொடுத்தபடியே கடைக்காரன் மக்காச்சோளம் தின்றுகொண்டிருந்தான்.

சித்தி பெஞ்சில் சாய்ந்து உட்கார்ந்தபடியே ராணி முத்துவை வாசிக்கத் துவங்கியிருந்தாள். சித்தி என்ன படித்திருக்கிறாள் என்று எனக்குத் தெரியாது. ஆனால் அவளாகவே ஒரு நாள் தன்னிடம் வீட்டுப் பாடம் தொடர் பாக சந்தேகமிருந்தால் கேட்கலாம் என்று சொன்னாள். உடனே தங்கை வாசுகி அவளிடம் ஆங்கில இலக்கண நோட்டைத் திருத்தித் தரும்படி சொன்னதும் அவள் தன்னுடைய ஹேண்ட்பேக்கில் இருந்து ஒரு சிவப்பு மை பேனாவை எடுத்துத் திருத்தித் தந்தாள். சித்தி எதற்காக சிவப்பு மை பேனா வைத்திருக்கிறாள். அவள் ஒருவேளை டீச்சராக வேலை பார்த்தவளா? அன்றே அவளிடம் கேட்க வேண்டும் போலிருந்தது. ஆனால் கேட்கவேயில்லை.

அன்றிரவு பாயில் படுத்தபடியே வாசுகி என்னிடம், சித்தி ரொம்ப நல்லவங்கடா. அம்மா ஒரு நா கூட என் நோட்டைத் திருத்திக் கொடுத்ததேயில்லை' என்று சொன் னாள். எனக்கு ஏனோ சித்தியைப் பிடிக்காமலேயிருந்தது. சித்தி ஏமாற்றுகிறாள். நோட்டைத் திருத்திக் கொடுப்பது ஒன்றும் பெரிய வேலையில்லை. அம்மாவிடம் சிவப்புப்

பேனா இல்லை. ஒரு வேளை இருந்திருந்தால் நிச்சயம் அதைத் திருத்திக் கொடுத்திருப்பாள் என்று சொன்னேன். வாசுகி அதில் சமாதானம் அடையவில்லை. அன்றிரவெல்லாம் சித்தி சிவப்புப் பேனா வைத்திருக்கிறாள் என்று திரும்பத் திரும்ப சொல்லிக்கொண்டே யிருந்தாள்.

**சி**த்தி ராணிமுத்தைப் புரட்டியபடியே என்னிடம் 'உங்க அப்பா ஆபீஸ் எங்கேயிருக்குனு உனக்குத் தெரியுமா மோகன்' என்று கேட்டாள். நான் தலையசைத்தேன். பிறகு ராணிமுத்தைத் தனது ஹேண்ட்பேக்கில் வைத்துவிட்டு 'உங்க அப்பா ஆபீஸிற்குப் போக லாமா' என்று கேட்டாள்.

'வேண்டாம். அப்பாவிற்கு அது பிடிக்காது' என்று சொன்னேன். சித்தி காற்றில் அலைபடும் தனது கூந்தலை ஒதுக்கிவிட்டபடியே 'நீயும் உங்க அம்மாவும் இப்படியே உட்கார்ந்துகிட்டுதான் இருப்பீங் களா' என்று கேட்டாள். நான் இறுக்கமான குரலில் 'எங்கம்மா ரொம்ப நல்லவங்க. அப்பா ஆபீஸ்க்கு எல்லாம் போக மாட்டாங்க' என்று சொன்னேன். சித்தி அதைப் பெரியதாக எடுத்துக்கொள்ளாத வளாக திரும்பவும் கேட்டாள். 'உங்க அம்மா அடிக்கடி கோவிச்சிகிட்டு போயிருவாங்களா?' நான் பதில் பேசாமலி ருந்தேன். சித்தி என்னை முறைத்தபடியே 'மோகன் உன்னைத்தான்டா கேட்குறேன். உங்கம்மா கோவிச்சிகிட்டு போவாங்களா' என்று திரும்பவும் கேட்டாள்.

ஆமாம் என்று தலையாட்டினேன். 'நீயும் கூடப் போவியா' என்று சித்தி கேட்டாள். நான் பதில் பேசவேயில்லை. 'உங்கப்பா அடிப்பாரா' என்று கேட்டாள். நான் தொலைவில் பேருந்து திரும்புவதற்காக விசில் அடித்தபடியே இருந்த நடத்துனரைப் பார்த்தபடியே இருந்தேன். சித்தி என்னை உலுக்கியபடியே 'உங்கப்பா அடிப்பாரா' என்று கேட்டார். எனக்கு ஆத்திரமாக வந்தது. 'அடியா அடிப்பாரு' என்று சொன்னேன்.

சித்தி சிரித்தபடியே 'உங்கம்மா அழுவாங்களா' என்று கேட்டாள். 'அம்மா அழவே மாட்டார்கள்' என்று சொன்னேன். சித்தி வேறு எதையும் கேட்டுக்கொள்ளாமல் அங்கு மிங்கும் நடந்துகொண்டிருந் தாள். பிறகு தன் கையில் கட்டியிருந்த வாட்சைப் பார்த்துக்கொண் டாள். பெஞ்சைப் பிடித்தபடியே நின்றுகொண்டிருந்த என்னிடம் 'உங்க அப்பா ஆபீஸ் போன் நம்பர் தெரியுமா' என்று கேட்டாள். தெரியாது என்று தலையசைத்தேன்.

**அ**ப்பா அம்மாவை அடிக்கும் நாளில் அம்மா அழுவதேயில்லை. மாறாக அவள் கோவித்துக்கொண்டு தலைவிரி கோலமாக தங்கையைத் தூக்கி இடுப்பில் வைத்தபடியே ஆவேசமாக என் பள்ளிக்கூடத்திற்கு

வந்து வகுப்பறையில் இருந்த என்னை பாதியில் வெளியே அழைத்துக் கூட்டிக்கொண்டு தாத்தா ஊருக்குப் போய்விடுவாள்.

தாத்தாவின் ஊர் கிழக்கேயிருந்தது. டவுன்பஸ்ஸில் போய் முக்கு ரோட்டில் இறங்கி நடந்துபோக வேண்டும். அம்மா அந்த முக்குரோட்டில் போய் இறங்கும் வரை தலையை முடிந்துகொள்ளவே மாட்டாள். அவளது சிவந்த முகமும் ஆவேசமும் அப்படியே இருக்கும்.

முக்குரோட்டில் போய் இறங்கியதும் அவள் தலையை முடிந்து கொண்டையிட்டுக்கொள்வாள். முகத்தை முந்தானையால் துடைத்துக் கொள்வாள். என்னை அருகில் அழைத்து என் முகத்தையும் துடைத்து விடுவாள். பிறகு தன்வீட்டை நோக்கி மெதுவாக நடந்து செல்வாள். இரண்டு நாளோ ஒரு வாரமோ தாத்தா வீட்டிலிருப்போம்.

அப்போது அம்மாவைக் காண்பதற்கு மிக அழகாக இருக்கும். காலையிலே குளித்து கூந்தலில் மருக்கொழுந்தும் கனகாம்பரப் பூக்களும் சூடியபடியிருப்பாள். மதியவேளையில் தரையில் கோடு கிழித்து அடுத்த வீட்டுப் பெண்ணோடு சொக்கட்டான் ஆடிக்கொண்டிருப்பாள். பின்பு ஒரு நாளின் இரவில் அப்பா வந்து சேருவார்.

தாத்தாவும் அவரும் நெடுநேரம் பேசிக்கொண்டேயிருப்பார்கள். விடிகாலையில் முதல் பேருந்தில் ஏற்றிவிடுவதற்காக தாத்தா எங்களோடு முக்குரோடு வரை வருவார். சில நேரம் பேருந்து கிளம்பும்போது தாத்தா கண்களைத் துடைத்துக்கொள்வதைக் கண்டிருக்கிறேன். வீடு திரும்பும் வரை அப்பாவும் அம்மாவும் ஒரு வார்த்தைகூட பேசிக்கொண்டதில்லை. ஆனால் அன்று மதியமே அம்மா மீன் குழம்பும் ஈரல் வறுத்ததும் டிபன் கேரியரில் வைத்து டவுன்பஸ்ஸின் டிரைவரிடம் அப்பாவிற்காகக் கொடுத்து அனுப்புவாள். அம்மாவிற்கு அடிவாங்கிய வலி மறந்து போயிருக்குமா?

**நீ**ண்ட ஹார்ன் சப்தத்தோடு ஒரு பேருந்து உள்ளே நுழைந் தது. சித்தி எரிச்சலோடு அங்குமிங்கும் நடந்துகொண்டிருந் தாள். பேருந்து நிலையத்தின் மாலைநேர இயக்கம் பரபரப் பாக இருந்தது. பள்ளி மாணவர்கள் ஆங்காங்கே பேருந்தில் இடம் பிடிப்பதற்காக ஓடிக் கொண்டிருந்தார்கள். ஒரு பையனின் டிபன் பாக்ஸ் தரையில் விழுந்து உருண்டு ஓடியது. சித்தி உதட்டைக் கடித்தபடியே ஏதோ யோசனை செய்தபடி நின்றிருந்தாள்.

பேருந்து நிலையத்திற்குள் எப்போதும் தென்படும் வால் வெட்டப் பட்ட நாயைக் காணவில்லையே என்று அப்போதுதான் எனக்குத் தோன்றியது. அது எங்காவது தென்படுகிறதா என்று கண்களால் தேடிக்கொண்டிருந்தேன்.

சித்தி என்னிடம் 'உங்க அப்பா ஆபீஸுக்கு போகலாம் வா' என்று சொல்லியபடியே கையைப் பிடித்துக் கூட்டிக்கொண்டாள்.

காலி மண்ணெண்ணெய் கேனைத் தூக்கிக்கொண்டு சித்தி பின்னாடியே சென்றேன்.

சித்தி பேருந்து நிலைய வாசலில் இருந்த ஒரு ரிக்ஷாவைப் பேரம் பேசிப் பிடித்தாள். நானும் சித்தியும் ரிக்ஷாவில் ஏறி உட்கார்ந்து கொண்டோம். நான் அதற்கு முன்பு இரண்டு முறைதான் ரிக்ஷாவில் போயிருக்கிறேன். இரண்டுமே மருத்துவமனைக்குத்தான். ஒரு முறை அம்மாவின் மண்டை உடைந்துபோய் ரத்தம் ஒழுகிக்கொண்டிருந்த போது காப்பிப் பொடியைக் காயத்தில் வைத்து அழுத்தியபடியே பஸ் பிடித்து நகரில் வந்து இறங்கி பொது மருத்துவமனைக்குப் போவதற்காக ரிக்ஷாவில் கூடவே சென்றிருக்கிறேன்.

அம்மாவின் மண்டையை உடைத்த அப்பா சாவகாசமாக இரவில் பொது மருத்துவமனைக்கு அம்மாவைப் பார்க்க வந்தபோது தான் சாப்பிடுவதற்காக ஒரு கொத்து பரோட்டா பொட்டலம் வாங்கிக் கையில் வைத்திருந்ததுகூட எனக்கு நினைவிருக்கிறது. இன்னொரு முறை வாசுகிக்குக் காய்ச்சல் கண்டிருந்தபோது அம்மாவும் நானும் வாசுகியும் இது போல ரிக்ஷாவில் போயிருக்கிறோம்.

இன்றைக்கு சித்தியோடு அப்பா ஆபீஸை நோக்கி ரிக்ஷாவில் போவது சந்தோஷமாக இருந்தது. ஏன் அம்மா ஒரு நாளும் இப்படி யோசிக்காமலே போனாள். ரிக்ஷா பஜாரின் உள்ளே போனபோது தெருவில் நடந்து போய்க்கொண்டிருந்தவர்களில் யாராவது தெரிந்தவர் களிருந்து என்னைப் பார்க்க மாட்டார்களா என்று ஆசையாக இருந்தது.

அப்பாவின் அலுவலகம் ரெண்டாவது கேட்டைத் தாண்டியிருந் தது. அப்பா நெடுஞ்சாலைத்துறையில் வேலை செய்துகொண்டிருந்தார். மஞ்சள் வெளிறிப்போன பழைய கட்டிடம் அது. ரயில்வே தண்ட வாளத்தை ஒட்டியிருந்தது. ரிக்ஷாவை வாசலில் நிறுத்திவிட்டு சித்தி என்னை மட்டும் இறங்கிப் போய் அப்பாவை அழைத்து வரும்படியாகச் சொன்னாள்.

நான் வேகவேகமாக அலுவலகத்தின் மாடிக்கு ஓடினேன். வரிசை வரிசையாக மர மேஜைகளிருந்தன. பைல்களும் காகிதங்களும் நிரம்பியிருந்த அந்த அலுவலகத்தில் ரூல் தடியை வைத்துக் கோடு போட்டபடியே அப்பா ஏதோ வொரு கணக்குப் பதிவேட்டைப் பார்த்துக்கொண்டிருந்தார். நான் அப்பாவின் முன்னால் போய் நின்றதும் அவரது முகம் கோபத்தில் சிவந்து போனது. மிரட்டும் குரலில் 'இங்கே எதுக்குடா வந்தே' என்று கேட்டார்.

சித்தியும் வந்திருப்பதாகச் சொன்னேன். அப்பாவின் முகம் உடனே மாறியது. 'சித்தி எங்கேயிருக்காங்க' என்று கேட்டார். வெளியே ரிக்ஷாவில் இருப்பதாகச் சொன்னதும் அப்பா எழுந்து வந்து பால்கனி யில் நின்றபடியே சாலையை எட்டிப் பார்த்தார். ரிக்ஷா தெரிந்தது. சித்தி தெரியவில்லை. அப்பா என்னை காலியாகக் கிடந்த ஒரு

மரநாற்காலியில் உட்காரச் சொல்லிவிட்டு பதிவேட்டை எடுத்து வைக்கத் துவங்கினார்.

அப்பாவும் நானும் சித்தியும் அதே ரிக்ஷாவில் பலசரக்கு வாங்கும் கடைக்குப் போனோம். சாமான்களை ஆர்டர் கொடுத்துவிட்டு கணேஷ்பவனில் போய் குளோப்ஜாமூன் சாப்பிட்டோம். சித்ரா ஸ்டோரில் எனக்கு ஒரு மை பாட்டிலும் இங்க் பில்லரும் வாங்கிக் கொடுத்தாள் சித்தி. அப்பா எதுவுமே சொல்லவில்லை. பேருந்து நிலையத்திற்கு சாமான்களை ஏற்றிக்கொண்டு ரிக்ஷாவிலே வந்தோம். அப்பாவின் முகம் சாந்தமாகவே இருந்தது. எப்படி அப்பா இவ்வளவு மாறிப்போனார் என்று ஆச்சரியமாக இருந்தது.

பேருந்தில் அப்பாவும் சித்தியும் ஒரே இருக்கையில் உட்கார்ந்து கொண்டார்கள். நான் மண்ணெண்ணெய் சிந்தாமல் கேனைப் பிடித்தபடியே இன்னொரு இருக்கையில் உட்கார்ந்திருந்தேன்.

சித்தி அப்பாவின் தோளில் கைபோட்டபடியே உட்கார்ந் திருந்தாள். எனக்கு அது ஏனோ பிடிக்காமலிருந்தது. பேருந்து கிளம்பி நகரை விட்டு வெளியேறத் துவங்கியபோது சித்தி அப்பாவின் தோளில் சாய்ந்துகொண்டாள். அவளது தலைமயிர் காற்றில் பறந்துகொண்டே யிருந்தது. அப்பா தன் விரலால் சித்தியின் முகத்தில் கிடந்த கேசத்தை ஒதுக்கிவிட்டபடியே வந்தார்.

அம்மா ஏன் ஒரு நாள்கூட இப்படி அப்பாவின் தோளில் சாய்ந்து கொள்ளவேயில்லை. அப்பா எதற்காக அம்மாவின் கூந்தலை இப்படி ஒதுக்கிவிடவில்லை. எனக்கு அம்மாவின் மீது ஆத்திரமாக வந்தது. சித்தி மை பாட்டில் வாங்கித் தந்ததால் மட்டும் பெரிய ஆள் ஆகிவிடுவாளா என்ன?

அம்மா எத்தனை நாட்கள் இதே பேருந்து நிலையத்தில் நாள் முழுவதும் மூத்திரம் போவதற்குக்கூட பயந்து பயணி யர் அறையில் காத்துக் கிடந்திருக்கிறாள். ஏன் அப்பா அதையெல்லாம் மறந்து போனார்.

வீடு வரும் வரை கோபமும் ஆத்திரமும் பொங்கிக்கொண்டே வந்தது. வீட்டிற்கு வந்ததும் சித்தி வாசுகிக்கு வாங்கி வந்த ஜாமண்டரி பாக்ஸைக் காட்டிக்கொண்டிருந் தாள். வாசுகி ஆசையோடு என்னிடம் 'நீங்கள் ரிக்ஷாவில் போனீர்களா' என்று கேட்டுக்கொண்டிருந்தாள். நான் பதில் சொல்லவேயில்லை. அவள் 'உனக்குச் சித்தியைப் பிடிக்கலையா. எனக்கு ரொம்ப பிடிச்சிருக்கு' என்று சொன்னாள். அப்பா சித்தியிடம் சம்பளப் பணத்தைத் தந்துகொண்டிருந்தார்.

அன்றிரவு என் அருகில் படுத்திருந்த வாசுகியிடம் அப்பா சித்தியை அடிப்பாரா என்று கேட்டேன். வாசுகி 'அதெல்லாம் அடிக்கவே மாட்டாரு' என்று சொன்னாள். எனக்கு ஆத்திரமாக வந்தது.

நான் சப்தமாக 'அதெல்லாம் அடிப்பாரு. அப்போ பாரு சித்தி. நம்மளை விட்டுட்டு அவ மட்டும் அவங்க வீட்டுக்குப் போயிருவா... என்று கத்தினேன். சில நிமிஷங்களுக்குப் பிறகு வாசுகி அழும் சப்தம் மெதுவாகக் கேட்டது. உள் அறையில் சித்தி மெதுவான குரலில் கண்ணன் ஒரு கைக்குழந்தை என்ற சினிமா பாட்டைப் பாடிக்கொண் டிருந்ததும் கேட்டது. ஏனோ வாசுகியோடு சேர்ந்து எனக்கும் அழ வேண்டும் போலிருந்தது.

இவை எல்லாம் அப்பாவோடு சண்டை போட்டு அடி வாங்கிய வலி தாங்கமுடியாத ஒரு நாளில் என் அம்மா பூச்சிமருந்தைக் குடித்து தற்கொலை செய்துகொண்டு விடவே, குடும்பத்தையும் குழந்தை களையும் காப்பாற்ற வேண்டும் என்பதற்காக அப்பா எங்கிருந்தோ மகேஸ்வரியை இரண்டாம் திருமணம் செய்து கூட்டி வந்த முதல் மாதத்தின் சம்பள நாள் அன்று நடந்தேறியது.

# சௌந்திரவல்லியின் மீசை

சௌந்திரவல்லிக்கு மீசை முளைத்திருக்கிறது என்று ஏழாம் வகுப்பு மாணவர்களில் ஒருவன் எழுந்து சொன்னபோது அவளுக்கு ஆத்திர ஆத்திரமாக வந்தது. சயின்ஸ் வாத்தியாரும் அவன் சொன்னதைக் கேட்டுக்கொண்டு அவளை எழுந்து நிற்கச் சொன்னார். அவளருகில் இருந்த மாணவிகள் வாயை மூடிக்கொண்டு சிரித்தார்கள். சௌந்திர வல்லி தலையைக் கவிழ்ந்துகொண்டு உடகார்ந்துகொண் டாள். சயின்ஸ் வாத்தியார் சப்தமாக 'ஏ இந்திராணி அவளுக்கு மீசையிருக்கா இல்லையானு நீ பாத்து சொல்லுப்பா' என்று சொன்னதும் வகுப்பில் சிரிப்பு பலமாக வெடித்தது.

சௌந்திரவல்லியிருந்த பெஞ்சில்தான் இந்திராணி உட்கார்ந்திருந் தாள். இதுபோன்ற சந்தர்ப்பத்திற்காகவே காத்துக்கிடந்தவள் போல அவள் சௌந்திரவல்லியின் தலையைப் பிடித்து மேலே தூக்க முயன்றாள். குனிந்தபடியே பெஞ்சைப் பிடித்த கையை சௌந்திரவல்லி விடவேயில்லை. இந்திராணி வேண்டுமென்றே பெஞ்சின் அடியில் குனிந்து அவள் முகத்தைப் பார்க்க முயற்சித்தாள். சௌந்தரவல்லி நறநறவெனப் பற்களைக் கடிக்கத் துவங்கினாள். அப்படியே இந்திராணி யைச் செவுளோடு சேர்த்து அடிக்க வேண்டும் போலிருந்தது.

'சார் பல்லைக் கடிச்சிகிட்டு தலையை நிமிரவே மாட் டீங்கா. ரெண்டு பிள்ளைக ஒண்ணா சேந்து இழுக்கட்டும்மா?' என்று இந்திராணி கேட்டதும் சயின்ஸ் வாத்தியார் உற்சாகமாகி 'என்ன செய்வீங்களோ எனக்குத் தெரியாது, உண்மை தெரிஞ்சாகணும்' என்றார்.

உடனே சௌந்திரவல்லியின் பெஞ்சின் பின்னால் இருந்த சங்கரி அவள் ஜடையைப் பிடித்து பின்னால் இழுக்க ஆரம்பித்தாள். பிடரியில் வலியான போதும் சௌந்திரவல்லி தலையை நிமிர்த்தவே யில்லை. உடனே அவளுக்கு இடது பக்கம் உட்கார்ந்திருந்த மாரிக்கனி அவளது இடுப்பில் கிச்சலம் காட்டத் துவங்கினாள். உடம்பை நெளித்துக் கொண்டபோதும் சௌந்திரவல்லியின் முகம் வெளிப்பட வேயில்லை.

அவளது முன் பெஞ்சில் இருந்த நிர்மலா மட்டும் 'ஏய் விடுங்கடி . . . அதெல்லாம் சௌந்திரவல்லிக்கு மீசை கிடையாது' என்று ஆதங்கத்துடன் சொன்னாள். அதை யாரும் பெரிதாக எடுத்துக்கொள்ளவில்லை. வகுப்பு லீடராக இருந்த ஆவுடையப்பன் மிகுந்த ஆவலோடு 'நான் வேணும்னா தலையை இழுத்துப் பாக்கட்டுமா சார்' என்று கேட்டான். 'இங்கே என்னடா ஜல்லிக்கட்டா நடக்குது. ஆளுக்கு ஆள் இறங்குறீங்க. இருங்கடா பாக்கலாம்' என்று அவர்களைக் கட்டுப்படுத்தினார் வாத்தியார். மாணவர்கள் தங்களுக்குள் குசுகுசுவெனப் பேசிக்கொண்டார்கள்.

பெஞ்சிற்கு அடியில் குனிந்து உட்கார்ந்து இந்திராணி கையைக் கொடுத்து சௌந்திரவல்லியின் தாடையைப் பிடித்துவிட்டாள். நகத்தால் அவள் கையில் கிள்ளியபோதும் பிடியை விடவேயில்லை. தாடையைப் பிடித்து மேலே தூக்கத் துவங்கினாள். சௌந்தரவல்லி திமிரவும் பின்னால் இருந்த சொர்ணம் ஜடையைச் சுண்டி இழுக்கவும் முகம் வெளியே வந்தது. முகத்தை எப்படி மூடிக்கொள்வது என்று தெரியாமல் அவசரமாக தன் கைகளால் முகத்தைப் பொத்திக்கொண்டாள். இந்திராணி அப்படியும் விடவில்லை. சௌந்திர வல்லியின் கைகளைப் பிரித்து முகத்தைக் காட்டினாள்.

மொத்த வகுப்பும் சௌந்தரவல்லியின் முகத்தையே பார்த்தது. சயின்ஸ் வாத்தியார் அவள் அருகில் வந்து நின்று உற்று நோக்கினார். பிறகு பலத்த சிரிப்போடு 'ஆமான்டா சௌந்திரவல்லிக்கு மீசையிருக்கு . . .' என்று சொன்னார். மாணவர்கள் பெஞ்சைத் தட்டிக்கொண்டு சிரித்தார்கள். சௌந்திரவல்லி அவமானத்தைத் தாங்க முடியாமல் உதட்டைக் கடித்துக்கொண்டிருந்தாள். கண்களில் அழுகை முட்டிக்கொண்டு நின்றது.

வாத்தியார் அவளிடம், 'உம் முகரையை ஒரு தடவையாவது கண்ணாடியில் பாத்திருக்கியா' என்று கேட்டார். அவளால் பதில் சொல்லமுடியவில்லை. தொண்டையில் யாரோ கையால் நெருக்கிப் பிடித்து அழுத்துவது போல இருந்தது.

'தினம்தினம் குளிப்பியா' என்று மறுபடியும் கேட்டார். அவள் தலையாட்டினாள். எங்கே என்று கேட்டதும் அவள் தயங்கித்தயங்கி 'கல்கிடங்கிலே சார்' என்று கைகளைக் கட்டிக்கொண்டு சொன்னாள். உடனே ஒரு பையன் எழுந்து 'பொய்யி சார் கல்கிடங்கில பொம்பளைப் பிள்ளைக யாரும் குளிக்க வர்றது கிடையாது. அது ரெண்டு ஆளு ஆழம்' என்றான்.

'அதான் இவ லட்சணம் முகரையில தெரியுதே பிறகு நீ வேற சொல்லணுமாக்கும்' என்றபடியே 'இந்த வருசத்தில் என்னைக்குக் குளிச்சே' என்று கேட்டார். அவளுக்கு ஆத்திரமாக வந்தது. பதில் சொல்லாமல் நின்றுகொண்டிருந்தாள். வாத்தியார் அவள் பாவாடை மீது பிரம்பால் ஒரு அடி கொடுத்தபடியே சொன்னார்,

'நல்லா சண்டியரு மாதிரி மீசையை ஏத்திவிட்டு வளத்துட்டு வா அப்போதான் கெத்தா இருக்கும். நம்ம வகுப்பில பயக ஒருத்தனுக்கும் மீசை முளைக்கவேயில்லை. ஆனா அதுக்குள்ள இந்தப் பொம்பளைப் பிள்ளைக்கு மீசை வந்துருச்சி பாருங்கடா.'

மாணவிகளும் இதைக் கேட்டுச் சிரித்தார்கள். இந்திராணி மட்டும் நல்லபிள்ளை போல 'சார் நான் எல்லாம் தினம் மஞ்ச தேய்ச்சிக் குளிப்பேன். எனக்கெல்லாம் மீசை வரவே வராது' என்றாள். சயின்ஸ் வாத்தியார் 'அதான் பொம்பளைப் பிள்ளைக்கு அழகு' என்று நற்சான்றிதழ் தந்தார். வகுப்பு முடியும் வரை அந்தக் கேலிப்பேச்சு ஓடிக்கொண்டே யிருந்தது.

மதிய சாப்பாட்டிற்காக மணி அடித்த போது சயின்ஸ் வாத்தியார் வகுப்பை விட்டு வெளியேறத் துவங்கினார். அவரது தலைமறைந்த மறுநிமிசம் செளந்திரவல்லி ஆவேசமாகப் பாய்ந்து பெஞ்சிலிருந்த இந்திராணியைக் கீழே தள்ளிவிட்டு அவள் மீது ஏறி உட்கார்ந்து கொண்டு மாறிமாறி அடித்தாள். அவளும் விடவில்லை. செளந்திர வல்லியின் தலைமயிரைப் பிடித்து உலுக்கினாள். இருவரும் கட்டி உருண்டார்கள்.

இந்திராணி அவள் பாவாடையை உருவிவிடுவதற்காக நாடாவைப் பிடித்து இழுத்தாள். செளந்திரவல்லி அப்படியே அவள் கையைப் பிடித்து இறுக்கமாகக் கடித்து வைத்தாள். கையில் ரத்தம் வரத் துவங்கியது. இந்திராணி பெருங்குரல் எடுத்து அழத்துவங்கினாள். செளந்திரவல்லி தன் பையைக்கூட எடுக்காமல் பள்ளிக்கூடத்தை விட்டு வெளியே ஓடத்துவங்கினாள்.

டீச்சர்ஸ் ரூமில் போய் இரண்டு பையன்கள் செளந்திரவல்லி கடிச்சு வைத்த விஷயத்தைச் சொல்லிக்கொண்டிருந்தார்கள். கையில் பிரம்போடு நாரம்பூ சார் வந்தபோது இந்திராணி தன் கையில் பதிந்து போயிருந்த பல் தடத்தைக் காட்டினாள். 'நாளைக்கு வரட்டும் அவ பாத்துக்கிடலாம்' என்றபடியே இந்திராணி கையில் குப்பை மேனியை அரைத்துத் தடவும்படியாகச் சொல்லிவிட்டுச் சென்றார். மதிய வகுப்புகள் துவங்கியபோது செளந்திரவல்லி வரவேயில்லை. நிர்மலாவும் சி. முருகேஸ்வரியும் மட்டும் அவளுக்காக வருத்தப்பட்டுக் கொண்டார்கள். மாணவர்களில் ஒருவன் கூட அவளைக் கேலி செய்யாமலில்லை.

செளந்திரவல்லிக்கு பள்ளியிலிருந்து வெளியேறி வந்த போதும் உடம்பெல்லாம் எறும்பு அப்பிக்கொண்டிருப்பது போன்று அவர்களின் கேலி ஒட்டிக்கொண்டிருந்தது. அப்படியே ஏதாவது ஒரு பாங்கிணற்றில் விழுந்து செத்துப் போய்விடலாமா என்றுகூடத் தோணியது. அவள் வழியில் தென்பட்ட தும்பைச் செடிகளை ஒடித்துத் தள்ளியபடியே தனியே நடந்து போய்க்கொண்டிருந்தாள்.

காட்டுமுனியம்மன் கோவில் இருந்த பாறையருகே வந்தபோது ஆள் நடமாட்டமேயில்லை. ஒரேயொரு வேப்ப மரமும் வெளிறிப்

போன சில மேகங்களும் விரிந்த ஆகாசமும் மட்டுமேயிருந்தது. கோவில் முன்பாக நாலைந்து துருப் பிடித்துப் போன மணிகள் மட்டும் இரண்டு கல்தூண்களுக்கு நடுவில் தொங்கிக்கொண்டிருந்தன. வெயிலேறிக் கிடந்த பாறையின் மீது உட்கார்ந்துகொண்டபோது தன்முகத்தை ஒருமுறையாவது பார்த்துக்கொள்ள வேண்டும் போலிருந்தது.

கண்களைக் கூர்மையாக்கிக்கொண்டு மூக்கின் நுனியைப் பார்க்கத் துவங்கினாள். மீசையிருக்கிறதா இல்லையா என்று தெரியவேயில்லை. 'இந்தக் கண்ணு எழுவு எம்புட்டோ தூரத்தில இருக்கிற நிலாவைக் கூடப் பாக்குது உதட்டுக்கு மேல இருக்கிற மீசையைப் பாக்க முடியலை' என்று கண்களின் மீது ஆத்திரமாக வந்தது. தலையை அந்தப் பக்கம் இந்தப் பக்கம் திருப்பி எப்படியாவது மீசையிருக்கிறதா என்று பார்க்க முயற்சித்தாள். தென்படவேயில்லை. அவர்கள் வீட்டில் இருந்த கண்ணாடியில் ரசம் போயிருந்தது. கலங்கலாகத் தண்ணீரில் தெரிவதுபோலத்தான் முகம் தெரியும். பொட்டு வைப்பதற்கு மட்டும் தான் அந்தக் கண்ணாடியை சௌந்திரவல்லி உபயோகப்படுத்திக் கொண்டிருந்தாள். இன்றைக்கு எப்படியாவது மீசையிருக்கிறதா என்று கண் ணாடியில் பார்க்காவிட்டால் மனசு ஆறாது என்றாகி யிருந்தது.

மாலையடங்கும் வரை அவள் அந்தப் பாறையிலே உட்கார்ந் திருந்தாள். கிணற்று வெட்டிற்குப் போனவர்கள் திரும்பி வரத் துவங்கியிருந்தார்கள். இனியும் கிளம்பாவிட் டால் வீட்டில் தேட ஆரம்பித்துவிடுவார்கள் என்று புரிந்தது. ஏகாந்தமான காற்றில் அலைபடும் தலை மயிரோடு அவள் மெதுவாக வீட்டை நோக்கி நடக்கத் துவங்கினாள்.

வீட்டில் கேட்டால் என்ன சொல்வது என்று தெரிய வில்லை. அம்மாவிடம் இதைப்பற்றிச் சொன்னால் அடிக்கும். பெரிய அண்ணன் கள் யாரும் அவளைப் பற்றி எல்லாம் அக்கறை கொள்வதேயில்லை. அய்யா வீட்டிற்கு வருவதற்கே இரவாகிவிடுகிறது. என்ன செய்வது என்று புரியாத யோச னைகளோடு, எதற்கும் சி. முருகேஸ்வரியைப் பார்த்துவிட்டு வீட்டுக்குப் போகலாம் என்று அவள் வீட்டினை நோக்கி நடந்தாள்.

சி.முருகேஸ்வரி திண்ணையில் உட்கார்ந்து தீப்பெட்டி ஒட்டிக் கொண்டிருந்தாள். அவள் பள்ளிக்கூடம் விட்டு வந்தபிறகு தினமும் நாலு கட்டாவது ஒட்டிவிடுவாள். அவளைப் போலவே பள்ளிப் பிள்ளைகளில் பாதிக்கும் மேலாக தெருவிளக்கடியில் உட்கார்ந்து தீப்பெட்டி ஒட்டு வதை வழக்கமாகக் கொண்டிருந்தார்கள். சௌந்திர வல்லி அடிக்கட்டை ஒட்டுவதில் தேர்ச்சி பெற்றவள். அவளால் வேகவேகமாக ஒட்ட முடியும்.

திண்ணையில் சிதறிக் கிடந்த தீப்பெட்டிகளை ஒதுக்கித் தள்ளி விட்டு சௌந்திரவல்லி ஏறி உட்கார்ந்துகொண்டாள். சி.முருகேஸ்வரி

தீப்பெட்டி ஒட்டியபடியே சௌந்திரவல்லியின் பையை ஹெட் மாஸ்டர் ரூமில் கொண்டுபோய் ஆவுடையப்பன் ஒப்படைத்துவிட்ட தாகவும் மறுநாள் அவள் பள்ளிக்கு வரும்போது நாரம்பூ சார் வகையாக பிரம்படி சாத்துவார் என்றும் சொன்னாள்.

'அவிங்க கிடக்காங்க. பொண்டுக பயலுக... எல்லாம் அந்த இந்திராணி குரங்காலே வந்த வெனை. அவளை சங்கைக் கடிச்சி வச்சிருக்கணும் தப்பிச்சிட்டா அவ பவுசு எனக்குத் தெரியாதா என்று சௌந்திரவல்லி குறைபட்டுக்கொண்டாள். சி.முருகேஸ்வரி ஆதங்கத்துடன் 'கோதண்டராமன், சின்னமுத்து, வௌவாலு இந்த மூணு பயகளும்தான் இத்தனைக்கும் காரணம். அவிங்கதான் உன்னைப் பத்தியே நோண்டிகிட்டுக் கிடப்பாய்ங்க' என்றாள். சௌந்திரவல்லிக்கு அவளிடமே கேட்கலாமா என்றிருந்தது. தயங்கித் தயங்கிக் கேட்டாள்.

'அவிங்க எல்லாம் சொல்றது நிஜமா என் மூஞ்சியில மீசையா முளைச்சியிருக்கு?'

சி.முருகேஸ்வரி கண்ணில் விழுந்த தூசியை எடுப்பவள் போல மிக அருகில் பார்த்துவிட்டு 'எம்புட்டு ரோமம் முளைச்சிருக்கு...' என்று சிரிக்காமல் சொன்னாள். அவர்கள் வீட்டில் கண்ணாடியிருக்கிறதா என்று பயத்தோடு சௌந்தரவல்லி கேட்டதும் முருகேஸ்வரி உள்ளே ஜன்னலில் மாட்டி வைத்திருப்பதாகச் சொன்னாள்.

திண்ணையில் இருந்து குதித்து சௌந்திரவல்லி வேகமாக உள்ளே போனாள். முருகேஸ்வரியின் வீட்டுக் கண்ணாடியிலும் ரசம் போயிருந் தது. அவள் மிக நெருக்கமாகக் கண்ணாடியை முகத்திற்கு அருகில் வைத்துக்கொண்டு பார்த்தாள். அந்தப் பையன்கள் சொன்னது போல லேசாக மீசைரோமங்கள் அரும்பத் துவங்கியிருந்தன.

இது என்ன இழவிற்கு எனக்குப் போய் முளைக்கிறது என்றபடியே அவள் விரல்நுனியால் தடவிப் பார்க்கத் துவங்கினாள். பூனை ரோமம் போன்றிருந்தது. பார்க்க அசிங்கமாக இருக்கிறதோ என்று கண்ணாடி யைச் சற்றுத் தொலைவில் வைத்துப் பார்த்தாள். அவளது கழுத்து எலும்புகள் புடைத்துக்கொண்டு கண்கள் உள்ளோடிப்போய் முகமே பிதுங்கிக்கொண்டிருப்பது போலத்தான் இருந்தது.

இந்திராணிக்கு எல்லாம் அப்படியில்லை. கன்னங்கள் நன்றாக உப்பிப் போயிருக்கின்றன. காதோரம் வேறு முடி சுருள்சுருளாகப் பறக்கிறது. அவள் தினமும் புருவத்திற்குக்கூட மை போட்டுக்கொள் கிறாள். அவளது அப்பா பஞ்சாயத்து போர்டில் வேலை செய்கிறார். அவர்கள் வீட்டில் பெரிய பவுடர் டப்பாகூட இருக்கிறது.

சௌந்திரவல்லி வீட்டில் ஒரேயொரு சாந்துப் பொட்டு மட்டுமே யிருக்கிறது. கண்மை டப்பா இல்லை. அம்மாவிடம் சொல்லி அனுப் பினால்கூட அவள் வாங்கி வரமாட்டாள். 'பள்ளிக்கூடம் போற கழுதைக்கு எதுக்குக் கண் மை காதுமைனு இருக்கிற அழகு போதும். இன்னும் ரெண்டு வருசத்தில் எவனாவது கிணறு

வெட்டுக்குப் போறவன்கிட்டே புடுச்சிக் குடுத்திர போறம். அதுக்கு இம்புட்டு அழகு போதும்' என்பாள்.

கண்ணாடியில் திரும்ப திரும்பப் பார்த்தபோது மீசை அரும்பி யிருப்பது அசூயையாக இருந்தது. அவள் ஒவ்வொரு ரோமமாகப் பிடுங்கிப் போட்டுவிடலாமா என்பதுபோல விரல் நுனியால் ஒரு ரோமத்தைப் பிடித்துப் பார்த்தாள். விரலால் பிடிக்கவே முடியவில்லை. கறுப்புப் பென்சிலால் கோடு போட்டது போன்று லேசாகத் துவங்கி யிருக்கிறது.

அவளுக்கு அழுகையாக வந்தது. கண்ணாடியை ஜன்ன லில் மாட்டிவிட்டு வாயைப் பொத்திக்கொண்டு அழுதாள். எப்படி இந்த மீசையை அழிப்பது என்று தெரியவில்லையே என்ற வலி அவளுக்குள் பீறிட்டது. கண்ணைத் துடைத்துக்கொண்டு முருகேஸ்வரி அருகில் உட்கார்ந்துகொண்டு வருத்தமான குரலில் 'நான் இப்போ என்னடி செய்றது' என்று கேட்டாள்.

தனக்கும் தெரியவில்லை என்றபடியே முருகேஸ்வரி 'எதுக்கும் நல்லா மஞ்சளை அரைச்சிப் போடு நாலைஞ்சி நாள்ல மறைஞ்சி போயிரும்' என்றாள். அப்போ நாலைந்து நாட்களுக்குப் பள்ளிக்கூடம் போகக்கூடாது என்று மனதிற்குள்ளாகவே முடிவு செய்து கொண்ட படியே சௌந்திர வல்லி வீட்டிற்கு நடக்க ஆரம்பித்தாள்.

தெருவில் தென்படும் ஒவ்வொரு பெண்ணின் முகத்தை யும் அவள் பார்வை உற்று நோக்கத் துவங்கியது. ஒன்றிரண்டு பெண்களுக்கு மீசை ரோமங்கள் இருப்பது கண்ணில் தென்படத்தான் செய்தது. அவர்களும் தன்னைப் போல அவமானப்பட்டிருப்பார்களா என்று யோசனையாக இருந்தது.

அவள் வீட்டிற்குப் போன போது அம்மா அடுப்பில் மிளகாய் வத்தலை வறுத்துக்கொண்டிருந்தாள். புகை மண்டியிருந்தது. உள்ளே எட்டிபார்த்தவுடனே அம்மா கரண்டியை அவள் மீது வீசி எறிந்த படியே 'எதுக்குடி அந்த இந்திராணியைக் கடிச்சி வச்சே நீ என்ன கடி நாயா இல்லை கறிக்கு ஏமாந்து போயி அலையுறயா ...' என்று கேட்டாள். சௌந்திரவல்லி முறைத்தபடியே 'நான் ஒண்ணும் சும்மா அடிக்கலை' என்றாள்.

அம்மா சேலைநுனியால் இரும்புச்சட்டியைப் பிடித்து இறக்கி வைத்துவிட்டு 'அவங்க அம்மாவும் அய்யாவும் வழியில் என்னைப் பிடிச்சிநிறுத்தி நாற வசவு வஞ்சாங்க அந்நேரம் என் கையில கிடைச்சிருந்தா உன்னை நரம்பு நரம்பா எண்ணியிருப்பேன். எங்கடி போய்த் தொலைஞ்சே' என்றாள்.

சௌந்திரவல்லிக்கு பள்ளியில் நடந்தது எதையும் அம்மாவிடம் சொல்ல வேண்டாம் போலிருந்தது. வழக்கம்போல தான் ஒட்ட வேண்டிய தீப்பெட்டியின் அடிக்கட்டை களுக்கான பொருட்களை அள்ளிக்கொண்டு தெருமுனைக்குப் போய் உட்கார்ந்துகொண்டாள்.

அவளால் கவனமாக ஒட்டவே முடியவில்லை. மனதில் வலி அதிகமாகிக் கொண்டேயிருந்தது.

வீட்டில் அம்மா சமையலை முடித்துவிட்டு வாசலுக்கு வரட்டும் என்று காத்திருந்தவள் போல அவள் மிக மெதுவாக வீட்டினுள் நடந்து போய் அடுப்படியில் இருந்த மஞ்சள் கிழங்கைத் தேடினாள். உரசி உரசி மஞ்சள் கிழங்கு தேய்ந்து போயிருந்தது. வீட்டின் பின்புறம் இருந்த படலினுள் போய் நின்றுகொண்டு மஞ்சள் கிழங்கைக் கல்லில் வேகவேகமாக உரசி உதட்டுக்கு மேலாக அப்பிக் கொண்டாள். கையெல்லாம் மஞ்சளாகியது.

அம்மா வீட்டிற்குள் வரும் சப்தம் கேட்டதும் தலையைக் கவிழ்ந்த படியே வெளியே நடந்து போனாள். அன்றைக்குப் பார்த்து அவளோடு பெட்டி ஒட்டுவதற்கு அம்மாவும் வந்து சேர்ந்தாள். அருகில் வந்து உட்கார்ந்தவுடனே சௌந்திரவல்லியின் முகத்தைப் பார்த்துவிட்டு 'என்னடி இது வேஷம்' என்று கேட்டாள். முகத்தில் எரிச்சல் இருக்கிறது என்று சௌந்திரவல்லி பொய் சொன்னாள். அம்மா முறைத்தபடியே 'அதுக்கு இப்பிடியா மஞ்சளைப் பூசிகிட்டு வர்றது' என்றபடியே தீப்பெட்டி ஒட்டத் துவங்கினாள்.

அம்மாவின் முகத்திலும் அவளுக்கு இருப்பதுபோல பூனை ரோமங்கள் இருக்கத்தான் செய்கின்றன. அதைப்பற்றி அய்யாவோ, அண்ணன்களோ எதுவுமே சொன்னதேயில்லை. அவள் முகத்தை உற்றுப்பார்த்துக்கொண்டே யிருந்தாள். அம்மா அதைக் கவனிக்கவே யில்லை. அவளால் தனது வலியை அடக்கிக்கொள்ளவே முடிய வில்லை. தயங்கி தயங்கி அம்மாவிடம் தனக்கு மீசை வளர்வதாகச் சொன்னாள். அம்மா அவளை அருகில் அழைத்து முகத்தை உற்றுப் பார்த்துவிட்டு 'அது தானா போயிரும். அதுக்குப் போயா இப்படி மஞ்சளைப் பூசிகிட்டு இருக்கே' என்றாள். சௌந்திரவல்லிக்கு அந்த பதில் போதுமானதாகயில்லை.

அவள் முகத்தை இறுக்கமாக வைத்துக்கொண்டு 'நம்ம வீட்ல புதுசா ஒரு கண்ணாடி வாங்கணும்' என்றாள். அம்மா தானும் பதிலுக்கு முறைத்தபடியே 'அதெல்லாம் உன்னைக் கட்டிக் கொடுக்குற அன்னைக்கு வாங்கிக்கிடலாம்' என்றாள். சௌந்திரவல்லிக்குக் கோபம் உச்சத்தைத் தொட்டது. 'அதுவரைக்கு நான் கருகருனு மீசையை வளத்துகிட்டு அசிங்கமா அலையணுமா ஆம்பளைப் பயக எம்புட்டு கேலி செய்றாங்ன்னு உனக்கு எப்படித் தெரியும்' என்றாள். 'அதுக்கு நான் என்னடி செய்யே.. இருக்கிற பாட்டையே பாக்க முடியலை. இதுல உனக்கு மீசை முளைக்கிறதுதான் பெரிய பிரச்சினையாக்கும்' என்றாள் அம்மா. இனி அம்மாவோடு எதைப் பற்றியும் பேசவே கூடாது என்று தோணியது.

அதற்குள் வீட்டிலிருந்து அம்மாவைத் தேடி அண்ணன் வந்திருந் தான். அவர்கள் இருவரும் பேசியபடியே நடந்து போனார்கள். ஐந்தாம் வகுப்பு படிக்கும் வரை அவளுக்கு இதுபோன்ற தொல்லைகள்

எதுவுமே கிடையாது. ஆறாம் வகுப்பு படிக்கப் போகும்போது கால் தெரியாமல் பாவாடை கட்ட வேண்டும். ஆம்பளைப் பிள்ளைகள் சட்டை போடக் கூடாது என்று பள்ளிக்கூடத்தில் நிறைய கெடுபிடிகள் கொண்டுவந்துவிட்டார்கள். அப்போதிருந்துதான் அவள் உடலில் ஏதேதோ மாற்றங்களும் உருவாகத் துவங்கியது. அதைவிடவும் அம்மா எடுத்ததற்கெல்லாம் அவளைக் கட்டிக் கொடுப்பதைப் பற்றியே பேசத் துவங்கியது வேறு எரிச்சலை உண்டு பண்ணிக்கொண்டிருந்தது.

அன்றிரவு தூக்கம் கண்ணைக் கட்டிக்கொண்டு அழுத்தும் வரைக்கும் அவள் தீப்பெட்டி ஒட்டினாள். தனக்கு உதவி செய்வதற்கு யாருமேயில்லை என்பது வருத்தம் தருவதாக இருந்தது. பேசாமல் அந்த இந்திராணியிடமே போய் மீசை முளைக்காமல் இருக்க என்ன செய்வது என்று கேட்டுவிடலாம் போலிருந்தது. அன்றைக்கு அவள் சாப்பிடாமலே உறங்கினாள்.

அதன் மறுநாளில் இருந்து மூன்று நாட்களுக்கு அவள் நினைத்த நேரம் எல்லாம் மஞ்சள் கிழங்கை உரசி உரசி முகத்தில் பூசினாள். ஆனால் அந்த மீசை ரோமங்கள் மறையவேயில்லை. மாறாக முகத்தில் மஞ்சள் படிந்து போய் காமாலை கண்டவள் போலாகியிருந்தது. விஷயம் அய்யா காதிற்கும் போய் பொம்பளைப் பிள்ளையை உருப்படியா வளர்க்கத் தெரியலை. கோவில் மாடு மாதிரி அலைய விட்டா மீசையும் முளைக்கும் தாடியும் முளைக்கும் என்று அவர் அம்மாவைப் போட்டு நாலு அடி அடித்தார்.

அன்றிரவு அம்மா யாரிடமோ ஆலோசனை கேட்டு அவளுக்காக மஞ்சளோடு பச்சிலைகளைச் சேர்த்து அரைத் துப் பூசியது. ஆனாலும் ரோமம் மட்டுப்படவேயில்லை. யாரும் அறியாமல் கழுதை மூத்திரத் தைக்கூட பிடித்துக் கொண்டுவந்து அம்மா அவள் முகத்தில் தேய்த்துக் கூடப் பார்த்தது. அவளால் அந்த நெடியைத் தாங்க முடியவில்லை

அதன்பிறகு 'எம்பிள்ளைய யாரு கட்டிக்கிட்டுப் போவான். இப்பிடி ஆகிப்போச்சே' என்று அம்மா தெருவில் போகின்ற வருகின்ற பெண்களிடம் எல்லாம் சொல்லி அழுதது. செளந்திரவல்லி அதற்குப் பிறகு பள்ளிக்கூடத்திற் குப் போகவேயில்லை. நாலைந்து நாட்களுக்குப் பிறகு அவளும் அம்மாவோடு கட்டிட வேலை செய்வதற்குச் செல்லத் துவங்கினாள். கட்டிட வேலையில் யாரும் யாரையும் நின்று கவனிப்ப தற்கோ கேலி செய்வதற்கோ நேரமேயில்லை. அவளும் அம்மாவும் கடுமையாக வேலை செய்தார்கள். ஒவ்வொரு நாளும் வேலைக்குச் செல்லும்போது செளந்திரவல்லி பள்ளியைக் கடந்து செல்வாள். தூரத்தி லிருந்தே வகுப்பில் மாணவர்கள் படிக்கும் சப்தம் கேட்டுக் கொண்டிருக்கும். அவள் தலைகுனிந்தபடியே கடந்து போய்விடுவாள்.

தன்னுடைய பையையும் புத்தகங்களையும் மட்டுமாவது பள்ளிக் கூடத்திலிருந்து கேட்டு எடுத்துக்கொண்டு வந்துவிட வேண்டும் என்று எப்போதாவது தோன்றும். ஆனால் திரும்பவும் தன்னோடு படித்த மாணவர்களை நேர்கொண்டு பார்ப்பதற்குக் கூச்சப்பட்டுக்கொண்டு

அவள் போகவேயில்லை.

நீண்ட நாட்களுக்குப் பிறகு ஒரு இரவு அம்மா அவளுக்காக டவுனிலிருந்த மருந்துக்கடையில் கேட்டு முகத்துக்குப் பூசிக்கொள்கின்ற கிரீம் ஒன்றை வாங்கிக்கொண்டு வந்து தந்தாள். இனிமேல் அதெல்லாம் எதற்கு என்று தோணியது போல 'கிணற்றுவெட்டுக்காரனைக் கட்டிக் கிடுறதுக்கு இதுவே போதும்மா' என்று சௌந்திரவல்லி அதை வாங்க மறுத்தாள்.

'நம்ம வீட்ல வந்து எதுக்குடி பிறந்தே... என்னாலே யாருக்குனு பாக்க முடியுது .' என்று சொல்லியபடியே தலையில் தலையில் அடித்தபடியே அம்மா குலுங்கி அழத்துவங்கினாள். அவளுக்கும் அழ வேண்டும் போலிருந்தது. இருவரும் ஒருவரையொருவர் கட்டிக் கொண்டு அழுதார்கள். அந்த அழுகை சௌந்திரவல்லியின் மீசை முளைத்ததற்காக மட்டும் இல்லை என்பது இருவருக்கும் தெரிந்தே யிருந்தது.

# ஆண்கள் தெருவில் ஒரு வீடு

வீட்டில் விளக்கு எரியவில்லை. லைட்டைப் போடக்கூட மறந்து அம்மா இருட்டிற்குள்ளாக இருக்கிறாள் போலும். வெளிச்சம் தேவை யில்லை என்ற நிலைக்கு அம்மா வந்துவிட்டிருக்கிறாள். யாராவது நினைவூட்டும்போது ஒரேயொரு மஞ்சள் ஒளி வீசும் நாற்பது வாட்ஸ் பல்பைப் போட்டு வைப்பாள். வேறு விளக்குகள் வீட்டில் எரிவதில்லை. யார் இருக்கிறார்கள் அவளைத் தவிர.

வீடு முழுவதும் ஆட்களாக இருந்தது போய் இன்று அம்மாவைத் தவிர வீட்டில் யாருமில்லை. சிற்றூரில் வசிப்பதற்கு யாருக்கு விருப்ப மிருக்கிறது. அம்மாவிற்கு வீட்டைப் பிரிந்து வருவதில் இஷ்டமில்லை. உத்திரத்தை ஒட்டிக்கொண்டு வாழும் பல்லியைப் போல அவள் வீட் டோடு ஒட்டிக்கிடக்கிறாள். வயது எழுபத்திரண்டு கடந்துவிட்டது. கண் பார்வை ஒரு பக்கம் மங்கிப் போய்விட்டிருக்கிறது. ஆனாலும் ஆள் துணையில்லாமல் நடமாடுமளவு உடலைத் தன் கட்டிற்குள் வைத்திருக்கிறாள்.

நான் அமெரிக்காவிலிருந்து வரும் நாட்களில் அவளோடு மட்டுமே தங்கிக்கொள்கிறேன். ஊருக்குப் புறப்படும் இரண்டு நாட்கள் முன்னதாக அண்ணன்களையும் அக்காக்களையும் சந்திப்பதுண்டு. ஆனால் அம்மாவோடு கழியும் எனது தினங்கள் மிகுந்த அர்த்த பூர்வ மானவை. அவள் என்னை நடத்தும் விதம் மட்டுமே எனக்கு இன்னமும் ஊர் திரும்பி வருவதற்கான காரணமாகவிருக்கிறது. இதற்காகவே இந்த முறையும் ஊருக்கு வந்திருக்கிறேன்.

அவளோடு பேசிக்கொண்டேயிருந்த பகலிரவுகள், அவளது நினைவுகள் பெருகியோடும் பொழுதுகள் எனக்கு மட்டுமே உரித்தா னவை. முதுமை அவள் உடலை ஒடுக்கியபோதும் மனதில் அவள் இயங்கிக்கொண்டேயிருக்கிறாள். வீட்டின் சமையலறையைத் தவிர மற்றவை பூட்டியே இருக்கின்றன. எப்போதாவது மழை பெய்யும்போது அம்மா உள் அறைக்கு வருகிறாள். மற்ற நேரங்களில் சமையலறை யில்தான் உறக்கம். விழிப்பு. சமையல் எல்லாமே.

அம்மாவிற்குப் பாடத்தெரியும். ஆனால் வருடத்தின் மார்கழி

மாதம் மட்டுமே பாடுவாள். அதுவும் யாரும் அறியாமல் விடிகாலையில் பனிபடர்ந்த வீதியில் நடந்து செல்லும்போது மெல்லிய குரலில் திருப்பாவை பாடுவாள். அவள் அழைக்கும் குரலைக் கேட்டு ஆண்டாளே வந்துவிடுவாள் என்பது போன்றிருக்கும். மார்கழி மாதத்தின் எல்லா நாட்களிலும் தவறாமல் அம்மா விடிகாலை பஜனைக்குப் போய்வருவாள். யாரையும் துணைக்கு அழைத்துச் சென்ற தில்லை. அப்பாவின் மரணத்திற்குப் பிறகு அதுவும் நின்று போனது. அவள் வெளியே செல்வதேயில்லை.

நாளெல்லாம் அம்மாவின் அருகில் படுத்தபடியே எதை யாவது கேட்டுக்கொண்டிருப்பேன். எனக்கு எதுக்கும்மா ஜெயந்தினு பேரு வச்சே. நம்ம வீட்ல அந்தப் பேரோட யாராவது இருந்தாங்களா? என்று கேட்கத் துவங்கியதும் அம்மாவின் முகம் மாறிவிடும். பலமுறை இந்தச் சம்பவத்தை நினைவுபடுத்தியபோதும் அதைத் திரும்பத் திரும்பக் கேட்பதில் எனக்கு விருப்பமிருந்தது.

அம்மா என் உள்ளங்கை ரேகையை வருடியபடியே என்கூட ஜெயந்தினு ஒரு பொண்ணு படிச்சா. தேவாங்கர் வீட்டுப் பொண்ணு. என் தோள்ல கையைப்போட்டுக்கிட்டு ஒண்ணா திரிவா. அவங்க நெசவுக்காரங்க. நானும் அவ வீட்டுக்குப் போவேன். சாப்பிடுவேன்.

அவளுக்கு எப்பவும் கல்யாணத்தைப் பத்தித்தான் பேச்சு. அப்போ எங்களுக்குப் பத்து வயசுகூட முடியலை. ஆனா அவ அதுக்குள்ளே கல்யாணம் பண்ணிக்கிட்டுப் போறதைப் பத்திக் கனவு கண்டுகிட்டே இருப்பா. என் காதுக்குள்ளே ரகசியமாக நாம ரெண்டு பேரும் ஒரே ஆளைக் கட்டிக்கிடுவமானுகூடக் கேட்டு இருக்கா. நான் ஊமைக் குரங்காட்டம் பதிலே சொல்லமாட்டேன். ஒரு நாள் ராத்திரி தெருவில ஒரே கூச்சல். என்னனு போய்ப் பாத்தா ஜெயந்தியைத் தேள் கடிச்சிருச்சினு தெருவே கூடிப் போயிருந்துச்சி. எங்க வீட்டுக்குக் கூடச் சுண்ணாம்பு கேட்டு வந்தாங்க. கருந்தேளுனு சொல்லிக் கிட்டாங்க.

அவளைப் பாக்குறதுக்காக வீட்டுக்குள்ளே போறேன். ஒரே கூட்டம். அரிக்கேன் விளக்கைத் தூக்கிப்பிடிச்சிக்கிட்டு ஒரு ஆள் நிக்குறான். அவங்க அம்மா அழுதுகிட்டு இருக்கா. அவங்க அப்பா நாட்டு வைத்தியரைக் கூட்டிக்கிட்டு வந்தாரு. ஆனா தும்முற நேரத்தில எல்லாம் முடிஞ்சி போச்சி. அவ கல்யாணம் பண்ணிக் கிடாமலே செத்துப் போயிட்டா.

எனக்கு மார்ல அடிச்சது மாதிரி வலி. நாலு நாள் தெருவுக்கே வரலை. அவளை மறக்கவே முடியலை. அதான் அவ பேரை உனக்கு வச்சேன். உங்கப்பாவுக்கு இந்தப் பேரு பிடிக்கவேயில்லை ஆனா உன்னைத் தவிர எல்லாப் பிள்ளைகள் பேரும் அவரு வச்சதுங்கிறதாலே என்னமோ இதுக்கு ஒண்ணுமே சொல்லலே. உன்னை ஜெயந்தி ஜெயந்தினு கூப்பிடும்போதெல்லாம் அவ நினைப்பு வரும். நம்ம கையில என்ன இருக்கு. ஆண்டவன் அவளை சீக்கிரமே அழைச்சிக்

கிட்டான், என்னை ஆறு பெத்து எடுத்து அவதிப்படணும்னு எழுதி வச்சிருக்கான்.

பேச்சு வடியும்போது அம்மாவின் கண்களிலிருந்து கண்ணீர் பெருகியோடத் துவங்கும். புறங்கையால் ரகசியமாகத் துடைத்துக்கொள் வாள். நினைவு அறுபட்டுவிடும். நீண்ட நேரம் மௌனமாக இருப்பாள். அதுபோன்ற வேளைகளில் அவளது முகத்தைக் காணும் போது எதற்காக இவ்வளவு துக்கங்களைத் தனக்குள் புதைத்துக்கொண்டிருக் கிறாள் என்று திட்டத் தோன்றும்.

அம்மா வெந்நீர் அண்டா வைக்குமிடத்தருகே சிறிய மரப் பலகையைத் தலைக்கு வைத்துக்கொண்டு கண்ணை அசந்து கிடப்பாள். உறங்குகிறாளா என்று தெரியாது. ஒரு அணில் ஜன்னலை விட்டுத் தரையிறங்கினால்கூட விழித்துக்கொண்டுவிடுவாள். உறக்கத்திற்கும் விழிப்பிற்கும் இடையில் ஊஞ்சலாடிக்கொண்டிருக்கிறாளோ என்னமோ?

எங்கள் தெருவில் இருந்த நிறைய குடும்பங்கள் இடம் மாறிப் போய்விட்டன. சிலர் இறந்தும் போய்விட்டார்கள். ஆனால் அம்மா வின் நினைவிலிருந்து எவரும் மறையவேயில்லை. இப்போதுதான் குதிரை வண்டி வந்து நின்று அதிலிருந்து திலகர் வீட்டுக்கு மருமகள் கிளிப்பச்சையில் பட்டு உடுத்தி குஞ்சலம் முடித்த சடையோடு வந்து இறங்கினாள் என்று சொல்வாள். ஆனால் திலகர் வீட்டுக்கு மருமகள் வந்து இருபத்தியெட்டு வருசங்கள் முடிந்துவிட்டது அவள் நினைவில் இல்லை.

டேபிள் வெயிட்டாக உள்ள கண்ணாடிக் கோளத்திற்குள் ளிருந்த மரங்கள் அசையாமலும் இலை உதிர்க்காமலும் இருப்பதுபோல அம்மாவின் நினைவுகள் வளரவும் இல்லை. தேயவும் இல்லை போலும். எதற்காக இத்தனை விஷயங் களை நினைவில் வைத்திருக் கிறாள். எதற்காக அவர்களின் துயரங்களுக்காகக் கண்ணீர் விடுகிறாள்.

எனக்கு ஆறு வயதாக இருந்தபோது ஒரு நாள் அம்மா விடம் கேட்டேன். ஏன்மா நீ தொட்டதுக்கு எல்லாம் அழுதுடறே என்று. அம்மா என் கைகளைப் பிடித்துக்கொண்டு 'ஜெயந்தி ... நான் என்னடி செய்றது மனசு கேட்க மாட்டேங்குது. வாழையிலையில் தண்ணீர் விட்டா எவ்வளவு நாழி நிக்கும். தானா உருண்டு போயிடும் இல்லையா. அப்படித்தான். என் மனசில யாருடைய கஷ்டமாவது வந்து விழுந் துட்டா கண்ணீர் தானே வந்துடுது. நானும் சரி பண்ணிக்கிடணும்னு நினைக்கிறது உண்டு. ஆனா மாறமாட்டேங்குது' என்றாள்.

அதுதான் அம்மா. அவளால் அழுகையைக் கட்டுப்படுத்த முடியாது. வீட்டில் நான்தான் கடைசி. எனக்கு முன்னால் மூன்று சகோதரிகளும் இரண்டு சகோதரர்களுமிருந்தார்கள். அப்பா இறக்கும் வரை அம்மா அவரைக் கேட்காமல் வீட்டை விட்டுக் காலடி எடுத்து வைத்ததே கிடையாது.

தலைக்குப் பூ வைத்துக்கொள்வது என்றால்கூட அப்பா விடம் கேட்டுத்தான் பூ வாங்கிக்கொள்வாள். அப்பாவிற்குப் பிச்சிபூ மட்டும்தான் பிடிக்கும் என்பதால் மல்லிகைப் பூக்கள் தந்தால்கூட அம்மா தலையில் சூடிக்கொள்வதில்லை. சாமி படத்திற்குப் போட்டு விடுவாள். ஆனால் அவளுக்கு மல்லிகையை ரொம்பவும் பிடிக்கும். அதுவும் மொக்காக வாங்கிக் கட்டி வைத்துக்கொள்ள ஆசைப்பட்டி ருக்கிறாள். ஆனால் அவள் சூடியதில்லை. சில நாட்கள் அக்காவிற்குத் தலை நிறைய மல்லிகைப் பூவைச் சூடி விட்டபடியே தழைய தழையத் தொங்கும் சரங்களைத் தன் விரலால் தொட்டபடியே நல்ல வாசமா இருக்கில்லடி என்று சொல்வாள்.

அக்காக்கள் எவரும் அம்மாவோடு இணக்கமாக இருந்த தில்லை. அவர்கள் அப்பாவின் கட்சி. நான் ஒருத்தி மட்டும்தான் அம்மாவின் ஆள். அவளே சொல்வாள். 'உன் ஒருத்திக்குத்தான்டி ஆஸ்பத்திரியில போய் பிரசவம் பாத்தோம். மத்தவங்க எல்லாம் வீட்லதான். நீதான் என்னைப் படுத்தி எடுத்தே. முத்துக்காமாட்சினு ஒரு லேடி டாக்டர். அவள் என் வயிற்றைப் பாத்தவுடனே சொல்லிட்டா. இந்தப் பிரசவம் உன் உசிரைக் கேட்குறது. கடவுளை பிரார்த்தனை பண்ணிக்கோனு.

'நான் யாருக்கும் தெரியாம ஒரு மஞ்சள் துணியில் ஒத்தை ரூபா காசை முடிஞ்சி வச்சி சாமி, பிள்ளையை எப்படியாவது நல்லபடியா காப்பாற்று. நான் செத்தாக்கூடப் பரவாயில்லைனு வேண்டிக்கிட்டு நெத்தி நிறைய திருநீறு பூசிக்கிட்டேன். முத்துக் காமாட்சி வந்து பாத்துட்டு எப்படியும் ராத்திரி தாண்டட்டும் இல்லைன்னா கத்திரி போட வேண்டியதுதானு சொல்லிட்டுப் போயிட்டா.

நான் வேண்டாத தெய்வமில்லை. வீட்ல நிறைசூலியாகச் செத்துப் போன வள்ளியம்மையைக்கூட வேண்டிக்கிட்டேன். ராப்பொழுது போய்க்கிட்டே இருக்கு. வலி வரலே. கண்ணீர் விட்டு அழுதேன். அப்போ யாரோ என் தலைமாட்டில வந்து நின்னு சங்கரி எதுக்குடி அழுகுறே ... எல்லாம் சொகமா முடியும்னு சொல்ற சப்தம் கேட்டது. யாருனு திரும்பிப் பார்த்தா எங்கம்மை நிக்குறா.

நான் பன்னிரண்டு வயசு இருக்குறப்போ செத்துச் சுண்ணாம்பாகிப் போனவ. என் தலைமாட்டில வந்து நின்னு வாக்கு சொல்றாளேனு மனசுல நினைச்சிட்டு அவளைக் கையெடுத்துக் கும்பிட்டேன். ரெண்டு நிமிசத்தில வலி வந்துருச்சி. ஆனா குழந்தையோட தலை பிரண்டு கிடுச்சினு முத்துக்காமாட்சி போராடினா.

எவ்வளவு ரத்தம். எவ்வளவு வலி. என் கையில ரத்தப் பிசுபிசுப்பு பட்டுச்சி. கண்ணைக் கட்டிக்கிட்டு வருது. முத்துக்காமாட்சி பிள்ளையை வெளியே எடுத்துக் காட்டுற சப்தம் கேட்டுச்சி. அப்புறம் மயங்கிட்டேன். அப்படி என்னைப் பாடாப்படுத்திப் பிறந்தவ இல்லைடி நீ. என் ரத்தத்தில பாதியைக் குடிச்சி வளர்ந்த உடம்பு அதான் எல்லாத்துக்கும் எடுத்து எறிஞ்சி பேசுது' என்பாள்.

ஒவ்வொரு முறையும் அம்மா இந்த சம்பவத்தைச் சொல்லும்போது என் கைகளில் அந்தப் பிசுபிசுப்பும் நிறைமாத கர்ப்பிணியின் கண்ணீர் தோய்ந்த முகமும் என் நினைவில் குற்றவுணர்வை ஏற்படுத்தும்.

பல முறை அம்மாவின் கையைப் பிடித்து அழுத்திக்கொண்டு பேசாமல் இருப்பேன். அம்மாவோ இப்போ நீ வருத்தப்பட்டு என்னடி ஆகப்போது. உங்களை எல்லாம் பெத்து வளர்த்து ஆளாக்கிவிடணும்னு என் தலையில் எழுதியிருக்கு. படைச்சவன் எழுதினதை நீயும் நானும் மாத்தவா முடியும் என்று ஆறுதல் சொல்வாள்.

கடைசியாகப் பிறந்ததால்தானோ என்னவோ வீட்டில் எனக்கென்று எல்லா சுதந்திரமும் இருந்தன. வீட்டில் மூன்று அக்காக்களும் நடந்து போய்ப் படித்து வந்தபோது எனக்கு மட்டும்தான் முதலில் சைக்கிள் வாங்கித் தந்தார்கள். மற்றவர்கள் எல்லாம் உள்ளூர்ப் பள்ளியில் படித்தபோது நான் மட்டும் போர்டிங் ஸ்கூலில் படிப்பதற்கு ஏற்காடு அனுப்பி வைக்கப்பட்டேன்.

பதினெட்டு வயது முடிவதற்குள் அக்கா மூவரும் திருமணம் செய்து வைக்கப்பட்டார்கள். எனக்கோ முப்பத்தி யோரு வயது முடியப் போகிறது இன்று வரை என்னிடம் யாரும் அதைப் பற்றி ஒரு வார்த்தைகூடப் பேசவேயில்லை. இவ்வளவு ஏன் எங்கள் வீட்டில் கடல் கடந்துபோன ஒரே பெண் நான்தான்.

அமெரிக்காவில் உள்ள பல்கலைக்கழகத்தில் படிப்பதற் காகச் சென்றபோது அம்மாவையும் உடன் அழைத்துக்கொண்டு போய் விடலாமா என்று யோசனையாக இருந்தது. அம்மா, ‘எனக்கு எதுக்கு அமெரிக்காவும் ஆப்பிரிக்காவும். உங்கப்பா இருந்தப்போ, இந்தா இருக்கிற அழகர்கோவிலுக்குக் கூட்டிட்டுப் போங்கனு நான் கேட்ட தில்லை. நீ போயிட்டு வாடி. என் பிள்ளை அமெரிக்கா போயி படிக்குதுனு தெரிஞ்ச நாலு பேர்கிட்டே சொல்லிக்கிடுறேன். அது போதும்’ என்றாள்.

உண்மையில் அம்மாவிற்கு வீட்டு விஷயங்களை யாரிடமும் பேசுவது பிடிக்காது. எல்லாவற்றையும் மனதிற்குள்ளாகவே போட்டு வைத்துக்கொண்டிருப்பாள். எப்போதாவது அழுகை மீறும்போது தனக்குத்தானே அதைச் சொல்லிக்கொள்வாளே அன்றி வெளியே விவாதிப்பதேயில்லை.

அவள் உலகம் அப்பாவால் நிரம்பியது. எனக்குப் பத்து வயதான போது ஒரு நாள் அம்மாவிடம் ‘உனக்குத்தான் நல்லா இங்கிலீஸ் படிக்க வருதே, எதுக்குமா நீ மேலே படிக்கவேயில்லை’ என்று கேட்டேன். அம்மா பெருமையாக ‘எங்கப்பா என்னை டீச்சர் வேலைக்கு அனுப்பணும்னு ஆசைப்பட்டார். வெள்ளைக்கார துரை கிட்டே தனியா டியூசன் படிச்சேன். துரை நல்ல சிவப்பா துடைச்சி வச்ச கண்ணாடி மாதிரி இருப்பார். எல்லீஸ்னு பேரு. அப்போ எங்க வீட்ல நான் ஒருத்திதான் பள்ளிக்கூடத்துல போயி படிச்சேன். அதுக்கே எங்க பெரியம்மா என்னடி சதிர் கச்சேரிக்குப் போறவ

மாதிரி சிங்காரம் பண்ணிக் கிட்டுப் போறேனு திட்டும்.

அப்பாவுக்கு ஆசை எப்படியாவது நான் டீச்சர் ஆகி டணும்னு. அப்போதான் உங்கப்பா பொண்ணு கேட்டு வந்தாரு. ஒரு வார்த்தை மறுப்பு சொல்லலை. உடனே படிப்பை நிறுத்திட்டாங்க. ரெண்டு மாசத்தில கல்யாணம் முடிவாகிருச்சி. கல்யாணம்னா பெரிய தடபுடல் கிடையாது.

சிவன்கோவில்ல கல்யாணம். வீட்ல சாப்பாடு. தெரிஞ்சவங்க முப்பது நாப்பது பேர் அவ்வளவுதான். கல்யாணம் ஆன கையோட திருச்செந் தூருக்குப் போயிருந்தோம். அங்கே ஒரு வெள்ளைக்காரன் கோவிலுக்கு எப்படிப் போறதுனு வழிகேட்டுக்கிட்டு இருந்தான். நான் அவன் கிட்டே இங்கிலீஸ்ல பேசி வழி சொன்னேன். உங்கப்பா முகம் கடுகடுனு ஆகிப் போயிருச்சி. கோவில் வர்றவரைக்கும் என்கூட பேசவேயில்லை.

திரும்பி வரும்போது என்னடி, படிச்சிருக்கேனு திமிரானு கேட்டார். நான் பதிலே பேசலை. அன்னைக்கு ராத்திரி இனிமே இங்கிலீஸ்ல பேச மாட்டேன். படிச்சதை எல்லாம் மறந்துட்டு வீட்டுக்கு அடங்கின வளா இருப்பேனு சத்தியம் பண்ணச் சொன்னார். கால்ல விழுந்து சத்தியம் பண்ணினேன். அது அப்படியே முடிஞ்சி போச்சு. ஆனா உங்கப்பா நல்லவர். என்னை அடிக்க மாட்டார்.

என் மேல கோவம் வந்தா அதை சாப்பாட்டுல காட்டு வார். ஒரு நாள் ஒரு மரவை உப்பையும் அள்ளி சாம்பார்ல போட்டு அதை சாதத்தில ஊற்றி என்னை சாப்பிடுடீ அப்போதான் உனக்கு புத்தி வரும்னு சொன்னார். நானும் சாப்பிட்டேன். இப்போ நினைச்சாலும் குமட்டுது. வாயே உப்புக் கரிச்சிப் போச்சி. அன்னைக்குப் புருஷன் சொல்லிட்டாரேனு வீம்புக்காவது சாப்பிட்டு வச்சேன். ரெண்டு நாள் வாயாலே வயிற்றாலே போனதுதான் மிச்சம்.

ஆனா உங்கப்பா சம்பாத்தியம் பண்றதில கில்லாடி. வருசம் எனக்கு ஒரு பட்டுப்புடவையும் ரெண்டு பவுன் சங்கிலியும் வாங்கித் தருவார். நானா கடைக்குப் போய் புடவை பார்த்தது கிடையாது. ஜவுளிக்கடையில் இருந்து ஒரு கணக்குப்பிள்ளை வீட்டுக்குக் கொண்டு வருவான். அதிலிருந்து ஒண்ணை எடுத்துக்கிடணும் அவ்வளவுதான். நகைக்கடைக்கு நூல்ல அளவு குடுத்துவிட்டா போதும் தானா சங்கிலி வந்துரும்.

அந்தக் காலத்தில ஏது இவ்வளவு டிசைன். மாங்கா மாதிரி இருக்கும். இல்லைன்னா காசுமாலை மாதிரியிருக்கும். உங்க அக்கா போட்டு இருக்காளே அது ஐம்பத்தி எட்ல வாங்கினது. இன்னைக்கும் கறுத்துப் போகாம இருக்கு பாத்தியா. அதில எல்லாம் உங்கப்பா கில்லாடி. உரசிப் பார்த்துதான் தங்கம் வாங்குவார்.

உன்னைத்தான் என்ன செய்றதுனு அவருக்குப் பெரிய கவலை. மத்ததுகள் நல்லது கெட்டதைக் கூட இருந்து பாத்துட்டார். ஆனா

உன் கல்யாணத்தைப் பாக்க அவருக்குக் கொடுத்து வைக்கலை. உண்மையைச் சொல்லணும்னா அவருக்கு உன்னைப் பிடிக்காதுடி. அதான் காரணமோ என்னமோ.

உனக்கு ஞாபகமிருக்கா திருவாதிரைக்கு மறுநாள் வாசல்ல விளையாடிக்கிட்டு இருந்த நீ காசை முழுங்கிட்டேனு உன்னை நாட்டுவைத்தியர்கிட்டே தூக்கிட்டு ஓடினோம். காசு தொண்டையில போயி அடைச்சிக்கிடுச்சி. வழியிலயே உனக்குக் கண்ணு முழி பிதுங்கிப் போச்சி. நான் அய்யோ அம்மானு கூப்பாடு போடுறேன். உங்கப்பா ஏது காசு. அது எப்படி உன் கைக்கு வந்துச்சினு ஆராய்ச்சி பண்ணிக்கிட்டு இருந்தார்.

உன்னைத் தூக்கிட்டுப்போய் நாட்டு வைத்தியர்கிட்டே காட்டுனதும் அவன் உச்சந்தலையோட சேத்து ஒரு தட்டு தட்டினான். இருமலோட சேர்ந்து காசு வெளியே வந்துச்சி. அன்னைக்கு ராத்திரி உங்கப்பா யார்கிட்டேயோ சொல்லிக்கிட்டு இருக்காரு.. பிள்ளை செத்து போயிரும்னு நினைச்சேன். பிழைச்சிக்கிடுச்சினு.

அப்படியுமா ஒரு மனுசன் நினைப்பாரு. எதுக்கு உன்னைப் பிடிக்கலைனு தெரியவேயில்லை. எல்லாப் பிள்ளைகளையும் மாதிரித் தான நீயும் இருக்கே. ஒருவேளை கடைசியா நீ பிறந்ததுதான் பிடிக்கலையோ என்னவோ. ஆனா உன்னைப் படிக்க வைக்கணும்னு காசைத் தண்ணியா செலவு செஞ்சிருக்காரு. அதுவும் அதே மனசு தானே. அவருக்கு நேரத்துக்கு ஒரு மனசு. உனக்குத்தான் தெரியுமே.

உங்கப்பாவு உன் ஒருத்திக்குத்தான் லெட்டர் போட்டதே யில்லை. உங்க அக்காவைக் கட்டிக் கொடுத்துட்டு வாரம் ரெண்டு தபால் போட்டுவாரு. மாதத்துக்கு ஒரு தடவை போயி பாத்துட்டு வந்துருவாரு. அவருக்கு மூத்தவ மீனாட்சி மேலதான் ப்ரியம். அப்பாவும் மகளும் எந்நேரமும் ரகசியமா ஏதாவது பேசிக்கிட்டு இருப்பாக.

என் வயிற்றில பிறந்ததுதானே. ஆனா அதுக்கு என்கிட்டே ஒட்டுதலே இல்லை. இவ்வளவு ஏன் உங்க அண்ணன்க என் முந்தானையைப் பிடிச்சிக்கிட்டே சுத்திக்கிட்டு இருப் பானுக. அவங்களே மீசை முளைக்க ஆரம்பிச்ச பிறகு என்னைத் திரும்பிக்கூடப் பாக்குறதில்லை. அதுலயும் கல்யாணம் ஆகிட்ட பின்னாலே சுத்தமா மறந்துட்டாங்க.

நானும்கூடத்தான் எங்கப்பாவை, கல்யாணம் ஆன பிறகு மறந்துட் டேன். எப்பாவது கோவில்ல யாராவது தேவாரம் பாடுற சப்தம் கேட்கும்போது எங்கப்பா ஞாபகம் வரும். ஆனா காட்டிக்கிட மாட்டேன். எங்கம்மா அப்படித்தான் இருந்தாள். நானும் அப்படித் தான் இருப்பேன். உனக்கு எப்படி விதிச்சிருக்கோ.

ஆனா ஜெயந்தி, நீ இப்படி வருவேனு எனக்கு உள்ளுக் குள்ளே ஏதோவொரு நினைப்பு நாலு வயசில உண்டாகிருச்சிடி. ஒரு நாள் நீ தெருவில் விளையாடிக்கிட்டு இருந்தவ, ஓடி வந்து பொம்

பளைங்க மட்டும் ஏன்மா தெருவில நடந்து போகும்போது முக்காடு போட்டுக்கிட்டு நடந்து போறாங்க. ஆம்பளைங்க ஏன் அப்படிச் செய்றதில்லைனு கேட்டே. அதைக் கேட்டு சுப்ரமணியம் வீட்டு சிவத்தாச்சி கூடச் சிரிச்சிக்கிட்டே உங்கப்பாவை நாளையில இருந்து முக்காடு போட்டுட்டு வரச் சொல்வோம் போதுமாடி என்றது.

எனக்கு உன் ஞானம் அப்பவே தெரிஞ்சி போச்சிடி. உனக்கு எதுனாலும் அதை ஏன் எதுக்குனு காரணம் தெரிஞ்சிக்கிடணும். ஆராய்ச்சில மனசு போறது. பொம்பளைக்கு ஆராய்ச்சில மனசு போகக் கூடாதுனு சொல்லிச் சொல்லி எங்களை வளர்த்தாங்க. ஆனா நான் அப்படி உன்னை வளர்க்கலே. எனக்குத் தெரிஞ்சதை உனக்குச் சொல்லி வச்சேன். கற்பூரம் மாதிரி நீ பத்திக்கிட்டே.

உன்கிட்டே சொல்றதுக்கு என்ன? உங்கண்ணன் உன் முன்னாடி நின்னு பேச பயப்படுறான். அது எனக்கு எவ்வளவு பெருமையா இருக்கு தெரியுமா? உனக்கு ஞாபகம் இருக்குமானு தெரியலைடி. திருக்கார்த்திகை அதுவுமா உங்க அண்ணன் ஒருக்க வந்திருந்தான்.

அப்போ நீ ஹாஸ்டல்ல இருந்து படிக்கிறதுக்காக வீட்டுக்கு வந்திருந்தே. இதே இடத்திலதான் நான் விளக்கு வச்சிக்கிட்டு இருந்தேன். உங்க அண்ணன் உன்னைப் பாத்து ரொம்ப அதிகாரமா வாசல்ல ஏண்டி விளக்கு வைக்கலைனு கேட்டான். அந்தா இருக்கு நீ எடுத்து வையுடானு சொல்லிட்டு நீ ஊஞ்சல் ஆடிக்கிட்டு இருந்தே. அவன் மூஞ்சி போன போக்க பாக்கணுமே. என்ன கோபம். என்கிட்டே வந்து கத்தினான்.

அவனும் உங்கப்பாவும் ஒண்ணு. கோபம் வந்துட்டா பேசத் தெரியாது. அஞ்சு நிமிசம் என்னென்னமோ கத்தினான். அவளைக் கண்டிக்கிறதா இருந்தா நேர்ல சொல்லுடானு சொன்னேன். அதுக்கு அவன் சொல்றான் அவ முகத்தைப் பாத்துப் பேச முடியாதும்மானு. அப்போ நான் காட்டிக்கிடலை. ஆனா எனக்கு ரொம்ப சந்தோஷமா இருந்துச்சி. இப்படி எல்லாம் நான் ஒரு நாள் இருந்தது கிடையாதுனு மனசு அடிச்சிக்கிச்சி.

ஆனா அதை உன்கிட்டேகூடக் காட்டிக்கிடலை. ஆனா உனக்கு அன்னைக்கு மருதாணி வச்சிவிட்டேன். விடியுற வரைக்கும் விட்டா ரொம்ப கறுத்துப் போயிரும்னு ராத்திரி நாம தூங்காம உட்கார்ந்து பேசிக்கிட்டே இருந்தோம். அப்போ உன்னைப் பாக்கும்போது மனசில என்னமோ கற்பனை வந்துச்சி. இப்போ மறந்து போச்சி. ஆனா நீ வேறடி. நம்ம வீட்ல உன் தைரியம் யாருக்கும் கிடையாது.

அம்மாவின் பேச்சு இப்படி நீண்டுகொண்டே போய் சில நேரம் அப்படியே புதைகுழியில் புதையுண்டதுபோல ஒடுங்கிவிடும். நானாக அதை மறுபடியும் நோண்டத் துவங்குவேன். வேறு ஏதாவது பேச்சு புரளும்.

எப்போதும் நான் அமெரிக்கா புறப்பட வேண்டிய நாளுக்கு

முதல் நாளே அவளது பேச்சு நின்று போகத் துவங்கிவிடும். நானாக எதையாவது கேட்டால்கூட அவள் தேவையான அளவு மட்டும்தான் பதில் சொல்வாள். அம்மா நீயும் ஊருக்கு வருகிறாயா என்று எப்போதும் போலக் கேட்பேன். அவள் பதிலும் சொல்வதில்லை.

ஒவ்வொரு முறையும் ஊருக்குப் புறப்படுவதற்கு முன்னால் அவளுக்குத் தேவையான மருந்து மாத்திரைகள், போர்த்திக்கொள்வதற்கான போர்வை, ஸ்வெட்டர், வீட்டில் போட்டுநடப்பதற்கான செருப்பு யாவும் வாங்கித் தந்து விட்டுக் கிளம்புவேன். நான் சென்ற சில நாட்களிலே அதை அருகாமையில் உள்ள வீட்டில் இருப்பவர்களுக்குத் தந்துவிடுவாள் என்று தெரியும்.

ஊருக்குப் புறப்படும் நாளின் காலையில் அவள் என்னை அழைத்துத் திருநீறு பூசிவிடுவாள். பிறகு என் கைகளை அமைதியாகச் சில நிமிசங்கள் பிடித்துக்கொண்டிருப்பாள். பிறகு என்னிடம் பேசுவதேயில்லை. அவளிடமிருந்து என் கையை உருவிக்கொண்டு பிரியும் அந்த வலி அமெரிக்கா சென்ற சில மாதங்களுக்கும் இருந்துகொண்டேயிருக்கும். அந்த வலிதான் என்னை மறுமுறையும் அவளைக் காண வர வைக்கிறதோ என்னவோ.

இந்த முறை வந்தபோது அம்மா என்னிடம் அதிகம் பேசவேயில்லை. அவள் மிகுந்த சோர்வோடு இருந்தாள். ஏதாவது கேட்டால் பதில் சொல்வதற்கு முன்னால் பலமாக யோசித்தாள். சில நேரம் அவள் தனக்குத்தானே பேசிக்கொண்டிருப்பதைக் கண்டேன்.

இரண்டு மூன்று நாட்களுக்குப் பிறகு என்னை ஒரு போட்டோ எடுத்துக் குடுத்துட்டுப் போடி என்று சொன்னாள். எதற்காக என்று கேட்டபோது, செத்துப் போன பிறகு ஞாபகமா வச்சிக்கிடுறதுக்கு வேணும்னு பக்கத்துவீட்டு மாரியம்மாள் கேட்குறா. நான் கல்யாணமானதில இருந்து தனியா போட்டோ எடுத்ததேயில்லை. அவ ஆசைப்படுறா ஒரு போட்டோ எடுத்துத் தர்றயா என்று கேட்டாள்.

நான் அம்மாவை எவ்வளவோ புகைப்படங்கள் எடுத்தி ருக்கிறேன். அவளிடம் எதையும் தந்ததில்லை. அவளும் கேட்டதில்லை. இப்படிக் கேட்பது எனக்குக் கோபத்தை உண்டாக்கியது. நான் அந்தப் பொண்ணையா கூட வச்சிக்கிட்டு இருக்கே என்று சப்தமிட்டேன்.

அம்மாவோ, பாவம்டி அவ. ரெண்டு பிள்ளைகள் வச்சிருக்கா. புருஷன் சரியில்லை. ஆச்சி ஆச்சினு இங்கேயே கிடக்கிறா என்னாலே ஆனது ஒரு வேளை சாப்பாடு. அதைப் போடுறேன். போகட்டும். நீ அவளை எதுவும் கேட்காதே என்றாள்.

அம்மா ஆசைப்பட்டபடியே அவளைத் தனியே புகைப் படம் எடுத்துத் தந்துவிட்டு நீ சாகுறதைப் பத்தியே நினைச் சிக்கிட்டு இருக்காதே என்று சொன்னேன். அம்மா என்னை உற்றுப் பார்த்தபடியே என் மனசில இருக்கிற வலிக்கு சாகுறதுனு முடிவு எடுத்திருந்தா இருபது வயசுக்குள்ளே செத்துப் போயிருப்பேன். ஆனா முடியலை.

எப்போ போகணும்னு முடிவு இருக்கோ, அப்போ போய்க்கிடுறேன் என்றபடியே மௌனமாகிவிட்டாள்.

என்னை மீறி வந்த துக்கத்தை நான் வெளிப்படுத்தவே யில்லை. அவளை வெறித்துப் பார்த்தபடியே இருந்தேன். அம்மாவிற்கு அது தெரிந்திருந்ததுபோல என் கையைப் பிடித்தபடியே அழுகை வந்தா அழுதுரு . நம்மாலே வேற என்னடி செய்ய முடியும் என்றாள்.

நான் அம்மாவோடு எதையும் பேசவில்லை. அவளைப் போல ஒரு நாள் இருந்து பார்ப்போம் என்பதுபோல விளக்குகளை அணைத்துவிட்டு இருளுக்குள்ளாகவே இருந்தேன். இருட்டின் கதகதப்பு எங்களைத் தழுவிக்கொண்டது. அம்மா யாரோ தெரிந்தவரிடம் பேசிக்கொண்டிருப்பதுபோல இருட்டிடம் பேசிக்கொண்டிருந்தாள். அவளது குரல் தனியே கேட்டுக்கொண்டேயிருந்தது.

ஊர் கிளம்பும் வரை அம்மாவோடு நான் பேசவேயில்லை. ஊருக்குப் புறப்படும்போது அம்மா வழக்கம் போலத் திருநீறு பூசிவிட்டு உனக்கு மட்டும் அப்படி என்கிட்டே என்னடி அக்கறை. நீ எதுக்காக இப்படி அலைஞ்சிகிட்டு இருக்கே என்று கேட்டாள். நான் பதில் பேசவில்லை. பிறகு அம்மா தன் இடத்திற்குப் போய்ப் படுத்துக்கொண்டாள்.

எனக்குக் கோபமாக வந்தது. பிணக்கோடு அன்று மாலையே கிளம்பிவிட்டேன். அதுதான் அம்மாவோடு நான் இருந்த கடைசி நாள். அதன் பிறகு அம்மாவை நான் உயிரோடு பார்க்கவேயில்லை. எதற்காக அவள் என்னோட சண்டையிட விரும்பினாள். ஏன் தீர்க்கப்படாத பிணக்கோடு என்னை விட்டுச் சென்றாள் என்ற கேள்விகள் என்னைத் துரத்திக்கொண்டேயிருக்கின்றன.

இன்றைக்கும் ஊரில் எங்கள் வீடு அப்படியே இருக்கிறது. போவதற்குத்தான் பயமாக இருக்கிறது.

# மஞ்சள் கொக்கு

பல மாதங்களாக வேலையற்றுப்போனதால் சகாதேவன் மிகுந்த மனச்சோர்வு கொண்டிருந்தான். நண்பர்களும் உறவும் கசந்து போயிருந்தார்கள். வெளிஉலகின் இரைச்சலும் பரபரப்பும் அவனைத் தொந்தரவு செய்தது. சாப்பிடுவதற்குக்கூட அவன் தயக்கம் கொள்ளத் துவங்கினான். உலகின் மீது தீராத வன்மமும் ஆத்திரமும் மட்டுமே அவனுக்குள் இருந்தது.

யாரையும் பார்க்கப் பிடிக்காமல் அறைக்கதவைச் சாத்திக்கொண்டு செய்வதறியாமல் தன்னிடமிருந்த தீப் பெட்டியிலிருந்து குச்சியை எடுத்து விளையாட்டாக உரசி உரசி போட்டபடியே இருந்தான். அது ஒன்றுதான் அவனது ஒரே பொழுது போக்காக இருந்தது. அதற்காக தினம் ஒரு தீப்பெட்டி வாங்கினான்.

சுவர் ஓரமாக உட்கார்ந்தபடியே தீப்பெட்டியிலிருந்து ஒரு குச்சியை எடுத்து உரசுவான். அதில் நெருப்பு எவ்வளவு நேரம் எரிகிறது என்று உற்றுக் கவனித்தபடியே இருப்பான். சில குச்சிகளில் நெருப்பு எரியத் துவங்கும்போது மிகப் பிரகாசமாக இருக்கிறது. ஆனால் பாதியில் பிரகாசம் வடிந்து நெருப்பு மெலிந்து போய்விடுகிறது.

சில தீக்குச்சிகளில் நெருப்பு அணைவது மிக அவசர அவசர மானதாக இருக்கிறது. வேறு சில குச்சிகளிலோ நெருப்பு குமிழ் போலத் தோன்றி நிமிஷத்தில் மறைந்து போய்விடுகின்றது. இப்படித் தீக்குச்சிகளின் வழியே அவன் நெருப்பை உன்னிப்பாக அறியத் துவங்கியிருந்தான்.

உலகில் மிகவும் வியப்பானவை தீக்குச்சிகள் என்று அவனுக்குத் தோணியது. அத்தோடு நெருப்பை நம் கண் ணால் அறிந்துகொள்ள முடியாது என்ற எண்ணமும் உருவானது. எதையோ சொல்ல நினைத்து வார்த்தை தடுமாறும் மனிதனைப் போல நெருப்பு அவசரமாக சப்தமிட்டு ஒடுங்கிவிடுவது வியப்பாக இருக்கும்.

நெருப்பிற்குள் ஒன்றிற்கும் மற்றதிற்கும் வித்யாசமிருக்கிறதா? நேற்றைய நெருப்பு இன்றைய நெருப்பு என்று ஏதாவது உண்டா? இல்லை கற்பூரத்தில் எரியும் நெருப்பு கல்லில் எரியும் நெருப்பு

என்று பேதமிருக்கிறதா?

நெருப்பு உலகின் தொன்மையான சாட்சி போல அவனுக்குள் தோன்றியது. விசித்திரமான ஆதிமிருகம் ஒன்றின் கண்களை நினைவு படுத்துவது போலவே நெருப்பு அவன் கண்முன்னே நடனமாடி மறைந்தது.

அப்படியொரு வெறுமை படிந்த மாலைப்பொழுதில் தன்னிட மிருந்த தீப்பெட்டியிலிருந்து ஒரு குச்சியை எடுத்து உரசும்போது தற்செயலாக நெருப்பின் உள்ளே ஒரு மஞ்சள் நிறக் கொக்கு ஒன்று பறந்துகொண்டிருப்பதைக் கண்டான். அவனால் நம்ப முடியவில்லை. அது கொக்குதானா என்று உற்றுப் பார்த்தான்.

கொக்கு தான், ஆனால் மிகச் சிறியதாக இருந்தது. சில வேளைகளில் இரவில் வழிதவறி அலையும் இதுபோன்ற கொக்கைத் தொலைதூர வானத்தில் பார்த்திருக்கிறான். அது போன்றதொரு கொக்குதான் அது. ஆனால் மஞ்சள் நிற இறக்கை கொண்டிருக்கிறது.

அவன் உற்றுப்பார்த்தான். கொக்கு தன் சிறகை விரித்த படியே பறந்துபோய் விருட்டென மறைந்தது. நம்ப முடியா மல் அடுத்த தீக்குச்சியை உரசிப் பார்த்தான். அதிலும் அதே கொக்கு பறந்துகொண் டிருந்தது. நம்பமுடியாத திகைப்புடன் அவன் ஒவ்வொரு தீக்குச்சியாக உரசி உரசிப் பார்த்தான். எல்லா குச்சிகளிலும் சிறகசைக்கும் சப்த மின்றி அந்தக் கொக்கு பேரழகுடன் பறந்துகொண்டிருந்தது.

அன்றைய இரவிற்குள் அவன் தீப்பெட்டியிலிருந்த குச்சிகள் தீருமளவு எரித்து மகிழ்ந்தான். எங்கிருந்து இந்தக் கொக்கு எங்கு பறக்கிறது. இதுவரை உலகில் கண்ட கொக்குகளில் இல்லாத வசீகரம் இதற்கு எப்படி வந்தது என்று அவனது கண்டுபிடிப்பைச் சுற்றியே மனது ஏதேதோ கற்பனைகளை நெய்துகொண்டிருந்தது.

உண்மையில் தான் கனவு காண்கிறோமோ எனும் சந்தேகம் உருவாகும்போது திரும்பவும் ஒரு குச்சியை உரசி உற்றுப் பார்ப்பான், சலனமற்று கொக்கு பறந்து செல்லும். அதைப் பார்க்கையில் தன்னை மீறிய பரவசம் ஏற்படுவதை அவன் உணரத் துவங்கினான்.

அந்தக் கொக்கு எங்கே பறந்துகொண்டிருக்கிறது. அது ஏன் திரும்பிப் பார்ப்பதேயில்லை என்று யோசனை செய்தபடியே படுத்துக் கிடந்தான்.

இந்த விந்தையின் பிறகு அறையில் தான் முன்பு உணரும் வெறுமை மெல்ல கரைந்து போவதை உணரத் துவங்கினான்.

தன்னிடமிருந்த கடைசித் தீக்குச்சியை உரசினான்.

நெருப்பு பற்றிக்கொண்டவுடன் சுடரினுள் பறந்துகொண்டிருந்த மஞ்சள் கொக்கு மெல்ல நெருப்பிலிருந்து வெளியேறி அவன் அருகில் வந்து அரைவட்டமடித்துவிட்டுத் திரும்பவும் அதே நெருப்பிற்குள் சென்று மறைந்தது.

*அவன் வியப்போடு தன்னைக் கடந்துசென்ற கொக்கைப் பார்த்துக் கொண்டிருந்தான்.*

*தீக்குச்சி எரிந்து முடிந்து புகை எழுந்தது. அவன் தன்னை மீறிய சந்தோஷமும் துக்கமும் கொண்டபடியே அறையை விட்டு வெளியேறி ஓடினான். அதன்பிறகு அந்த நகரத்திற்குத் திரும்பி வரவேயில்லை. எப்போதும் மலர்ந்த முகத்துடன் அவன் ஒரு நாடோடியாக ஹரித்துவாரில் அலைந்துகொண்டிருந்ததைப் பார்த்ததாகச் சொல்லிக் கொள்கிறார்கள்.*

# வீட்டு ஆணி

நன்மாறன் எப்போதும் போல வீடு திரும்பி, உடை மாற்றிக்கொண்டு முகம் கழுவச் சென்றபோது ஆணியில் மாட்டப்பட்ட அவனது சட்டை நழுவிக் கீழே விழுந்தது. அதைக் கவனிக்காமல் பின்வாசலுக்குச் சென்றான்.

தொட்டியில் இருந்த நீரில் ஆகாசம் விழுந்து கிடந்தது. அவன் தன் கைகளால் ஆகாசத்தை தண்ணீரை விட்டு விலக்கிவிட்டு முகத்தில் அடித்துக்கொண்டான். திரும்பும் போது தரையில் விழுந்து கிடந்த தனது சட்டையை ஆணியில் எடுத்து மாட்ட வேண்டும் என்று தோன்றியது. நெருங்கிச் சென்று ஆணியில் மாட்டும்போது ஆணியை உற்றுப் பார்த்தான்.

துருவேறிய ஆணியின் தலை நெளிந்துபோயிருந்தது. யார் அதைச் சுவரில் அடித்தது என்ற கேள்வி அவனுக்குள் உண்டானது.

அவனுக்கு நினைவு தெரிந்த நாளில் இருந்து அந்த ஆணி அதே இடத்தில்தானிருக்கிறது. அதில் பையோ சட்டையோ எதுவோ ஒன்று தொங்கிக்கொண்டுதானிருக் கிறது. ஆனால் ஆணியை அதுவரை ஒருமுறைகூட உற்றுக் கவனித்ததேயில்லை.

இதுவரை பார்த்திராத பொருளைக் கவனிப்பதுபோல ஆர்வத்துடன் ஆணியைப் பார்க்கத் துவங்கினான். எதற்காக ஆணிகள் இப்படி ஒரே சுவரில் பலவருடமாக எவ்விதமான முணுமுணுப்பும் இன்றி தன்னை ஒப்புக்கொடுத்துக் கொண்டிருக்கின்றன.

ஒரே சுவரில் இருந்தபோதும் ஒரு ஆணியும் மற்றொரு ஆணியும் ஒன்றோடு ஒன்று ஏன் பேசிக்கொள்வதில்லை. சுவரிலிருந்து விடுபடு வதற்கு ஆணிகள் ஏதாவது முயற்சி எடுக்குமா இல்லையா என்று ஏதேதோ தோணியது.

சட்டென தானும் அந்த ஆணியைப் போல ஒரே வீட்டில் இருபத்தைந்து வருடமாக வாழ்ந்துகொண்டிருக்கிறோமோ, ஒரு வேளை இது போலவே நமது வாழ்வும் முடிந்துவிடுமா? என்ற அச்சம் உருவாகத் துவங்கியது. தன் விரலால் ஆணியைத் தடவிப் பார்த்தான். அதன் இறுக்கம் குற்றவுணர்ச்சியை உள்ளாக்கியது.

எந்த ஆணியும் தன்னைச் சுவரில் அடிப்பதற்கு ஒரு போதும் சம்மதித்து இருக்காது. எதற்காக ஆணிகள் இப்படித் தங்களை யாருடைய கையிலோ ஒப்படைத்துவிட்டு இயக்க மற்றுப் போகின்றன என்று ஆத்திரமாக வந்தது.

ஆணியாகவே இருந்தாலும் ஏதாவது ஒரு கப்பலின் அடிப்பகுதியில் அடிக்கப்பட்டிருந்தால் கடல்கடந்து போய்க் கொண்டிருந்திருக்கலாம். அல்லது ஒரு பியானோவின் கால்கட்டையில் அடிக்கப்பட்டிருந்தால் இசையை ரசித்திருக்கலாம். அப்படியின்றி ஏன் இப்படி ஒரு காரைச் சுவரில் வந்து மாட்டிக்கொண்டது.

பார்க்கப் பார்க்க ஆணி யாரையோ நினைவுபடுத்துவது போலிருந்தது. ஆமாம் அது அம்மாவை நினைவுபடுத்துகிறது. அம்மா இந்த ஆணியைப் போல இதே வீட்டில் நாற்பது வருடத்திற்கும் மேலாக இருந்தாள். அவளிடம் சலிப்போ, முணுமுணுப்போ இல்லை. தலையிருந்து ஆணிகள் பேசாமலிருப்பதற்கு காரணம் அவை மனித ரகசியங்கள் அறிந்தவை என்பதால்தானோ என்று தோணியது.

திடீரென ஆணி அவனுக்கு மனச்சோர்வையும் துக்கத் தையும் வலியையும் உருவாக்குவதாக இருந்தது. ஆணியைப் பற்றி நினைக்காமலிருக்க ஒரே வழி அதை மறைத்துவிடுவது மட்டும்தான் என்றபடியே தனது சட்டையை எடுத்து அவசரமாக ஆணியில் மாட்டிவிட்டு தொலைக்காட்சி பார்க்கத் துவங்கினான். ஆணியிலிருந்த சட்டை காற்றில் ஆடிக்கொண்டிருந்தது.

ஏன் இந்த ஆணி தன் வீட்டில் வந்து மாட்டிக்கொண்டது என்ற குற்றவுணர்ச்சி அவனுக்குள் மெல்லப் பீறிடத் துவங்கி இரவெல்லாம் தூக்கமறச் செய்தது. மறுநாளில் இருந்து அவன் ஆணியை நிமிர்ந்து பார்க்காமல் வீட்டில் வாழத் துவங்கினான். அதைத் தவிர அவனுக்கு வேறு வழிகள் எதுவும் தெரியவில்லை.

# நம்மில் ஒருவன்

என்னுடைய பெயர் கே.எல்.மகாதேவன், சென்றவாரம் ஞாயிற்றுக் கிழமை வரை ஆங்கில தினசரி ஒன்றின் செய்திப் பிரிவில் செய்தியாள ராக வேலை செய்துகொண்டிருந்தேன். கடந்த மூன்று நாட்களில் என் வாழ்க்கையில் ஏற்பட்ட எதிர்பாராத நிகழ்வுகளும் மனநெருக்கடி யும் என்னை வேலையை விட்டுமல்லாது இந்த நகரத்தை விட்டே வெளியேறிப் போகும்படியாக மாற்றியிருக்கின்றன.

தற்போது ஜார்கண்ட் மாநிலத்தின் பெயர் தெரியாத கிராமம் ஒன்றில் இறங்கி, சாலையோரம் உள்ள தாமரைக்குளம் ஒன்றின் அருகில் அமர்ந்திருக்கிறேன். சென்னையிலிருந்து எவ்வளவோ தூரம் விலகி வந்த பிறகும் மனது அந்த ஊரை விட்டு வர மறுத்து அங்கேயே ஒட்டிக்கிடக்கிறது. காற்றில் அலையும் தாமரை இலைகளை விடவும் கடந்த காலத்தின் நினைவுகள் வேகமாக எனக்குள் அசைந்து கொண்டிருக்கின்றன.

துர்சொப்பனத்திலிருந்து திடுக்கிட்டு விழித்தெழுவது போலத்தான் மாநகரங்களில் அன்றாட வாழ்வு சாத்தியமாகிறது. செய்திப் பிரிவில் பணியாற்றுவதற்காகச் சேர்ந்த நாட்களில் செய்தி என்பது நடந்து முடிந்துவிட்ட ஒரு தகவல் என்பதை மீறி அது என்னை பாதிக்க வில்லை. விபத்து பற்றிய புகைப்படங்களும், வன்கொலை பற்றிய குறிப்புகளும்கூட உள்ளூரக் கிளர்ச்சியை ஏற்படுத்திக்கொண் டிருந்ததேயன்றி அதிர்ச்சி தரவேயில்லை.

கடந்த ஞாயிறு அன்று காலையில் சிட்டிநியூஸ் என்ற இலவச விளம்பர இதழின் பன்னிரண்டாம் பக்கத்தில் அந்த விளம்பரம் வந்திருந்தது. நான்கு வரிகளுக்குள் அடங்கிய விளம்பரமது.

பெயர் நாவுக்கரசு. மாநிறம், முப்பத்திரண்டு வயது. திருமண மாகா தவர். படிப்பு எஸ்எஸ்எல்சி, சைவ உணவுப் பழக்கமுடையவர். தன்னை விற்றுக்கொள்ள விரும்புகிறார். தேவைப்படுவோர் அணுக வேண்டிய முகவரி: 89/3 வடவராயன் தெரு முதல் சந்து, கில் நகர், சென்னை. பி.பி.9844335941.

இந்த விளம்பரம் நிஜமானதுதானா, இல்லை யாரோ கேலி செய்தவற்காக விளம்பரம் தந்திருக்கிறார்களா என்று குழப்பமாக விருந்தது. விளம்பரத்தில் குறிப்பிடப்பட்ட தொலைபேசி எண்ணிற்குத் தொடர்பு கொண்டபோது தில்லை என்பவர் பேசினார். தனக்கு நாவுக்கரசைப் பத்து வருசமாகத் தெரியும் என்றும், காலையில் இருந்து இதுவரை மூன்று பேர் வந்து பார்த்துப் போய்விட்டார்கள் என்றும் வருவதாக இருந்தால் உடனே வந்து பார்க்கவும் என்றும் சொன்னார்.

வடவராயன் தெருவிற்கு நான் சென்றபோது மிகக் குறுகிய சந்தாக விருந்தது. எருமைமாடுகளை வீதியிலே கட்டியிருந்தார்கள். சாலையின் நடுவில் ஒரு எல்லையம்மன் கோவிலிருந்தது. இன்னமும் அடுக்குமாடிக் குடியிருப்புகள் வராத வீதியாகவிருந்தது. கம்பளிப் பூச்சிகள் உதிர்ந்து கொண்டிருந்த முருங்கை மரத்தை ஒட்டிய வீடு ஒன்றின் ஆஸ்பெஸ் டாஸ் இடப்பட்ட மாடியறையில் நாவுக்கரசு குடியிருந்தான்.

மாடியேறிப் போகையில் என்னைக் கடந்து அரக்கு நிற சபாரி அணிந்த ஐம்பது வயது ஆளும் சுடிதார் அணிந்த அவரது மகளும் தள்ளிக்கொண்டு மேலே ஏறிப் போனார்கள்.

நாவுக்கரசு கையைக் கட்டிக்கொண்டு தலைகவிழ்ந்து நின்றுகொண் டிருந்தான். மெலிந்த உடல். அகலமான பாதங்கள். வெளிரிய நீலத்தில் சட்டையணிந்திருந்தான். காலையில்தான் சவரம் செய்திருக் கக்கூடும் போலிருந்த முகம்.

அறையின் மூலையில் ஒரு பாய் சுருட்டி வைக்கப்பட்டி ருந்தது. நியூஸ் பேப்பரின் மீது கரிப்பிடித்த மண்ணெண்ணெய் ஸ்டவ் ஒன்றும் அலுமினியப் பாத்திரம் ஒன்றுமிருந்தது. சிவப்புநிற பிளாஸ்டிக் வாளியும், நெளிந்துபோன அலுமினியக் குவளை ஒன்றும் கவிழ்ந்து கிடந்தன.

அறையின் கொடியில் அழுக்கேறிய உள்ளாடையொன்று மொட மொடத்தபடியே காய்ந்துகொண்டிருந்தது. ஜன்னலில் படிந்திருந்த தூசி பல வருசமாக சுத்தம் செய்யப்படாத தாகவிருக்க வேண்டும். அறைக்கதவில்கூடக் கம்பளிப் பூச்சிகள் ஊர்ந்துகொண்டிருந்தன.

தில்லை பரபரப்பாக செல்போனில் தெலுங்கில் பேசிய படியே நாவுக்கரசின் வீடு உள்ள முகவரியை விளக்கிச் சொல்லிக்கொண்டிருந் தான். சபாரி அணிந்த மனிதரும் அவரது மகளும் நாவுக்கரசை உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தார்கள். சபாரி அணிந்தவர் அவன் வயது முப்பத்திரண்டுதான் என்பதற்கு ஏதாவது சான்று இருக்கின்றதா, பார்த்தால் நாற்பதுபோலத் தெரிகிறதே என்று கேட்டார்.

தில்லை தன் கைப்பையைத் திறந்து அதிலிருந்து நாவுக் கரசின் பள்ளியிறுதிச் சான்றிதழின் நகலை எடுத்துக் காட்டி னார். பிறகு அப்பாவும் மகளும் ரகசியமாக ஏதோ பேசிக்கொண்டார்கள். சபாரி அணிந்தவர் தில்லையைத் தனியே அழைத்துக்கொண்டு போய்

ஏதோ பேசிக்கொண்டிருந்தார்.

நாவுக்கரசு தரையில் அங்குமிங்கும் ஊர்ந்து சென்று கொண்டிருக்கும் கம்பளிப் பூச்சிகளைப் பார்த்தபடியே இருந்தான். அவன் கண்கள் வேறு எங்கும் திரும்பவேயில்லை.

தில்லை சப்தமாக லீகல் பிராப்ளம் எதுவும் கிடையாது. சிங்கிள் ஓனர். நீங்கள் ஏன் அதைப் பற்றி யோசிக்கிறீர்கள். தன்னை விற்றுக் கொள்வதற்கு எதற்கு யாரையும் கேட்க வேண்டும். ஒரு பிரச்சினையும் வராது என்று உறுதியாகச் சொல்லிக்கொண்டிருந்தான். அதற்குள் அந்தப் பெண் தனது செல்போனில் நாவுக்கரசைப் படம்பிடித்து, தன் அம்மாவிற்கு அனுப்பிவைத்தாள்.

நாவுக்கரசின் முன்னால் ஊர்ந்துகொண்டிருந்த கம்பளிப் பூச்சிகளில் ஒன்று மற்றதன் மீது உரசிக்கொண்டு புரண்டது. பிறகு ஒரு கம்பளிப் பூச்சி தன் உடலை இழுத்து இழுத்து முன்னால் போய்க்கொண்டிருந்தது. நடுங்கும் கைகளை இறுக்கமாகக் கட்டிக்கொண்டபடியே அவன் கம்பளிப் பூச்சிகளின் மீதே கவனம் கொண்டிருந்தான்.

தில்லை, விலையைக் குறைக்க முடியாது என்றும் ஏற்கனவே காலையில் அண்ணா நகர் பி பிளாக்கிலிருந்து ஒருவர் வந்து வாங்கிக் கொள்வதாகச் சொல்லியிருப்பதாகவும் அவர் சொன்ன விலையைவிட அதிகமாக இருந்தால் மட்டுமே முடிக்கலாம் என்றும் சொன்னான்.

வேலைக்காரர்களை வைத்தால் மாதச்சம்பளம், லீவு என்று ஆயிரம் பிரச்சினை ஏற்படுகிறது. அதனால்தான் இப்படி ஒரு ஆளை விலைக்கு வாங்கிவிடலாம் என்று நினைத்தாகவும் தொகை படிந்துவிட்டால் தான் முழுவதும் ரொக்கமாகத் தந்து முடித்துக்கொள்வதாகவும் சபாரி அணிந்தவர் சொன்னார். தில்லை அவரது முகவரியைத் தன்னிடமிருந்த நோட்டில் எழுதச் சொல்லி மாலையில் தானே அழைப்பதாகச் சொன்னான்.

வீட்டுவேலைகள், தோட்ட வேலைகள், டெலிபோன் பில் கட்டுவது, மின்சாரக் கட்டணம் செலுத்துவது, நாயைக் கவனித்துக்கொள்வது இப்படி ஆயிரம் வேலையிருக்கிறது. பேரம் பேச வேண்டாம் என்ன விலையாக இருந்தாலும் வாங்கிவிடுங்கள் என்று மகள் திரும்பவும் சொன்னாள்.

சபாரி அணிந்தவர், நாம விட்டுப்பிடிச்சாதான் விலை குறையும் என்று ரகசியமான குரலில் சொன்னபடியே ஆளை விலைக்கு வாங்கிட்டுப் போய் நம்ம வீட்டுல வச்சிப் பழக்கினா, சரியா வந்துரும் என்று சொன்னார். தில்லை, மாலையில் மட்டுமே தன்னால் முடிவு செய்ய முடியும் என்றபடியே அவரை அனுப்பி வைத்தான்.

நாவுக்கரசின் முன்னால் ஊர்ந்து கொண்டிருந்த கம்பளிப் பூச்சி எச்சில் போல எதையோ உமிழ்ந்தது. பிறகு அதைத் தானே முகர்ந்த படியே தலையை அசைத்துக்கொண்டிருந்தது. கம்பளிப் பூச்சியின் ரோமங்கள் சிலிர்த்துக்கொண்டிருந்தன.

அதற்குள் வாசலில் ஒரு பைக் வந்து நின்றது. அதிலிருந்து ஹெல்மெட்டுடன் ஒரு இளைஞன் மேலேறி வந்தான். அவன் நாவுக்கரசின் முன்னால் வந்து நின்றபடியே தலையை உயர்த்திப் பார்த்தான். கைகால்களை ஆட்டிப் பார்த்தான். குனிந்து நிமிரச் சொன்னான். பிறகு அவர் ஒரு நாளைக்கு என்ன சாப்பிடுவார். எவ்வளவு தண்ணீர் குடிப்பார் என்று கேட்டுக் குறித்துக்கொண்டான்.

தனது விசிட்டிங்கார்டைத் தந்து இவரைப் போல நூறு பேர் தங்கள் கம்பெனிக்கு விலைக்குத் தேவை என்றும், ஒரு ஆளைத் தனியே வாங்கி என்ன செய்வது என்று உயரதிகாரியிடம் கேட்டு வருவதாகச் சொல்லியபடியே அவன் கிளம்பிச் சென்றான்.

மாடியை விட்டு அந்த இளைஞன் கீழே இறங்கிய பிறகு தில்லை அவனை மிகக் கேவலமான வசையொன்றில் திட்டியபடியே என்னிடம் வந்து என்ன விலைக்கு வாங்கிக் கொள்ள முடியும் என்று கேட்டான்.

நான் அதற்காக வரவில்லை. பத்திரிகையில் வேலை செய்வதால் அந்தச் செய்தி நிஜமா என்று பார்த்துப் போக வந்திருப்பதாகத் தயங்கித் தயங்கிச் சொன்னேன். தில்லை என் காதருகே வந்து இது மாதிரி நானே நாலைந்து பேர் விற்பதற்கு உதவி செய்திருக்கிறேன். நாவுக்கரசு ரொம்ப நாளா சொல்லிக்கிட்டே இருந்துச்சி. நான் தான் விளம்பரம் குடுத்து நல்ல விலையா பேசி முடிச்சிவிடலாம்னு ஏற்பாடு பண்ணிக் கிட்டு இருக்கேன் என்றான்.

எதற்காக நாவுக்கரசு தன்னை விற்றுக்கொள்கிறான் என்று கேட்டதும் தில்லையின் முகம் மாறியது. சற்றே எரிச்சலான குரலில் அதைத் தெரிஞ்சி என்ன செய்யப் போறே. அவன் கஷ்டம் அவனுக்கு. உனக்கு இன்னா வேணுமோ அதை அவன்கிட்டயே கேட்டு எழுதிக்கோ என்று முறைத்தபடியே திரும்பிக்கொண்டான்.

அதற்குள் தில்லைக்கு இன்னொரு போன் வந்தது. அவன் சிரிப்போடு நீ வா சார். நான் முடிச்சிவிடுறேன் என்று சப்தமாகப் பேசிக்கொண்டிருந்தான்.

நாவுக்கரசின் அருகே நான் குனிந்து பார்த்தவுடன் ஒரு இயந்திரம் போலக் கையை வலது இடதாக ஆட்டிக் காட்டினான். பல்லைத் திறந்து காட்டினான். தலையை அங்குமிங்கும் அசைத்தான். இரண்டு அடி தாவிக் குதித் தான். இரண்டு நிமிசங்களுக்குப் பிறகு எதுவும் நடக்காததுபோல அமைதியாகிவிட்டான். அவனது செய்கை எனக்கு ஆத்திரமாக வந்தது.

எதற்காக இப்படியிருக்கிறாய். உனக்கு என்ன பிரச்சினை என்று கேட்டேன். அவன் அந்தக் கேள்விகளை எதிர்கொண் டது போலவே தெரியவில்லை. சுவரில் ஏற முயன்று கீழே விழுந்துகொண்டிருந்த கம்பளிப் பூச்சியின் மீதே அவன் கவனமிருந்தது.

அதற்குள் நாவுக்கரசை விலைக்கு வாங்குவதற்காக ஆட்டோவிலி ருந்தும் கால்டாக்சியிலிருந்தும் நாலைந்து பேர் வந்து நிரம்பியிருந்தார்

கள். அதில் ஒரு ஆள் தில்லையிடம், நாவுக்கரசு ஏதாவது வங்கிகளில் கடன் வாங்கியிருக்கிறானா? அல்லது தனிநபர் அடமானம் ஏதாவது இருக் கிறதா என்று தனக்குத் தெரிய வேண்டும் என்றும் வில்லங்கம் சரிபார்க்காமல் எதையும் வாங்குவதில்லை என்றும் சொன்னார்.

அப்படி எந்தக் கடனுமில்லை. வங்கிக் கணக்கே நாவுக்கரசிற்குக் கிடையாது. டீக்கடைகளில் வாங்கிய கடனும்கூட ஐம்பது ரூபாய்க்குக் குறைவாகத்தானிருக்கும் என்று தில்லை சொன்னான்.

இன்னொரு ஆள் அவன் உடல் உறுப்புகளில் எதையாவது விற்றிருந் தால் என்ன செய்வது. அதை மருத்துவப் பரிசோதனை செய்து சரி பார்க்காமல் தன்னால் வாங்க முடியாது. ஆகவே அரசு பதிவு பெற்ற மருத்துவரிடம் சான்றிதழ் வாங்கி வைத்திருந்தால் மட்டுமே தன்னால் அவனை வாங்கிக்கொள்ள முடியும் என்றார்.

கூட்டத்திலிருந்த பருமனான பெண்மணி அந்தக் காலத்தில் எங்கள் தாத்தா வீட்டில் ஒரு குடும்பத்தையே பதினைந்து ரூபாய் குடுத்து விலைக்கு வாங்கி வைத்திருந்தோம். அவர்கள் வீட்டுவேலை சமையல் வேலை எல்லாம் பார்த்துக்கொண்டு, விவசாயப் பணியும் செய்தார்கள். இப்போது ஒரு ஆளை வாங்குவதற்கு எவ்வளவு பணம் தர வேண்டியிருக்கிறது. பணத்தின் மதிப்பு இப்போது யாருக்கும் புரிவதேயில்லை என்று அலுத்துக்கொண்டாள்.

ஒவ்வொரு முறையும் சாவி கொடுக்கப்பட்ட பொம்மையைப்போல அவன் தன் உடலை அசைத்துக் காட்டுவதும் ஒடுங்குவதுமாக இருந் தான். எவரது கேள்விக்கும் அவன் ஒரு வார்த்தை பதில் பேசவில்லை.

அவனுக்கு ஏதாவது தீராத நோய் இருக்கிறதா? எவ்வளவு இட்லி சாப்பிடுவான். எவ்வளவு நேரம் உறங்குவான். குடிப்பழக்க மிருக்கிறதா? சிகரெட் புகைக்கக்கூடியவனா? அம்மை தடுப்பு ஊசி போட்டிருக்கிறானா? வாக்காளர் அடையாள அட்டை வைத்திருக் கிறானா? ஏதாவது கட்சியில் உறுப்பினரா? என்று அடுக் கடுக்காக சந்தேகங்களும் கேள்விகளும் அவனை உலுக்கிக்கொண்டே யிருந்தன. நாவுக்கரசிடம் சலனமேயில்லை.

விளக்குமாற்றுக் குச்சி ஒன்றில் இரண்டு கம்பளிப் பூச்சிகள் ஒன்றன் பின் ஒன்றாக நடந்துகொண்டிருந்தன. காகம் ஒன்று முருங்கை மரத்திலிருந்து கத்திக்கொண்டிருந்தது. அணில் ஒன்று ஆஸ்பெஸ்டா ஸில் குதித்து ஓடும் சப்தம் கேட்டது. ஒரு நிமிசம் நாவுக்கரசின் முகம் மாறியது. அவன் கண்கள் அணிலைப் பார்க்க விரும்பியது போலத் திரும்பின. அதற்குள் அணில் மரத்திலேறித் தாவிப் போய் விட்டிருந்தது.

அரசு ஊழியர்கள், வணிகம் செய்பவர்கள், நடுத்தர வர்க்க மனிதர் கள் என்று சகலரும் ஒரு மனிதனை விலைக்கு வாங்கும் ஆசை யிருக்கிறது என்பதைக் கண்கூடாகக் காண முடிந்தது. வந்தவர்களில் எவரும் அவனது கடந்த காலத்தையோ, சொந்த வாழ்வின் துயரையோ

கேட்டுக்கொள்ளவேயில்லை. சிரிப்பும் சந்தேகமும் கேலியும் உரிமையாக்கிக்கொள்ள வேண்டும் என்ற வெறியுமே நிரம்பி வழிந்தன.

மதியம் மூன்று மணியளவில் தில்லை அருகாமையி லிருந்த டீக்கடையிலிருந்து நாவுக்கரசுக்கு ஒரு தேநீரும் இரண்டு பிஸ்கட்டும் வாங்கிக்கொண்டு வந்து தந்தான்.

அந்த பிஸ்கட்டுகளை டீயில் போட்டு ஊற வைத்த நாவுக்கரசு அதை அப்படியே ஒரு பழச்சாற்றைப் பருகுவது போல மெதுவாகப் பருகத் துவங்கினான்.

தில்லை என்னிடம் இதுதான் இவனோட மதியச் சாப்பாடு. ஆறு வருசமா இவ்வளவுதான் சாப்பிடுவான். தூங்குறதுகூட உட்கார்ந்து காலைக் குத்துக்கால் வச்சிக்கிட்டுத்தான் தூங்குவான். காலை நீட்டிப் படுக்கக்கூடக் கூச்சம் என்று சொல்லியபடியே கீழே இறங்கிச் சென்றான்.

நானும் நாவுக்கரசும் மட்டுமே இருந்தோம். அவன் இதற்கு முன்பாக என்ன வேலை செய்து கொண்டிருந்தான் என்று கேட்டேன். அவன் பதில் சொல்லவேயில்லை. பதிலாக, கதவில் ஏற முயன்று கீழே விழுந்த கம்பளிப் பூச்சியைக் கையில் எடுத்து கதவின்மீது விட்டான். அது மேலே போக முயற்சிப்பதும் கீழே விழுவதுமாகவே இருந்தது. அன்று ஒரு நாள் முழுவதும் அங்கேயே இருந்த போதும் ஒரு வார்த்தைகூட அவன் என்னோடு பேசவே யில்லை.

இரவில் வீடு திரும்பிய போது யாரோ ஒருவன் தன்னை விற்றுக் கொள்வது எனக்கு ஏன் ஆத்திரமாக இருக்கிறது என்று என்மீதே கோபமாக வந்தது. தொலைக்காட்சியில் அமிழ்ந்தபடியே அதை மறக்க முயற்சித்தேன். ஆனால் மொழியற்ற அவன் பார்வைகள், உறைந்துபோன கண்கள், வீடெங்கும் ஊர்ந்து திரியும் கம்பளிப் பூச்சிகள் என் உறக்கத்தைக் கெடுத்தன.

அடுத்த நாளும் அவனைக் காண்பதற்காகச் சென்றேன். அன்றைக் குப் பன்னிரண்டு பேர் வந்திருந்தார்கள். வேலைக்குச் செல்லும் பெண்ணொருத்தி அவனுக்கு ஆங்கிலம் தெரியாமலிருப்பதால் அவனை வாங்கி பிரயோசனமில்லை என்று கோவித்துக்கொண்டு வெளியேறிப் போனாள். அன்றைய மாலை வரை தில்லை யார் யாரையோ அழைத்து வந்து காட்டியபடியே இருந்தான்.

அன்றுவரை நூற்றி நாற்பத்தாறு பேர் நாவுக்கரசை விலைக்கு வாங்கிக்கொள்வதற்காக முகவரியைப் பதிவு செய்து போயிருந்தார்கள். தில்லை அந்த முகவரிகளிலிருந்து சிலரைத் தனியே எடுத்து வேறு பக்கத்தில் எழுதிக்கொண்ட படியே இன்னும் ஒரு நாள் பார்க்கலாம் இல்லாவிட்டால் அண்ணா நகர் ஆளுக்கே முடித்துவிடலாம். ரொக்கமா தர்றேன்கிறான். நீயும் பிரச்சினையில்லாம இருக்கலாம் என்றான்.

நாவுக்கரசு தலையாட்டிக்கொண்டான். தில்லை என்னிடம்

ஐம்பது ரூபாய் வாங்கிக்கொண்டு போட்டோ எடுக்கிறதா இருந்தா இன்னும் நூறு ரூபாய் தனியாகத் தர வேண்டும் என்றான். ஆத்திரமாக வந்தது. முறைத்தபடியே நின்றுகொண்டிருந்தேன்.

தில்லை தெருவிலிருந்த டீக்கடைக்காரனிடம் நாவுக்கரசு தன்னை விற்றுக்கொள்ளப் போவதைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தான். அந்த ஆளும் நல்ல யோசனைதான் எத்தனை நாளைக்குத்தான் இப்படி லோல்படுறது என்று சொன்னான். அவர்கள் பேசிக்கொண்டே நடந்து போனார்கள்.

சொல்லித் தீர்க்கமுடியாத மனவேதனையும் கஷ்டமும் நாவுக்கரசின் உடலில் புதையுண்டு இருப்பதை என்னால் உணர முடிந்தது. அவன் கைகளைப் பற்றிக்கொண்டபடியே நாளை உன்னைப் பற்றி விரிவாகச் செய்தி வெளியிடுகிறேன். எதற்காக இப்படி நடந்து கொள்கிறாய் என்ற உண்மையைச் சொல் என்று கேட்டேன்.

நாவுக்கரசு பதில் பேசாமல் தேங்காய்ச் சிரட்டை ஒன்றில் அங்கே ஊர்ந்துகொண்டிருந்த கம்பளிப்பூச்சிகளை ஒவ்வொன்றாகப் பிடித்துப் போடத் துவங்கினான். நான் கோபமாகி போலீசில் புகார் கொடுத்தால் உன் மீது நடவடிக்கை எடுப்பார்கள் தெரியுமா என்று கத்தினேன். அவன் ஒரு கம்பளிப்பூச்சியில்லாமல் பிடித்து சிரட்டையில் நெளிய விட்டான்.

அவனுக்கு எப்படிப் புரிய வைப்பது என்று தெரியாமல் ஏதேதோ பேசினேன். நீண்ட நேரத்தின் பிறகு நாவுக்கரசின் முகம் கொஞ்சம் கொஞ்சமாக மாறத் துவங்கியது. அவன் ஆத்திரமான குரலில் உன் வேலையைப் பாத்துக்கிட்டுப் போடா மசிரு. என்று சொல்லியபடியே சிரட்டையிலிருந்த கம்பளிப்பூச்சிகளை ஒவ்வொன் றாகப் பிடித்து வாயில் போட்டு மென்று தின்னத் துவங்கினான். எனக்கு வயிற்றைப் புரட்டியது.

அவன் வேகவேகமாகக் கம்பளிப்பூச்சிகளைத் தின்றபடியே பன்னி ரண்டு வயசில வீட்டைவிட்டு ஓடிவந்தேன். நாயா அலைந்து அடி பட்டதுதான் மிச்சம். கக்கூஸ் கழுவுறதுல இருந்து கரமைதுனம் பண்ற வரைக்கும் எல்லா வேலையும் செஞ்சி பாத்தாச்சி. மலத்தை மிதிச்ச மாதிரித்தான் என்னைப் பாக்குறாங்க. கூடப் பொறந்தவங்க, பழகினவங்க எல்லாரையும் நக்கி நக்கித்தான் வாழ வேண்டியிருக்கு. அதுக்கு இப்படி எவன் வீட்லயாவது நாய் மாதிரி வாழ்ந்துட்டுப் போயிடுறதில என்னடா தப்பிருக்கு. பேச வந்துட்டான் நாதேறி பிழைக்கிற வழியைப் பாருடா. போ... என்றபடியே அவன் மீதமிருந்த கம்பளிப்பூச்சிகளைத் தின்னத் துவங்கினான்.

ஒரு நிமிசத்தில் மொத்த நகரமும் சேர்ந்து என்னைக் கவ்விக் கொண்டது போல நடுக்கமும் பயமும் உருவாகத் துவங்கியது. அறைக்குத் திரும்பிய பிறகும் நாவுக்கரசின் முகம் நினைவில் வந்து கொண்டேயிருந்தது. நாவுக்கரசைப் பற்றிய செய்தியை எழுதுவது என்று முடிவு செய்து கணிப் பொறியில் அடிக்கத் துவங்கினேன்.

இதுவும் ஒரு சுவாரஸ்யமான செய்தி என்பதற்கு மேலாக என்ன விளைவைத் தந்துவிட முடியும் என்று குழப்பமாக இருந்தது. எழுது வதை நிறுத்தி வைத்துவிட்டு இரவில் மீண்டும் ஒருமுறை நாவுக்கரசைப் போய்ப் பார்க்கலாம் போலிருந்தது.

பைக்கை எடுத்துக்கொண்டு அவன் அறைக்குப் போனேன். வாசற்கதவு திறந்து கிடந்தது. விடிவிளக்கு ஒன்று மட்டும் எரிந்து கொண்டிருந்தது. தென்பக்க மூலையின் இருளில் குத்துக்காலிட்ட படியே நாவுக்கரசு உட்கார்ந்திருந்தான். அவன் யாரோடோ பேசுவது போலவே இருந்தது. வாசலில் நின்றபடியே அதைக் கேட்கத் துவங்கினேன்.

அவன் தனக்குத்தானே பேசிக்கொண்டிருந்தான். தனது இயலா மையை அவமானத்தை கோபத்தை வெறுப்பைத் தனக்குத் தானே அவன் பரிமாறிக்கொண்டிருந்தான். அவனது குரல் உடைந்து போய் அழுகையேறியிருந்தது. தன்னை மீறிச் சில நிமிஷங்களில் அவன் உடைந்து அழுதான். வெளியே கேட்காத விசும்பல் அது.

தனக்கு நெருக்கமானவர்களின் பெயர்கள் ஒவ்வொன்றாகச் சொல்லிச் சொல்லி அவன் புலம்பி அழுதுகொண்டிருந்தான். இரவு மட்டுமே அவனைப் பார்த்துக்கொண்டிருந்தது. அறை ஒரு சவப் பெட்டியைப் போல அவனை விழுங்கியிருந்தது. அவன் மனதின் அந்தரங்கமான வலி வடிந்து அறையெங்கும் ஓடிக்கொண்டிருந்தது. என்னால் அந்த இடத்தில் நிற்க முடியவில்லை. கால்கள் நடுங்கத் துவங்கின.

அன்றிரவே மாநகரிலிருந்து வெளியேறிவிட முயன்று ரயில் ஏறினேன். இவ்வளவு தூரம் பயணம் செய்து வந்த பிறகும் நடுக்கமாகவே இருக்கிறது. நாவுக்கரசை யார் வாங்கிப் போயிருப்பார்கள். அவனைப் போல வேறு யாராவது இந்த வாரம் விளம்பரம் தந்திருப்பார்களா? யாரோ ஒருவனின் வாழ்வு ஏன் இப்படியிருக்கிறது?

யோசிக்க யோசிக்க என்னைச் சுற்றிய தாமரைக் குளம், மரங்கள், ஆகாசம், மனிதர்கள், அவர்களது இடைவிடாத இயக்கம் என யாவற்றின் மீதும் கோபமும் எரிச்சலும் கவிழ்கின்றதேயன்றி என்ன செய்வது என்று தெரியவே யில்லை.

குளக்கரையிலிருந்த தவளை ஒன்று தன் பருத்த கண்களால் என்னை வெறித்துப் பார்த்தபடியே சப்தமில்லாமல் நின்று கொண்டி ருந்தது. அதன் பார்வையில் பரிகாசம் கசிந்துகொண்டிருந்தது. பரிகசிக்கப்பட வேண்டியவன் நான் என்பதைப் போல தலைகுனிந்து நின்றுகொண்டிருந்தேன். என்னால் முடிந்தது அவ்வளவுதானே.

# பதினெட்டாம் நூற்றாண்டின் மழை

இடுக்கி மாவட்டத்தில் உள்ள தெக்குமலையின் அடர்ந்த கானகத்தி னுள் சூரியனின் வெளிச்சம்கூடத் தரையிறங்காத மலைப்புடவுகளில் வாழ்ந்து வந்த முதுவன், மலை ஆயன், ஊராளி, மன்னா, மலையன் போன்ற பழங்குடியினர்களுக்கு ரட்சிப்பு தருவதற்காக மலபார் மிஷனால் அனுப்பப்பட்ட போதகரும் போர்த்துக்கீசிய படகோட்டிக் குடும்பம் ஒன்றில் பிறந்தவருமான சான் ரபேல் டி வலேசா நெல்லிக்கா விற்கு வந்து சேர்ந்தபோது காட்டில் மழை பெய்யத் துவங்கி யிருந்தது.

பல்லக்கைத் தூக்கி வந்த நால்வர் நனைந்தபடியே மழையினுள் நடந்துகொண்டிருந்தனர். வலேசாவுக்கு வழி காட்டுவதற்காக மஞ்சேரி யிலிருந்து இரண்டு நாயர்கள் உடன் வந்திருந்தார்கள். அவர்கள் மட்டுமின்றி மூலிகை பறிப்பதற்காக எப்போதும் நெடுங்காட்டிற்கு வந்து போகும் சகாயதாரியும் அவனது ஊமை வேலைக்காரனும்கூட அவர்களுடன் வந்திருந்தார்கள்.

வழியெங்கும் மழை பெய்து நீரோட்டமாக இருந்தது. அத்தோடு காற்றின் விசையின் காரணமாக மழை சிதறிப் பெய்தபடியே இருந் தது. நாயர்களில் ஒருவன் தன் பல்லக்கை விட்டு இறங்கி வந்து ரபேலிடம் மழை விட்ட பிறகு செல்வதே உசிதம் என்றான். ஆனால் ரபேல் வலேசாவிற்கு அதில் இஷ்டமில்லை.

ஆறு நாட்களுக்கும் மேலாக ஆங்காங்கே தங்கித் தங்கி தானே வருகிறோம் மழை பெய்தால் என்ன? களிமண்தான் மழையில் கரைந்து போய்விடும், மனிதர்கள் கரைந்து போவதில்லை. உனக்கு பயமாக இருந்தால் இப்படியே வீடு திரும்பிவிடு என்று கத்தினான்.

மழையில் நனைந்தபடியே நாயர் தன் பல்லக்கில் ஓடி ஏறினான். பல்லக்குத் தூக்கிகள் கண்ணை மறைக்கும் மழையின் ஊடாக மெதுவாக நடந்துகொண்டிருந்தார்கள். அவர்களின் பின்பாக மட்டக் குதிரைகளைப் பிடித்தபடியே நடந்து வரும் இரண்டு ஊழியக்காரர்கள்

மழையைப் பற்றி எவ்வித முணுமுணுப்புமின்றி நடந்து வந்துகொண்டிருந்தார்கள். காற்றின் விசையால் மரங்கள் முறிந்து கிடந்தன. எங்கும் மழையின் ஆவேசம் பீறிட்டுக்கொண்டிருந்தது. காற்றில் அலைபடும் பல்லக்கைத் தாங்கிப் பிடித்தபடியே ஆட்கள் நடந்து போய்க்கொண்டிருந்தார்கள். மழையின் கதியைத் தாளமுடியாமல் சிறு செடிகள் வளைந்து கிடந்தன. வானம் தெரியாமல் மழை கொட்டிக்கொண்டிருந்தது. காட்டு விருட்சங்கள் ஒன்றோடு ஒன்று முறிந்தும் சரிந்தும் கிடப்பதுபோலத் தெரிந்தது.

ரபேல் டி வலேசா இதற்கு முன்பாக பர்மாவில் உள்ள பதூங், ஹரன் பழங்குடியினர்களுக்கான தேவஊழியம் செய்துகொண்டிருந்தான். மலைமுகடுகளில் ஆறு தேவாலயங்களை உருவாக்கிய பெருமை அவனுக்கிருந்தது. பர்மீய ஆதிவாசிகள் முரட்டுப் பிடிவாதம் கொண்டவர்கள். அவர்களை மீட்பன் வழிக்குக் கொண்டுவருவதற்காக அவன் தனது எல்லா உபாயங்களையும் முன்னெடுக்க வேண்டியதாகியது.

அதிலும் பௌத்த நம்பிக்கை கொண்டிருந்த மலைவாசி களைப் பிடித்து அவர்கள் உடலில் சூட்டுக்கோலால் அடையாளமிட்டு பயமுறுத்திய பிறகே ஆதிக்குடிகள் தங்களை ரட்சிப்பிற்கு ஒப்புக் கொடுத்தனர். இதனால் அவனை சூட்டுக்கோல் போதகர் என்று மலைவாசிகள் நினைவுகொண்டிருந்தனர். அவனது சிறப்பான ஊழியத்தைக் கண்ட திருச்சபை வெள்ளியால் ஆன சிலுவையைப் பரிசாகத் தந்து கௌரவப்படுத்தி இந்தியாவிற்கு அனுப்பி வைத்தது.

ரபேல் வலேசா இருபது வயதிலிருந்து ரட்சிப்பிற்கான ஊழியம் செய்ய அலைந்து திரிந்து பழக்கமிருந்ததால் அவன் காட்டில் பெய்யும் மழையைப் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை. பாதைகள் சீரற்று இருந்த காரணத்தால் பல்லக்கு மெதுவாகப் போய்க்கொண்டிருந்தது.

பர்மாவில் வலேசா ஊழியம் செய்துகொண்டிருந்தபோது அவன் மீது ஏழு குற்றச்சாட்டுகள் பதிவாகின. ஆனால் எதையும் மிஷனரியைச் சேர்ந்தவர்களால் நிரூபணம் செய்ய முடிந்ததில்லை. ரபேல் வலேசா பர்மீய பதூங் பெண்களில் ஒருத்தியை தன்னோடு சேர்ந்து வைத்துக் கொண்டிருந்தான். தொடர்ந்து குடித்தும் வேட்டையாடியும் முரட்டுத் தனமான நடவடிக்கைகள் செய்துவந்ததைப் பற்றியும், யாவையும்விட தனக்கென அவன் ஏராளமான விலைமதிப்பற்ற வெள்ளி மற்றும் யானைத் தந்தங்களையும் வாசனைப் பொருட்களை அபகரித்துக் கொண்டுவிட்டதையும் சபைக்கு மற்ற ஊழியர்கள் தெரியப்படுத்திய போது ரபேல் வலேசா அது அப்பட்டமான பொய் என்றதோடு தனது பணியைப் பற்றித் தெரிந்துகொள்ளவேண்டுமானால் மலைவாசிகளுடன் சில காலம் தங்கி ஊழியம் செய்து பார்க்கும்படியாக எழுத்து மூலம் பதில் தந்தான்.

சபை அவனது நடவடிக்கைகளின்மீது அதிருப்தி கொண்டிருந்த போதும் கடுமையான நடவடிக்கை எதையும் எடுக்க முயற்சிக்கவில்லை. இதன் காரணமாக இந்தியாவிற்கு அனுப்பப்பட்டான் என்றும்

மறைமுகமாக சபை ஊழியர்கள் பேசிக்கொண்டார்கள். ஆனால் ரபேலுக்குத் தன்பின்னே பேசப்படும் கேலிகள் பொறாமையால் உருவாவது என்று தெரிந்திருந்தது.

ரபேல் வலேசாவிற்குக் குடிப்பதில் மிகுந்த ஈடுபாடு இருந்தது. அவன் பல்வேறுபட்ட உள்ளூர் மதுவைக் குடித்துப் பழகியிருந்தான். அதிலும் பதூங் மலைவாசிகள் மரப்பட்டை ஒன்றிலிருந்து காய்ச்சி வடிக்கும் மதுவிற்கு நிகராக வேறு எதுவுமில்லை என்று ருசித்திருந்த காரணத்தால் ரபேல் வலேசாவிற்காகவே தனியாக பதூங் மலையர்கள் மரச்சாராயம் காய்ச்சித் தந்தார்கள். அதுபோலவே பர்மீய பதூங் பெண்கள் காளான்களைப் போல குள்ளமாகவும் மிருதுவானவர்களாக வும் இருந்தது அவனுக்கு மிகவும் பிடித்திருந்தது.

தன் மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டுகள் யாவும் தன் பணியில் ஏற்பட்ட சாதனைகள் என்று உள்ளூரப் பெருமை கொண்டிருந்தான். அந்தவகையில் அவன் தனது தவறுகளை எப்போதுமே ரசிக்கின்றவ னாக இருந்தான்.

மலபார் மிஷன் வலேசாவை தெக்குமலைக்கு ஊழியத் திற்கு அனுப்பும்போது அது ராம வர்மா மகாராஜாவின் கட்டுப்பாட்டில் உள்ள பிரதேசம் என்பதால் அவனது நடவடிக்கைகளுக்கு திருச்சபை பதில் சொல்ல வேண்டும் என்ற எச்சரிக்கையோடுதான் அனுப்பி வைத்தார்கள். கேலியான குரலில் வலேசா ‘பிரசங்கத்தைத் தவிர வேறு எந்த ஆயுதத்தையும் மற்றவர்களின் மீது ஒருபோதும் பிரயோகிக்க மாட்டேன்’ என்று உறுதி தந்தபடியே ‘தன்னை அவர்கள் சந்தேகம் கொள்ளத் தேவையில்லை, தெக்கு மலையின் மீது புனிதருக்கு மாபெரும் தேவாலயம் ஒன்றைக் கட்டிக்காட்டுகிறேன் பாருங்கள்’ என்றபடியே அவன் பயணத்தைத் துவக்கினான்.

ஆறு நாள் பயணத்தின்போதும் வலேசா யார்க்ஷயரிலிருந்து கொண்டு வரப்பட்டுப் பாதுகாக்கப்பட்டிருந்த ராணுவத்தினருக்கான மதுவைக் குடித்துக்கொண்டே தானிருந்தான். இதற்காகவே அவனோடு பணியாள் பல்லக்கோடு கூடவே ஓடி வந்தான். அவர்கள் பின்னால் இன்னொரு பல்லக்கு நிறைய மதுப்புட்டிகளும், பழங்களும் கொண்டு வரப்பட்டிருந்தன. குடித்துக் குடித்து அவன் முகம் எப்போதுமே சிவந்து போயிருந்தது. அடர்ந்து ஒடுங்கிய தாடியும் சுருங்கிப் போன கண்களும் கொண்ட வலேசா சிறுத்தையைப் போல எதையும் உற்றுக் கவனிக்கிறவனாக இருந்தான்.

பயணம் துவங்கிய நான்காம் நாளில் அவர்கள் வேட்டுவன் பாறையில் இருந்த ஹென்றி பாக்கர் பங்களாவில் தங்கிக்கொண்டார் கள். பாக்கர் அந்த வனப்பகுதியில் அணை கட்டுவதற்காக மலைய னான மணிக்கோலன் என்பவனுடன் பல காலமாக சுற்றிக்கொண்டிருந் தான். அந்த வேலைகளுக்காக அவனாக அமைத்துக்கொண்ட மரவீட்டிற்கு ரபேல் வந்து சேர்ந்தபோது பருத்த கொசுக் களும் இடைவிடாத பூச்சிகளின் சப்தமும் கேட்டபடியே இருந்தது.

பாக்கர் பருத்த உருவத்தோடு எப்போதும் காக்கி நிற பேண்டும் தொப்பியும் அணிந்தவனாக இருந்தான். அட்டை கடித்து ஆங்காங்கே அவன் கால்கைகளில் வீங்கிப் போயிருந்தன. அவன் கண்களும் முகச்சாயலும் இத்தாலிய வம்சா வளியில் வந்தவனாக இருப்பானோ என்ற சந்தேகத்தை ஏற்படுத்தியது.

இரண்டு வருசங்களுக்கு மேலாக பாக்கர் அந்தப் பகுதியில் தங்கி யிருந்தான். அநேகமாக வெளியாட்களின் நடமாட்டமே அற்றுப்போன அந்த வனப்பகுதியில் எண்ணிக்கையற்ற காட்டாறுகளும் வனவிருட் சங்களும் காட்டுயிர்களுமிருந்தன. அதிலும் இரவில் வனம்கொள்ளும் தோற்றம் கற்பனை செய்து பார்க்கக்கூட முடியாததாக இருந்தது.

ரபேல் அன்றைய இரவு பிரார்த்தனை முடிந்த பிறகு தனியே அமர்ந்து ஒரு போத்தல் ரம்மை தனியாகக் குடித்தான். தன்னோடு மதுவைப் பகிர்ந்துகொள்ள வரும்படியாக ஹென்றிபாக்கரை நாலைந்து முறை அழைத்தபோதும் பாக்கர் வரவேயில்லை. போதையேறிய ரபேல் பாக்கரின் படுக்கையறைக்குள் சென்றபோது பெரிய வரை பலகையைக் கையில் வைத்தபடியே எதையோ வரைந்துகொண்டி ருந்தான் பாக்கர்.

ரபேல் அருகில் வந்ததைக்கூடப் பொருட்படுத்தாமல் அவன் தனது பென்சிலால் அந்தச் சித்திரத்தைத் தீட்டிக்கொண்டேயிருந்தான். அந்த அறையில் மலைவாசியொருவன் தரையில் உட்கார்ந்தபடியே கூழாங்கற்களால் அடுக்கி ஏதோ செய்துகொண்டிருந்தான். குடிவெறி ஏறிய வலேசா குனிந்து பார்த்தபோது இரண்டு மலைகளுக்கு நடுவில் தடுப்புச் சுவர்போல படமொன்று தீட்டப்பட்டிருந்தது.

பிறகு பாக்கர் அந்த மலைவாசியிடம் தனது ஓவியத்தைக் காட்டி இப்படியிருக்கலாமா என்று கேட்டான். மலைவாசி தான் கல்லை அடுக்கியதைச் சுட்டிக் காட்டி 'அந்த இரண்டு மலைகளில் ஒன்று குறவன் மலை. மற்றொன்று குறத்தி மலை, இரண்டும் நீண்ட நாட்களாக சேர்வதற்காகக் காத்துக்கிடக்கின்றன. அதன் இரண்டிற்கும் நடுவில் ஸ்தனம் போல அரைக்கோள வடிவத்தில் சுவர் எழுப்பினால் மட்டுமே அணை நிற்கும். இல்லாவிட்டால் உடைந்துவிடும்' என்று மலையன் சொன்னான்.

பாக்கர் சிரித்தபடியே வலேசாவிடம் 'இரண்டு மலைகள் ஒன்று சேர்வதற்காகப் பல காலம் காத்துக் கிடப்பதாக மலையன் சொல்வதை நீ நம்புகிறாயா' என்று கேட்டான். வலேசா அதைப் போன்ற பல கதைகளைத் தான் பர்மாவில் கேட்டிருப்பதாகச் சொல்லி இதுபோன்ற கட்டுக்கதைகளைத் தான் நம்புவதில்லை என்றான்.

மலையனோ தனக்கு மிக நெருக்கமான இருவரைப் பற்றிப் பேசுவதைப் போல அந்த மலைகளைப் பற்றிச் சொல்லிக்கொண்டே யிருந்தான். மலையாக இருப்பது குறவன்தான் என்றும் அவன் குறத்தியை அடைவதற்காக காத்துக்கிடக்கிறான் என்றும் உறுதியாகச் சொன்னான்.

வலேசா 'இப்படிப்பட்ட ஆட்களை வைத்துக்கொண்டு அணை கட்டினால் நீ மூழ்கிப் போய்விடுவாய்' என்றபடியே இங்கே அணை கட்டுவதால் யாருக்கு என்ன பிரயோசனம் ஏற்படப் போகிறது என்று கேட்டான். ஹென்றி பாக்கர் சிரித்தபடியே அது மகாராஜாவின் கவலை, என்னுடையது அல்ல. எனக்கிருக்கும் ஒரே சவால் தண்ணீரை ஓடு வழியில் எப்படித் தடுத்து நிறுத்துவது என்பதே என்றான். பிறகு அவன் தான் வரைந்த காகிதத்தைச் சுருட்டி வைத்துவிட்டு நாற்காலி யில் சாய்ந்து அமர்ந்துகொண்டபடியே கண்களை மூடிக்கொண்டான்.

முதுவர்களைப் பற்றி ஏதாவது அறிந்திருக்கிறானா என்று வலேசா மலைவாசியிடம் கேட்டபோது அவர்கள் மலைப்புடவுகளில் வாழ்ப வர்கள் என்றும், அவர்கள் அதிகம் யாருடனும் பேசமாட்டார்கள். தாங்கள் விளைவித்த மலைநெல்லைச் சாப்பிட்டு காட்டாற்றின் தண்ணீரைக் குடித்து வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள் என்றும் சொன்னான்.

வலேசா அவர்களிடம் விசித்திரமான பழக்கம் ஏதாவது இருக்கிறதா என்று கேட்டபோது ஹென்றி பாக்கர் நம்மிருவரைத் தவிர இந்தப் பிரதேசத்தில் வேறு விசித்திரம் எதுவுமேயில்லை என்று சொல்லிச் சிரித்தான்.

நாயர்கள் இரவில் உறக்கமில்லாது அங்குமிங்கும் அலைந்துகொண் டிருக்கும் சூட்டுக்கோல் போதகரைக் கண்டு பயந்துபோனவர்களாக தங்கள் அறையிலே அடைந்து கிடந்தார்கள். இருட்டை வெறித்துப் பார்த்த படியே வலேசா ஏதையோ பேசிக்கொண்டிருந்தான். போதை யின் உச்சத்தில் தான் பதுரங் வம்சாவளியினரின் மலை கிராமத்தில் இருப்பதுபோலவே அவனுக்குத் தோன்றியது. அவன் பர்மீய பாஷை யில் ஏதோ சொல்லிக் கத்தினான். யாரும் பதில் சொல்லவில்லை. வன நிசப்தத்தில் அவன் குரல் போய் விழுந்து ஒடுங்கியது.

வலேசா நள்ளிரவில் தன் படுக்கையறைக்குத் திரும்பி னான். அறையிலிருந்த மெழுகுவர்த்தி எரிந்து அணைந்து போயிருந்தது. அறையில் இருட்டு புகுபுகுவென பொங்கி வழிந்துகொண்டிருந்தது. அவன் கட்டிலில் படுத்தபடியே பூச்சிகளின் ரகசிய முணுமுணுப்பை நெடுநேரம் கேட்டுக்கொண்டேயிருந்தான். எதற்கு எனக் காரண மில்லாமல் அவனுக்குக் கோபம் பொங்கிக்கொண்டிருந்தது. தன்னை மீறி அவன் கத்தியபடியே கிடந்தான்.

விடிகாலையில் பல்லக்குத்தூக்கிகளில் ஒருவன் சிற் றோடைக்குக் குளிக்கச் சென்றபோது ஏதோவொரு இலையைப் பறித்து முகர்ந்த படியே முந்திய இரவின் எந்த அடையாளமும் இன்றி ஈரத்தலையும் சிப்புமாக வலேசா நிற்பதைக் கண்டு புன்னகைத்தான். வலேசா அவர்களிடம் தனாப்ஹெபாப் என்றொரு செடியிருக்கிறது. அதன் இலைகள் இதய வடிவிலிருக்கும். அதைச் சுருட்டிப் புகைக்கலாம் என்று சொன்னான். பல்லக்குத் தூக்கி தன் கண்ணில் பட்டால் அந்தச் செடியின் இலைகளைப் பறித்துத் தருவதாகச் சொன்னான்.

அங்கிருந்து அவர்கள் ஒரு நாள் முழுவதும் கிழக்கு நோக்கி நடக்கத் துவங்கினார்கள். பாறைகளும் அடர்ந்த புற்களும் பெயர் தெரியாத விருட்சங்களுமிருந்த வழியில் மௌனமாகக் கடந்து போய்க்கொண்டிருந்தனர். மலையின் மீது பட்டுத் தெறிக்கும் வெயில் தொலைவில் ஊர்ந்து போய்க்கொண்டிருந்தது. வலேசா ஏதோவொரு பர்மீயப் பாடலை தனது உரத்த குரலில் பாடத் துவங்கினான்.

பல்லக்குத் தூக்கிகள் அதை மெல்லிய சிரிப்போடு ரசித்தபடியே நடந்துகொண்டிருந்தார்கள். சகாயதாரி மட்டும் இந்தப் போதகன் மலையை விட்டு ஒருபோதும் ஊர் திரும்ப மாட்டான் என்று மனதில் சொல்லிக் கொண்டபடியே தனக்குத் தெரிந்த ஸ்லோகம் ஒன்றை மனதிற்குள்ளாக முணுமுணுக்கத் துவங்கினான். மஞ்சளும் நீலமுமான பட்டாம்பூச்சிகள் அவர்களைக் கடந்து சென்றுகொண்டிருந்தன. காட்டின் வெளியில் பெய்த மழை உள்ளே பெய்யவில்லை என்பது நாயர்களுக்கு வியப்பாக இருந்தது.

அவர்கள் மழையால் அழிந்த பாதைகளின் ஊடாகப் பயணம் செய்தபடியே பனிமட்டம் என்ற இடத்திற்கு வந்து சேர்ந்தார்கள். அந்த இடத்தில் எப்போதும் பனிப்புகை வந்து தட்டி நிற்கும் என்றும் பனிக்காலத்தில் அந்தப் பிரதேசத்தில் ஆள் நடமாட்டமேயிருக்காது என்றும் நாயர்கள் சொன்னார்கள். அந்த இடம் மலை யொன்று திரும்பிப் படுத்திருப்பது போன்ற தோற்றத்திலிருந்தது.

இனி மலையின் கீழே இறங்கி நடந்து பனிமட்டத்தின் பின்னால் போக வேண்டும் என்று சகாயதாரி சொன்னதும் பல்லக்குத் தூக்கிகள் நீர்வழியும் பாறைகளில் மிகக் கவனமாகப் பல்லக்கைத் தூக்கிக் கொண்டு கீழே இறங்கத் துவங்கினர். நீண்டு வளர்ந்த தாவரங்களின் இலைகள் பல்லக்கின் உள்ளே பிரவேசிப்பதை அறிந்தபடியே வலேசா காட்டின் வாசனையை நுகர்ந்தபடியே வந்தான்.

அடர்நீலப் பூக்கள் கொண்ட செடியொன்று முறிந்து கிடந்தது. ஓடையின் சப்தம் அருகாமையில் கேட்டபடியே வந்தது. வழியில் அவன் ஏதோ சப்தம் அறிந்தவனைப் போல பல்லக்கை நிறுத்தச் சொல்லி கூர்ந்து அவதானித்தான். மிக அருகில் உள்ள மரங்களில் குரங்குகள் விளையாடுகின்றன. ஆகவே இந்தப் பகுதியில் ஏதோ மலைவாசியின் குடியிருப்பு இருக்கிறது என்று சொன்னான். பல்லக்குத் தூக்கிகள் எந்தப் பக்கம் செல்வது என்று தெரியாமல் திகைத்து நிற்பதைக் கண்ட சகாயதாரி முன்னே வரவே, ரபேல் அருகில் மலை வாசிகளின் வசிப்பிடமிருக்கிறதா என்று கேட்டான்.

அதற்கு சகாயதாரி மரங்களின் மீது அவர்கள் கட்டிய குடில்கள் இருக்கின்றன. வேட்டைக்கு வருகையில் அவர்கள் பதுங்கியிருக்கும் குடில்கள் அது என்று சொன்னான். அந்தக் குடில்களை தான் பார்வையிட வேண்டும் என்று சொன்னதும் பல்லக்குத் தூக்கிகள் தங்கள் பாதையை விட்டு விலகி மரங்களில் குடில் இருந்த திசையை நோக்கி நடக்கத் துவங்கினார்கள். பருத்த வேங்கை மரங்களின்

மீது அந்தக் குடில்கள் கட்டப்பட்டிருந்தன. வலேசா சொன்னது போலவே அதன் நெருக்கத்தில் இரண்டு குரங்குகள் தாவிக் கொண்டிருந்தன.

பல்லக்குத் தூக்கிகள் அந்த இடத்தில் புதையுண்டு கிடந்த எலும்புகளை வியப்போடு பார்த்தபடியே இனி எந்தத் திசையில் நடந்து செல்வது என்ற உத்தரவிற்காகக் காத்துக் கிடந்தனர். புதையுண்டு கிடந்த எலும்பு ஒன்றினைக் கையில் எடுத்த வலேசா அதை வானில் தூக்கி வீசி எறிந்தான். ஏதோ ஒரு பாறையில் பட்டு அது விழும் சப்தம் கேட்டு புதர் எலியொன்று தாவியோடியது.

அவர்கள் மிக மெதுவாக மலையின் பின்புறத்தை நோக்கி நடந்து கொண்டிருந்தார்கள். சூரியன் மிகத் தொலை விலிருந்து அவர்களைக் கவனித்தபடியே வந்தது. தொலைவில் எப்போதாவது ஒரு பறவையின் சப்தம் கேட்பதும் பின்பு அடங்குவதுமாக இருந்தது. சகாயதாரியோடு வந்த ஊமை ஊமத்தம்பூ ஒன்றைப் பறித்து கையில் வைத்து ஆட்டிக் கொண்டு நடந்து வந்துகொண்டிருந்தான். மட்டக் குதிரைகள் வழியில் இருந்த புல்லை முகர்வதும் லேசாகக் கடித்து மெல்வதுமாக நடந்து வந்துகொண்டிருந்தன.

மலையாறு ஒன்று குறுக்காக ஓடிக்கொண்டிருந்தது. ஆற்றின் குறுக்கே பல்லக்குத் தூக்கிகள் நடந்த போது நீரின் குளிர்மையை அறிந்தார்கள். யாரோ குனிந்து தண்ணீர் குடிக்கும் ஓசை வலேசாவிற் குக் கேட்டது. மாலையடங்கும் வரை அவர்கள் நடந்துகொண்டேயிருந் தார்கள். எங்கிருந்தோ சாணத்தின் மணம்போலவொன்று கசிந்து வந்தபடியே இருந்தது. காட்டெருமைகள் சில புதர்களுக்கு அப்பால் நடந்து திரிந்தன. இரவு பார்த்துக்கொண்டிருக்கும்போதே எழுந்து யாவையும் விழுங்கிக்கொள்ளத் துவங்கியது. அவர் கள் சோற்றுப்பாறை என்ற இடத்தில் ராத்தங்குவது என்று முடிவு செய்துகொண்டார்கள்.

அந்தப் பாறை ஒரு மனிதன் கையை நீட்டிக்கொண்டி ருப்பது போன்ற தோற்றத்திலிருந்தது. இரண்டு பாறைகள் ஒன்று சேர்ந்திருப் பதுபோல பெரிதாகவும் உயரமானதாகவு மிருந்த சோற்றுப் பாறையின் மீது பல்லக்குத் தூக்கிகள் கொண்டுவந்திருந்த கோரையை விரித்து வலேசாவிற்குப் படுக்கையைத் தயார் செய்தார்கள். இருட்டை உற்றுக் கவனித்தபடியே வலேசா குடித்துக்கொண்டிருந்தான். ரகசிய மான குரலில் சகாயதாரியும் நாயர்களும் மலையாளத்தில் ஏதோ பேசிக்கொண்டிருந்தார்கள். அருகில் வந்து நிற்கும் யானையைப் போல இருட்டு அசைந்துகொண்டிருந்தது.

மழைக் காலத்தின் இரவு என்பதால் வானில் நட்சத்திரங் களே யில்லை. காற்றும் ஒடுங்கியே இருந்தது. கண்ணுக்குத் தெரியாத பூச்சிகளின் சப்தமும் குளிரும் எங்கும் நிரம்பத் துவங்கியது. பல்லக்குத் தூக்கிகள் பயத்தோடு அனந்த பத்மநாபனை பிரார்த்தனை செய்த படியே கல்லில் படுத்துக் கிடந்தனர். வலேசா இருட்டிற்குள்ளாகவே அங்குமிங்கும் நடந்துகொண்டிருந்தான்.

*பிறகு சப்தமாக இருட்டிற்குள் பிரசங்கம் செய்யத் துவங்கினான். கடவுளால் பெய்யும் மழை சாத்தானையும் நனைக்கக்கூடியது என்று அவன் சொன்னதைக் கேட்டு நாயர்கள் வியப்போடு அவனைப் பார்த்துக்கொண்டிருந்தனர். இரவில் அவன் குரல் தனியே கேட்டுக் கொண்டேயிருந்தது. எங்கோ பாறையொன்று உருள்வது போலவும் மரங்கள் முறிவது போன்றும் சப்தம் எழுவதும் அடங்குவது மாக இருந்தன. வலேசாவின் சப்தம் நின்று போனது. அவன் உறங்கியிருக் கக்கூடும்.*

*சகாயதாரியும் நாயர்களும் எழுந்து இருட்டில் அருகருகே உட்கார்ந்த படியே ரகசியமான குரலில் சொன்னார்கள்.*

*"இவன் பிரசங்கியல்ல. சாத்தான். முதுவர்களின் பட்டிக்குக் கொண்டுவிட்டதும் உடனே நாம் திரும்பிவிட வேண்டும். இல்லா விட்டால் இந்தச் சாத்தான் நம்மையும் உறிஞ்சிவிடுவான்."*

*ஊமை வேலைக்காரன் இருட்டிற்குள்ளாகவே மட்டக் குதிரை களைப் பிடித்துக்கொண்டு ஆற்றை நோக்கி நடந்துகொண்டிருந்தான். மலையின் இருள் மிகுந்த பிசுபிசுப்போடிருந்தது. நாயர்களில் வயதானவன் ஆத்திரத்தோடு திட்டினான்.*

*இவன் பர்மாவில் செய்த வித்தை எதுவும் முதுவர்களிடம் செல்லாது. அவர்கள் எருமைப் பலியும் பூச்சொப்பும் தந்தல்லவா வழிபடுகிறவர்கள். முதுவன் கையில் மந்திரமிருக் கிறது. அவர்கள் நாயின் வாயைக் கட்டும் சூட்சுமம் அறிந்தவர்கள்.*

*அதை ஒத்துக்கொண்ட சகாயதாரி மகாராஜா பரங்கி களுக்கு அளிக்கும் சலுகை இப்படி நம்மை அலைக்கழிய வைத்திருக்கிறது என்று அலுத்துக்கொண்டான். பிறகு அவர்களின் குரலும் இருட்டில் அடங்கிப்போயிற்று. பின்னிர வில் காற்றில் குளிர் அதிகமாயிருந்தது. குதிரைகள் கனைத்த படியே இருந்தன. தங்களை மீறிய களைப்பில் அவர்கள் உறங்கிக் கிடந்தார்கள். விடிகாலையின் மென்னொளி மரங்களின் உச்சியில் பட்டுத் தரையிறங்கத் துவங்கியபோது அவர்கள் எழுந்துகொண்டிருந்தார்கள். அவர்கள் படுத்திருந்த இடத்தின் அருகாமையில் யானைச் சாணம் கிடப்பதைக் கண்ட நாயர் இரவில் யானைகள் அந்தப் பாதையில் கடந்து போயிருக்கின்றன என்று பயத்தோடு சொன்னான்.*

*ரபேல் வலேசா இன்றைக்குள் எப்படியாவது முதுவர் களின் வசிப்பிடத்திற்குப் போயாக வேண்டும் என்று கோபத்தில் கத்தினான். பல்லக்குத் தூக்கிகள் தங்கள் வலிமையால் தாங்கிக்கொண்டு வேகமாக நடக்கத் துவங் கினார்கள். காட்டுப் புற்களையும் கரும்பாறைகளையும் கடந்து அவர்கள் சென்று கொண்டிருந்தனர். செம்பழுப்பு நிறமுள்ள பருந்தின் சிறகொன்று வழியில் கிடந்ததை ஊமை எடுத்து வைத்துக் கொண்டான்.*

*வலேசா சொன்னதைப் போலவே அவர்கள் பின் மதியத்தில்*

முதுவர்களின் குடியிருப்பு இருந்த முறிஞ்சா என்ற இடத்திற்கு வந்து சேர்ந்தார்கள். நாற்பதிற்கும் மேற்பட்ட முதுவர்கள் அந்தப் பகுதியில் குடியிருப்பது தெரிந்தது. கல்லால் அவர்கள் வசிப்பிடத்தைச் சுற்றிலும் வளையமிட்டிருந்தார்கள். வீடுகள் மூங்கிலால் கட்டப் பட்டிருந்தன. சாணமிட்டு மெழுகியது போன்று சுத்தமாக இருந்தது அவர்கள் வீட்டின் முன்புறம். பெண்கள் யாவரும் கருத்துக் குள்ளமான உருவ அமைப்பு கொண்டிருந்தார்கள். அரையில் மட்டும் போர்வை போன்ற கனத்த புடவை கட்டியிருந் தார்கள். மார்பு திறந்து கிடந்தது. கழுத்தில் சிறிய பல் ஒன்றை கறுப்புக் கயிற்றில் அணிந்திருந்தார்கள். அவர்களின் முகங்களில் அச்சமோ, கலக்கமோயில்லை. நாட்டுமனிதர் களின்மீது நம்பிக்கையற்றவர்களைப்போல அவர்களைக் கண்டும் காணாததுமாகத் தங்களது வேலையைச் செய்த படியே இருந்தனர்.

நாயர்களில் ஒருவன் முதுவர்களில் மூப்பனாக இருப்ப வனின் வீட்டினைத் தேடிப்போய் அழைத்து வந்தான். மூப்பன் வயதேறிக் குறுகிப்போனவனாயிருந்தான். அவன் கைகள் முழுவதும் பச்சை குத்தப்பட்டிருந்தது. பற்கள் காவியேறியிருந்த அவன் வலேசாவைப் பார்த்ததும் தண்டனிட்டு நமஸ்காரம் செய்துவிட்டு நாயர்களிடம் கொச்சையான மலையாளத்தில் அவர்கள் எதன்காரணமாக மலைக் குள் வந்திருக்கிறார்கள் என்று கேட்டான்.

நாயர்கள் அது ராஜாங்க விஷயம் என்றும் தங்களோடு வந்துள்ள பரங்கி துரை இனிமேல் இங்கேதானிருப்பான் என்றும், அவனுக்கு எவ்விதமான இடையூறுகளும் எதனாலும் ஏற்படாதபடி அவர்கள் பார்த்துக்கொள்ள வேண்டும் என்றும், அப்படி மீறி ஏதாவது நடந்தால் மகாராஜாவின் கோபம் மிகக் கடுமையாக இருக்கும் என்றும் அறிவித்தார்கள். மூப்பன் வலேசாவை வியப்போடு பார்த்தபடியே அவருக்கு ஏதாவது வியாதி கண்டிருக்கிறதா என்று நாயரிடம் கேட்டான்.

சகாயதாரி எதற்காக அப்படிக் கேட்கிறான் என்று புரியாமல் ஏன் அப்படிக் கேட்கிறான் என்றதும் மூப்பன் வலேசாவின் கைகளைத் தொட்டுக் காட்டி உடம்பு முழுவதும் வெள்ளையாக இருக்கிறதே . . . அது நோயில்லையா என்று கேட்டான். சகாயதாரிக்குச் சிரிப்பாக வந்தது. கடல் கடந்து வாழ்பவர்கள் இப்படித்தான் வெள்ளைத் தோலாக இருப்பார்கள் என்று சொல்லிச் சிரித்தான். மூப்பன் அவருக்குத் தேவையான அத்தனை வசதியும் செய்து தருவதாக ஒத்துக்கொண்டு அவர்களைத் தன்னோடு அழைத்துச் சென்றான்.

வழியில் கிடந்த நாய்கூட அவர்களைக் கண்டு குரைக்க வில்லை. வலேசா முதுவர்களின் இருப்பிடத்தில் காற்று ஏகாந்தமாக இருப்பதை அறிந்தவனைப் போல கைகளைக் காற்றிற்குத் திறந்தபடி நின்றிருந்தான். நாயர் மூப்பனைத் தங்களோடு வழித்துணையாக அழைத்தபடியே உடனே வீடு திரும்புவதற்குத் தயாரானார்கள். சகாயதாரி மூப்பனின் வீட்டிலிருந்து சிறிய பொதியளவு மிளகும் கிராம்பும் அள்ளிச்

சேகரித்துக்கொண்டு புறப்படத் தயாரானபோது ஊமை மட்டும்தான் பரங்கி துரையோடு இங்கேயே சில நாள் இருக்கப் போவதாகச் சொன்னான்.

உனக்குச் சரியான ஆள் இவன்தான் என்றபடியே சகாயதாரி முதுவர்களின் பட்டியை விட்டு இறங்கி நடக்கத் துவங்கியபோ்து வலேசா தனக்கு முதுவர்களின் பாஷை பரிச்சயமாகும் வரை நாயர் களில் ஒருவன் தன்னோடு உடன் தங்கியிருக்க வேண்டும் என்று ஆணையிடவே, வயதான நாயர் தனக்கு ஊட்டுப்புரையில் வேலை அதிகமிருப்பதாகச் சொல்லி இங்கே தங்க முடியாது என்று பதட்ட மடைந்தார். வலேசா உன் வேலைகளைத் தூக்கிக் குப்பையில் போடு என்றபடியே வெளியேபோய் தனது மட்டக்குதிரைகளைப் பாதுகாப்பாகக் கட்டும்படியாக ஆணையிட்டபடியே புகைப்பதற்குக் கஞ்சாயிலை வைத் திருக்கிறார்களா என்று விசாரிக்கும்படியாகச் சொன்னான்.

அன்றிரவு முதுவர்கள் மூப்பனின் வீட்டின் முன்பாக ஒன்று திரண்டு தங்களுக்குள்ளாக எதையோ பேசிக்கொண்டார்கள். அவர்கள் மலையாளமும் தமிழும் கலந்த ஒரு பாஷையில் பேசுகிறார்கள் என்றும் அவர்கள் பேசுவதில் எதுவும் தனக்குப் புரியவில்லை என்றும் சொன்னான் வயதான நாயர்.

அதன் இரண்டு நாட்களுக்குப் பிறகு மரத்தாலான சிலுவை ஒன்றைச் செய்வதற்காக முதுவர்களைத் தன்னோடு காட்டிற்குள் அழைத்துப் போனான் வலேசா. இரண்டு நாட்கள் வனத்திற்குள்ளா கவே அலைந்து ஒரு மரத்தை வெட்டிக்கொண்டு வந்திருந்தனர். வலேசாவும் ஊமை வேலைக்காரனும் சேர்ந்து அதில் ஒரு சிலுவை யைச் செய்தனர். மூப்பர்களில் ஒருவன்கூட வலேசாவிடம் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. அதைப்பற்றி வலேசா சட்டை செய்யவே யில்லை. ஒவ்வொரு நாளும் வலேசா குடிப்பதற்காகப் பச்சைச் சாராயமும், உண்பதற்காகக் காட்டுக்கிழங்கும் மூப்பன் தந்து அனுப்பி னான். மழைக்காலம் வலுக்கத் துவங்கியது.

அதிகாலையில் மழை பெய்வதும் பின்பு சில மணி நேரம் மழை வெறிப்பதும் ஆகாசத்திலிருந்து வெளிச்சம் பீறிடுவதும், அது அடுத்த இரண்டு மணி நேரங்களில் அடங்கிவிடுவதும் சடசடவென பலத்த மழை பெய்வதுமாக நாட்கள் நீளத் துவங்கின.

இவ்வளவு மழை பெய்தபோதும் மழையின் சப்தம் அதிகமாகக் கேட்கவில்லையே என்று வியப்போடு பார்த்த படியே தன் வீட்டின் உள்ளே படுத்துக்கிடந்தான் வலேசா. மழை தொடர்ந்து நான்கு நாட்கள் பெய்து பின்பு வெறித்தது. எங்கிருந்தோ நீலத்தும்பிகள் கூட்டமாகப் பறந்து வந்து வெயிலை மொய்க்கத் துவங்கின.

முதுவர்களைப்போலவே தனக்கும் ஒரு குடிசை போட்டுக் கொண்ட வலேசா அதன் பின்பிருந்த வெட்டவெளியில் சிலுவையை நிறுத்தி

வைத்தான். அதன் பிறகு அவர்களிடம் பிரசங்கம் செய்யவோ அல்லது மீட்பரைப் பற்றி எடுத்துச் சொல்லவோ அவன் முயற்சிக்க வேயில்லை. எருதின் கொம் பில் ஊற்றித் தரப்படும் சிவப்புச் சாராயத்தைக் குடிப்பதும் உறங்குவதுமாகவே இருந்தான். சில வேளைகளில் பசி அதிகமாகி யாராவது ஒருவன் வீட்டிற்குள்போய் கிழங்கைத் தேடி உண்பவனாக மாறியிருந்தான். இந்த மனிதன் எதற்காகத் தங்களைத் தேடி வந்திருக்கிறான் என்று புரியாத முதுவர் கள் அவனை அருவருப்போடு விலகியே இருந்தனர். சில இரவுகளில் அவன் பர்மீய பாஷையில் சப்தமாகப் பாடுவதைக் கேட்டு சகாய தாரிக்குப் பயமாக இருக்கும்.

மழை வலுத்துப் பெய்யும் நாளில் முதுவர்கள் வானை நோக்கி எதையோ முணுமுணுப்பதும் ஐந்து சிறு கல்லை ஒன்றாக்கி ஒரு இடத்தில் வைப்பதையும் கண்ட சகாயதாரி அவர்கள் வானில் உள்ள மழைக்கடவுளிடம் ஏதோ பிரார்த் தனை செய்கிறார்கள் என்பதைப் புரிந்துகொண்டான். பகலும் இரவும் இடைவிடாமல் மழை பெய்தபடியே இருந்தது. நீண்ட காட்டுவாழை இலைகளைத் தலைக்குப் பிடித்தபடியே முதுவப் பெண்கள் மழையின் ஊடாகவே காட்டிற்குள் அலைந்து திரிந்தனர். வலேசா தான் இதுவரை கண்டிராத மிகக் கடுமையான மழைக்காலத்தை அங்கே கண்டான். மரங்கள் மலையை விட்டு இடம்பெயர்ந்து போய்விடுமோ எனுமளவு விசை யோடு சுழன்றன. வீசும் காற்றும், பாறைகள் உருளும் சப்தமும் அவன் குரலை ஒடுக்கியிருந்தன.

மழை வெறிப்பதற்காகக் காத்திருப்பவனைபோலப் படுத்தே கிடந்தான். மழையினுள் அலைந்து வீழ்ந்து கிடந்த எலுமிச்சைக் காய்களைச் சேகரித்து வந்த ஊமைவேலைக் காரன் ஒரு நாள் தட்டாம்பாறை என்ற ஒரு திட்டினுள் வழுக்கி விழுந்து கிடந்தான் என்று முதுவர்கள் அவனைத் தூக்கி வந்தார்கள். ஊமையின் உடல் முழுவதும் சாணிபோல ஏதோ அப்பிப் போயிருந்தது. அவன் முகம் சாந்தம் ததும்புவதாக இருந்தது. மின்னல் அடித்திருக்கக்கூடும் என்று முதுவர்கள் தங்களுக்குள் பேசிக்கொண்டார்கள்.

ஊமை வேலைக்காரன் காட்டிற்குள் வந்த நாளில் உற்சாகமாக இருந்ததில் ஏதோ காரணமிருக்கிறது என்று வலேசாவிற்குத் தோன்றி யது. ஊமைவேலைக்காரனின் மரணம் நாயரை மிகவும் தனிமைப் படுத்தியது. அவனும் புகைப்பழக்கம் கொள்ளத் துவங்கினான். பகல் நேரங்களில் நாயருக்குப் புகை உறிஞ்சியதும் கொக்குகள் கூட்டமாகத் தன் வாசலில் வந்து தரையிறங்குவது போன்ற பிரம்மை தோன்றத் துவங்கிவிடும். அவர் தன் கைகளால் கொக்கை விரட்டுவதுபோல செய்தபடியே இருப்பதை வலேசா கண்டிருக்கிறான்.

இரண்டு மாதங்கள் மழை பெய்து முடிந்து காடு ஈர மேறியிருந்தது. முதுவர்கள் காட்டிற்குள்ளாக அலைந்து திரியத் துவங்கினர். காட்டுக் காளான்களும், முறிந்து கிடந்த மரங்களில் இருந்த காய்களையும்,

நீரோட்டத்தில் துள்ளும் புதுமீன்களையும் ஏராளம் கொண்டுவந்திருந் தனர். பகல் மிகக் குறைவான வெளிச்சத்தோடு பாறை முகடுகளில் வழிந்தோடிக்கொண்டிருந்தது.

வலேசா ஒரு மாலைநேரத்தில் முதுவர்களை மொத்தமாக மந்தை யில் அமர வைத்து புனிதன் வாழ்வைப் பற்றி ஒரு பிரசங்கம் செய்தான். முதுவர்கள் எவர் முகத்திலும் சலனமேயில்லை. பிரசங்கம் முடிந்து போன பிறகு அந்த இடத்தை ஒரு முதுவப் பெண் சாணத்தை வைத்துத் துடைத்துக்கொண்டிருந்தாள். ஒரு முதுவன் எலுமிச்சைக் காய்களை வெட்டி ஆகாசத்தில் எறிந்தபடியே எதையோ முணுமுணுத்தபடியே கடந்து சென்றான். அன்றிரவு நாயர் முதுவர்களின் பாஷையை அறியாத வரை உங்களால் அவர்களை வெற்றிகொள்ள முடியாது என்றான்.

வெறி கொண்டவனைப் போல வலேசா முதுவர்களின் பாஷையை அறிந்துகொள்ளத் துவங்கினான். அப்போது அவனுக்கு மிக வியப்பாக இருந்தது. முதுவர்கள் பொருட்கள் எல்லாவற்றிற்கும் வினைச் சொற் களாகவே பெயர் வைத்திருந்தார்கள். அதாவது மரத்திற்கு மரமாக இருந்துகொண்டிருக்கிறது, ஆகாசத்திற்கு ஆகாசமாக இருந்து கொண்டி ருக்கிறது, மீனிற்கு மீனாக இருந்துகொண்டிருக்கிறது என்று உலகில் பொருட்கள் எதுவும் நிரந்தரமானதில்லை என்பதை அறிவிப்பதைப் போல சொற்களைக் கொண்டிருந்தார்கள்.

அத்தோடு அவர்களிடம் இரண்டு விதமான பாஷைகளிருந்தன. ஒன்று சிறுவர்கள் பேசி மகிழ்வது. அதைப் பதின் வயது வரை பேசிக்கொள்கிறார்கள். மற்றொன்று மீசை முளைத்து ஆணும் பெண்ணும் கலவி கொண்ட மறுநாளில் இருந்து பேசும் மொழி. அந்த மொழியைச் சிறுவர்கள் பயன்படுத்துவதேயில்லை. யாவையும் விட அவர்கள் சில குறிப்பிட்ட சொற்களை ஒருபோதும் சொல்வதே யில்லை.

அதை எப்போதாவது பயன்படுத்த வேண்டுமானால் கூழாங்கற் களையும் இலைகளையும் காட்டுவதன் வழியே அந்தச் சொல்லை நினைவுபடுத்திவிடுகிறார்கள். அதுபோலவே காம வெளிப்பாட்டிற் கான தனித்த சொற்கள் அவர்களிடமிருந்தன. அந்தச் சொற்களுக்கு அர்த்தம் ஏதுமில்லை என்றும் அதைப் பொருள் கொள்வது ஒவ்வொரு ஆளுக்கும் ஏற்ப வேறுபடும் என்றும் அறிய வந்தபோது ஆச்சரியமாக இருந்தது. மிகுந்த வெறியோடு அவன் முதுவர் களின் பாஷையை ஒவ்வொரு சொல்லாக அறிந்தபடியே காட்டிற்குள் அலைந்து கொண்டி ருந்தான். அதைக் கண்டபோது முதுவர்களிடம் பரிகாசமே மிஞ்சி யிருந்தது.

எதற்காக இந்தப் பரிகாசம் என ஒரு முதுவனைக் கேட்டதற்கு அவன் எங்கள் பாஷை மற்றவர்கள் நினைவில் ஒருபோதும் நிற்காது. நீங்கள் கற்றுக்கொண்ட சொற்கள் யாவும் பௌர்ணமிக்குள் தானாக மறந்து போய்விடும் பாருங்கள் என்று சொன்னான். வலேசாவிற்கு

ஆத்திரமாக வந்தது. எவ்வளவு முட்டாளாக இருக்கிறார்களே என்ற படியே தான் கற்று வைத்திருந்த சொற்களை மனதிற்குள் சொல்லிப் பார்த்தபடியே இருந்தான்.

அடுத்த பிரசங்கத்தின் முதல் நாளிரவு அவன் உறங்கச் சென்றபோது முழுப்பிரசங்கமும் முதுவர்களின் மொழியிலே இருக்க வேண்டும் என்று முடிவு செய்துகொண்டான். மறுநாள் காலை அவர்களை மந்தைக்கு அழைத்து வரச் சென்றபோது அவன் மனதில் அன்றுவரை கற்று வைத்திருந்த முதுவர்களின் மொழியில் ஒரு வார்த்தைகூட நினைவிற்கு வரவில்லை. என்ன சொல் எதைக் குறிக்கும் என்று அவன் எவ்வளவோ முயன்றும் அவனால் முதுவர்களின் பாஷையை நினைவுபடுத்திக்கொள்ள முடியவில்லை.

நாயரை அழைத்து கத்தியபோது எதுவும் புரியாதவன் போல என்ன நடந்தது என்று கேட்டான். வலேசா எதுவும் சொல்லாமல் ஆத்திரத்துடன் அன்று ஆங்கிலத்திலே பிரசங் கம் செய்தான். எப்படி தான் கற்று வைத்திருந்த சொற்கள் யாவும் காணாமல் போயின, ஏன் தனக்கு மறந்து போனது என்று அவனால் புரிந்துகொள்ள முடியவில்லை.

மூப்பனை அழைத்து விசாரணை செய்தபோது தங்களது பாஷையின் வழியாகத்தான் மூதாதையர்கள் வாழ்கிறார்கள் என்றும் அவர்கள் தங்களது இனக்குழுவினைத் தவிர மற்றவர்கள் மனதில் தங்கமாட்டார்கள், நாவில் நடமாட மாட்டார்கள் என்று அவனும் கூறினான்.

வலேசாவிற்கு நம்ப முடியாமலும் ஆத்திரமாகவும் வந்தது. முதுவர்களின் மூப்பன் இது தங்களுக்கு மட்டுமல்ல மலையின் மீதுள்ள பதினேழு ஆதிகுடிகளுக்கும் அப்படித் தான். ஒவ்வொருவரும் தனக்கென ஒரு மொழியும் அடை யாளமும் வைத்திருக்கிறார்கள். பொது பாஷை என்று ஒன்றுமிருக்கிறது. ஒருவருக்கொருவர் சந்திக்கும்போது பொது பாஷையில் பேசிக்கொள்வோம் என்று சொன்னான்.

வலேசா தான் அவர்களின் மொழியைக் கற்றுக் காட்டு வதாக சவால் விட்டபடியே அவர்களின் சொற்களைச் சேகரம் செய்து தனது குறிப்பேட்டில் பதிவு செய்யத் துவங்கினான். அடுத்த பிரசங் கத்தை வேண்டும் என்றே பௌர்ணமி இரவில் நிகழ்த்தவும் முடிவு செய்திருந்தான். அதுபோலவே பௌர்ணமி நாளின் காலை வரை அவன் மனதில் முதுவர்களின் சொற்கள் நினைவிலிருந்தது. வானில் நிலவு உதயமானபோது அவன் வெளியே வந்து தன்னை மறந்தவனைப் போல வானைப் பார்த்துக்கொண்டிருந்தான். கீறல் விழுந்த மண் பானையிலிருந்து தண்ணீர் ஒழுகியோடு வது போல அவன் ஆகாசத்தை உற்றுப் பார்த்துக்கொண்டி ருந்த அதே நிமிடத்தில் மனதில் அவன் கற்று வைத்திருந்த சொற்கள் யாவும் கரைந்தோடத் துவங்கின.

வேகமாக ஓடிச் சென்று அவன் குறிப்பேட்டைத் திறந்து பார்த்தான். அதில் மைக்கறையே இல்லை. கோபமும் ரௌத்திரமுமாக அவன் குறிப்பேட்டை வீசி எறிந்தான். முதுவர்களின் பாஷையில் ஒரு சொல்கூட அவன் மனதில் தங்கவில்லை.

அன்றிலிருந்து அவன் மனம் பேதலித்தவனைப் போல அலைந்து திரியத்துவங்கினான். எப்போதோ படித்த லத்தீன் ஆங்கிலம் யாவும் நினைவிலிருக்கிறது. மலையாளத்தில்கூட நிறைய சொற்கள் மனதில் தங்கிவிட்டிருக்கிறது. ஏன் முதுவர்களின் மொழி தனக்குள் நிற்க மறுக்கிறது. ஒருவேளை இந்த மலைவாசிகள் மீமாய சக்தி கொண்டவர் களா என்று அவனுக்குக் குழப்பமாக இருந்தது.

அதற்காகவே அவன் ஒவ்வொரு மலைவாசியையும் சந்திப்பது என்று முடிவு செய்து காட்டிற்குள்ளாகவே அலைந்து திரிந்தான். அவன் நினைத்ததுபோலக் காடு எளிதானதில்லை என்பதும் மனிதர்கள் ஒரு போதும் அறிந்துகொள்ள முடியாத எண்ணிக்கையற்ற ரகசியங்கள் காட்டிற்குள் எப்போதுமிருக்கின்றன என்பதையும் அவன் அறிந்து கொள்ளத் துவங்கினான். பிரசங்கங்களையும் இறை ஊழியத்தையும் கடந்து அவன் மனது எது காட்டிற்குள் இப்படி மர்மமாகவிருக்கிறது என்பதை அறிந்துகொள்ளும் தேட்டத்தை உருவாக்கியது.

அவன் அடிபட்ட மிருகம் ஒன்றைப் போலக் காட்டிற்குள் அலைந்து திரிந்து உருவமே மாறியிருந்தான். பாறைகளின் மீது நின்றபடியே அவன் தொலைவை வெறித்துக்கொண்டி ருப்பதையும், அடர்ந்த புதர்களில் ஒட்டிக்கொண்டிருக்கும் பட்டாம்பூச்சிகளை உற்றுப் பார்த்த படியே குத்துக்காலிட்டு அமர்ந்திருப்பதையும் வனவாசிகள் பல முறை கண்டிருந்தார்கள். குடியும் ஆத்திரமும் அவனை உருமாற்றி யிருந்தன.

செம்பட்டை மயிர் படிந்த முகத்தோடு அவன் காட்டின் தனிவழி களில் சுற்றிக்கொண்டிருந்தான். ஒரு நாள் முதுவப் பெண்களில் ஒருத்தி அவன் அருவியில் நிர்வாணமாக நின்றபடியே கத்திக்கொண்டி ருப்பதைக் கண்டாள். இன் னொரு நாள் அவன் தலையில் மஞ்சள் பூச்சூடியபடியே தனியே ஏதோ பிரசங்கம் செய்து கொண்டிருப்பதை தேன் எடுக்க வந்த மலையன்கள் இருவர் பார்த்தனர். இப்படியாக தோன்றுவதும் மறைவதுமாக வலேசா காட்டிற்குள் அலைந்து கொண்டேயிருந்தான்.

டிசம்பர் மாதத்தின் இறுதியில் காடு தன்னைத்தானே கவ்விக் கொண்டதுபோல மிக இறுக்கமடையத் துவங்கியது. எண்ணிக்கையற்ற புதர்ச்செடிகள் அடர்ந்திருந்தன. வலேசாவிற்காக முதுவர்கள் மூங்கில் குழலில் கஞ்சாவை நிரப்பி உறிஞ்சித் தயாரித்து தந்திருந்தார்கள். புகை அவன் நுரையீரல்களை நிரப்ப தனக்குத்தானே அவன் மார்க்கின் சுவிசேஷங்களைப் புலம்பிக்கொண்டிருந்தான்.

ஆள் நடமாடுவதுபோல பனிப் புகை தனித்து நடமாடிக் கொண்டி ருந்தது. அந்த நாட்களில் வீடுகள் வசீகரம் கொள்ளத் துவங்கின.

முதுவர்களிடம் முன்னெப்போதும் காணமுடியாத ஒரு அழகு மிளிர்வது போன்றிருந்தது. சிறுவர்கள் புல்லில் துளிர்த்துக் கிடக்கும் பனித்துளியை எடுத்து முகத்தில் பூசி விளையாடினார்கள்.

ஒரு பகலில் வலேசா நீரோடை ஒன்றைக் கடந்து போகையில் முதுவப்பெண் ஒருத்தி குளித்துக்கொண்டிருப் பதைக் கண்டான். அவள் மார்பகங்களின் திரட்சியும் தோளில் வழிந்த கூந்தலும் அவனுக்குள் காமத்தைக் கிளறிவிட்டிருக்க வேண்டும். அவன் நீரோடை அருகில் இருந்த பாறையில் அமர்ந்தபடியே அவளை வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தான்.

அந்தப் பெண் அவனை ஏறிட்டுப் பார்த்துவிட்டு எந்தச் சலனமும் இன்றி குளித்துக்கொண்டிருந்தாள். அவளது உடல் தண்ணீருள் மீன் துள்ளுவதுபோலத் துள்ளிக் களித்தது. காற்றில் ஒரு இலை அசைந்துகொண்டிருப்பதுபோல அவன் மனதில் காமம் அசைந்து கொண்டேயிருந்தது. அவள் கரையேறும் வரை அவன் வெறுமனே அவளைப் பார்த்தபடியே இருந்தான். கரையேறும்போது அந்தப் பெண் அவனைப் பார்த்துச் சிரித்துவிட்டு பாறையேறி நடந்து போனாள். அவள் நடந்துபோன பிறகு நெடுநேரம் அவன் அதே நீரோடையைப் பார்த்தபடியே இருந்தான். அவள் இல்லாமலும் அதே உடல் நீந்திக்கொண்டிருப்பது போலவே இருந்தது.

பர்மாவில் அவனுக்குப் பரிச்சயமான பெண்ணின் நினைவு எழுந்தது. அந்தப் பெண்ணிற்கு அவனது பாஷை புரியாது. அவளுக்குத் தெரிந்த பாஷை அவளது உடல்தான். அவள் அதை ஒரு கத்தியைப் பயன்படுத்துவதுபோல மிகக் கவனமாக உபயோகிக்கக் கற்றிருந்தாள். அவளோடு கூடுவதற்கு முன்பும் பின்பும் அவள் உடல் அவனுக்குள் எழுப்பிய அலைவுகள் மிக விசித்திரமானவை.

அவள் தன் உடலை ஒரு நீரூற்றைப்போலப் பொங்கி வழிய அனுமதிக்கின்றவளாக இருந்தாள். பல இரவுகளில் அவளது அணைப் பில் இருந்த மூர்க்கம் அவனைப் பயம் கொள்ளச் செய்திருக்கிறது. ஏதோவொரு மிருகம் ஒன்று தன்னைக் கவ்விக்கொண்டு போவதுபோல அவன் அந்த நிமிஷங்களில் உணர்ந்தான். ஆனாலும் அவளை விலக்கி வேறு பெண்ணிடம் அவனது நாட்டம் கூடவேயில்லை.

பர்மீய பதூங் மலைவாசிப் பெண்கள் கால்களிலும் கழுத்திலும் வளையம் போட்டுக்கொள்வார்கள். அந்த வளையங்களின் எண்ணிக் கையை வைத்தே அவர்களின் வயதைக் கணக்கிடுவார்கள். காமம் முற்றிய இரவுகளில் அந்த வளையங்கள் உதிர்ந்து போவது போலவும் தான் ஒரு கடலின் அலையினுள் தன்னை ஒப்படைத்துக்கொண் டது போலவும் அவன் உணர்ந்திருக்கிறான்.

இன்றைக்கு முதுவப்பெண்ணைக் கண்டபோது அதே போன்ற முனை கிள்ளப்பட்டு காமம் பீச்சியடிப்பதாக இருந்தது. அவன் தன் உடைகளைக் களைந்தபடியே அதே நீரோடையில் குளிக்கத் துவங்கினான். உடல் ஒரு தக்கையை போல மிதந்துகொண்டிருப்ப

தாகவே தோன்றியது. தண்ணீரால் நனைக்கப்படாத உடல் கொண்டிருப்பதுபோல உணர்ந்தபடியே அவன் கரையேறி முதுவக் குடியிருப்பை நோக்கி நடந்தான். அந்தப் பெண் மற்றவர்களுடன் ஒரு வீட்டின் முன்னால் நின்றபடியே தினைமாவை இடித்துக்கொண்டிருந்தாள். அவள் அருகில் நாலு வயதுச் சிறுமியொருத்தி நின்றுகொண்டிருந்தாள். நாலைந்து முதுவர்கள் இன்னொரு பக்கம் அமர்ந்து மூங்கிலை வெட்டிப் போட்டுக்கொண்டிருந்தார்கள்.

வலேசா அந்த இடத்தில் நின்றபடியே முதுவப் பெண்ணைப் பார்த்துக்கொண்டிருந்தான். முதுவர்களில் ஒருவன் அவனைப் பார்த்துப் பரிகாசம் செய்தபோதும் வலேசா அதைச் சட்டை செய்யவில்லை. அவள் குலுங்கும் ஸ்தனங்களை வெறித்தபடியே அங்கேயே நின்றுகொண்டிருந்தான். வயதான முதுவப் பெண் ஒருத்தி ஏதோ சொல்ல அங்கிருந்த பெண்கள் சிரித்தார்கள்.

தினை மாவை அள்ளி ஒரு மரக்கலயம் ஒன்றில் போட்டுவிட்டு அந்த முதுவப்பெண் அருகில் வந்து அவன் கையைப் பற்றியபடியே அவன் இருப்பிடத்திற்குக் கூட்டிச் சென்றாள். அவளோடு கூடியது இருள் தாரையொன்றினுள் தான் மூழ்கிக் கிடந்தது போலவே இருந்தது. தன் உடலில் தலைரோமங்களில்கூட இருட்டின் பிசுபிசுப்பு அப்பிக் கொள்வதுபோலப் பிணைவு ஏற்பட்டது. அவள் கொஞ்சம் கொஞ்சமாக தன்னைத் தின்றாள் என்றே வலேசா உணர்ந் தான். உடல் அழிந்துபோய் தானொரு நிழல் போல உணர்ந்தான்.

நள்ளிரவு வரை அவள் வலேசாவோடு படுக்கையில் கிடந்தாள். பிறகு எழுந்து அவனையும் அழைத்துக்கொண்டு இருட்டிற்குள்ளாகவே நடந்து இரண்டு பாறைகளுக்குள் தேங்கிக் கிடந்த நீரில் இறங்கினாள். குளிராக இருந்தது. அவள் தண்ணீருக்குள் கரைந்து போகத் துவங்கினாள். திடீரென அந்தக் கானகம் முழுவதும் தங்களை உற்றுப் பார்த்துக்கொண்டிருப்பது போல அவனுக்குத் தோன்றியது. கண்களால் தண்ணீருக்குள் துழாவியபோது அவளைக் காணவில்லை. எவ்வளவு நேரம் தண்ணீல் இருப்பது என்று புரியாமல் அவன் பாறையின் மீதேறி தன் வீட்டிற்கு நடந்து சென்றான்.

இருட்டினுள் ஏதோ மினுமினுப்பதும் அடங்குவதுமாக இருந்தது. அவன் படுக்கையில் வீழ்ந்தபோது உடல் முறிந்து கிடப்பதைப் போலவே உணர்ந்தான். மறுநாள் காலை வெளிச்சம் அவன் அறைக்கு வந்தபோது அவன் எழுந்து கொள்ளவேயில்லை. காய்ச்சல் கண்டிருந்தது. அவன் உடல் முழுவதும் வேதனை பீடித்திருந்தது. யாரும் அவனை வந்து பார்க்கவேயில்லை. கண்களைத் திறக்க முடியாதபடி எரிச்சலாக இருந்தது. நாக்கில் சுவை நரம்புகள் யாவும் உதிர்ந்துபோய் விட்டனவோ எனும்படியாகத் தடித்துப் போயிருந்தது. அவனால் எழுந்துகொள்ள முடியவேயில்லை.

பகல் அவன் ஜன்னல் வழியாக வீட்டினுள் எட்டிப் பார்த்துவிட்டு திரும்பவும் வெளியேறிப் போய்விட்டது. அவன் புலம்பத் துவங்கினான்.

என்ன சொல்கிறான் என்று தெரியாமல் அவன் புலம்பிக்கொண்டே யிருந்தான். அது கனவா அல்லது நிஜம்தானா என்று பிரித்துக் காண முடியாதபடி அவனுக்குள் சில காட்சிகள் தோன்றி மறைந்தபடியே இருந்தன. இரண்டு நாட்கள் அவன் படுக்கையில் கிடந்தான்.

மூன்றாம் நாளின் காலையில் மூப்பன் ஆறு பேரோடு அவனது அறைக்கு வந்து குடிப்பதற்காகக் காட்டுச்செடியொன்றின் சாற்றைப் புகட்டியபோது குமட்டல் ஏற்பட்டது. அவனது நோவை அப்படியே ஒரு ஆமைக்கு மாற்றிவிடப் போவதாகச் சொல்லியபடியே சிறிய ஆமை ஒன்றை வலேசாவின் கட்டிலின் அடியில் வைத்துவிட்டு முதுவர்களில் ஒருவன் ஏதோ ஒரு வேரைக் கையில் கட்டிவிட்ட படியே மந்திரம்போல முணுமுணுக்கத் துவங்கினான்.

சில நிமிடங்களில் அவன் உடல் வியர்க்கத் துவங்கியது. ஆமை மெதுவாக நகர்ந்து கட்டிலின் அடியிலிருந்து வெளியே வந்தது. அந்த ஆமையைத் தூக்கிக்கொண்டு போட்டு வருவதற்காக வலேசா வோடு உறவு கொண்ட அதே முதுவப் பெண் வந்திருந்தாள். அவள் அலட்சியமான பார்வையோடு ஆமையைத் தூக்கிக்கொண்டு காட்டிற் குள் நடந்து சென்றாள்.

இவை யாவும் நடந்த சில நாட்களில் காடு முழுவதும் பனிப்புகை அடரத் துவங்கியது. காடு மிக ரம்மியமானது. மரங்களுக்கு ஊடாக தனியே அலைந்துகொண்டிருந்த வலேசா தன்னால் அந்த மக்களிடம் ஊடுருவ முடியவேயில்லை என்பதை உணரத் துவங்கினான். அவன் மனதை ஏதோவொன்று அழுத்திக்கொண்டிருந்தது போலவே உணர்ந் தான். அங்கிருந்த முதுவர்களையும் அவர்களின் குடியிருப்புகளையும் சித்திரமாக வரைந்து தனது ஊழியம் நடைபெற்றுக்கொண்டிருப்பதாக வும் சில மாதங்களில் தேவாலயம் கட்டுவதற்கான பணி துவங்கிவிடும் என்றும் அவன் மலபார் மிஷனிற்குச் செய்தி அனுப்பிக்கொண்டி ருந்தான்.

நீண்ட நாட்களுக்குப் பிறகு மலபார் மிஷனில் இருந்து பாதர் கிளாடியஸ் மற்றும் பதினோரு இளம் துறவிகள் அவனைச் சந்திப்பதற் காக மலைக்கு வருவதாகத் தகவல் அனுப்பிய நாளில் அவன் கோபமும் ஆத்திரமும் கொண்ட வனாக அவன் முதுவர்களோடு கருங்குரங்கு வேட்டைக்குக் கிளம்பிச் சென்றான். பாதர் கிளாடியஸை அழைத்து வந்த நாயர்கள் வலேசா ஒரு துஷ்டன் என்றும் அவனால் ஊழியம் செய்வதற்கு ஒருபோதும் இயலாது என்றும் வழிநெடுகச் சொல்லியபடியே வந்தனர்.

கிளாடியஸ் முதுவக் குடியிருப்பிற்கு வந்தபோது வலேசா வைக் காணவில்லை என்பதோடு அங்கே ஒருவர்கூட புனிதரையோ, வேதத்தையோ அறிந்திருக்கவில்லை என்பது ஆத்திரமாக இருந்தது. வலேசா எங்கே சென்றான் என்று முதுவப் பெண்களிடம் விசாரித்த போது அவன் கருங்குரங்கை வேட்டையாடுவதற்காகச் சென்றிருக் கிறான் என்று தெரிய வந்தது. கிளாடியஸ் அவன் வருவதற்காகக்

காத்தி ருக்கத் துவங்கினான். முதுவர்கள் தங்கள் இருப்பிடம் திரும்பி வந்தபோதும் வலேசா அவர்களோடு வரவில்லை.

இரண்டு பகலிரவுகள் அவனுக்காகக் காத்திருந்த கிளாடி யஸ் அவனது முறைகெட்ட நடவடிக்கைகளுக்காக சபை அவன் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டு அவன் தற்காலிக நீக்கம் செய்யப்பட்டிருக் கிறான் என்றும் சில நாட்களில் அவனைப் பிடித்துவந்து தங்களிடம் ஒப்படைப்பதற்காக மகாராஜாவின் வேட்டைக்காரர்கள் அனுப்பப்படு வார்கள் என்றும் சொல்லியபடியே பலாப்பழங்கள், அகில், சந்தனம், மலைவாழைகள் என முப்பதுக்கும் அதிகமான பரிசுப் பொருட்களோடு கிளாடியஸ் மலையிறங்கிப் போகத் துவங்கினார்.

இது நடந்த இரண்டு தினங்களுக்குப் பிறகு வலேசா தன் இருப்பிடத் திற்கு வந்து சேர்ந்து முதுவர்களோடு நாட்டுச்சாராயத்தை உற்சாகமாகக் குடித்தான். பிறகு தன் குறிப்பேட்டில் மனம் போனபடியே வேகவேக மாக எழுதத் துவங்கினான்.

*காடு கடந்த காலத்தை ஒரு போதும் சேகரம் செய்து வைத்துக்கொள் வதில்லை. நினைவுகளில் சிக்கிக்கொள்ளாமல் வனம் காலத்தினுள் சுழன்றுகொண்டேயிருக்கிறது. மலைவாசிகள் காட்டை தங்கள் இதயத்தால் பார்த்துக்கொண்டி ருக்கிறார்கள். காடு ஒருபோதும் உறங்காதது. அதன் பிரமாண்டமான இயக்கம் மனிதர்கள் அறிய முடியாதது. காட்டின் நிசப்தம் அதன் மனிதர்களுக்குள்ளும் நிரம்பி யிருக்கிறது. முதுவர்களின் மொழி இயற்கையில் வேரோடி யிருக்கிறது. புரிந்துகொள்ள வேண்டியது அவர்களின் மொழியை அல்ல மௌனத்தை.*

தனது குறிப்பேட்டை முடித்துத் தூக்கி எறிந்துவிட்டு தன் வசிப்பிடத் தின் வாசலில் வந்து உட்கார்ந்தபடியே அவன் இருட்டை வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தான். தனக்காகத் தன்னுடைய நோவை ஏற்றுக்கொண்ட அந்த ஆமை இந்த நேரம் என்ன செய்துகொண்டிருக் கும், எங்கேயிருக்கும், உயிரோடு இருக்குமா? என்று யோசிக்க யோசிக்க வேதனை கவ்வத் துவங்கியது. அவன் மிதமிஞ்சிக் குடிக்கத் துவங்கினான்.

விடிகாலை வரை அவன் தனித்துக் குடித்துக்கொண்டி ருப்பதை ஒரு முதிய பெண் பார்த்துக்கொண்டிருந்தாள். விடிகாலையில் அவன் காட்டிற்குள் நடந்து செல்லத் துவங்கினான். அதன் பிறகு வலேசாவை யாரும் காணவேயில்லை. அவன் அறையிலிருந்த குறிப்பேடு மற்றும் தினசரிப் பதிவுகள் அடங்கிய டயரி, அவனது உடைகள் யாவையும் மலபார் மிஷனிற்கு முதுவர்கள் கொண்டு ஒப்படைத்தனர்.

மகாராஜாவின் வில்லாளிகள் பதினாறு பேர் வனம் முழுவதும் வலேசாவைத் தேடியும் அவனது கால்தடம்கூட கண்டறிய முடிய வில்லை. நீண்ட காலத்தின் 1927ஆம் ஆண்டு லண்டனை சேர்ந்த

ஆதம் மேத்யூ பதிப்பகத்தின் முதன்மை பதிப்பாசியர் எப்.ஒ. லாப்ஸ்ரே மலபார் மிஷனின் ஊழியம் பற்றிய தொகுப்பு நூலிற்காக வலேசாவின் டயரி ஒன்றைப் படியெடுத்தபோது முடிவில்லாத வனம் குறித்த இரண்டு பத்திகளைக் கண்டார். அதிலிருந்து ஒரு வரியை தனது தொகுப்பு நூலிற்காக மேற்கோளாகப் பயன்படுத்திக்கொண்டார். அவர் மேற்கோளாகக் காட்டிய வரி 'காடு நினைவுகள் இல்லாதது கடவுளைப் போல' என்றிருந்தது.

# எழுதத் தெரிந்த புலி

எழுதத் தெரிந்த புலி காட்டிலிருந்து பிடிபட்டுக் கொண்டு வரப்பட்ட புலி ஒன்று சர்க்கஸ் கூண்டிற்குள் அடைக்கப்பட்டிருந்தது. கூண்டில் அடைக்கப்பட்ட மற்ற மிருகங்களைப் போல இல்லாமல் பகலும் இரவும் அந்தப்புலி நடந்துகொண்டேயிருந்தது. ஏன் அப்படி கூண்டிற் குள் அலைகிறது என்று எவருக்கும் தெரியவில்லை. ஒரு நாள் எங்கிருந்தோ ஊர்ந்து வந்த நத்தையொன்று புலிக்கூண்டின் மீது உட்கார்ந்தபடியே அதைப் பார்த்துக்கொண்டிருந்தது. புலி ஓய்வில்லா மல் வட்டமாகச் சுற்றிக்கொண்டிருப்பதைக் கண்டு எதற்காக இப்படிச் சுற்றிக்கொண்டிருக்கிறாய் என்று கேட்டது. அதற்கு புலி பதில் சொல்லவில்லை. உடனே நத்தை கூண்டிற்குள் அடைபட்டு கிடப்பது பயமாக இருக்கிறதா என்று கேட்டது. அதற்கு புலி நான் சுற்றிக் கொண்டிருக்கவில்லை. எழுதிக்கொண்டிருக்கிறேன் என்றது. நத்தைக்கு அது புரியவில்லை. எப்படி என்று கேட்டது. கூண்டிற்குள் அடைபட்ட பிறகு வாழ்க்கையில் எதுவும் மிச்சமிருப்பதில்லை. பூஜ்யமாகிவிடு கிறோம். இப்போது நான் வெறும் பூஜ்யம் என்பதை ஒவ்வொரு முறையும் எனக்கு நானே நினைவுபடுத்திக்கொள்ள வேண்டியதிருக் கிறது. இல்லாவிட்டால் இந்தக் கூண்டு பழகிப்போகும், அதன் உணவு பழகிப்போகும் வேடிக்கை பார்ப்பவர்கள் முகம் பழகிப்போகும். பிறகு நான் கூண்டுப்புலியாக சுகமாக வாழப் பழகிவிடுவேன். அது கூடாது. அது ஒரு இழிவு. இப்போது முடக்கப்பட்டு நான் அடையாளமற்றுப் போயிருக்கிறேன் என்ற உண்மை மனதில் இருந்து கொண்டேயிருந்தால் மட்டுமே விடுதலையைப் பற்றிய நினைவு வளர்ந்துகொண்டேயிருக்கும், அதற்காகவே பகலும் இரவும் வட்ட மாக சுற்றி வந்தபடியே எழுதிக்கொண்டிருக்கிறேன் என்றபடி புலி நடக்கத் துவங்கியது. அதைக்கேட்ட நத்தை சிரித்தபடியே சொன்னது. நல்லவேளை நத்தைகளை எவரும் பிடித்து கூண்டில் அடைப்பதில்லை. உடனே ஆத்திரமான புலி சொன்னது நானாவது பிடிபட்டு ஒடுங்கிக் கிடக்கிறேன். நீ பிறப்பிலிருந்தே கூட்டில் அடைபட்டுக் கிடக்கிறாய். கூண்டில் அடைக்கப்படுவது தற்காலிகம், கூண்டிற்குள்ளே பிறந்து வளர்ந்து பயந்து சாவது அற்பமானது. நத்தைகள் வெறும் ஊமை.

நான் அடைபட்டுக் கிடந்த போதும் என் குரல் அடைக்கப்படவில்லை. கேள் என் ரௌத்திரத்தை என்றபடியே புலி உறுமியது. அந்தக் குரலின் ஆழத்தில் அடர்ந்த கானகம் உக்கிரமாக நடனமாடிக் கொண்டிருந்தது. நத்தை வெளியேறும்போது சொன்னது, பிடிபட்டதை விடவும் அதை நினைத்துக்கொண்டிருப்பது தீராதவலி. பிடிபட்ட திலிருந்து மௌனமாக இருப்பதால்தான் உனக்குள் கோபம் நிரம்பி யிருக்கிறது. மௌனத்தைக் கைக்கொள்வது எளிதானதில்லை. பல நேரங்களில் மௌனம் வாழ வைக் கிறது. பல நேரம் நம்மை சாகடிக்கிறது. புலியாக இருப்பதா, நத்தையாக இருப்பதா என்பதில் இல்லை பிரச்சினை, அதைப் பிடித்து அடைப்பவன், அழித்து ஒழிக்க நினைப்ப வனின் அதிகாரத்தில்தானிருக்கிறது. நீயும் நானும் ஏன் நண்பா கோபம் கொள்ளவேண்டும் என்றபடியே மெதுவாகக் கடந்து போகத் துவங்கியது யோசிக்கத் தெரிந்த நத்தை.

# மூன்று பால்ய கதைகள்

1

## வட்டக்கண்ணாடி

பத்து வயதிருக்கும்போது கையில் வைத்துப் பார்ப்பது போன்ற வட்டக்கண்ணாடி ஒன்றை அப்பா வாங்கி வந்திருந்தார். அப்போது நாங்கள் சூலக்கரை என்ற சிறிய கிராமத்திலிருந்தோம். அந்தக் கண்ணாடி வரும்வரை வீட்டில் இருந்த ஆள்உயரக் கண்ணாடியில் தான் முகம் பார்த்துக்கொள்வோம். அது சுவரில் அடிக்கப்பட்டு இருந்தது. அதன் எதிரில் போய் நின்று எக்கினால்தான் முகம் தெரியும். இதற்காகவே சிறிய உட்காரும்பலகையைத் தேடி எடுத்து வந்து போட்டு ஏறி நின்று முகம் பார்ப்பேன்.

கிராமங்களில் பெரும்பான்மை வீடுகளில் முகம் காட்டும் கண்ணாடிகள் கிடையாது. ஒருவேளை இருந்தாலும் ரசம் போயிருக்கும். வட்டக்கண்ணாடி வாங்கி வந்த நாளில் இருந்து அதைக் கையில் வைத்தபடியே வீட்டில் இருந்த டம்ளர் தட்டு துவங்கி ஒவ்வொரு பொருளாக அதில் எப்படித் தெரிகிறது என்று பார்த்துக் கொண்டிருப்பேன்.

வீட்டின் முன்பாக ஒரு பெரிய வேப்பமரமிருந்தது. அந்த வேம்பின் அருகில் போய் நின்றபடியே அதற்குக் கண்ணாடி காட்டினேன். அநேகமாக அன்றுதான் வேம்பு முதன்முறையாகத் தன்னைப் பார்த்துக்கொண்டிருக்க வேண்டும். நான் ரகசியமாக கண்ணாடியில் தெரியும் வேம்பை எட்டிப் பார்த்தேன். காய்கள் நிரம்பிய கிளைகளுடன் ஆடும் இலைகளை அசைத்தபடியே வேம்பு ஒய்யார மாக இருந்தது.

அதன்பிறகு கோழிகள் ஆட்டுக்குட்டிகள் வேலியில் அலைந்து கொண்டிருக்கும் ஓணான் என்று என் கண்ணில் பட்ட பொருட்கள் அத்தனையின் முன்னாலும் கண்ணாடியைக் காட்டிக் கொண்டேயிருந்தேன். ஓணானைக் கண்ணாடி பார்க்க வைப்பது

எளிதானதில்லை. அது தாவியோடிவிடும். இதற்காகவே வேலிப்புதரி னுள் கண்ணாடியைப் போட்டுவிட்டு ஒதுங்கி நின்றுகொண்டேன். ஓணான் கிளையை விட்டுக் கீழே இறங்கிவந்து கண்ணாடியின் மீதே நின்றது. ஏய் ஓணான் கண்ணாடி பார்த்துக்கோ... ஓணான் கண்ணாடியைப் பாரு. என்று ரகசியமாக முணங்கினேன். ஆனால் அது திரும்பவேயில்லை. பிறகு தலையைச் சிலுப்பியபடியே தன்னை ரகசியமாகப் பார்த்துக்கொண்டது. இப்படி எறும்பு, பூனை, அணில், கோழிக்குஞ்சு, வான்கோழி, என என்னைச் சுற்றிய உலகம் யாவும் கண்ணாடியின் வழியாகத் தன்னைப் பார்த்துக்கொண்டது.

சிறுவயது முழுவதும் இரவில் மொட்டைமாடியில்தான் படுத்துறங் குவேன். அப்போதும் என் அருகில் அந்தக் கண்ணாடியிருக்கும். இருட்டில் அதில் நட்சத்திரங்கள் தெரிவது மங்கலாக இருக்கும். கண் அருகே வைத்து ஆகாசத்தைப் பார்த்தபடியே இருப்பேன். வானைப் பார்த்தபடியே வைத்த என் கண்ணாடியில் நிலா ஊர்ந்து போயிருக்கிறது.

ஒரு நாள் கண்ணாடியை வயலின் நடுவேயிருந்த கிணற் றுக்குக் கொண்டு சென்றேன். கண்ணாடியின் வழியாகக் கிணறு எப்படித் தெரிகிறது என்று பார்ப்பதற்காக முயற்சித் தேன். அதன் முன்பாக நான் பார்த்தறியாத பொருள் போல இருந்தது. கையில் வைத்து முன்பின்னாக ஆட்டிப் பார்த்துக்கொண்டிருந்தபோது கண்ணாடி நழுவி கிணற்றி னுள் விழுந்தது. மறு நிமிசம் யோசிக்கவேயில்லை. கிணற்றின் உயரத்திலிருந்து தாவிக் குதித்து கண்ணாடியை மீட்க முயற்சித்தேன். கிணற்றின் அடியில் பாசியும் புதை சேற்றுக் கும் நடுவில் கண்ணாடி விழுந்து கிடந்தது. கைகளால் தடவி கண்ணாடி உடைந்துவிட்டதா என்று பார்த்தேன். கண்ணாடி உடையவில்லை. ஆனால் சேறு படிந்துபோயிருந்தது. தண்ணீருக்குள்ளாகவே உலுக்கினேன். கண்ணாடியில் எதுவும் தெரியவில்லை.

கிணற்றின் படிக்கட்டிற்கு நீந்திவந்து உட்கார்ந்துகொண்டு கண்ணாடியை சுத்தமாகக் கழுவினேன். கண்ணாடியில் தண்ணீர் வழிவது கிளர்ச்சிதருவதாக இருந்தது. திடீரென ஏனோ கண்ணாடி யைத் தண்ணீருக்குள் விட வேண்டும் என்று தோன்றியது. மூழ்கியிருந்த படிக்கட்டில் விட்டேன். இப்போது தண்ணீர் தன்னைக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டிருக்கிறது என்பதை உணர முடிந்தது. கைகளால் அலைபோல அடித்ததும் கண்ணாடியில் சலனம் ஏற்பட்டது. இதனால் தாங்க முடியாத கிளர்ச்சியும் சிரிப்பும் வந்தது. கண்ணாடியைக் கையில் எடுத்துக்கொண்டு கத்தினேன். கிணற்றின் சுவரில் பட்டு என் குரல் துள்ளி மறைந்தது.

பிறகு வயல் வரப்பின் வழியே தனியே நடந்து வந்தபோது பின்தொடரும் பருந்தென சூரியன் வந்துகொண்டிருந்தது. சூரியனை என் கண்ணாடியில் ஒளிரச் செய்து வெளிச்சத்தை நீண்டு சிதற விட்டேன். தலைக்கு மேலாகக் கண்ணாடியைப் பிடித்தபடியே

தெருவில் ஓடினேன். யார் என்மீது மோதினார்கள் என்று தெரியாது. ஆனால் கையிலிருந்த கண்ணாடி எகிறிப் போய் உடைந்து சிதறியது. இருபது முப்பது சில்லுகளாகத் தெறித்து ஒவ்வொன்றிலும் வெளிச்சம் துள்ளிக்கொண்டிருந்தது. தெருவில் உட்கார்ந்தபடியே ஆங்காரத்துடன் கத்தினேன். உடைந்த கண்ணாடியைத் திரும்ப எடுத்து ஒட்ட வைக்க முயன்றேன். கண்ணாடி ஒன்று சேரவேயில்லை. விவரிக்கமுடியாத வலி உண்டானது. நிறைய நேரம் அழுதேன். ஆனால் இதை யாரிடமும் சொல்லவேயில்லை.

கண்ணாடியைப் பற்றி எப்போது நினைக்கும்போதும் கிணற்று நீரில் அசையும் கண்ணாடி மனதில் தோன்றி மறைகிறது. இதை என்னால் ஏன் நினைவில் வைத்திருக் கிறேன் என்று இன்று வரை தெரியவேயில்லை.

## 2

## களிமண்ணால் செய்த மீன்

களிமண்ணால் பொம்மைகள் செய்வது அந்த நாட்களில் பெரிய கலை. களிமண்ணில் பொம்மை செய்வதை அறிந்தவர்கள் என் வகுப்பில் இரண்டே பேர்கள் இருந்தார்கள். ஒன்று சங்கரேஸ்வரி. மற்றது கணேசன். ஆனால் இருவருமே வீம்பு பிடித்தவர்கள். யார் கேட்டாலும் செய்து தர மாட்டார்கள். இதற்காகவே கணேசனை நண்பனாக்கிக் கொண்டேன். இதற்கு விலை நாலு வில்ஸ் சிகரெட் அட்டைகள். அன்றைய செலாவணியில் பணத்தைவிட மிக முக்கியமாக இருந்தவை சிகரெட் அட்டைகள்.

வில்ஸ் சிகரெட் அட்டைகள் உசத்தியானவை. பாசிங் ஷோ, சிசர்ஸ் யானை போன்றவை ஒப்புக்குச்சப்பாணிகள். சிகரெட் அட்டைகள் பொறுக்குவதற்காகவே சைக்கிள் எடுத்துக்கொண்டு அருகாமையில் உள்ள சாலையோரப் பெட்டிக்கடைகளுக்குச் செல்வோம். சில நேரம் மதுரைக்குப் போகும்போது தெருவெங்கும் சிகரெட் அட்டை பொறுக்குவதுதான் என்வேலை. இப்படி சிகரெட் அட்டை கொடுத்து கணேசனை நண்பனாக்கிக் கொண்டதால் அவன் களிமண்ணில் எப்படி பொம்மைகள் செய்வது என்பதைக் கற்றுத் தருவதாகச் சொன்னான்.

இதற்காக நிறைய களிமண் தேவை என்பதால் நடந்தே அருகாமை யில் உள்ள கண்மாய்க்குச் சென்று களிமண் சேகரித்துவந்தோம். கணேசன் கை நிறைய மண்ணை எடுத்து குதிரைச் சிலை போன்று ஒன்று செய்து காட்டினான். அதுபோன்று நானும் செய்ய முயற்சித்தால் அது குதிரையின் ஜாடையில் வராமல்போனதோடு பன்றிக்கும் கழுதைக்கும் பிறந்த பிள்ளை போன்ற தோற்றத்தில் இருந்தது. ஆத்திரத்தில் நானே அதை சிதைத்தும்விட்டேன்.

ஆனால் களிமண்ணின் மிருதுவும் விரல்களை அது பற்றிக் கொள்ளும் ஈரமும் பிடித்துப்போகவே களிமண்ணில் வேலை செய்வது விருப்பமானதாகிபோனது. எப்போதும் எங்கிருந்தாவது களிமண்ணைக் கொண்டுவருவது. அதை வைத்துக் கற்பனையாக எதையாவது செய்து பார்ப்பது என்றிருப்பேன். இதன் உடனடிப் பயன் சட்டையில் டவுசரில் களிமண் ஒட்டிக் காய்ந்து போவது. மற்றொன்று எப்போதும் கையில் களிமண் கறையிருப்பது. இதை அறிந்த அம்மா களிமண்ணை நான் தொடவே கூடாது என்று திட்டினார்.

இதனால் ரகசியமாக பள்ளிக்கூடத்தின் பின்னால் வைத்து களிமண்ணால் எதையாவது செய்வேன். செய்த உருவத்தை வீட்டிற்குக் கொண்டுவர முடியாது என்பதால் அருகில் உள்ள கோவில் கிணற்றில் போட்டுக் கரையச் செய்துவிடுவேன். அப்படியொரு நாள் களிமண்ணில் சிறிய மீன் செய்தேன். எனக்கே ஆச்சரியமாக இருந்தது. அது நிஜமான மீன் போன்ற வடிவத்தில் இருந்தது. அதற்குச் சிறிய கண்கள் செதில் எல்லாமும் குச்சியைக் கொண்டு கீறி உருவாக்கினேன். பிறகு கையில் எடுத்துக்கொண்டு போய் கிணற்றில் போட்டேன். ஒரு நிமிஷம் அந்த மீன் நீந்திக்கொண்டு போனது போலிருந்தது. களிமண்ணால் செய்த மீன் நீந்துமா என்ற சந்தேகம் எல்லாம் எனக்கு வரவில்லை. மனது மிக சந்தோஷமாக உணர்ந்தது, நான் செய்த களிமண் மீனும் இந்தக் கிணற்றில் இருக்கிறது என்று. இதைப் பற்றி கணேசனிடம் சொன்னபோது அவன் மிகவும் பரிகாசம் செய்ததோடு களிமண்ல செஞ்ச மீனு நீந்துச்சாம் என்று வகுப்பு முழுவதும் சொல்லிவிட்டான். எல்லோரும் ஏளனம் செய்தார்கள். ஆனால் இன்றைக்கும் எனக்கு அந்தக் களிமண் மீன் நீந்தியது என்றுதான் தோன்றுகிறது. நிஜமா பொய்யா என்பது அவரவர் கற்பனையைப் பொறுத்ததுதான் இல்லையா?

## 3

## வீசி எறிந்த காசு

ஒருநாள் மதியம் நடுத்தெரு எனப்படும் நெசவாளர்கள் வீதி வழியாக நடந்து வரும்போது எட்டணா ஒன்றைக் கண்டு எடுத்தேன். ஆச்சரியமாக இருந்தது. யார் அதைக் கீழே போட்டிருப்பார்கள். வெற்றிலை எச்சில் பட்டது போன்று சிவப்பான கறையோடு இருந்தது. யாரும் பார்க்கிறார்களா என்று அவசரமாகப் பார்த்துவிட்டு அதைக் குனிந்து எடுத்து டவுசரில் துடைத்துக்கொண்டு வேகமாக ஐஸ் விற்கின்றவனிடம் ஓடினேன்.

அவன் மரத்தடியில் நின்று கொண்டிருந்தான். ஐம்பது பைசாவிற்கு இரண்டு பால் ஐஸ்கள் கிடைக்கும். இரண்டு ஐஸ்களை வாங்கி ஒரே நேரத்தில் தின்றுகொண்டிருந்தேன். என்னோடு படித்த செல்வராஜ் சேமியா ஐஸ் வாங்கித் தின்றபடியே தனக்கொரு பால் ஐஸ்

தரும்படியாகக் கேட்டான். நான் வேண்டும் என்றே அவனைப் பார்க்க வைத்துக்கொண்டு இரண்டையும் தின்றேன்.

உடனே ஆத்திரத்தில் காசை வீட்டில் இருந்து திருடிட்டு வந்துட்டயா என்று கேட்டான். அநேகமாக அன்று பெரும் பான்மை சிறுவர்கள் காசைத் திருடுவதில் எத்தர்களாகத்தான் இருந்தார்கள். நான் இல்லை கீழே கிடந்தது என்றேன். எங்கே என்று கேட்டான். நெசவாளர்கள் வீதியில் என்றதும் அய்யய்யோ அது கழிப்பு கழிச்ச காசு அதையா எடுத்தே என்று கேட்டான். அப்படி என்றால் என்ன வென்று கேட்டேன். திருஷ்டிக்காகக் கழிப்பு கழித்து சுற்றிப் போடுவார்கள். அதைத் தொடவே கூடாது. மீறி எடுத்துச் செலவழித்து விட்டால் ரத்தம் கக்கி உடனே செத்துவிடுவார்கள் என்று சொன்னான்.

அவன் சொல்லிக்கொண்டிருந்த போதே லேசாக மயக்கம் வருவதுபோலிருந்தது. வேண்டும் என்றே அவன் இப்பவே உன் வீட்ல போய்ச் சொல்லிடுறேன் என்று வேகமாக ஓடினான். எனக்கு ஒரு பக்கம் பயம். மறுபக்கம் வீட்டில் வாங்கப் போகின்ற அடி இரண்டுமாக மனது தவிக்கத் துவங்கியது. சில நிமிசத்தில் அவனே வந்து உன்னை இழுத்துக்கொண்டு வரும்படியாக உன் வீட்டில் சொன்னார்கள். உடனே வா என்று என் கையைப் பிடித்து இழுத்தான். ஒரு பக்கம் வீட்டுக்குப் போக வேண்டும் என்று தோன்றுகிறது. மறுபக்கம் வீட்டிற்கு போகக் கூடாது என்று தோன்றுகிறது. பயத்தில் வீட்டிற்குப் போய்ச் சேர்ந்தேன். ஆளுக்கு ஆள் திட்டு. வசவு.

அதன்பிறகு இதற்குப் பரிகாரமாக என்ன சடங்குகள் செய்வது என்பதைப் பற்றிய ஆலோசனைகள் வந்தன. அதன்படியே அன்றிரவு என்னை உட்கார வைத்து மிளகாய் சுற்றிப் போட்டு கோவிலில் சூடம் கொளுத்தி தலையைச் சுற்றி ஐம்பது பைசாவை விட்டெறிந் தார்கள்.

அன்று இரவு முழுவதும் எனக்கு ஒரு யோசனை வந்துகொண்டே யிருந்தது. என்னிடம் ஐம்பது பைசாவை வாங்கிய ஐஸ்காரன் என்ன ஆவான்? அவனிடம் இந்த விஷயத்தைச் சொல்வதா வேண்டாமா? ஒரு வேளை அவனும் ரத்தம் கக்கிச் சாவானா என்று தோன்றிக்கொண்டேயிருந்தது.

மறுநாள் செல்வராஜ் ஐஸ்காரனிடமும் உண்மையைச் சொல்லி விட்டான். அவன் பயத்தில் என்வீடு தேடி வந்து முறையிட மறுநாளும் இந்தப் பிரச்சினையைக் கிளப்பியது. அதன்பிறகு ஐஸ்காரன் எங்கள் ஊர்ப் பக்கம் வரவேயில்லை. நாங்கள் திருஷ்டிக்கு வீசி எறிந்த காசை நிச்சயம் இன்னொரு சிறுவன் கண்டு எடுத்துச் செலவழித்திருப்பான் என்று மட்டும் இன்றும் எனக்குத் தோன்றிக்கொண்டேயிருக்கிறது. அந்தச் சிறுவன் யாராக இருப்பான் என்றுதான் தெரியவில்லை.

# பேராலயம்

பதினாறு பேர்கள் வந்திருந்தார்கள். அவர்கள் முகங்களில் நீண்ட பயணத்தின் அசதியும் களைப்பும் பீடித்திருந்தது. அறை கிடைக்காமல் இரண்டு நாட்களைப் பகிர்ந்துகொள்வதாக நான் தங்கியிருந்த மேன்ஷனின் பொதுப் படுக்கை அறையை ஆக்கிரமித்திருந்தார்கள். இருபது வயதிலிருந்து எழுபது வயதைக் கடந்த அவர்கள் நெருக்கமான முகத் தோற்றமும் கொண்டிருந்தார்கள்.

கிழக்கு வங்காளத்திலிருந்து மூன்று மாதங்களுக்கும் மேலாக நடந்து வந்து சேர்ந்திருக்கிறார்கள் என்று அறைக் காப்பாளர் சொல்லிக்கொண்டிருந்தார். எதற்காக வந்திருக்கிறார்கள் என்று விசாரித்தேன். ஏதோ ஒரு பேராலயத்தை வழிபடுவதற்காக என்றபடியே இவர்களைப் போன்று சிலர் ஆறேழு வருசத்தின் முன்னால் இங்கே வந்து தங்கியிருக்கிறார்கள், என்ன கோவில் என்று தெரியவில்லை என்று நினைவுபடுத்தினார்.

அவர்களை வழிநடத்துகின்ற வயதானவர் மஞ்சள் தலைப்பாகை அணிந்திருந்தார். அவரது கையில் நாவில்லாத மணியொன்று இருந்தது. சப்தமிடாத மணியை எதற்காகக் கையில் வைத்துக்கொண்டிருக்கிறார் என்று வியப்போடு பார்த்துக்கொண்டிருந்தேன்.

அவர் சில நேரங்களில் அந்த மணியை அசைத்தவுடன் அங்கிருந்தவர்கள் முகத்தில் மாற்றம் ஏற்படுவதைக் காண நேர்ந்தது. அவர்கள் எவரும் எவரோடும் பேசிக்கொள்ளவில்லை. தண்ணீரைக்கூட உள்ளங்கையில் ஏந்தித்தான் குடித்தார்கள். பசித்த வேளைகளில் தாங்கள் கையோடு கொண்டுவந்திருந்த பேரீச்சைப்பழங்களைப் போல ஒன்றைச் சாப்பிட்டார்கள்.

வணிகமயமாகிப் போய்விட்ட இந்தப் பெருநகரில் அப்படி என்ன வழிபாட்டு ஸ்தலமிருக்கிறது என்று புரியாமல் அந்த வயதானவரிடம் கேட்டேன். அவர் புன்னகைத்தபடியே பதில் சொல்லாமல் விலகிப் போனார்.

பகல் நேரங்களில் அவர்கள் வட்டமாக உட்கார்ந்து கொண்டு தலைகவிழ்ந்தபடியே தங்களது கைவிரல்களை ஒன்று சேர்த்துக்கொண்

டார்கள். ஏதாவது பிரார்த்தனை செய்கிறார்களா என்று உற்றுப் பார்த்தபோது அவர்கள் உதடுகள் அசையவில்லை. ஆனால் விருப்ப மான பொருள் ஒன்றைப் பார்ப்பதுபோல அவர்கள் வெறும் தரையைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

என்ன மதத்தைச் சேர்ந்தவர்கள் அவர்கள், எதற்காக இப்படி உட்கார்ந்திருக்கிறார்கள் என்று புரியாமல் அவர்களைக் கடந்து போனேன். இரண்டாம் நாளின் இரவில் நட்சத்திரங்கள் வானில் நடமாடத் துவங்கிய பிறகு வயதான ஒரு ஆள் மட்டும் மாடிக்கு ஏறிச் சென்று வானை உற்று நோக்கியிருந்துவிட்டு கீழே வந்து அவர்களை மாடிக்கு அழைத்துச் சென்றார்.

பதினாறு நபர்களும் தாமரை மலர்ந்திருப்பது போல வேறுவேறு திசைநோக்கித் திரும்பி வானை நோக்கி மண்டியிட்டபடியே ஆகாசத்தைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். வானம் முழுவதும் நட்சத்திரங்கள் நிரம்பியிருந்தன. என்ன தேடுகிறார்கள் என்று புரியாமல் தண்ணீர் டேங்க்கின் இரும்புப் படியில் அமர்ந்தபடியே அவர்களைப் பார்த்துக்கொண்டிருந்தேன்.

ஒவ்வொருவரின் கண்களிலும் கைதவற விட்ட எதையோ தேடும் வேட்கை தீவிரமாக இருந்தது. அன்றைய இரவில் கடற்காற்றும் குளிரும் அதிகமாகத் துவங்கியது. வழக்கமாக மாடியில் படுத்து உறங்கும் ஒன்றிரண்டு நபர்கள் பாயை விரித்து உறங்க துவங்கி யிருந்தார்கள். நீருற்றைப் போல சப்தமின்றி இருள் கசிந்து பெருகிக் கொண்டிருந்தது.

அவர்கள் முகம் மறைந்து போய் இருளுள் ஒடுங்கியிருந்தார்கள். நானும் வானைப் பார்த்தபடியே இருந்தேன். வானில் நிலா ஒளிவதும் வெளிப்படுவதுமாக இருந்தது. வழி மறந்த பறவை ஒன்று தனியே பறந்துகொண்டிருந்தது. ஆரவாரமற்ற நதியைப் போல ஆகாசத்தினுள் நட்சத்திரம் உயர்வதும் வீழ்வதுமான பேரியக்கம் நடந்து கொண்டிருந்தது.

வாகன இரைச்சல்களும் மனிதநடமாட்டமும் குறைந்து இரவின் நீள்அமைதி கூடியது. சாலைகள் தன் மௌனத்திற்குத் திரும்பியிருந்தன. பின்னிரவில் நிலா வெளிச்சம் கரைந்தோட கலங்கிய வெளிச்சத்தில் அவர்கள் உருவம் தென்பட்டது.

அப்படி வானில் என்ன இருக்கிறது என்று புரியாமல் குழம்பிய படியே இருந்தேன். என்னால் உறக்கத்தைக் கட்டுப்படுத்த முடிய வில்லை. அவர்களோ கற்சிலைகளைப் போல அசைவற்று மண்டியிட்டு இருந்தனர்.

யாவரும் உறங்கிய பிறகான வானம் கைதொடும் நெருக் கத்திற்கு வந்துவிட்டது போலிருந்தது. கடற்காற்றின் வேகம் அதிகமாகியது. மண்டியிட்டவர்களில் ஒருவன் தன்னை மறந்து ஏதோவொரு சொல்லை உரக்கச் சொன்னான். நிமிஷத்தில் தன் தவறை உணர்ந்த

வனை போல அவன் தலைகவிழ்ந்துவிட்டது.

வானில் அப்போது ஏழு நட்சத்திரங்கள் ஒரே திசையில் மின்னிக் கொண்டிருந்தன. பதினாறு நபர்களும் எதற்கோ கைகூப்பி நன்றி சொன்னார்கள். அவர்கள் கண்கள் குவிந்திருந்த திசை எது என்று அருகில் சென்று பார்த்தேன். நட்சத்திரங்களையும் கடந்து அவர்கள் எதையோ பார்த்துக்கொண்டிருப்பது போன்றிருந்தது.

என்னால் தூக்கத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை. உறக்கத்தின் விரல்கள் என்னை இழுத்துச் செல்லத்துவங்கின. கண்விழித்தபோது காலைவெயில் இரும்புப் படிகளில் இறங்கி வழிந்துகொண்டிருந்தது. ஈர ஆடைகள் கொடிகளில் உலரத் துவங்கியிருந்தன. இரவில் அவர்கள் மண்டியிட்ட இடத்தில் அதன் சுவடேயில்லை.

காலையில் கீழே வந்தபோது அவர்கள் அறையை காலி செய்து போயிருந்தார்கள். எங்கே போனார்கள் என்று கேட்டேன். தாங்கள் வந்த வேலை முடிந்துவிட்டது என்று சொல்லி சந்தோஷமாகக் கிளம்பிப் போய்விட்டார் கள் என்றார்.

நான் பார்த்த வானைத்தான் அவர்களும் பார்த்தார்கள். ஆனால் என்ன பார்த்தார்கள். என் கண்ணிற்குத் தெரியா மல் அவர்களுக்கு மட்டும் ஆகாசத்தில் என்ன தெரிந்தது. இதைக் காண்பதற்குத்தான் இவ்வளவு பகலிரவுகள் நடந்து வந்தார்களா? என்ற திகைப்போடு மாடிக்குத் திரும்பவும் ஓடினேன்.

ஆனால் பகலில் மேகங்களற்ற வானம் வெளிறிக் கிடந்தது. பறவைகளைக்கூடக் காணவில்லை. எதையோ கண்முன்னே தவற விட்டதைப் போல உணர்ந்தவனாக அறைக்காப்பாள ரிடம் போய் அவர்கள் திரும்ப வருவார்களா என்று கேட்டேன். தெரியவில்லை ஒருவேளை வரக்கூடும். ஆனாலும் இங்கே வந்து தங்குவார்களா எனத் தெரியாது என்றார்.

இத்தனை ஆண்டுகளாகப் பார்த்துப் பழகிய நகரமும் வானமும் இரவும் நான் அறியாத மர்மம் கொண்டது என்ற திகைப்பிலிருந்து வெளிவர என்னால் முடியவில்லை. என்ன தேடினார்கள். என்ன அடைந்தார்கள். யோசிக்கையில் இந்த நகரம் தன் அத்தனை பகட்டையும் தாண்டி எங்கோ காலத்தின் மிச்சமாக உள்ள இடுகாட்டி னைப் போலிருந்தது.

அவர்கள் பேசிக்கொண்டார்களா என்று நடுக்கத்துடன் கேட்டேன். காப்பாளர் கவனிக்கவில்லை. அதில் என்ன இருக்கிறது என்றார். பதில் சொல்லத் தெரியவில்லை. ஆனால் எனக்குக் கிழக்கு வங்காளத்திற்குப் போகவேண்டும் போலிருக்கிறது. ஆனால் பயமாகவும் இருக்கிறது.

# ஹசர் தினார்



அவனுக்குப் பெயர் கிடையாது. அவனை விலைக்கு வாங்கியவர்களின் விருப்பத்திற்கு ஏற்ப அவனது பெயர் மாறிக்கொண்டேயிருந்தது. கடைசியாக அவனை விலைக்கு வாங்கிய வணிகன் ஆயிரம் தினார் விலை கொடுத்து வாங்கியிருந்தான். அன்றிலிருந்து அவனை ஹசர் தினார் என்று அழைக்கத் துவங்கினார்கள்.

அந்த வணிகனிடம் அவனைப் போல இருபதுக்கும் மேற்பட்ட இளவயது ஆண்களிருந்தார்கள். தேசம் முழுவதுமே ஆண் மோகம் கொண்டவர்கள் அதிகமாகியிருந்தார்கள். அழகான பெண்களை அடைவதை விடவும் ஆண்களோடு உடல் உறவு கொள்வதற்கே ஆசைப்பட்டார்கள்.

ஹசர் தினாரின் உரிமையாளன் விசித்திரமான பழக்கங் கள் கொண்டவன். அவன் பருவவயது ஆண்களோடு சல்லாபம் செய்த படியே குளிப்பதில்தான் அதிக ஈடுபாடு கொண்டிருந்தான். இதற்காகவே அவனிடமிருந்த அடிமைகள் குளியலின்போது எப்படியெல்லாம் களிப்பை உண்டாக்க முடியும் என்பதை யோசிக்க வேண்டியதிருந்தது.

ஹசர் தினாரின் பால்யம் முழுவதும் வேசைகளோடும், ஒதுக்கப்பட்ட பெண்களோடுமே கழிந்தது. ஆகவே அவனால் உடல் உணர்ச்சிகளை எளிதாக மீட்டி மேலேற்ற முடிந்தது. அதற்காகவே ஒரு குளியல் தொட்டியை உருவாக்கியிருந்தான். அதில் வேளைக்கு ஒரு நறுமணமும், குளியல் முறையையும் அறிமுகம் செய்து கொண்டிருந்தான் ஹசர் தினார்.

டெல்லியில் அப்போது சுல்தான் கில்ஜியின் ஆட்சி நடந்துகொண்டிருந்தது. வேசையர் விடுதிகள் யாவையும் தடை செய்துவிட்ட கில்ஜி நகரமெங்கும் ஒருபால் புணர்ச்சிக்கான ஆண்களையும் பால்பேதமிக்க அரவாணிகளையும் மட்டுமே அனுமதித்திருந்தார். விலக்கப்பட்ட வேசைகள் பிச்சைக்காரர்களைவிடவும் கேவலமாக பசியோடு தெருவில் அலைந்து திரியத் துவங்கினார்கள்.

இளவயதுப் பையன்களைப் புணர்ச்சிக்கு ஏற்பாடு செய்யும் கேளிக்கைக்கூடங்கள் நகரமெங்கும் உருவாகின. கில்ஜி வெளிப்படை

யாகவே தனக்குப் பிடித்தமான ஆண்களோடு ஒன்றாகப் பவனி வரவும் பொது இடங்களில் அவர்களது அந்தரங்க உறுப்புகளோடு விளையாடவும் செய்கின்றவராக இருந்தார். டெல்லி நகரமே மோகத்தின் கொந்தளிப்பில் இருந்தது.

ஹசர் தினார் தன் பெயரை எப்படியாவது தன்னிடமிருந்து விலக்கிவிட வேண்டும் என்ற வெறியோடு இருந்தான். பெயரே இல்லாமலிருந்தால்கூடப் பரவாயில்லை. இந்தப் பெயர் ஒரு கறைபடிந்த அடையாளமாக இருந்தது. தனிமையில் அவன் தனக்கு உரிய பெயர் எதுவாக இருக்கும் என்று யோசித்துக்கொண்டேயிருப்பான். வேசையின் பிள்ளையாகப் பிறந்து ஒரு பெயரைக்கூட தனக்குச் சொந்தமாக்கிக்கொள்ள முடியவில்லையே என்ற ஆதங்கம் அவனுக்குள் கொதித்துக்கொண்டிருந்தது.

அவனுக்குச் சொந்தமானது ஒரு அறை மட்டுமே. அந்த அறையில் இருந்த ஒரு கூண்டில் ஒரு குருட்டுக் கிளி மட்டுமே துணையாக இருந்தது. அது தான் கற்று வைத்திருந்த சில வார்த்தைகளைத் திரும்பத் திரும்பக் கத்திக்கொண்டேயிருந்தது. சில வேளைகளில் அந்தக் குருட்டுக் கிளியைத் தன் கைகளில் இறுக்கிக் கொன்று விடலாமா என்று ஆத்திரப்படுவான்.

அந்தக் கிளியும் இல்லாமல் போய்விட்டால் தனது கோபத்தைக் கொட்டுவதற்குக்கூட ஆள் இருக்கமாட்டார்கள் இல்லையா? பகலும் இரவும் அவன் தனது யார் யார் மீதோ இருந்த வெறுப்பை அந்தக் கிளியிடம் காட்டிக் கொண்டிருந்தான். கிளி பயந்து கூண்டில் ஒண்டிக்கொண்டிருந்தது.

வணிகனின் வீட்டிலிருந்து அவனுக்கு இரண்டு வேளை பரிமளம் மிக்க உணவு வந்து சேர்ந்துவிடுகிறது. பகல் நேரங்களில் அறையை ஒட்டியிருந்த வீதியைக் கடந்து செல்லும் ஓசைகளைக் கேட்டுக் கொண்டிருக்கலாம். அதைத் தவிர வேறு இயக்கம் கிடையாது. எப்போதாவது படை வீரர்களின் ஏதாவது ஒரு நகரத்தைக் கைப்பற்ற செல்லும் ஓசை கேட்கும். தானும் அவர்களைப் போல குதிரையேறிச் சென்று சண்டையிட முடியாதா என்று யோசித்தபடியே இருப்பான் ஹசர் தினார்.

அவனுக்குக் கொஞ்சம் கொஞ்சமாக உலகின் மீது வெறுப்பும் ரௌத்திரமும் அதிகமாகிக்கொண்டே வந்தது. தனது நீண்ட தலை மயிரையும் மழிக்கப்பட்ட முகத்தையும் தானே சிதைத்துக்கொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்டான்.

இந்தூரில் அப்போது எதிர்பாராத கலகம் உருவானது. அதை அடக்குவதற்காக கில்ஜியின் தளபதிகளில் ஒருவன் வந்திருந்தான். ஆறாயிரம் குதிரைப்படைகளும் அவனோடு வந்திருந்தன. அந்தப் படைகள் கடந்துபோன இரவில் ஹசர் தினார் குதிரைகளின் குளம்படி ஓசையைக் கேட்டுக்கொண்டேயிருந்தான். ஒரு விட்டில் பூச்சியைப் போலப் பிறந்திருந்தால்கூட அந்த அறையை விட்டு

வெளியே சென்றுவிடலாமே என்று நினைத்துக்கொண்டிருந்தான்.

இரண்டு நாட்களில் கலவரம் ஒடுக்கப்பட்டிருந்தது. வெற்றி பெற்றுத் திரும்பும் தளபதிக்கு விருந்து கொடுப்ப தற்காக வணிகர்கள் போட்டியிட்டார். ஹசர் தினாரின் உரிமையாளன் தளபதியை மகிழ்விப்பதற்காக அவனை அனுப்பி வைப்பது என்று முடிவு செய்தான்.

கில்ஜியின் தளபதி தண்ணீர் உஷ்ணமேறிக் கொதிக்கையில் இடையறாது குமிழ்கள் தோன்றி மறைவதுபோல தன் உடலில் காமம் கொதித்துக் குமிழ்விடுவதையும் ரத்த நாளங்களில் ஒரு லாகிரி கலந்து விட்டது போல இச்சை கரைந்து போவதையும் ஹசர் தினாரோடு உறவு கொள்ளும்போது உணர்ந்தான்.

மறுநாளே கில்ஜிக்கு உரியவன் இந்த அடிமைதான் என்று முடிவு செய்தவனாக அவனை அரசருக்கான பரிசாக தன்னோடு அழைத்துப் போவதாக உத்தரவிட்டான். வணிகன் ஹசர் தினாரின் கைகளைப் பிடித்துக்கொண்டு ஒரு சிறுவனைப் போல அழுதான். ஹசர் தினாரின் கண்களில் சலனமேயில்லை. அந்த அறையில் இருந்த குருட்டுக் கிளியை மட்டும் அவன் தன்னோடு கொண்டு செல்வதற்காக எடுத்துக்கொண்டான்.

இரண்டு பகலிரவுகள் பல்லக்கில் கடந்து சென்று டெல்லி யைக் கண்டபோது நகரம் பனிமூட்டத்தினுள் மூழ்கி யிருந்தது. கிளி அதன் முன்பு அறிந்திராத குளிர் காற்றை உணர்ந்தபடியே தனக்குத் தானே கத்திக்கொண்டே வந்தது. கோட்டைகளும் காவல்வீரர்களின் நடமாட்டமும் தென் பட்டன. விடிகாலை நட்சத்திரம் ஒன்றை உற்று நோக்கிய படியே ஹசர் தினார் டெல்லிக்குள் பிரவேசிக்கத் துவங் கினான்.

பதினோறு நாட்களுக்குப் பிறகு ஹசர் தினார் நறுமணக் குளியல் செய்யப்பட்டு வாசனைத் திரவியங்கள் பூசி, வெண்பட்டு உடுத்தப்பட்டு, சிகையில் மயிலிறகு சூடி தோளில் குருட்டுக் கிளி அமர்ந்து கொள்ள கில்ஜியின் படுக்கையறைக்கு அனுப்பி வைக்கப்பட்டான். பிரமாண்ட மான அந்த அறையில் நான்கு முக விளக்குகள் எரிந்துகொண்டிருந்தன. அறைக் காவலர்களாகக்கூட பால்ய வயது கடந்து போகாத சிறுவர் களே அமர்த்தப்பட்டிருந்தார்கள்.

டெல்லி நகரமெங்கும் மது விற்பனை தடை செய்யப் பட்டிருந்தது. அத்தோடு மது கடத்துபவர்கள் உயிரோடு புதைக்கப்பட்டார்கள். ஆகவே அரண்மனையிலும் மது தடை செய்யப்பட்டிருந்தது. மாறாக போதையேற்றும் புகைக் குழாய்களும், கல்பங்களும் புழக்கத்திலிருந்தன.

ஹசர் தினார் அந்த அறையின் படுக்கையில் அமர்ந்தபடியே உறக்கமற்றுக் காத்துக்கொண்டிருந்தான். கிளி பயத்தில் மெதுவான குரலில் உளறிக்கொண்டிருந்தது. அடிமைகளில் ஒருவன் வெள்ளிச் சரிகை சுற்றப்பட்ட கோந்து போன்ற கல்பம் ஒன்றை அவனிடம் தந்து கொஞ்சம்கொஞ்சமாக ருசிக்கச் சொன்னான். அதை நாவிலிட்ட

தும் உடலில் எறும்புகள் அப்பிக்கொள்வதைப் போல உணர்வு ஏற்படுவதை உணர்ந்தான்.

கொஞ்சம் கொஞ்சமாக உடல் அவிழ்ந்து வெண்ணெய் உருகுவது போலிருந்தது. ஹசர் தினார் உறக்கத்திற்கும் விழிப்பிற்கும் இடையில் ஊசலாடிக்கொண்டிருந்தபோது அறையில் முன்பு இல்லாத சுகந்தம் நுழைந்தது. கில்ஜி அறையில் பிரவேசித்திருந்தார். அவர் தன் இருபுறமும் இரண்டு ஆண்களை அணைத்தபடியே நடந்து வந்தார். அவர்கள் பிறந்தமேனியாக இருந்தார்கள்.

ஹசர் தினாரின் அருகில் வந்த கில்ஜி அவனது ஆடை களை அவிழ்த்து எறிந்துவிடும்படியாகச் சொன்னார். பிறகு அவனிடம் தன் உடலில் அவனுக்குப் பிடித்தமான இடம் ஒன்றைத் தேர்வு செய்து தொடும்படியாகச் சொன்னார். அவரோடு இருந்த அடிமை ஆண்கள் பரிகாசமாகச் சிரித்தார்கள்.

ஹசர் தினார் தனது சிகையிலிருந்த மயிலிறகைக் கையில் எடுத்தபடியே அவரது உடலில் மெல்ல ஊர்ந்து செல்லத் துவங்கினான். குருடன் தொலைந்து போன தன் கைப் பொருளைத் தேடுவதைப் போல மிகக் கவனமாக உடலின் நரம்புகளைத் தேடத் துவங்கினான். கில்ஜி சில நிமிசங்களில் அங்கிருந்த மற்ற அடிமைகளை அறையை விட்டு வெளியேறும்படியாக ஆணையிட்டார். அதன் பிறகு இரண்டு பகலிரவுகள் கில்ஜி அந்த அறையை விட்டு வெளியேறி வரவில்லை. வெளிச்சம் வராத அறையில் குருட்டுக் கிளி மட்டுமே எதையோ கத்திக்கொண்டேயிருந்தது.

அதன் பிறகு கில்ஜியின் நடவடிக்கைகளில் முன்பு இல்லாத மாற்றங்கள் துவங்கின. அவர் காதலில் விழுந்தவரைப் போல சதா ஹசர் தினாரின் கைகளுக்குள் தன்னை ஒப்புக் கொடுக்கவே துடித்துக்கொண்டிருந்தார். ஹசர் தினார் தனக்கு என்று தனியாக ஒரு மாளிகை ஏற்பாடு செய்ய வேண்டும் என்றான். அதன்படியே நடந்தது.

அவனது மாளிகை எங்கும் அரவாணிகள் காவல் ஆட்களாக நியமிக்கப்பட்டார்கள். நீண்ட நாட்களுக்குப் பிறகு அவன் இரவில் தனியே குதிரையில் சுற்றியலையத் துவங்கினான். கண்ணில் தென்படும் யாவையும் அழித்து ஒழிக்க வேண்டும் என்ற ஆவேசம் நாளுக்கு நாள் அதிக மாகிக்கொண்டே வந்தது. கில்ஜி அவனது மோகத்திலிருந்து விடுபட முடியாதவராக இருந்தார்.

ஹசர் தினார் மீதான பொறாமை அரண்மனை எங்கும் பீறிடத் துவங்கியது. பட்டத்து ராணி உள்ளிட்ட யாவரும் அந்தப் புதிய அடிமை பற்றி ரகசியமாகப் பேசிக்கொண்டார்கள். ஆனால் எவரும் ஹசர் தினாரை நேர் கொண்டு கண்டதேயில்லை. கில்ஜியின் தர்பாருக்கு ஒரு நாள் ஹசர் தினார் கவச உடையணிந்து கம்பீரமாக அவரோடு கை கோர்த்து வந்தபோது அரண்மனையில் இருந்த பெண்களில் பலரும் தங்களை மறந்து அவனைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

அரண்மனை அதிகாரம் யாவும் தன் கைவசமான போதும் அந்தப் பெயர் தன்னை விட்டுப் போக மறுப்பது ஹசர் தினாருக்கு எரிச்சலை ஏற்படுத்திக்கொண்டிருந்தது. உடனடியாக அவன் தனக்கு ஒரு பெயரை ஏற்படுத்திக்கொள்ள ஆசைப்பட்டான். அதற்காக அவன் சில பெயர்களைத் தேர்வு செய்தும் வைத்திருந்தான். ஆனால் தன் முதுகுக்குப் பின்னே பல நூறு கண்கள் தன்னைப் பரிகசித்துக்கொண்டிருப்பதையும் வெளிப்படையாகவே அவனை பலரும் ஹசர் தினார் என்று சொல்லி கேலி செய்வதையும் தவிர்க்க முடியவேயில்லை.

தன்னை நிரூபித்துக் கொள்வதற்காக அவன் காத்துக்கொண்டேயிருந்தான். கில்ஜியின் உடலில் மேகநோய்க்கான அறிகுறிகள் தோன்றத் துவங்கின. சுல்தான் நோயைக் கண்டு பயப்படத் துவங்கினார். அரண்மனையில் இருந்த தன் படுக்கை அறையை விட்டு வெளியேறி வர மறுத்து உள்ளேயே அடங்கியிருந்தார்.

ஹசர் தினார் தனக்காகக் கதவுகள் திறக்கப்படுகின்றன என்பதை உணரத் துவங்கினான். அவன் சுல்தானிடம் தன்னை அரசபிரதியாக அறிவிக்க வேண்டும் என்றான். சுல்தானின் மோகம் அனுமதித்தது. அதன் சில மாதங்களில் அரண்மனையில் ஹசர் தினாரை எதிர்ப்பவர்கள் பலரும் சிரச்சேதம் செய்யப்பட்டார்கள்.

கறுப்பு நிற அராபியக் குதிரை ஒன்றில் போர் வீரனைப் போல உடையணிந்தபடியே பகலிரவாக ஹசர் தினார் டெல்லியின் வீதிகளில் சுற்றியலைந்துகொண்டிருந்தான். அவன் கூடவே குருட்டுக் கிளியை வைத்திருந்தான். ஹசர் தினாரின் ஆவேசம் கிளியிடம் பயத்தை ஏற்படுத்தியிருக்க வேண்டும். அது பேசுவதைக் கொஞ்சம் கொஞ்சமாக நிறுத்திக்கொண்டுவிட்டது.

ஹசர் தினாருக்கு டெல்லி நகரமே ஒரு பிரமாண்டான கழிப்பறையைப் போல அரூயை ஊட்டுவதாக இருந்தது. அவன் தன் உடலில் இருந்த மென்மையைக் கொஞ்சம் கொஞ்சமாக அழிக்கத் துவங்கினான். பாறையைப் போல அவனது உடல் உரமேறத் துவங்கியது.

அரண்மனை எங்கும் அரவாணிகளை முக்கிய பதவியில் அமர்த்தினான். அதிகாரம் அவனது விளையாட்டுப் பகடை போலானது. அதன் பிறகு அவன் சுல்தானிடம் தனக்கு ஒரு பெயரைச் சூட்டுமாறு யாசித்தான். நோயும் சாவின் மீதான பயமும் கொண்ட கில்ஜி அவனுக்கு ஒரு புதிய பெயரை வழங்கினார். மாலிக் கபூர் அதாவது எஜமான னுக்கு அடிமை என்ற அந்தப் புதிய பெயர் அவனுக்கு முன்பு இல்லாத அதிகாரத்தை உருவாக்கியது.

அவன் ஓராயிரம் தடவை தன் பெயர் மாலிக்கபூர் என்று குருட்டுக் கிளியிடம் உளறியபோதும் அது அந்தப் பெயரை திரும்பச் சொல்லவேயில்லை. அவன் ஒரேயொரு முறை அந்தக் கிளி பேசினால்கூட பரவாயில்லை என்று ஆத்திரப்பட்டு அதை வீசி எறிந்தான். அடிபட்டு விழுந்தபோது அந்தக் கிளி கத்தவேயில்லை.

மாலிக் கபூர் குனிந்து அந்தக் கிளியை கையில் எடுத்துத் தடவிக் கொடுத்தபடியே உன்னைப் போலவே நானும் என் மனதைக் குருடாக்கிவிட்டேன். இனிப் பேசுவதற்கு எனக்கும் எதுவுமில்லை என்றபடியே தன் மாபெரும் குதிரைப்படையோடு டெல்லியை விட்டு புறப்பட்டான். கண்ணில்படும் நகரங்களையும், தேசங்களையும் சூறையாடியபடியே அந்த அடிமையின் ரத்தம் முன்னேறிச் சென்று கொண்டிருந்தது.

மூர்க்கமும், ஆவேசமும் கொண்ட போர்வீரனாக உருமாறிய மாலிக் கபூர் பல்லாயிரம் பேர்களைக் கொன்று குவித்தபோதும் அவனது மனது சாந்தியடையவேயில்லை. மாலிக் கபூர் என்ற பெயர் மக்களிடம் பயத்தை ஏற்படுத்து வதை அவன் ரசிக்கத் துவங்கினான். அந்தப் பெயர் தன்னோடு ஒட்டிக்கொண்டுவிட்டது என்று சந்தோஷமடைந் தான்.

எண்ணிக்கையற்ற வெற்றிகளுக்குப் பிறகு டெல்லி திரும்பிய மாலிக்கபூர். ஒரேயொரு இரவு கில்ஜியோடு சேர்ந்து உறங்க விரும்பினான். கில்ஜியின் உடலில் நோய் முற்றியிருந்தது. சாவின் ரேகைகள் அவர் உடலில் ஓடத் துவங்கியிருந்தன. அறையில் இப்போது சுகந்தமேயில்லை. மரணத்தின் வாசனை மட்டுமே கமழ்ந்து கொண்டிருந்தது.

அவனைத் தழுவதற்காகக் கைகளை அருகில் நீட்டபயந்து நின்ற கில்ஜியின் உதடுகளை மாலிக்கபூர் தன் வலிமையான முரட்டு உதடுகளால் கவ்வி முத்தமிட்டான். அவன் கையிலி ருந்த மதுக் கோப்பை கில்ஜியின் உதடுகளைத் தொட்டது. கில்ஜி அதை விலக்கினார். குழந்தைக்கு மருந்து ஊட்டுவதைப் போல கொஞ்சம் கொஞ்சமாக விஷத்தைப் புகட்டினான். சில நிமிசங்களில் கில்ஜியின் உடல் தளர்ந்து சரிந்தது. இறந்து கிடந்த கில்ஜியின் உடலை அணைத்த படியே ஒரு இரவு மிக நன்றாக உறங்கினான் மாலிக் கபூர்.

விடிந்து எழுந்தபோது ஹசர் தினார், ஹசர் தினார் என்ற குரல் கேட்டது. அவன் திடுக்கிட்டு விழிக்க அவனது குருட்டுக் கிளி அந்தப் பெயரைத் திரும்பத் திரும்பக் கத்திக்கொண்டேயிருந்தது. ஆத்திரத்தில் அவன் தன் வாளால் கிளியின் தலையை இரண்டாக துண்டித்தான். அப்போதும் அந்தக் குரல் அரண்மனைச்சுவர்களுக்குள் ளாகவே சுற்றிக்கொண்டிருந்தது போலவே இருந்தது.

நீண்ட நாட்களுக்குப் பிறகு அப்பெயர் திரும்பவும் தன்னிடம் வந்து ஒட்டிக்கொண்டதைப் போல உணர்ந்த ஹசர் தினார் தன்னை மீறி வெடித்து அழுதான். அந்தக் கேவல் ஓசையைக் கேட்க அறையில் யாருமேயில்லை. ஹசர் தினார் என்ற அவனது பெயரை அறிந்த குருட்டுக் கிளியும் இறந்துபோன பிறகு அப்பெயர் அவனை விட்டு நிரந்தரமாக விலகிப் போகத் துவங்கியது.

அதன் பிறகு அவன் தன் சாவின் கடைசி நிமிசம் வரை மாலிக் கபூராகவே வாழ்ந்து இறந்தான்.

# ஜி.சிந்தாமணிக்கும் தேவிகாவிற்கும் சம்பந்தமில்லை

**ஜி.**சிந்தாமணிக்கு இன்றைக்குக் காலையில்தான் நாற்பது வயது துவங்கியது. அவள் அதைப்பற்றி யாரிடமும் சொல்லிக்கொள்ளவில்லை. பொதுவாகவே அவள் பள்ளி வயதைத் தாண்டிய பிறகு தனது பிறந்த நாள் வருவதைப் பற்றி அதிகம் உற்சாகம் அடைந்ததில்லை.

அதை நினைவு வைத்துக்கொள்வதுகூட குற்றஉணர்ச் சியை ஏற்படுத்துவது போலவே உணர்ந்தாள். எப்படியாவது தனது பிறந்த நாளை மறந்துபோய்விட மாட்டோமா என்று அவள் பலமுறை முயன்றிருக்கிறாள். ஆனால் தண்ணீருக்குள் வீசி எறிந்த ரப்பர்பந்து தானே மேலே வந்துவிடுவது போல அவள் எவ்வளவு முயன்றாலும் பிறந்த நாள்தானே நினைவுக்கு வந்துவிடுகிறது.

ஜி. சிந்தாமணி ராயப்பேட்டையிலிருக்கிறாள். அஜிஸ் முல்க் தெருவில் உள்ளது அவளது வீடு. நாற்பது வயதை நெருங்குவதற்குள் அவள் நரையேறி பருத்த சரீரமும் கழிந்துபோன தலைமயிரும் கொண்டவளாகிவிட்டாள். அவளுக்கு ஸ்டிக்கர் பொட்டு வைப்பதற்குக் கூட இப்போதெல்லாம் மறந்து போய்விடுகிறது.

அதை யார் கவனிக்கப் போகிறார்கள். இப்போது அவளது முகத்தைக் கூர்ந்து நோக்குகின்றவர்கள் யார் இருக்கிறார்கள். அவளாகவே தன்னைப் பார்த்துக்கொள்வதைத் தவிர மற்றவர்களுக்கு அவளிடம் ஈர்ப்பில்லை.

அ வள் கடந்த சில வருடங்களாகவே எப்போதும் ஒரு வட்டக் கண்ணாடியைத் தனது ஹேண்ட்பாக்கில் வைத்திருக்கிறாள். அலுவலகத்தில் வேலை செய்து கொண்டிருக்கும்போதோ, சாப்பிட்டு முடித்த பிறகோ அந்தக் கண்ணாடியில் தன்னை ஒரு முறை பார்த்துக் கொள்வாள். அப்போதெல்லாம் அவளுக்குத் தன்மீதே தாங்க முடியாத வேதனை கவிழத் துவங்கிவிடும். கண்ணுக்குத் தெரியாமல் உப்பு தண்ணீரில் கரைந்துவிடுவதைப் போல தன்னிட மிருந்த அழகு யாவும் கரைந்துபோய்விட்டிருக்கிறது என்பது அவளை மிகுந்த வேதனைக்குள்ளாக்கியது.

இரண்டு நாட்களுக்கு முன்னதாகவே அவளுக்குத் தனது பிறந்தநாள் வரப்போவது நினைவிற்கு வந்தது. அதை அலுவலகத்தில் உள்ள யாரிடமாவது சொல்லலாமா என்று யோசித்தாள். கேலி செய்வதைத் தவிர அவர்களால் தனது பிறந்தநாளைப் பகிர்ந்து கொள்ள முடியாது என்று தோணியது.

இந்த முறை எப்படியாவது அந்த நாளை மறந்துவிட வேண்டும் என்று மனதிற்குள்ளாக முடிவு செய்துகொண்டாள். ஆனால் வழக்கத் திற்கு மாறாக அவளுக்கு இரண்டு நாட்களாகவே பார்க்கும் ஒவ்வொரு வரும் என்ன வயதில் இருக்கிறார்கள் என்பதைக் கவனிக்க வேண்டும் போலிருந்தது.

தன்னை அறியாமல் அவள் ஒவ்வொருவரையும் கூர்ந்து பார்க்கத் துவங்கினாள். உலகில் நாற்பது வயதைக் கடந்தவர்கள் நிறைய இருக்கிறார்கள் என்பது ஆறுதல் தருவதாக இருந்தது. அத்தோடு எவரும் தனது வயதை நேரடியாக வெளிக்காட்டிக்கொள்வதில்லை என்பதும் அவளுக்கு மகிழ்வைத் தந்தது.

இன்றைக்கும் அவள் விழிப்பதற்கு முன்பாகவே மனதிற் குள் ஒரு குரல் இன்றைக்கு உனது பிறந்தநாள் என்று கூவியது. அவள் அதற்குச் செவிசாய்க்காதவளைப் போல கொஞ்சநேரம் வேண்டும் என்றே படுக்கையில் கிடந்தாள். கல்லூரிக்குச் செல்லும் மகள் குளித்துவிட்டு ஈரத்தலையோடு அறைக்குள் வந்து தனது உடையை தேடிக்கொண்டிருப்பது தெரிந்தது. மணி ஆறரையைத் தாண்டியிருக்க வேண்டும்.

சிந்தாமணி எழுந்து எப்போதும் போல அவசர அவசரமாக சமையல் செய்யத் துவங்கினாள். இருப்பதிலே அவளுக்குக் கொஞ்சமும் பிடிக்காத அரக்குநிறப் பூப்போட்ட சேலையை எடுத்து கட்டிக் கொண்டாள். சாப்பிட வேண்டும் என்றுகூடத் தோணவில்லை. வீட்டில் அவளது கணவன் டிவி பார்த்தபடியே சாப்பிட்டுக்கொண்டி ருந்தான். சின்னவள் பள்ளிக்கூடத்திற்குக் கிளம்புவதற்காக புத்தகங் களை எடுத்துத் திணித்துக்கொண்டிருந்தாள்.

யாராவது தனது பிறந்த நாளை நினைவில் வைத்திருப் பார்களா என்று ஒரு நிமிஷம் தோணியது. அவரவருக்கு அவரவர் அவசரம். இதில் தான் சொல்லாமல் எப்படிப் பிறந்த நாளை நினைவு வைத்திருப்பார்கள் என்றபடியே அவள் டிபன் பாக்சில் சாப்பாட்டை எடுத்து அடைத்துக் கொண்டாள் மணி எட்டு இருபதை நெருங்கும் போது அவள் எப்போதும் மணிக்கூண்டுப் பேருந்து நிலையத்தை நோக்கி நடக்கத் துவங்கியிருப்பாள். இன்றைக்கு ஐந்து நிமிஷம் தாமதமாகியிருந்தது.

சிந்தாமணி எப்போதும் போல சாலையைக் கவனிக்காமல் தலை குனிந்தபடியே வேகவேகமாக நடந்துகொண்டிருந்தாள். பள்ளிக்கும் அலுவலகத்திற்கும் செல்லும் மனிதர்களில் ஒருவரைக்கூட அவளுக்குப் பிடிக்கவேயில்லை. தனது பிறந்தநாளை நினைவு வைத்துக்கொள்ளும்

நபர் ஒருவர்கூட இல்லாத இந்த நகரில் எதற்காக தான் எவரையும் நினைவு வைத்துக்கொள்ள வேண்டும் என்று ஆத்திரமாக வந்தது.

மணிக்கூண்டிற்கு வந்தபிறகு பால்பாக்கெட்டிற்கு வெளியே பையை வைக்கவில்லை என்பது நினைவிற்கு வந்தது. திரும்பிப் போக வேண்டாம் என்றவளாக அவள் பேருந்திற்காகக் காத்துக்கொண்டிருந்தாள்.

பேருந்து நிலையத்தில் பூ விற்றுக்கொண்டிருப்பவள் முன்பாக சிவப்பு மஞ்சள் ரோஜாக்கள் குவிந்து கிடந்தன. பூக்காரி கூவிக்கூவி விற்றுக்கொண்டிருந்தவள் சிந்தா மணியைப் பார்த்தவுடன் மௌன மாகிவிட்டாள். தான் மஞ்சள் ரோஜாவை வாங்க மாட்டோம் என்று எப்படி இந்தப் பூக்காரி முடிவு செய்தாள் என்று அவள் மீது ஆத்திரமாக வந்தது. அவளிடம் இனிமேல் ஒருபோதும் பூ வாங்கக் கூடாது என்று முடிவு செய்துகொண்டாள்.

பேருந்து நிலையத்தில் காத்திருந்த பள்ளிமாணவிகள் எதற்கோ சப்தமாகச் சிரிப்பதும் ஒருவரையொருவர் வேடிக் கையாக அடித்துக் கொள்வதுமாக இருந்தார்கள். நாற்பது வயதைத் தொடும்போது உங்களிடமிருந்து சிரிப்பு யாவும் வடிந்து போய்விடும். அதற்குள் சிரிக்கிற மட்டும் சிரித்துக்கொள்ளுங்கள் என்று அவளாகவே சொல்லிக் கொண்டாள்.

ஜி. சிந்தாமணியின் அலுவலகம் சானிடோரியத்தை ஒட்டியிருந்தது. அங்கே செல்வதற்கு இரண்டு பேருந்துகள் மாறிச் செல்லவேண்டும். அன்றைக்குப் பேருந்துகளில் கூட்டம் ததும்பிக்கொண்டு வந்தது. அத்தோடு பேருந்து நிறுத்தத்தை விட்டுத் தள்ளி நிறுத்தினார்கள். அவள் ஓடிப்போய் ஏறுவதற்குள் பேருந்து கிளம்பிப் போயிருந்தது. பெருமூச்சு வாங்க அவள் நின்றபோது பிறந்தநாளும் அதுவுமாக இப்படி உயிரைக் கொடுத்து ஓடுகிறோமோ என்று வருத்தம் கொப்பளித்தது.

பிரமாண்டமாகச் சிதறிக்கிடக்கும் இந்த நகரம் அதன் லட்சக் கணக்கான மக்கள், இரக்கமில்லாத சூரியன், நெருக்கடியான சாலைகள், எவரையும் அரவணைத்துக்கொள்ளாத கடல், புகையும் தூசியும் படிந்துபோய் காற்றில்லாமல் நிற்கும் மரங்கள் என எல்லாவற்றின் மீதும் கோபம் பொங்கியது. தனக்குத்தானே அவள் எதையோ பேசிக்கொண்டிருப்பதை அருகில் இருந்த பெண்கள் முறைத்துப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

வெயில் அவள் முகத்தில் ஊர்ந்துகொண்டிருந்தது. முன்பாவது அவள் குடை வைத்திருந்தாள். அதைக் கல்லூரிக்குச் செல்லும் மகள் கொண்டுபோகத் துவங்கியபிறகு புதிதாகக் குடைகூட வாங்கத் தோணவில்லை.

ஒவ்வொரு பேருந்தாகக் கடந்து சென்றபடியே இருந்தது. மணி ஒன்பது இருபதைத் தாண்டியது. இன்றைக்கு அலுவலகம் போய்ச்

சேர்வதற்குள் பத்தரையாகிவிடும் போலிருந்தது. அவள் ஆத்திரத்தோடு தன்னிடமிருந்த வாட்டர் பாட்டிலை எடுத்து கொஞ்சம் குடித்துக் கொண்டாள். தண்ணீர் கழுத்து வழியாக வழிந்து இறங்கியது. அதைத் துடைத்துக்கொள்ளக்கூட அக்கறையற்று அப்படியே சாலையை வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

இன்றைக்கு ஏலச்சீட்டு விடும் நாள் வேறு. அவள் சீட்டு பிடிக்கின்றவள் என்பதால் அதை முடித்துக்கொண்டு வீடு திரும்ப இரவு ஒன்பதாகிவிடும் என்று தோன்றியது. சாலையோரம் ஒட்டப்பட்டிருந்த போஸ்டரை ஒரு பசு தின்றுகொண்டிருந்தது. போஸ்டர் தின்னும் பசுவின் பாலைத்தான் நாம் குடித்துக்கொண்டிருக்கிறோம் என்று ஒரு சிறு ஆத்திரம் முளை விட்டு எழுந்து மறுநிமிஷமே அடங்கியது.

ஷேர் ஆட்டோ வந்து நின்றது. ஜி. சிந்தாமணி அதற்குள் தன்னைத் திணித்துக்கொண்டபோது மூச்சு முட்டியது. தன் உடலின் மீது ஆத்திரமாக வந்தது. ஆட்டோவினுள் ஆண் பெண் பேதமில்லாமல் ஒருவரோடு ஒருவர் நெருக்கிக்கொண்டு அடைந்து கிடந்தார்கள். அந்த முகங்கள் எதிலும் நிம்மதியில்லை.

ஆட்டோ சமஸ்கிருதக் கல்லூரியைக் கடந்தபோது அவளுக்குத் திடீரெனத் தோணியது எதற்காக நான் அலுவல கம் போக வேண்டும், ஏன் இப்படிப் பறந்து பறந்து வேலை செய்ய வேண்டும். யாருக்கு பயந்துகொண்டு நான் இப்படி அலைந்துகொண்டிருக்கிறேன். அந்தக் கேள்வி அவளுக்குள் ஒரு நீருற்றைப் போல வேகத்தோடு பொங்கி வழியத் துவங்கியது.

இன்றோடு அவளுக்கு நாற்பது வயது. அதுவும் இன்றைக்குப் பிறந்த தினம். பின் எதற்காக இத்தனை பாடு என்பது அவள் மனதை உறுத்தத் துவங்கியது. அவள் ஏதோ முடிவு செய்தவளைப் போல லஸ் கார்னரில் ஆட்டோ நின்றபோது இறங்கிக்கொண்டாள்.

சாலையைக் கடந்து எதிர் திசைக்கு வந்தபோது மனது சிக்கலில் இருந்து விடுபட்டது போன்ற நிம்மதியடையத் துவங்கியது. என்ன செய்வது என்று யோசித்தாள். முதலில் ஒரு பூக்காரியிடம் மஞ்சள் ரோஜாவாகப் பார்த்து வாங்க வேண்டும் என்று தோன்றியது. அவள் தன் ஹேண்ட் பேக்கைத் திறந்து பார்த்தாள். சீட்டுப் பணம் இரண்டாயிர மிருந்தது. தனக்குத்தானே சிரித்தபடியே அவள் பூக்கடையை நோக்கி நடந்தாள்.

ஒன்று போல உள்ள இரண்டு மஞ்சள் ரோஜாக்களை அவள் வாங்கி கூந்தலில் சொருகி வைத்துக்கொண்டாள். பிறகு தனது வட்டக்கண்ணாடியை எடுத்து முகம் பார்த்துக்கொண்டாள். அந்த ரோஜா அவளுக்குப் பொருத்தமாக இருந்தது போலிருந்தது. நீண்ட நாட்களுக்குப் பிறகு மெல்லிய வெட்கம் அவள் முகத்தில் தோன்றி மறைந்தது.

ஏதாவது ஹோட்டலில் போய் இனிப்பு சாப்பிட வேண்டும்

போலிருந்தது. ஆட்டோவில் ஏறிக்கொண்டு அவள் பெங்காலி ஸ்வீட் விற்கும் கடைக்குப் போகச் சொன்னாள். கடை முழுவதும் குளிர்சாதனம் செய்யப்பட்டிருந்தது. காலை வேளை என்பதால் ஆட்கள் அதிகமில்லை, அவள் ரசகுல்லா, குளோப் ஜாமுன் என்று நான்குவிதமான இனிப்பைச் சாப்பிட்டாள். பிறகு பில் கொடுக்கும் போது கடையில் இருந்த வயதான வங்காளியிடம் தனக்கு இன்று பிறந்த நாள் என்று சொன்னாள். அவன் மௌனமாகத் தலையாட்டிக் கொண்டபடியே சில்லறையைக் கொடுத்தான்.

வெளியே வந்தபோது வெயில் சாலையில் சினைப் பாம்பைப் போலத் திணறியபடியே ஊர்ந்துகொண்டிருந்தது. அவள் ஒரு கூலிங் கிளாஸ் வாங்கிப் போட்டுக்கொள்ளலாம் என்று நினைத்தாள். எது போன்ற கண்ணாடியை வாங்குவது எங்கே போய் வாங்குவது என்று யோசித்தபடியே நடந்து பெரிய பிரேம் வைத்த கறுப்புக் கண்ணாடி ஒன்றை இருநூறு ரூபாய் கொடுத்து வாங்கி போட்டுக் கொண்டாள். கண்ணாடியில் தன்முகத்தைப் பார்க்க வேடிக்கையாக இருந்தது.

திடீரென உலகம் தன் நிறத்தை மாற்றிக்கொண்டு சாந்தம் கொண்டது போலிருந்தது.

இப்படியே ஸ்பென்சருக்குப் போகலாம் என்று முடிவு செய்தாள். சில சமயங்களில் சிந்தாமணி தன் மகளோடு ஸ்பென்சருக்குச் சென்றிருக்கிறாள். ஆனால் தனியே இது போன்ற இடங்களுக்குப் போனதில்லை என்பது நினைவிற்கு வந்தது.

ஸ்பென்சரில் போய் இறங்கியபோது உள்ளே இருபது வயதைத் தொட்டும் தொடாமலும் உள்ள இளைஞர்கள் ஆண்பெண் பேதமின்றி ஆங்காங்கே நிரம்பியிருந்தார்கள். கண்ணாடி பெட்டிகளில் இருந்த புடவைக்கடை பொம்மைகள்கூட குளிர்சாதனத்தில் சுகம் கண்டு கொண்டிருந்தன. பகலில்கூட இவ்வளவு பேர் இங்கே என்ன வாங்குவார்கள் என்று யோசனையாக இருந்தது.

நீலநிற ஜீன்ஸ் அணிந்த பெண் ஒரு இளைஞனின் இடுப்பைக் கட்டிக்கொண்டு மறுகையால் அவன் முகத்தைத் தடவியபடியே நடந்துபோய்க் கொண்டிருந்தாள். ஆங்காங்கே இளவயதுப் பெண்களும் ஆண்களும் மிக நெருக்கமாக அமர்ந்து பேசிக்கொண்டும் ஐஸ்கிரீம் சாப்பிட்டுக்கொண்டுமிருந்தார்கள்.

தான் வாழ்வில் ஒரு முறைகூட இதுபோல பொது இடங்களில் கணவனோடு கைகோர்த்து வந்ததில்லை. இப்படி ஐஸ்கிரிம் சாப்பிட்ட தில்லை. வாழ்க்கை ஏன் இப்படி அர்த்தமற்றுக் கடந்து போய்விட்டது. அவளுக்குப் பதினேழு வயதில் கல்யாணம் நடந்தது. அப்போதும் சிந்தாமணி வேலைக்குப் போய்க்கொண்டுதான் இருந்தாள். திருமணத் திற்காக ஐந்து நாள் லீவு கொடுத்தார்கள். அந்த ஐந்து நாட்களும் அவள் உறவினர்கள் வீட்டுக்கு விருந்து சாப்பிடப் போவதும் ஒரே யொரு சினிமாவிற்குப் போனதும் மட்டுமே நடந்தது.

திருமணமான மூன்றாம் மாதமே அவள் சூல் கொண்டு விட்டாள். அதன் பிறகு எங்கேயும் போகவே முடிந்ததில்லை. அடுத்த வருசம் ஒரு பையன். அதன் இரண்டு வருசம் தள்ளி ஒரு பெண் என்று மாறிமாறி குழந்தைபேறு. வைத்தியம் வீடு வேலை தவிர அவள் இந்த யுவதிகள் தேனை ருசிப்பதுபோல ஐஸ்கிரீமைக் கொஞ்சம் கொஞ்சமாக அனுபவித்துச் சாப்பிடுவதை அறிந்ததே கிடையாது.

சிந்தாமணி மிகப்பெரிய ஐஸ்கிரீம் ஒன்றை வாங்கிக்கொண்டபடியே தனியே கிடந்த ஒரு நாற்காலியில் உட்கார்ந்துகொண்டாள். ஐஸ்கிரீமை உதட்டின் நுனியில் வைத்து சுவைத்துச் சாப்பிடத் துவங்கினாள். இந்த ஐஸ்கிரீம் கரைந்துபோவது போல தனது வயது கொஞ்சம் கொஞ்சமாகக் கரைந்து போய்விடக்கூடாதா என்று தோன்றியது.

பதினைந்து வயதில் அவளைப் பார்த்தவர்கள் அவள் தேவிகாவைப் போல இருப்பதாகவேச் சொல்வார்கள். இதற்காகவே அவளுக்கு தேவிகாவின் சினிமா பிடித்துப் போய்விட்டது. தேவிகாவின் படம் என்றால் அவள் எப்படி யாவது பார்த்துவிடுவாள். தேவிகா பாடும் பனியில்லாத மார்கழியா பாடலை அவளும் எப்போதும் பாடிக் கொண்டேயிருப்பாள்.

ஆனால் திருமணத்திற்குப் பிறகு அவள் தேவிகா போல இருக் கிறாளா என்று ஒருமுறை கணவனிடம் கேட்டபோது அதெல்லா மில்லை என்றதோடு எதுக்குடி உனக்கு இந்தப் பேராசை என்று திட்டிவிட்டு சென்றான். அதன்பிறகு காலம் தேவிகாவின் நினைவை அவளிடமிருந்து கொஞ்சம் கொஞ்சமாகக் கரைத்து மறைத்தது.

இன்றைக்கு ஐஸ்கிரீம் சாப்பிட்டுக்கொண்டிருந்த போது அவளுக்கு தேவிகாவின் நினைவு வந்தது. நீலவானம் படத்தில் தேவிகா இப்படி யொரு கறுப்புக் கண்ணாடி அணிந்தபடியே ஓலைத்தொப்பி அணிந்த படியிருப்பாள். அவள் சிரிப்பது தன்னைப் போலத்தானிருக்கிறது. அதை யார் ஒத்துக்கொள்ளாவிட்டாலும் தனக்குக் கவலையில்லை என்று தோன்றியது. தனது ஹேண்ட்பாக்கில் இருந்த வட்டக் கண்ணாடியை எடுத்து தன் முகத்தைப் பார்த்துக்கொண்டாள். முகத்தின் ஊடாக எங்கோ தேவிகாவின் சாயல் ஒளிந்துகொண்டி ருப்பது போலிருந்தது.

தான் இப்படிக் கறுப்புக் கண்ணாடி அணிந்தபடியே ஐஸ்கிரீம் சாப்பிடுவதை ஒரு புகைப்படம் எடுத்து வைத்துக்கொள்ள வேண்டும் போலிருந்தது. அத்தோடு எதற்காகவோ தான் சப்தமாகச் சிரிக்க வேண்டும் என்ற ஆசை உண்டானது. இதுபோன்ற வணிக வளாகங் களில் எங்கு பார்த்தாலும் சிரிப்பு சிந்திக்கிடக்கின்றது. ஆனாலும் தன்னை ஒத்த வயதுடைய பெண்களில் எவரும் சிரிக்கிறார்களா என்று ஒரு முறை திரும்பிப் பார்த்துக்கொண்டாள். அவள் மேஜையை சுத்தம் செய்ய வந்த பையனிடம் இன்று தனக்குப் பிறந்தநாள் என்று சொன்னாள். அவன் அதைக் கேட்டுக்கொண்டதாகவே தெரியவில்லை.

எழுந்து லிப்டில் ஏறி மூன்றாவது தளத்திற்குச் சென்றாள். விரல் நகங்களுக்குப் பூசும் மினுமினுப்பாக பச்சையும் ஜிகினாவும் கலந்த நெயில்பாலீஷ் ஒன்றை வாங்கிப் பூசிக்கொண்டாள். பினாயில் வாசம் வீசும் பாத்ரூமின் மிகப் பெரிய கண்ணாடி முன்பாக நின்ற படியே தன்னைத் தானே பார்த்துச் சிரித்துக்கொண்டாள்.

வயது அன்று ஒரு நாள் மட்டும் அவளிடமிருந்து பின்திரும்பிப் போய்க்கொண்டிருந்தது போலிருந்தது. அவள் சிரிப்பை அடக்க முடியாமல் கர்சீப்பால் வாயைப் பொத்திக் கொண்டு வெளியே வந்தாள். தனது டிபன் பாக்ஸில் இருந்த சாப்பாட்டை அங்கிருந்த குப்பையில் கொட்டிவிட்டு காலி டிபன் பாக்சைப் பையில் போட்டுக் கொண்டாள். நாள் முழுவதும் அப்படியே சுற்றிக்கொண்டேயிருக்க வேண்டும் போலிருந்தது.

திடீரென இந்த நகரம் அவளுக்கு மிகப்புதிதாகத் தெரிந்தது. தான் இதுவரை பார்த்திராத கட்டிடங்களும் கார்களும் மனிதர்களும் நிரம்பியதைப் போல இருந்தது. கால்டாக்சியிலும் ஆட்டோவிலுமாக அவள் சுற்றியலைந்தபடியே இருந்தாள். தனக்கு இந்த நகரில் வீடில்லை. குடும்பமில்லை. தெரிந்த மனிதர்கள்கூட யாருமில்லை. தான் தனியாள் தன்னுடைய பெயர் தேவிகா என்று சொல்லிக்கொண்டாள். அன்றைய பகலில் திரையரங்கம், உணவகம், ஜவுளிக்கடைகள் என்று அலைந்து திரிந்தாள்.

மாலையில் அவள் கடற்கரையைக் கடந்தபோது ஆயிரமாயிரம் கால்கள் தழுவிச் சென்றபோதும் கடல் தனிமையில்தானிருக்கிறது என்பதை உணர்ந்தாள். அலுவலகம் முடிந்து ஆட்கள் வீடு திரும்பும் நேரத்தில் அன்றைய நாள் முடிந்து கொண்டிருப்பது அவளுக்குள் புகையைப் போல மெல்லிய வேதனையை வளர்க்கத் துவங்கியது. இன்றைக்கு ஏல நாள் தன்னை எதிர்பார்த்துக்கொண்டு ஆட்கள் காத்திருப்பார்கள் என்று தோணியது. மறுநிமிசமே அது தனக்கில்லை. ஜி. சிந்தாமணிக்கு. தான் தேவிகா என்று அவளாகவே சொல்லிச் சிரித்துக்கொண்டாள்.

இரவில் அவள் ஒளிரும் விளம்பரப் பலகைகளைக் கண்டபடியே நகரின் வீதிகளில் நடந்துகொண்டிருந்தாள். ஈரானிய டீக்கடையில் அமர்ந்து சமோசாவும் டீயும் குடித்தாள். புதிதாக ஒரு செருப்பு வாங்கிக்கொண்டாள். யோசிக்கும்போது அவளுக்கு தன்னிடம் ஆசைகள்கூட அதிகமில்லை என்று தோணியது.

சாலையைக் கடந்தபோது காய்கறிக்காரன் ஒருவன் அப்போதுதான் பறித்து வந்தது போன்ற கேரட்டுகளைக் குவித்துப் போட்டு விற்றுக் கொண்டிருந்தான். கொஞ்சம் வாங்கிக்கொண்டு போகலாமா என்று தோன்றியது. திருமணமான இந்த இருபத்தி இரண்டு வருசத்தில் எவ்வளவு காய்கறிகள் வாங்கிவிட்டோம். இனியும் எதற்காக வாங்க வேண்டும் என்று எரிச்சலாக வந்தது. ஒரேயொரு கேரட் மட்டும் காசு கொடுத்து வாங்கிக் கடித்து தின்றபடியே சாலையைக் கடந்து

நடக்கத் துவங்கினாள்.

சாலையோரம் ஒரு ஆள் ரப்பர் பந்துகள், பிளாஸ்டிக் பொம்மைகள் போன்ற விளையாட்டுப் பொருட்களை விற்றுக்கொண்டிருந்தான். அவன் முன்னால் நாலைந்து பேர் தரையில் கொட்டிக்கிடந்த பொருட்களில் தேடி ஏதோ வாங்கிக்கொண்டிருந்தார்கள். சிந்தாமணி குனிந்து தானும் ஒரு தண்ணீர்த் துப்பாக்கி வாங்கிக்கொண்டாள். அதில் எப்படித் தண்ணீர் ஊற்றுவது என்று கேட்டதும் பொம்மை விற்பவன் தன்னிடமிருந்த வாட்டர்பாட்டிலில் இருந்த கலங்கிய தண்ணீரை அதில் ஊற்றி அடித்துக் காட்டினான். அவள் கையில் வாங்கி சாலையை நோக்கி துப்பாக்கியை அமுக்கினாள். தண்ணீர் சாலையில் நெளிந்து போனது. அவளுக்குச் சிரிப்பாக வந்தது.

மணிக்கூண்டை அவள் நெருங்கும்போது மணி ஒன்பதரையைக் கடந்திருந்தது. பேருந்து நிலையத்தில் யாருமே யில்லை. ஒரேயொரு பிச்சைக்காரன் மட்டும் தனியே ஏதோ கிழிந்த துணியைத் தைத்துக் கொண்டிருந்தான். அவள் தன் வீட்டை நோக்கி நடந்துவரத் துவங்கிய போது நடை வேகம் கொள்ளத் துவங்கியது. எங்கிருந்தோ மறைந்திருந்து வயது தன்மீது தாவி ஏறிக்கொண்டது போலிருந்தது. அவள் தன்னிட மிருந்த கறுப்புக் கண்ணாடி மற்றும் நெயில் பாலீஷை என்ன செய்வது என்று தெரியாமல் இருட்டில் தூக்கி எறிந்தாள். அவள் வீடு இருந்த சந்தில் தெருவிளக்கு விட்டுவிட்டு எரிந்துகொண்டிருந்தது.

தன்னிடமிருந்த தண்ணீர்த் துப்பாக்கியைத் தனது நெற்றியில் வைத்து அவள் ஒரு அழுத்து அழுத்தினாள். தண்ணீர் பீச்சிக்கொண்டு அவள் முகத்தில் வழிந்தது. ஒரு நிமிஷம் தன்னை மறந்து நின்றபடியே அழத்துவங்கினாள். அன்றைக்குத் தனது பிறந்த நாள் என்பதை நினைத்து கேவிக்கேவி அழுதாள். பிறகு ஆத்திரத்தோடு அந்தத் துப்பாக்கியை குப்பைத்தொட்டியை நோக்கி வீசினாள்.

கடகடவென வீட்டை நோக்கி நடக்கத் துவங்கினாள். வீடு பூட்டிக் கிடந்தது. உள்ளே தொலைக்காட்சி ஓடும் சப்தம் கேட்டது. காலிங் பெல்லை அமுக்கும்போது ஒரு முறை அவள் அறியாமல் தேவிகாவின் நினைவு வந்தது. அவள் பல்லைக் கடித்துக்கொண்டு தான் ஜி.சிந்தா மணி என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டாள். கதவைத் திறந்ததும் வீடு எந்த மாற்றமும் இல்லாமல் அவளை உள்வாங்கிக் கொண்டது.

# காதுள்ள கடவுள்

**நா**ச்சியார் தனியே வந்திருந்தாள். இருக்கன்குடி ஆறு வெயிலோடிக் கிடந்தது. பனைகளில் அமர்ந்திருந்த குருவி மட்டும் யாரோ தெரிந்த வரை அழைப்பது போலக் கூப்பிட்டுக்கொண்டிருந்தது. தொலைவில் ஆற்று மணலில் உறை தோண்டி தண்ணீர் இறைத்துக் கொண்டிருந்தார்கள். ஒதுங்குவதற்குக்கூட நிழலே இல்லாத வெம்பரப்பின் கீழாக அவள் வேகவேகமாக நடந்துகொண்டிருந்தாள். பிடறியில் கை வைத்துத் தள்ளுவதுபோல சூரியன் கூடவே வந்து கொண்டிருந்தது.

அவள் நிமிர்ந்து எதையும் பார்க்கவேயில்லை. தன் வீட்டிலிருந்து அவள் அதிகாலையில் கிளம்பியிருந்தாள். இரண்டு நாட்களுக்கு முன்பாக மருத்துவமனையில் இருந்தபோதுதான் இந்த யோசனை வந்தது. ஆனாலும் இருக்கன் குடிக்குப் போய்வருவது என்றால் எப்படியும் நூறு ரூபாய்க்கு மேலாகிவிடும். அதைப் புரட்டுவதற்காக இரண்டு நாள் காத்துக்கொண்டிருந்தாள். யாரோடும் இதைப்பற்றிப் பேசிக்கொள்ளக்கூட இல்லை.

தனியாக அவள் உள்ளூரில் இருந்த சிவன் கோவிலுக்கோ, ஆஞ்சயேர் கோவிலுக்கோ போயிருக்கிறாள் ஆனால் பஸ் ஏறி தனியே இப்படி இருக்கன்குடி வரை வருவது இதுதான் முதல் தடவை. டவுன் பஸ் இருக்கன்குடியில் இறக்கிவிட்ட போது எந்தப் பக்கம் கோவிலிருக்கிறது என்றுகூட அவளுக் குத் தெரியவில்லை. மருகி மருகி நின்றவளாக யாராவது கோவிலுக்குப் போகிறவர்கள் வருவார்களா என்று பார்த்துக் கொண்டிருந்தாள்.

புளிய மரத்தடியில் உட்கார்ந்தபடியே வெள்ளரிக்காய் விற்கும் இரண்டு பெண்களைத் தவிர வேறு ஆட்களைக் காணோம். எப்பவும் அதிகக் கூட்டமிருக்கும் என்று கேள்விப் பட்டிருக்கிறாள். ஆனால் இன்று மணி பன்னிரெண்டைக் கடந்திருந்தது காரணமாக இருக்கக் கூடும். ஒருவேளை கோவில் நடை சாத்திகூட இருக்கலாம். ஆனாலும் என்ன நடை திறக்கும் வரை இருந்து சேவித்துவிட்டுத்தான் போக வேண்டும் என்று நினைத்துக்கொண்டாள்.

மணலில் நடக்க நடக்க சர்வேயர் மனைவியோடு ஒரேயொரு முறை இருக்கன்குடிக்கு வந்த ஞாபகம் இருந்தது. அநேகமாக சர்வ யேரின் கடைசி மகளின் காது குத்துக்குத்தான் என்று நினைப்பு. அப்போது இன்னும் அதிகமாகப் பனைகள் இருந்ததாகத் தோன்றியது.

அவள் வெயிலில் நடந்தபடியே சர்வேயர் மனைவியைப் பற்றி நினைத்துக்கொண்டாள். இப்போது எந்த ஊரில் இருக்கிறார்களோ தெரியவில்லை. சர்வேயர் மனைவி மட்டுமல்ல, அவளுக்குத் தெரிந்த, பழக்கமான பெண்கள் எத்தனையோ பேர் அவள் ஊரை விட்டுப் போய்விட்டார்கள். சிலரது பெயர் நினைவிருக்கிறதே அன்றி முகம் மறந்துபோய்விட்டது. யாராவது அவளை நினைவில் வைத்திருப்பார் களா என்ன?

வெயிலின் ஊடாகவே கோவிலின் கோபுரம் தென் பட்டது. கோபுரத்தைக் கண்டதும் நிச்சயம் மாரியம்மன் நம்மைக் கைவிட மாட்டாள் என்ற நம்பிக்கை நாச்சியாருக்கு உறுதியானது. கன்னத்தில் போட்டுக்கொண்டபடியே சுடுமணலில் கால் தாங்கியபடியே கோவிலை நோக்கி வேகவேகமாக நடந்தாள். பனையோரமாக பலூன் விற்கின்ற ஒருவன் யாரைப் பற்றிய கவலையுமின்றி நின்றபடியே மூத்திரம் பெய்துகொண்டிருந்தான். அது காற்றில் சிதறி அவன் கால்களின் மீதே வடிந்துகொண்டிருந்தது.

கோவிலை நெருங்க நெருங்க அவளுக்கு அழ வேண்டும் போல தோன்றிக்கொண்டிருந்தது. மனதைக் கட்டுப்படுத்திக்கொண்டு வெறித்த கண்களோடு அவள் நுழை வாசலில் வந்தபோது தூக்கி எறிந்த இலையில் கிடந்த பொங்கலை ஒரு நாய் சாப்பிட்டுக்கொண்டிருந்தது. கோவிலின் நடை சாத்தப்பட்டிருந்தது. அரசமரத்தடியில் ஊதாப் பூப் போட்ட சேலை கட்டிய ஒரு பெண்ணும் அவளது குடும்பமும் இலை போட்டு சாப்பிட்டுக்கொண்டிருந்தார்கள். தேங்காய்ப் பழம் விற்கும் ஒரு சிறுமி அவளிடம் 'யக்கா அர்ச்சனைத் தட்டு வாங்கிக் கோங்கோ' என்று கூப்பிட்டாள்.

நாச்சியார் தயக்கத்துடன் அவளிடம் 'முடி இறக்குறதுக்கு ஆள் இங்கே இருக்கா' என்று கேட்டாள். அந்தச் சிறுமி அவளை ஏறிட்டு பார்த்தபடியே 'அந்தாமரத்தடியில பாருங்க முருகன்னு ஒரு அண்ணன் இருப்பாங்க' என்று சொன்னாள். நாச்சியார் வேம்படியை நோக்கி நடந்தபோது மெலிந்துபோன ஒரு ஆள் தனியே பீடி புகைத்துக் கொண்டிருப்பதைக் கண்டாள்.

அந்த ஆள் புகைச்சலோடு விடாமல் பீடியை இழுத்துக் கொண்டி ருந்தான். அவள் அருகில் வந்தபோதுகூட அவன் பீடியை அணைக்கா மல் யாருக்கு முடி இறக்கணும் என்று கேட்டான். அவள் தனக்குத்தான் என்றதும் அவன் காரமேறிய எச்சிலை உமிழ்ந்தபடியே 'இருபது ரூவா' ஆகும் என்றான்.

நாச்சியார் தன் இடுப்பில் இருந்த சுருக்குப் பையிலிருந்து இரண்டு பத்து ரூபாயை எடுத்து நீட்டினாள். அந்த ஆள் உட்காரச் சொல்லி

விட்டு அடி பைப்பில் தண்ணீர் பிடித்து வருவதற்காக பிளாஸ்டிக் குவளையை எடுத்துக்கொண்டு புறப்பட்டான்.

அவன் உட்கார்ந்திருந்த மரப்பலகையின் அடியில் நிறைய தலை மயிர்கள் மண் அப்பிக் கிடந்தன. நாவிதன் தலைமழிப்பதற்காக கை நிறைய தண்ணீர் அள்ளி அவள் தலையில் தெளித்துத் தடவிவிட்ட போது அவளது அய்யாவிற்குப் பிறகு அவள் தலையை இப்படி ஆறுதலாகத் தடவிவிட்ட ரெண்டாவது ஆம்பளை இவன்தான் என்று நினைவிற்கு வந்தது. அவள் புருஷன் ஒரு நாளும் அவள் தலையைத் தொட்டுப் பார்த்ததேயில்லை. பிராயத்தில் அவள் தலை நிறைய பிச்சிப் பூ வைத்திருக்கும்போதுகூட அவளது கணவன் நுகர்ச்சி கொண்டதேயில்லை.

நாவிதன் உச்சியில் இருந்து தலைமயிரை மழிக்கத் துவங்கினான். தலைமயிர் இருப்பதே பலநேரத்தில் அவளுக்கு நினைவில் இருப்ப தில்லை. முன்பாவது அவள் தலை மயிரைக் கற்றையாகப் பிடித்து இழுத்து அவள் புருஷன் முகத்தில் அறைவான். அவன் செத்துப்போன பிறகு கேசத் தைப் பற்றிய நினைப்பு அடியோடு மறந்துபோய்விட்டது. அதுவும் காதோரம் நரையேறி பிறகு குளிக்கையில் கொஞ்சம் சீயக்காயை அள்ளித் தேய்ப்பதைத் தவிர அதற்கு வேறு சவரட்ணை எதுவும் செய்வதில்லை.

ஆனால் அவள் அழகான கூந்தலுக்கு ஆசைப்பட்டிருக்கிறாள். அதுவும் ருதுவான நேரத்தில் அவளுக்குக் கருகருவென அடர்ந்த கூந்தல் இருந்தது. அதை ஆசை ஆசையாக அவள் மயில் ரத்தம் கலந்த எண்ணெய் தேய்த்து வாரி விட்டிருக்கிறாள். ஆனால் அவளைக் கட்டிக்கொடுத்த வீட்டில் தலைக்குத் தேங்காய் எண்ணெய் வைப்பதை பெரிய பவுசாக பலரும் சொல்லியபிறகு விளக்கு எண்ணெயைத் தடவிப் பார்த்தாள். ரெண்டு வருசத்தில் அந்த ஆசையும் வடிந்து போனது.

நாவிதனின் கை பிடறியை மழிக்க இறங்கியபோது அவளது மடியில், தோளில் கற்றை கற்றையாகத் தலை மயிர்கள் விழுந்திருந்தன. அவள் தலை கவிழ்ந்தபடியே உட்கார்ந்திருந்தாள். நாவிதனின் அலுமினியக் கிண்ணத்தில் இருந்த தண்ணீரை வெயில் உறிஞ்சிக் குடித்துக்கொண்டிருந்தது.

பத்து நிமிஷத்திற்குள் அவள் தலையை மழித்துவிட்டு துண்டை உதறி அவன் எழுந்துகொண்டான். நாவிதன் காலடியில் புரண்டு கிடந்த கண்ணாடியை எடுத்து முகம் பார்க்கலாமா என்று நாச்சியா ருக்குத் தோன்றியது. அதான் முடியைக் கழித்தாகிவிட்டதே இனி எதற்கு என்று அவளும் எழுந்து நின்றாள். கை அவள் அறியாமலே தலையைத் தடவிக்கொண்டது.

நாற்பது வருஷத்திற்கும் மேலாகக் காப்பாற்றி வந்த தலைமயிரை ஒரு நாளில் இழந்தாகிவிட்டது. சாமிக்குத் தானே தந்திருக்கிறோம் என்று அவளாக ஆறுதல் சொல்லிக்கொண்டாள். நாவிதன் திரும்பவும்

ஒரு பீடியைப் பற்ற வைத்தபடியே குளிக்கிறதுக்குக் கிணற்றுக்குத்தான் போக வேண்டும் என்று சொன்னான். அவன் கை காட்டிய திசையை நோக்கி நடந்தபோது அவள் தலையை காற்று தன் கைகளால் தடவிக் கூச்சமுண்டாக்கியது.

அவள் கிணற்றடியில் போய் நின்றபோதுதான் மாற்றுத் துணி கொண்டுவரவில்லை என்று தோன்றியது. கிணற்றடி யில் இருந்த தொட்டியில் கலங்கலாகக் கொஞ்சம் தண்ணீர் கிடந்தது. கூடவே ஒரு பிளாஸ்டிக் கப்புமிருந்தது. அவள் அள்ளி அள்ளி ஊற்றத் துவங்கினாள். தண்ணீர் உடம்பில் ஓடத் துவங்கும்போது அவள் அறியாமல் கண்ணீர் பொங்கிக்கொண்டு வந்தது. உடம்பு எரியத் துவங்கியது. அவள் காலடியில் ஓடும் தண்ணீரைப் பார்த்தபடியே 'மாரியாத்தா உன்னை நம்பித்தான் வந்திருக்கேன். நீ தான் எங்களைக் காப்பத்தணும்' என்று முணுமுணுத்துக் கொண்டாள்.

ஈர உடையோடு நாச்சியார் கோவிலை நோக்கி நடந்து வந்தபோது பூ விற்கும் பெண் அவளை நோக்கியபடியே 'யக்கா கூட யாரும் வரலையா. இப்படி ஒத்தையில வர்றீங்க. துணை கொண்டுவந்திருக்கக் கூடாது' என்று அக்கறையாக விசாரித்தாள். நாச்சியார் அவளுக்கு பதில் சொல்லவில்லை. அந்தப் பெண் திரும்பவும் கேட்டாள் 'யாருக்கு வேண்டுதல்?' நாச்சியார் தயங்கித் தயங்கிச் சொன்னாள் 'என் மருமகன் உடம்பு சரியில்லாம கிடக்காக அதான்' என்றாள்.

பூ விற்கும் பெண் ஒரு எலந்தைப் பழம் அளவில் சந்தன உருண் டையை உருட்டி அவளிடம் நீட்டியபடியே, 'தலையில தேய்ங்க. இல்லைன்னா சூடு தாங்காது' என்றாள். நாச்சியார் ஈரமான சுருக்குப் பையில் விரலை விட்டுத் தேடி ரெண்டு ரூபா காசை எடுத்தபோது அந்தப் பெண் நாச்சியாரின் முகத்தை உற்றுக் கவனித்த வளாக 'யக்கா உங்க காது அறுந்து போயி குறைக்காதா இருக்கு. எங்கம்மைக்கு இப்படித்தான் அரைக்காது இருக்கும், பாதியை எங்கப்பன் கம்மலுக்கு ஆசைப்பட்டு தூங்கையில அறுத்துட்டான்' என்று வெள்ளந்தியாகச் சொன்னாள்.

நாச்சியாருக்கு அந்தப் பூ விற்கும் பெண் மீது நெருக்கம் உண்டானது. 'பிள்ளைக பள்ளிக்கூடம் போயிருக்கா' என்று சன்னமான குரலில் கேட்டாள். பூ விற்பவள் தன்னை மீறிய ஆதங்கத்துடன் 'அதை ஏன் கேட்குறீக. அந்த மனுசன் ஒரு வேலை உருப்படியா பாக்க மாட்டேங் கிறாரு. இங்க வந்து கோவில் வாசல்ல உக்கார்ந்து யாவாரத்தைக் கவனிச் சிக்கோனு சொன்னா கேட்கறதேயில்லை. நான் ஒத்தையில என்ன செய்றது. நாலு பிள்ளைகள். கஞ்சி ஊத்தி வீட்ல போட்டு அடைச்சிட்டு வந்திருக்கேன். இனிமே போயிதான் அதுகளை பாக்க ணும். நாளும் பொழுதுமா கோவில் வாசல்லயே கிடக்கேன். ஆனாலும் ஆத்தா நம்மளை சுகப்பட வைக்கமாட்டேங்கிறா. அவளுக்கா ஒரு நாள் மனசு இறங்காமலா போயிரும். நான் என்ன வீடு வாசல் வேணும்னா கேட்கேன். ஆம்பளை சரியா இருந்தா போதும்னுதானே

சொல்றேன்' என்றாள்.

நாச்சியார் 'எல்லாம் சரியா போயிரும் பொம்பளை மனசை விட்றக் கூடாது' என்று சொன்னாள். பூக்காரி கண்ணைத் துடைத்தபடியே 'உங்களைப் பாத்தா நல்ல மனசா தெரியுது. வெட்கத்தை விட்டுச் சொல்றேன். நான் இந்தப் பூவில ஒரு முழம் பூ தலையில் வச்சிப் பாத்தது இல்லே. வைக்கக்கூடாதுனு வைராக்கியமா இருக்கேன். ஒரு நாள் உங்களை மாதிரி நானும் முடியை இறக்கிட்டு போதும்டா எல்லாம்னு துடைச்சிட்டு போயிர போறேன் பாருங்க' என்றாள். வீட்டுக்கு வீடு இப்படித்தான் இருக்கு என்ன செய்யச் சொல்றது என்று நாச்சியாரும் சலித்துக்கொண்டாள். கோவில் நடை திறப்பதற் கான பாட்டு போடத் துவங்கியிருந்தார்கள். பூக்காரி ஒரு கதம்ப மாலையைக் கொடுத்து சாமிக்குச் சாத்தச் சொன்னாள்.

நாச்சியார் கோவிலின் பிரகாரத்திற்குள் போனபோது இருபது வயதுப் பெண் ஒருத்தி நெற்றியில் மாவிளக்கு போட்டு விளக்கு ஏற்றிக்கொண்டிருந்தாள். அந்தப் பெண் மிகவும் மெலிந்து போனவளாக இருந்தாள். அவளது அம்மாகாரி குனிந்து பெண்ணிடம் 'சாமி . . . வர்ற முகூர்த்தத்திலே கல்யாணம் ஆகணும்னு வேண்டிக்கோடி . . . காலை ஒடுக்கமா வையி' என்று திட்டிக்கொண்டிருந்தாள். இரண்டு இளவட் டப் பையன்கள் அந்தப் பெண்ணை உற்று நோக்கியபடியே பபிள் கம் மென்றுகொண்டிருந்தார்கள்.

நாச்சியாரின் தலையில் வைத்த சந்தனம் நிமிசத்தில் காய்ந்து உதிரத் துவங்கியது. கர்ப்பகிருகத்தின் வாசலில் வந்து நின்ற நாச்சியார் நெற்றி தரையில் பட விழுந்து வணங்கினாள். மனதிற்குள்ளாகவே மாறி மாறிப் பிரார்த்தனை செய்துகொண்டாள். யாரும் தனது முணுமுணுப்பைக் கேட்டுவிடக்கூடாது என்பதுபோல அவள் உதடுகள் மிக மெதுவாக அசைந்தன. பிறகு அவள் சாமியை வெறித்துப் பார்த்த படியே நெடுநேரம் எதையோ கண்களால் பேசிக்கொண்டிருந்தாள்.

பூசாரி யார் பேருக்கு அர்ச்சனை என்றபோது மட்டும் மருமகன் பெயரைச் சொன்னாள். பூசாரி திருநீற்றை அள்ளித் தந்தபடியே எல்லாம் நல்லா இருப்பாங்க இந்தா பிடி என்றதும் உங்க வாக்கு பலிக்கட்டும் . . . சாமி . . . என்றபடியே நாச்சியார் திருநீறு முழுவதையும் நெற்றியில் பூசிக்கொண்டாள். மகளுக்காக ஒரு கவளம் திருநீறு அள்ளி முந்தியில் முடிந்து வைத்துக்கொண்டாள். பிரகாரத்தில் வந்து உட்கார்ந்தபோது மனது சற்றே தைரியம் கொண்டது போலவும் யாவும் எளிதாக தன்னைக் கடந்து போய்விட்டது போன்றும் அவளுக்குள் ஒரு சாந்தி வந்து சேர்ந்தது.

பேரனுக்காக பலூன் விற்பவனிடமிருந்து ஒரு ஊதல் வாங்கிக் கொண்டு போகலாம் என்று நினைத்து எழுந்து அருகில் போனாள். கயிறு கோர்த்த ஊதல் ஒன்றை வாங்கிக்கொண்டு கூடவே ஒரு டஜன் ஊக்கு வாங்கிக்கொண்டாள். ஒரு ரப்பர் பந்துகூட வாங்கலாம் என்று தோன்றியது. ஆனால் பலூன் விற்பவனிடம் ரப்பர் பந்து

இல்லை. பேருந்து நிலையத்தில் வாங்கிக்கொள்ளலாம் என்றபடியே அவள் கோவிலை விட்டு வெளியேறி நடக்கும்போது வெயில் வடிந்திருந்தது.

மொட்டைத் தலையும் திருநீறுமாக அவள் மிக மெதுவாக நடந்து திரும்பிக்கொண்டிருந்தாள். கோவிலை விட்டு வெகுதூரம் வந்தபிறகு ஒரு முறை திரும்பிப் பார்த்து மனதிற்குள் பிரார்த்தனை செய்துகொண்டாள். பேருந்து நிறுத்தம் அருகே வந்தபோது மிட்டாய்க் கடையின் கண்ணாடியில் அவளது உருவம் தெரிந்தது. அது அவள் உருவம்தானா என்று சந்தேகமாக இருந்தது. தலையைத் திருப்பிக்கொண்டாள்.

பேருந்தில் ஏறியபோது மருத்துவமனைக்குப் போய் மகளிடம் திருநீற்றைக் கொடுத்துவிட்டுப் போவதற்குள் எப்படியும் இருட்டிவிடும். அப்புறம் தன்னால் இட்லிக் கடையை எடுத்து வைத்து நடத்த முடியாது. இன்றைக்கு ஒரு நாள் விட்டுவிட வேண்டியதுதான் என்று தோணியது. பேருந்து வளைந்து திரும்பும்போது தன்னால் முடிந்தது அவ்வளவுதான் வேறு என்ன செய்துவிட முடியும் என்று நாச்சியார் தனக்குத் தானே சொல்லிக்கொண்டாள்.

திடீரென அவளுக்குத் தன் கேசத்தை அந்த நாவிதன் என்ன செய்வான் என்ற கேள்வி எழுந்தது. உதிர்ந்து கிடந்த கேசத்தில் தனது கேசத்தை மட்டும் தனியே அடையாளம் கண்டுகொள்ள முடியுமா என்ன? எல்லா கேசமும் ஒன்றுதானில்லையா? யோசிக்க யோசிக்க எதற்கெனத் தெரியாமல் துக்கம் திரும்பவும் அவளைப் பற்றிக்கொள்ளத் துவங்கியிருந்தது. பூக்காரி, அந்த நாவிதன், சர்வேயரின் மனைவி என்று யாவரின் மீதும் நாச்சியாருக்கு துக்கமாக வந்தது. உலகமே இப்படித்தானிருக்கிறதா?

எங்காவது வழியில் இறங்கி கொஞ்சநேரம் அழுதுவிட்டு பஸ்ஸில் ஏறிக்கொள்ளலாம் என்றுகூட தோணியது. அவள் வெறித்த கண்களுடன் சாலையைப் பார்த்துக்கொண்டிருந்தாள். மனதில் மகளின் முகம் தோன்றி அழிந்து கொண்டேயிருந்தது.

**பிரார்த்தனைக்கு வெளியே**

ஐந்து நாட்களுக்கு முன்பு நாச்சியாரின் மூத்தமகள் மீனாவின் கணவனான துரைப்பாண்டி மனைவியின் நடத்தை மீது சந்தேகம் கொண்டு அவளை அடித்து வலது கையை முறித்ததோடு நாச்சியார் முன்னிலையில் மீனாவின் சேலையை உருவி அம்மணமாக்கி அப்படியே கொளுத்திவிடப் போவதாக கரைச்சல் செய்தபோது நாச்சியார் இப்படியொரு பயலுக்குப் பொண்ணைக் கொடுத்து விட்டோமே என்று வேதனைப்பட்டு தலையில் அடித்துக்கொண்டு புழுதியை வாரித் தூற்றிவிட்டு தன் மகளை வீட்டிற்குக் கூட்டிப் போய்விட்டாள்.

அன்றிரவு முழுப்போதையில் தன் பெண்டாட்டியை வெட்டியே தீருவேன் என்று தெருவில் கூச்சலிட்டபடியிருந்த துரைப்பாண்டி பின்னிரவில் எங்கோ தனது ஆட்டோவை ஓட்டிக்கொண்டுபோய்

இடித்து ரத்தக்காயத்தோடு மருத்துவ மனையில் அனுமதிக்கப்படவே அவனுக்காக நாச்சியாரின் குடும்பமே பகலிரவாக உடனிருந்து வைத்தியம் பார்த்தது. அதன் தொடர்ச்சியாகத் தான் மருமகன் நலனுக்காக தானே முடி இறக்குவது என்று நாச்சியார் முடிவு செய்தது நடந்தேறியது.

இந்தச் சம்பவங்கள் யாவையும் கடவுள் அறிந்திருப்பாரா என்பது தான் சந்தேகமாக இருக்கிறது.

# உதிரிப் பொய்கள்

ஸ்கூலில் கட்ட வேண்டிய நூற்றிஅறுபது ரூபாய் பீஸை வாங்கித் தருவதாகச் சொல்லி மம்மி என்னை அவள் வேலை செய்கின்ற வீட்டுக்குக் கூட்டிக்கொண்டு போய்க்கொண்டிருந்தாள். அசோக்பில்லர் அருகில் வரும்போது அங்கே வந்து நான் சொல்றதுக்கு எல்லாம் தலையை தலையை ஆட்டணும். நீயா எதுவும் பேசக்கூடாது. ஏதுனாச் சிம் கேட்டா இங்கிலீஷ்லதான் பதில் சொல்லணும் என்றாள். நான் தலையாட்டிக்கொண்டேன்.

என்னுடைய மம்மி நாலஞ்சு வீட்டில் வேலை செய்கிறாள். தரை துடைக்கிறது, துணி துவைப்பது, பாத்திரம் கழுவி வைக்கிறது எல்லாம் அவளோட வேலை. காலையில எட்டு மணிக்கு கோடம் பாக்கத்தில உள்ள மங்களம் மாமி வீடு, அப்பாலே பத்து மணிக்கு சேட்டு வீடு, அங்கிருந்து பஸ்ஸைப் பிடித்து சாமியார் மடத்தருகே போய் இறங்கி நடந்துபோனா டிவி சீரியலில் நடிக்குற அபர்ணா வீடு, சாயங்காலமாக ஜெபமணி வீடு.

ரெண்டு பேரும் டவுன் பஸ்ஸில் ஏறி நின்றுகொண்டோம். கடன் கேட்கப் போகிற மாமி வீடு கோடம்பாக்கத்தில் இருக்கிறது. அது வர்றதுக்குப் பத்து நிமிசம் ஆகும். அதுவரைக்கும் என்னைப் பத்தி நானே சொல்லிக்கொண்டு வருகிறேன்.

**எ**ங்க வீடு சீனிவாசா தியேட்டருக்குப் பக்கத்தில் உள்ள சந்துக்குள்ளே இருக்கு. எங்க டாடி கொசு மருந்து அடிக்கிற வேலை செய்றாரு. ஆனா பாதி நாள் வேலைக்குப் போக மாட்டாரு. அவரும் ஆட்டோ ஓட்டுற தனசங்கரும் ரொம்ப தோஸ்து. ஒண்ணாவே சுத்திட்டு அலைவாங்க. ரெண்டு பேரையும் நானே பாலத்தாண்டே இருக்கிற ஒயின்ஷாப்ல பார்த்திருக்கிறேன்.

அப்பா தன்னை டாடினுதான் கூப்பிடணும்னு கட்டா யமா சொல்லியிருக்கிறார். அம்மாவும் யார் வீட்டுக்காவது கூட்டிகினு போகையில் மம்மினு கூப்பிடச் சொல்லும். இங்கலீஷ் கத்துகிடுறதுக்

காகவே என்னை ஜாக்கிசான் படங்களுக்கு எல்லாம் டாடி கூட்டிக் கொண்டு போயிருக்கிறார். ஆனால் ஜாக்கிசான் பேசுற இங்கிலீஷ் ஒரு வார்த்தையும் புரியாது. சண்டை போடுறது ரொம்பவும் பிடிக்கும். வழியில் எங்கனாச்சும் டாடியைப் பார்த்தா குட்மார்னிங் டாடினு சல்யூட் அடிக்கணும். இல்லேன்னா செவுளைப் பேத்துருவாரு.

எனக்கு ரெண்டு பேரு இருக்கு. வீட்ல கூப்பிடுற கன்னியப்பன். இன்னொன்னு பள்ளிக்கூடத்தில் பதிஞ்சிருக்கிற அஜய்குமார். நான் ஐந்துவிளக்கு கார்ப்பரேஷன் ஸ்கூல்ல எட்டாவது படிக்கிறேன்.

வேலை செய்ற எந்த வீட்டுக்கும் என் டாடி வரக் கூடாதுனு மம்மி சொல்லி வைச்சிருக்கிறாங்க. முன்னாடி மம்மி கோபால்சாமி சார் வீட்டில் வேலை செய்து கொண்டிருந்தபோது டாடி ஒரு நா மம்மியை லாரி அடிச்சிப் போட்ருச்சினு பொய் சொல்லி ஆயிர ரூபாய் வாங்கிட்டுப் போயிட்டாரு. அன்னைக்கு வீட்ல பெரிய சண்டை. டாடி அதிலிருந்து மம்மியை தேடிப் போகவே மாட்டார்.

ஆனால் என்னை மம்மி சில தபா அவங்க வேலை செய்ற வீடுகளுக்கு இட்டுகிட்டு போயிருக்கிறாங்க. என்னை இட்டாந்தாலே அது காசு கடன் கேட்கிறதுக்குதானு வீட்டுக்காரர்களுக்கே தெரிஞ்சி இருக்கும்.

ஆனால் அங்கே யாரு எது கொடுத்தாலும் சாப்பிடக் கூடாதுனு சொல்லியே கூட்டிகிட்டுப் போவாங்க. அது எனக்குப் பிடிக்கவே பிடிக்காது. அந்த வீட்ல நாய்க்குப் போடுற பிஸ்கட்டு கூட ரொம்ப டேஸ்டா இருக்கும். அத்தோட பாதி தின்ன ஆப்பிள், நமத்துப் போன பிஸ்கட், முறுக்கு, கார சேவுனு எவ்வளவோ சாப்பிடக் கிடைக்கும்.

மம்மிகிட்டே அடிவாங்க முடியாது. அதுக்கு பயந்து எதையும் சாப்பிட மாட்டேன். ஆனா ஆசை ஆசையா இருக்கும். தெரியாமல் ஒரு வாய் அள்ளித் தின்னுட்டாகூட வீட்டுக்கு வர்ற வழியில் மம்மி காதைப் பிடித்துத் திருகி முதுகிலேயே அடிப்பாங்க. அவங்களுக்கு ஏன் இதையெல்லாம் பார்த்தா சாப்பிடணும்னு ஆசையே வர மாட்டேங்குது.

எனக்கு எதைப் பார்த்தாலும் திங்கணும்னு ஆசை ஆசையாக இருக்கு.. வீட்டில் சாப்பிடுறதுக்கு எதுவுமே யிருக்காது. அஞ்சுகம் அக்கா வீட்டிற்குச் சாயங்காலம் போனா டிவி சீரியல் பார்க்கும்போது மிக்சர் திங்கக் கொடுப்பார்கள். ஆனால் ஒரு வாய்க்கு மேல கேட்டால் தர மாட்டாங்க.

எனக்கு டீவியில் வர்ற மேகி நூடுல்ஸ், சிப்ஸ், மிட்டாய், எல்லாத் தையும் வாங்கித் திங்கணும்னு ஆசை. யாரும் பார்க்காதப்போ டிவியை நாக்கால தொட்டு நக்கிப் பார்த்திருக்கிறேன். எங்க வீட்ல டிவியில்லை. தீபாவளிக்கு வாங்கணும்னு சொல்லியிருக்காங்க. டிவி வாங்கி வச்சா அதை டாடி அடமானம் வைக்கக்கொண்டுபோய் விடு வாருனு மம்மிக்கு பயம்.

நாலு வருஷத்துக்கு முன்னாடி என் தங்கச்சி ராணி பிறக்குறப்போ மம்மி எக்மோர் ஆஸ்பிட்ல இருந்தாங்க. அப்போ ரவி மாமா வாங்கிக் குடுத்த டயனோரா டிவி எங்க வீட்டில இருந்துச்சி. அது பிளாக் அண்ட் ஒயிட். அதை டாடி முந்நூறு ரூபாய்க்கு அடமானம் வச்சி குடிச்சிட்டாரு. மம்மியாலே மீட்கவே முடியலை. அதுக்கு அப்புறம் நாங்க டிவி வாங்கவேயில்லை. எங்க வீட்ல ஏழு பேரு இருக்கோம். எனக்கு மூணு சிஸ்டர். ஒரு பிரதர். எங்க வீட்ல டாய்லெட் கிடையாது. கார்ப்பரேஷன் கக்கூசுக்குத்தான் போகணும். அதுக்காக நாங்க அஞ்சு மணிக்கு எல்லாம் எந்திருச்சிப் போயிருவோம்.

மம்மி வீட்டு வேலை முடிஞ்சி ராத்திரி வீட்டுக்கு வர்றப்போ ஏதாவது கொண்டுவரும். சில நேரம் சிக்கன், பிஷ் எல்லாம்கூட தூக்குவாளியில் போட்டுக்கொண்டு வரும். ஒரு தடவை டாடி என்னை வடபழனியில் இருக்கிற கல்யாணம் மண்டபத்துக்குக் கூட்டிகிட்டுப் போனாரு. கல்யாணம் முடிஞ்சி மண்டபமே காலியாக இருந்துச்சி. ரெண்டு பெரிய டபரா நிறைய மிஞ்சிப்போன சாதம். நாலைஞ்சு வாளியில குழம்பு, பாயாசம், உருளைக்கிழங்குப் பொரியல், பட்டாணி, முட்டைகோசு, கேரட்டு, ரசம் எல்லாம் இருந்துச்சி. எனக்கு அதைப் பாத்தவுடனே எச்சி ஊற ஆரம்பிச்சிருச்சி.

அங்கேயே சாப்பிடலாமானு பாத்துகிட்டு இருந்தேன். ஆனா அந்த மண்டபத்து ஆளு டாடிகிட்டே நாற்பது ரூபா தந்துட்டு எல்லாத்தையும் தூக்கிட்டுப் போகச் சொன்னான். தனசங்கர்தான் துட்டு கொடுத்து சரி பண்ணிச்சி. டாடி ஆட்டோவில் எல்லாத்தையும் தூக்கி வச்சி வீட்டுக்குக் கொண்டுவந்து சாதத்திலேயே குழம்பு, பொரியல் எல்லாத்தையும் ஒண்ணா போட்டுக் கலந்து வீட்டாண்டை இருக்கிறவங்க எல்லாருக்கும் ஒருவாளி அஞ்சு ரூபானு வித்துட்டாரு. அதுல முந்நூறு ரூபா கிடைச்சிருச்சி. அதுக்கு இன்னா அடிபுடி தெரியுமா?

நான் அன்னைக்கு எட்டு டம்ளரு பாயாசம் குடிச்சேன். வயிறு முட்டமுட்ட சாப்பிட்டேன். டாடி அள்ளி அள்ளி உருளைக்கிழங்கை வெறும் வாயாலே தின்னுகிட்டு இருந் தாரு. மறுநா வீட்ல ஒரே குசு. எனக்கு சிரிப்பை அடக்கவே முடியலை.

எங்க வீட்ல இருக்கிற தண்ணிப்பானை, அடுப்பு, சைக்கிள், ஸ்கூல் புத்தகம், நாற்காலி எல்லாமே மம்மி வாங்கினதுதான். டாடி எதுவும் வாங்கினதா எனக்கு ஞாவகமேயில்லை. தீவாளிக்கு பாண்டிபஜார்ல விக்கிற டிரஸ் எடுக்கப் போறப்போ மட்டும் டாடி தனசங்கரோட ஆட்டோ எடுத்துகிட்டு வருவாரு. அன்னைக்கு ஒரு நாள்தான் டாடி கையில் காசைக் குடுத்து மம்மி செலவு பண்ணச் சொல்லும். டாடி அதுலயும் எப்படியும் நூறு இருநூறு அடிச்சிருவாரு. முன்னாடி நிறைய குடிச்சிகிட்டு வந்து மம்மியை அடி அடினு டாடி அடிப்பாரு. இப்போ அப்படியில்லை கொஞ்ச நாளா குடிச்சிட்டு வந்தா உடனே தூங்கிருவாரு இல்லே ஆட்டோவில போய் படுத்து கிடுவாரு.

மம்மி தமிழ், தெலுங்கு எல்லா சினிமாவும் பாத்துரும். ஆனா யாரையும் கூட்டிகிட்டுப் போக மாட்டாங்க. மம்மி வேலைக்குப் போறப்போ மட்டும் செருப்பு போட்டுக்கிடுவாங்க. பிளாஸ்டிக் பூ வாங்கி வச்சிருக்காங்க அதைத் தலையில் வச்சிகிட்டுப் போவாங்க. மங்களம் மாமி பொண்ணு கல்கத்தாவில் இருந்து வந்தப்போ தந்துச்சின்னு ரெண்டு சுடிதார்கூட வச்சிருக்காங்க. அதை பீச்சுக்குப் போனா மட்டும் போட்டுகிட்டு வருவாங்க. மம்மிக்கு இங்கிலீஷ் எழுத்து கூட்டி படிக்கத் தெரியும். என்னோட ரேங்க் கார்டுல கூட இங்கிலீஷ்லதான் கையெழுத்து போட்டு இருக்காங்க. எங்க வீட்ல எல்லாமே மம்மிதான்.

மாமி வீடு வந்துருச்சி. இறங்கிப் போனாதான் இன்னா நடக்கப் போகுதுனு தெரியும். நீங்களும் கூட வாங்க.

## முதல் பொய்

மங்களம் மாமியோட வீடு பழைய காலத்தது. உள்ளே பெரிய ஊஞ்சல் போட்டு இருக்காங்க. அதுல உட்கார்ந்து மாமி இட்லி சாப்பிட்டுக்கிட்டு இருந்துச்சி. நான் கிச்சன்ல போய் உட்கார்ந்து கிட்டேன். என்னை மாமி திரும்பிப் பாத்துச்சி. ஆனா சாப்பிடுறயானு கேட்கவேயில்லை.

அம்மா வீட்டைத் துடைக்கிறதுக்காக பினாயில் பாட் டிலை எடுத்து வாளியில் தண்ணி பிடிச்சி ஊத்திக்கிட்டு இருந்துச்சி. மாமி வீட்ல எப்பவும் யாருமே இருக்கிறதில்லை. அவங்க எல்லாரும் அமெரிக்காவில் இருக்கிறதா மம்மி சொல்லியிருக்கு. தரையைத் துடைச்சிக்கிட்டே மம்மி டிவியில என்ன பாட்டு ஒடுதுன்னு பாத்துகிட்டு இருந்துச்சி.

மாமி கையைக் கழுவிட்டு வந்து இன்னைக்கு பள்ளிக் கூடத்துக்கு இவன் போகலையானு கேட்டுச்சி. மம்மி அவனுக்கு நாலு நாளா காச்சல். டாக்டரு தினம் பத்து மாத்திரை சாப்பிடச் சொல்லியிருக் காரு வேலை முடிச்சி கிட்டு ராயப்பேட்டை ஜி.ஹெச்சுக்குக் கூட்டிகிட்டுப் போகணும்னு சொல்லியபடியே வேலை செய்யத் துவங்கியது.

மாமி என்னைத் திரும்பவும் பார்த்தாள். காய்ச்சல் வந்தவனைப் போல நான் தலையைக் கவுந்து உட்கார்ந்து கொண்டேன். மாமி திரும்பவும் டிவி பாக்கத் துவங்கி விட்டாள். தரையைத் துடைத்து முடித்த கையோடு மம்மி பாத்திரங்களை அள்ளிப் போட்டு தேய்ப்ப தற்காக உட் கார்ந்துகொண்டபடியே எங்க ஏரியாவில நேத்து ஒரு வீட்ல திருடன் புகுந்து அபார்ட்மெண்ட்ல தனியா இருந்த பொம்பளை நகையைத் திருடிகிட்டுப் போயிட்டான் என்று சொன்னாள்.

மாமி டிவியை ஆப் செய்துவிட்டு ஊஞ்சலை விட்டு இறங்கி வந்து மரநாற்காலியை இழுத்துப் போட்டு உட்கார்ந்துகொண்டு. யார் வீடு அது என்று கேட்டது. மம்மி கூசாமல் பொய் சொல்லத் துவங்கினாள்.

'அதுவும் ஒரு அமெரிக்காகாரங்க வீடுதான். தினம் நோட்டம் விட்டுக்கிட்டே இருந்துருக்காங்க. பிறகு கூரியர்க்காரன் மாதிரி வீட்டுக்குள்ளே புகுந்து கத்தியைக் காட்டி மிரட்டியிருக்காங்க. இந்த மாமி பயத்துல போலீஸ்க்கு போன் பண்ணப் பாத்து இருக்காங்க. இரும்புக் கம்பியாலே நாலு அடி. மண்டை உடைஞ்சி, உதடு பிஞ்சி போச்சாம். நகையைக் கழட்டிக் கொடுத்திட்டாங்க. நாற்பத்தைந்து பவுனு நகை' என்றபடியே குழாயில் பாத்திரங்களைக் கழுவிக் கொண்டிருந்தாள்.

மாமி என்னிடம் இட்லி சாப்பிடுறயாடா என்று கேட் டாள். நான் வேணாம் வாந்தியா வருது என்று சொன்னேன். மாமியும் மம்மியும் திருட்டுப் போன வீட்டைப் பத்திய கதையைப் பேசிக் கொண்டேயிருந்தார்கள். பிறகு மம்மி துணியை ஊற வைத்துவிட்டு இவனை ஹாஸ்பிடலுக்குக் கொண்டுபோய்க் காட்டிட்டு வந்துருறேன் எனத் தயங்கி தயங்கிச் சொன்னபோது மாமி சரி போய்ட்டு வாடி என திரும்பவும் டிவியை ஆன் செய்தாள்.

மம்மி அவளிடம் நூறு ரூபாய் பணம் வேணும் என்றது. மாமி உள்அறையில் இருந்த பீரோவைத் திறந்து நாற்பது ரூபாய் எடுத்து வந்து இவ்வளவுதான் இருக்கு. பேங்க்கு போயிதான் எடுக்கணும் என்றபடியே டிவி பார்க்கத் துவங்கினாள். மம்மி என்னை அழைத்துக் கொண்டு வெளியே வந்தபோது எனக்குச் சிரிப்பாக வந்தது. எந்த மாமி வீட்ல திருட்டுப் போச்சி என்று கேட்டேன். மம்மி நேத்து பாத்த தெலுங்குப் படத்தில் அப்படியொரு சீனு வந்துச்சி என்று சொல்லிச் சிரித்தது.

### இரண்டாவது பொய்

சேட்டு வீட்டில் இருபது பேர்களுக்கும் மேல் இருந்தார் கள். பின்வாசல் கதவு வழியாக நானும் மம்மியும் உள்ளே போனபோது சேட் மனைவி உருளைக்கிழங்கை உரித்துக் கொண்டிருந்தாள். அருகில் அவளது தங்கை வெங்காயம் வெட்டிக்கொண்டிருந்தாள். தினம் தினம் எவ்வளவு உருளைக்கிழங்கு வெங்காயம் சாப்பிடுவார் களோ, எப்போ பாத்தாலும் இதையே செய்துகொண்டிருக்கிறார்கள். மம்மி அவர்கள் வீட்டின் கிச்சனுக்குப் போகக் கூடாது. பின்வாசல் வழியாகப் போனால் துணி துவைக்கும் திண்டும் சிறிய பாத்திரம் கழுவும் இடமும் இருந்தது. அங்கேயே வேலையை முடித்துக்கொண்டு விட வேண்டும்.

மம்மி போன வேகத்தில் அங்கிருந்த சோப்பை எடுத்து பாத்திரங் களைத் தேய்க்கத் துவங்கினாள். சேட்டு மனைவி என்னிடம் எந்த வகுப்பில் படிக்கிறேன் என்று கேட்டுக்கொண்டிருந்தாள். அநேகமாக இதைப் பத்துத் தடவைக்கு மேல் சொல்லிவிட்டேன். அவளுக்கு மனசில் நிக்காது போல.

வீட்டிற்குள் இருந்து சேட்டின் மருமகள் நாய்க்குட்டியைக் குளிக்க வைப்பதற்காகக் கொண்டுவந்தாள். மம்மி அந்த நாய்க்குட்டியை வாங்கி தண்ணீர் குழாயில் அதைக் காட்டியபோது நாய் கூச்சத்தில் துள்ளியது. நாயின் உடம்புக்கு ஷாம்பு போட்டுவிட்டபடியே மம்மி இப்போதெல்லாம் நாய்களுக்குக் கண்ணுக்குத் தெரியாத ஒரு உண்ணி பிடித்துக் கொள்கிறது என்று சொல்லி அந்த உண்ணி நாயிடமிருந்து மெல்ல வீட்டு ஆட்களுக்கும் தொற்றிக்கொண்டுவிட்டால் கை கால் எல்லாம் அரிப்பு ஏற்பட்டுவிடுகிறது என்றபடியேதான் வேலை செய்யும் டிவி நடிகை வீட்டில்கூட இப்படி நாயால் ஏற்பட்ட சொறி சிரங்கால் அவளது அம்மா மிகவும் அவதிப்படுவ தாகச் சொல்லி இருபதாயிரம் கொடுத்து வாங்கிய நாய்க் குட்டியை தெருவில் வீசி எறிந்துவிட்டார்கள் என்று சொன்னாள்.

சேட்டு மனைவியும் மருமகளும் அது என்ன வகையான நாய்? அந்த உண்ணி எப்படியிருக்கும். அதை எப்படித் தெரிந்துகொள்வது என்று கேட்டுக்கொண்டிருந்தார்கள். அம்மா தான் விசாரித்து வந்து சொல்வதாகச் சொல்லியபடியே என்னை ஹாஸ்பிடலுக்குக் கூட்டிப் போக வேண்டிய கதையை அங்கேயும் சொன்னாள். நாய்க்குட்டியைக் குளிப்பாட்டிய பிறகு துண்டால் துடைத்துவிட்டு மருமகளிடம் தந்தாள். மருமகள் சில நிமிஷங்களுக்குப் பிறகு வீட்டிற்குள்ளிருந்தபடியே மம்மியை தனியே அழைத்தாள்.

மம்மி உள்ளே போனபோது அவர்கள் இருவரும் ரகசியமாகப் பேசிக்கொண்டார்கள். சில நிமிஷத்திற்குப் பிறகு உள்ளே இருந்து சேட்டின் மருமகள் ஐம்பது ரூபாய் எடுத்து வந்து தந்தாள். மம்மி என்னை ஹாஸ்பிடல் அழைத்துக்கொண்டு போய்விட்டு திரும்பி வந்து வேலை செய்வதாகச் சொல்லியபடியே அங்கிருந்து என்னை அழைத்துக்கொண்டு வந்தாள்.

### மூன்றாவது பொய்

டிவி நடிகை உறங்கிக்கொண்டிருந்தாள். அதிகாலையில் தான் படப்பிடிப்பு முடிந்து வந்ததாக அவளது அம்மா சொல்லிக் கொண்டி ருந்தாள். மம்மி அவர்கள் வீட்டில் நடிகையின் தொடரை நான் தினமும் தவறாமல் பார்ப்பதாகவும் ஒரேயொரு முறை நேரில் பார்த்து ஆட்டோகிராப் வாங்கிக்கொண்டு போவதற்காக அழைத்து வந்திருப்பதாகவும் சொன்னாள்.

டிவி நடிகையின் அம்மா என்னிடம் உனக்கு அபர்ணா நடிப்பு

பிடிக்குமா என்று கேட்டாள். சினிமா நடிகைகளை விடவும் அபர்ணா பிரமாதமாக நடிப்பதாகச் சொன்னேன். டிவி நடிகையின் அம்மா தன் மகளுக்கு மதுரையில் ரசிகர் மன்றம் திறந்திருப்பதாகவும் முதல்முதலாக ஒரு டிவி நடிகைக்கு இப்போதுதான் மன்றம் ஆரம் பித்திருக்கிறார்கள் என்று பெருமையடித்தாள்.

மம்மி என்னைக்காட்டி இவனே ரசிகர் மன்றம் ஆரம்பிக்கிறேன்னு சொல்லிகிட்டு இருக்கான். ஆனா நான் தான் மேடம் திட்டுவாங்கன்னு பயந்து வேணாம்னு தடுத்து வச்சிருக்கேன் என்று ஆதங்கத்தோடு சொன்னாள். தன் மகளின் நடிப்பை ஆறு கோடிப் பேர் பார்க்கிறார்கள் என்று அவளின் அம்மா ஒரு புள்ளிவிபரக் கணக்கை விளக்கிச் சொல்லத் துவங்கினாள்.

நடிகையின் வீட்டில் எல்லா அறைகளிலும் டிவி இருந்தது. அதில் ஒரு பெரிய டிவியில் நடிகையின் தொடர் ரிக்காடிங் செய்யப்பட்டு திரும்பத் திரும்ப ஓடிக்கொண்டே யிருந்தது. மம்மி வாக்யூம் கிளினரை வைத்து வீட்டை சுத்தம் செய்துகொண்டிருந்தபடியே காலையில் மேடம் பற்றி தந்தி பேப்பரில் நியூஸ் போட்டிருந்தது பாத்தீங்களா என்று கேட்டாள்.

நடிகையின் அம்மா தனக்குத் தமிழ் பேப்பர்கள் படிக்கத் தெரியாது என்று சொல்லியபடியே ஒரு பேப்பர் வாங்கி வந்து தர முடியுமா என்று என்னிடம் கேட்டாள். நான் சரி என்றதும் அவள் பத்து ரூபாய் எடுத்து வந்து தந்தாள். அருகில் இருந்த கடையில் போய் தந்தி பேப்பர் வாங்கி வந்து தந்தேன். அதை அங்குமிங்கும் புரட்டியபடியே எந்தப் பக்கத்தில் வந்திருக்கிறது என்று கேட்டாள்.

மம்மி பேப்பரைப் புரட்டிப் பார்த்துவிட்டு நான் மறந்து போய்ச் சொல்லிட்டேன். அது நேத்து மாலைமுரசு என்று சொன்னாள். எனக்குச் சிரிப்பாக வந்தது. அறைக்குள் டெலிபோன் அடிக்கும் சப்தம் கேட்டு நடிகை எழுந்துகொண்டாள். பாதித் தூக்கம் கலைந்த முகத்துடன் கிச்சனுக்கு வந்தவளிடம் அவளது அம்மா பாப்பா உன்னைப் பத்தி மாலைமுரசுல நியூஸ் வந்திருக்காம். நம்ம வேலைக்காரி சொல்றா என்றாள்.

நடிகை அதைப் பெரிதாகக் கேட்டுக்கொள்ளவில்லை. மம்மி அவளுக்கு ஒரு குட்மார்னிங் சொல்லியபடியே உங்களைப் பாத்து ஆட்டோகிராப் வாங்கணும்னு சொன்னான். அதான் கூட்டிகிட்டு வந்தேன் என்றாள். நடிகைக்கு நானும் ஒரு குட்மார்னிங் சொன்னேன். அவள் என்னை முறைத்துப் பார்த்தபடியே தன் அம்மாவிடம் தெலுங்கில் ஏதோ சொன்னாள். பிறகு மம்மி ஒரு காகிதத்தில் அவளிடம் கையெழுத்து வாங்கித் தந்தாள்.

மம்மி என்னை அனுப்பிவிட்டு வருவதாகச் சொல்லியபடியே புறப்பட இருந்தபோது நடிகையின் அம்மா மாலைமுரசு எங்கே கிடைக்கும் என்று கேட்டாள். அதை எக்மோரில் போய் வாங்கி வர வேணும். இப்போ கிடைக்குமா தெரியலை என்று இழுத்தாள்

மம்மி. நடிகையின் அம்மா ஐம்பது ரூபாய் தந்து உடனே எப்படியாவது வாங்கிக்கொண்டு வரும்படியாகச் சொன்னாள். நானும் தலையாட்டிக் கொண்டேன். வெளியே வந்தபோது அம்மா தன்னிடமிருந்த பணத்தை எண்ணிப்பார்த்தாள். இன்னும் இருபது ரூபாய் வேண்டியிருந்தது. அதற்கு என்ன செய்வது என்றபடியே ஜெபமணி வீட்டிற்குப் போகலாம் என்றாள்.

### நான்காவது பொய்

ஜெபமணியின் வீட்டில் உறவினர்கள் வந்திருந்தார்கள். வீட்டில் ஏதோ பிரார்த்தனை நடக்கப் போகிறது போலும். பாதிரியார் கூட இருந்தார். மம்மி என்னை அழைத்துக்கொண்டு வாசல் வரை போனவள், ஏதோ யோசனைக்குப் பிறகு என்னிடம் இரண்டு ரூபாய் தந்து அவளை போன் பண்ணி உடனே கூப்பிடும்படியாக அந்த வீட்டின் போன் நம்பரைச் சொன்னாள்.

நான் காசை வாங்கிக்கொண்டு அருகில் இருந்த எஸ்டிடி பூத்தை நோக்கி நடந்து சென்றேன். அந்த வீட்டு நம்பர் போகவேயில்லை. திரும்பத் திரும்ப முயற்சி பண்ணிக் கொண்டேயிருந்தேன். அரைமணி நேரத்திற்குப் பிறகு போன் அடித்தது. மம்மியின் பெயரைச் சொல்லி உடனே பேச வேண்டும் என்று சொன்னேன்.

அடுத்த ஐந்து நிமிசத்தில் அம்மா நான் நின்றிருந்த எஸ்டிடி பூத் அருகே வந்து நின்றாள். அவள் கையில் முழுசாக ஒரு நூறு ரூபாய்த் தாள் இருந்தது. எப்படி என்று கேட்டேன். அவள் உங்க டாடியை லாரி அடிச்சிருச்சினு சொல்லிட்டேன் என்றாள். இப்போது அவள் கையில் ஸ்கூல் பீஸுக்கும் மேலாக எண்பது ரூபாய் இருந்தது.

மம்மி என்னிடம் பசிக்குதா என்று கேட்டாள். நான் தலை யாட்டினேன். இருவரும் நடந்து போய் தேவர் பிரியாணிக்கடையில் சாப்பிட்டோம். வெளியே வந்த அம்மாவிடம் எதுக்கு மம்மி இவ்வளவு பொய் சொல்றே என்று கேட்டேன். அவள் சிரித்துக்கொண்டே உனக்கு ஸ்கூல் பீஸ் கட்ட வேணும்னு கேட்டா தரமாட்டாங்கடா. அதுக்கு எல்லாம் அவங்களுக்கு மனசு கிடையாது. நாம படிக்கிறது அவங்களுக்கு எல்லாம் பிடிக்காது என்றாள். அது சரிதான் என்று பட்டது.

மம்மி என்னை மதியம் ஸ்கூலுக்குப் போய் பீஸ் கட்டும் படியாகச் சொல்லி நூற்று அறுபது ரூபாய் தந்துவிட்டு தான் லிபர்டியில் தர்மதுரை படம் பார்க்கப் போவதாகச் சொன்னாள். ஸ்கூலுக்குப் போவதற்காக பஸ் ஏறினேன்.

மம்மி சொன்ன பொய்களை நினைத்து சிரிப்பாக வந்தது. தனியே சிரித்துக்கொண்டே வந்தேன். மம்மிக்குப் பொய் சொல்லத் தெரியாமல் போயிருந்தால் என்னவாகியிருப்போம் என்று நினைத்தபோது பயமாக இருந்தது. நாளைக்கு மம்மி இதைச் சமாளிப்பதற்காக புதிதாக

என்ன பொய்கள் சொல்வாள் என்று நினைத்தபோது என்னால் சிரிப்பை அடக்க முடியவேயில்லை. ஆனால் சில நிமிஷங்களில் மனதில் ரொம்ப வருத்தமாக இருந்தது. பாவம் அம்மா என்று தோன்றியது. அதே நேரம் ஆத்திரம் தீருமளவு யாரையாவது அடிக்க வேண்டும் போலவும் இருந்தது.

# வாலை வெட்டுவதற்கு முன்பு நாயும் இரண்டு மனிதர்களும்

தனது வளர்ப்பு நாயின் வாலை வெட்டிவிடுவது என்று நாயின் உரிமையாளராக இருந்த அந்தப் பெண்ணும் அவளது கணவனும் முடிவு செய்த மறுநாளிலிருந்து அதற்கான வழிமுறை திட்டமிடத் துவங்கினார்கள். உண்மையில் அந்த யோசனையை நாயின் உரிமை யாளன்தான் முதலில் தெரிவித்தான்.

அவன் பன்னாட்டு நிறுவனம் ஒன்றின் உயர் பதவியிலிருந்தான். கடற்கரையோரமான வசதியான வீடு. அந்தஸ்தின் அடையாள மாக அவன் மனைவி நாய் வளர்ப்பதில் ஈடுபாடு கொண்டிருந் தாள். அந்த நாய் பனிப்பிரதேசத்தில் வளர்க்கப்படும் இனத்தைச் சேர்ந்தது.

அவனால் நாய் தன் நாக்கை வெளியே தொங்கப் போட்டுக் கொண்டு எப்போதும் வாலை ஆட்டிக்கொண்டேயிருப்பதை சகித்துக்கொள்ள முடியவில்லை. அது ஏதோவிதத்தில் தன்னைக் கேலி செய்வதாகவே தோணியது. பல நேரங்களில் அவன் ஊஞ்சலில் அமர்ந்த படியே மது குடித்துக்கொண்டிருக்கும்போது நாய் தன் வாலை ஆட்டிக்கொண்டிருப்பதை கவனித்திருக்கிறான்.

நாய் உறக்கத்திலிருப்பதுபோல கண்ணை மூடியிருந்த போதும் அதன் வால் தானே அசைந்துகொண்டேயிருந் தது. என்ன மிருகம் இது, உறக்கத்தில்கூட நிம்மதியற்று இருக்கிறதே என்று அவனுக்கு ஆத்திரமாக வந்தது.

தனது இருக்கையிலிருந்தபடியே நாயைப் பெயர் சொல்லி அழைத்தவுடன் அது பதற்றத்துடன் தலையைத் தூக்கிப் பார்த்து வேகவேகமாக அவன் அருகில் வந்து உட்கார்ந்து வாலை ஆட்டி யது. அவன் நாயின் வாலைப் பிடித்து அசையாமல் இருக்கும்படி யாக அழுத்தினான். வால் துடித்துக்கொண்டேயிருப்பதை அவனால் உணர முடிந்தது. வாலை இறுக்கிப் பிடித்தபோதும் அது அசைந்துகொண்டேயிருந்தது. ஆத்திரத்தில் அப்படியே அதை

வெட்டி எறிந்துவிடலாமா என்று யோசித்தான்.

நாய் புட்டத்தை அசைத்தபடியே வாலை அவன் கையிலிருந்து விடுவித்தது. அன்றிரவு அவன் மனைவியோடு அதைப் பற்றி விவா தித்தான். அவளும் நாய்க்கு எதற்காக வால்? அதனால் நாய்க்கு ஒரு பிரயோசனமும் இல்லை வெட்டி எறிந்துவிட வேண்டியது தான் என்று சொன்னாள். இதற்காக கால்நடை மருத்துவரை வீட்டிற்கு வரவழைக்கலாம் என்று முடிவு செய்து கொண்டார்கள்.

நாய் தன் வாலாட்டத்தைப் பற்றிய பிரக்ஞையே இன்றி எல்லா நாட்களையும் போல பகல் முழுவதும் வீட்டின் அறைகளுக்குள்ளே சுற்றிக்கொண்டிருப்பதும் இரவில் வீட்டின் வெளியே காம்பவுண்ட் சுவர்களுக்குள்ளாகவே சுற்றியலைவதுமாக இருந்தது.

ஒரு ஞாயிற்றுக்கிழமையின் காலையில் கால்நடை மருத்துவர் வீட்டிற்கு வந்திருந்தார். நாய் எப்போதும் போலவே தோட்டத்துச் செடிகளில் அலைந்துகொண்டிருக்கும் வண்ணத்துப்பூச்சிகளைத் துரத்தியபடியே பொய்யாக விளையாடிக்கொண்டிருந்தது.

சமீபமாக நாயின் வாலைத் துண்டிக்க வேண்டும் என்பதில் பரவலாக ஆர்வம் அதிகமாகி வருகிறது என்றும் தான் இதுவரை ஐம்பத்திரண்டு நாய்களுக்கு வாலைத் துண்டித்திருப்பதாகவும் பெருமையோடு கால்நடை மருத்துவர் சொன்னார். உரிமையாளன் வாலை வெட்டுவதற்கான கட்டணம் குறித்து அவரோடு பேரம் பேசத் துவங்கினான்.

வாலை வெட்டுவது அற்பமான வேலைதான் என்றாலும் சில வேளைகளில் அது நாயின் உயிரைப் பறித்துவிடும் என்று பயமுறுத்திய மருத்துவர் கட்டணமாக இரண்டாயிரம் ரூபாயை உறுதி செய்துகொண்டு பணத்தை அறுவை சிகிட்சைக்கு முன்ன தாகவே தந்து விட வேண்டும் என்று சொன்னார். உரிமையாளன் அதை ஏற்றுக்கொண்டான்.

நாயின் எஜமானி வாலை அவர் விலைக்கு வாங்கிக்கொள் வாரா என்று கேட்டதும் மருத்துவர் அதைப் பாடம் செய்து வரவேற்பறையில் மாட்டி வைக்கலாம் என்று யோசனை சொன் னார். அறுவை சிகிட்சைக்கான பணம் தரப்பட்டதும் அவர் மருத்துவக் கருவிகளை எடுத்து வெளியே வைத்தபடியே நாய்களின் பெரிய பலவீனம் அது மனிதர்களை நம்புவதுதான் என்று கேலி செய்தபடியே மயக்கமடையச் செய்யும் ஒரு ஊசியைப் போட்ட தும் நாய் துவண்டு போகத் துவங்கியது.

மயங்கிக் கிடந்த நாயை துணி துவைக்கும் கல் அருகில் கொண்டுபோய்க் கிடத்தினார். நாயின் அடிவயிறு துடித்துக் கொண்டேயிருந்தது. கண்கள் சொருகியிருந்தன. உஷ்ணமான மூச்சுக்காற்று கைகளில் படிந்துகொண்டிருந்தது. நாயின் உடல் ரோமங்கள் குத்திட்டு நின்றுகொண்டிருந்தன.

மருத்துவர், நாயின் ரோமங்களைத் தடவிவிட்டபடியே அதன் புட்டத்தைத் தூக்கிப் பார்த்தார். அதைக் கண்டு நாயின் உரிமையாளன் தன் மனைவியைப் பார்த்துச் சிரித்தான்.

பொதுவாகவே வால் உள்ள மிருகங்கள் மனிதர்களைப் போலவே நடத்தை கொண்டவை. குரங்குகளைப் பாருங்கள். நரியைப் பாருங்கள். யாவும் மனித சுபாவங்களைக் கொண்டிருக்கின்றன. நமக்கேகூட வால் இருந்துதான் துண்டிக்கப்பட்டிருக்க வேண்டும். நீங்கள் வேண்டுமானால் இடுப்பின் அடியில் தடவிப் பாருங்கள் சிறிய முடிச்சுபோலத் தென்படும் என உற்சாகமாகச் சொல்லியபடியே அறுவை சிகிட்சை செய்யத் துவங்கினார்.

வாலைத் துண்டித்துவிட்டால் நாயும் மனிதர்களும் சமமானவர்கள் ஆகிவிடுவார்களில்லையா என்று உரி மையாளன் கேட்டான். மருத்துவர் தலையாட்டியபடியே எல்லாம் ஒன்றுதான் என பதிலளித்தார். கூரான கத்தியால் நாயின் வாலைத் துண்டிக்க துவங்கியதும் ரத்தம் பீச்சியடித்தது மயக்கத்தினூடாகவும் நாயின் உடல் லேசாக அசைந்தது.

நினைத்தது போல வாலைத் துண்டிப்பது எளிமை யானதாக இல்லை. ரத்தம் பீறிடத் துண்டிக்கப்பட்ட வாலைத் தனியே எடுத்துவிட்டு காயத்தைச் சுற்றிலும் மருந்திட்டுக் கட்டிய மருத்துவர் நாலு நாட்கள் சிறப்பு மருந்துகளைத் தர வேண்டும், முடிந்தவரை நாயை வெளியே விடாமல் பார்த்துக்கொள்ள வேண்டும் என்று சொல்லியபடியே தனது கைகளைக் கழுவிக்கொண்டார்.

நாயின் உரிமையாளன் துண்டிக்கப்பட்ட வாலை தன் கையில் எடுத்துப் பார்த்தான். அதில் எவ்விதமான துடிப்புமில்லை. ஏதோவொரு பிளாஸ்டிக் பொருள் போலவே தெரிந்தது. தன் கையில் வைத்து மேலும் கீழுமாக ஆட்டிப் பார்த்தான். வேடிக்கையாக இருந்தது. அவன் மனைவி அந்த வாலைப் பறித்து கணவனின் முதுகில் அடித்துப் பார்த்தாள். இருவரும் சிரித்துக் கொண்டார்கள்.

நாயின் மயக்கம் சில மணி நேரங்களில் தெளிந்து விடும் என்றபடியே தனது டயரியில் அந்த நாயின் பெயர் மற்றும் சிறப்பு விபரங்களைத் தொகுத்துக்கொண்டு விடை பெற்றுச் சென்றார் மருத்துவர்.

நாய் எப்போது கண்விழித்தது என்று தெரியாது. தன்னுடைய வால் எங்கே போனது என்று தெரியாமல் அது வலியோடு புட்டத்தை ஆட்டி ஆட்டிப் பார்த்தது. கண்ணிற்குத் தெரியாமல் வால் ஒளிந்துகொண்டு விட்டதோ எனும்படியாக அது முகத்தைத் திருப்பித் திருப்பிப் புட்டத்தை உற்றுப் பார்த்தது. ஆனால் வாலைக் காணவில்லை. வலியும் புரியாமையும் தாக்கியதாக அது ரௌத்திரத்தோடு வீட்டைச் சுற்றி ஓடத்துவங்கியது.

உரிமையாளன் மாடியில் நின்றபடியே வால் இல்லாமல் நாய்

ஓடுவது எவ்வளவு அழகாயிருக்கிறது பார் என்று மனைவியிடம் காட்டிக்கொண்டிருந்தான். வீட்டிற்கு வெளியில் நாய் வெறிகொண்டதுபோல பகலும் இரவும் ஓடிக்கொண்டேயிருந்தது. தோட்டத்துச் செடிகளின் மீது பறக்கும் வண்ணத்துப்பூச்சிகளைக்கூட அது வெறியோடு கடிக்கப் பாய்ந்தது. நாயின் குரைப் பொலியும் பயமும் அதை நிம்மதியற்றதாக்கியது.

பகல் நேரங்களில் புல்வெளியில் துள்ளிக்கொண்டிருக்கும் வெயில்கூட நாயை மிரட்சிகொள்ளச் செய்திருக்க வேண்டும். இடைவிடாமல் குரைத்தபடியே இருந்தது. தனக்கு வைக்கப்பட்ட உணவை நாய் சாப்பிடவேயில்லை. இரும்பு கேட்டை, வீட்டின் சுற்றுச்சுவர்களை, ஏன் மரங்களின் நிழல்களைக்கூட முறைத்த படியே குரைத்துக்கொண்டிருந்தது. ஆங்காங்கே நின்றபடியே காலைத் தூக்கி மூத்திரம் பெய்தது.

நாயின் உரிமையாளன் அலுவலகம் கிளம்புவதற்காக காரை எடுத்துக்கொண்டு போகையில் நாயின் சப்தம் நரி ஊளையிடு வதைப் போல இருப்பதைக் கண்டான். அற்ப விஷயத்திற்கு எதற் காக இவ்வளவு ஆர்ப்பாட்டம் செய்கிறது என்றபடியே அவன் அலுவலகம் சென்றான். நாயின் ஆவேசம் யாவும் சில நாட்களில் வடிந்துவிட்டன.

வால் இருந்ததையே அது மறந்துவிட்டது போல புட்டத்தை மட்டும் அசைத்தபடியே அவன் அருகில் வந்து காலை நக்கத் துவங்கியது. அவன் இப்போது எவ்வளவு அழகாயிருக்கிறாய் பார் என்று நாயைக் கொஞ்சிக்கொண்டிருந்தான். ஆனால் நாய் எப்போ தாவது தன் வால் இருந்த இடத்தை உற்றுப் பார்த்துக்கொண்டே யிருப்பதை உரிமையாளன் கவனித்தான். அதுபோன்ற நேரங்களில் நாயின் முகத்தில் தோன்றும் பாவம் விவரிக்க முடியாததாக இருந்தது. நாய் எதையோ உற்றுப் பார்த்துக்கொண்டிருக்கிறதோ என்றுகூட நினைத்தான்.

இது நடந்த சில நாட்களின் பிறகு ஊஞ்சலில் ஆடிக்கொண்டி ருந்தவன் தற்செயலாகத் திரும்பிப் பார்த்தபோது நாய் தன் வாலை ஆட்டிக்கொண்டிருப்பது போலத் தெரிந்தது. அவனால் நம்ப முடிய வில்லை. எப்படி துண்டித்த பிறகும் நாயின் வால் ஆடிக்கொண்டி ருக்க முடியும் என்றபடியே அவசரமாக நாயை அருகில் அழைத் துப் பார்த்தான். நாயின் புட்டம் அசைந்துகொண்டேயிருந்தது. வாலில்லை. அவன் புட்டத்தைத் தொட்டுப் பார்த்தான். கண்ணுக் குப் புலன் ஆகாத வாலொன்று ஆடிக்கொண்டேயிருப்பதைப் போலவே இருந்தது.

அவன் எரிச்சல் அடைந்தவனைப் போல நாயைத் தன்னிட மிருந்து துரத்தினான். அன்றிரவு அவன் மனைவியிடம் தனது பயத்தைப் பற்றிச் சொன்னபோது அவளும் வாலைத் துண்டித்த மறுநாளில் இருந்து நாயைப் பார்க்கும்போதெல்லாம் வால்

நினைவிற்கு வந்தபடியே இருக்கிறது என்றும் பல நேரங்களில் திரும்பவும் அந்த வாலை ஒட்ட வைத்துவிடலாமா என்றுகூட தான் யோசனை செய்வதாகச் சொன்னாள்.

அன்றிலிருந்து வாலைப் பற்றி நினைக்காமல் அவர் களால் நாயைப் பார்க்கவே முடியவில்லை. வால் இல் லாதது அவர்களைக் கொஞ்சம் கொஞ்சமாக உறுத்தத் துவங்கியது. இதற்காகவே நாயின் கண்ணில் படாமலே அவன் காரை எடுத்துக்கொண்டு போவதும் முடிந்தவரை தன் அறைக்குள் நாயை அனுமதிக்காமலுமே இருந்தான்.

ஏன் இந்த நாய் தன்னை இம்சை செய்கிறது என்ற படியே அவன் அதை மறக்க முயன்றான். ஆனால் நாளுக்கு நாள் அவனது காரணமற்ற பயம் அதிகமாகிக்கொண்டே வந்தது. நாய் எங்கே நின்றபோதும் அதன் வால் தனியே ஆடிக்கொண்டிருப்பது போலவே அவனுக்குத் தெரிந்தது. வாகனம் ஓட்டும்போதும் அலுவலகத்தில் வேலை செய்யும்போதும் ஏன் தன் மனைவியோடு கூடும் போதுகூட அவனுக்கு நாயின் வாலைப் பற்றிய நினைவு வந்துகொண்டேயிருந்தது.

முடிவாக அவன் நாயைத் தன் வீட்டிலிருந்து துரத்தி விடுவது என்று முடிவுசெய்து தோட்டக்காரனிடம் அதைக் கடற்கரையில் விட்டுவிட்டு வந்துவிடும்படியாக அனுப்பி வைத்தான். அன்றிரவு அவர்கள் வீட்டில் நாய் இல்லை. ஆனால் நள்ளிரவில் நாய் தெருவில் நின்று வாலை ஆட்டிக்கொண்டிப்பது போல அவனுக்கு ஏனோ தோன்றியது.

விளக்கைப் போட்டு பால்கனியில் வந்து நின்றபடியே தெருவைப் பார்த்தான். அவனது வீட்டின் வெளியே நாய் சலனமில்லாமல் படுத்துக் கிடந்தது. அதன் வால் ஆடிக்கொண்டிருந்தது. அவன் ஆத்திரம் அதிகமாகி ஒரு பூந்தொட்டியை எடுத்து நாய் மீது வீசினான். பயத்தோடு இருட்டிற்குள் ஓடி மறைந்தது. அன்றிரவு அவனால் நிம்மதியாக உறங்க முடியவில்லை.

ஆனால் அதன்பிறகு தங்களது வளர்ப்பு நாயை அவர் கள் திரும்பவும் பார்க்கவேயில்லை. மாறாக சாலையில் தென்படும் நாய்கள் ஒவ்வொன்றின் வாலும் துல்லியமாக அவர்களுக்குத் தெரியத் துவங்கியது. எந்த நாயின் வால் எவ்வளவு நீளமாக இருக்கிறது. எத்தனை முறை நாய் வாலை ஆட்டுகிறது என்று மனது கணக்கிட்டபடியே யிருந்தது.

எங்கு செல்லும்போதும் அவர்களால் நாயைக் கவனிக் காமல் இருக்க முடியவேயில்லை. மனிதர்களுக்குச் சமமாக இந்த நகரில் நாய்கள் நிரம்பியிருக்கின்றன என்றும் தோன்றியது. சில உறக்கமற்ற இரவுகளில் இருவரும் வெட்டப்பட்ட நாய் வாலைப் போன்று ஏதாவது துணியைச் சுருட்டி தனக்குத் தானே ஆட்டிக் கொண்டிருந்தார்கள்.

சில வாரங்களுக்குப் பிறகு அவர்கள் இருவருக்கும் விசித்திர மான ஒரு புதுப்பழக்கம் துவங்கியிருந்தது. அது தனியே குளியல் அறையில் நின்றபடியே தன் உடலில் வால் இருந்து துண்டிக்கப் பட்ட அடையாளம் இருக்கிறதா என்று கண்ணாடியில் தன்னைத் தானே உற்றுப் பார்த்துக்கொண்டிருப்பது. இதற்காக இருவருமே புட்டத்தை ஆட்டியாட்டி கண்ணாடியில் தன்னைப் பார்த்துக் கொண்டிருந்தனர்.

நாளடைவில் கணவனும் மனைவியும் இந்தப் பழக்கத்தை ஒருவர் அறியாத ரகசியமாக வைத்துக்கொண்டார்கள். காரணம் வால் இருப்பதும் துண்டிக்கப்படுவதும் அற்பமான விஷய மில்லையா?

# எல்லா நாட்களையும் போல

ஒரு சிறிய தவறு அது. காலையில் வங்கியில் செலுத்துவ தற்காக எடுத்துச் சென்ற அலுவலகப் பணத்தைப் பறி கொடுத்துவிட்டேன். இவ்வளவிற்கும் பணத்தைச் செலுத்துவதற்குத் துணையாக என்னோடு பழனியப்பனும் வந்திருந்தான். எப்போதும் போலவே வங்கியின் வாசல் வரை ஒன்றாக வந்தோம். அப்போது பழனியப்பனின் செல்போன் அடித்தது. அவன் இரைச்சல் சப்தத்தை விட்டு ஓரமாக நின்று பேசத் துவங்கினான்.

கையில் பணப்பையை வைத்துக்கொண்டு நான் எப்போதும் போலவே கண்ணாடிக் கதவைத் திறந்து வங்கியின் உள்ளே நுழைந்தேன். வாசலையொட்டி நின்றிருந்த நடுத்தர வயது நபர் கையில் இருந்த சிறிய காகிதம் ஒன்றைப் பலமாக ஊதியது தெரிந்தது. மறுநிமிஷம் என் கண்கள் எரியத் துவங்கியது. ஒரு நிமிஷம் என்னையும் அறியாமல் கைகளால் இரண்டு கண்களையும் தேய்க்கத் துவங்கினேன். மிளகாய்ப்பொடி பட்டது போல திகுதிகு வென எரியத் துவங்கியது.

கண்ணைத் துடைத்துக்கொண்டு பார்க்கும்போது நான் கொண்டுவந்திருந்த லெதர் பை காணாமல் போயிருந்தது. என்னால் நம்ப முடியவேயில்லை. என் கையிலிருந்த பணம் ஆறு லட்சத்தி நாற்பதினாயிரம் பறி போய் விட்டிருக்கிறது. என்னால் கத்த முடியவில்லை. கைகள் நடுங்கத் துவங்கின. சுற்றிலும் பார்த்துக்கொண்டிருந்தேன். எப்போதும் போலவே காசாளார் கத்திக் கொண்டிருந்தார். பணம் செலுத்துவதற்காக நாலு பேர் வரிசையில் நின்றிருந்தார்கள். ஒரு ஆள் நாலைந்து மஞ்சள் நிற ஸ்லீப்புகளை நிரப்பிக்கொண்டிருந்தார்.

என்னிடமிருந்த பணத்தைப் பறித்தது யாராக இருக் கும். அந்த ஆள் இவ்வளவு நேரம் இங்கேயே நின்று கொண்டிருப்பானா என்ன? அடுத்து என்ன செய்வது என்று தெரியவில்லை. கண்களில் எரிச்சல் அதிகமாகி நீர் வடிந்துகொண்டிருந்தது. பழனியப்பன் என் தோளில் கைவைத்தபடியே என்ன சார் என்றபோதுதான் எனக்

குத் தன்னிலை உணரத் துவங்கியது.

பணம் போய்விட்டது. பழனியப்பனிடம் எப்படிச் சொல்வது என்று தெரியவில்லை. தொண்டையில் வலி ஏற்பட்டு உடல் நடுங்கத் துவங்கியது. முகம் வியர்த்து வழிந்திருக்க வேண்டும். பழனியப்பன் என் கையில் பை யில்லாததைக் கண்டுபிடித்தவனைப் போல என்ன சார் ஆச்சி என்று கத்தினான். யாரோ பணத்தைத் திருடிட்டாங்க என்று நான் மென்றுவிழுங்கிச் சொன்ன மறுநிமிசம் வங்கியே ஸ்தம்பித்துப் போகுமளவு பழனியப்பன் கத்தினான்.

கண்ணாடிக் கதவுகள் சாத்தப்பட்டன. வங்கியின் மேலாளரும் அலுவலக ஊழியர்களும் என்னைச் சுற்றி லும் நின்று ஏதேதோ கேட்டுக்கொண்டிருந்தார்கள். வங்கியின் காவலர் சந்தேகத்துக்கு உரியவராக யாரும் வெளியே செல்லவில்லை என்று திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருந்தார். பழனியப்பன் யாருக்கோ போன் செய்துகொண்டிருந்தான்.

வங்கியினுள்ளே நின்றிருந்தவர்கள் அவரவர்களுக்குத் தெரிந்த திருட்டு கொடுத்த பழைய சம்பவங்கள் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். மேலாளர் தனது அறைக்குள் வரும்படியாக என்னை அழைத்துக்கொண்டு போனார். திடீரென அந்த வங்கி இதற்கு முன்னதாக நான் பார்த்து அறியாதா ஒரு புதிய இடம் போலத் தோற்றமளிக்கத் துவங்கியது. கண்ணாடித் தடுப்புகள். கணிப்பொறி. மேஜை மீதுள்ள கண்ணாடிக் கோளம் யாவும் விசித்திரமான பொருட்கள் போலத் தெரிந்தன.

மேலாளர் அறைச் சுவரில் தொங்கிக்கொண்டிருக்கும் காலண்டரில் இருந்த குழந்தை ஏன் இத்தனை நாட்கள் கண்ணில் படவேயில்லை. அந்தக் குழந்தை என்னைப் பார்த்து சிரிப்பது போலவே இருந்தது. அந்தக் குழந்தை யாராக இருக்கும். அதற்கு நான் திருட்டு கொடுத்த விபரம் தெரியுமா? நான் அதை உற்றுப் பார்ப்பதை விரும்பாமல் தலையைத் தொங்கவிட்டு கொண்டிருந்தேன்.

வங்கிக்கும் எனக்குமான உறவு ஆறாண்டு காலமாக நடந்து கொண்டிருக்கிறது. அநேகமாக தினமும் ஒருமுறை இங்கே வந்து போயிருக்கிறேன். ஊழியர்களுக்கு என்னை எளிதாக அடையாளம் தெரிந்திருந்தது. ஆனால் இன்றைக்கு அது எதுவும் பலன் அளிக்கவில்லை. வங்கியின் கணக்காளராக இருந்த பெண்மணி ரொம்ப நாளாக உங்களை கவனிச்சிட்டு இருந்தவங்கதான் யாரோ திருடியிருக்கிறாங்க என்று சொன்னாள். என்னை யார் தின மும் கவனித்துக்கொண்டிருந்திருப்பார்கள்?

நான் என்ன உடை உடுத்துகிறேன். எப்படி தலை சீவியிருக்கிறேன் என்பதில் என் மனைவிக்கே அக்கறை கிடையாது. அநேகமாக எனக்கே அது தன்னிச்சை செயல்போலதான் நடக்கிறது. என்னைக் கவனித்துக்கொண்டேயிருந்த மனிதன் எப்படியிருந்திருப்பான். என்னைப் பற்றி எந்தவிதமான எண்ணங்கள் கொண்டி

ருப்பான். அவன் முகம் எவ்வளவு யோசித்தும் நினை விற்கு வரவில்லை.

வங்கியின் காசோலைப் பிரிவில் உள்ள கண்ணாடி அணிந்த பெண், 'சார் எப்பவும் எதையோ யோசிச்சிகிட்டு வேற நிப்பாரு. நானே பாத்திருக்கேன். ஒரு நாள் பேனாவை மூடிகிட்டே கையெழுத்து போட்டாரு. எனக்கே சிரிப்பா இருந்துச்சி' என்று சொல்லிக்கொண்டிருந்தாள். அது எல்லோருக்கும் ஏற்படக்கூடிய ஞாபகக் குறைவுதானில்லையா? ஏன் என்னிடம் இத்தனை நாள் அவள் இதைச் சொல்லவேயில்லை. ஒருவேளை மற்ற அலுவலர்கள் இதைப்பற்றிப் பேசிச் சிரித்திருப்பார்களா? நான் அவர்களில் எவரையும் நேர்கொண்டு பார்க்க விரும்பவில்லை.

பழனியப்பன் அலுவலகத்திற்குத் தகவல் சொல்லியிருக்க வேண் டும். எனது அலுவலகத்திலிருந்து உயரதிகாரி திருட்டு எப்படி நடந்தது என்பதைப் 'பற்றி விசாரிக்கத் துவங்கினார். என்னால் கோர்வையாகப் பதில் சொல்ல முடியவில்லை. தான் அங்கே வருவதாகவும் அதன் பிறகு காவல் நிலையம் செல்லலாம் என்றும் உறுதியாகச் சொன்னார்.

இந்த நாற்பத்திரண்டு வயது வரை நான் பறி கொடுத்தவை எல்லாம் அற்பமான பொருட்கள் மட்டுமே. ஒரு முறை திருப்பதி போகும்போது எனது சூட்கேஸ் ஒன்றை யாரோ ரயிலில் திருடிக் கொண்டு போய்விட்டார்கள். மற்றவகையில் நான் ஏமாந்தவை யாவும் சில்லறைக் காசுகள், தலைவாறும் சீப்பு, குடை, ஒன்றிரண்டு டிபன்பாக்ஸ், வாழைப்பழங்கள் இவ்வளவு மட்டுமே.

வங்கி மேலாளர் என்னைப் பற்றிய சுயவிபரங்களைக் கேட்டுக் கொண்டிருந்தார். ஆறுவருடத்திற்கும் மேலாக தினமும் இதே வங்கிக்கு வந்துகொண்டிருக்கிறேன். ஒன் றிரண்டு சந்தர்ப்பங்களில் மேலாளருடன் பேச வேண்டிய சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. ஆனால் அவர் என் பெயரைக் கேட்டுக்கொண்டதேயில்லை. இன்றைக்கு முதல்முறையாக எனது பெயர், வீடு எங்கேயிருக்கிறது. பிள்ளைகள் எங்கே படிக்கிறார்கள் என்பதைப் பற்றி விசாரித்துக் கொண்டிருந்தார்.

பழனியப்பன் வெளியில் நின்றபடியே யாருடனோ பேசிக் கொண்டிருந்தான். அவன் முகத்தில் கடுமையேறியிருந்தது. எனது உயரதிகாரி வந்துசேர்ந்து வங்கி மேலாளருடன் ஏதோ பேச்சு வார்த்தை நடத்தி முடிவில் என்னையும் பழனியப்பனையும் மட்டும் காவல் நிலையம் அனுப்புவது என்று முடிவு செய்தார்கள். ஆனால் அலுவலகத்தின் காரை உபயோகப்படுத்த வேண்டாம், ஆட்டோ பிடித்துப் போய் வரவும் என்று உயரதிகாரி கண்டிப்பு டன் கூறினார்.

என்னைக் கைது செய்வார்களா என்று பயமாக இருந்தது. பழனியப்பனிடம் இதைப் பற்றி எப்படிக் கேட்பது என்று கூச்சமாக

இருந்தது. ஒரு வேளை கைது செய்யப்பட்டால் என்ன செய்வது. உடனே ஜெயிலுக்கு அனுப்பிவிடுவார்களா? வீட்டிலிருந்து கொண்டுவந்த டிபன் பாக்சை என்ன செய்வது? அலுவலகத்தில் உள்ள வேறு யாரையாவது சாப்பிடச் சொல்லிவிட வேண்டும். நேரமாகிவிட்டால் அது கெட்டுப் போய்விடும். யாரைச் சாப்பிடச் சொல்லலாம் என்ற யோசனை திரும்பத் திரும்ப வந்துகொண்டி ருந்தது.

பழனியப்பனுக்கு என்னோடு பேசுவதற்குப் பிடிக்கவில்லை போலும். அவன் ஆட்டோவில் இருந்தபடியே சாலையை வெறித்து பார்த்துக்கொண்டு வந்தான். நான் அவனிடம் தயங்கித் தயங்கி என்னைக் கைதுசெய்தால் வீட்டுக்குத் தகவல் தெரியப்படுத்துவார் களா என்று கேட்டேன். அவன் பதில் சொல்லவில்லை. என்னால் அவ னுக்கு அதிக சிரமமில்லையா என்று மறுபடியும் கேட் டேன். அவன் ஆத்திரத்துடன் நீ ஒரு மசிரும் பேச வேண்டாம். உன் னாலே நானும் தாலி அறுக்க வேண்டியிருக்கு என்று கோபத் தோடு சொன்னான்.

பழனியப்பன் எனக்குக் கீழ் வேலை பார்க்கும் ஊழியன். இதுவரை அவன் இப்படி என்னிடம் பேசியதில்லை. பல நாட்கள் நாங்கள் வங்கியில் பணம் செலுத்திவிட்டு வெளியே வந்து இண்டி யானா பேக்கரியில் சாவகாசமாக அமர்ந்து பிளம்கேக்குகள் சாப்பிட்டிருக்கிறோம். ஒரு முறை பழனியப்பன் வங்கிக்கு என் னோடு துணைக்கு வரவேயில்லை. நானோ அவன் என் னோடு சேர்ந்து வந்ததாக ரிஜிஸ்தரில் பதிவு செய்திருக்கிறேன். இவ்வளவு இருந்தும் இன்றைக்கு அவன் என்னிடம் நடந்துகொள்ளும் விதம் எனக்கு அதிருப்தி தருவதாக இருந்தது.

போலீஸ் ஸ்டேஷனிற்கு இதற்கு முன்பு நான் சென்றதேயில்லை. பேருந்தில் பயணம் செய்யும்போது ஒன்றிரண்டு முறை பார்த்திருக் கிறேன். அதுவே அச்சம் தருவதாக இருக்கும். எப்போதும் உள்ளே சிலரை லத்தியால் அடித்துக்கொண்டேயிருப்பார்கள் என்ற எண்ணமே எனக்கிருந்தது. சில திரைப்படங்களில் அப்படி காவல் நிலையங்களைக் காட்டியதும் நினைவிலிருக்கிறது.

நாங்கள் சென்ற காவல்நிலையம் மிக நவீனமாக இருந்தது. உள்ளே யாரையும் அடிக்கும் சப்தம் கேட்கவில்லை. காவலர்கள் அதி நவீன செல்போன்கள் வைத்திருந்தார்கள். கம்ப்யூட்டர் திரை முன்பாக உட்கார்ந்திருந்த ஒரு காவலரிடம் பழனியப்பன் ஏதோ சொன்னதும் எங்களை உள்ளே அழைத்துச் சென்றார்கள். இள வயதிலிருந்த போலீஸ் அதிகாரி விசாரிக்கத் துவங்கினார். வங்கி மேலாளர் கேட்ட அதே கேள்விகள். அதேபதில்கள்.

திருட்டைக் கண்டுபிடித்துவிடலாம் என்று ஆறுதல் சொல்லிய படியே இரண்டு நாட்களுக்குப் பிறகு வரும்படியாக அனுப்பி வைத்தார். பழனியப்பன் தனக்கு வேலையிருக்கிறது என்று

சொல்லி என்னை மட்டும் தனித்து விட்டு கிளம்பிச் சென்றான். பேருந்தில் அலுவலகம் செல்லலாம் என்ற யோசனையோடு காத்திருக்கத் துவங்கினேன்.

பரபரப்பாக வாகனங்கள் போவதும் வருவதுமாகவிருந் தன. நகரில் எத்தனையோ ஆயிரம் பேர் வசிக்கிறார்கள். அவர்களில் எவன் என்னிடமிருந்த பணத்தைத் திருடிச் சென்றது. ஒரு ஆளாக இருக்குமா அல்லது கும்பலா? என்னைப் போல பணம் பறி கொடுத்தவர்கள் எவ்வளவு பேர் இருப்பார்கள். அந்தப் பணத்தை என்ன செய்வார் கள்? ஒவ்வொரு நாளும் என்னைப் போல யாரோ சிலர் இப்படித் திருட்டுக் கொடுத்துவிட்டுப் புலம்பிக் கொண்டுதானிருப்பார்கள் இல்லையா? உடம்பு முழுவதும் எறும்பு ஊர்வதுபோல ஏதோ கேள்விகள் என்மீது ஊர்ந்து கொண்டிருந்தன.

என்ன யோசனை இது என்று என் மீதே எனக்கு ஆத்திரமாக வந்தது. நடந்தே அலுவலகம் செல்வது என்று முடிவு செய்து நடந்து செல்லத் துவங்கினேன். இந்த நேரம் அலுவலகம் முழுவதும் என்னைப் பற்றிதான் பேசிக்கொண்டிருப்பார்கள். வீட்டிற்கு போன் பண்ணிச் சொல்லியிருந்தால் மரகதம் அழுதுகொண்டிருப்பாள். அல்லது பள்ளியிலிருந்து பிள்ளைகளைக்கூட பாதியில் அழைத்துக் கொண்டு வந்திருப்பாள்.

அவளுக்கு போன் செய்து பேசலாமா என்று தோணியது. ஆனால் என்ன பேசுவது என்று தெரியவில்லை. இத்தனை வருடத்தில் அலுவலகத்திலிருந்து அவளுக்கு ஒரு முறைகூட போன் பண்ணிப் பேசியதேயில்லை. பொதுவாக வீட்டிலேயே அவளுடன் பேசுவது குறைந்து போய்த்தானிருந்தது. இந்த வருடம் அவர்கள் கல்யாண நாளைக்கூட இருவருமே மறந்து போயிருந்தார்கள். அதைப்பற்றி பிறகு நினைவு வந்தபோது அவர் வெளிக் காட்டிக் கொள்ளவேயில்லை.

நடக்க நடக்க தான் காணாத நகரம் ஒன்றில் நடந்து போய்க் கொண்டிருப்பது போலவே இருந்தது. சாலையோரம் உள்ள மரநிழலில் ஒரு ஆள் நன்றாக உறங்கிக்கொண்டிருந்தான். வாகன இரைச்சலோ, ஜனநடமாட்டமோ அவனை எதுவும் செய்ய வில்லை. உறக்கத்திலும் அவன் முகத்தில் சிரிப்பு கசிந்துகொண்டிருந்தது. தான் வாழ்நாளில் ஒரு முறைகூட இப்படி சாலையில் உறங்கியதில்லை. ஒருவேளை உறங்க வேண்டிய சந்தர்ப்பம் வந்தால் கூட இப்படி தன்னால் உறங்க முடியுமா என்று தெரியவில்லை.

கட்டிடங்கள், விளம்பரப் பலகைகள், சாலையோரக் கடைகள் என யாவும் புதிதாகத் தெரிந்தன. அலுவலகம் வந்து சேர்ந்தபோது யாரும் அவனோடு பேசவேயில்லை. உயரதிகாரி மட்டும் அவனை தற்காலிக நீக்கம் செய்திருப்பதாகவும் அவன் திருட்டுக் கொடுத்த பணத்தை ஒருவாரத்திற்குள் திரும்பச் செலுத்த வேண்டியது அவ

னது பொறுப்பு என்றும் அப்படிச் செலுத்த முடியாவிட்டால் அவன் மீது கிரிமினல் நடவடிக்கை எடுக்கப்படும் என்றும் தெரிவித்தார்.

தனது சம்பளம் முழுவதையும் பிடித்துக்கொண்டால்கூட இந்தப் பணத்தைக் கட்டுவதற்கு ஏழெட்டு வருஷசங்களாகிவிடும். அதுவரை வீட்டிற்கு என்ன செய்வது என்று குழப்பமாக இருந்தது. தனது மேஜையின் அடியிலிருந்து டிபன்பாக்சையும் தண்ணீர் பாட்டிலையும் எடுத்துக் கொண்டு கீழே வரும்போது கடைநிலை ஊழியர் ஒருவர் தன்னைப் பற்றி ஏதோ சொல்லிச் சிரிப்பது தெரிந்தது.

வீட்டிற்குப் போவதற்கு மனதில்லை. வங்கிக்குத் திரும்பச் சென்று ஏதாவது தகவல் கிடைத்திருக்கிறதா என்று கேட்கலாம் எனத் தோணியது. ஒரு ஆட்டோ பிடித்து வங்கிக்குப் போனபோது உள்ளே கூட்டமேயில்லை. காலையில் நடந்த சம்பவத்தின் அறிகுறியே அற்றது போல இயங்கிக்கொண்டிருந்தது.

மேலாளர் அறைக்கதவைத் தள்ளி உள்ளே போன போது அவர் தேநீர் அருந்திக்கொண்டிருந்தார். போலீசில் புகார் கொடுத்து வந்த விபரத்தைச் சொன்னபோது அவரிடம் எந்த முகமாற்றமும் இல்லை. தேநீர் குடித்து முடித்துவிட்டு எங்களாலே ஒரு உதவியும் பண்ண முடியாது. இது உங்க தப்பு என்றபடியே எழுந்து வங்கியின் உள்ளே செல்லத் துவங்கினார். அந்த அறையில் தனித்து இருந்த போது சுழன்றுகொண்டிருக்கும் காற்றாடிகூட என்னை திருட்டு கொடுத்தவன் என்று திரும்பத் திரும்பச் சொல்வது போலவே யிருந்தது.

ஐந்துமணிக்கு வெளியே வந்தபோது வங்கியின் முத்திரை போடு கின்றவன் என்னைத் தனியே அழைத்து இப்படித் திருட்டு போறது இந்த பேங்கில நாலைந்து தடவை நடந்திருக்கு. நீங்க எதுக்கும் வெட்டுவான் கோயில்வரைக்குப் போய் காசை வெட்டிப் போட்டுப் பாருங்க. திருடிட்டுப் போன பயலுக யாரா இருந்தாலும் ரத்தம் கக்கிச் செத்துப்போயிருவாங்க என்றான்.

என்னால் அதை நம்பமுடியவில்லை. அதே நேரம் நம்பாமலும் இருக்க முடியவில்லை. வெட்டுவான் கோவில் எங்கேயிருக்கிறது என்ற விபரத்தைக் கேட்டுக் கொண்டு பேருந்தைப் பிடித்து பிராட் வேயில் உள்ள குறுகலான தெருக்களைத் தாண்டிப் போனபோது சிறிய கோவிலாக இருந்தது. தூண்கள் கருமையேறியிருந்தது. ஆனால் கோவிலுக்குள் நிறைய கூட்டமிருந்தது.

பூசாரி ஒருவர் என்னிடம் திருடு போயிருச்சா என்று கேட்டார். நான் தலையசைத்தவுடன் பைக்கா? பர்சா என்னது என்று மறுபடி யும் கேட்டார். அலுவலகப் பணம் என்று சொன்னதும் அவர் இதுக்கு எலுமிச்சைப் பழம் வெட்டிப் போடணும். இருநூறு ரூபாய் கொடுங்கள் என்று வாங்கிக்கொண்டு உள்ளே அழைத்துச் சென்றார்.

எண்ணெய் விளக்கின் நெடி நாசியில் ஏறியது. உள்ளே பத்திற்கும் அதிகமானவர்கள் நின்றுகொண்டிருந்தார்கள். பூசாரி அவர்களும் திருட்டுக் கொடுத்தவர்கள்தான் என்று சொன்னார். ஏனோ அவர்களைப் பார்க்கையில் சற்று ஆறுதலாக இருந்தது. எல்லோரது கண்களிலும் பயம் ஒளிந்துகொண்டிருந்தது. வயதை மறந்து அவர்களோடு நெருக்கமாக இருப்பது போன்று தோன்றியது.

பூசாரி எலுமிச்சம்பழங்களைக் குங்குமம் பூசி அறுத்துப் போட்டுக்கொண்டிருந்தான். ரத்தம் போலவே சொட்டிக்கொண்டிருந்தது. திருட்டுக் கொடுத்தவர்களுக்காகவே இப்படியொரு கோவில் இருப்பது இன்றுதான் எனக்கு முதல்முதலில் தெரிந்திருக்கிறது.

இந்த நகரில் இதுவரை எவ்வளவு திருட்டு நடந்திருக்கும். ஏன் தினசரி பேப்பர் வாசிக்கையில் திருட்டு நடந்ததுபற்றிய செய்திகள் இதற்கு முன்பாக நமக்கு அதிர்ச்சியளிக்கவில்லை என்று யோசனையாக இருந்தது.

ஒருவேளை நாளை காலை என்னைப்பற்றியும் செய்தி வெளியாகும். புகைப்படத்தோடு வெளியிடுவார்களா என்று தெரியாது. நான் சமீபமாக புகைப்படம் எடுத்துக்கொள்ளவில்லை. ஒரு வேளை பழைய புகைப்படம் எதையாவது வெளியிடுவார்களாக இருக்கும். இப்படித்தான் இதற்கு முன்னால் வெளிவந்த திருட்டுக் கொடுத்த மனிதர்களின் புகைப்படங்களுக்கு பழையதாக இருந்திருக்குமா?

மனது ஒரு இடத்தில் நிற்கமறுத்து அலைந்து கொண்டேயிருந்தது. கோவிலில் தீபாராதனை காட்டும் மணிச்சப்தம் கேட்டது. பூசாரி என்னிடம் பாதி எலுமிச்சைபழம் ஒன்றைத் தந்து ஒரு ரூபாய்க் காசை வெளியே உள்ள பீடத்தில் வைத்து வெட்டிப் போடும்படியாகச் சொன்னார். ரத்தம் போல வடியும் எலுமிச்சைப் பழத்தை வாங்கிக்கொண்டு வெளியே வந்தேன்.

ஒரு முரட்டு ஆள் பலிபீடத்தின் அருகே நின்றபடியே காசை வெட்டிப் போட்டுக்கொண்டிருந்தான். அவனிடம் ஒரு ரூபாய் நாணயத்தை எடுத்துத் தந்தேன். அவன் ஓங்காரத்தோடு வெட்டித் துண்டாக்கினான். பலிபீடத்தின் கீழே எண்ணிக்கையற்ற நாணயங்கள் துண்டாகிக் கிடந்தன.

கோவிலை விட்டு வெளியே வரும்போது இருட்டத் துவங்கியிருந்தது. வழக்கமாக இந்த நேரம் வீட்டிற்குப் போயிருப்பேன். அதன் பிறகு காலை அலுவலகம் கிளம்பும் வரை வீட்டை விட்டு வெளியே வரவே மாட்டேன். ஆனால் இன்றைக்கு இங்கேயே இருட்டத் துவங்கியிருந்தது.

நான் திருட்டுக் கொடுத்தவன். ஜெயிலுக்குப் போக இருப்பவன். எனது வாழ்நாள் எண்ணப்பட்டுவிட்டது. இனிமேல் நான் வேறு விதமான வாழ்க்கைக்குப் பழகிக்கொள்ள வேண்டும். கோவிலை விட்டு நடந்து பேருந்தில் ஏறி கடற்கரையை அடைந்தபோது

கடற்கரை கொள்ளாமல் மக்கள் அலைந்துகொண்டிருந்தார்கள்.

வயதான குதிரையொன்று தனியே மணலை மேய்ந்து கொண்டிருந்தது. கடற்கரை மணலில் நடந்து உள்ளே போய் உட்கார்ந்து கொண்டேன். தொலைவில் குழந்தை கள் விளையாடிக்கொண்டிருந்தார்கள். நடைப்பயிற்சி செய்கின்றவர்கள் பரபரப்பாக நடந்து கொண்டிருந்தார்கள்.

நான் நடைப்பயிற்சி செய்கின்றவன் இல்லை. எனது குழந்தைகள் கடற்கரையில் இப்படி விளையாடியதில்லை. இத்தனை மனிதர்களுக்கு நடுவிலும் நான் தனித்து இருப்பது போலவேயிருந்தது. என்ன செய்வது என்று புரியாமல் மணலை கை நிறைய அள்ளி அள்ளிக் கொட்டிக்கொண்டேயிருந்தது.

மணலில் புதைந்து கிடந்த ஒரு சாவியொன்று கையில் அகப்பட்டது. வீட்டுச் சாவிபோல இருந்தது. யாருடைய வீட்டுச் சாவியது. யார் தொலைத்திருப்பார்கள். தொலைத்த மனிதன் அன்று கடற்கரையெங்கும் தேடியிருப்பான் இல்லையா? அந்தச் சாவியை என்ன செய்வது என்று தெரியாமல் கையில் வைத்தபடியே இருந்தேன்.

எவ்வளவு நேரம் கடற்கரையில் இருந்தேன் என்று தெரியாது. நியான் வெளிச்சம் கடல் மணலில் ஒளிர்ந்துகொண்டிருந்தது. காற்று மெல்ல என் உடலைத் தழுவி ஆடையை நெகிழச் செய்து கொண்டிருந்தது. யாரோ ஒரு ஆணும் பெண்ணும் என்னருகே தழுவிக்கொண்டிருந்தார்கள். கடலின் சப்தம் மனதை சாந்தம் கொள்ளச் செய்திருந்தது. கடற்கரையில் கிடக்கும் கோடானு கோடி மணல்துகள்களில் ஒன்றுதான் தானும் என்று தோணியது.

ஆகாசம் நட்சத்திரங்களால் நிரம்பியிருந்தது. நீண்ட நாட்களுக்குப் பிறகு நெடுநேரம் வெளியே இருந்துவிட்டேன் என்று தோணியது. காலையில் இருந்து மனது கொண்டிருந்த பரபரப்பு அடங்கியிருந்தது. வீடு வந்து சேர்ந்தபோது குழந்தைகள் உறங்கியிருந்தார்கள். என்னைப் பார்த்த மாத்திரத்தில் மனைவி கதறி அழத் துவங்கினாள். அவள் சப்தம் கேட்டு அருகாமை வீட்டிலிருப்பவர்கள் சிலர் வந்து சேர்ந்தார்கள். என்னிடம் மாறி மாறி எப்படிப் பணத்தைத் தொலைத்தீர்கள் என்று கேட்டுக்கொண்டேயிருந்தார்கள்.

உறங்கிக்கொண்டிருந்த குழந்தைகள்கூட எழுந்து வந்து அழத் துவங்கின. என் வீட்டில் இவ்வளவு அழுகையை நான் கேட்டதேயில்லை. யாருக்கும் பதில் பேசாமல் நின்றுகொண்டேயிருந்தேன். அருகாமை வீட்டுப் பெண் தனக்கு நினைவுள்ள பழைய திருட்டுச் சம்பவம் ஒன்றைச் சொல்லிக்கொண்டிருந்தாள். எவ்வளவு நேரம் என் மனைவி அழுதுகொண்டிருந்தாள் என்று தெரியாது.

எனக்குப் பசிக்கத் துவங்கியிருந்தது. காலையிலிருந்து நான்

எதுவும் சாப்பிடவில்லை என்று உணரத் துவங் கியது. அவளிடம் பசிக்கிறது என்றேன். அவள் அதான் எங்களை விழுங்கிட்டு வந்துட்டீங்களே  இனிமே நாங்க பிச்சை எடுத்துத்தான் சாப்பிடணும் என்று கத்தினாள். என்ன பதில் சொல்வது என்று தெரியவில்லை. எதை நம்புவது என்று தெரியவில்லை.

தெரியாமல் நடந்துவிட்டது என்று நான் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டேயிருந்தேன். அதை யாரும் கேட்டுக்கொண்டது போலத் தெரியவேயில்லை. வீடும் பிள்ளைகளும் மனைவியும்கூட யாரோ போலத் தெரிந்தார்கள். எனக்கு என் மீதே ஆத்திரமாக வந்தது.

அப்போதுகூட என்னிடமிருந்த பணத்தைத் திருடிய மனிதன் விழித்துக்கொண்டிருப்பானா? தூங்கியிருப்பானா? அவன் மனைவிக்கு திருடிய விஷயம் தெரிந்திருக்குமா? அவனது பிள்ளைகள் பணத்தை எண்ணி யெண்ணிப் பார்த்து சிரிப்பார்களா என்ற எண்ணம் வந்துகொண்டேதானிருந்தது.

நீண்ட நேரத்திற்குப் பிறகு துக்கமும் வலியும் தாள முடியாமல் நான் தனியே அழத்துவங்கினேன். அப்போது யாவும் மறந்து வீடே உறங்கிக்கொண்டிருந்தது.

# திரும்பிச் செல்லும் மலைகள்

இந்தத் தெருவில் நின்றபடியே நிறைய நாட்கள் நான் அழுதிருக்கிறேன் என்று அம்மா சொன்னபோது நான் தலையசைத்துக்கொண்டேன். சில அடிகள் முன்னே நடந்து விட்டு இங்கே நாம உட்காரலாமா என்று அம்மா கேட்டாள். கிராமத்தின் வீதிகள்தான் என்றபோதும் எனக்குக் கூச்சமாகவே இருந்தது. அம்மா தெருவின் புழுதியைப் பற்றிய கவலையின்றி சம்மணமிட்டு உட்கார்ந்துகொண்டு என்னையும் உட்காரச் சொன்னாள்.

வெயில் வடிந்திருந்த தெருவில் யாருமேயில்லை. நீண்டோடிக் கிடந்த தெருவின் ஒருபக்கம் ஒன்றிரண்டு வீடுகளில் மட்டுமே ஆட்கள் இருந்தார்கள். பெரும்பான்மை வீடுகள் இடிந்தும் சிதலமடைந்தும் போய்விட்டன. தனித்திருந்த வீடுகளில்கூட வசிப்பதற்கு யாருமில்லை.

அம்மா தன்விரலால் புழுதியில் எதையோ ரகசியமாகக் கிறுக்கி நான் அறியாமல் அழித்துக்கொண்டிருந்தாள். அம்மாவிற்கு எழுபது வயது முடிந்துவிட்டிருக்கிறது. அவள் தன் வயதை மறந்து சிறுமியைப் போல தெருவில் உட்கார்ந்து விரலால் கோலம் எழுதி அழிப்பது வியப்பாக இருந்தது. அம்மாவின் விரல்கள் புழுதியை ஆசையோடு கோதிக்கொண்டிருந்தன.

மூன்று மாதமாகவே தான் பிறந்த ஊருக்கு ஒரு முறை போய்வர வேண்டும் என்ற எண்ணம் அம்மாவிற்கு மேலோங்கிக்கொண்டேயிருந்தது. சில வேளைகளில் அவளாகத் தன் ஊரைப் பற்றி நினைத்துக்கொண்டு அழ வேறு துவங்கியிருந்தாள் என்பதால் கோடை விடுமுறையில் நான் மட்டுமே அவளை அழைத்துக்கொண்டு ஊருக்குப் போய்வருவது என்று முடிவு செய்தேன்.

எனக்கே இப்போது வயது ஐம்பதைக் கடந்து விட்டிருக்கிறது. இருபத்தி நாலு வயதில் புதுடெல்லிக்கு உத்யோகத்திற்கு வந்து இங்கேயே காலூன்றி திருமணம் செய்துகொண்டு பிள்ளைகள் பிறந்து அவர்களும் படிக்க அமெரிக்கா சென்றுவிட்டார்கள். ஆனால் அம்மாவின் மனதில் தனது ஊர் இன்னும் அழியவேயில்லை.

அம்மாவின் ஊரை தாத்தா ஊர் என்றே மனது சொல்லிப் பழகியிருந்தது. அப்பா இருந்தவரை அங்கே போவதற்கு எரிச்சல் படுவார். அநேகமாக பள்ளிவயதில் ஒன்றிரண்டு முறை சென்றதைத் தவிர துக்கநிகழ்ச்சிகளுக்காகச் சில முறைகள் சென்றிருக்கிறோம். தாத்தாவோ, மாமாக்களோ ஏதாவது விசேஷம் என்றால் எங்கள் வீடுதேடி வருவார்கள்.

அம்மா தன் பிராயத்தில் சொந்த ஊரைப்பற்றி ஆதங்கப் பட்டு நான் அறிந்ததேயில்லை. ஆனால் அப்பாவின் மரணத்திற்குப் பிறகு அவளிடம் ஏற்பட்ட மாற்றங்களில் ஒன்று தன்னுடைய ஊரைப்பற்றிப் பேசத் துவங்கியது. ஆனால் அதைப் பகிர்ந்துகொள்வதற்கு யாரும் கிடையாது.

வீட்டில் நானும் மனைவியும் வேலைக்குச் சென்றுவிடுவ தால் அம்மா இறுக்கமடைந்து போயிருந்தாள். மாலை வீடு திரும்பிய பிறகு பள்ளிச்சிறுமியைப் போல என் அருகில் வந்தமந்தபடியே 'அன்னைக்குச் சொன்னனே ஞாபகம் இருக்கா அதான் தங்கம் பிள்ளைனு, அதான் டிராயிங் மாஸ்டரா இருந்தாரு அவரோட பெண் டாட்டி ஏகானு பேரு மறந்துட்டயாடா' என்பாள். அவள் சொல்லும் பெயர்கள். ஆட்கள் எவரும் என் நினைவில் தங்குவதேயில்லை.

ஆனாலும் தெரிந்ததைப் போல அவளிடம் இப்போ அதுக்கு என்ன என்று கேட்டவுடன் அந்த ஏகா வீட்டில என்மேல கொள்ளைப் பிரியம். அவ வீட்டில சுத்தமான வெள்ளை எள் கிடைக்கும். அப்படி எள்ளை இப்போ பாக்க முடியாது தெரியுமா என்று சொல்வாள் அம்மா.

வெள்ளை எள்ளைப் பற்றி எதற்காக இப்படிக் கவலைப்படுகிறாள் என்று நிஜமாகவே வருத்தமாக இருக்கும். நிச்சயம் அன்றைக்கு முழுவதும் அதைப்பற்றியே யோசித்துக்கொண்டிருந்திருப்பாள். அவள் நினைவில் அந்த எள்ளின் மணம் நிரம்பியிருந்திருக்கும். அத்தோடு ஏகாவைப் பற்றி நினைத்து அழுதுமிருப்பாள்.

நான் அம்மாவிடம் உனக்கே வயசு எழுபதைத் தாண்டி ருச்சி இந்நேரம் அந்த ஏகா இருக்காளோ இல்லையோ எதுக்கு அவளைப் போட்டு நினைச்சிகிட்டு இருக்கே என்பேன். அம்மா சில நிமிசங்கள் மௌனமாக இருந்துவிட்டு என்னப் பொறுத்தவரை உங்கப்பாவைக் கட்டிகிட்டு அந்த ஊரை விட்டு வந்த மறுநாளே ஏகா செத்துப் போயாச்சி. அவளை நான் திரும்பப் பாக்கவேயில்லையே. நான் தான் எல்லாத்தையும் மறந்துட்டனே. பிறகு எப்படி அவ நினைப் பிருக்கும். ஏன்டா தெரியாமத்தான் கேட்கிறேன். செத்துப் போயிட்டா அவளைப் பத்தி பேசக்கூடதா. இல்லை சின்னவயசில் அவளோட விளையாடுனது, சிரிச்சது இல்லேனு ஆகிடுமா. ஏன்டா புரியமாப் பேசுறே என்பாள். அதன் பிறகு அவளிடமிருந்து பேச்சு அறுந்து போய்விடும். விடுவிடுவெனத் தனதுப் படுக்கைக்குப் போய் படுத்துக்

கொள்வாள்.

நெடுநேரம் அவள் காற்றாடியை வெறித்துப் பார்த்துக்கொண்டிருப் பது தெரியும். ஆறுதல் படுத்த வழியில்லாமல் நான் அம்மாவைப் பற்றி நினைத்தபடியே படுத்துக் கிடப்பேன். திடீரென என் பிள்ளைகள் நினைவில் வந்து சேர்வார்கள்.

அம்மாவைப் போல எனது நினைவுகள் துல்லியமாக இல்லை. அப்பா வேலை பார்த்த பொன்மலை ரயில்வே பற்றி கொஞ்சமும், படித்த பள்ளிகள், பயிற்சிக்காகச் சென்ற நாக்பூர் மற்றும் டெல்லிக்குப் புதிதாக வந்த நாட்களில் அறிமுகமான ஒன்றிரண்டு நண்பர்கள், திருமணமான புதிதில் மனைவியோடு சென்ற ஹரிதுவார், சண்டிகர். இவ்வளவுதான் என் மனதில் தங்கியிருக்கின்றன. அநேகமாக நினைவு களே என்னிடமில்லை என்றுகூடச் சொல்லலாம்.

என் மனைவிக்கும் அப்படியேதானிருந்தது. அவள் டெல்லியிலே பிறந்து வளர்ந்து படித்து சுருக்கெழுத்துப் பயிற்சி பெற்று வேலை செய்திருக்கிறாள். அவளுக்கு உள்ள நினைவுகள் முழுவதும் வாடகைக்கு வீடு மாறிமாறி அலைந்ததும் கொசுக்கடி நிரம்பிய இரவுகளும் மட்டுமே.

எப்போதாவது மிக அரிதாக தனது பன்னிரண்டாவது வயதில் காசிக்குச் சென்றுவந்த பயணத்தைப் பற்றி நினைவு கொள்வாள். அவளது நினைவில் குழந்தைப்பேறும் அவர்களது கல்விக்காகச் செலவழிக்கப்பட்ட பணமும், டெல்லி நகரக் குளிரில் ஏற்பட்ட உடல்நலக்கோளாறும் கசப்பாக ஏறியிருந்தன.

பதினைந்து வருஷத்தின் முன்பாக அம்மாவை டெல்லிக்கு அழைத்துக்கொள்வது என்று முடிவு செய்தவுடன் மறுப்பில்லாமல் கிளம்பி வந்துவிட்டாள். இன்று வரை இந்த நகரம் பற்றி அவளுக்கு எவ்விதமானக் குறைபாடும் இல்லை. குளிர் அவளை எதுவும் செய்யவுமில்லை. உறக்கம் மட்டுமே அவளிடமிருந்து நழுவிப் போய்க் கொண்டேயிருந்தது. எப்போது உறங்குகிறாள் எப்போது விழிக்கிறாள் என்பது மட்டும் யாரும் அறியாதது. பின்னிரவில்கூட அவள் முணுமுணுப்பு சப்தம் கசிந்து ஊறிக்கொண்டேயிருப்பதைக் கேட்டிருக் கிறேன். விளக்கைப் போட்டால் பேச்சு நின்று போய்விடும்.

ஒருவேளை அவளது நினைவு முழுவதும் வேறு எங்கோ நிலை கொண்டிருப்பதுகூட காரணமாக இருந்திருக்கக்கூடும். அம்மா இத்தனை வருடங்களுக்குப் பிறகு சமீபமாக ஊருக்குப் போவதைப் பற்றி தினமும் சொல்ல ஆரம்பித்துவிட்டாள். சில நேரங்களில் நான் செத்துட்டா பிறகு போகவே முடியாமப் போயுடும்டா என்று வேறு பிதற்றத் துவங்கினாள்.

வழியின்றி நான் ஒருவன் மட்டுமே துணைக்கு வருவ தாகச் சொல்லியபடியே அம்மாவை அழைத்துக்கொண்டு ரயில் பயணத்தைத் துவக்கியிருந்தேன், தன் ஊரை நெருங்கும் வரை அம்மா எதுவும்

பேசவேயில்லை. கழுகுமலைக்கு அருகாமையில் உள்ள தென்வடல் கிராமம் அம்மா வுடையது.

தொலைவில் தெரியும் இரட்டை மலைகளை பேருந்திலிருந்து பார்த்தவுடனே அவளது முகத்தில் மாற்றம் தெரிய ஆரம்பித்துவிட்டது. உற்சாகமான சிறுபெண்ணைப் போல அங்கே பாருடா. அந்த ரெண்டு மலையும் பறவை றெக்கையை விரிச்சிகிட்டு மிதக்குற மாதிரியிருக்குல்லே. இத்தனை வருசமாகியும் அப்படியே இருக்கு பாரு என்று அந்த மலையைப் பார்த்துக்கொண்டே வந்தாள். அவள் கைகள் அசைந்தபடியே வந்தன. மலையைத் தன்னை நோக்கி அழைக்கிறாளோ என்னவோ.

ஊர் காலமாற்றத்தில் தேய்ந்துபோயிருந்தது. சீரற்ற பாதைகள், புழுதி பறக்கும் வீதிகள். நூற்றுக்கும் குறைவான வீடுகள். நீரேற்றும் நிலையம். ஆரம்பப் பள்ளி, புதிதாக முளைத்துள்ள நாலைந்து கடைகள் என்பதைத் தவிர ஊரின் இயக்கம் அப்படியே ஒடுங்கிப் போயிருந்தது.

யாருடைய வீட்டிற்குப் போவது என்று தெரியவில்லை. அம்மாவின் பூர்வீக வீட்டில் பலவருடமாகவே யாருமே யில்லை. சிதிலமடைந்து போயிருக்கக்கூடும். உறவினர்களும் நகரங்களை நோக்கி இடம் பெயர்ந்து போய்விட்டிருந்தார்கள். பேருந்தை விட்டு இறங்கியதும் யாரையும் இனி எதிர்பார்க்க வேண்டியதில்லை என்பதைப் போல அம்மா விடுவிடுவென நடந்துபோகத் துவங்கினாள்.

இந்த ஊர் அவளது உள்ளங்கை ரேகைகளைப் போல துல்லியமாகத் தெரிந்ததுதானே. எதற்காக இனி மற்றவர்கள். சில இடங்களில் அம்மா நின்றபடியே வெட்டவெளியை வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தாள். என்ன என நான் கேட்டாலும் பதில் சொல்ல மாட்டாள்.

தெற்கு வடக்காக நீளும் தெருமுனையில் அப்படி நின்றபோது அருகில் சென்று கால் வலிக்குதா என்று கேட்டேன். இல்லை இந்த இடத்தில் ஒரு பெரிய வேம்பு இருந்தது. அதில் ஊஞ்சல்கட்டி ஆடியிருக்கிறேன். அந்த ஊஞ்சல் கட்ட கயிறு வேணும் இல்லையா. அதற்குக் கிணற்றில் தண்ணீர் இறைக்க வைத்திருந்த வாளியிலிருந்த கயிற்றை அவிழ்த்துக்கொண்டுவந்து ஊஞ்சல் கட்டி ஆடி யிருக்கிறேன். பெரிய மரம். வேப்பம்பூ வாசனை வீடு வரை மணக்கும் என்றாள்.

அந்த இடத்தில் மரம் இருந்த அறிகுறியே இல்லை. ஆனால் அம்மாவின் முகத்தை உற்று நோக்கியபோது அம்மாவிற்கு அந்த மரம் கண்ணில் தெரிந்துகொண்டிருந் தது. அவள் தன் பால்யத்தில் விளையாடிய அதே நிழலில் இப்போதும் நின்று கொண்டிருப்பது போலவே உணர்ந்தாள். அவள் கைகள் தானே அந்த மரத்தின் கிளைகளைப் பற்ற உயர்கின்றன. அவளது நாசி வேப்பம்பூவின் சுகந்தத்தை உறிஞ்சுகின்றன. அம்மாவின் கேசம் காற்றில் பறக்கத் துவங்குகின்றன. வேப்பிலைகள் சலசலக்கின்றன. மரம் அசையத் துவங்குகிறது.

அம்மா என் கையைப் பிடித்து இழுத்து, மரத்தில பொம்பிளைப் பிள்ளைக ஆடக்கூடாதுன்னு எங்கப்பா அடிக்க வருவாரு. இப்படித் தான் ஓடுவேன் என்று வடக்காகத் தெரிந்த தெருவைக் காட்டினாள். அவள் விரல் நீண்ட நிமிஷத்தில் அதே தெருவில் அம்மா ஒரு சிறுமியாக ஓடிக்கொண்டிருப்பது போலவேயிருந்தது. வீதியினுள் நடக்க நடக்க அம்மாவின் நினைவுகள் துல்லியமாகிக்கொண்டே வந்தது. அவள் நினைவில் இருந்த ஊரும் நடப்பில் உள்ள ஊரும் வேறு வேறாக இருந்தன. ஆனால் அது அம்மாவின் கண்ணில் விழவேயில்லை. அப்போதுதான் அம்மா சொன் னாள்.

இந்தத் தெருவில் நான் நிறைய தடவை அழுதுகிட்டே நின்று கொண்டிருந்திருக்கிறேன் என்று. எதற்கு என அவள் சொல்லவே யில்லை. அதன்பிறகு தெருவில் உட்கார்ந்துகொண்டாள். அது அவளுடைய ஊர் என்பது அந்த நிமிஷத்தில் பூரணமாக அறிந்து கொள்ள முடிந்தது. சில நிமிஷங்களுக்குப் பிறகு தெருவில் இருந்து எழுந்துகொண்டாள்.

அம்மாவின் பூர்வீக வீடு இடிந்து கிடப்பதை இருவரும் அருகில் சென்று பார்த்தோம். வேலி அடர்ந்து போயிருந்தது. கட்டைச் சுவரைத் தவிர வேறு எதுவுமில்லை. கோழி ரோமங்கள் காற்றில் பறந்துகொண்டிருந்தன. அம்மா வேலியை விலக்கிக்கொண்டு உள்ளே நடந்து போனாள். பிறகு என்னை சப்தமாக சிவசைலம், சிவசைலம் என்று கூப்பிட்டாள்.

நான் வேலிமுள்ளை விலக்கி உள்ளே போனபோது தூர்ந்து மேடேறிப்போய் இருந்த கிணற்றின் அருகில் நின்றுகொண்டிருந்தாள் அம்மா. ஒரே குப்பையால்லே கிடக்கு. வா போகலாம் என்று அவளை இழுத்தேன். இந்தக் கிணற்றுத் தண்ணியில குளிச்சிதான் இன்னும் முடி கொட்டமா இருக்கு. கை எட்டுற உயரத்தில தண்ணியிருக்கும். அதுவும் மழைபெஞ்சிட்டா செம்பை விட்டு தண்ணி மோந்து கிடலாம். காலையில பச்சைத் தண்ணியில குளிக்கும் போது உடம்பு வெடவெடனு நடுங்கும். இங்கே ஒரு பட்டியக் கல் போட்டு வச்சிருந்தோம். அதுல மஞ்சள் உரசி உரசி எப்பவும் மஞ்சள் கறை படிந்து போயிருக்கும்.

இந்த இடத்தில் ஒரு வாழை மரம் இருந்துச்சி. அதில் உட்கார்றதுக்கு தினம் மதியமா ரெண்டு குருவிகள் வரும். வாய் ஓயாம ரெண்டு பேசிக்கிட்டு இருந்துட்டு பறந்து போயிரும். அப்புறமா அந்த இடத்தில் ஒரேயொரு கேந்திப் பூச் செடி வச்சிருந்தோம். மழைபெஞ்சா இந்த இடம் தெரியாத இருட்டு நிரம்பிப் பூச்சிகள் சப்தம் போட ஆரம்பிக்கும். நானும் படுத்துகிட்டே சப்தம் போடுவேன். அதுகள் ஏதோ திரும்பச் சொல்லும் என்று மடமடவென சொல்லிக்கொண்டே யிருந்தாள்.

நான் பார்த்தவரை அங்கே கிழிந்துபோன கந்தல் சாக்குகளும், எலிப்புழுக்கையும், முட்டுதுணிகளும், ஒன்றிரண்டு மலம்துடைத்

தெறிந்த காகிதங்களும் தவிர வேறு எதுவுமேயில்லை. அம்மாவிற்கு அந்த ஊரிலிருந்த யாரையும் பற்றி ஏன் நினைவுகளே இல்லை என்று திடீரெனத் தோணியது. கேட்பதா வேண்டாமா என்ற யோசனையுடன் நின்றுகொண்டிருந்தேன். சில நிமிடங்கள் அந்த இடத்தை உற்றுப் பார்த்துக்கொண்டிருந்துவிட்டு அந்த வாழைமரம், குருவி எதுவும் மிச்சமில்லை என்று கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

பிறகு வேலியை விலக்கி வெளியே வந்தாள். தெருவில் உச்சி வெயில் ஏறி நின்றிருந்தது. சில நிமிடம் தெருவையே வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தாள். ஏகா வீடு எங்கே இருக்கு என்று கேட்டேன். அம்மா விருப்பமற்றவள் போல அவ செத்து இன்னேரம் தும்பைச் செடியாகிப் போயிருப்பா அதை ஏன் கேட்குறே என்றபடியே நடக்கத் துவங்கினாள். மௌனமாகப் பின்னால் நடக்கத்துவங்கினேன்.

பாதையோரம் இருந்த தும்பைச்செடிகள் திடீரெனத் தெரிந்த மனிதர்களைப் போலானார்கள். இரண்டு மணி நேரம்கூட செலவிடாத இந்தப் பயணத்திற்காகவா மூன்று நாட்கள் செலவழித்திருக்கிறோம் என்று தோணியது. அம்மா வின் முகத்தில் விவரிக்க முடியாத இறுக்கம் படிந்து போயிருந்தது.

பேருந்து நிறுத்ததில் தண்ணீர் குடிக்கிறாயா என்று கேட்டபோது கூட அம்மா மறுத்துவிட்டாள். பேருந்தில் ஏறிய பிறகு அம்மா சொன்னாள். நான் உங்கப்பாவைக் கல்யாணம் பண்ணிகிட்டு இந்த ஊரைவிட்டுப் புறப்பட் டப்போ யாருமே எனக்காக ஒரு சொட்டு கூட அழவேயில்லை. அதைத்தான்டா இப்பவும் என்னாலே தாங்கவே முடியலை.

இந்த ஊர்ல பிறந்து இந்தத் தெருப்புழுதியில அழுது புரண்டு, அடிவாங்கி இதுதான் என் வீடுனு நினைச்சிகிட்டு இருந்தவளை எல்லாம் போதும்போடினு கட்டிக்கொடுத்து அனுப்பி வச்சாங்க. அய்யோ இதெல்லாம் விட்டுப் போறா ளேனு ஒரு ஆள் என்கிட்டே கேட்கலை.

மடைச்சி எனக்கும் அப்போ தோணவேயில்லை. ரெட்டை ஜடையைப் போட்டுகிட்டுக் கிளம்பிட்டேன். எனக்குனு இந்த ஊருல யாருமேயில்லை. பிரியமா இருந்தா ஏகா. அவ இருக்காளா செத்தாளானு தெரியாது. அப்படித்தான் வாழ்ந்திருக்கிறேன்.

உங்களை வளர்த்து படிக்க வச்சி ஆளாக்கிவிட்டுட்டேன். அதுல என்னடா பெரிய பெருமையிருக்கு. பூனைகூடத்தான் குட்டியைக் கவ்விக்கிட்டே திரியுது. வாழ்ந்து என்னத்தைக் கண்டேன்

எனக்கு இங்கே எதுவுமேயில்லைடா. இந்த ஊரைப் பொறுத்த வரைக்கும் நான் செத்து ரொம்ப வருசம் ஆகியிருச்சில்லே என்றாள். என்னால் பதில் பேசமுடியவில்லை.

பேருந்து சாலைவளைவில் திரும்பியபோது மலைகள் தென்படத்

துவங்கின. அம்மா அதை நிமிர்ந்து பார்ப்பாளோ என்று நினைத்தேன். ஆனால் அம்மாவின் குனிந்த தலை நிமிரவேயில்லை. நான் பார்த்த போது மலையின் மௌனம் நீண்டோடியிருந்தது. மலையின் அருகாமை வளைவில் பேருந்து வருகையில் அம்மா புறங்கையால் முகத்தைத் துடைத்துக்கொண்டு வெளியே பார்த்தாள். மலை அவள் கண்களை விட்டு வெகு தொலைவிற்குப் பின்னால் போய் விட்டது போன்றிருந்தது. தலையை உலுக்கியபடியே வெறித்துப் பார்க்கத் துவங்கியிருந்தாள்.

யாரும் தொட முடியாத தூரத்திற்கு மலை பின்னால் போய்க் கொண்டிருப்பது போலிருந்தது. அவள் கண்கள் குருவிகளைப் போல படபடத்துக்கொண்டிருந்தன. அது வரையில்லாத துக்கம் அப்போதுதான் எனக்குள் பீறிடத் துவங்கியிருந்தது. அம்மாவை நேர்கொண்டு பார்க்க என்னால் முடியவில்லை.

# சற்றே மகிழ்ந்து கொள்க

சித்ராவிற்கு வாரத்திற்கு ஆறு நாள் கோவில்களுக்குப் போகிறாள். சில வேளை ஒரே நாளில் மூன்று கோவில்களுக் கும் போயிருக்கிறாள். எல்லாக் கோவில்களிலும் அவளைப் போலவே நூற்றுக்கணக்கான பெண்கள் எலுமிச்சைப்பழங்களும் எண்ணெய் வாளியுமாக மனதில் பிரார்த்தனையோடு காத்துக்கொண்டிருக்கிறார்கள். ஒவ்வொரு எண்ணெய் தூக்குவாளிக்குள்ளும் வெளியே சொல்லாத பிரச்சினைகள் தான் மிதந்துகொண்டிருக்கின்றன.

இவ்வளவு சிறிய தூக்குவாளியை இதற்காகவே தயாரித் திருக்கிறாள் போலும். அவள் ஆரம்ப நாட்களில் எவர்சில்வர் பாட்டிலில்தான் எண்ணெய் கொண்டுபோய்க்கொண்டிருந்தாள்.

முன்பொரு நாள் பிரதோஷத்தின் போது பரிமளம் கொண்டு வந்திருந்த சிறிய தூக்குவாளியைக் கண்டது முதல் அவளும் அதைப் போல ஒன்றை வாங்க வேண்டும் என்று ஆசை கொண்டாள். அதற்காகவே தேடி அவள் ரங்கநாதன் தெருவில் அந்தத் தூக்கு வாளியும் வாங்கிக்கொண்டாள். இவ்வளவு சிறியதாக எப்படி தூக்குவாளியைத் தயாரிக்க முடிந்தது என்ற ஆச்சரியம் ஒவ்வொரு முறையும் அதைக் கையில் எடுக்கும்போது ஏற்படுவதைத் தவிர்க்க முடியாது.

கோவில்களுக்கு வரும் பெண்களைப் பார்க்கும்போது சித்ரா இனம்புரியாத நெருக்கம் கொண்டுவிடுகிறாள். அதற்கு முக்கிய காரணம் தன்னைப் போலவே அத்தனை பெண்களுக்கும் பிரச்சினை யிருக்கிறது. அதை மறைத்துக்கொண்டு வெளியே சொல்ல யாருமில்லா மல் கோவிலுக்கு வந்துசேர்கிறார்கள். மனதின் வலியை ஏதாவது கோவிலின் ஏதாவது ஒரு மூலையில் உதிர்த்துவிட்டு போய்விடுகிறார்கள்.

சித்ராவிற்கு சாமியிடம் பேசுவதற்கு எவ்வளவோ இருக்கின்றன. அவள் திருமணமாவதற்கு முன்பாக இவ்வளவு கோவில்களுக்குப் போனதில்லை. ஆனால் திருமணமான பிறகு கோவிலுக்குப் போகாமல் இருந்தால் மனத்துயரங்களைத் தாங்க முடியாது என்ற நிலை உருவானது.

திருமணமான இந்த ஆறு வருஷத்தில் ஒவ்வொரு நாளும் ஏதாவது ஒரு பிரார்த்தனை அவள் கூடவே இருந்துகொண்டிருந்தது. ஒவ்வொரு முறை கோவிலின் வாசலில் நுழையும்போதும் இந்தமுறை எதையும் பிரார்த்தனை செய்யக்கூடாது என்று தோன்றும், ஆனால் அந்தப் படிக்கட்டுகளைத் தாண்டியதும் மனது தானே பிரார்த்தனைகளின் பட்டியலை வாசிக்கத் துவங்கிவிடுகிறது. அந்தப் பட்டியல் முடிவற்று நீண்டுகொண்டு போவதைச் சில நாட்கள் அவள் உணர்ந்திருக்கிறாள்.

ஒரு உற்சவத்தின்போது அவள் மதியம் இரண்டு மணிக்கே போய்ப் பிரகாரத்தில் காத்துக்கொண்டிருந்தாள். அன்றைக்கு ஆயிரத்துக்கும் மேற்பட்ட பெண்களின் கூட்டம். அவளுக்கு அருகில் இருந்த பெண் களில் ஒருத்தி ஒரு வார்த்தைகூடப் பேசாமல் கண்ணீர் விடுவதும் அதைச் சேலையால் துடைத்துக்கொள்வதும் திரும்ப அழுவதுமாக இருந்தாள். அந்தக் காட்சி சித்ராவை வெகுவாக பாதிப்பதாக இருந்தது.

சித்ராவும் அழக்கூடியவள்தான், ஆனால் அழுவது அவளுக்கு ஏதோ ஒரு சுதந்திரத்தைத் தருவதைப் போலிருந் தது. அவள் சில இரவுகளில் விழித்து எழுந்து சமையல் அறையில் போய் நின்றபடியே இருட்டிற்குள் ளாக அழுவாள். எதற்காக தான் இப்படி அழுகிறோம் என்று அப்போது யோசிப்பதேயில்லை. அழுது முடித்துவிட்டு ஒரு டம்ளர் தண்ணீர் குடித்துவிட்டு வந்து படுத்தால் மனசு சற்றே அடங்கியது போலிருக்கும்.

சித்ராவின் கணவன் அரசு அதிகாரியாகப் பணியாற்றிக் கொண்டி ருந்தான். அவர்கள் அடுக்குமாடிக் குடியிருப்பு ஒன்றில் வசித்தார்கள். சித்ராவிற்குத் திருமணத்திற்கு முன்பாக ஒரேயொரு பயம் மட்டுமே இருந்தது அது அவளுக்குத் திருமணம் நடக்க வேண்டும் என்று. ஆனால் மணமான அடுத்த நாளில் இருந்து திருமணவாழ்க்கையை எப்படிக் காப்பாற்றிக்கொள்வது என்ற பயமாக மாறிவிட்டது.

ஒவ்வொரு நாளும் தான் ஏதாவது காரணம் சொல்லித் துரத்தப் பட்டு விடுவோமோ என்ற பயம் அவளுக்குள் வளரத் துவங்கியிருந்தது. அது வளர்ந்து கிளைவிட்டது. பின்னாளில் எதற்கு பயப்படுகிறோம் என்று அறியாதபடியே அவள் நூற்றுக்கணக்கான பயங்களுடன் வதைபடத் துவங்கினாள்.

மாதம் கோவிலுக்காக அறுநூறு ரூபாய் செலவழிக்கிறாள் என்று வீட்டில் உள்ளவர்கள் அவளைத் தொடர்ந்து திட்டிக்கொண்டேயிருந்த போதும் அவளது பட்டியலில் புதிய புதிய கோவில்கள் பெருகிக் கொண்டேயிருந்தன. ஏதாவது ஒரு புதிய கோவிலைக் கண்டுபிடித்துப் போய்வருவது மிக சந்தோஷம் தருவதாக இருந்தது. ஆனால் எல்லாக் கோவிலிலும் அவளது பிரார்த்தனைகள் மாறவேயில்லை.

சில வாரங்களுக்கு முன்பாக அவள் நகரிலிருந்து ஒரு மணி நேர தூரத்திலிருந்த நிமிஷாம்பாள் கோவிலுக்குப் போயிருந்தாள். இப்போதுதான் அக்கோவில் பிரபலமாகியிருந்தது. வயல் வரப்பின்

வழியாக நடந்து கோவிலை அடைந்தபோது ஒரு கிளி பறந்து வந்து சுவரில் உட்கார்ந்தபடியே கத்திக்கொண்டிருந்தது.

அவள் கோவிலில் பூஜை முடிந்து வெளியே வந்து பார்த்தபோது எங்கோ, யாருமேயில்லாமல் தான் தன்னந்தனியாக இருப்பதுபோலத் தோணியது. தான் ஏன் இப்படியே செத்துப் போய்விடக் கூடாது என்று திடீரெனத் தோணியது. அப்படி நினைக்க நினைக்க கை கால்கள் நடுங்கத் துவங்கின. கோவிலில் நின்றுகொண்டு எதற்காக இப்படி யோசனை வருகிறது என்று மனதை மாற்ற முயற் சித்தபோதும் அது அடங்கவேயில்லை.

அவள் பேருந்திற்காகக் காத்திருக்காமல் சாலையில் நடக்கத் துவங்கினாள். பாதி தூரம் நடந்தபோது தான் எதற்காக இப்படி கடவுளைத் துரத்திக்கொண்டே அலைகிறோம் என்று அவள் மீது அவளுக்கே எரிச்சலாக வந்தது. வழியில் இருந்த ஒரு டெலிபோன் பூத்திற்குள் சென்று அவள் அப்பாவை உடனே புறப்பட்டு வரும்படி யாகக் கத்தி அழுதாள். அப்பா என்னம்மா ஆச்சி. என்ன ஆச்சி என்று கேட்கக் கேட்க அவள் நீங்க, வரலைன்னா நான் செத்துப் போயிருவேன்பா என்றாள்.

மறுநாள் காலை அவள் அப்பா தஞ்சாவூரிலிருந்து புறப்பட்டு, கவலை படிந்த முகமும் உறக்கமற்ற கண்களுமாக என்னடா நடந்துச்சி மாப்பிள்ளை ஏதாவது சொன்னாரா என்று கேட்டார். இங்கே வேணாம் கோவில்ல போயி பேசுவோம் என்று சித்ரா அடங்கிய குரலில் சொன்னாள். அப்பாவும் அவளும் புறநகரிலிருந்த கோவிலுக்குப் போனபோது அவள் மனது கொஞ்சம் கொஞ்சமாக ஆறுதல்படத் துவங்கியது.

அப்பா அவளுக்கு ஏதேதோ ஆறுதல்கள் சொல்லிக்கொண்டி ருந்தார். இருவரும் சக்கரைப்பொங்கல் வாங்கிச் சாப்பிட்டார்கள். அப்பாவிடம் அவள் எதையும் சொல்லிக்கொள்ளவில்லை. ஆனால் அவர் வந்தது அவளுக்கு ஆறுதல் தருவதாக இருந்தது. அப்பா மிகவும் பக்தி பூர்வமாக சாமி கும்பிட்டு திருநீறு பூசிக்கொண்டார்கள். அன்றைக்கு அப்பாவும் மகளும் மூன்று கோவில்களுக்குப் போனார்கள்.

ஒன்றாகச் சாப்பிட்டார்கள். ஆட்டோவில் வீடு திரும்பும்போது தான் இரவே ஊருக்குப் போகப் போவதாக அப்பா சொன்னார். அவள் மறுக்கவில்லை. அம்மாவிடம் தரச் சொல்லி கோவிலில் வாங்கிய குங்குமத்தைத் தந்தாள்.

அப்பா அலுத்துக்கொண்டபடியே உங்க அம்மாவும் கோவில் கோவிலாகத்தான் அலைந்துகிட்டு இருக்கா.. அவளுக்கு என்ன குறையோ என்றார். அதைக்கேட்டதும் அம்மாவின் மீது அதிகமான நெருக்கம் உண்டானது.

அவள் உடனே அம்மாவிற்காக தான் தாமரைப்பூ வாங்கி நேர்ச்சை செய்ய வேண்டும் என்று நினைத்தபடியே வீட்டின் முன்னால்

வந்து ஆட்டோவில் இறங்கிக்கொண்டாள். அவர்கள் வீடு இருந்த வீதியில் தெருவிளக்குகள் எரியவில்லை. பாதி இருளுக்குள் நடந்து சென்றார்கள். வழியில் இருந்த பிள்ளையார் கோவிலில் இருளுக்குள் நின்றபடியே ஒரு பெண் சாமி கும்பிட்டுக்கொண்டிருந்தாள். அப்பாவும் மகளும் கோவிலைப் பார்த்ததும் கன்னத்தில் போட்டுக்கொண்டு நடந்து செல்லத் துவங்கினார்கள்.

# இல்மொழி

சுப்பையாவிற்குத் திருமணமாகிய நாட்களில்தான் இந்தப் பழக்கம் உருவானது. அப்போது சாலை தெருவில் குடியிருந்தார். ரெட்டை யானை முகப்பு போட்ட வீடு. வீட்டில் அவர்களையும் சேர்த்து இருபத்தி ஏழு பேர் இருந்தார்கள். இரண்டு அண்ணன், அண்ணி, ஆச்சி, சித்தப்பா என்று யாவரும் ஒன்றாக வாழ்ந்தார்கள். அதற்கிருந்த ஒரே காரணம் அவர்களது கோவில்கடைகள்.

கோவிலின் மண்டபத்தில் அவர்களுக்கு மூன்று கடை களிருந்தன. ஒன்று படக்கடை, காலண்டர், சுவாமிப் படங்கள், குங்குமம் விபூதி விற்பது. இன்னொன்று வளையல் கடை. மூன்றாவது கடை கல்கண்டு பால் விற்பது. இவை மூன்றையும் நிர்வாகம் செய்வதற்காக ஆட்கள் தேவைப்பட்டார்கள். அதற்காகவே அவர்கள் ஒன்றாக இருந்தார்கள்.

சுப்பையாபிள்ளைக்கு தாழையூத்தில் பெண் எடுத்தார்கள். கல்யாணம் ஆனது என்ற பெயர்தானே தவிர அவர்களால் பெண் டாட்டியோடு தனித்திருந்து பேச நேரம் கிடைப்பதேயில்லை. ஒரு வேளை பேசிக்கொண்டாலும் அடுத்தவர் காதிற்குக் கேட்காமல் பேசுவது சாத்தியமேயில்லை. சாப்பாடு பரிமாறும்போது வேணாம் போதும் என்று சொல்வதுதான் அவர் உபயோகித்த அதிகமான வார்த்தைகள். சுப்பையா பிள்ளைதான் படக்கடையைக் கவனித்து வந்தார். உண்மையில் அதில் கவனிப்பதற்கு என்று தனியே எதுவு மில்லை. சாமிக்கு பயந்தவர்கள் இருக்கும்வரை உறுதியான வியாபாரம். பொம்பளைகள் இருக்கும் வரை குங்குமம் மஞ்சள் விற்பனை. பிறகு என்ன ?

கடையைத் திறந்து வைத்தவுடன் அவர் தினமணியைப் பிரித்து வைத்துப் படிக்க ஆரம்பித்தால் சாப்பிட வீடு வரும்போதுதான் முடிப்பார். அப்படி ஒரு நாள் வீடு நோக்கி வந்துகொண்டிருக்கும் போது பாலத்தின் அருகில் தான் அந்த யோசனை உண்டானது.

இந்த சள்ளையை எத்தனை நாள் கொண்டு கழிக்கிறது. பேசாம நாமளா ஒரு பாஷையை உண்டாக்கினா என்ன ? யோசித்தவுடன் பளிச்சென்றிருந்தது. வீடு வரும்வரை அந்த பாஷையைப் பற்றியே

நினைத்துக்கொண்டிருந்தார். அன்றிரவு மனைவியிடம் அந்த யோசனையைச் சொன்னார். அவள் உங்க இஷ்டம். நாலும் யோசிச்சி செய்யுங்க என்றாள். இது வழக்கமாக அவர் எதைப் பற்றிக் கேட்கும் போதும் அவள் சொல்வதுதான் என்பதால் மறுநாள் கடைக்குப் போகும்வழியில் கவனமாக சைக்கிளை லாலாகடை அருகில் நிறுத்தி செந்தில்விலாசில் எண்பது பக்க நோட்டு ஒன்றை வாங்கிக்கொண்டார்.

கடையில் போய் உட்கார்ந்தவுடன் கர்மசிரத்தையாக தான் உருவாக்கப் போகின்ற மொழியைப் பற்றி யோசிக்கத் துவங்கினார். முதலில் அதற்கு என்ன பேர் வைப்பது என்று யோசனை எழுந்தது. சாமி பெயரிலே இருக்கட்டும் என்று நெல்பா என்று அந்த பாஷைக்குப் பெயரிட்டார்.

அதற்கு எழுத்து வடிவம் வேண்டுமே என்று முடிவு செய்து அவராக அனா, ஆவன்னா போல எழுத்தை உருவாக்கினார். அதுபோலவே அதற்கு என்று ஒலிக்குறிப்பு வேண்டும் என்று உச்சரிப்பும் உருவாக்கினார். கடையில் இருந்த நேரங்களில் எல்லாம் ஒவ்வொரு பொருளுக்கும் அவர் நெல்பாவில் எப்படி வரும் என்று நோட்டில் எழுதத் துவங்கினார். தினசரி அவர் கணக்கு நோட்டு போட்டு எழுதி வருவதைக் கண்ட மணியம்பிள்ளை சுப்பையாவின் தகப்பனாரிடம் உம்மபிள்ளை ரொம்ப கணக்காக வியாபாரம் பண்றான் என்று புகழ்ந்து தள்ளினார்.

ஒரு மாசத்திற்கு நோட்டு நிரம்பிப் போகும் அளவு வார்த்தைகள் அதிகமாகின. அந்த நோட்டை பர்வதத்திடம் தந்து மனப்பாடம் செய்துவிடும்படியாகச் சொன்னார். அவளுக்கு இந்த மனுசன் வேற கோட்டி புடிச்சி அலையுறானே என்று எரிச்சலாக வந்தது. ஆனாலும் வழியில்லாமல் அந்த பாஷையைப் பழகிவிட்டாள். அதை சோதித்துப் பார்ப்பதற்காகச் சாப்பாடு போடும்போது நெல்பா பாஷையில் அவர் கேட்பார். அவளும் நெல்பாவில் பேசுவாள். இரவில் படுக்கையில் கொஞ்சுவதுகூட நெல்பாவிற்கு மாறிப்போனது. அதன்பிறகு அவர் பெரிய நோட்டாக வாங்கி நெல்பாவிற்கான சொற்களைச் சேகரிக்கத் துவங்கினார். ஒரு வருஷத்திற்குள் அந்த பாஷை அவர்கள் ரெண்டு பேருக்கும் அத்துபடியாகியது.

வீட்டில் உள்ளவர்கள் மீது ஆத்திரமானால் கூட வெளிப் படையாக நெல்பாவில் பர்வதம் திட்டுவாள். யாருக்கும் அவள் என்ன சொல்கிறாள் என்று புரியாது. சுப்பையா மிகுந்த சந்தோஷமானார். உலகில் தங்கள் இருவருக்கும் மட்டுமே தெரிந்த மொழி இருக்கிறது என்பது பெரிய விஷயமில்லையா.

ஒரு நாள் கடை திறப்பதற்காக வந்த சுப்பையாவின் அப்பா கடையில் வைத்திருந்த நெல்பா நோட்டுகளைப் புரட்டிப் பார்த்து விட்டு இந்த எழவைக் கூட்டுறதுக்காக கடைக்கு உன்னை வச்சிருந்தனா என்று கோவித்துக்கொண்டு எல்லா நோட்டுகளையும் கடையின் முன்னால் போட்டு எரித்ததோடு எல்லோரிடமும் சொல்லியும்

காட்டினார். சுப்பையாவிற்கு ஆத்திரமாக வந்தது. ஆனால் கடையை நம்பிப் பிழைப்பதால் மனதிற்குள்ளாக நெல்பாவில் திட்டிக் கொண்டார்.

இது நடந்த இரண்டாம் வருஷம் சுப்பையாவின் அப்பா இறந்து போகவே கடை பாகம் பிரிக்கப்பட்டது. சண்டை போட்டு படக் கடையை தன்வசமாக்கிக்கொண்டு குறுக்குத் துறையில் வேறு வீடு பார்த்துக் குடிபோய்விட்டார் சுப்பை யாபிள்ளை. வீடு மாறியதும் செய்த முதல் வேலை இனிமேல் வீட்டில் நெல்பாவில்தான் பேச வேண்டும் என்றார். அதன்பிறகு அவர் மட்டுமில்லாது அவரது பிள்ளைகள், பெண்கள் யாவரும் அதைக் கற்றுக்கொண்டார்கள். எப்போதாவது வீட்டில் சண்டை நடக்கும்போது அவர்கள் நெல்பா வில் கத்தி சண்டையிடுவார்கள். அருகாமை வீட்டில் ஒருவருக்கும் ஒன்றுமே புரியாது.

ஒரு முறை பங்குனி உத்திரத்திற்குத் திருச்செந்தூர் போவதற்கு பர்வதம் கிளம்பியபோது சுப்பையா கடையில் வேலையிருப்பதாக போகக்கூடாது என்று தடுத்தவுடன் அவள் கோபத்தில் மடமடவென நெல்பாவில் கத்தினாள். ஆனால் அவள் பேசியதில் பாதி சொற்கள் என்னவென்று அவர் அறிந்தேயிருக்கவில்லை. அவளிடம் எப்படிப் போய் அர்த்தம் கேட்பது என்று யோசனையும் வலியுமாகக் கடைக்குப் போனார். ஒரு உண்மை அவருக்குப் புரிந்திருந்தது. அவள் தனக்காக மட்டும் அந்த மொழியில் சிறப்புச் சொற்கள் நிறைய கற்றுக்கொண்டு விட்டாள் என்றாள். இதை வளர விட்டால் தனக்குத்தான் ஆபத்தாக முடியும் என்று தோன்றியது.

அன்றிரவே வீட்டில் யாரும் இனிமேல் நெல்பாவில் பேசக்கூடாது என்று உத்தரவிட்டார். சில நாட்களுக்கு அவர்களுக்கு சங்கடமாக இருந்தது. ஆனால் சுப்பையாவின் கோபத்திற்கு பயந்து நெல்பாவை மறந்து போனார்கள். நல்லவேளை பிரச்சினை முடிந்தது என்று தன் இயல்பான வாழ்க்கைக்குத் திரும்பியிருந்தார்.

நீண்ட நாட்களுக்குப் பிறகு ஒரு மதியம் தலைவலி அதிகமாகி அவர் வீடு திரும்பிய நேரம் பர்வதமும் அவரது மகனும் ஏதோவொரு பாஷையில் பேசிக்கொண்டிருந்தார்கள். என்ன பேசுகிறார்கள் என்று ஒருவரியும் புரியவில்லை, அவர்கள் சரளமாக பேசிக்கொண்டார்கள். சுப்பையா தன் சாய்வு நாற்காலியில் சாய்ந்தபடியே குடிக்கத் தண்ணீர் கேட்டார். உள்ளே மகள் சிரிப்போடு அதே புரியாத பாஷையில் தன் அண்ணனிடம் ஏதோ சொல்லிக்கொண்டிருந்தாள். சுப்பையா விற்கு எதற்காக இந்த எழவைக் கட்டி அழுகிறோம் என்று எரிச்சலாக வந்தது.

அந்த நிமிஷம் அவர் தன் அப்பாவை நினைத்துக்கொண்டார். தெரிந்த பாஷையை என்ன எழவுக்கு மாத்தினோம் என்று அவர் மீதே அவருக்குக் கோபம் கோபமாக வந்தது.

# கூந்தலில் எரிந்த நெருப்பு

கெந்தியம்மாள் கத்திக்கொண்டிருந்தாள்.

"ஆரு சொல்றதையும் கேட்காம நடந்தா எப்படி அதான் காது எழவு கேட்கமாட்டேங்குது. கண்ணு வேற அவிஞ்சி போச்சி. வீட்ல கிடக்க வேண்டியதுதானே. இன்னும் அப்படி என்னதான் அந்தப் பொட்டக்காட்டிலே இருக்கோ எங்கயாவது வழியில விழுந்து செத்துப் போனா தூக்கிட்டு வந்து போடுறதுக்குக்கூட வீட்ல நாலு ஆளு கிடையாது பாத்துக்கோங்க. யாராவது வந்து மண்டையைப் போட்டுட்டாருனு சொன்னாக்கூட எனக்கு என்னனு தான் உட்கார்ந்து இருப்பேன். சிறுக்கி புலம்பிகிட்டு கிடக்கானு போறதைப் பாரு ஏலே முருகேசு. நீயாச்சி இந்தக் கிழவன்கூட போயிட்டு வாய்யா இந்த வீட்ல என் பேச்சை ஒரு நாதி கேட்கிற தில்லை. ஆக்கிப் போட்டதைத் திங்க மட்டும் வந்து நில்லுங்க. அப்போ வைக்குறேன் சட்டு அகப்பையாலே."

வாசலில் மேய்ந்துகொண்டிருந்த கோழிக்குஞ்சுகளில் ஒன்றிரண்டு அவள் கால்களைச் சுற்றியலைந்து கொண்டிருந்தன. தன் ஆத்திரம் தீருமட்டும் கத்தியபடியே கோழிக்குஞ்சுகளுக்கு வடிகஞ்சியோடு தவிட்டைக் கலந்து போட்டுக்கொண்டிருந்தாள். வீட்டு நாய் கோழிக் குஞ்சுகளை முந்திக்கொண்டு திங்க வந்தது. அதைக்கண்டதும் அவளது ஆத்திரம் நாயின் மீது திரும்பியது. கையில் இருந்த அகப்பை யால் நாயின் தலையில் ஓங்கி ஒரு போடு போட்டபடியே கத்தினாள்.

"அதான் உனக்குத் தனியா வைக்கனே. மூதி அதுக்குள்ளே ஏன் வாயை வைக்குறே

நாய் அவள் அடியை உதறிவிட்டபடியே உடைந்த மண்கலயத்தில் ஊற்றிய கஞ்சியை நாக்கால் நக்கத் துவங்கியது. அவள் தெருவையே பார்த்துக்கொண்டிருந்தாள். வேலய்யா கம்பை ஊன்றியபடியே தனியே போய்க்கொண்டிருந்தார்.

வெங்கலம்மா வீட்டின் உரலில் கட்டப்பட்டிருந்த ஆட்டுக்குட்டி யொன்று கத்திக்கொண்டிருந்தது. உடைந்துபோன மாட்டுவண்டி

யொன்று நெடுங்காலமாகவே தெருவின் இடப்பக்கம் கிடந்தது. அதை யாரும் கவனித்துப் பார்ப்பதுகூடக் கிடையாது. ஆனால் உடைத்து விறகாக்க யாருக்கும் தைரியம் வரவில்லை போலும்.

கிட்ணப்ப நாயக்கரின் வீட்டுவாசலில் மட்டும் பெரிதாகக் கோலம் போட்டிருந்தார்கள். மற்றவீடுகளில் கோலமிடுவதற்கு யார் இருக்கிறார்கள். வெள்ளி செவ்வாய்க்கு நாலு புள்ளியில் கோலம் போடுவதோடு சரி. அப்படியே கோலமிட்டாலும் பகல் முழுவதும் புழுதியை வாறி இறைக்கும் காற்று சில நிமிசங்களில் கோலத்தை அடையாளம் தெரியாமல் ஆக்கிவிடும்.

முன்புபோல கோலப்பொடி விற்கின்றவனும் அவர்கள் ஊருக்கு வருவதில்லை. அந்தக் குரல் அழிந்து வருஷமாகிவிட்டது. கெந்தியம் மாள் தன் வீட்டைத் தெளிப்பதோடு சரி. கோலம் போடுவதை எல்லாம் விட்டுவிட்டாள். வீட்டில் அவளும் இந்த வயசான கிழவனும் அவளது ரெண்டு பிள்ளைகளும் மட்டுமேதானே இருக்கிறார்கள்.

வடக்கே எங்கோ கட்டிட வேலைக்காகப் போன அவளது புருஷன் மாதம் ரெண்டு நாளோ மூணு நாளோ ஊருக்கு வருகிறான். அவன் வருகின்ற நாளில்கூடக் கோலம் போடு வதற்கு அவள் விரும்புவதில்லை. அவனும் அதை எல்லாம் கண்டுகொள்வதில்லை. வீட்டுக்கு வந்த நேரத்திலிருந்து அவன் உறங்கிக்கொண்டேதான் இருப்பான். சாப்பாட்டு வேளையில் எழுப்பினால் தட்டைக் கவனித்துப் பார்க்கக்கூட விருப்பமில்லாமல் தின்றுவிட்டுப் படுத்துக் கொள்வான். எத்தனை நாள் தூக்கம் இல்லாமல் கிடந்தானோ என்று தோன்றும்.

ஊரில் பாதிக்கும் மேலான ஆம்பளை பொம்பளைகள் நகரங்களில் நடக்கும் கட்டிட வேலைக்காகப் போய்விட்டார்கள். பத்து நாட்களுக்கு முன்னதாகக்கூட மருளுத்திலிருந்து பரமசிவம் வந்து ஆட்களைக் கூப்பிட்டுக்கொண்டிருந்தான். கெந்தியம்மாள் தன் பிள்ளைகளுடன் வேலைக்கு வந்தால் நாள் ஒன்றுக்கு நூற்றியிருபது ரூபாய் கூலி தருவதாகச் சொன்னான். நல்ல வேலைதான். அதுவும் சாப்பாடு போட்டு சம்பளமும் கொடுக்கிறார்கள். ஆனால் இந்தக் கிழவன் இருக்கிற வரைக்கும் தனியே விட்டு எப்படிப் போவது. அவுக வரட்டும் கலந்துகிட்டு சொல்றேன் என்று சொல்லி முன்பணமாக நீட்டிய நூறு ரூபாத் தாளைக்கூட கெந்தி தள்ளிவிட்டாள்.

மருளுத்துக்காரன் விடாப்பிடியாக பாட்டையாவையும் கூடக் கூட்டிட்டு வந்துருங்க. அவங்க தங்குறதுக்கு இடம் ஏற்பாடு பண்ணித் தர்றேன். மூக்கன்கூட அவங்க அய்யாவைக் கூட்டிகிட்டுதான் வர்றாப்லே. தயங்காம ஒத்துக்கோங்க என்று விடாப்பிடியாகப் பணத்தைக் கையில் திணித்தான். அவளுக்குத் தள்ளுவதற்கு மனசே கேட்கவில்லை. எதற்கு ஒரு வார்த்தை கேட்டுவிடலாமோ என்ற நப்பாசையில் அன்றிரவு பாத்திரம் கழுவியபடியே அவரிடம் நீங்களும் எங்ககூட டவுனுக்கு வந்து சௌரியமா இருக்கலாம்லே என்று கேட்டாள். அவர் பதில் சொல்லாமல் தொண்டையில் இருந்த

கோழையைக் காறித் தரையில் துப்பிவிட்டு ஈ ஓட்டத் துவங்கினார். அது அவளுக்கு ஆத்திரத்தை உண்டாக்கியது.

டவுன்லயும் மனுசன் மக்கள் எல்லாம் இருக்காங்க. உசிரு போற வரைக்கு இந்த ஊர்லயே இருக்கிறதுக்கு இங்கே என்ன அரண்மனையா கட்டி வச்சிருக்கீங்க என்று கோபத்தோடு சொன்னாள்.

அவர் அந்தப் பேச்சை கவனம் கொள்ளாமல் ஈயைப் பார்த்தபடியே இருந்தார். இந்தக் கிழவனை என்ன சொல்லியும் ஊரைவிட்டுக் கொண்டுபோக முடியாது என்ற ஆதங்கம் அவளைச் சுணங்க வைத்தது. மருளுத்துக்காரன் திரும்பவும் அடுத்த மாசம் வருவதாகச் சொல்லிப் போனான்.

எப்படியும் அதற்குள் அவள் புருஷன் வந்துவிடுவான். அப்போது பேசி எப்படியாவது இந்தக் கிழவனை டவுனுக்குக் கொண்டு போய்விட்டால் நிம்மதியாகப் போய்விடும். இல்லாவிட்டால் கிழவன் பாடு முடியுற வரைக்கும் நாதியத்துப்போன இந்த ஊரில் கெடந்து அவதிப்பட வேண்டியது தான் என்று சலித்தபடியே அவள் தவிட்டைக் கொத்தி மணலில் போடும் கோழிக்குஞ்சுகளைத் தள்ளிவிட்டபடியே வீட்டிற்குள் சென்றாள்.

**வே**லய்யாவிற்கு நடக்க நடக்க தெரு நீண்டு போய்க் கொண்டேயிருந்தது. ஒரு காலத்தில் இந்தத் தெருவிற்குள் கால் எடுத்து வைப்பதற்குள் வீடு வந்துவிடும். ஆனால் இப்போது வெகு தொலைவிற்குத் தெரு நீண்டுபோய்விட்டது போலிருந்தது. வீட்டு வாசலில் மருமகளின் தலை தென்படுகிறதா. பார்ப்பதற்காக பாதித் தெருவில் நின்றபடியே திரும்பிப் பார்த்தார். ஆளைக் காணவில்லை.

அவள் சொல்வது எல்லாம் வாஸ்தவம்தான். அவருக்குக் காது பட்டுப்போய்விட்டது. கண்களும் பஞ்சடைந்துவிட்டன. வீட்டின் முன்னால் நிற்கும் அடிபருத்த வேம்பு கூடத் தெளிவில்லாமல்தான் புலப்படுகிறது.

நேற்று ராத்திரி சாப்பிட உட்கார்ந்தபோது குண்டு பல்பு எரிவது கண்ணில் தெரிந்தபோதும் சாப்பிடுகின்ற தட்டு கண்ணில் தென்படவில்லை. பாதித் தட்டு தெரிகிறது. சாப்பாடு தெரியவில்லை. கண்களை இடுக்கிக்கொண்டு பார்த்தால் தட்டின் விளம்பு தெரிகிறது. அவர் தன் விரலால் சோற்றைத் துழாவினார். கையில் அள்ளிய சாதத்தை உற்றுப் பார்த்தபோதுகூடத் தெளிவாகத் தென்படவில்லை. வாய்க்குக் கொண்டுபோனவர் தன்னை அறியாமல் அதை வாயில் போடுவதாக நினைத்துக் கீழே போட்டார்.

நல்லவேளை மருமகள் பக்கத்தில் இல்லை. கைக்கும் வாய்க்கும் இடைவெளியாகிப் போச்சின்னா இனிமே ரொம்ப நாள் உசிரு தங்காது என்று அவருக்குத் தோணியது. சாப்பாட்டை ஒதுக்கி

வைத்துவிட்டு எழுந்துகொள்ள முயன்றபோது மருமகள் அருகில் வந்து நின்று கத்தினாள்.

"வேளை வேளைக்குச் சுடுசோறு வேணும்னா நான் எங்க போறது. காலையில வடிச்ச சோறு இறங்கலையாக்கும். சாப்பிடுற லட்சணம் பச்சைப் புள்ளை தாவலை. இதை எல்லாம் யாரு கூட்டிப் பெறக்கி சுத்தம் பண்றது. நாளையில இருந்து மண்சட்டியில கஞ்சிதான் தருவேன். குடிச்சிட்டு அப்படியே கட்டிலுக்குக் கீழே வச்சிகிடுங்க."

அவர் காதில் எதுவும் விழவில்லை. அவள் ஏதோ பேசுகிறாள் என்பது மட்டும் கேட்டது. சப்தங்கள் அநேகமாக அவரை விட்டு மறைந்து போய்விட்டது. பகலும் இரவும் உலகம் அமைதியாக இருந்தது. உடம்பில் ஏதாவது ஊர்ந்து போவது போலத் தெரிவதைத் தவிர வேறு உணர்ச்சிகளும் அதிகமில்லை.

ஆனாலும் அவரால் வீட்டில் படுத்துக்கிடக்க முடியவே யில்லை. சில நாட்களாகவே அவருக்கு ஒரு கனவு வந்து கொண்டிருந்தது.

ஊரின் மேற்கில் உள்ள கட்டபனையொன்று தீப்பிடித்து எரிந்து கொண்டிருந்தது போல அக்கனவு வந்தது. அது கனவு என்பதாகக்கூட இல்லாமல் நாசியில் அந்தப் பனை யின் மணமேறுவதுபோல நிஜமாக இருந்தது.

பனைக்கு யார் நெருப்பு வைத்தார்கள். ஏன் பனை எரிவதை யாரும் தடுக்கவேயில்லை என்று புரியாமல் அவர் நெருப்பின் முன்னால் நின்றுகொண்டிருந்தார். திகுதிகுவென நெருப்பு கொளுந்து விட்டு எரிய பனையின் வலப்பக்கக் கூந்தல் கரிந்து விழுந்தது.

அந்த நெருப்பு அவர் முன்பு பார்த்திருந்த நெருப்பைப் போல இல்லாமல் உக்கிரமாக இருந்தது. அதன் ஓசை அவர் காதுகளுக்குப் பாம்பின் சீற்றமெனக் கேட்டது. பற்றி எரிகையில் அது பனையை முறித்து வீழ்த்திவிட்டுதான் ஓய்வேன் என்று சபதமிட்டிருப்பது போன்ற ஆவேசமிருந்தது. பனை எரியுது. பனை எரியுது என்று அவர் வாய் ஓயாமல் சொல்லிக்கொண்டிருந்தார்.

அந்தக்குரல் யாருக்கும் கேட்கவேயில்லை. ஒருவேளை அவர் கத்தவேயில்லையா? அம்மன் கோவிலுக்கு அக்னிச் சட்டி எடுத்து வரும்போது காற்றில் விசிறிச் செல்லும் தணல்போல எரிந்து கொண்டிருந்த பனையிலிருந்து பொறி பட்டு நெருப்பு பறந்து கொண்டிருந்தது. பனை எரிவதைப் பார்க்க, துயரமாக இருந்தது.

எதிர்ப்போ, மறுப்போ இல்லாமல் தன் சுயவிருப்பத்தின் படியே எரிய அனுமதித்தது போல பனை நெருப்பிடம் தன்னை ஒப்படைத்தி ருந்தது. புகையும் உக்கிரமும் ஆவேசமுமாக எரிந்துகொண்டிருந்த பனையின் முன்னால் நிற்க முடியவில்லை. வெக்கை வாறியடித்தது. அவர் தன்னை அறியாமல் துக்கமும் வலியுமாகக் காற்றில் கைகளை வீசி போ போ என்று விரட்டிக்கொண்டிருந்தார்.

நெருப்பு மெதுவாகப் பனையை விட்டுத் தரையிறங்கி அவரை

நோக்கி வரத்துவங்கி அவர் பார்த்துக்கொண்டிருந்த போதே நாகம் ஒன்று வருவதுபோல நெருப்பு அவர் காலை நோக்கிக் கொத்த வந்து கொண்டிருந்தது. தன்னை மீறிய பயத்தால் அவர் ஓடத் துவங்கினார். நெருப்பு பின்னாடியே ஓடிவந்தது. மண்ணில் அவர் தடுமாறி விழுந்தபோது நெருப்பு அவர் மீது பற்றாமல் அருகில் இருந்து பார்த்துக்கொண்டேயிருந்தது. அவர் கையெடுத்துக் கும்பிட்டபடியே என்னை விட்ரு சாமி என்று கதறினார்.

நெருப்பு அவரைப் பார்த்தபடியே இருந்தது. அவர் நெருப்பைப் பார்த்துக்கொண்டிருந்தார். நீண்ட நேரத்தின் பிறகு சர்ப்பம் திரும்பிப் போவதுபோல நெருப்பு விடுவிடு வெனப் பனையை நோக்கிச் சென்று அதன் கூந்தலில் ஏறிக்கொண்டது.

அவர் மண்ணில் விழுந்து கிடந்தார். உடம்பு நடுங்கிக்கொண்டே யிருந்தது. தன்னை அறியாமல் மூத்திரம் போகத் துவங்கியது. அப்போதுதான் அவருக்கு விழிப்பு வந்தது. கட்டிலிலே மூத்திரம் போயிருந்தார். கட்டியிருந்த வேஷ்டி, விரிப்பு எல்லாமும் மூத்திரமேறி யிருந்தது. கைகளால் தடவிப் பார்த்தார். ஈரம்பட்டது. அதை நாசியின் அருகில் வைத்து முகர்ந்து பார்த்தார். நிஜம்தான் மூத்திரம் போயிருக் கிறேன் என்றபடியே எழுந்து கோலை ஊன்றிய படியே தடுமாறி வெளியே வந்து மீதமிருக்கும் மூத்திரத்தைப் பெய்து முடித்தார்.

படுக்கைக்குப் போக மனது வரவில்லை. இருட்டுக்குள்ளா கவே உட்கார்ந்துகொண்டபடியே பனை எரிவதைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தார். இது எல்லாம் மனப்பிரம்மை தானா? இல்லை நிஜமாகவே பனை இப்போது எரிந்து கொண்டிருக்கிறதா? தன் வாழ்வில் பனை எரிந்து ஒருமுறை கூட அவர் பார்த்தது இல்லை. பின்பு எதற்காக  இப்படிக் கனவு வருகிறது.

பனை உண்மையில் எரிகின்றதா என்று போய்ப் பார்த்து விட்டு வரலாமா என்று தோன்றியது. ஆனால் வீட்டிலிருந்து எப்படிப் போவது என்று யோசனையாக இருந்தது. கண்ணைக் கசக்கித் தேய்த்துப் பார்த்தபோதும் தெரு தென்படவில்லை.

பகலிலாவது லேசாகப் புகைமூட்டம் போலப் பார்வை யிருக்கிறது. இரவில் எதுவுமில்லை. வெளிச்சத்தின் ஒரு துளிக்கூட அவர் கண்ணில் சேகரமாகியிருக்கவில்லை என்பது வேதனை தருவதாகவிருந்தது.

ஆத்திரத்துடன் அவர் தன் பலவீனத்தை ஏற்றுக்கொள்ள மறுத்து தெருவில் கோலை ஊன்றி நடந்து இரண்டு மூன்று அடி சென்றபோது எதன்மீதோ மோதி விழுந்தார். என்ன பொருள் அது என்று தெரிய வில்லை. உலகம் மிகவும் சுருங்கிக்கொண்டுவிட்டது என்று ஆத்திரமாக வந்தது. விழுந்த இடத்திலிருந்து எழுந்துகொள்ள முடியவில்லை. அப்படியே சுருண்டுகொண்டு படுத்துக்கொண்டார்.

பனை எரிந்துகொண்டிருக்கிறது. பனை எரிந்துகொண்டிருக்கிறது என்று அவராக அரற்றிக்கொள்ளத் துவங்கினார். அதைக் கேட்கப்

பின்னிரவில் யாருமேயில்லை.

விடிகாலையின் போது எருமை மாடுகளைக் கறவைக்கு ஓட்டிப் போன முத்தையாலு அவர் தெருவில் விழுந்து கிடப்பதைப் பார்த்து கைத்தாங்கலாகக் கூட்டி வந்து கட்டிலில் படுக்க வைத்துப் போனான். நல்லவேளை கெந்தியம்மாள் முழிக்கவில்லை. ஆனால் பகலானதும் பனையைக் கட்டாயம் ஒரு எட்டுப் போய்ப் பார்த்து வர வேண்டும் போலிருந்தது.

யாரையாவது துணைக்குக் கூட்டிக்கொண்டு போகலாமா என்று நினைத்தார். சொன்னால் சிரிப்பார்கள் முடிஞ்ச வரைக்கும் நாமளே போய் வந்திர வேண்டியதுதான் என்றபடியே அவராக நடக்கத் துவங்கினார். கெந்தியம்மாள் அப்போதுதான் கத்தத் துவங்கினாள்.

**தெ**ருவைக் கடந்து போவது மிகச் சிரமமாக இருந்தது. தண்ணீருக்குள் கண்ணை விழித்துப் பார்ப்பது போலத்தான் வீடுகளும் தெருக்களும் இருந்தன. எந்த வீடு யாருடையது என்று தெரியவில்லை. ஆள் முகங்களும்கூட ஒன்று போலாகிவிட்டது. மரங்கள் செடிகள், வானம் பூமி எல்லாமும் தெளிவற்றுப் போய்விட்டது. கோலை ஊன்றியபடியே அவர் ஊரின் புறவெளிக்கு வந்தபோது வெயிலேறியிருந்தது.

வெட்டவெளி தரும் இதம் வீடுகளுக்குள் இல்லை என்று தோன்றியது. உடலில் பற்றி ஏறும் வெயிலை ஏற்றுக் கொண்டபடியே அவர் ஊன்றுகோலை வலுவாக ஊன்றி நடக்க ஆரம்பித்தார். காற்றேயில்லை. தும்பைச் செடிகளும் காலில் தென்படவில்லை.

நினைவு தெரிந்த நாளிலிருந்து அவர் ஆடுமேய்ப்பதையே வேலை யாகக் கொண்டிருந்தார். சில வருசம் குல்லூரில் ஒரு தோட்டம் குத்தகைக்கு எடுத்துப் பார்த்து வந்தார். அந்த நாட்களில்தான் அவரது மகன் மகள் எல்லாம் பிறந்தார்கள். அப்போது சொந்தமாக இருபது ஆடுகளுக்கும் மேலாக அவரிடமிருந்தன.

குல்லூரிலே இருந்திருக்கலாம். ஆனால் எங்கோ தொலை விற்குப் போன பிறகும் ஊர் அவரை வா வாவெனக் கூப்பிட்டுக்கொண்டே யிருந்தது. அவராகவே குல்லூர் ரெட்டியாரிடம் சொல்லிக்கொண்டு வந்து ஊர் வந்து சேர்ந்து தன் வீட்டைக் கூரைமேய்ந்து திரும்பவும் ஆடு மேய்க்கத் துவங்கினார்.

ஊரைச் சுற்றிலும் மேய்ச்சல் தரை எங்கும் கிடையாது. ஊர் பசுமையே கண்டதில்லை. எப்போதாவது மழைக்குப் பின்பு லேசாக ஈரப்பதம் தட்டுப்படும். மற்ற நாட்களில் வேலிச்செடிகளை மேய்வது தான் ஆடுகளின் வாடிக்கை. சில நாட்களில் கண்மாய்க்குள் உள்ள கருவேல மரத்திலிருந்து காய்களை அறுத்துப் போடுவது உண்டு. மற்ற நேரங்களில் ஆடுகள் தரையை முகர்ந்தபடியே தன்னிஷ்டம் போல மேய்ந்துகொண்டிருக்கும். கிழட்டு யானை போல சூரியன் மிக மெதுவாக நடந்து நடந்து வானைக் கடந்து போகும்.

அவர் ஆடுகளை மேய்ச்சலுக்கு விட்டுவிட்டு கட்டபனை அருகே போய் உட்கார்ந்துகொண்டுவிடுவார். அந்தப் பனை அதிகம் வளர வில்லை. கூந்தலும் அதிகமில்லை. சிறுவர்கள் ஏறி விளையாடுவார்கள். அந்தப் பனையடி அவருக்குப் பிடித்திருந்தது.

தொலைவில் ஆடுகள் கானலை மேய்ந்தபடியே இருக்கும். எப்போ தாவது சிறு சப்தம் கொடுத்தால் போதும். ஆடுகள் தலை தூக்கிப் பார்த்துவிட்டு சப்தமிடும்.

அவர் ஆடுமேய்க்கும் நாட்களில் பறவைகள் வலசை போவதையும், விதவிதமான மேகக் கூட்டங்களைக் கண்டிருக்கிறார். அதுவும் சில மாலை வேளைகளில் ஆற்றில் ஊற்று எடுப்பது போன்று ஆகாசத்தில் பெருகியோடும் மேகங்களைக் காண்பது ஆச்சரியமாக இருக்கும். அதில் போய் நனைந்து குளிக்கலாம் என்று தோன்றும்.

மழைவட்டம் போடும் நாட்களில் மேகங்கள் ஒன்றோடு ஒன்று மோதி சப்தமிடுவதைக் கேட்டிருக்கிறார். மேலக்கண் மாயைத் தாண்டி ஆடுகளை ஓட்டிக்கொண்டு திரும்பி வந்த ஒரு நாளில் எதிர்பாராமல் மழை பிடித்து முதுகில் அடிக்க ஆரம்பித்தது. ஆடுகள் திசைக்கொன்றாய் ஓடத் துவங்கியது. அதுபோன்ற முரட்டு விரல்களை உடைய மழையை அதன் முன்னே அவர் கண்டதே யில்லை.

சட்டுசட்டு என்று முதுகில் அறைந்தபடியே அந்த மழை அவரைத் தள்ளாடச் செய்தது. எதிரில் இருந்த பூமி தெரியாதபடி மழை வலுவானது. அவர் ஆடுகளை விரட்டியபடியே ஓடினார். ஒதுங்கு வதற்கு இடமில்லாத வெட்டவெளியில் அவரும் ஆடுகளும் ஓடிக் கொண்டிருந் தார்கள். மின்னல் வெட்டு பளீர் என்று அடித்து எங்கோ இடி விழுந்தது. நிச்சயம் ஏதாவது ஒரு மரம் பிளந்திருக்கக் கூடும். அவர் மழையைத் தள்ளியபடியே ஓடினார். ஆடுகள் விடாது சப்தமிட்டன.

அவர்கள் ஊரை நெருங்கும் போது ஊரில் ஒரு சொட்டு மழையில்லை. ஆனால் அவரும் ஆடுகளும் நனைந்து ஈரம் சொட்ட வருவதைக் கண்ட கிராமவாசிகள் எந்தப் பக்கம் மழை பெய்யுது என்று ஆர்வத்துடன் விசாரித்தார்கள். மேற்கிலிருந்து மழை வந்து கொண்டிருக்கிறது என்று சொன்ன தும் ஊரே மழையை எதிர் கொள்ளத் தயாராக இருந்தது.

அவர் தன்னுடைய வீடு வந்து சேர்ந்த போது மழைக் காற்று ஊரில் சுற்றியலையத் துவங்கியது. மேகம் இருண்டது. வேலய்யாவின் மகள் இருவரும் பானைகளை மழைத் தண்ணீர் பிடிக்க வெளியே கொண்டுவந்து வைத்தார்கள். இடிச்சப்தம் கேட்டதேயன்றி மழை ஊருக்குள் வரவேயில்லை. ஆளுக்கு ஆள் தெருவில் நின்றபடியே ஆகாசத்தை வெறித்துப் பார்த்தபடியிருந்தனர். அன்று அவர்கள் ஊருக்கு வர வேண்டிய மழை ஓடைப்பட்டியில் பெய்தது.

ஊர்க்காரர்கள் இரவெல்லாம் அதற்காகக் கவலைப்பட் டார்கள். மழையை எதிர்கொண்டு சந்தித்த வேலய்யா மட்டும் மழையின் உன்மத்தம் பற்றி இரவெல்லாம் சொல்லிக் கொண்டிருந்தார். ஏன் மழை அவர்கள் ஊரை விலக்கிப் போனது என்று அவர்களுக்குத் தெரியவில்லை. ஆனால் யாவருக்கும் ஆத்திர ஆத்திரமாக வந்தது. வானத்தோட குரல்வளையைக் கடித்துத் துப்பிரலாம் போலிருக்கு என்று முத்திருளன் சொன்னபோது யாவரும் சேர்ந்து தலையசைத் தார்கள்.

அது நடந்து பல வருசமிருக்கும் ஆனால் அவருக்கு இப்போதுதான் வீட்டை நோக்கி ஓடிவந்தது போலிருந்தது. ஒருவேளை அதுதான் உண்மையோ என்னவோ, தனக்குப் பார்வை தடுமாறியது, கெந்தியம் மாள் கத்தியது எல்லாமும் கனவாக இருக்கக்கூடுமோ என்றும் தோன்றியது.

அவர் தன் உடலைத் தடவிப் பார்த்துக்கொண்டார். அதில் ஈரமில்லை. குனிந்து மண்ணைக் கையில் அள்ளி முகர்ந்து பார்த்தார். அதில் குளிர்ச்சியே இல்லை. மண் புரண்டு நெடுநாட்களாகிவிட்டது போலும். ஆடுமாடுகளின் ஓசை ஊரில் குறைந்துபோய்விட்டது. மொத்தமே ரெண்டு ஜோடிக் காளைகள் இருக்கின்றன. ஆடுகளும்கூட அதிக மில்லை. நாலைந்து எருமைகளும் ரெண்டு பசுவும் இருந்தன. மற்றபடி வாத்து, கௌதாரி போன்றவை இருந்த அடையாளமே யில்லை.

அவர் ஆடு மேய்த்த நாட்களில் கட்டபனைதான் அவரது தங்குமிடம். ஆடுகளை ஓட்டிக்கொண்டு மேய்ச்ச லுக்கு விட்டுவிட்டு கட்டபனை அருகே உட்கார்ந்துகொள் வார். ஆள் உட்காருவதற்கு வாகாக அருகில் ஒரு பாறாங்கல் கிடந்தது. அதில் உட்கார்ந்தபடியே கையில் கோலை வைத்துக்கொண்டு ஏதாவது யோசனை செய்து கொண்டி ருப்பார்.

சில நேரம் அவர் யோசனையைக் கலைப்பது போல மைனா சப்தமிடும். சில நேரம் கரிச்சான் குருவிகள் கடந்துபோகும். மற்றபடி ஆள் நடமாட்டமிருக்காது. சிறார்கள் எப்போதாவது கிளி பிடிப்பதற் காகப் பனையைத் தேடி வருவார்கள். மற்ற வகையில் அவர் ஒற்றை ஆளாக மேயும் ஆடுகளும் வீழ்ந்து கிடக்கும் ஆகாசமுமாக உட்கார்ந்திருப்பார். வெட்டவெளியைப் பார்த்துக்கொண்டிருப்பது விசித்திரமாக இருக்கும். சில நேரம் மனதில் நினைத்துக் கொண்ட உருவங்கள் வெட்டவெளியில் நடப்பது போலவே இருக்கும்.

அந்தப் பனைக்கு அருகாமையில் பாம்பு கடித்து செத்துப் போன சௌடியின் ஞாபகம் வரும். மூணு பிள்ளைகளின் தாய். தும்பைச் செடியின் ஊடாக வாயில் நுரை தள்ள விழுந்து கிடந்தாள். வேலய்யாதான் கண்டு தூக்கிக்கொண்டு வந்து சேர்த்தார். வீடு வருவதற்குள் செத்துப் போயிருந்தாள். அவளது பிள்ளைகள் அழுத அழுகை அப்படியே மனசில் நிற்கிறது. இவ்வளவிற்கும் சௌடியோடு

அவள் உயிரோடு இருந்த நாட்களில் ஒரு வார்த்தை பேசியது கிடையாது.

பல நாட்கள் பனையடியில் உட்கார்ந்து கொண்டிருக்கும் போது சௌடி தும்பைச் செடிகளின் நடுவில் உட்கார்ந்திருப் பது போலவே இருக்கும். அவள் யாரோடும் பேசுவதில்லை. அவராக சில நேரம் தொலைவில் இருந்தபடியே சௌடி உன் பிள்ளைகள் எல்லாம் நல்லா இருக்குது. நிம்மதியா போயி பூமிக்குள்ளே ஒடுங்கு தாயி என்று கையெடுத்துக் கும்பிட்டுச் சொல்லுவார். ஆனால் சலனமே யிருக்காது.

ஆடுகள் தனித்தனியாக மேய்ச்சலில் இருந்தாலும் அதுகளுக்குள் பிரிக்க முடியாத சுபாவமிருந்தது. ஒரு ஆடு சப்தமிட்டாலும் உடனே இன்னொரு ஆடு தலை தூக்கிப் பார்க்கும். அதுவும் அவரது குரலைக் கேட்டுவிட்டால் ஆடுகள் தலையைச் சிலுப்பியபடியே பார்க்கும். அவர் தான் சொல்ல விரும்பிய அத்தனையும் ஆடுகளிடம் தான் சொல்லியிருக்கிறார். தன் பெண்டாட்டியைப் பற்றிய குறைகளை, பிள்ளைகளைப் பற்றிய கவலைகளை எல்லா வற்றையும் ஆடுகளிடம் தான் சொல்லுவார். ஆடுகள் தலையசைத்தபடியே நடந்துகொண்டி ருக்கும்.

இப்போது அவர் சப்தத்திற்குத் திரும்பும் ஆடுகள் அவரோடில்லை. ஆடுகளுக்கும் வயதாகிப் போனால் தன்னைப் போலவே கண் பார்வைபோய்விடுமா என்ன? தான் வளர்த்த ஆடுகளில் ஒன்றுகூட இன்று உயிரோடு இல்லை. யாவும் எவரெவர் பசிக்கோ உணவாகி விட்டது.

தொலைவிலிருந்து பார்த்தபோது பனை தென்பட வில்லை. பனை மட்டுமில்லை. வெட்டவெளியின் பிரமாண்டமும் அடிவானம் வரை விழுந்து கிடக்கும் ஆகாசமும்கூட அவருக்குப் புலப்படவில்லை. அவர் தன் கைகளால் காற்றில் தடவியபடியே முகர்ந்து பார்த்தார். காற்றிலும் ஈரமில்லை.

கலங்கலாகக் காட்சிகள் தெரிந்தன. தடுமாறி நடந்தபடியே அவர் பனையின் அருகாமைக்குப் போனபோது அது சலனமற்று நின்றிருந்தது. கட்டபனை அருகே ஆட்கள் வருவதேயில்லை. ஆடு மேய்ப்பது முற்றிலுமாக நின்று போன பிறகு அங்கே வருவதற்கு யார் இருக்கிறார்கள். அவர் தன் கைகளால் பனையைத் தடவிப் பார்த்தார்.

பனை எரியவில்லை. தனக்கு வந்தது வெறும்கனவு என்று தோன்றியது. அவர் தான் வழக்கமாக உட்காரும் பாறை எங்கே யிருக்கிறது என்று கைக்கோலால் தடவிப் பார்த்தார். அந்தப்பாறை காணவில்லை. யாரோ பெயர்த்துக் கொண்டுபோய்விட்டார்கள். தும்பைச் செடிகளின் நடுவே இப்போதும் சௌடி உட்கார்ந்திருக்கக் கூடுமோ என்ற ஆசையில் சௌடி சௌடி என்று அழைத்துப் பார்த்தார். காற்று அவர் குரலை அடித்துச் சிதறியது.

பனை எரியவில்லை என்றபோதும் அவர் மனதின் ஆதங்கம் அடங்கவேயில்லை. அவர் மனது அதை நம்ப மறுத்து பனை எரியுது பனை எரியுது என்று சொல்லிக்கொண்டேயிருந்தது. அவர் பனையைக் கட்டிக்கொண்டு காதை உன்னிப்பாக வைத்துக் கேட்டார். வயசாளியின் மூச்சிரைப்பைப் போல ஒரு சப்தம் கேட்பதாகவிருந்தது.

அவர் பனையை அண்ணாந்து பார்த்தார். பனையோலை அறுந்து தொங்கிக்கொண்டிருந்தது. பனையும் காய்ப்பதை நிறுத்திப் பல வருஷமாகிவிட்டது. இனி அதை யார் சீண்டப் போகிறார்கள். அவர் பனையடியில் உட்கார்ந்து கொண்டபடியே கெந்தியம்மாளையும் தன் மகனையும் பற்றி நினைத்துக்கொள்ளத் துவங்கினார்.

தன் சாவோடு அவர்களுக்கு இந்த ஊரின் பந்தம் முடிந்து போய்விடும். அதன் பிறகு ஏதாவது ஒரு நகரத்தில் கூலி வேலை செய்து பிழைக்கப் போய்விடுவார்கள். இந்த ஊரும் பனையும் ஆடுகளும் மேகங்களும் எதுவும் நினைப் பில் இருக்காது. தன்னையும் அப்படியே மறந்து போய்விடு வார்கள். அதுவும் நல்லதுதான். நினைத்துக் கொள்ளும்படி யாக தான் என்ன செய்துவிட்டேன்.

நகரத்தில் பனைகள் இருக்குமா என்று தெரியாது. தன்னைப் போல ஆடு மேய்க்கின்றவர்கள் நகரில் இருப்பார் களா? நகரில் ஆடுகள் இருக்குமா? அவை மேய்க்கப்பட வேண்டுமா? ஒருவேளை நகரிலும் மழைகள் இல்லாமல் ஆடுகள் தாகமிகுதியால் அலைய வேண்டுமா? நகரில் உள்ள பனைகளும் பற்றி எரியத் துவங்குமா?

ஏதேதோ யோசனையாக வந்துகொண்டிருந்தது.

திடீரென ஊரில் எத்தனை சேவல்கள் இருக்கின்றன, ஒன்றிரண்டைக்கூட கண்ணில் காணவேயில்லையே என்று பட்டது. தான் பார்த்த மனிதர்கள். தன்னோடு ஆடுமேய்த்தவர்கள், தனக்குக் கஞ்சித்தண்ணி வார்த்த பொம்பளைகள் அத்தனையும் அழிந்து மண்ணுக்குள் போய்விட்டார்கள். அது எத்தனை பேர் ஞாபகத்தில் இருக்கும்.

தானும் அழிந்து மண்ணாகிப் போனால் நிச்சயம் ஒரு தும்பைச் செடியாகிவிடக்கூடும். ஆனால் அதை மேய்வதற்கு ஆடுகள் இருக்குமா? தும்பைப் பூவை இப்போது யாராவது நின்று முகர்ந்து அதில் உள்ள தேனை நாவில் ருசித்துப் பார்க்கிறார்களா என்ன?

தும்பைச் செடியானாலும் தனித்து இருந்து ஆகாசத்தைப் பார்த்துக் கொண்டுதான் இருக்க வேண்டும்

மருமகள் சொல்வது போல நகரத்திலும் மனிதர்கள் வசிக்கத் தானே செய்கிறார்கள். அவர்கள் சந்தோஷத்திற்காக வாவது இந்த ஊரை விட்டுப் போய்விட வேண்டியதுதானே. ஏன் ஊர் தன்னை விட மறுக்கிறது. அவருக்குக் குழப்பமாக இருந்தது.

நெடுநேரம் அவர் அந்த இடத்தில் தலைகவிழ்ந்தபடியே உட்கார்ந்திருந்தார். சௌடியைக் கடித்த பாம்பும் இந்நேரம் செத்துப் போயிருக்

கும் இல்லையா என்று ஏனோ தோணியது. எழுந்து வீட்டை நோக்கிப் போக மனதேயில்லாமல் உட்கார்ந்தேயிருந்தார். அவரை மீறிய துக்கம் பீறிட அழ வேண்டும் போலிருந்தது. ஆனால் அழுவதற்கு அவர் விரும்பாமலிருந்தார். மனதை அடக்கிக்கொண்டு உட்கார்ந்திருந்தார். திடீரென எழுந்து ஆவேசமானவர் போல பனை எரியுதுடா, பனை எரியுது என்று கத்தினார்.

பிறகு ஏதோ சந்நதம் கொண்டவரைப் போலத் தன் கைக்கோலால், இல்லாத ஆடுகளை விரட்டியபடியே அவர் வீட்டை நோக்கி நடக்கத் துவங்கினார். வழி முழுவதும் பனை எரிந்துகொண்டிருக்கிறது என்று அவர் கத்திக்கொண்டே வந்தார். அதை நின்று கேட்பதற்கு வீழ்ந்துகொண்டிருக்கும் சூரியனைத் தவிர அந்த வெட்டவெளியில் யாருமேயில்லை.

# பேசும் மீன்

தனது மனைவியின் பிறந்த நாள் பரிசாக யாருக்குமே கிடைக்காத அதிசயமான பேசும் மீன் ஒன்றை வாங்கி வந்தான் கணவன்.

அந்த மீன் உலகின் ரகசியம் யாவும் அறிந்தது. ஏழு கடலுக்கு அப்பால் பிடிக்கப்பட்டது. அதைப் போல வேறொரு மீன் கிடையாது. அதன் குரல் இசை போன்றது என்றான் விற்பனையாளன்.

வீட்டிற்கு வந்தவுடன் கணவனும் மனைவியும் போட்டி போட்டுக் கொண்டு மீனின் நிறத்தை, அழகை ரசித்தார்கள்.

ஆனால் அந்த மீனுடன் யார் முதலில் பேசுவது என்பதில் கணவன் மனைவி இருவருக்கும் சண்டை வந்தது.

வாங்கி வந்தவன் தான் என்பதால் முதலில் தன்னோடு மீன் பேச வேண்டும் என்றான் கணவன். அவளோ தனக்காக வாங்கி வரப்பட்ட மீனோடு தான் பேசுவதே சரி என்றாள்.

வாக்குவாதம் முற்றியது.

ஒருவரையொருவர் மிக மோசமாகத் திட்டிக்கொண்டார்கள். அவர்களுக்குள் பேச்சுவார்த்தையில்லை.

உலகின் அதிசயமான பேசும் மீன் யாரும் தன்னோடு பேசாமல் இருப்பது கண்டு சோர்வடையத் துவங்கியது. அதன் உடலில் மிளர்ந்த தங்கநிறம் கருமையாகியது. அதை அந்த ஆணும் கவனித்தான், பெண்ணும் கவனித்தாள். இந்த மீனுக்கு இவ்வளவு அகம்பாவம் கூடாது என்று திட்டிவிட்டு அலுவலகம் சென்றார்கள். மீனைப்பற்றிய நினைவுகள் எதுவுமின்றி வேலை செய்தார்கள். உணவருந்தினார்கள். அவரவர் வேலை அவரவர் உலகம் என்றிருந்தார்கள்.

பேசத்தெரிந்த மீன் யாரோடு பேசுவது என்று புரியாமல் பகலிரவாக அந்த மீன் தொட்டிக்குள் சலனமற்றுக் கிடந்தது. எதையும் சாப்பிட மறுத்தது. ஒரு வாரத்தில் மௌனம் தாளாமல் மீன் செத்தும் போனது.

வீடு திரும்பிய இரவில் மனைவி சொன்னாள், பேசும் மீன் செத்துப் போய்விட்டது என்று. கணவனும்சொன்னான் ஆமாம் செத்துப் போய்விட்டது, அதைத் தூக்கி வெளியே எறிந்துவிடு என்று.

யார் செத்த மீனை எறிவது என்று அவர்களுக்குள் திரும்பவும் சண்டை துவங்கியது. அடுத்த இரண்டு நாள் அவர்கள் பேசிக்கொள்ள வில்லை. செத்துப்போன மீனை வேலைக்கார பெண் பூனைக்குத் தூக்கி எறிந்தாள்.

இரண்டு வாரங்களின் பிறகு அவர்களின் திருமண நாள் வந்தது. உலகில் யாரிடமும் இல்லாத அதிசயமான பொருள் ஒன்றை வாங்குவதைப் பற்றி கணவனும் மனைவியும் இரவெல்லாம் திட்டமிடத் துவங்கினார்கள். கனவு கண்டார்கள். கடை கடையாக ஏறி இறங்கி பார்வையிட்டார்கள். பிறகு இருவரும் அலுத்துக் கொண்டார்கள்.

அதிசயமானது என்று உலகில் எதுவுமேயில்லை, என்ன வாழ்க்கையிது.

# புத்தன் இறங்காத குளம்

கபிலவஸ்துவின் அரண்மனைக்கு வெளியேயிருந்த அந்தக் குளம் பற்றி யாரும் அதிகம் அறிந்திருக்கவில்லை. ஆனால் சித்தார்த்தனுக்கு அந்தக் குளம் தொலைவில் விரிந்திருக்கும் கனவைப் போலவே சிறுவயதிலிருந்து தெரிந்துகொண்டி ருந்தது. தனது அரண்மனையின் மேல்தளத்தில் நின்றபடியே கிழக்கே பார்க்கும்போது அந்தக் குளமும் அதன் கரை யிலிருந்த மரங்களும் பறந்துகொண்டிருக்கும் சிறு பறவை களின் இயக்கமும் கண்ணிற்குப் புலனாகும்.

அரண்மனைக்குள் பறவைகள் வருவதில்லை. கூண்டில் அடைத்து வைக்கப்பட்ட பறவைகள் நாளுக்கு நாள் தன் இயல்பை மறந்து விடுகின்றன. அதன் குரலில் பொய்மையேறிவிடுகிறது. சிரிக்கப் பழகிய மனிதர்களைப் போல அதுவும் போலியானதொரு தொனியைக் கொண்டுவிடுகிறது.

சித்தார்த்தன் தனது ஏழாவது வயதின் ஒரு மாலை வேளையில் அந்தக் குளத்தை முதன்முதலாகப் பார்த்தான். மழைக்காலத்தின் பின்மாலையது. இருட்டிக்கொண்டிருக்கும் ஆகாசமும் எங்கோ பெய்யும் மழையின் வாசனையும் தொலைதூரத்து இடியோசையும் மிரட்சிகொள்ளச்செய்யும் போது காற்றின் நெருக்கத்தை வேண்டி அவன் மேல் தளத்திற்கு ஓடினான்.

அவனைத் துரத்தி வந்த தாதி மழைக்காற்றில் தன்னை மறந்து அலையும் தன் கேசத்தை ஒதுக்கிவிட்டபடியே கருத்த மேகங்கள் அடர்ந்த வானைப் பார்த்தபடி நின்றிருந் தாள். திறந்து கிடந்த மேல்தளத்தில் ஓடிக்கொண்டே யிருந்தான் சித்தார்த்தன்.

அப்போது காற்றின் அலைக்கழிப்பில் சுழன்று கொண்டி ருக்கும் விருட்சமும் அதன் அருகாமையில் தாமரை பூத்து நிரம்பிய குளமும் கண்ணில் பட்டது. சித்தார்த்தன் தன்னை மறந்தவனைப் போல அந்தக் குளத்தை வியப்போடு பார்த்துக்கொண்டிருந்தான். கிழக்கி லிருந்த மின்னல் வெட்டு ஒரு நிமிஷம் பூமியெங்கும் வெளிச்சத்தை வாறி இறைத்தது. தாதி தன்னிலை உணர்ந்தவளைப் போல சித்தார்த் தனை அழைத்தாள். அவனோ பூவில் வந்து அமர்ந்திருக்கும் பட்டாம்

பூச்சியொன்றைக் காண்பதுபோல குளத்தினைக் பார்த்துக் கொண்டிருந்தான்.

தாதி ஓடிவந்து அணைத்துக்கொண்டு மழை வரப் போகிறது இளவரசே.. வந்துவிடுங்கள் என்று உரிமையோடு தூக்கியபோது அவன் தன் விரல்களால் குளத்தைக் காட்டினான். மழைக்கு முன்பாக தன் கூடு திரும்பிவிட முயன்ற பறவையொன்று அவசரமாக தன்னிருப் பிடம் திரும்பிக்கொண்டிருந்தது. அவள் தன் இருகைகளால் அவனைத் தூக்கிக்கொண்டு மேல்தளத்திலிருந்து கீழே ஓடத் துவங்கினாள். குளம் பார்வையிலிருந்து நழுவிப் போகத் துவங்கியது.

அவர்கள் அரண்மனையின் உள்ளே வருவதற்குள் மழை பெய்யத் துவங்கியிருந்தது. மழையில் குளம் என்ன செய்து கொண்டிருக்கும்? தன் மேல் பெய்யும் ஒவ்வொரு துளியை யும் குளம் அனுமதிக்கிறதா என்ன? தாமரைகள் மழை பெய்யும்போது நடுங்கிக்கொண்டிருக்குமா இல்லை குதூகலம் அடையுமா? இப்படியாக அவன் மனது எண்ணிக் கையற்ற கேள்விகளை ஆகாசத்தில் வீசி எறிந்து விளையாடத் துவங்கியது.

மழை வெறித்த பிறகு அவன் தாதியிடம் அந்தக் குளத்தைப் பற்றி ஏதேதோ கேட்டுக்கொண்டேயிருந்தான்.

அது ஒன்றும் அவ்வளவு அதிசயப்படவேண்டிய குள மில்லை என்று தாதி மறுதலித்தபடியே அவளுக்குத் தெரிந்த நன்னெறிக் கதையைச் சொல்லத் துவங்கினாள். ஆனால் சித்தார்த்தன் மனதில் அந்தக் குளத்தின் சித்திரம் மறையவே யில்லை. அவன் தானாக கற்பனை செய்யத் துவங்கினான்.

ஒரு கொக்கு பறந்துபோவதுபோல ஏன் இந்த குளம் பறந்து போவதில்லை. தன் இருப்பிடத்திலேதான் குளங்கள் என்றுமே இருக்கும் என்பது துயரமானதில்லை. குளம் வளருமா இல்லை அப்படியேதான் இருக்குமா என்று அவன் மனது எதையெதையோ கற்பனை செய்துகொண்டது. அன்று அவன் உறக்கத்தில் குளத்திலிருந்த தாமரைகள் எதையோ முணுமுணுத்துக்கொண்டிருப்பதைக் கேட்டுக் கொண்டிருந்தான். ஒவ்வொரு தாமரையும் தன்னிடம் ஏதோவொரு ரகசியத்தைக் கொண்டிருக்கிறது என்று நம்பத் துவங்கினான்.

மறுநாளின் அதிகாலை சூரியன் உதயமாவதற்கு முன் பாகவே அரண்மனையின் மேல்தளத்திற்குச் சென்று குளம் தெரிகிறதா என்று பார்த்துக்கொண்டிருந்தான் சித்தார்த்தன். இரவில் பெய்த மழையில் வானம் இன்னும் இருண்டு கிடந்தது. எங்கும் தண்ணீர் கட்டியிருப்ப தால் நீர்ப்பூச்சிகளின் சப்தமும் அறியாதவொரு மணமும் வெளிப் பட்டுக்கொண்டிருந்தது.

குளிரை உணர்ந்தபடியே இருட்டினுள் குளம் என்ன செய்து கொண்டிருக்கும் என்று யோசித்துக்கொண்டிருந்தான். ஒளி எங்கிருந்தோ கசிந்து வரத்துவங்கி மெல்ல வானில் பிரகாசம் ஓடி

விரியத் துவங்கியது. மரங்களின் இலை களிலிருந்த இருட்டு அவசரமாக இறங்கியோடி மறைந்தது. உலகம் பாதரசம் போல மினுங்கத் துவங்கியது.

அதிகாலையின் மென்னொளியில் புலனாகும் அக் குளத்தை சித்தார்த்தன் நெடுநேரம் பார்த்துக்கொண்டிருந் தான். குளம் அப்போது தான் விழித்துக்கொண்ட பூமியின் கண்ணைப் போலிருந்தது. குளம் ஒரு கண் என்று தோணியதும் அவன் உற்சாகம் அடைந்தவனைப் போல அந்தக் கண் எதைப் பார்த்துக்கொண்டிருக்கும்? அதன் மறுகண் எங்கேயிருக்கும் என்று அவனாகவே கேட்டுக்கொண்டான்.

அதிகாலையின் காற்று மெதுவாக வானிலிருந்து இறங்கி சிறு செடிகளைத் தாண்டி மரங்களின் மீது ஏறி இறங்கிக் கடந்துசென்று கொண்டிருந்தது. குளம் ஒரு விந்தை என்று அவன் மனது சொன்னது. ஆச்சரியம் அடங்காமல் அவன் தன் கைகளை நீட்டி குளத்தைத் தன் அருகில் வரும்படியாக அழைத்தான். மரங்களுடன் குளம் அவனைத் திரும்பிப் பார்ப்பது போன்றிருந்தது.

அவன் சப்தமாக குளத்தைத் தன் அருகில் வந்துவிடும் படியாகக் கத்தினான். அந்தக் குரல் கேட்டு அரண்மனையில் காவலிருந்த சேவகர்கள் அண்ணாந்து பார்த்தார்கள். சித்தார்த்தன் ஈரத்தில் ஒடுங்கிய உடலோடு அரண்மனையின் உயரத்தில் நின்றுகொண்டி ருந்தான். எப்படியாவது ஒருமுறை அந்தக் குளத்தை நெருங்கிச் சென்று பார்த்துவிட வேண்டும் என்று விருப்பம் கொண்டான். ஆனால் தாதிகள் அதை மன்னர் அனுமதிக்க மாட்டார் என்பதால் அவனை அரண்மனையை விட்டு வெளியே செல்ல அனுமதிக்க மறுத்தார்கள்.

கடந்து செல்லும் பறவைகளின் வழியாகவும் காற்றின் ஊடாகவும் குளம் அசைந்துகொண்டேயிருப்பதை உணர்ந்த படியே இருந்தான். தாதிகளில் ஒருத்தி ஒருநாள் அவனுக்காகக் குளத்திலிருந்து தாமரை யொன்றைப் பறித்துவந்து இது நீங்கள் ஆசைப்பட்டது, குளத்தில் பூத்தது என்றாள். சித்தார்த்தனோ தான் காணவிரும்பியது தாமரையும் அறியாத குளத்தை என்று மறுத்தான். அதுபோலவே வேலைக்காரிகள் சில வேளைகளில் குளக்கரையிலிருந்த விருட்சத்தின் உதிர்ந்த பழங் களையும் பசுமையான சிறு புல்லையும் உதிர்ந்து கிடக்கும் பறவைகளின் இறகுகளையும் கொண்டுவந்து காட்டும்போதெல்லாம் குளத்தோடு நெருங்கியிருந்தாலும் இவையும் குளமறியாதவையே என்று அவன் மறுதலித்தான்.

அரண்மனையின் அறைகளுக்குள்ளாக அடைபட்டு வளர்க்கப்பட்ட போதும் நாளுக்கு நாள் அவனது எண்ணங்கள் குளத்தையே சுற்றிக் கொண்டிருந்தன. சூரியன் கடந்து போகும்போதும், நீர்ப்பூச்சிகள் நடந்து கடக்கையிலும், நட்சத்திரம் ஒளிந்து தோன்றும்போதும் அவன் குளத்தின் கரையில் நிற்கின்றவனாகவே தன்னை உணர்ந்தான்.

அவன் நினைவை மாற்றுவதற்காக வேடிக்கை காட்டும் குள்ளர்

களையும் ஜாலவித்தை செய்பவர்களையும் அழைத்து வந்திருந்தார்கள். சித்தார்த்தன் குளம் தொலைவிலிருந்து நகர்ந்து தன் அரண்மனையின் உள்ளே நுழைந்து அங்கிருப்பவர் ஒவ்வொருவர் கவனத்திலும் புகுந்து விட்டதைப் பற்றி சிரித்தபடியே மெல்ல தன் நினைவில் குளத்தை தனித்து விட்டு முன்புபோல இயல்பாகத் துவங்கினான்.

ஆனால் யாருமறியாமல் அவன் மனது பறவைகளும் மரத்தின் நிழலும் தவிர வேறு நடமாட்டம் அறியாத குளத்தின் மீதான ஏக்கத்தை வளர்த்துக்கொண்டேயிருந்தது. அதைப்பற்றிப் பேசிக் கொள்ளகூட அந்த அரண்மனையில் யாருமில்லை. ஏதோவொரு நாளின் கனவில் குளம் அவன் காலடியில் விரிந்து கிடந்தது. அவன் தாமரைக் கொடிகள் சிக்கிக்கொள்ள குளத்தினுள் மூழ்கிக்கிடப்பதை போல உணர்ந்தான். ஆனால் விடிகாலையில் எப்போதும் போல தன் இருப்பிடம் மாறாமல் அதே நிலையில் அப்படியே இருந்தது குளம்.

காலம் மரங்களில் பூக்களையும் பூமியில் மழையையும் காற்றில் நறுமணத்தையும் மாறி மாறி தோன்றவும் மறையவும் செய்துகொண்டிருந்தது. அரக்கு பற்றி எரிவதுபோல பிசுபிசுப் போடு காமம் உடலில் ஒட்டிக்கொள்ளத் துவங்கிய வயதில் அவன் யசோதாவை மணம் செய்துகொண்டான். அவள் உடலின் ஊடாக அவனது காமம் ஒரு மீனைப் போல தாவி தாவி நீந்தி மறைந்தது. அவர்கள் உலகம் மறந்து முயங்கிக் கிடந்தார்கள்.

ஒரு மாலை நேரத்தில் மாயாவிடம் அவன் தனக்கு பால்யத்திலிருந்து விருப்பமான குளத்தை விரல் நீட்டிக் காட்டினான். அவள் குளத்தை கவனம் கொள்ளாமல் அதன் கரையிலிருக்கும் மரத்தில் ஊஞ்சல் கட்டி ஆடலாம் இல்லையா என்று சொல்லிக்கொண்டிருந்தாள்.

சித்தார்த்தன் அவளுக்கு மறுமொழி சொல்லாமல் ஆச்சரியம் கலையாத அந்தக் குளத்தைப் பார்த்துக்கொண்டிருந்தான். பால்யத்தில் பார்க்காத பறவைகள் இப்போது குளக்கரையில் தரையிறங்கிக் கொண்டிருந்தன. மேகம் எப்போதும்போல தன்னை குளத்தின் நீரில் பார்த்து மயங்கிப் போயிருந்தது. எவ்வளவு காலம் தனிமையிலே இருக்கிறது என்று சொல்லிக்கொண்டான். யசோதா அவன் காதில் ஏதோ சொல்லிச் சிரித்தாள். சித்தார்த்தன் மனது அவளது சிரிப்பில் தொற்றிக்கொண்டு தற்காலிகமாகக் குளத்தை மறந்தது.

அன்றிரவு அவன் யசோதாவோடு கூடும்போது தான் ஒரு குளத்தில் பிரவேசிப்பது போலவே உணர்ந்தான். நேற்றுவரை அறிந்த பெண்உடலைப் போல் இல்லாமல் நீரின் பரவசமும் ஈர்ப்பும் கொண்டதாக அவள் உடல் வழிவிட்டது. யசோதாவின் உந்திச்சுழி ஒரு குளத்தைப் போலச் சுழல்வதைப் போலிருந்தது.

அவன் பெண் உடலினுள் மூழ்கத் துவங்கினான். பறவை கள் அறியாத, தாமரையின் வேர் கண்டிராத குளத்தின் அடியாழத்தினுள்

மெல்லிய வெளிச்சமொன்று கசிந்துகொண்டிருந்ததைக் கண்டான். அப்போது தன்னிருப்பு ஒரு நீர்ப்பூச்சி ஊர்ந்து செல்வது போன்றிருந்தது. காமம் கரைகள் இல்லாத குளம் அதன் ஆழம் முடிவற்றது என்று முணுமுணுத்துக்கொண்டான். யசோதாவோ காமம் கயிறு இல்லாமல் அசைந்தாடும் ஊஞ்சல் என்று முணுமுணுத்தாள். இருவரும் அர்த்தமற்ற சொற்களால் தங்கள் நெருக்கத்தை வெளிப்படுத்திக் கொண்டிருந்தார்கள்.

புணர்ச்சிக்குப்பிறகான நிலையில் படுக்கையில் கிடந்த போது சித்தார்த்தன் மனம் நெகிழ்ந்திருந்தது. யசோதா படுக்கையில் கேசம் விரிய உறங்கிக் கிடந்தாள். அறையில் இருந்த விளக்கின் வெளிச்சம் அசைந்தபடியே இருந்தது. கலைந்து கிடந்த தனது வஸ்திரங்களை எடுத்து இடுப்பில் கட்டிக்கொண்டு அவன் மாளிகையின் மேல் தளத்திற்கு வந்து நின்றான்.

ஆகாசத்தில் நட்சத்திரங்கள் நிரம்பியிருந்தன. உலகின் கண்ணாக இருக்கிறது குளம். அதன் உள்ளே தாமரைகள் மிதந்துகொண்டிருப்பது போலதான் நாமிருக்கிறோமா என்று தோன்றியது. அவன் இருட்டினுள் தன் கண்களைத் துழாவியபடியே நின்றுகொண்டிருந்தான். காவல் வீரர்களில் ஒருவன் அங்குமிங்கும் நடந்துகொண்டிருந்தான். குளம் தன்னை எங்கிருந்தோ உற்று நோக்கிக்கொண்டிருப்பதைப் போலவே இருந்தது.

அதன் பின்பு அவன் உடல் வேட்கையின்போது மட்டும் அந்தக் குளத்தை நினைவில் கொள்வதும் மற்ற நேரங்களில் தவிர்த்து விடுவதுமாக இருந்தான். ராகுலன் பிறந்து அரண்மனையே கேளிக்கை அடைந்தபோது அவன் மனது வெளிப்படுத்த முடியாத துக்க மொன்றில் அப்பிக் கிடந்தது.

எப்போதுமிருக்கக்கூடியது குளம். அதில் தோன்றி மறையும் காட்சிகளுக்கும் குளத்திற்கும் எந்தச் சம்பந்தமு மில்லை. குளம் ஆகாசத்தையும் பூமியையும் பிரித்துப் பார்ப்பதில்லை. மரத்தின் கிளைகள் தன் மீது ஊர்வதற்கும் நட்சத்திரம் மிதந்து செல்வதற்கும் பேதம் காண்பதில்லை. அவை யாவும்விட குளத்திற்கு மூப்பில்லை, நினைவுகளால் அது தொல்லையுறுவதில்லை என்று ஏதேதோ குழப்பம் கொண்டிருந்தான்.

அரண்மனையிலிருந்து வெளியேறி அந்தக் குளத்தை நோக்கிச் செல்வதற்கு யாரும் அவனைத் தடுக்காத போதும் அவன் அருகில் செல்வதற்குத் தயக்கமும் நடுக்கமும் கொண்டவனாக உருமாறி யிருந்தான்

இவ்வளவுதானா வாழ்க்கை என்று அவனுக்குள் தோன்றிக் கொண்டேயிருந்தது. பகலும் இரவும் காற்றும் மழையும் வெளிச்சமும் இருளும் யாவும் கடந்து தீராத தனிமையில் எப்போதுமிருந்தது குளம். சித்தார்த்தன் தன் குழந்தையை நெருங்கிச் சென்று பார்க்கும் போது அது தன் நிழல் குளத்தில் தெரிவதைக் காண்பதுபோலத்தான்

என்று உணர்ந்தான். அரண்மனையின் அருகிலிருந்தும் தான் நெருங்கிப் போக முடியாத குளத்தைப் போன்றதுதான் மனித வாழ்வும் என்று அவனுக்குள் புரியத் துவங்கியது.

அவன் அரண்மனையிலிருந்து வெளியேறுவதற்கான நேரத்திற்காகக் காத்துக்கொண்டிருந்தான். யாரும் அறியாத இருளில் அவன் அரண் மனையைத் துறந்து செல்கையில் அவன் நினைவுகளில் மனைவியோ குழந்தையோ, தான் பிறந்து வளர்ந்த அரண்மனையோ எதுவுமில்லை. குளம் ஒன்று மட்டும் அவன் நினைவில் புதையுண்டதாக கூடவே சென்றுகொண்டிருந்தது. அவன் தன் நினைவுகளில் இருந்தும் இருப்பு குறித்த தனது மனப்பதிவிலிருந்தும் தன்னை விடுவித்துக்கொள்ளத் துவங்கினான்.

உடலை விட்டு மனம் தனித்து இயங்கத் துவங்கிய நிமிஷங்களில் அவன் தானொரு மரத்தின் இலையைப் போல அசைந்து கொண்டி ருப்பதாகவும், சில வேளைகளில் தானே ஒரு தவளையைப் போல பாதி மூடிய கண்களால் உலகைக் கண்டுகொண்டிருப்பதைப் போலவும், எப்போதா வது ஒரு கொக்கைப் போல ஆகாசத்தில் பறந்து அலைவ தாகவும் உணரத் துவங்கினான். போதி விருட்சம் அவனுக்குள்ளிருந்த தன்னிருப்பு குறித்த முன் எண்ணங்களை அழித்து எழுதத் துவங்கியது. அதிகாலை வெளிச்சத்தில் அவன் கண்ட குளத்தைப் போல உலகம் பற்றிய புரிதல் அவனுக்குள் துல்லியமாகப் புலப்படத் துவங்கியது.

சித்தார்த்தன் மறைந்து புத்தன் தோன்றத் துவங்கிய பிறகு அவனிடம் கடந்த காலத்தின் சுவடுகளும் வேதனை களும் அற்றுப் போயிருந்தன. எதிர்காலம் குறித்த அச்சமும் தயக்கமும் அவனை நெருங்காமலுமிருந்தன. அவன் ஒரு புல்லைப் போல மெலிதாக தன் இருப்பை அந்தந்த நிமிஷங்களில் அசைவதும் அடங்குவதுமாக வைத்துக் கொண்டிருந்தான்.

பின் ஏதேதோ பாதைகளில் தனித்தும் சீடர்களோடும் நடந்து திரிகையில் அவன் எண்ணிக்கையற்ற நிலக்காட்சி களைக் கடந்து சென்றான். எந்தக் காட்சியும் அவனை நனைக்கவில்லை. கடந்து செல்லும் வெளிச்சத்தைப் போல அவன் வந்த சுவடின்றி ஒவ்வொரு இடத்தையும் கடந்து சென்றுகொண்டேயிருந்தான். எப்போதாவது சில நாட்களில் சீடர்கள் நினைவுபடுத்தும்போது தன் பால்யவயதையும் தன்னோடு சேர்ந்து வாழ்ந்தவர்களையும் பற்றி ஒன்றிரண்டு நிமிஷங்கள் பேசிப் பகிர்ந்துகொள்வதோடு அதைப் பற்றிய எவ்வித சுய நினைவு களுமில்லாமல் இருந்தான் புத்தன்.

மூப்பு அவனையும் பற்றிக்கொண்ட காலத்தில் பாடலம் என்ற நகரை நோக்கிச் செல்ல ஆற்றைக் கடந்து படகில் சென்றுகொண்டிருக் கையில் அவன் மனதில் தான் இறங்காத குளத்தைப் பற்றிய நினைவு திடீரெனப் பொங்கி வழியத் துவங்கியது. படகு ஆற்றில் செல்லச் செல்ல தான் ஒருபோதும் அந்தக் குளத்தை நெருங்கிச்

செல்ல முடிந்ததேயில்லை என்பதை அவன் மிக நெருக்கமாக உணரத் துவங்கினான். அவன் முகத்தில் பலரும் அறியும்படியாக துக்கம் வெளிப்படத் துவங்கியது. ஒரு நிமிஷ நேரம் புத்தன் அந்த துக்கத்தில் தன்னை அமிழ விட்டான்.

பின்பு தனக்குத்தானே சொல்லிக்கொண்டான். எப்போதும் யாரும் இறங்காமலும் என்றும் தனிமையிலே இருக்கக் கூடிய குளம் ஒன்று பூமியில் இருந்துகொண்டேதானிருக்கு மில்லையா? சீடர்கள் அந்த வார்த்தையை அதன் பூர்வம் அறியாமல் ஆமோதித்தபடியே ஏற்றுக் கொண்டார்கள்.

உரையாடல்களுக்கும் நினைவுகளுக்கும் அப்பால் அப் போதும் எங்கோ வெகு தொலைவில் புதர் மண்டிப்போய் ஆகாசம் எட்டிப் பார்க்கும் நீர்வெளியோடு புத்தன் இறங்காத குளத்தில் மரத்தின் நிழல் அசைந்துகொண்டுதானிருந்தது.

# இந்த நகரிலும் பறவைகள் இருக்கின்றன

இந்த நகரிலும் பறவைகள் இருக்கின்றன என்பதை, கடந்த மூன் றாண்டுகளாகவே நான் அறியத் துவங்கியிருக்கிறேன். முன்பு கடற் கரையைக் கடந்துசெல்கையில் எப்போதாவது பறவைகள் கடந்து போவதைப் பார்த்திருக்கிறேன். ஆனால் அதன் மீதான என் கவனம் கூடியதில்லை. ஆனால் இந்த மூன்றாண்டிற்குள் நகரில் எங்கெங்கும் எந்தவகைப் பறவைகள் வந்து அடைகின்றன. அதன் குரல் எப்படி யிருக்கும். எந்தத் திசையில் அவை பறந்துபோகின்றன என்பதைக் கவனமாக அறிந்திருக்கிறேன். என்னை இயங்க வைத்துக்கொண்டி ருப்பது இந்தப் பறவைகள்தான். பறவை என்பது எனக்கு வெறும்காட்சிப் பொருள் அல்ல. அது ஒரு இயக்கம். அது ஒரு பரவசம். என்னை முன் நடத்தும் ஒரு உந்துதல்.

பறவைகளைத் தேடி நாங்கள் ஒவ்வொரு நாளின் மாலையிலும் சில மணி நேரங்களாவது நடந்து அலை கிறோம். இந்த நகரிலும் பறவைகள் இருக்கின்றன. அவை எப்போதாவது தன்னை மறந்து சப்தமிடுகின்றன. மிக அரிதாகச் சண்டையிட்டுக் கொள்கின்றன. அந்தக் குரல்கள் இயல்பாக இல்லை. பறவைகள் களிப்பில் சிறகடிப் பதையோ, ஒன்றையொன்று உரசி விளையாடுவதையோ காணவே முடிவதில்லை.

இந்த நகரின் பறவைகள் அலுப்பூட்டத் துவங்கிவிட்டன. அவற்றின் இயந்திரகதியான அசைவுகளும் சிறகடிப்பும் சகித்துக்கொள்ள முடியாத படி ஆகி வருகின்றன. பெரும்பான்மை நேரங்களில் இந்தப் பறவைகளும் சப்தம் ஒடுங்கி மனிதர்களைப் போல சாலை இயக்கத்தை வெறித்த படியே அமர்ந்திருக்கின்றன. கைவீசிக் கலைத்தபோதும் பறவைகளின் நிசப்தம் கலைவதேயில்லை. அரிதாகக் கரையும்போதும் வாகன இரைச் சலிடையே அதன் துருவேறிய குரல்கள் அமுங்கிப் போய்விடுகின்றன.

எனக்கு இதுபோன்ற அரித்துப்போன குரல்கள் தேவையற்றவை. எனக்கு அசலான பறவையின் குரல் வேண்டும். அந்தக் குரல்

வாழை இலையில் உருண்டோடும் தண்ணீரைப் போல நரம்புகளில் ஊர்ந்து செல்ல வேண்டும். கத்தியால் கை நரம்புகளைத் துண்டிக்கும் போது கசிந்து பீறிடும் ரத்தத்தைப்போல வெம்மையாகவும் வலியோடும் பிசுபிசுப்போடும் அவை பீறிட வேண்டும். எனக்குப் பறவை களின் விசித்திரமான குரல்கள் வேண்டும்.

ஏதாவது ஒரு பறவையின் குரலின் வழியாக மட்டுமே என் சுகியின் பேச்சை நான் மீட்டு எடுக்க முடியும். ஆறு வயதைக் கடந்த பின்னும் பேச்சு வராத என் சுகிக்காகப் பறவைகளின் அகவல்கள் வேண்டும். என் கண்கள் கடந்து செல்லும் மரங்களைத் துளையிடு கின்றன. மனம் ஆகாசத்தின் அகண்டவெளியில் சப்தமில்லாது பறக்கும் பறவைகளைப் பின்தொடர்கின்றன. எனக்குப் பறவைகள் வேண்டும். ஓயாது குரலிடும் பறவைகள் வேண்டும்.

இரண்டு கற்கள் உரசப்படுகையில் நெருப்பு பற்றிக் கொள்வது போல ஏதோவொரு பறவையின் குரல் என் மகளின் குரலோடு உரசி சொற்கள் பீறிட வேண்டும். அதுவரை நான் பறவைகளைத் தேடிக்கொண்டேயிருப்பேன். என் மகளின் குரலை மீட்டுத்தரப் போகின்ற ஒரு பறவை இந்த நகரின் ஏதோவொரு மரக்கிளையில் இருக்கக்கூடும். இன்றில்லாமல் போனாலும் நாளை இந்த நகரை நோக்கி வந்துகொண்டிருக்க சாத்தியமுண்டு.

இதற்காகவே ஒவ்வொரு நாளும் மாலை வருவதற்காகவே காத்திருக் கிறேன். தண்ணீரில் கரைந்துகொண்டிருக்கும் உப்பைப் போன்ற பகலின் நிசப்தம் என்னை அழுத்துகிறது. எனது ஆர்வம் ஒடுங்கிக் கொண்டே வருகின்றது. பின் இரவிலான தெருவிளக்கின் நிழல் போல யாருமறியாமல் நாங்கள் இந்த நகரில் அலைந்து கொண்டே யிருக்கிறோம்.

என் சுகி சாலையோரம் நின்றபடியே பறவைகளை அவதானித்துக் கொண்டிருக்கிறாள். பறவையின் கழுத்து அசைந்தபடியே இருக்கின்றது. பறவைகள் ஒரு போதும் சாந்தமடைவதில்லை. பறவைகளின் கண்கள் காட்சிகளை விழுங்கியபடியே இருக்கின்றன. கால்கள் எப்போதும் பறப்ப தற்கான துடிப்பில் பட்டும் படாமலும் நிற்கின்றன. றெக்கை கள் ஒடுங்கியும் அசைந்தும் கொண்டிருக்கின்றன. நிம்மதி யற்றவை பறவைகள்.

பறவைகள் ஒன்றையொன்று பார்த்துக்கொள்வதில்லை. அவை இரவைக் கடந்து போவதற்காக மட்டுமே மரங்களுக்கு வந்துசேர்கின்றன. விடிந்ததும் பகலின் கடைசி நுனிவரை தேடிச் செல்கின்றன. என் நினைவில் வேறு எதுவுமில்லை. பறவைகள், பறவைகள், பறவைகள் மட்டுமே.

**எ**ன் மகள் சுகி ஆறு வருடத்தின் முந்தைய ஒரு பகல் பொழுதில் முதுகுளத்தூரில் உள்ள தனியார் மருத்துவமனையொன்றில் பிறந்தாள்.

அப்போது நான் எனது அலுவலகப் பணி காரணமாக கோட்டயத்திலிருந்தேன். காலை எட்டரை மணிக்கு போன் செய்து வித்யாராணியின் அப்பா தகவலைச் சொன்னார். மதியம் வேலையை முடித்துவிட்டுப் புறப்பட்டு வருவதாகச் சொல்லியபடியே தங்கியிருந்த அறையை விட்டுக் கீழே இறங்கி உணவகத்திற்காக நடந்து சென்றேன்.

நானும் அப்பாவாக ஆகிவிட்டேன் என்பது மனதில் சந்தோஷத்தை உருவாக்கியிருந்தது. ஆனால் எதிர்பார்த்த ஒன்றுதானே நடந்திருக்கிறது என்பது போன்று உற்சாகம் அடங்கியே இருந்தது. சாலையைக் கடந்து போகின்ற ஆண்களை உற்றுக் கவனிக்கத் துவங்கினேன். அப்பாவாக ஆனவர்கள், என்றாவது அப்பாவாக ஆகப் போகின்றவர்கள் என்று இரண்டாகப் பிரிந்து தென்படத் துவங்கியது.

அத்தோடு என் வயதை ஒத்தவர்கள், அதைக் கடந்தவர்கள், வயதானவர்கள் ஒவ்வொருவரைக் காணும்போது இவர்கள் யாருடைய அப்பா, எத்தனை பிள்ளைகளை இவர்கள் உருவாக்கியிருப்பார்கள் என்று வியப்பான எண்ணங்கள் உருவாகின. அத்தோடு தாங்கள் ஒரு அப்பா என்பதற்கான எந்தச் சுவடும் இன்றி அவர்கள் தன்னியல்பாகப் போவதும் வருவதும் எனக்குப் பிடித்திருந்தது.

அப்பாக்களின் உலகம் மிகப் பெரியது. அதற்குள்ளாகத் தான் என் அப்பா இருக்கிறார். என் அண்ணன் இருக்கிறார். என் தாத்தா இருக்கிறார். நான் அறிந்த அத்தனை ஆண்களும் அப்பாக்கள் உலகின் பிரதிநிதிகள்தானே. இதில் நானும் இன்றிலிருந்து ஒரு ஆள் என்பது மனதில் களிப்பை உருவாக்கியது.

உணவகத்தில் இனிப்பு தருவித்துத் தனியே சாப்பிட்ட படியே சுகியைப் பற்றி நினைக்க ஆரம்பித்தேன், திருமணமான சில வாரங்களிலே வித்யாராணி கர்ப்பமாகிவிட்டாள். அதை உறுதி செய்ய மருத்துவரிடம் சென்று வந்த மறுநாளே அவள் பிறக்கப் போகும் குழந்தையின் பெயரை முடிவு செய்துவிட்டாள்.

சுகி என்னும் பெயரை எப்படித் தேர்வு செய்தாள் என்று தெரியவில்லை. தனக்குப் பெண்தான் பிறக்கும் என்று தீர்மானமாக நம்பினாள். அத்தோடு சுகி என்னும் பெயரைத் திரும்பத் திரும்பச் சொல்லத் துவங்கினாள். அந்தச் சொல்லின் மீது அவளுக்கு அதீத மயக்கம் உருவாகி யிருந்தது. கையில் கிடைக்கும் காகிதங்களில் எல்லாம் சுகி சுகி என்று எழுதித் தள்ளினாள்.

அத்தோடு வித்யாராணி குழந்தையை எப்படி வளர்ப்பது, அதை எந்தப் பள்ளியில் சேர்ப்பது அவளை என்ன படிக்க வைப்பது, எங்கே வேலைக்கு அனுப்புவது, அவளுக்கு யாரைத் திருமணம் செய்து தருவது, வயதான காலத்தில் அவளோடு தங்கிக் கொள்வது வரை மனதில் கற்பனையான தொரு உலகை சிருஷ்டிசெய்து கொண்டுவிட்டாள்.

எதற்காக பெண்கள் இவ்வளவு முன்திட்டமிடுகிறார்கள் என்று

எனக்குப் புரியவேயில்லை.

நான் வித்யாராணியிடம், அவசரப்பட்டுவிட்டோம். நாம் இன்னும் தேனிலவிற்குக் கூடப் போய்வரவில்லை என்றேன். அவள் அதைப் பற்றிய அக்கறையின்றி எப்போ இருந்தாலும் பெத்துக்கப்போற பிள்ளைதானே, இப்பவே பெத்துட்டா நல்லது என்றாள். கர்ப்ப காலத்தில் அவளது பேச்சு, உடல் மொழி மற்றும் செய்கைகள் யாவுமே மாறத் துவங்கியிருந்தன.

திருமணம் செய்துகொள்ளும் வரை எனக்குக் குழந்தைகள் பற்றிய நினைப்பே கிடையாது. கைகளில் குழந்தைகளைத் தூக்கியே பல வருடகாலமாக இருக்கும். எப்போதோ சிறுவயதில் அருகாமை வீட்டிலிருந்த சர்வேயர் மகனைத் துணியில் சுற்றி பத்திரமாகப் பிடித்துக்கொள்ளும்படியாகக் கையில் தந்தார்கள். அந்தக் குழந்தை உறங்கிக்கொண்டிருந்தது. சில நிமிடங்கள் கையில் வைத்திருப்பதற்குள் கூச்சமாகிப் போனது.

அதன்பிறகு குழந்தைகளுடனான என் உறவு வெகுவாகத் துண்டிக் கப்பட்டிருந்தது. அண்ணன் வீட்டில் குழந்தைகள் பிறந்த போதுகூட எட்ட இருந்து பார்த்திருக்கிறேன். மற்றபடி குழந்தைகள் பிறக்கிறார்கள், வளர்கிறார்கள் என்பது எல்லாம் வெறும் செய்தியாகவே இருந்தது.

திருமணம் நடந்து முடிந்த சில நாட்களில் ஒரு நாள் படுக்கையில் வித்யாராணி நமக்கு எத்தனை குழந்தைகள் வேண்டும் என்று கேட்டாள். நான் அதைப்பற்றி அதுவரை யோசித்ததேயில்லை. இதை எப்படி நாம் முடிவு செய்ய முடியும் என்ற எண்ணம் மட்டுமே எனக்குள்ளிருந்தது. ஆனால் அவளாகவே எல்லா வீட்டிலும் ரெண்டு பிள்ளை கள்தான் இருக்கு. நமக்கு ஒண்ணு போதும். அதுவும் பொம்பளைப் பிள்ளையா இருந்துட்டா நல்லது என்றாள். நான் எதற்காக என்று கேட்டுக்கொள்ளவில்லை.

பிறகு அவளாகவே தன் வலது கையை நீட்டி தன் கையிலோடும் ரேகைப்படி ஒரேயொரு பிள்ளைதான் தனக்குப் பிறக்கும் என்று சொன்னாள். நீ கைரேகை எல்லாம் பார்த்திருக்கிறாயா என்று கேட்டேன். அவள் சிரித்தபடியே தன்னோடு படித்த மீனாவிற்குக் கை ரேகை பார்க்கத் தெரியும் என்றும் அவள் ஒரு நாள் கையைப் பார்த்து இப்படி பலன் சொன்னாள் என்றபடியே அவள் சொன்ன மாப்பிள்ளை மாதிரித்தான் நீங்கள் இருக்கீங்க என்றாள்.

பள்ளிக்கூட வயதிலே பிள்ளைகள் பெத்துக்கொள்வதைப் பற்றி யோசிக்க ஆரம்பித்துவிட்டாயா என்று கேட்டேன். அவள் ஆறாம் வகுப்பிலே படிக்கும்போதே யாரைக் கல்யாணம் பண்ணிக்கிடுறதுனு பொம்பளைப் பிள்ளைகளுக் குள்ளே போட்டி நடக்கும். நான் அப்பவே மெட்ராசுல இருந்து வர்ற மாப்பிள்ளையைத்தான் கட்டிக்கிடு வேனு சொன்னேன். எதுக்குன்னா மெட்ராசில இருக்கிறவங்கள் எல்லாம் ரெண்டு பிள்ளைகள்தான் பெத்துக்கிடுவாங்களாம். ஊர்ப் பக்கம்னா நாலு அஞ்சு பெத்துக்கொள்ள வேணுமில்லை என்று

சொல்லிச் சிரித்தாள்.

என் கல்லூரி நாட்களில் ஒரு நாளும் நான் குழந்தை களைப் பற்றி நினைத்துக்கூடப் பார்த்ததில்லை. நேற்றுவரை என் உலகில் என்னைத் தவிர யாருமேயில்லை. அந்த உலகிற்குள் வித்யாராணியைச் சேர்த்துக்கொள்வதற்கே எனக்குச் சில மாதங்கள் ஆனது. இதில் குழந்தையைப் பற்றி எதற்காக யோசனை செய்ய வேண்டும் என்று விட்டுவிட்டேன்.

பள்ளி, கல்லூரியில் படித்த நாட்களிலும் வேலைக்குச் சேர்ந்த பிறகும் நான் தனியாகவே இருந்தேன். இந்த உலகம், அதன் பரபரப்பு, முந்தித்தள்ளும் போட்டிகள் என்னைப் பற்றிக்கொள்ளவேயில்லை. ஆனால் எதற்கு எனப் புரியாத ஆழமான வருத்தம் ஒன்று என்னைப் பற்றியிருந்தது. அதை என்னால் தீர்த்துக் கொள்ள முடியாது என்றும் தீவிரமாக நான் நம்பியிருந்தேன்.

என் அறை, நாலைந்து உடைகள், ஒன்றிரண்டு சினிமாப் பாடல் கேசட்டுகள், ஒரு பைக் இவ்வளவு மட்டுமே என் உலகம். மரங்கள், பறவைகள், ஆகாசம், மழை, வெயில், காற்று எதுவும் என் கண்ணில் படவேயில்லை. எப்போதா வது மழை பெய்யும் போதுகூட என்னை அறியாமல்தான் ஒதுங்கி நின்றிருக்கிறேன். மழையை நின்று கவனித்தே யில்லை.

உலகோடு நெருக்கமாக இல்லாமல் இருந்ததால் எனக்கு ஒரு நஷ்டமும் வந்துவிடவில்லை. மாறாக என் தனிமை என்னை ஒரு பாதுகாப்பு வலை போலப் போர்த்தி வைத் திருந்தது. அரிதாகச் சில நேரங்களில் பெண்களைப் பார்ப்ப துண்டு. அப்போதும்கூட மனதில் காமம் மட்டுமே நெளிந்து போகும். கடவுள் பிரார்த்தனை, திருவிழா, ஜனக்கூட்டம் என எதிலும் நான் கலந்து கொண்டதே யில்லை.

நான் வேலை செய்யும் பன்னாட்டுத் தனியார் வங்கி, அதன் கிளைகள், நீல நிற, மஞ்சள் நிற ரசீதுகள், என் முன்னே இயங்கிக் கொண்டிருக்கும் கணினி, சப்தமின்றி ஓடிக்கொண்டிருக்கும் கடிகாரம் இவை மட்டுமே என் உலகம். வித்யா ராணியைத் திருமணம் செய்துகொள்வதைப் பற்றிக்கூட அதிகம் யோசனை செய்து முடிவு எடுக்கவில்லை. அப்பாவே அதையும் தீர்மானம் செய்திருந்தார்.

நான் அவளைப் பெண் பார்க்கப்போன நாளில் அவள் அணிந் திருந்த இறுக்கிப்பிடித்த ஜாக்கெட் எனக்குள் அவசரமான காமத்தை உருவாக்கியது. ஒருவேளை அதனால்தான் திருமணத்திற்குச் சம்மதித் தேனோ என்னவோ தெரியாது. அவள் என்னைக் கவனித்த அளவிற்கு நான் அவளைக் கவனிக்கவேயில்லை. அவள் முன்னிருந்த நிமிடங்களில் ஒரு நீர்ப்பூச்சி குளத்தின் மீது ஊர்ந்து போவது போல காமம் என் உடலில் பட்டும் படாமலும் ஊர்ந்து கொண்டிருந்தது. திருமணம் அவள் ஊரில்தான் நடந்தது.

திருமணமான சில நாட்களுக்கும் மனதில் காமம் மட்டுமேயிருந்தது. உடல் சோர்வடையும் வரை காமத்திலே திளைத்துப் போயிருந்தேன். ஆனால் நான் எதிர்பார்த்தது போல காமம் எனக்குள் இருந்த தீராத தனிமையைப் போக்கவில்லை. மாறாக அது அதிகப் படுத்திவிட்டது.

அவளை விட்டு எங்காவது ஒரு நாள் தனியாக இருக்க வேண்டும் என்று விரும்பினேன். ஆனால் அதற்கான சாத்தியங்கள் மிகக் குறைவாக இருந்தன. அது என்னைக் கடுமையாக அழுத்தத் துவங்கியது. ஒருவேளை அந்த அழுத்தம் காரணமாகவோ என்னவோ ஒரு இரவு முழுவதும் காய்ச்சல் கண்டது.

நான் அறையில் தனியே கிடந்தேன். ஈரத்துணிகள் காற்றில் உலர்வது போல எனக்குள் இருந்த காமம் கொஞ்சம் கொஞ்சமாக உலரத் துவங்கியது. இரண்டு நாட்களின் பின்பாக எழுந்து கொண்ட போது வித்யாராணியும் அலுவலகத்தில் வேலை பார்க்கும் மற்றப் பெண்களைப் போல தெரிந்த பெண்ணாகியிருந்தாள். அவளுக்கும் கூடு தலில் அதிக நாட்டமில்லை. கர்ப்பமாகிவிட்ட பிறகு அவள் யோசனைகள் முழுவதும் அப்படியே குழந்தை பக்கமாகத் திரும்பி விட்டன. நான் அவள் உலகிலிருந்து வெளியேறத் துவங்கியதைப் போலவே உணர்ந்தேன்.

கர்ப்பம் பெண்களிடம் காரணமற்ற ஆத்திரத்தை கோபத்தை உருவாக்கிவிடுகிறது என்பதைக் கொஞ்சம் கொஞ்சமாக உணரத் துவங்கினேன். ஆறாவது மாதத்திற்குப் பிறகு வித்யாராணி காரணம் இல்லாமலே என்னோடு சண்டையிடத் துவங்கினாள். அல்லது நான் அவளோடு அற்ப காரணத்திற்காகக் கத்தத் துவங்கியிருந்தேன். இந்தச் சண்டையின் முடிவில் அவள் அழுதபடியே படுக்கையில் கிடப்பதைப் பலமுறை கண்டிருக்கிறேன். எதற்காக அவள் அப்படி அழ வேண்டும், அப்படி என்ன நடந்துவிட்டது என்று ஆத்திரமாக வரும். இருவருமே சில நாட்களுக்குப் பேசாமல் இருப்போம். பிறகு அது தானே கலைந்து போய்விடும்.

அவள் எப்போதும் யோசனையில் பீடிக்கப்பட்டவளாகவே இருந்தாள். ஒருநாள் வீடு திரும்பும்போது தன்னுடைய உதட்டில் வெள்ளையாக ஏதோ மரு போலப் படரத் துவங்கியிருக்கிறது. உடனே மருத்துவரிடம் சென்று காட்ட வேண்டும் என்று சொன்னாள். நீ கிளம்பி அலுவலகம் வந்திருந்தால் அப்படியே மருத்துவரிடம் போய்வந்திருக்கலாமே என்றேன். அது அவளுக்குள் ரெளத்திரத்தை உருவாக்கியது. இப்படியே நான் செத்துப் போயிருந்தாக்கூட உங்களுக்கு நல்லாதான் இருந்திருக்கும் என்றாள். நானும் கத்தினேன். அவள் ஓங்காரமாக அழுதாள்.

பிறகு இருவரும் மருத்துவமனையை அடையும்போது எட்டரை

மணியாகியிருந்தது. பெண் மருத்துவரிடம் மட்டுமே காட்டுவேன் என்று அவள் அடம்பிடித்தாள். உதட்டில் உள்ள மருவிற்கு யாரிடமும் காட்டலாம் என்ற போதும் அவள் சமாதானம் அடையவேயில்லை. ஆனால் அன்று வேறுவழியில்லாமல் ஆண் மருத்துவரிடமே காட்ட வேண்டிய சூழ்நிலை உருவானது. அவர் கர்ப்பிணிகளுக்கு இதுபோன்ற வெளிறிய உதடுகள் இருப்பது வழக்கம்தான். பயப்படத் தேவையில்லை. தேவைப்பட்டால் விட்டமின்கள் அதிகம் சாப்பிடுங்கள் என்று சிபாரிசு செய்தார். வித்யா ராணி அதில் திருப்தி படவேயில்லை.

அவள் தன்னை மருத்துவரும் சேர்ந்துகொண்டு ஏமாற்றுவதாக உணர்ந்தாள். வீட்டிற்கு வந்த பிறகு கண்ணாடியைக் கையில் எடுத்து வைத்துக்கொண்டு உதட்டையே பார்த்துக் கொண்டிருந்தாள். உதட்டைக் கையால் தேய்த்துத் தேய்த்துப் பார்த்தாள். பிறகு அவளாக குமுறிக் குமுறி அழத்துவங்கினாள். மறுநாள் அவளை ஒரு பெண்மருத்துவரிடம் அழைத்துக்கொண்டு போனேன். அவரும் இது வழக்கமான ஒன்று தான், பயப்படத் தேவையில்லை என்றார். ஆனால் வித்யா ராணிக்கு இவை எவையும் சமாதானம் ஆகவில்லை.

மாறாக தனக்குத் தீர்க்கமுடியாத நோய் உண்டாகியிருக் கிறது. அதை எல்லோரும் மறைக்கிறார்கள் என்று நம்பத் துவங்கினாள். அவள் வேண்டுமானால் ஒரு வார காலம் ஊரில் போய் இருந்துவிட்டு வரட்டும் என்று அனுப்பி வைத்தேன். திரும்பி வந்தபோது உதட்டில் இருந்த வெள்ளை மறைந்து போயிருந்தது. அவள் வெட்கத்துடன் வெறும் தேமல், இதுக்குப் போயி பயந்துட்டேன், என்னை அறியா மலே மனசிலே நிறைய பயமாக இருக்கு. எதுக்குனு தெரியலை என்றாள்.

ஊருக்குப் போய்விட்டுத் திரும்பிய பிறகு திடீரென என் மீது அளவிற்கு அதிகமான அக்கறை காட்டத் துவங்கினாள். பத்து நிமிசத் திற்கு ஒரு முறை அலுவலகத்திற்கு போன் செய்து நலம் விசாரிப்பாள். சாப்பாட்டைத் தானே அலுவலகத்திற்குக் கொண்டு வருவாள். என் கைகளை இறுக்கிப் பிடித்துக்கொண்டு உறங்குவாள். அவள் செய்கைகள் எனக்குள் குழந்தைப் பிறப்பு தொடர்பான கசப்புகளை அதிகப்படுத்தியிருந்தது. இதற்கு மேல் குழந்தைகளே வேண்டாம் என்று முடிவு செய்துகொண்டேன்.

எட்டாவது மாசத்திலிருந்து அவள் யாருடனும் பேசிக்கொள் வதைக் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்துக்கொண்டுவிட்டாள். யாராவது ஏதாவது கேட்டால் மட்டுமே ஒரு வார்த்தை பேசுவாள். மற்றநேரங்களில் யோசனையின் பெருஞ்சுழலில் தனியே மாட்டிக் கொண்டிருந்தாள்.

சுகி பிறப்பதற்குப் பத்து நாட்கள் முன்பாக வித்யாவைக் காண்பதற்கு அவள் ஊருக்குச் சென்றிருந்தேன். அவள் முகத்தில் விவரிக்கமுடியாத பயம் அப்பிப்போயிருந்தது. அத்தோடு அவள் குரல் உடைந்திருந்தது. கை நிறைய கண்ணாடி வளையல்கள் அணிந்திருந்தாள். நெற்றி

நிறைய திருநீறு இருந்தது. நீ பயப்படும் அளவு ஒன்றுமேயில்லை என்று அவளிடம் ஏதோ ஆறுதல் சொன்னேன். அன்று ஊருக்குத் திரும்பி வரும்போதுகூட குழந்தையைப் பற்றி என் மனதில் எவ்வித மான சித்திரமும் உருவாகவில்லை. சொல்லப்போனால் எனக்குள்ளும் அப்பா என்பதைப் பற்றிய பயம் உருவாக ஆரம்பித்திருந்தது.

நீண்ட நாட்களுக்கு சுகி என்னும் சொல் எனக்கு வெறும் சொல்லாகவே இருந்தது. மருத்துவமனையில் இருந்த என் குழந்தையை அருகில் சென்று பார்த்தபோது தான் அந்தச் சொல் குழந்தையோடு ஒட்டிக்கொண்டுவிட்டது. என்னை அறியாமல் சுகி சுகி என்று மெல்லிய குரலில் அழைத்தபடியே விரலால் குழந்தையின் கேசத்தை வருடிவிட்டேன்.

தூக்கம் கலைந்த முகத்துடன் இருந்த வித்யாராணி என்னை மாதிரி இருக்கா உங்களை மாதிரி இருக்கா என்று கேட்டாள். உன்னை மாதிரியேதான் என்றேன். அதைத்தான் எங்கம்மாவும் சொல்றா என்று சிரித்தாள். அந்தச் சிரிப்பு அதன் முன்பு நான் கண்டறியாதது. பிரசவம் பெண்ணிற்கு முன் இல்லாத ஒரு அழகை உருவாக்குகிறது போலும். அவள் குழந்தையைக் கையில் எடுத்து பால் புகட்டத் துவங்கினாள். குழந்தை அவள் மார்பில் முட்டிய படியே உறங்கத் துவங்கியது.

அவள் என் கையில் குழந்தையைக் கொடுத்தாள். அது என் குழந்தை. நான் குழந்தையின் அப்பா என்பதைக் கொஞ்சம் கொஞ்ச மாக உணரத் துவங்கினேன். உலகில் அதுவரை பிறந்திருந்த அத்தனை குழந்தைகளும் என் கவனத்தை விட்டுப் போய் ஓரேயொரு குழந்தை, அது என்னுடைய குழந்தை என்பது மட்டுமே முக்கியமாகிக் கொண்டி ருந்தது. அப்போது தோன்றியது அப்பா என்பது ஒரு பொறுப்புணர்வு. தீராத சந்தோஷம் என்று.

**சு**கி ஒரு வயது வரை மற்றக் குழந்தைகளைப் போல் அழுவதேயில்லை. பெரும்பாலும் உறக்கம். விழித்திருந்தபோதுகூட எதையோ உற்று நோக்கி நிலைகுத்திய பார்வையோடு அப்படியே இருந்தாள். எதற்காக அவள் பார்வை அப்படியே நிலை குத்தியிருக்கிறது. அப்படி என்ன கவனிக் கிறாள் என்று வியப்பாக இருக்கும். பிற குழந்தைகளைப் போல அவளிடம் பரபரப்போ துடிப்போ இல்லை. தரையில் விட்டால்கூட அவள் அதிகம் தவழுவது இல்லை. எதையா வது உற்றுப் பார்க்கத் துவங்கி அப்படியே நிலை கொண்டு விடுவாள். யாராவது தூக்கிக்கொண்டு வெளியே வந்தாலும் அவள் பார்வை ஒன்றின் மீதே குவிந்துவிடும்.

வித்யாராணிக்கு இது பயத்தை உருவாக்கத் துவங்கியது. அவளா கவே குழந்தையைக் கோவிலுக்குக் கொண்டு செல்வதும் நேர்ச்சைகள் செய்வதுமாக இருந்தாள். நான் அலுவலகம் இல்லாத சிலநாட்களில்

சுகியைத் தூக்கி வைத்துக்கொண்டிருக்கும்போது அவள் சோர்வாக இருப் பதை உணர்ந்திருக்கிறேன்.

குழந்தைகளுக்கான மருத்துவர்கள் அவளைச் சோதித்து விட்டு பொதுவான சத்துக்குறைவு காரணமாகவே அவள் இப்படியிருக்கிறாள் என்பதைக் கண்டுபிடித்தார்கள். ஆனால் இரண்டு வயது வரை சுகியிடம் எந்த மாற்றமும் வரவில்லை. சுகி ஒரு வார்த்தைகூடப் பேசுவதில்லை என்பதை வித்யா ராணி கண்டுபிடித்த நாளில் அவள் கதறி அழத்துவங்கினாள். என் பிள்ளைக்குப் பேச்சு வரலையே என்று சப்தமாகக் கத்தினாள். அப்படியெல்லாம் இருக்காது, அவள் சப்தம் கேட்டால் திரும்புகிறாள். அதனால் நிச்சயம் தப்பாக எதுவும் ஆகாது என்றேன். வித்யா சமாதானம் அடையவில்லை.

இதற்கான சிறப்பு மருத்துவரிடம் சுகியைக் கொண்டு சென்றோம். ஏதோ பெயர் தெரியாத குறைபாட்டினைக் காரணம் காட்டி மருந்துகள் தந்ததோடு அவள் முன்பாகத் தொடர்ந்து ஏதாவது பேசிக்கொண்டேயிருங்கள் என்றார்.

அன்றிலிருந்து வித்யாராணி குழந்தையைத் தன்மடியில் வைத்துக் கொண்டு அம்மா சொல்லு... அப்பா சொல்லு தாத்தா சொல்லு என்று வாய் ஓயாமல் சொல்லிக்கொண்டேயிருந்தாள். அந்த சப்தங்களும் அவளைக் கவரவேயில்லை. நானும் மாலைநேரங்களில் சுகியைத் தூக்கி வைத்துக்கொண்டு தெரிந்த சொற்கள் யாவையும் சொல்லிப் பழக்கினேன். அவள் சொற்களைத் தனக்குள் அனுமதிக்கவே யில்லை. தண்ணீருக்குள் விழுந்த கூழாங்கற்களைப் போல அந்தச் சொற்கள் கரையாமல் அப்படியே விழுந்தன.

இரண்டு வார காலம் விடுமுறை எடுத்துக்கொண்டு குழந்தையோடு கோவில் கோவிலாகப் பயணம் செய்தோம். வழி முழுவதும் தென்பட்ட சூரியன், காற்று, மலை, மரம், ஆறு, நாய், வீடுகள், தெருக்கள், வாகனங்கள் என யாவையும் பெயர் சொல்லிச் சொல்லி அலுத்துப் போன பிறகும் குழந்தையின் கவனம் சொற்களின் மீது குவியவே யில்லை.

சில நேரங்களில் சுகியின் மௌனம் என்னை பய முறுத்தியது. அவள் கையில் ஒரு ஸ்பூனை வைத்துக்கொண்டு அதையே மணிக்கணக் கில் உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தாள். ஆத்திரத்தில் அந்த ஸ்பூனைப் பிடுங்கி வீசி எறிய வேண்டும் போலிருந்தது. அப்படிச் செய்தும் பார்த்தேன். ஆனால் அது சுகியை அசைக்கவேயில்லை. தன்னுடைய கைப்பொருள் பறிபோன போதும்கூட அவளிடம் அழுகையோ ஆர்ப்பாட்டமோ இல்லை.

இன்னொரு பொருள் தன் கைக்குக் கிடைக்கும் வரை அவள் தரையை வெறித்துப் பார்க்கத் துவங்கினாள். அன்றிரவு அவளைப் போலவே ஒரு ஸ்பூனைக் கையில் எடுத்துக்கொண்டு நானும் உற்றுப் பார்க்க ஆரம்பித்தேன். இதன் முன்பாக உலகில் அப்படியொரு பொருளை நான் கண்டதேயில்லையோ எனும்படியாக இருந்தது

ஸ்பூன். அதை வித்யாராணி கவனித்திருக்க வேண்டும். பிள்ளை தான் படுத்தி எடுக்குதுன்னா. நீங்களும் ஏன் என் உயிரை வாங்குறீங்க என்று ஸ்பூனைப் பிடுங்கி வீசினாள்.

எனது சண்டைகள், கத்தல்களால்தான் குழந்தைக்கு இப்படியாகி யிருக்கிறது என்றுவேறு அவள் நம்பத் துவங்கியிருந்தாள். நானும் கர்ப்பகாலத்தில் அவள் ஆத்திரமாக நடந்துகொண்டதும் கத்திக் கூப்பாடு போட்டு அழுததும்தான் குழந்தையை இப்படி ஆக்கிவிட்டது என்று கத்தினேன். அவள் ஆமாம் எல்லாமே என்னாலேதான் வந்தது. நான் இப்படியே செத்துப் போய்விடுகிறேன். நீங்கள் சந்தோஷமாக இருங்கள் என்று ஆத்திரமுற்றாள். அப்போதும் சுகி பாட்டிலின் மூடி ஒன்றைக் கையில் வைத்து உற்றுப் பார்த்தபடியே அசைவற்று உட்கார்ந்தேயிருந்தாள். அப்பாவாக இருப்பது என்பது பொறுப்புணர்வு மட்டுமில்லை என்பது புரியத் துவங்கியது.

சுகியை அழைத்துக்கொண்டு பழனியில் உள்ள சித்த வைத்திய நிலையம் ஒன்றிற்குச் சென்றிருந்தோம். மலையின் பின்புறமிருந்தது. குழந்தையின் குரல்வளையில் சிறிய பிளவு இருப்பதாகச் சொல்லிய படியே வைத்தியம் ஆரம்பித்தார்கள். நாற்பது நாட்கள் சிகிச்சைகள். ஒவ்வொரு நாளும் மலையின் மீது படரும் பகலொளியைப் பார்த்த படியே இருப்போம். சுகியின் கண்கள் தொலைதூர மலையைவிட அருகாமையில் கடந்து செல்லும் சிற்றெறும்பின் மீது நகர்ந்து கொண்டிருந்தது. பகலிரவாக இருவரும் குழந்தையைப் பார்த்தபடியே இருந்தோம். எவ்விதமான மாறுதலும் இல்லை. அதன்பிறகு டி.கல்லு பட்டி, மார்த்தாண்டம், வாராங்கால், ஏர்வாடி என்று எங்கெங்கோ சிகிச்சைக்காக அழைத்துக்கொண்டு சென்றோம். சுகிக்கு நாலு வயது முடியும் வரை அவள் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. அதுபோலவே மற்றவர்கள் பேசும் ஒலிகளும் அவளுக்கு உவப்பாக இல்லை.

வித்யாராணி தனது தவற்றின் காரணமாகவே சுகி இப்படியிருப்ப தாக நினைத்துக்கொண்டு உபவாசம், முடி கொடுத்தல் என்று தன்னை வருத்திக்கொள்ளத் துவங்கினாள். அவள் முகத்தில் எப்போ துமே படபடப்பும் வெளிக் காட்டிக்கொள்ள முடியாத பயமும் ஒட்டிக்கொண்டிருந்தது.

சாயாவனம் என்னும் சிற்றூரிலிருந்த மூலிகை வைத்தியர் ஒருவரைக் காண்பதற்காக விடிகாலையில் அவர் வீட்டிற்குப் போனபோது முதன்முதலாக சுகி அங்கிருந்த கிளி ஒன்றின் சப்தத்தைக் கேட்டு வேகமாக முகத்தைத் திருப்பியதைக் கவனித்தேன். அந்த வீட்டில் இருந்த நேரங்களில் கிளி கத்தும்போது எல்லாம் சுகியின் முகம் தானே அதை நோக்கித் திரும்பியதைக் கண்டேன். சுகியைக் கிளிக் கூண்டு அருகில் கொண்டு சென்றேன். அவள் வியப்போடு கிளியைப்

பார்த்துக்கொண்டிருந்தாள். உனக்குக் கிளி வேண்டுமா என்று கேட்டேன். அவள் இமை மூடாமல் கிளியைப் பார்த்துக்கொண்டே யிருந்தாள். கிளி விட்டு விட்டுக் கத்தியது. கிளி சப்தமிடும்போது சுகியின் கண்கள் வேகமாகச் சிமிட்டிக்கொண்டன.

**ஊ**ர் திரும்பிய பிறகு ஒரு மாலையில் சுகியை அழைத்துக் கொண்டு நகரிலிருந்து மேற்காகச் செல்லும் சாலையில் பைக்கில் பயணம் செய்யத் துவங்கினேன். நாற்பது கிலோ மீட்டர் தூரத்தில் சாலை யோரம் உள்ள ஒரு தர்க்கா ஒன்றையும் அதன் முன் அடர்ந்திருந்த மரங்களில் வந்து கூடும் பறவைகளின் இரைச்சல் ஒலியையும் ஒரு முறை கடந்து செல்கையில் கேட்டிருக்கிறேன். பைக்கில் அந்தச் சாலையை நெருங்கிச் செல்லும்போதே இடைவிடாத பறவைகளின் கரைப்பொலி கேட்கத் துவங்கியது.

மரம் தெரியாமல் காகங்களும் குருவிகளும் ஒன்றிரண்டு கொக்கு களும் சாம்பலும் இளஞ்சிவப்பும் கலந்த பறவைகளும் காணப்பட்டன. சுகி அந்த சப்தங்களால் கவரப்பட்டாள் என்பது அவள் முகமாற்றத் திலே தெரிந்தது. அவள் மரத்தையே அண்ணாந்து பார்த்துக்கொண்டே யிருந்தாள். காதைத் துளையிடும் அந்த ஒலி அவளுக்குள் நிரம்பத் துவங்கியிருந்தது. அவள் முகத்தில் பிரகாசமான வெளிச்சம் படர்ந்து கொண்டிருந்தது போல உணர்ந்தேன். இருட்டும் வரை நாங்கள் இருவரும் அங்கேயே இருந்தோம். சுகியின் கைவிரல்கள் தாளமிடுவது போல அசைந்துகொண்டிருந்தன. வரும் வழியில் மரப்பட்டை நிறத்திலிருந்த ஆந்தை ஒன்றைக்கூடக் கண்டோம்.

அன்றிரவு வித்யாராணியிடம் சுகி பறவைகளின் சப்தத் தால் கவரப்படுகிறாள். நாம் சில பறவைகளை வாங்கி வீட்டில் வைத்து அதன் சப்தத்தைக் கேட்க வைக்கலாமே என்றேன். வித்யாராணி ஒத்துக்கொண்டாள். புறாக்கள், மைனா, கிளி என்று கூண்டுப்பறவை களைக் கொண்டுவந்து சுகியின் முன்பாக சப்தமிடச் செய்தோம். ஆரம்பத்தில் ஆர்வம் காட்டிய சுகி சில நாட்களுக்குள் அதில் கவனம் கொள்ளவேயில்லை. மாறாக அந்த சப்தங்கள் தன்னைக் குத்திக்காட்டுவது போலவே வித்யாராணி உணரத் துவங்கினாள். வீட்டில் அதை வைத்துக்கொள்ள முடியாது என்று வேலைக்காரப் பெண்ணிடம் தூக்கித் தந்துவிட்டாள்.

அதன்பிறகு அலுவலகத்தில் வேலை பார்க்கும் நண்பர் ஒருவரின் வழியாக ஒரு ஆலோசனை கிடைத்தது. பதிவு செய்யப்பட்ட பறவைகளின் குரல்கள் உள்ள குறுந்தகடுகள் கிடைக்கின்றன. அதை வாங்கி கேட்க வைத்துப் பாருங்கள் என்றார். பதிவுசெய்யப்பட்ட பறவைகளின் குரல்கள் உள்ள இசைத்தட்டிற்காகத் தேடி அலைந்து ரிச்சி தெருவில் வாங்கிவந்தேன். நூறு பறவைகளின் ஒலிகள் அதில் அடங்கியிருந்தன.

ஒவ்வொரு பறவையின் ஒலியும் கேட்கும்போது சுகியின் கண்கள் தன்னை அறியாமல் விரிவடையத் துவங்கின. ஆனால் அவள் அந்தப் பறவை எங்கேயிருக்கிறது என்று சுற்றிலும் தேடத் துவங்கினாள். ஒரு இயந்திரத்தைக் காட்டி அவளை ஏமாற்றுகிறோமோ என்னும் குற்றவுணர்வு எனக்குள் உருவாகத் துவங்கியது.

அதற்காகவே அவளை அழைத்துக்கொண்டு பறவை களைத் தேடி மாலையில் அலைந்து திரிவது என்று முடிவு செய்தேன். ஆரம்ப நாட்களில் பறவைகள் இந்த நகரில் இருக்கின்றனவா என்று சந்தேகம் வருமளவு அரிதாக இருந்தன. ஆனால் விசாரித்து விசாரித்து பறவைகள் எந்த மரங்களில் அடைய வருகின்றன. எந்த நேரத்தில் தரையிறங்குகின்றன என்பதை அறிந்துகொண்டு அதை நோக்கி நடக்கத் துவங்கினோம்.

பரபரப்பான வாகன இயக்கங்களைத் தாண்டி நாங்கள் மூவரும் மெதுவாக நடந்துகொண்டேயிருப்போம். ஏதாவது வீட்டின் சுவரிலோ, புழுதியடைந்து போன மரங்களிலோ பறவையொலி கேட்டால் அங்கேயே நின்றுவிடுவோம். சுகியின் கண்கள் பறவையைத் தேடத் துவங்கும். நானும் அதற்குப் பழகியிருந்தேன். சில நாட்கள் இலக்கற்று நடக்கத் துவங்கி அலுப்பும் வெறுமையுமாக வீடு திரும்பி வந்திருக் கிறோம்.

ஏன் குரல்கள் அவளுக்குள்ளிருந்து எழும்புவதேயில்லை. எல்லாச் சொற்களும் ஏன் வடிந்து போய்விடுகின்றன என்னும் குழப்பம் தூக்கத்திலும் எனக்குள் பீறிட்டுக்கொண்டேயிருந்தது. அவள் கவனத்தைக் குவிய வைப்பதற்காக ஏதேதோ செய்த போதும் மாற்றமேயில்லை. ஆனால் இதைத் தவிர சுகியிடம் வேறு வித்தியாசம் எதுவுமில்லை. அவளாகக் குளித்துக்கொண்டாள். அவளாக உடைகளை உடுத்திக்கொண்டாள். பசித்த வேளைகளில் மிகக் குறை வாகச் சாப்பிட்டாள். யாவும் மௌனமாக நடந்தன என்பதுதான் இதன் முக்கிய பிரச்சினை.

நாளுக்கு நாள் சுகி பறவைகளைத் தேடிப் போய் அதன் சப்தங் களைக் கேட்பதில் ஆர்வம் கொள்ளத் துவங்கினாள். ஆனால் எந்தப் பறவையின் குரலுக்கும் அவள் மறுமொழி தந்ததில்லை. இதற்காகவே நான் பறவைகளைப் பற்றி அறிந்து கொள்ளத் துவங் கினேன். சலீம்அலியின் புத்தகங்களை வாங்கி வந்து இரவெல்லாம் படித்தேன். எனக்குத் தெரிந்தவரை பறவைகளைப் பற்றி இடைவிடாமல் அவளோடு பேசினேன்.

அலுவலகத்திற்கு விடுப்பு எடுத்துக்கொண்டு மின்சார ரயிலில் சென்று ஏதாவது ஒரு ரயில் நிலையத்தில் இறங்கி அங்கிருந்து செல்லும் கிளைவழிகளில் எங்கே என்ன பறவைகள் இருக்கக்கூடும் என்று அலைய ஆரம்பித்தேன்.

நகரம் எண்ணிக்கையற்ற கிளை வழிகளும் தெருக்களும் சந்துகளும் நிரம்பியதாக இருந்தது. நகரில் வாழும் மனிதர்களின் எண்ணிக்கை

யோடு ஒப்பிடுகையில் மிகக் குறைவான பறவைகளே நகரில் இருந்தன.

தேடி அலுத்துப் போன நாட்களில் பயணம் செய்து காடுகளை நோக்கிச் செல்லத் துவங்கினோம். ஒரு புதிய பறவையைக் கண்டு பிடித்தபோது சுகியின் முகத்தில் சொல்ல முடியாத மகிழ்ச்சி ததும்புவதைக் கண்டிருக்கிறேன். எங் களோடு வித்யாராணி கூடவே அலைந்துகொண்டிருந்தாள். அவளுக்குப் பறவைகளோ, அதன் குரல்களோ எதுவும் முக்கியமாகவேயில்லை. குழந்தை எப்படியாவது பேசிவிட வேண்டும் என்ற ஒற்றைப் பிரார்த்தனை மட்டுமேயிருந்தது.

சுகியை அவ்வப்போது காட்டிற்குள் அழைத்துப் போகத் துவங்கிய தில் ஏற்பட்ட முதல் பாதிப்பு, காற்று. அவளால் சீரற்ற காற்றின் வேகத்தை எதிர் கொள்ள முடியவில்லை. அவள் நடுக்கத்தோடும் தலையைச் சிலுப்பியபடியும் காட்டிற்குள் நடந்து கொண்டிருந்தாள். அதுவும் அதிகாலை நேரக் காற்று அவள் உடலைத் துவளச் செய்தது. அதன் காரணமாக அடிக்கடி காய்ச்சலுக்கு உட்பட்டாள்.

இதற்காகவே காட்டை விலக்கி நகருக்குள் சுற்றியலையத் துவங் கினோம். சுகியின் உலகில் பறவைகள் மட்டுமேயிருந்தன. அதன் தொடர்ச்சியான பறத்தல், விசித்திரமான சப்தங்கள் மட்டுமே நிரம்பியிருந்தது. இந்த மூன்று வருடங்களில் நாற்பது ஐம்பது நாட்கள் மட்டுமே அலுவலகம் சென்றிருப்பேன். மற்ற நாட்களில் சுகிதான் என் கவனமாகிப் போனாள்.

**சு**கி வளரத் துவங்கியிருந்தாள். ஆறு வயது முடியப்போகிறது என்றாலும் பத்து வயதுச் சிறுமி போன்ற தோற்றம் உருவாகி யிருந்தது. தன்னிச்சையாக அவள் வீட்டிலிருந்து இறங்கி தெருவில் நடந்துபோய் வருவதும் எங்காவது சாலையில் பறவையின் குரலைக் கேட்டால் அப்படியே நின்றுவிடுவதும் இயல்பாக இருந்தது.

தன் மகளால் பேசவே முடியாது என்று முழுமையாக நம்பியவளைப் போலவே அவளுடன் சைகையில் உரையாடத் துவங்கினாள் வித்யாராணி. அது சுகியை இன்னமும் ஆத்திரப்படுத்தியிருக்க வேண்டும். அவள் அந்தச் சைகைகள் எதற்கும் பதில் தருவதேயில்லை. பசிக்கும் நேரங்களில் அவளாக எடுத்துச் சாப்பிடுவதும் பின்பு ஜன்னலை ஒட்டி ஒரு நாற்காலியை எடுத்துப் போட்டுக்கொண்டு வெளியே பார்த்துக்கொண்டிருப்பதையும் இயல்பாக்கிக்கொண்டிருந் தாள்.

சுகிக்காகவே வீடு மாற்றத் துவங்கினேன். சில மாதங்கள் நகரை விட்டு விலகி கடற்கரையை ஒட்டிய ஒரு பழைய வீட்டிற்குக் குடிமாறிப் போனோம். அந்த வீட்டிலிருந்து நடந்தே கடற்கரைக்குப் போய்விடலாம். சுகி அதிகாலை நேரங்களில் தனியே கடற்கரையில் அலைந்துகொண்டிருப்பாள். மீன்களைக் கொத்தியலையும் பறவை களும் கடலின் மீது தாழப்பறக்கும் பறவைகளும் அவளை உற்சாகம்

ஊட்டின. ஆனால் அந்த உற்சாகம் நெடுநாள் நீடிக்கவில்லை.

தன் வீட்டின் பின்னால் உள்ள ஏரியில் எண்ணிக்கையற்ற கொக்குகளும் நாரைகளும் வந்து போகின்றன என்று நண்பர் ஒருவர் சொன்னதை நம்பி இரட்டை ஏரி பகுதிக்கு வீடு மாறி சில மாதங்கள் வசித்திருந்தோம். அந்த வசீகரமும் நீடிக்கவில்லை. எல்லாமும் துளை விழுந்த பலூன் போலச் சில நிமிடங்களில் வடிந்துபோய்விடுகின்றது. சுகியைக் குழந்தையாகப் பார்த்தபோது அவள் கண்கள் எப்படி நிலை குத்தியிருந்ததோ அப்படியே இப்போதும் இருந்தன.

பல இரவுகளில் அவள் உறங்கும்போது அருகில் அமர்ந்து அழுதிருக் கிறேன். எதற்காக சுகியின் மனதில் ஒரு வார்த்தைகூடத் தங்குவதில்லை. ஏன் அவள் உதடுகள் உறக்கத்திலும் இறுகிக் கொண்டிருக்கின்றன. ஒருவேளை நானும் வித்யாராணியும் போட்டுக்கொண்ட சண்டைகள் கர்ப்பத்திலே அவள் வாயைக் கட்டிவிட்டதா? எவருடனும் பேச வேண்டிய அவசியமேயில்லை என்று இந்த வயதிற்குள் முடிவுசெய்து விட்டாளா?

மெல்ல சுகியால் பேசமுடியவில்லை என்ற துயரம் எனக்குள் உறைந்து இறுகிப்போக ஆரம்பித்தது. எவரிடமும் பகிர்ந்துகொள்ளவோ, ஆறுதல்படுத்திக் கொள்ளவோ முடியாத அந்த துக்கம் கடுகடுத்த வலியோடு எனக்குள் பூரணமாக வேர்விட்டிருந்தது.

**க**ரிக்கலிக்கு சகியை அழைத்துக் கொண்டு போனபோது தொலைவிலே பறவைகளின் ஒலி கேட்கத் துவங்கியிருந்தது. ஏதேதோ நாடுகளிலிருந்து பறவைகள் புலம்பெயர்ந்து அங்கே வந்து சேர்கின்றன என்று சொன் னார்கள். சுகி தனியே நடந்து அலைந்தபடியே அந்தப் பறவைகளின் குரல்களை உன்னிப்பாகக் கேட்டாள். பிறகு கீழே விழுந்து கிடந்த நீலநிற இறகு ஒன்றை எடுத்துக் கையில் வைத்து ஆட்டிய படியே ஒரு சப்தத்தைப் பின் தொடர்கின்றவள் போல நடந்துபோகத் துவங்கினாள். நான் அவள் பின் னாடியே சென்றேன். அவள் மிகக் கவனமாக நடந்து போய் புதர் போன்ற கிளைகளை விலக்கியபடியே அந்த சப்தத்தைப் பின் தொடர்ந்து சென்றாள். பிறகு அண்ணாந்து பார்த்தபடியே வியப்போடு சொன்னாள்,

புல்புல்.

ஆமாம் என்று தலையாட்டினேன். பிறகுதான் புரிந்தது. சுகி பேசினாள் என்பது. ஆச்சரியத்துடன் அது என்னவென்று கேட்டேன். அவள் பதிலற்று புல்புல்லின் சப்தத்தில் தன்னை மறந்து போயிருந்தாள். சுகியால் பேச முடிகிறது என்பது எவ்வளவு பெரிய விஷயம். ஆனால் அவள் பேசவிரும்பவில்லை. அல்லது பேசுமளவு அவளை வேறு எந்தச் செயலும் உந்தவில்லை. வரும்வழியெங்கும் ஏதேதோ பேச வைக்க முயன்றும் அவளிடமிருந்து வார்த்தை வரவில்லை.

ஆனால் அன்றிரவு முழுவதும் அந்த ஒற்றைச் சொல் எனக்குள் நீந்திக்கொண்டேயிருந்தது

வீடு வந்தபிறகு வித்யாராணியிடம் அதைப்பற்றிச் சொன் னேன். அவளால் நம்பமுடியவில்லை. ஒரு முறை தானும் புல்புல் என்று சொல்லிக் கேட்க வேண்டும் என்பதற்காக அவள் எவ்வளவோ முயற்சி செய்தாள். ஆனால் மூடிக்கொண்ட சிப்பியைப் போல ஒரு சொல்லோடு அவள் மௌனம் திரும்பிவிட்டிருந்தது.

நிச்சயம் இன்னொரு பறவையால் அவள் மனதிலிருந்து இன்னொரு சொல்லைக் கொத்தி எடுத்து வந்துவிட முடியும் என்று நம்பினேன். இதற்காகவே அவளை அடையாற்றில் உள்ள ஆற்றின் கழி முகம் மற்றும் கிண்டி பூங்காவின் மரங்கள் அடர்ந்த பகுதி, நந்தனம் விளையாட்டு மைதானத்தின் புல் வெளி, மீனம்பாக்கத்தை ஒட்டிய கிராமங்கள் என்று எங்கெங்கோ கூட்டிக்கொண்டு சென்றேன்.

நாளாக ஆக அவள் பறவைகளின் ஒலியால் அடைந்த பரவசத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக இழந்து வருகிறாள் என்பது புரிந்தது. இப்போது அவள் வேறுவேறு பறவைகளின் சப்தத்தைவிடவும் முன்பு கேட்ட பறவையின் ஒலியை மறுபடியும் எங்கே எப்போது கேட்போம் என்பதில்தான் நாட்டம் கொண்டிருக்கிறாள் என்பதை அறிய முடிந்தது.

அவளுக்காக பறவைகளை அறியத் துவங்கி என் உலகில் பறவை களின் விசித்திரமான நிறங்கள் மாறுபட்ட குரல்கள் அது எழுப்பும் அக உணர்வுகள் மட்டுமே நிரம்பியிருந்தன. அன்றாட உலகின் வாகனங்கள், திரையரங்குகள், மின்சார ரயில்கள், உணவகங்கள் என யாவும் என்னிலிருந்து கழன்று போகத் துவங்கின.

ஒரு ஞாயிற்றுக்கிழமை நானும் சுகியும் கேளம்பாக்கத்தி லிருந்து வீடு திரும்பிக்கொண்டிருந்தபோது சட்டென ஒரு இடத்தில் என் முதுகில் கையை வைத்து வண்டியை நிறுத்தும்படியாக அழுத்தினாள் சுகி. நான் சாலையோரமாக வண்டியை நிறுத்தியபோது அருகாமையில் இருந்த மரத்தில் பறவையைக் காட்டினாள். இவ்வளவு ஒதுங்கிய மரத்திலிருந்த பறவை எப்படி அவள் கண்ணில் பட்டது என்னும் வியப்புடன் அதைப் பார்த்துக்கொண்டிருந்தேன்.

தலையும் மார்பும் வயிறும் வாலும் வெளுத்து மற்றெங் கும் செந்நிறமாக இருந்த பறவையது. கடல் மீது இதுபோன்ற பறவைகள் சுற்றியலைவதைக் கண்டிருக்கிறேன். பறவை விருட்டெனப் பறந்து இன்னொரு மரத்தின் உச்சிக்கிளைக்குச் சென்றது. அவள் ஆதங்கத்து டன் சொன்னாள்,

ஆலா    மழை வரும்.

நிச்சயம் சுகியால் பேச முடிகிறது. நான் சுகியைக் கட்டிக்கொண்டு பேசுடா பேசுடா என்றேன். சுகி பேசவில்லை. அவள் என் கைகளைத் தள்ளிவிட்டு பைக் நிறுத்தப்பட்ட இடத்திற்குப் போய் நின்றுகொண்

டாள். பறவை பறந்து போயிருந்தது. வெற்று மரத்தை இருவரும் வெறித்தபடியே சில நிமிசங்கள் நின்றுகொண்டிருந்தோம். பிறகு மௌனமாக வீடு திரும்பிவிட்டோம். சுகி ஏன் பேச்சை உனக்குள்ளாகவே ஒளித்துக் கொள்கிறாய். உனக்குப் பிடித்தமான பறவைகள் பெயரை மட்டுமாவது நீ சொல்லிக்கொண்டேயிரேன் என்று அன்றிரவு படுக்கையில் கிடந்தபடியே அரற்றினேன். ஆனால் அவளிடம் மாற்றமே இல்லை.

ஒவ்வொரு நாளும் ஏதாவது ஒரு வார்த்தை சுகி பேசிவிட மாட்டாளா என்னும் நம்பிக்கையின் மீதே ஊர்ந்து நகர்கிறது. இன்றைக்கும் நானும் சுகியும் வித்யா ராணியும் புற நகரின் மண்பாதைகளில் சுகியோடு பறவைகளைத் தேடிச் சுற்றியலைந்தபடியே இருக்கிறோம்.

பேசுவது என்பது எளிமையானதில்லை. அது ஒரு விந்தை என்று எங்களுக்குக் கொஞ்சம் கொஞ்சமாகப் புரியத்துவங்கியிருக்கிறது. இப்போதெல்லாம் மிக அரிதாகவே நாங்களே எங்களுக்குள் பேசிக் கொள்கிறோம். கயிறு அறுந்து கிணற்றில் விழுந்த வாளியைப் போல பேச்சு எங்களுக் குள்ளாகவே அறுந்து விழுந்து கிடக்கிறது.

ஏதோவொரு பறவை இன்னமும் என் மகளைப் பேச வைத்துவிடும் என்னும் நம்பிக்கையிருக்கிறது. ஆயிரமாயிரம் மனிதர்கள், நெருக்கடியான வாகனங்கள், நான்குவழிச் சாலைகள், உறங்க இடமற்ற பிளாட்பாரவாசிகள், நோயாளிகள், உதிரி மனிதர்கள், எண்ணிக்கையற்ற அலுவலகங்கள், வீசி எறியப்பட்ட கழிவுகள் என நிரம்பி வழியும் இந்த மாநகருக்குள்ளும் பறவைகள் இருக்கின்றன. அவற்றில் ஏதோவொன்று என் மகளுக்கான ஒரு வார்த்தையைச் சுமந்தபடியே அலைந்துகொண்டிருக்கிறது.

**அ**ப்பா என்னும் சொல் எத்தனை வெளிக்காட்ட முடியாத கனமும் துக்கமும் வலியும் நிராசைகளும் நிரம்பியது என்பதை இப்போது முழுமையாக உணர்ந்திருக்கிறேன்.

இந்த இரவில் எரிந்து வீழும் நட்சத்திரத்தின் அவசரத்தில் செல்லும் அந்தப் பெயர் தெரியாத பறவையைக் காணும் போதெல்லாம் எனக்கு நானே சொல்லிக்கொள்கிறேன்,

அப்பாவாக இருப்பதும் எளிமையானதில்லை. அது தராசின் முள்ளைப் போல எப்போதும் நடுங்கிக்கொண்டேயிருக்கும் ஒரு ஸ்திதி.

# அப்பா புகைக்கிறார்

தனது அலுவலகத்திலிருந்து ருக்மணி வெளியே வந்தாள். மணி ஆறு இருபது ஆகியிருந்தது. சாலையில் செல்லும் வாகனங்களின் மீது வெயில் பட்டு தெறித்துக்கொண்டிருந்தது. கோடைகாலம் என்பதால் மாலையிலும் வெயில் அடங்கவில்லை. மின்சார ரயிலைப் பிடிப்பதற்காக செல்லும் வழியில் கடைக்கு போய் ஒரு சிகரெட் வாங்கலாமா என்று ருக்மணிக்கு தோணியது.

இப்படி சில தினங்கள் தோன்றுவதுண்டு. சில வேளைகளில் அவள் சிகரெட் வாங்குவதை பலரும் கவனிப்பார்களே என்று தன்னை அடக்கி கொண்டுபோயிருக்கிறாள். சில வேளைகளில் யாரையும் பற்றிய கவலையின்றி கடைக்கு போய் சிகரெட் வாங்கியிருக்கிறாள்.

அவளது அலுவலகத்திலிருந்து உடன் வரும் ஆண்களில் சிலர் பெட்டிக்கடைக்களில் நின்று புகைப்பதை கண்டிருக் கிறாள். அவர்கள் முன்னால் தானும் போய் சிகரெட் கேட்பது அவர்களை திகைப்படைய செய்யக்கூடும். ஆனால் அது அவளுடைய நோக்கமில்லை.

அவளுக்கு சிகரெட் ஒன்று வேண்டும். அது புகைப்பதற் காக அல்ல. அவள் ஒரு போதும் சிகரெட் புகைத்ததுமில்லை. ஆனால் அவளுக்கு சிகரெட்டின் மணம் தெரியும், சிக ரெட்டை நசுங்காமல் எப்படி கையில் பிடித்துக்கொள்ள வேண்டும் என்று தெரியும். சிகரெட் புகையின் வளையங்கள் காற்றில் எப்படி கரைந்து போகும் என்பதைக்கூட அறிந்திருக்கிறாள்.

பேக்கரியை ஒட்டியிருந்த பெட்டிக்கடையினுள் அவள் நுழைந்த வுடன் கடைக்காரன் அவள் கேட்காமலே ஷாம்பு வேண்டுமா என்று கேட்டான். மாலையில் யார் ஷாம்பு வாங்க போகிறார்கள் என்று அவளாக நினைத்துக்கொண்டு இல்லை என்றாள். உடனே அவன் விக்ஸ் மிட்டாய், ரீபில், சேப்டி பின் வேண்டுமா என்று கேட்டான்.

அந்தக்கடையில் பெண்கள் வாங்கக்கூடிய பொருட்கள் என்று இந்த நான்கு மட்டும்தான் இருக்கிறது என்று முடிவு செய்திருப்பான் போலும். அவள் கண்ணாடி பாட்டில்களுக்கு பின்னால் வரிசை

வரிசையாக அடுக்கி வைக்கப்பட்டிருந்த சிகரெட் பெட்டிகளைப் பார்த்துக்கொண்டேயிருந்தாள்

யாரோ ஒரு ஆள் அவளைத் தள்ளிக்கொண்டு உள்ளே நுழைந்து பான்பராக் வாங்கி வாயில் போட்டுக்கொண்டு மீதி சில்லறையை அள்ளிக்கொண்டு போனான். சில நிமிட யோசனைக்குப் பிறகு ருக்மணி ஐந்து ரூபாய் காசை அவன் முன்னால் நீட்டியபடியே ஒரு சிகரெட் கொடு என்றாள். கடைக்காரனின் முகம் மாறியதை அவள் காணமுடிந்தது. அவன் ஏளனம் செய்வது போன்ற குரலில் என்ன சிகரெட் என்று கேட்டான்.

கடைக்கு ஒரு நாளைக்கு நூறு ஆண்கள் சிகரெட் வாங்க வருகிறார்கள். அவர்களில் ஒருவரிடம்கூட இந்த ஏளனத்தை அவன் காட்டியிருக்க மாட்டான் என்று ஆத்திரமாக வந்தது. அவள் பில்டர் சிகரெட் என்று சொன்னாள். கடைக்காரன் முகத்தை கோணலாக வைத்துக்கொண்டு அதான் என்ன சிகரெட்டுனு கேட்கிறேன் என்றான்.

வில்ஸ் பில்டர் என்று சொன்னாள்.

கடைக்காரன் சிகரெட் பெட்டியை உருவி அதிலிருந்து ஒரு சிகரெட்டை எடுத்து தந்துவிட்டு சில்லறையை கண்ணாடி பாட்டில் மீது வைத்தான்.

அவள் சிகரெட்டை கையில் எடுத்து பார்த்தபோது கடைக்காரன் அவளை முறைத்து பார்த்தபடியே இருப்பது தெரிந்தது. அவள் வேண்டும் என்றே இரண்டுவிரல்களுக்கும் நடுவில் சிகரெட்டை பிடித்துக்கொண்டு நின்று கொண்டேயிருந்தாள். கடைக்காரன் அவளை கேலி செய்வது போன்று தீப்பெட்டியை எடுத்து முன்னால் நீட்டினான். அவள் வேண்டாம் என்று ஒதுக்கிவிட்டு கடையிலிருந்து வெளியேறி நடந்தாள்.

கையில் ஒரு சிகரெட்டோடு நடந்து செல்லும் தன்னை பலரும் வேடிக்கை பார்க்கிறார்கள் என்பது அவளுக்கு தெரிந்தேயிருந்தது. அதைப்பற்றிய கவலையின்றி அவள் சிகரெட்டை கையில் பிடித்த படியே ரயில் வருவதற்காக காத்திருந்தாள். அவளை கடந்து செல்லும் முகங்கள் சிகரெட்டினை கண்டு அதிர்ந்து போயின. அவள் சிகரெட்டை முகர்ந்து பார்த்தாள். அதே வாசனை. இன்னும் அப்படியே இருந்தது.

கடைக்கு போய் சிகரெட் வாங்குவது ருக்மணியின் பதினாலாவது வயது வரை அன்றாட வேலையாக இருந்தது. அவர்கள் வீடு இருந்த தெருவில் உள்ள எல்லா கடைகளிலும் அவள் சிகரெட் வாங்கியிருக் கிறாள்.

ருக்மணியின் அப்பா சிகரெட் பிடிக்கக்கூடியவர். அப்பா சிகரெட் புகைக்கிறார் என்ற சொற்கள் அவளை பொறுத்த வரை மறக்கமுடியாத ஒரு வடு. அந்த சொல்லைக் கேட்ட மாத்திரத்தில் தலையிலிருந்து

கால் வரை குபுகுபுவென ரத்தம் உச்சம் கொள்வதை அவள் பலமுறை உணர்ந்திருக்கிறாள்.

எதற்காக தன்னை அப்பா கடைகடையாக போய் சிகரெட் வாங்கச் சொன்னார் என்று அவளுக்கு புரிந்ததேயில்லை. அந்த நாட்களில் தான் பெண்ணாகத்தானே இருந்தோம். பத்து வயதில் தவறாக இல்லாதசெயல் இருபது வயதில் ஏன் தவறாக கொள்ளப்படு கிறது. அப்போது தன்னை எவரும் ஒருமுறை கூட இப்படி வேடிக்கை பார்க்கவோ அல்லது கேலி செய்வதோ நடந்தது இல்லையே. அது ஏன் காரணம் சிகரெட் பிடிக்கின்றவர்கள் ஆண்கள். அது அவர்களுக்கு மட்டுமேயான ஆடுகளம்.

ருக்மணியின் அப்பா புள்ளியியல் துறையில் வேலை பார்த்துக் கொண்டிருந்தார். அவர் அலுவலகத்தில் ஒருவரோடுகூட சண்டையே போட்டதில்லை. மிக அமைதியான ஊழியர் என்று சொல்லிக்கொண் டார்கள். வீட்டிலிருந்தே சாப்பாட்டை கொண்டுபோய்விடுவார். தினமும் காலை மாலை இரண்டு நேரமும் கோவிலுக்கு போக கூடியவர். விடுமுறை நாட்களில் கூட அலுவலகம் சென்று வேலை செய்யக்கூடியவர்.

ஆனால் இது எல்லாம் வெளி உலகிற்கு. வீட்டில் அப்பா எப்போதும் கத்திக்கொண்டும் அம்மாவோடு சண்டை போட்டபடியும் தானிருந்தார். அம்மாவின் மீதான கசப்புணர்வு அவருக்குள் பீறிட்டுக் கொண்டேயிருந்தது. அவளை அடிக்காத நாட்களே இல்லை. பத்து தடவைக்கும் மேலாக அம்மாவிற்கு மண்டை உடைந்து தையல் போட்டி ருக்கிறார்கள். அத்தனையும் மறந்துவிட்டு தான் அம்மா அவருக்காக ஓடியோடி சாப்பாடு செய்து தருகிறாள். சில வேளை களில் அம்மாவும் தன் மனதில் இருந்த அத்தனை கோபத்தையும் ஒன்று திரட்டி வசையிட்டபோதும் அவர்களுக்குள் இருந்த கசப்புணர்வு குறையவேயில்லை.

அதற்காக தான் அப்பா புகைபிடிக்கத் துவங்கினாரோ என்னவோ, அம்மாவோடு சண்டையிட்ட பிறகு அப்பா ஆவேசத்துடன் சிகரெட் பிடிக்க ஆரம்பிப்பார். தொடர்ச்சியாக ஏழு எட்டு சிகரெட்களைக்கூட பிடித்திருக்கிறார். சிகரெட் பிடிக்கும்போது அவர் முகம் இறுக்க மடைந்து போயிருக்கும். பதற்றமும் எரிச்சலுமாகவே அவர் புகை பிடிப்பார். ஏதோவொன்றை அடக்கி ஆள்வது போன்ற ஆவேசம் அவருக்கு இருக்கும்.

அப்பா பலவருசமாக புகைபிடித்துக் கொண்டுதானிருந் தார். ஆனால் ஒருநாளும் அவர் கடையில் போய் அவருக் காக சிகரெட் வாங்கிக்கொண்டதேயில்லை. காலையில் ஒரு முறையும் மாலையில் இருமுறையும் ருக்மணி தான் கடைக்கு போய் அவருக்காக சிகரெட் வாங்கி வருவாள். சிகரெட் வாங்க கொடுத்த காசில் மீதமிருந்த சில்லறைகளைக்கூட அவர் கவனமாக கேட்டு வாங்கிக்கொண்டு விடுவார். அவர் வழக்கமாக பிடிக்கும் சிகரெட் இல்லையென்றால்

எங்கேயாவது போய் தேடி வாங்கி வரவேண்டும் இல்லாவிட்டால் அவளுக்கும் அடிவிழும்.

ஒவ்வொரு நாளும் கடைக்கு போய் சிகரெட் வாங்கும்போது அதை ருக்மணி முகர்ந்து பார்ப்பாள். புகையிலையின் மணமது. சிகரெட் பெட்டிகள் இல்லாமல் போன நாட்களில் நாலைந்து சிகரெட்டுகளை ஒன்றாக கையில் பொத்திக்கொண்டுவருவாள். அப்போது சிகரெட்டுகள் நழுவி விழுந்துவிடுமோ என்று பயமாக இருக்கும். சிகரெட் உதிர்ந்து போயிருந்தால் அதற்கும் வசவு விழும். இரவில் எத்தனை மணி ஆனாலும் அவளை கடைக்கு அனுப்பி சிகரெட் வாங்கிவர செய்வார் அப்பா. இருள் படிந்த தெருவில் பயமும் நடுக்கமாக கண்ணை மூடிக்கொண்டு ஓடிப்போய் பலமுறை வாங்கி வந்திருக்கிறாள்.

அப்பா சிகரெட் புகையை வீடு முழுவதும் நிரப்ப வேண்டும் என்று விரும்புகின்றவரை போல இந்தபக்கமும் அந்தப்பக்கமும் தலையை திருப்பிக்கொண்டு புகைவிடுவார். யார்மீதுள்ள கோபத் தையோ தணித்துக்கொள்வதற்கா புகைபிடிக்கிறார் என்பது போலவே அவரது முகபாவம் இருக்கும். சிகரெட்டின் சாம்பலை தட்டுவதற்காக அவர் கையில் கிடைக்கும் சில்வர் டம்ளர், தட்டு, பவுடர் டப்பாமூடி என எதையும் எடுத்துக்கொள்வார். ஒருமுறை அவர் அம்மாவின் உள்ளங்கையை நீட்ட சொல்லி அதில் கூட சிகரெட் சாம்பலை தட்டியிருக்கிறார். காரணம் இந்த வீட்டில் உள்ள எல்லாமும் தான் வாங்கி வந்தவை தானே இதில் எதில் சிகரெட்டின் சாம்பலை தட்டினால் என்ன குறைந்துவிடப்போகிறது என்ற எண்ணமே.

அது போலவே சிகரெட்டை அணைத்து வீட்டிற்குள்ளா கவே தூக்கி எறிவார். அவர் புகைக்கும் இடத்தின் அருகில் தான் ஜன்னல் இருந்தது. ஆனால் ஒருபோதும் அவர் ஜன்னலுக்கு வெளியே சிகரெட்டை எறிந்ததேயில்லை.

அம்மா கவனமாக அவர் வீசி எறிந்த சிகரெட் துண்டை பொறுக்கி எடுத்து வெளியே போடுவாள். அப்பா சிகரெட் பிடிப்பதற்காக வைத்துள்ள தீப்பெட்டியை அவர்கள் அடுப்பு மூட்ட ஒருபோதும் உபயோகிக்கக் கூடாது. அது அவர் உறங்கும்போது கூட தலையணியின் அருகாமையிலே இருக்கும். நள்ளிரவில் கூட எழுந்து பாயில் உட்கார்ந்துகொண்டு அப்பா புகைத்துக்கொண்டிருப்பார். அந்த வாடை நாசியில் ஏறி யாராவது செருமினால்கூட அவருக்கு ஆத்திரம் அதிகமாகிவிடும். வேண்டும் என்றே முகத்தின் அருகாமை யில் ஊதுவார்.

அவர்கள் மீது அவருக்கு உள்ள உரிமையை நிலை நிறுத்துவதற்கு இருந்த ஒரே அடையாளமாக சிகரெட் இருந்தது.

ஒருநாள் அம்மா அவர் சட்டை பையில் வைத்திருந்த சிகரெட்டை துணி துவைக்கும்போது கவனமாக எடுத்து வைக்க மறந்து துவைத்து விட்டாள் என்பதற்காக அவளது வலது கையில் சூடு போட்டார்

அப்பா. அன்றிரவு அம்மா வீட்டிற்கு உறங்குவதற்கு வரவேயில்லை. அருகாமையில் உள்ள வரலட்சுமி வீட்டில் போய் படுத்துக் கொண்டாள்.

அவளை வீட்டிற்கு கூட்டி வரும்படியாக அப்பா ருக்மணியை அனுப்பி வைத்தார். ருக்மணிக்கு ஆத்திரமாக வந்தது. அவள் வரலட்சுமியின் வீட்டு வாசலில் போய் நின்றபடியே வாம்மா வீட்டுக்கு வாம்மா வீட்டுக்கு என்று கூப்பிட்டுக்கொண்டேஇருந்தாள். ஆனால் அம்மாவின் காதில் அந்தக்குரல் விழவேயில்லை. தானும் அங்கேயே படுத்துக்கொள்ள வேண்டியதுதான் என்பது போல அவளும் சுருண்டு படுத்துக்கொண்டாள்.

சில நிமிசங்களில் வரலட்சுமி வீட்டு வாசலில் அப்பாவின் குரல் கேட்டது. அவர் ஆவேசத்துடன் கத்திக்கொண்டு நின்றிருந்தார். அவரது ஆபாசமான பேச்சை தாள முடியாமல் வரலட்சுமியக்கா அம்மாவை வீட்டிற்குப் போகும்படியாக அனுப்பி வைத்தாள். ருக்மணி பயத்துடன் கூடவே நடந்து வந்தாள். அப்பா தன் கையில் இருந்த பத்து ரூபாயை தந்து சிகரெட் வாங்கிக்கொண்டுவரும்படியாக சொல்லிவிட்டு அம்மாவை வீட்டிற்கு இழுத்துக் கொண்டு சென்றார்

ருக்மணி இருட்டில் அப்பாவை திட்டியபடியே நடந்து போனாள். இருட்டிற்குள்ளாக ஒரு ரிக்ஷாகாரன் அமர்ந்து பீடி புகைத்துக்கொண்டி ருந்தான். பகலும் இரவும் எண்ணிக்கையற்ற ஆண்கள் சிகரெட் பிடித்துக் கொண்டேயிருக்கிறார்கள். உலகம் முழுவதும் அந்தப் புகை பெண்களை நோக்கியே திரும்புகிறது என்று நினைத்தபடியே அவள் நடந்தாள். கடைகள் யாவும் சாத்தியிருந்தன. எங்கே போய் சிகரெட் வாங்குவது என்று தெரியவில்லை.

அவள் மீன்மார்க்கெட் வரை நடந்து போய் பார்த்தாள். அநேகமாக கடைகள் யாவும் மூடப்பட்டிருந்தன. சிகரெட் இல்லாமல் வீட்டிற்குப் போனால் அப்பா தன்னை அடிக்கக் கூடும் என்ற பயமாக இருந்தது. அவள் சினிமா தியேட்டர் முன்பாக சிகரெட் கடையிருக்கக்கூடும் என்று நடந்தாள். இரண்டாவது காட்சி துவங்குவதற்காக பாடல் கேட்டுக்கொண்டிருந்தது.

ருக்மணி சிகரெட் வாங்கிக்கொண்டு திரும்பும்போது சைக்கிளில் வந்த ஒருவன் பாதி புகைத்த சிகரெட்டை அப்படியே தூக்கி எறிந்துவிட்டு தியேட்டர் உள்ளே செல்வது தெரிந்தது. ஓடிப்போய் அந்த சிகரெட்டை எடுத்துப் பார்த்தாள். பாதி சிகரெட் புகைந்து கொண்டிருந்தது. சுற்றிலும் யாராவது தன்னை கவனிக்கிறார்களா என்று பார்த்துவிட்டு அந்த சிகரெட்டை அவள் ஒரு முறை இழுத்து பார்த்தாள். நெஞ்சினுள் அந்த புகை சென்றதும் புறை ஏறிக்கொண்டு இருமல் வந்தது. சிகரெட்டை வீசி எறிந்துவிட்டு இருமினாள். அடங்கவேயில்லை. அடிவயிறு பிடித்துக்கொண்டுவிடும் போலிருந்தது. பயத்துடன் கண்ணீர் முட்ட தன்னுடைய தலையில் தானே தட்டிக் கொண்டாள். வீட்டிற்கு வந்து சேர்ந்தபோது அப்பா வாசலில்

ஈஸி சேரை போட்டு உட்கார்ந்திருந்தார்.

அவள் சிகரெட்டை அவரிடம் தந்துவிட்டு உள்ளே போய் அம்மா அருகில் படுத்துக்கொண்டாள். சிகரெட்டின் சுவை நாக்கில் அப்படியே இருந்தது. அம்மா அந்த மணத்தை உணர்ந்திருக்கக்கூடும். அவள் பக்கம் திரும்பி முகர்ந்து பார்த்தாள். பிறகு ஆவேசம் ஆனவள் போல சிகரெட் பிடிச்சயாடி. சிகரெட் பிடிச்சயா என்று மாறிமாறி முகத்தில் அறைய துவங்கினாள். ருக்மணி என்னை மன்னிச்சிரும்மா என்னை மன்னிச்சிரும்மா என்று கத்தினாள். ஆனால் அடி நிற்கவே யில்லை.

அப்பா அதை கவனித்தபடியே சாய்ந்து புகைபிடித்துக்கொண்டி ருந்தார். அம்மா கை ஓயும்வரை அடித்துவிட்டு அவளை கட்டிக் கொண்டு அழுதாள். பிறகு இவரும் ஒன்றாக படுத்துக்கொண்டார்கள். அதன்பிறகு சிகரெட் வாங்கப் போகும்போது அந்த வாசனை தன் மீது படிந்து விடக்கூடாது என்று கையை தனியே நீட்டியபடியே போவாள் ருக்மணி.

அவளை போலவே சிகரெட் வாங்க வரும் சிறுவர்கள் சிறுமிகள் நிறைய இருந்தார்கள். எதற்காக ஆண்கள் மட்டுமே சிகரெட் பிடிக் கிறார்கள் என்று அம்மாவிடம் கேட்டாள். அவரு சம்பாதிக்கிறாரு சிகரெட் பிடிக்கிறாரு அதனாலே என்ன என்று சொன்னாள் அம்மா.

ஆறாம்வகுப்பு படிக்கும் போது ஒரு முறை ருக்மணியின் பள்ளிக்கு அப்பாவை அழைத்து வரும்படியாக சொல்லியிருந்தார்கள். அவர்கள் வகுப்பிலிருந்து இரண்டு மாணவிகள் தேர்வுசெய்யப்பட்டு டெல்லியில் நடைபெறும் கலச்சார விழாவில் கலந்துகொள்ள செய்யப்பட்ட ஏற்பாடு அது. அப்பாவை வீட்டிலிருந்து அழைத்துக்கொண்டு போகும் வழியே தயங்கி தயங்கி ருக்மணி சொன்னாள்.

ஸ்கூல்ல வந்து நீங்க சிகரெட் பிடிக்கக் கூடாதுப்பா.

அப்பா அதை கவனித்தது போலவே தெரியவில்லை. பிரேயர் முடிந்தபிறகு பிரின்ஸ்பலை சந்திக்கும்படியாக சொல்லிய வகுப்பு ஆசிரியை அப்பாவை வெளியே காத்திருக்கச் சொன்னாள்.

அப்பா அதற்குள் புகைக்கத் துவங்கியிருந்தார். அவ்வளவு மாணவி களுக்கு நடுவில் நின்றபடியே ருக்மணி கண்ணை மூடி பிரார்த்தனை செய்ய துவங்கியிருந்தபோதும் காற்றில் சிகரெட் புகை கரைந்து வந்துகொண்டேயிருந்தது. பிரேயர் முடியும்வரை யாரும் எதுவும் சொல்லவேயில்லை. அப்பாவாக அதற்குள் பிரின்ஸ்பல் அறையை கண்டுபிடித்து உள்ளே சென்றிருந்தார். பிரின்ஸ்பல் அறைக்குள் நின்றபடியும் அவர் புகைத்துக்கொண்டுதானிருந்தார்.

பிரின்ஸ்பல் தன் அறையில் புகை பிடிக்க அனுமதியில்லை என்று கடுமையான குரலில் சொன்னபோது அது தன்னுடைய தனிப்பட்ட விஷயம். அதில் தலையிட பள்ளிக்கு அருகதையில்லை

என்று சொல்லியபடியே இன்னொரு சிகரெட்டை எடுத்து புகைக்கத் துவங்கினார்.

இதற்குள் வகுப்பு ஆசிரியை ருக்மணியை அழைத்துக் கொண்டு வந்திருந்தாள். அப்பா நிதானமாக புகை பிடித்துக்கொண்டு தன்மகளை வெளியே அனுப்ப தனக்கு இஷ்டமில்லை பொம்பளை பிள்ளையை எப்படி வளர்க்க வேண்டும் என்று எனக்கு தெரியும் என்றார். அந்த அறையில் புகை நிரம்பிக்கொண்டிருந்தது. வகுப்பு ஆசிரியையும் பிரின்ஸ்பலும் தனியே பேசிக்கொண்டிருந்தார்கள். சில நிமிசங்களில் ருக்மணியை அழைத்து அப்பாவை வெளியே அழைத்து செல்லும்படியாக சொன்னார்கள். அவள் கையை பிடித்து இழுத்துக்கொண்டு வந்தபோதும் அவர் புகைத்துக்கொண்டே வந்தார். பள்ளியின் வாசலை தாண்டுவதற்குள் நிச்சயம் தன்னை டெல்லிக்கு அனுப்பமாட்டார்கள் என்று ருக்மணிக்கு தெரிந்துவிட்டிருந்தது.

அப்பாவின் மீது ஆத்திரமாக வந்தது. அப்பா அவர்களது ஆத்திரம் கோபம் வசை எதைப்பற்றியும் ஒரு போதும் கருத்தில் கொண்டதேயில்லை. சிகரெட் பிடிப்பதை தவிர வேறு ஒரு கெட்டபழக்கமும் உங்க அப்பாவுக்கு கிடையாது. சம்பாதிக்கிற பணத்தை ஒழுங்கா வீட்டில் கொண்டுவந்து கொடுத்துவிடுகிறார். ஆபீஸ் விட்டா நேராக வீட்டிற்கு வந்துவிடுகிறார் என்று அம்மாவே பல நாட்கள் அவரை பாராட்டியும் இருக்கிறார்.

ஆனால் அவளுக்கு அப்பாவை பிடிக்காமலே ஆகிப் போனது. அவள் மனதில் எப்போதும் அப்பா புகைக்கிறார் என்ற படிமம் உறைந்து போயிருந்தது. அதனால் தானோ என்னவோ சிகரெட் பிடிக்கின்றவர்களை கண்டாலே அவளுக்கு ஆத்திரமாக வரத் துவங்கியது.

அவள் எட்டாம் வகுப்பு படித்துக்கொண்டிருந்த நாட்களில் அப்பா புகைப்பது மிக அதிகமாகி போயிருந்தது. அதற்கு காரணம் ஓய்வில்லாத சண்டை. ஒவ்வொரு நாளும் அவள் பள்ளியிலிருந்து வீடு திரும்பும்போதும் பயமாக இருக்கும் காரணம் அப்பா அம்மாவை திட்டிக் கொண்டிருப்பாள். அல்லது அடித்துக் கொண்டிருப்பார். அதன் சில நிமிசங்களில் அவள் சிகரெட் வாங்க போக வேண்டியதிருக்கும். பேசாமல் பள்ளிக்கூடம் விட்டு திரும்பி வரும்போதே கடையில் நாலைந்து சிகரெட்டுகள் வாங்கிக் கொண்டுவந்துவிடலாமா என்று கூட யோசித்துக்கொண்டிருப்பாள்.

அப்படியொரு நாள் வீடு திரும்பும்போது வீட்டில் நிறைய ஆட்கள் திரண்டிருந்தார்கள். அம்மா சுவர் ஓரமாக சாய்ந்து கிடந்தாள். அவள் உடல் தலை கலைந்து கிடந்தது. சேலை கிழிந்து தொங்கிக் கொண்டிருந்தது. அவளை சுற்றிலும் உட்கார்ந்திருந்த பெண்கள் புலம்பிக்கொண்டிருந்தார்கள். அப்பா சலனமில்லாமல் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்திருந்தார். அவரிடம் அருகாமை வீட்டு ஆண்களில் சிலர் ஏதோ சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

வீட்டிற்குள் ருக்மணி வருவதைக்கண்டதும் அங்கிருந்த பெண்களில் ஒருத்தி உரத்த குரலில் அழுதபடியே இப்படியொரு பொம்பளை பிள்ளையை தனியா தவிக்க விட்டுட்டு சாகப்போறதுக்கு உனக்கு எப்படி மனசு வந்தது என்று அம்மாவை உலுக்கினாள்.

அம்மா அவள் பக்கம் திரும்பவேயில்லை. அம்மா தற்கொலை செய்வதற்கு முயன்றிருக்கிறாள். பக்கத்துவீட்டு பெண்கள் பார்த்து காப்பாற்றியிருக்கிறார்கள். இல்லாவிட்டால் இந்த நேரம் செத்துப் போயிருப்பாள் என்று சொல்லிக் கொண்டார்கள்.

அதைக் கேட்டவுடன் ருக்மணிக்கு கால்கள் நடுங்கத் துவங்கியது. அவள் அம்மாவின் அருகில்போய் உட்கார்ந்துகொண்டாள். அம்மா வின் கையை எடுத்து தன்னோடு சேர்த்து வைத்துக்கொள்ள முயன்ற போது அவள் தள்ளி விட்டபடியே போ.. போயி உங்கப்பாவுக்கு சிகரெட் வாங்கிட்டு வந்து குடு என்றாள். ருக்மணிக்கு பேசாமல் தான் செத்துப்போய்விடலாம் என்பது போலிருந்தது.

அவள் யூனிபார்மை கூட கழட்டாமல் அப்படியே உட்கார்ந்திருந் தாள். அன்றிரவு எட்டரை மணி வரை அவர்கள் வீட்டில் நிறைய ஆட்கள் இருந்தார்கள். பிறகு அப்பா அவளிடம் பசிக்கிறதா என்று கேட்டார். அவள் இல்லை என்று பொய் சொன்னாள். அப்பா தன் சட்டை பையிலிருந்து ஐம்பது ரூபாயை எடுத்து தந்து அவளுக்கு தேவையான இட்லியும் அவருக்கு சிகரெட்டும் வாங்கிக்கொண்டு வரும்படியாக சொன்னார்.

அவள் எழுந்து பணத்தை கையில் வாங்கிக்கொண்டாள். வாசல் படியை விட்டு இறங்கும்போது அப்பா அழைப்பது போலிருந்தது. அவள் திரும்பிப் பார்த்தபோது அப்பா செருப்பை மாட்டிக்கொண்டு அவளை நிறுத்திவிட்டு தானே கடைக்கு போய்வருவதாகச் சொன்னார். அவளால் நம்ப முடியவில்லை. தானும் கூடவரவா என்று கேட்டாள். அப்பா வேண்டாம் என்றபடியே கீழே இறங்கி நடக்க துவங்கினார்.

இரவு பதினோறு மணி வரை அப்பா வீடு திரும்பி வரவேயில்லை. அம்மா அவளை தேடிப்பார்த்து வரும்படியாக சொன்னாள். ருக்மணி ஒவ்வொரு கடையாக போய் எங்கப்பா சிகரெட் வாங்க வந்தாரா என்று கேட்டுக் கொண்டேயிருந்தாள். அப்பா எங்கேயும் வரவில்லை. இந்த இரவில் எங்கே போயிருக்கக் கூடும். வீட்டிற்கு வந்து அம்மாவிடம் சொன்னபோது அவள் அவிழ்ந்து கிடந்த கூந்தலை சொருகிக்கொண்டு அவளையும் இழுத்துக்கொண்டு சினிமா தியேட்டர் வரை சென்று பார்த்தாள். ஆனால் அங்கேயும் அப்பா இல்லை. நள்ளிரவில் அம்மா தெருவில் நின்றபடியே சப்தமாக அழுதாள். மாலையில் அவள் வீட்டில் திரண்டிருந்தவர்கள் எவரும் ஆறுதல்படுத்த வர வில்லை. அவளும் அம்மாவும் மட்டும் அழுதார்கள்.

அடுத்த நாள் அம்மாவும் அவளும் அப்பாவின் அலுவலகத்திற்கு தேடிப்போய் பார்த்தார்கள். அப்பா அங்கேயும் வரவில்லை. அப்பா விற்கு தெரிந்த ஒவ்வொருவர் வீடாகப் போய் அவர்கள் விசாரித்தார்

கள். அப்பா எங்கேயும் வரவேயில்லை. அம்மாவின் கோபம் அவள் மீது திரும்பியது.

ஒரு சிகரெட் வாங்கிட்டு வந்து குடுக்கிறதுல உனக்கு என்னடி கௌரவம் குறைஞ்சி போச்சி. உங்கப்பா அதுனாலே தானே அன்னைக்கு கோவிச்சிக்கிட்டுப் போயிட்டார் என்று அவளை திட்டத்துவங்கினாள்.

அப்பா காணமல்போய் இன்றைக்கு பதினேழு வருடங்கள் ஆகின்றது. ஆனால் அப்பா ஏன் அவளை கடைசியாக சிகரெட்வாங்க அனுமதிக்கவில்லை என்று அவளால் புரிந்துகொள்ளவே முடிய வில்லை.

அப்பா என்னவாகியிருப்பார். எங்காவது சாலை விபத்தில் அடிபட்டு இறந்து போயிருப்பாரா? அல்லது ஏதாவது ஒரு ஊரில் வேறு ஒரு பெண்ணை திருமணம் செய்து கொண்டு தன்னை போலவே வேறு ஒரு சிறுமிக்கு தகப்பனாகி அவளையும் சிகரெட் வாங்க வைத்துக் கொண்டிருப்பாரா? இல்லை பிச்சைகாரர்களில் ஒருவரைப்போல அலைந்து திரிவாரா? என்று பலநாட்கள் யோசித் திருக்கிறாள்.

சாலைகளில் பேருந்து நிறுத்தங்களில் புகைபிடிக்கும் ஆண்கள் அவளது அப்பாவை நினைவுபடுத்திக்கொண்டேயிருந்தார்கள். அப்பா ஏன் அவ்வளவு மூர்க்கமாக புகைபிடித்தார். அவருக்கு ஏதாவது வேதனை இருந்திருக்குமா. என்ன வேதனை அது.

அப்பா காணாமல் போன சில வருசங்களில் அம்மா தானே உடல் நலிந்து போனாள். அவளை மாமா வீட்டில் கொண்டுபோய் விட்டுவிட்டு ஹாஸ்டலில் தங்கிப் படிக்கத் துவங்கினாள் ருக்மணி. இப்போது வேலை கிடைத்து சம்பாதிக்க துவங்கிய பிறகும் அவளுக்கு ஹாஸ்டல் அறை மட்டுமே ஆறுதல் தருவதாக இருந்தது.

ஆனால் சிகரெட்டின் புகையும் மணமும் அவளுக்குள் அப்பாவின் பிம்பத்தை நாளுக்கு நாள் வலுப்படுத்திக்கொண்டேயிருந்தது. சில வேளைகளில் அதிலிருந்து மீள்வதற்காக அவள் சிகரெட்டை வாங்கிக் கொண்டு வந்து அறையில் இருந்த மேஜையில் போட்டு வைக்கத் துவங்கினாள். என்றைக்காவது அப்பா திரும்பி வந்தால் அவருக்கு இந்த சிகரெட்டுகளை புகைக்க தரலாம் இல்லையா?

அன்றைக்கும் அவள் ரயிலில் சிகரெட்டை கையில் வைத்தபடியே வந்ததை பலரும் வேடிக்கை பார்த்தார்கள். ஒவ்வொரு நாளும் இத்தனை ஆயிரம் பேர் பயணம் செய்யும் ரயிலில் ஒரு பெண்கூட சிகரெட் புகைத்து அவள் பார்த்ததேயில்லை. ஏன் புகைக்கக் கூடாது என்று ஏதாவது சத்தியம் செய்திருக்கிறார்களா அல்லது தடை செய்யப்பட்டிருக்கிறதா?

பொது இடங்களில் நின்றபடியே மூத்திரம் பெய்யும் ஆண்கள், பொது இடங்களில் எச்சில் துப்பும் ஆண்கள், சாலையோர கடைகளில்

நின்றபடியே பஜ்ஜி தின்னும் ஆண்கள், பான்பராக் போடும் ஆண்கள், டாஸ்மார்க் கடைகளில் கூட்டம் கூட்டமாக மது அருந்தும் ஆண்கள், வாந்தியெடுத்து குப்பையில் விழுந்து கிடந்து உறங்கும் ஆண்கள், பிக்பாக்கெட் அடிக்கும் ஆண்கள், பொதுவெளியில் பெண்களை உரசி பாலின்பம் காணும் ஆண்கள் என அவள் காணும் உலகம் முழுவதும் ஆண்கள் விகாரம் வழிந்துகொண்டிருந்தது. அத்தனை ஆண்களும் புகைக்கிறார்கள். அந்த புகைகள் அடுத்த இருக்கையில் உள்ள பெண்கள் மீது, உடன்வசிக்கும் மனைவி மீது, காதலிக்கும் பெண்ணின் உதட்டிற்குள், அருகில் உறங்கும் குழந்தை களின் சுவாசக் கோளங்களில் சென்று நிரம்புகிறது.

ஆண்கள் புகைக்கிறார்கள். அது வெறும் செயல் அல்ல, அது அவளை போன்ற துயரின் வடுமறையாத சிறுவர் சிறுமிகளை உருவாக்கும் வன்முறை. தன்னை ஆண் என்று காட்டிக்கொள்ள வைக்கும் சாதனம். சிகரெட்டை தூக்கி எறிவதை போல, எவ்விதமான எதிர்ப்பும்இன்றி அணைத்து நசுக்குவதை போல தங்களையும் நடத்த முடியும் என்ற எச்சரிக்கை.

ருக்மணி இப்படியான ஏதேதோ யோசனைகளுடன் அறைக்குத் திரும்பி மேஜை டிராயரை திறந்து உள்ளே சிகரெட்டை போட்டாள். நாற்பது ஐம்பது சிகரெட்டு களுக்கும் மேலாக இருந்தது. அதை பார்த்தபோது அப்பா ஏன் கடைசியாக தன்னை சிகரெட் வாங்கிவர சொல்லவில்லை என்ற கேள்வி அவளுக்குள் இன்றும் தீராமல் இருந்துகொண்டேயிருந்தது.

அப்பா காணாமல் போனது முதல் அவர் முகம் அவள் நினை விலிருந்து அழிந்துபோகத் துவங்கியிருந்தது. இப்போது அவரது நினைவாக மிச்சமிருப்பது சிகரெட் மட்டுமே. தன் கடந்த காலத்தின் நினைவாக மிஞ்சியிருப்பது அந்த சிகரெட்டுகள் மட்டுமே தானே என்று தோணியது.

பின்னிரவில் அவள் படுக்கையில் கிடந்தபடியே முகட்டை வெறித்து பார்த்துக்கொண்டிருந்தபோது அறையெங்கும் சிகரெட் புகை நிரம்பியிருப்பதுபோல தோன்றியது. அந்த மணத்தை அவள் நாசி உணர்ந்து கொண்டிருந்தது. திகைத்துப் போய் விழித்து பார்த்தாள். அறையில் அவளை தவிர யாருமேயில்லை.

அத்தனை வருசங்களுக்கு அப்பாலும் அப்பாவின் சிகரெட் புகை அவளுக்குள் கரையாமல் புகைந்துகொண்டேயிருக்கிறது என்பது வருத்தம் தருவதாக இருந்தது. என்ன செய்வது என்று புரியாமல் அவள் கொஞ்ச நேரம் அழுது கொண்டிருந்தாள். பிறகு தனக்குத் தானே பேசிக்கொள்ளத் துவங்கினாள். அப்போது சட்டென அவளும் தன்னுடைய அம்மா போலவே நடந்துகொள்வதாக தோணியது. அதை தான் அவளால் தாங்கிக்கொள்ளவே முடியவில்லை.

# விசித்ரி

—ஐ※ஐ—

விசித்ரி என்று அழைக்கப்படும் அந்தப் பெண்ணின் உண்மையான பெயர் சித்ரலேகா என்றும் அவள் தனது பனிரெண்டு வயதின் பின்மதிய பொழுதிலிருந்து இப்படி நடந்துகொள்கிறார்கள் எனவும் சொன்னார்கள். அந்த மதிய பொழுதில் என்ன நடந்தது என்பதை பற்றி யாரும் இந்நாள் வரை அறிந்திருக்கவில்லை. அன்று கோடை வெயில் உக்கிரமேறியிருந்தது. வேம்பில்கூட காற்றில்லை. வீதியில் வெல்லத்தின் பிசுபிசுப்பு போல கையில் ஒட்டிக்கொள்ளுமளவு படிந்திருந்தது வெயில். வீட்டுக் கூரைகள், அலுமினிய பாத்திரங்கள் வெயிலேறி கத்திக்கொண்டிருந்தன. தெருவில் நடமாட்டமேயில்லை.

சித்ரலேகா தெருவில் நிர்வாணமாக ஓடிவந்ததையும் அவள் கேசத்தில் தூசியும் புழுதி படிந்து போயிருந்ததையும் முத்திருளன் வீட்டின் திண்ணையில் இருந்தபடியே திருகை அரைத்துக்கொண் டிருந்த வள்ளியம்மை கண்டதாகச் சொல்கிறார்கள். வள்ளியம்மை இறந்துபோகும்வரை இந்த நிகழ்ச்சியை ஒவ்வொரு நாளும் நினைவு படுத்தியபடியே இருந்தாள்.

அப்படி நினைவுபடுத்தும்போது நிகழ்ச்சி கொஞ்சம் கொஞ்சமாக விரிவடைந்துகொண்டே வந்து முடிவில் சித்ரலேகாவை யாரோ துரத்திக்கொண்டு வந்ததையும் உடல் முழுவதும் காயங்களுடன் அவள் அலறியபடியே ஓடி வந்ததையும் அவள் பின்னால் கறுத்த நாய் ஒன்று ஊளையிட்டபடியே வந்ததாகவும் சேர்ந்துகொண்டது. உண்மையில் என்ன நடந்தது என்பதை பற்றி சித்ரலேகா இன்று வரை யாரிடமும் தெரிவிக்கவில்லை. இப்போது அவளுக்கு வயது நாற்பத்தி எட்டைக் கடந்திருக்கிறது.

ஓடிவந்த நாளில் இருந்து அவள் யாரோடும் பேசுவதும் பழகுவதும் குறைந்து போனது. அத்தோடு அன்றிலிருந்துதான் அவளது விநோதப் பழக்கம் துவங்கியது. அவளிடமிருந்த அத்தனை பாவடை சட்டை களையும் அவள் ஒன்றின் மேல் ஒன்றாக அணிந்துகொள்ள ஆரம்பித் தாள். ஏதோ பயத்தில் அப்படி செய்கிறாள் என்று அவளை அப்படியே உறங்கவிட்டுவிட்டார்கள்.

ஆனால் மறுநாள் காலையில் அவள் அம்மாவின் பழம்புடவைகள், மற்றும் சகோதரிகளின் உடைகள் அத்தனையும் சேர்த்து அணிந்து கொள்ள துவங்கியபோது அவள் முகத்துக்கு நேராகவே சகோதிரிகள் திட்டினார்கள். சித்ர லேகா அதை கண்டுகொள்ளவேயில்லை. அவள் தன் உடலை எப்படியாவது மறைத்துக்கொண்டுவிட வேண்டும் என்று தீவிர முனைப்பு கொண்டவள் போல ஒரு உடைக்கு மேலாக மற்றொரு உடையை போட்டு இறுக்கிக் கொண்டிருந்தாள். இதனால் அவள் ஒரு துணிப்பொம்மை போன்ற தோற்றத்திற்கு வந்தபோதும்கூட அதைப்பற்றி கவலைப்பட வில்லை.

அத்தனை உடைகளுடன் அவள் உறங்கவும் நடமாடவும் பழகியிருந் தாள். குளிக்கும் நேரத்தில் கூட அவள் இந்த உடைகளில் ஒன்றையும் கழட்டுவதில்லை. ஈர உடைகளுடன் இருந்தால் உடம்பு நோவு கண்டுவிடும் என்று சகோதரிகள் திட்டி அவள் உடைகளை அவிழ்க்க முயன்றபோது ஆத்திரமாகி இளைய சகோதரி கைகளில் கடித்து வைத்தாள் சித்ரலேகா.

வலி தாங்கமுடியாமல் அவள் அழுதபடியே அம்மா விடம் சொன்னபோது அம்மாவும் சகோதரிகளும் சேர்ந்து அவளது ஈர உடைகளை அவிழ்க்க முயன்றார்கள். அவள் கூக்குரலிட்டு அழுத தோடு அத்தனை பேரையும் அடித்து உதைக்கத் துவங்கினாள். அப்படியே இருந்து சாகட்டும் சனியன் என்று அம்மா திட்டியபடியே அவளை தனித்து விட்டுச் சென்றாள். ஈர உடைகள் அவளுக்கு பழகிவிட்டன.

ஆனால் அம்மாவும் சகோதரிகளும் சேர்ந்து தன் உடைகளை அவிழ்த்துவிடுவார்களோ என்று பயந்த அவள் சணல் கயிற்றாலும் ஊக்காலும் ஆடைகளை அவிழ்க்க முடியாதபடி பிணைத்துக்கொண்டு உடலோடு கட்டிக்கொள்ளத் துவங்கினாள். அதன்பிறகு உடைகளை யாரும் தொடுவதைக்கூட அவள் அனுமதிக்கவில்லை.

அதுவே கேலிப்பொருளாகி அவர்கள் வீட்டிற்கு வரும் ஒவ்வொரு வரும் அவள் உடைகளை அவிழ்க்கப் போவதாக பொய்யாக பாவனை செய்தபோது சித்ரலேகாவிடமிருந்து அலறல் குரல் பீறிடும். சித்ரலேகாவை சமாதானம் செய்வது எளிதானதில்லை. அவள் வீட்டிலிருந்து ஓடி தெருவில் வந்து உட்கார்ந்து கொள்வாள். சில நேரம் இரவில் தெருவிலே உறங்கிவிடுவதும் உண்டு. அப்போதும் அவள் கைகள் உடைகளை இறுகப் பற்றிக்கொண்டேயிருக்கும்.

சித்ரலேகாவின் உடை பழக்கம் தான் அவளுக்கு விசித்ரி என்ற பெயரை உண்டாக்கியிருக்க வேண்டும். அதன் பின்வந்த நாட்களில் எங்கே எந்த துணி கிடைத்தாலும் அதை எடுத்து உடுத்திக்கொள்ளத் துவங்கினாள். இதனால் அவள் தோற்றம் அச்சமூட்டுவதாக மாறத் துவங்கியிருந்தது. இருபது முப்பது பாவடைகள். அதன் மீது பத்து சேலைகள், அதன் மீது பழைய தாவணி அதன் மீது கிழிந்த துண்டு என்று அவள் உடலைப் போர்த்தியிருந்த ஆடைகளைக் கண்டு

பெண்களே எரிச்சல் கொண்டனர்.

ஒருவகையில் அவள் ஊரிலிருந்த மற்ற பெண்களுக்கு தங்கள் உடல் குறித்த கவனத்தைத் தொடர்ந்து உண்டாக்கிக் கொண்டிருந்தாள். அவளைப் பார்க்கும் ஒவ்வொரு பெண்ணும் தன் உடலை ஒருமுறை கவனம் கொள்வதும் உடைகளை கவனமாக இழுத்துவிட்டுக் கொள்வதும் நடந்தேறியது.

விசித்ரியின் இந்த பழக்கம் அறிந்தவர்கள் அவள் எவர் வீட்டிலிருந்து எந்த உடையை எடுத்துக்கொண்டு போன போனதும் அவளிடம் கோவம் கொள்வதேயில்லை. விசித்ரி யின் ஆவேசம் பல வருடமாகியும் தணியவேயில்லை. கோடையின் முற்றிய பகலில் அவள் வீட்டை விட்டு வெளியே வருவதேயில்லை. நத்தைகள் சுவரில் ஒட்டிக் கொண்டிருப்பதை போன்று வீட்டு சுவரில் சாய்ந்து ஒடுங்கிக் கொண்டிருப்பாள். சித்ரலேகாவின் மற்ற சகோதரிகள் திருமணமாகிப் போனபோதும் கூட அவள் வீட்டின் உள்ளேயே அடைபட்டுக் கிடந்தாள்.

சில வேளைகளில் அவள் மீது ஆதங்கம் கொண்ட அம்மா அருகில் சென்று உட்கார்ந்து சிறுமிகளை விசாரிப்பது போல தலையை தடவி விட்டுக்கொண்டு அன்னைக்கு என்னடி நடந்துச்சி என்று கேட்பாள். விசித்ரியிடமிருந்து பதில் வராது. அவள் கண்களை மூடிக்கொண்டுவிடுவாள். அல்லது நகத்தைக் கடிக்கத் துவங்கி ரத்தம் வரும்வரை கடித்துக்கொண்டேயிருப்பாள். அம்மாவிற்கு அவளை தான் சித்ரவதை செய்கிறோமோ என்ற குற்றவுணர்ச்சி வந்துவிடும். அப்படியே விலகிப் போய்விடுவாள்.

விசித்ரியை என்ன செய்வது என்று அவர்கள் குடும்பத் திற்கு இந்த நாள் வரை தெரியவேயில்லை. வீட்டுப் பெண்கள் திருமணமாகி சென்று பிள்ளைகள் பெற்று அந்த பிள்ளைகளும் கூட இன்று திருமண வயதை அடைந்து விட்டார்கள். ஆனால் விசித்ரியின் மனதில் நேற்று மதியம் நடந்ததுபோலவே அந்த சம்பவம் அப்படியே உறைந்து போயிருந்தது. யார் அவள் மனதில் உள்ள அந்த சித்திரத்தை அழிப்பது. எந்த காட்சி அவள் மனதில் அப்படியொரு கறையை உருவாக்கியது என்று உலகம் அறிந்து கொள்ள முடியவேயில்லை.

என்ன நடந்திருக்கக்கூடும் என்பது குறித்து சில சாத்தியங் களை விசித்ரியின் அம்மா அறிந்திருந்தாள். அதில் அவள் நம்பிய ஒன்று. புளியந்தோப்பில் மதிய நேரங்களில் யாரும் இருக்க மாட்டார்கள். பெரும்பாலும் சீட்டாடும் நபர்கள் மட்டுமே ஒன்று கூடுவார்கள். அதுவும் சந்தை நடக்கும் நாட்களில்தான் அதிகம் மனிதர்களை காண முடியும். மற்ற நாட்களில் புளியந்தோப்பினுள் நடமாட்டமேயிருக் காது.

அங்கே ஒரு மனிதன் எப்போதுமே உதிர்ந்த புளியம்பழங் களை பொறுக்குவதற்காக அலைந்து கொண்டிருப்பான். அவனுக்கு வயது முப்பது கடந்திருக்கும். சீனிக்கிழங்கு போல வளைந்து பருத்த

முகம். குள்ளமாக இருப்பான். எப்போதுமே அழுக்கடைந்து போன வேஷ்டியொன்றை கட்டியிருப்பான். மேல் சட்டை அணிந்திருப்பது கிடையாது. அவன் மார்பில் இருந்த நரைத்த ரோமங்கள் காய்ந்த கோரைகளை நினைவுபடுத்தியபடி இருந்தன. அவன் புளியந் தோப்பினுள் உள்ள கிணற்றடியில் படுத்துக் கிடப்பான். அல்லது புளியம்பழங்களை பொறுக்கிக்கொண்டிருப்பான்.

அவனுக்கு என்று குடும்பமோ, மனைவியோ இல்லை. அருகாமை யில் உள்ள ஊரைச் சேர்ந்தவன் என்பது மட்டுமே அவர்களுக்குத் தெரியும். அவன் புளியந்தோப்பில் பெண்கள் யாராவது தனியே நடந்து செல்வது தெரிந்தால் நாய் பின்தொடர்வது போல பின்னாடியே வருவான். சிலநேரங் களில் நாயை போலவே புட்டத்தை ஆட்டிக் காட்டுவான். பெண்களில் எவராவது அப்படி செய்வதை கண்டு சிரித்துவிட்டால் உடனே தன் வேஷ்டியை விலக்கி ஆண்குறியை கையில் எடுத்துக் காட்டுவான். அதை கண்டு பெண்கள் பயந்து ஓடிவிடுவார்கள். அது அவனை மிகுந்த சிரிப்பிற்கு உள்ளாக்கும். அப்படியொரு முறை சித்ரலேகாவின் அம்மா வின் முன்னால் அவன் தன் ஆண்குறியை காட்டியிருக் கிறான். அவள் தன் இடுப்பில் சொருகி வைக்கப்பட்டிருந்த கதிர் அருவாளால் அவனை கொத்தப் போவதாகச் சொன்னாள். அவனோ இடுப்பை ஆட்டியபடியே தன் வேஷ்டியை உறிந்து எறிந்துவிட்டு அவள் முன்னால் ஆடினான். அவள் புளியந்தோப்பை விட்டு ஓடிவரும்வரை அவன் ஆடிக் கொண்டேயிருந்தான். வீட்டிற்கு வந்தபோதும் அந்த காட்சி மனதிலிருந்து விலகிப் போகவேயில்லை. அன்று இரவெல் லாம் நரகலை மிதித்துவிட்டது போன்ற அசூஷயை அவளுக்கு தந்தபடியே இருந்தது.

அவன் சிறுமிகளிடமும் இப்படி நடந்து கொள்வான் என்பதைக் கேள்விபட்டிருக்கிறாள். ஒருவேளை அவன் தன் மகளிடம் ஆண்குறி காட்டி பயமுறுத்தியிருக்கக்கூடும். அவள் ஆத்திரமாகி கல்லால் அடித்துவிடவே அவள் பாவடையை உறித்து எறிந்துவிட்டு அவளை வன்புணர்ச்சி கொள்ள முயன்றிருக்கக்கூடும் என்று தோன்றியது. அதை பற்றி எப்படி சித்ரலேகாவிடம் கேட்பது என்று அம்மாவிற்கு புரியவில்லை.

இதற்காக ஒரேயொரு முறை சித்ரலேகாவை அழைத்துக் கொண்டு புளியந்தோப்பின் உள்ளே நடந்து சென்றாள். அப்போதும் அந்த மனிதன் புளியங்காய்களை பொறுக்கிக்கொண்டு அலைந்தான். அவர்களைப் பார்த்தவுடன் உடலை குறுக்கியபடிய கும்பிடுறேன் தாயி என்று சொன்னான். அம்மாவும் மகளும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டார்கள். விசித்ரி அவனை நேர் கொண்டு பார்த்த போதும் அவள் முகத்தில் மாற்றமேயில்லை. அம்மா அவனை நோக்கி காறி துப்பிவிட்டு பெண்ணை கூட்டிக்கொண்டு நடந்து போகத் துவங்கினாள்.

அவர்கள் தொலை தூரம் போன பிறகு அம்மா திரும்பி பார்த்தாள். அவன் வேஷ்டியை அவிழ்த்து கையில் பிடித்த படியே நிர்வாணமான உடலை அவர்களை பார்த்து ஆட்டிக்கொண்டிருந்தான். அம்மா கீழே குனிந்து மண்ணை வாறி தூற்றினாள். அந்த மனிதன் உற்சாகமாக ஆடிக் கொண்டிருந்தான்.

ஒருவேளை அவனாக இல்லாமலும் இருக்கக்கூடும் என்று சித்ர லேகாவின் அம்மாவிற்கு ஏனோ தோன்றியது.

விசித்ரி ஒரு இரவில் தன் உடலோடு சேர்த்து துணியை ஊசி நூலால் தைத்துக்கொள்ள முயற்சித்தாள். அதனால் ரத்தம் கசிந்து ஓடத்துவங்கியது. ஆனால் அவள் கத்தவே யில்லை. தற்செயலாக அவளைப் பார்த்த இளையவள் பயந்து கத்தியபடியே அய்யாவை அழைத்து வந்தபோது அவர் செவுளோடு அவளை அறைந்து கையிலிருந்த ஊசியைப் பிடுங்கினார். அவளோ வெறிநாய் போல ஊளையிட்ட படியே ஊசியை அவரிடமிருந்து மீட்கப் பார்த்தாள். அய்யாவும் ஆத்திரமாகி அவளை காலால் மாறிமாறி மிதித்தார். அவளது கையை முறுக்கிக்கொண்டு அடித்தார். அதில் அவளது வலது கை பிசிகியிருக்கக்கூடும். நாளைந்து நாட்களுக்கு வீக்கமாக இருந்தது. யாரும் அதை தொட அவள் அனுமதிக்கவில்லை. படுத்தே கிடந்தாள்.

அப்போது அவர்கள் வீட்டிற்கு வேலைக்கு வந்து கொண்டிருந்த கொண்டிச்சி சொன்னாள். ஊரில் புதிதாக வந்திருக்கும் தபால் காரனுக்கு பெண்மோகம் அதிகம் என்றும் கடிதம் கொடுப்பது போல அவன் பெண்களின் மார்பை பிடித்துவிடுகிறான் என்றும் ஒரு முறை அவள் தனியே இருந்தபோது அவளிடம் தன்னோடு படுக்க முடியுமா என வாய்விட்டு கேட்டுவிட்டதாகவும் செங்கல் சூளையில் வேலை செய்யும் செவஸ்தியாளை அவன் கீரைப்பாத்தி களில் தள்ளி உறவு கொண்டுவிட்டான் என்றும் சொன்னாள். அதை அம்மாவால் நம்ப முடியவில்லை. அவள் தபால்காரனை கண்டிருக்கிறாள். அவனுக்கு ஐம்பது வயதை நெருங்கியிருக்கும். மனைவியும் இரண்டு பையன் களும் மூன்று மகள்களும் இருந்தார்கள். அவர்களில் சிலர் சைக்கிளில் பள்ளிக்குப் போய்வருவதை அவளே கண்டிருக்கிறாள்.

எதற்காக அந்த மனிதன் பெண்களுக்கு அலைய வேண்டும் என்று கொண்டிச்சியிடம் கேட்ட போது அவன் ஆசை அடங்காதவன். சொன்னால் நம்பமாட்டீர்கள் அவன் மனைவியே இதை எல்லாம் தன்னிடம் சொல்லி புலம்பினாள் என்றும் அவன் ஒருவனே பின்மதிய நேரங்களில் தனியே அலைந்துகொண்டிருப்பவன் என்றும் சொன்னாள்.

ஒருவேளை அதுவும் உண்மையாக இருக்கக்கூடும். சித்ரலேகாவின் அம்மா வயல்வேலை செய்து கொண்டிருந்த பகல்பொழுதில் அந்த மனிதன் புழுதி பறந்த சாலையில் தனியே போய்க்கொண்டிருப்பதை கண்டிருக்கிறாள். அதுபோலவே ஒரு நாள் அவள் மூத்திர சந்து

ஒன்றில் நடந்து போய்க்கொண்டிருந்தபோது அந்த மனிதன் அதற்குள் தனியே நின்று கொண்டிருந்தான். அங்கே என்ன செய்கிறான் என்று புரியாமல் அவள் அவசரமாக கடந்து போனாள். ஒருவேளை அவன் சித்ரலேகாவை ஏமாற்றி இதுபோன்ற மூத்திரசந்திற்கு அழைத்து போய் புணர்ச்சிக்கு மேற்கொண் டிருக்கவும் கூடும். ஆனால் இந்த சந்தேகம் ஒன்றால் மட்டும் எப்படி அந்த மனிதனிடம் போய் கேட்க முடியும்

சித்ரலேகாவின் அண்ணன் ஊரில் இருந்த ஜவுளிசெட்டி ஒருவன் மீது தனக்கு அதிக சந்தேகம் இருப்பதாக சொன்னான். அந்த ஜவுளி செட்டியின் வீடு மிகப்பெரியது. அதில் அவர்கள் அண்ணன் தம்பி இரண்டு பேர் மட்டுமே வசித்தார்கள். இருவரும் ரங்கூனிலிருந்து திரும்பியவர்கள். அவர்களது மனைவியும் குழந்தையும் பர்மாவில் விட்டு வந்துவிட்டதாக சொல்லிக் கொள்வார்கள். அவர்களே அடிக்கடி பர்மாவிற்குப் போய்வருவதாக கிளம்பி சில மாதங்கள் ஆள் இருக்க மாட்டார்கள்.

அவர்கள் வீட்டின் எதிரில் இருந்த பெண்கள் அத்தனை பேருக்கும் ஜவுளி செட்டிக்கும் தொடர்பு இருக்கிறது, அந்தப் பெண்களில் பலரும் புதிது புதிதாக ரங்கூன் சேலைகள் கட்டிக்கொள்வது இதனால்தான் என்றும் அந்த செட்டிகள் அடிக்கடி மதுரைக்குச் சென்றுவருவது வேசைகளுடன் படுத்து உறங்கி கழிப்பதற்காக மட்டுமே என்று சொன்னான் சித்ரலேகாவின் அண்ணன்.

ஒருவேளை அப்படி செட்டிகளில் ஒருவன் நீலமும் மஞ்சளும் கலந்த பட்டு துணி ஒன்றை தருவதாகச் சொல்லி சித்ரலேகாவை வீட்டில் தனித்து அழைத்து கட்டி தழுவியிருக்கக்கூடும். அவள் உடைகளை உருவி எடுத்திருக்க வேண்டும். அதில் பயந்து போய் தான் சித்ரலேகா ஓடி வந்திருப்பாள். அவள் ஓடிவந்த திசையில் இருந்த ஒரே வீடு ஜவுளி செட்டியின் வீடு மட்டுமே. அவர்கள் குற்றம் செய்யாதவர்களாக இருந்தால் எதற்காக பகலும் இரவும் அந்த வீட்டின் கதவுகள் ஜன்னல்கள் மூடப்பட்டேயிருக்கின்றன என்று கேட்டான் சித்ரலேகாவின் அண்ணன்.

இந்த வாதங்கள் சந்தேகங்கள் எதையும் விசித்ரி கண்டு கொள்ளவே யில்லை. அவள் மண்ணில் புதைத்து வைக்கப்பட்ட துணி பொம்மை போல முகம் வெதும்பிப் போய் கண்கள் ஒடுங்கத் துவங்கியிருந்தாள். அவள் உதட்டில் ஏதோ சில சொற்கள் தட்டி நின்றுகொண்டிருந்தன. எதையோ நினைத்து பெருமூச்சு விடுவதும் பின்பு அவளாக கைகளை கூம்பி சாமி கும்பிட்டுக் கொள்வதையும் வீட்டார் கண்டிருக்கிறார்கள்.

ஒரு நாளில் விசித்ரி உறங்கிக்கொண்டிருந்தபோது யாரோ அவளிடம் வம்பு செய்வதற்காக அவள் கால்பாதங்களில் கரித்துண்டை வைத்து தேய்த்திருக்கிறார்கள். கூச்சத்தில் அவள் நெளிந்தபோது அவள் கால்கள் தானே உதறிக்கொண்டன. அவள் எழுந்து தன் பாதங்களை கண்டபோது அதில் கரியால் ஏதோ சித்திரம் போல

வரையப்பட்டிருப்பதை கண்டு அலறி கத்தினாள். வீட்டிற்குள் ஓடிப்போய் காலில் தண்ணீர் ஊற்றிக் கழுவினாள். அப்படியும் அவள் மனது நிலை கொள்ளவில்லை. உடல் முழுவதும் தண்ணீர் ஊற்றிக்கொண்டாள். இரவு வரை கால்பாதங்களை துடைத்துக் கொண்டேயிருந்தாள்.

அன்றிரவு வீட்டில் இருந்த சகோதரிகளின் பழைய சேலைகளை கிழித்து தன் காலில் சுற்றிக்கொள்ள துவங்கினாள். அப்படி சுற்றி சுற்றி காலின் மீது பெரிய பொதி போல சேலைகள் இறுகியிருந்தன. அத்தோடு அவள் சேலையை சணலாலும் இறுக்கி கட்டிக்கொண்டாள். காலில் சேலைகள் கட்டியதிலிருந்து அவளால் எழுந்து நடப்பதற்கு சிரமமாகப் போயிருந்தது. ஆனால் அதைப்பற்றி அவள் கவலை கொள்ளவில்லை. மண்டியிட்டபடியே நடந்து போக ஆரம்பித்தாள். அது அவள் தோற்றத்தில் இன்னமும் பயத்தை உருவாக்கியது.

விசித்ரியை இப்படியாக்கியது கனகியாகக்கூட இருக்கக்கூடும் என்று சொன்னார் பெட்டிக்கடை வைத்திருக்கும் மகாலிங்கம். அதை சித்ரலேகாவின் அண்ணன்கள் நம்பிக் கொண்டிருந்தார்கள். கனகியை பற்றி அப்படியான சில கதைகள் ஊரிலிருந்தன. கனகியின் கணவன் ராணுவத்தில் இருந்தான். அவன் மூன்று வருடங்களுக்கு ஒருமுறை மட்டுமே ஊர் திரும்பிவருவான். மற்ற காலங்களில் கனகி தனித்திருந்தாள். அவளுக்கு வயது இருபத்தைந்து கடந்திருக்க கூடும். எப்போதும் கூந்தல் நிறைய பூவும் வெற்றிலை சாறுபடிந்த சிவப்பு உதடுகளுமாக இருப்பாள்.

தன்னை அலங்கரித்துக்கொள்வதில் அவளுக்கு நிகரான ஊரில் எவருமில்லை. முல்லைமொட்டுகளை அவளுக்காக மட்டுமே கொண்டு வந்து தரும் பூக்காரன் ஒருவன் இருந்தான். அவளது உடைகளும் கூட மினுக்கானவை. அவளோடு எப்போதுமே இரண்டு இளம் பெண்கள் இருப்பார்கள். அவர்களுடன் வாசல்படிகளில் உட்கார்ந்து அவள் பேசிக்கொண்டேயிருப்பாள். அப்போது அவர்கள் சிரிப்பு சப்தம் தெருவெங்கும் கேட்கும்.

அவளுக்கு பகல் உறக்கம் கொள்ளும் பழக்கம் இருந்தது. தனது தோழிகளான இரண்டு இளம்பெண்களுடன் அவள் வீட்டின் கதவை சாத்திக்கொள்வதை சித்ரலேகாவின் அண்ணன் கண்டிருக்கிறான். மாலையில் அந்த வீட்டு கதவு மறுபடி திறக்கும்போது காலையில் பார்த்ததை விடவும் அலங்காரியாக கனகி வாசல்படியில் வந்து உட்கார்ந்துகொள்வாள். பின்பு இரவு வரை அந்த பெண்கள் பேசிக் கொண்டிருப்பார்கள்.

கனகியின் மீது உள்ளூர் ஆண்கள் அத்தனை பேரும் மோகம் இருந்தது. ஆனால் ஒருவன் கூட அதை அவளிடம் வெளிப்படுத்தவே யில்லை. கனகி முன்பொரு நாள் சித்ர லேகாவோடு பேசிக்கொண்டி ருந்ததை அவள் அண்ணன் கண்டிருக்கிறான். ஒருவேளை அவள் தன் தங்கையை மோகித்திருக்கக்கூடும் என்று அவன் மனது சொல்லி

யது. ஆனால் கனகியோடு எந்த ஆணுக்கும் தொடர்பில்லை என்பதை ஊரே அறிந்திருந்தது. அவள் கணவன் வரும் நாட்களில் அவர்கள் ஒன்றாக பைக்கில் சுற்றியலைவார்கள். அப்போது அவள் கணவன் கனகி பற்றிய கேலியை எல்லோரிடமும் பகிர்ந்துகொள்வான்.

இப்படியாக சித்ரலேகாவை பயமுறுத்தியது நகருக்கு படிக்கச் சென்று வரும் ஸ்டீபன் சாரின் மகன் மைக்கேல் என்றும், நாவிதர்களில் ஒருவனான கருப்பையா கூட தனியே பெண்கள் கிடைத்தால் நோங்க கூடியவன் என்றும், பள்ளியின் கணித ஆசிரியராக உள்ள வையாளிகூட பெண்கள் விஷயத்தில் துணிந்தவர் எனவும், தண்ணீர் வண்டியோட்டும் ராயன், ரயில்வே தண்டவாள வேலை செய்ய போன சங்கு, நில அளவையாளர் கடிகைமுத்து. நூற்பு ஆலைக்கு வேலை செல்லும் மச்சேந்திரனோ அவனது தம்பியோ கூட காரணமாக இருக்கக்கூடும் என்றார்கள்.

இந்த சந்தேகம் ஊரில் இருந்த ஆண்கள் பெண்கள் மீது பட்டு தெறித்த போதெல்லாம் அது உடனே மௌனத் தில் புதையுண்டுவிடு வதாக இருந்தது. யாரும் இதை தொடர்ந்து சென்று உண்மையை அறிந்துகொள்ள முடியவில்லை.

விசித்ரியின் முப்பத்திரெண்டாவது வயதில் அவளை ஆறு நாட்கள் உப்பத்தூர் அருகில் உள்ள தர்க்கா ஒன்றில் சிகிட்சைக்காக கொண்டு போய்விட்டு வந்தார்கள். பிராத்தனையும் இரும்பு கம்பியால் போட்ட சூடும், குடம் குடமாக தலையில் தண்ணீர் கொட்டிய போதும் விசித்ரியிடம் ஒரு மாற்றமும் உருவாகவில்லை. அவளை மறுபடியும் ஊருக்கு அனுப்பி வைத்தார்கள். ஊர் வந்த சில நாட்களுக்கு அவள் பசி தாளாதவள் போல சாப்பிட்டுக்கொண்டே யிருந்தாள். அதன்பிறகு அவள் இயல்பாக மாறுவதற்கு ஒரு மாத காலமானது. அவள் எப்போது போலவே முப்பது ஆடைகள் அணிந்தவளாக இருந்தாள்.

விசித்ரியின் வீடு அவள் இளமையிலிருந்தது போன்ற வளமையை இழந்து போகவே திசைக்கொரு சகோரர்களாக பிரித்து போகத் துவங்கினார்கள். வீட்டில் அவளும் வயதான அம்மையும் மட்டுமே யிருந்தார்கள். பண்டிக்கைக்கு ஊருக்கு சகோதரிகள் வருவதும் கூட நின்று போய் நாலு வருசமாகிவிட்டது. அவர்கள் வீடு இருந்த தெருவில் இருந்த மனிதர்கள் கூட இடம் பெயர்ந்து போய்விட்டார்கள். வாகை மரங்கள் வெட்டி சாய்க்கப்பட்டு அங்கே தண்ணீர் தொட்டி வைக்கப்பட்டுவிட்டது. தெருவில் இருந்த வயதானவர்கள் இறந்து அதே ஊரின் மண்ணில் புதையுண்டு அந்த இடங்களில் தும்பை முளைத்தும் விட்டது.

விசித்ரிக்கு போக்கிடம் இல்லை. அவள் எப்போதும் போலவே தன் உடலை சுற்றி முப்பது நாற்பது சேலைகளை சுற்றிக்கொண்டு கால் பெருவிரல் வரை துணியால் கட்டி முடிச்சிட்டு வீட்டிற்குள்ளா கவே இருக்கிறாள். சமையல் அறையின் புகைக்கூண்டை ஒட்டியே

வாழ்ந்த பல்லி கருத்து பருத்து போய் கண்கள் மட்டுமே பிதுங்க இருப்பது போன்று அவள் தோற்றம் மாறிப்போயிருந்தது. ஒருவேளை அவள் இறந்துபோன அன்றுகூட அப்படியே தான் அவளை புதைக்கக்கூடும் என்று அம்மா புலம்பிக்கொண்டி ருந்தாள்.

விசித்ரியின் பனிரெண்டாவது வயதின் கோடை பகலில் என்னதான் நடந்தது? யார் அவள் உடலில் இருந்த உடைகளை உருவியது? எல்லோரும் உண்மையின் ஏதோவொரு பகுதியை அறிந்திருக்கிறார்கள். உண்மையை முழுமையாக அறிந்த விசித்ரி அதை விழுங்கி புதைத்து விட்டாள்.

ஆனால் முற்றிய வெயில் காமம் உடையது என்பதையோ, அது ஒரு மனிதனின் அடக்கப்பட்ட இச்சையை பீறிடச் செய்யக் கூடியது என்பதையும் பற்றி உள்ளூர்வாசிகள் அறிந்தே வைத்திருந் தார்கள். அல்லது வெயிலை காரணம் சொல்லி தன் மனதின் விகாரத்தை வெளியே நடமாட அனுமதித்திருக்கிறார்கள். அதை வெயில் அறிந்திருக்கிறது. இல்லை இரண்டுமே புனைவாகவோ, இரண்டுமே அறிந்து வெளிப்படுத்தப்படாத ரகசியமாகவோ இருக்கக்கூடும்.

எதுவாயினும் காமம் தனி நபர்களின் உணர்ச்சி வெளிப் பாடுடன் சம்பந்தமுடையது மட்டுமில்லை. அது ஒரு புதைசுழல். கோடையின் பின்மதியப் பொழுதுகள் எளிதாக கடந்து போய்விடக்கூடியவை அல்ல. அதனுள் மர்மம் பூத்திருக்கிறது. அதன் சுழிப்பில் யாரும் வீழ்ந்துவிடக்கூடும் என்பதையே விசித்ரி நினைவுபடுத்திக் கொண்டி ருக்கிறாள். அதுதான் பயமாக இருக்கிறது.

# காதல் மேஜை

முள்கரண்டி ஒன்று வெள்ளியால் ஆன ஸ்பூன் ஒன்றை நீண்ட நாட்களாகக் காதலித்துக் கொண்டிருந்தது. இருவரும் மிக நெருக்கமாக ஒரே மேஜையில் இருந்தபோதும் ஸ்பூன் தான் ஒரு பேரழகி என்ற பெருமிதத்தில் முள்கரண்டியை பெரிதாகக் கண்டு கொள்ளவேயில்லை

முள்கரண்டி தீராத காதலின் ஏக்கத்துடன் ஸ்பூனைப் பார்த்து சொன்னது,

"தேனில் கிடந்து ஸ்பூன்களின் குரலும்கூட இனிப் பாக இருக்கிறது. அதற்காகவே காதலிக்க விரும்பு கிறேன்."

மாறாக ஸ்பூன் சொன்னது,

"முள்கரண்டிகள் அருவருப்பானவை. அவை எதையும் லாவகமாகக் கையாளுவதேயில்லை. குத்திக் கிழிப்பது தான் அதன் சுபாவம்."

முள்கரண்டி அப்போதும் காதல் மாறாமல் சொன்னது,

"ஸ்பூன்கள் கச்சிதமானவை. அளவுக்கு மீறி எதையும் அவை ஏற்றுக்கொள்வதேயில்லை. என்ன நளினம். என்ன ஒய்யாரம். இதற்காகவே காதலிக்க விரும்புகிறேன்."

ஸ்பூன் வெல்வெட் துணியில் புரண்டபடியே எரிச்சலுடன் சொன்னது,

"முள்கரண்டிகள் நிம்மதியற்றவை. அவை மூன்று நாக்குகள் கொண்டிருக்கின்றன. நடந்ததையும் நடப்பதையும் நடக்கப் போவதை யும் ஒன்றாகக் குழப்பிக்கொள்ளக்கூடியவை."

அதைக் கேட்டு சற்றே எரிச்சலுற்ற முள்கரண்டி சொன்னது,

"ஸ்பூன்கள் வெட்கமற்று மனிதர்களின் நாக்கை முத்தமிடுகின்றன. தடவிக் கொடுக்கின்றன. முள்கரண்டிகள் ஒருபோதும் அப்படி இருப்பதேயில்லை."

கோபமுற்ற ஸ்பூன் சொன்னது,

"முள்கரண்டிகள் ஒருபோதும் சூப்பின் சுவையை அறிய முடியாது. உப்பும் சர்க்கரையையும் ஒரு போதும் தீண்டமுடியாது. ஐஸ்கிரீமின்

குளிர்ச்சியை ஒருபோதும் உணரவே முடியாது. பாவம் அர்த்தமற்ற வாழ்க்கை."

இரண்டும் முகத்தைத் திருப்பிக்கொண்டன.

வீட்டின் உரிமையாளன் உணவு மேஜைக்கு வந்து சேர்ந்தான். சூடான சூப்பிற்குள் ஸ்பூனைத் தூக்கிப்போட்டான். முள்கரண்டியை ஆவி பறக்கும் இறைச்சியின் நடுவில் குத்தினான். இரண்டும் மௌன மாகின. பசி தீருமட்டும் சாப்பிட்டுவிட்டு எச்சில்பட்ட ஸ்பூனையும் முள்கரண்டி இரண்டும் ஒன்றாக தட்டில் போட்டு எழுந்து சென்றான்.

சுத்தம் செய்யப்படுவதற்காக இரண்டும் ஒரே தண்ணீர் வாளிக்குள் போடப்பட்டன. மிகுந்த ஆவேசத்துடன் ஸ்பூனைக் கட்டித் தழுவிய படியே முள்கரண்டி சொன்னது.

"அன்பே இந்த நிமிடத்திற்காகத்தான் காத்துக்கொண்டிருந்தேன்."

ஸ்பூனும் முள்கரண்டியும் மாறி மாறி முத்தமிட்டுக்கொண்டன.

# எப்படி என்று மட்டும் கேட்காதீர்கள்

பிறக்கும்போதே மீசை முளைத்த லவன் என்ற சிறுவன் தரையில் கால் ஊன்றாத கிராமம் ஒன்றில் வசித்து வந்தான்.

அவன் ஒரு நாள் ரயில்பூச்சி ஒன்றின் மீது ஏறி உட்கார்ந்துகொண்டு உலகைச் சுற்றிவரக் கிளம்பினான். அப்போது கறுப்பு நிறமான மணல் நிரம்பிய பாலைவனத்திலிருந்து மூணுகால் ஒட்டகம் ஒன்று நடந்து வந்தது. வியப்போடு அதைப் பிடித்து தன் சட்டைப் பையில் ஒளித்து வைத்துக்கொண்டான் லவன்.

வழியில் மூன்று கண்கள் கொண்ட ஒரு திருடன் அவனிடமிருந்த ஒட்டகத்தை தன் தூண்டிலைப் போட்டு திருடிக்கொண்டு போக துரத்தினான்.

அவனிடமிருந்து தப்ப லவன் காற்றில் நடந்து போகத் துவங்கினான். மூன்று கண் திருடன் தானும் ஒரு மேகத்தில் ஏறிக்கொண்டு அவனைத் துரத்தினான்.

வழியில் எதிர்ப்பட்ட தலையில்லாத பறவை லவனிடம் சொன்னது, "நீ ஒளிந்துகொள்வதற்கு ஒரு ஊசிமுனை கீழே கிடக்கிறது. அதற்குள் போய்விடு."

லவன் உடனே ஊசியைத் தேடி அதன் காதிற்குள் போனபோது அதில் ஒளிந்திருந்த இரண்டு தும்பிக்கையில்லாத யானைகள் அவனைப் பார்த்து சப்தமாகச் சிரித்தபடியே, "இதுதான் மூன்று கண் திருடனின் வீடு. அவன் எங்களை தன் விரல் நகத்தில் ஒளித்து எடுத்து வந்தான்" என்றன.

பயந்துபோன லவன் அங்கிருந்து வெளியேறி ஒரே எட்டில் கடலின் முன் நின்றான். தாகமாயிருந்த ஒட்டகம் கழுத்தை வெளியே நீட்டி கடலை மொத்தமாக உறிஞ்சிக் குடித்தது. தண்ணீரில்லாத மீன்கள் கடலில் இருந்து தப்பி காற்றில் நீந்திச்செல்லப் பறந்தன

"பேசும் மீன்களே எங்கே போகிறீர்கள்" என்று லவன் கேட்டான்.

அவை "மழையின் ஒரு துளிக்குள் ஒளிந்துகொள்வதற்கு" என்றன. தானும் உடன் வருவதாக அவன் பறந்து சென்றான்.

ஒரு துளி மழை தனியே பூமியை நோக்கி வந்துகொண்டிருந்தது. அதில் அவர்கள் ஒளிந்துகொண்டார்கள். அந்த மழை இரும்புத் தகடு ஒன்றில் விழுந்து அதைத் துளைத்து காகிதம் ஒன்றில் விழுந்து துளைக்க முடியாமல் உறைந்து நின்றது.

அந்தக் காகிதத்தைக் கையில் எடுத்த மனிதன் மழைத் துளியைத் தொட்டு காகிதத்தின் மூன்றாவது பக்கத்தில் சொற்கள் இல்லாத கதை ஒன்றை எழுதி முடித்தான்.

லவன் ஒளிந்துகொண்ட அந்தக் கதையைத்தான் நீங்கள் இப்போது படித்துக்கொண்டிருக்கிறீர்கள்.

# நிழல்வனம்

காற்றின் அசுரக் கைகள் தன்னைப் பற்றிக்கொள்ளும் எல்லா இரவு விலும் நடுக்கத்துடன்தான் மிகவும் தனியாக இருப்பதாக அந்த மெழுகுவர்த்தி பயத்துடன் புலம்பிக்கொண்டேயிருந்தது. அதன் தனிமையை ஒருவரும் புரிந்துகொள்ளவேயில்லை.

ஒரு நாளிரவு ஒரு விளையாட்டு சிறுவன் அந்த மெழுகுவர்த்தியின் வெளிச்சத்தில் தன் கைவிரல் களால் மடக்கி உருவான நிழலைக் கொண்டு ஒரு வாத்தை சுவரில் நடமாடச் செய்தான். மெழுகுவர்த்தி வியப்படைந்தது.

நிழல் வாத்து சுவரில் நடந்தோடியது. யாவரும் அதைக் கைதட்டி வரவேற்றார்கள். உற்சாகமான அவன் அப்புறம் வாய் திறந்து ஊளை யிடும் நாயை, பயத்தில் ஓடும் மானை, ஒற்றைக் கால் நாரையை, அவசரமாக ஏறும் அணிலை, தாவிக் குதிக்கும் குரங்கை. தலை திருப்பும் ஒட்டகத்தை என்று நிழல்களின் வழியே காட்டு உலகம் உருவாக்கி சுவரில் நடமாட விட்டான். வீடே சிரித்து மகிழ்ந்தது. காற்று வந்து வெளிச்சத்தை ஊதி அணைத்தபோது அன்று மெழுகுவர்த்தி பயம் கொள்ளவேயில்லை.

தனக்குள் ஒரு காடு ஒளிந்திருப்பதையும் எண்ணிக்கையற்ற மிருகங் கள் அதற்குள்ளாக ஒளிந்து வாழ்வதையும் அன்றுதான் மெழுகுவர்த்தி அறிந்துகொண்டது.

அதன் பிறகு அது தனிமையைப் பற்றி ஒருபோதும் புலம்பவேயில்லை.

# எழுத்து பறவை

இரவோ பகலோ எப்போதாயினும் நான் எழுதத் துவங்கியதும் அந்தப் பறவை எங்கிருந்தோ வந்துவிடுகிறது. அது காகிதத்தில் நான் எழுதுவதை மௌன மாகப் பார்த்துக்கொண்டிருக்கிறது. சில நேரம் அதை விரட்டுவதற்காக நான் தூக்கி எறியும் சொற்களை விழுங்கிவிட்டு அதே இடத்தில் நின்றுகொண்டிருக்கிறது. அரிதாக அப்பறவை பசியடங் காமல் நிறைய சொற்கள் வேண்டும் என்று கத்துகிறது.

எனக்குத் தேவையில்லை என்று ஒதுக்கிய சில சொற்களை மட்டுமே அந்தப் பறவை சாப்பிட நான் தூக்கி எறிவேன். அது அந்தச் சொற்களால் திருப்தி யடையவில்லை. மிக நெருக்கமாக என் அருகில் வந்து எழுது வதையே பார்த்துக்கொண்டிருந்தது.

அதன் பார்வை கண்ணாடியின் முன்பாக நான் நிர்வாணமாக நிற்பதைப் போல கூச்சமாக இருக்கிறது. எழுவதுவதைப் பார்ப்பதில் பறவைக்கு என்ன அக்கறையிருக்கிறது என்று புரியவில்லை. அது மிகக் கவனமாக ஒரு தானியத்தைக் காண்பதுபோல விருப்பத்துடன் எழுது வதைப் பார்த்துக்கொண்டிருந்தது.

அந்தப் பறவையுடன் பேசுவதற்கு எனக்குத் தெரியவில்லை. ஆரம்ப நாட்களில் அந்தப் பறவையின் இருப்பு சொற்களை என்னை நோக்கி வரவிடாமல் தடுப்பது போன்றிருந்தது. பிறகு அதுவும் மேஜையில் இருக்கும் புத்தன்சிலை போன்று ஒரு பொருள் மட்டுமே என்ற எண் ணம் எனக்குள் உருவானது. நான் எழுதி முடிக்கும் வரை அந்தப் பறவை ஜன்னலில் அமர்ந்து பார்த்துக்கொண்டிருந்துவிட்டு பிறகு பறந்து செல்ல ஆரம்பித்தது.

சில வேளைகளில் நான் எழுதியதை அதற்குப் படித்துக் காட்டத் துவங்கினேன். ஏன் அப்படி எழுதினேன் என்று விளக்கம்சொல்ல ஆரம்பித்தேன். பறவை அதில் அக்கறை கொண்டதாகவே தெரியவில்லை. எப்படியோ விளங்கிக்கொள்ள முடியாத உறவு எனக்கும் அந்தப் பறவைக்கும் இடையில் உருவாகியிருந்தது. பறவை வராத நாட்களின் எழுத முடியாமல் அதற்காகக் காத்துக்கொண்டிருக்கத் துவங்கினேன். அப்பறவை எழுத நினைத்த நிமிடங்களில் தவறாமல் வந்தமர்ந்தது.

நான் எதை எதையோ எழுதினேன்.

எனக்கும் வயதாகியது. அந்தப் பறவையும் மூப்படைந்திருந்தது. பேசிக்கொள்ளாமலே நாங்கள் ஒருவரையொருவர் புரிந்துகொண்டிருந் தோம். பின்பு ஒரு நாள் நீண்ட பெருமூச்சுடன் உனக்கு என்னதான் வேண்டும் நண்பனே என்று பறவையிடம் கேட்டேன்.

பறவை சொன்னது . இத்தனை வருசமாக நீ எழுதுவதைப் பார்த்துக் கொண்டுதானிருக்கிறேன். விந்தையாகத்தானிருக்கிறது. சொற்களைப் பழக்கி ஒன்றோடு ஒன்று இணைத்து மாற்றி எழுதுகிறாய். சொற்கள் உன்னோடு மிக நட்பாக இருக்கின்றன. உன் விருப்பதின்படி எல்லாம் வளைந்து கொடுக்கின்றன.

உண்மையில் சொற்கள் தங்களைக் காப்பாற்றிக்கொள்ள விரும்பு கின்றன. அதனால்தான் அவை எழுத்தாளனை உருவாக்குகின்றன. அவன் வழியே தாங்கள் நித்யமானவையாக உருமாற ஆசை கொள்கின்றன. இது ஒரு ரகசிய விளையாட்டு. பெருந்தந்திரம். புலன் எழுச்சி. இதைப் புரிந்துகொள்ளவே முடியாது என்றபடியே பறந்து போனது.

பின்பு அப்பறவை திரும்பி வரவேயில்லை.

# இரு கை ஓசை

வெயில் வடிந்து மாலை துவங்கும் நேரத்தில் அந்த இரண்டு சிறுவர்களும் ஆளுக்கொரு பக்கமாக வீதியில் நடந்து வந்துகொண்டிருந்தனர். இருவரும் ஒருவரை யொருவர் முன் அறிந்திருக்கவில்லை. இருவருக்கும் வயது பதினைந்திற்குள்ளாக இருக்கும். காலில் இடறிய கல் ஒன்றை உருட்டிக்கொண்டே வந்தான் ஒரு சிறுவன். மற்றவனோ வளைந்து வளைந்து டயர் ஓட்டியபடியே வந்தான். இருவரும் தெருவின் ஒருபுள்ளியில் சந்தித்துக்கொண்டார்கள்.

ஒருவரையொருவர் பார்த்து சிரித்துக்கொண்டார்கள். அவர்களுக்குள் நிமிடத்தில் நட்பு உருவானது.

இருவரும் ஒன்றாக நடக்கத் துவங்கினார்கள். ஒரு வீட்டின் முன்பாக தென்னை மரம் ஒன்று தென்பட்டது. இருவரும் ஒரே நேரத்தில் கைதட்டினார்கள். மறுநிமிடம் மரத்திலிருந்து ஒரு இளநீர் கீழே விழுந்தது. சிரித்தபடியே அவர்கள் நடந்தார்கள்.

நீலநிற பெயிண்ட் அடித்த வீட்டின் பால்கனியில் மஞ்சள் ரோஜாச் செடி தென்பட்டது. இருவரும் மறுமுறை கைதட்டினார்கள். செடியிலிருந்த மஞ்சள் ரோஜாக்கள் உதிர்ந்து அவர்களை நோக்கி விழுந்தது. சப்தமாக சிரித்தபடியே இருவரும் வேகமாக ஓடி ஒரு இடத்தில் நின்று ஒரே நேரத்தில் கைதட்டினார்கள். அடுக்குமாடி வீடு ஒன்றின் ஜன்னல் ஒன்று உதிர்ந்து விழுந்தது. இருவரும் தன்னை மறந்து உற்சாகமாகக் கத்தினார்கள்.

அடுத்த அவர்களது இணைந்த கைதட்டலில் ஆகாசத்திலிருந்து ஒரு பறவை விழுந்தது. தெருவிளக்கிலிருந்த பல்பு விழுந்தது. அவர்கள் இருவரும் உரக்கக் கத்தியபடியே ஓடினார்கள். தங்கள் இருவரது இணைந்த கைதட்டலால் விந்தைகள் நடக்கிறது என்பதை அவர்கள் அறிந்து உற்சாகம் கொண்டார்கள்.

இரவு தத்தி வரத் துவங்கியிருந்தது. இருவரும் தெரு முனைக்கு வந்தபடியே கைகளை உயரே தூக்கி ஒன்றாகத் தட்டினார்கள். ஆகாசத்திலிருந்து ஒரு நட்சத்திரம் உதிர்ந்து விழத்துவங்கியது. அவர்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. மாறிமாறி கைதட்டி நட்சத்திரங்

களை தரையில் விழச் செய்தார்கள். பின்பு அது அலுப்பூட்டியது போல இருவரும் எதிரெதிராக நடந்துபோகத் துவங்கினார்கள்.

தெரு பிரியும் இடத்தில் நின்றபடியே இருவரும் ஒருவரையொருவர் பார்த்தபடியே கைதட்டினார்கள். மறுநிமிடம் இரண்டு சிறுவர்களும் தெருவிலிருந்து புகை போல மறைந்துபோயினர்.

காலை மாலை எனும் பெரும்விந்தைகளை அன்றாடம் பார்த்து சலித்த வீதி இதில் என்ன மாயமிருக்கிறது என்று சிறார்களை ஓரக் கண்ணால் பார்த்துவிட்டு அசிரத்தையுடன் திரும்பிக்கொண்டு விட்டது முடிவில்.

# காலி பாட்டில்

வீட்டிலிருந்து அலுவலகத்திற்குச் செல்வதற்குக் கிளம்புகையில் ஒவ்வொரு நாளும் தண்ணீர்பாட்டிலை நிரப்பிக்கொள்வது என் வேலை.

இரவெல்லாம் பாட்டில் காலியாக இருக்கும். ஒவ் வொரு முறை அதில் தண்ணீர் பிடிக்கும்போதும் வெறுமையை தண்ணீரால் நிரப்பு கிறேன் என்று தோன்றும். நாளின் முடிவிற்குள் அந்த பாட்டில் திரும்ப வும் வெறுமைக்கு வந்து சேர்ந்துவிடும்.

காலி பாட்டில்களை சுமந்து வரும்போது உலகின் மிக அபத்தமான ஒரு செயலைப்போல இருக்கும்.

காலி பாட்டில்கள் வீடு திரும்பும்போது மெல்லிய குரலில் சப்தமிடு கின்றன. அந்த வெறுமை எளிமையானதில்லை. அது ஒரு நடனம். காலி பாட்டில்கள் பலநேரம் காற்றோடு நடனமாடுகின்றன. பூமியின் விசையை பற்றிக்கொண்டு நழுவிப் போய்விடத் துடிக்கின்றன.

காலி பாட்டில்களை உற்று நோக்குவது எளிதானதில்லை. அது இன்மையைக் காட்டிக்கொண்டேயிருக்கிறது.

அந்த நிமிடங்களில் எனக்கு பயமாக இருக்கிறது. உலகம் காலியாகிக் கொண்டேயிருக்கிறது. பேருந்து, திரைஅரங்கம், அலுவலகம், ரயில் நிலையம் என்று நிரம்பும் யாவும் அன்றாடம் வடிந்து காலியாகிவிடு கின்றன.

வெறுமையின் நூறாயிரம் நாக்குகள் துடித்துக் கொண்டேயிருக்கின்றன.

நானாக சுயசமாதானம் செய்துகொள்கிறேன். வீட்டின் பாத்திரங் கள், குடங்கள், டம்ளர்கள், பாட்டில்கள், வெறுமையை தொடர்ந்து நினைவு படுத்துகின்றன. பறவையிலிருந்து உதிரும் சிறகுகள் ஏன் மறுபடி அதே பறவையிடம் ஒட்டிக்கொள்வதில்லை. உதிர்ந்த இலை களை ஏன் மரங்கள் மறந்துவிடுகின்றன. பூமியில் விழும் நட்சத்திரம் ஏன் ஆகாசம் திரும்புவதில்லை. குழப்பமான கேள்விகள் எனக்குள் எழுவதும் விழுவதுமாக இருக்கின்றன.

நான் காலிபாட்டில்களை உள்ளூற வெறுக்கிறேன். அவை போல நானும் ஆகிவிடுவோனோ என்று பயமாக இருக்கிறது. அதே நேரம்

அப்படியாகிவிட்டால் நன்றாக இருக்குமே என உள்ளூற ஆசையாகவும் இருக்கிறது.

அடுத்தவர் பொருட்டு வாழ்வது அபத்தமானதுதானா,

குழப்பமாகவே இருக்கிறது.

# நகுலன் வீட்டில் யாருமில்லை

நகுலன் இறந்துபோன சில வாரங்களுக்குப் பிறகு திருவனந்தபுரம் சென்றிருந்தேன். அவரது வீட்டினைப் பார்க்க வேண்டும் போலிருந்தது. கோல்ப் லிங்க் சாலையில் நடந்தபோது நகுலனின் பூனை எதிர்ப் பட்டது. அது ஒரு நிமிடம் நின்று என்னைப் பார்த்துவிட்டு வழக்கம் போல நகுலன் வீட்டிற்குள் சென்று படுத்துக்கொண்டது. அதனிடம் என்ன பேசுவது என்று எனக்குத் தெரியவில்லை. அது வெட்கமாக இருந்தது. அந்தக் குற்றவுணர்ச்சியில் அவசரமாக தங்கியிருந்த விடுதி அறைக்குத் திரும்பிப் போகத் துவங்கினேன்.

இரண்டு வருடங்களின் முன்பு மழைக்காலத்தில் ஒரு நாள் நகுலனைப் பார்க்கச் சென்றிருந்தேன். அவர் தனது கவிதைகளை பூனைக்கு வாசித்துக் காட்டிக்கொண்டிருந்தார். அந்தப் பூனை பல வருடமாக கவிதைகள் கேட்டு ரசிக்கிறது என்பது அதன் முகபாவத்தில் உறைந்து போயிருந்தது

பொதுவாக பூனைகள் கவிதைகள் எழுதுவதில்லை. ஆனால் கவிதை கள் எழுதுவதற்குத் தேவையான கூர்ந்த அவதானிப்பும், குறுகுறுப்பும், சாந்தமும் அதன் கண்களில் இருக்கின்றன. நகுலனின் பூனை விசித்திர மானது. அது அவர் வீட்டின் முன்னுள்ள ஒரு மஞ்சள்பூச்செடியை நாள் எல்லாம் வியப்போடு பார்த்தபடி இருக்கக்கூடியது.

பூச்செடி ஒன்றினை ஏன் இப்படி பூனை பார்த்துக்கொண்டிருக் கிறது என்று எனக்குப் புரியவேயில்லை. அத்துடன் அந்தப் பூனை நகுலனைத் தேடி வரும் இலக்கியவாதிகளைக் கண்டதும் அலுப்புடன் சோம்பல் முறிப்பதும் ஏன் என்று என்னால் புரிந்துகொள்ள முடியவே யில்லை. நகுலன் தன் பூனைகள் அளவிற்கு எந்த இலக்கியவாதியையும் நேசித்தது இல்லை. அன்றும் அப்படியே நடந்தது.

நான் நகுலனின் வீட்டுத் தாழ்வாரத்தில் அமர்ந்துகொண்டபோது அவர் மாறாத புன்சிரிப்புடன் மனிதர்களை விட பூனைகள் உயர்வா னதுதானில்லையா என்று கேட்டார். நான் பூனைகளுக்கு ஒன்பது

உயிர் இருப்பதாகச் சொன்னேன். அவர் பலத்த சிரிப்புடன் அவை ஒருபோதும் தற்கொலைக்கு முயன்றதேயில்லை. உலகில் இதுவரை ஒரு பூனையாவது அப்படி முயன்றிருக்கிறதா என்று கேட்டார். பூனை 'என்ன அசட்டுத்தனம் இது' என்பதுபோல மெதுவாக நடந்து வீட்டினுள் போனது.

நகுலனின் வீடு கடந்தகாலத்தின் முணுமுணுப்புகளால் நிரம்பியது. அவர் பேசிக்கொண்டிருக்கும்போதே கடந்த காலத்தின் சுழிக்குள் சென்றுவிடுவார். அன்று அது நடந்தது. அவர் என்னை தான் வாசித்த நாவலில் வரும் ஒரு கதாபாத்திரம் தேடி வந்திருப்பதாக நினைத்துக் கொண்டதாகச் சொல்லியபடியே 'நாம் யாரோ ஒருவரின் நாவலில் கதாபாத்திரமாக்கிவிடுவது ஆச்சரியமாக இருக்கிறது' என்றார்.

பிறகு அவராக தன் அம்மாவிற்கு ஒரு நாள் பத்மநாபசாமி கோவிலில் சாமி கும்பிட்டுக்கொண்டிருக்கும் போது திடீரென வில்லியம் பிளேக்கின் கவிதை நினைவிற்கு வந்துவிட்டது. அவள் சாமியின் முன்பாக கண்களை மூடியபடியே அந்தக் கவிதையை சப்தமாக சொல்லத் துவங்கியிருந்தாள். ஏன் அப்படி நினைவுகள் தானே பீறிட்டுக்கொள்கின்றன. நாம் ஒருவரையொருவர் சந்தித்துக்கொள்கிறோம். உங்கள் நினைவுகளில் ஒன்றுகூட எனக்குள் செல்வதுமில்லை. என் நினைவுகளின் தாழ்வாரத்தில் நீங்கள் அலைவதுமில்லை அது ஏன் என்று கேட்டார். அவரது கேள்விகளுக்கு பதில் சொல்ல வேண்டியதில்லை என்று எனக்குத் தெரியும்.

இருவரும் மழையை வேடிக்கை பார்த்தபடியே இருந்தோம். சாலையில் மழைநீர் வடிந்து போய்க்கொண்டிருந்தது. அவர், 'மழையைப் பற்றி நிறைய கவிதைகள் எழுதப்பட்டிருக்கின்றன. மனிதர்களுக்கு மழையை புரிந்துகொள்ள முடிந்ததேயில்லை. மழையில் செடி நனைவதைப் பார்த்திருக்கிறார்களா. அப்படி நனைவதற்கு எனக்கு வெட்கமாக இருக்கிறது' என்றார். பின் நீண்டநேரம் நாங்கள் பேசிக்கொள்ளவேயில்லை.

வெளியில் நடந்து போய்வரலாமா என்று நகுலனே கேட்டார். இருவரும் நடந்து சாலையின் வெகுதொலைவு சென்ற போது சைக்கிளில் கடந்து போகும் ஒரு நபரைக் காட்டி 'இந்த மனிதனை இருபது வருடங்களாகப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். என் வீட்டினை தினமும் கடந்து போகிறான். ஒரு நாள் கூட நான் அவனோடு பேசியதேயில்லை. இது விசித்திரமாக இல்லையா' என்று கேட்டார்.

நாங்கள் ஒரு பள்ளி மைதானம் ஒன்றிற்கு நடந்து சென்றோம். சிறார்கள் பந்து விளையாடிக்கொண்டிருந்தார்கள். நகுலன் முகம் எதிலோ கவனம் கொண்டது போலிருந்தது. அவர் தானாக சிரித்துக் கொண்டார். பிறகு என்னிடம் மிகுந்த ஆதங்கத்துடன் கேட்டார் 'இப்போது நான் என்னைத் தேடி வீட்டிற்கு வரும் நண்பர் நான் இல்லாததைப் பார்ப்பார் இல்லையா' என்று கேட்டார். 'ஆமாம்' என்றேன். உடனே அவர் உற்சாகத்துடன் 'நான் இருப்பதைப் பார்க்க முடிவது போலவே நான் இல்லாததையும் பார்க்க முடிவது சந்தோஷ

மானது தானா' என்று கேட்டார். எனக்கு பதில் தெரியவில்லை.

அவராகவே தொடர்ந்து 'நான் இப்போது என் வீடு, நூலகம் கோவில், வீதிகள், பள்ளிக்கூடம். என உலகின் எல்லா இடங்களிலும் இல்லாமல் தான் இருக்கிறேனில்லையா' என்றார். 'ஒரு மனிதன் ஒரு இடத்தில்தானே இருக்க முடியும்' என்றேன். 'அப்படி நான் நம்பவில்லை. அது வெறும் மயக்கம் ஒரு மனிதன் ஒரே நேரம் வெவ்வேறு இடங்களில் வேறு வடிவங்களில் இருந்து கொண்டுதானிருக்கிறான்' என்றார்.

எப்படி என்று கேட்டதும், 'அதுதான் எழுத்தின் ரகசியம். புனைவில் நீங்கள் ஒரே நேரத்தில் வேறு வேறு வடிவங்களில் இருக்க முடியும்' என்றார். நாங்கள் இருவரும் பந்து விளையாட்டினைப் பார்த்தபடியே இருந்தோம்.

அவர் நினைவில் ஆழ்ந்தபடியே, 'ஒருநாள் ஒரு கனவு வந்தது. அதில் இரண்டு சொற்கள் என் முன்னே வந்து நின்று அதன் பொருள் என்னவென்று துரத்தி துரத்தி கேட்டது' என்று சொன்னார். அது நகுலனின் இயல்புதான்.

நாங்கள் இருவரும் விளையாட்டுச் சிறுவர்கள் கலைந்து போகும் வரை அங்கேயே இருந்தோம். நகுலன் யாருமில்லாத மைதானத்தைப் பார்த்தபடியே இருந்தான். அதில் காலியான மைதானத்தில் ஒரு காவிய சோகம் இருப்பதாகச் சொன்னதாக ஞாபகம்.

பின்பு இருவரும் அவர் வீட்டை நோக்கி நடந்து போகத் துவங்கி னோம். அவர் வீட்டின் முன் நின்றபடியே 'இந்த வீட்டில் நகுலன் இருக் கிறாரா என்று விசாரிக்கலாமா' என்று கேட்டார். அது எனக்கு வேடிக்கையாக இருந்தது.

அவர் உற்சாகத்துடன் வாசல்கதவைத் தட்டியபடியே 'வீட்டில் நகுலன் இருக்கிறாரா' என்று கேட்டார். வேலைக்கார அம்மா கதவைத் திறந்து விட்டபடியே 'அவரை உங்களுக்குத் தெரியுமா' என்று கேட்டாள்.

'பிறந்ததில் இருந்தே தெரியும்' என்றார் நகுலன்.

'அப்படியானால் அவர் வரும்வரை காத்திருங்கள்' என்றபடியே உள்ளே போய்விட்டாள். அவர் கைதட்டியபடியே நன்றாகப் பேசத் தெரிந்தவள் என்றபடியே அறைக்குள் சென்று ஒரு மடக்கு பிராந்தி அருந்திவிட்டு வந்து சாய்வுநாற்காலியில் உட்கார்ந்துகொண்டார்.

பிறகு அவர் ஆதங்கத்துடன் சொன்னார்,

'பாவம் பூனைகள். மனிதர்களோடு சேர்ந்து அதன் சுபாவம் மாறிப் போயிருக்கிறது. வீடு இல்லாத பூனைகளின் துக்கம் புரிந்துகொள்ள முடியாதது. உண்மையில் பூனையாக இருப்பது மகிழ்ச்சியானதில்லை.

# பெருநகரத் தவளைகள்

ஒரு நாளைக்கு பதினெட்டு லட்சம் பயணிகள் வருவதும்போவது மாக உள்ள அந்த மாநகரில் இரண்டே இரண்டு தவளைகள் மட்டுமே வசித்து வந்தன.

ஒரு காலத்தில் அந்த நகரில் ஏழு ஏரிகள் இருந்தன. அதன் கரைகளிலும் தண்ணீரிலும் ஆயிரக்கணக்கான தவளைகள் வசித்தன. அந்தத் தவளைகள் தாங்கள் அழைப்பதால் மட்டுமே மழை அந்த நகரில் பெய்கிறது என்றும் நம்பிக்கொண்டிருந்தன. ஆனால் நகரம் பெரியதாக விரிவடைய ஆரம்பித்தவுடன் ஏரிகள் மூடப்பட்டு அந்த இடங்களில் உயர்ந்த நவீன கட்டிடங்கள், அடுக்குமாடி வீடுகள் உரு வாகின. கிணறுகள், குளங்கள் யாவும் மூடப்பட்டு நீர்சேகரம் முற்றிலும் அழிந்துபோன சூழலில் மீதமிருந்த தவளைகள் வாழ்விடம் தேடி வெளியேறின.

வெளியேற மனதில்லாத கிழட்டுத் தவளைகளை தேடிக் கொல்வதற்கு என்று இரண்டு தன்னார்வ நிறுவனங்கள் உருவாக்கப்பட்டன. அவை ஒன்றிரண்டு ஆண்டுகளில் அந்த நகரை தவளைகள் இல்லாத மாநகராக உருவாக்கி அரசின் உயர்ந்த பரிசினைப் பெற்றது.

ஆயினும் புறநெருக்கடிகளைத் தாண்டி இதே மாநகரில் இரண்டு தவளைகள் இருந்தன. அதில் ஒன்று மிக உயர்ந்த கட்டிடங்களில் ஒன்றான ரபேல் டவரின் எழுபது மாடி குடியிருப்பின் தண்ணீர்த் தொட்டியில் வசித்து வந்தது. பூமியில் இருந்து மிக உயரத்திற்குச் சென்று வசித்த முதல் தவளை அதுவாகத்தானிருக்கக்கூடும். ஆனால் அந்தத் தவளை அதைப் பற்றி அதிகம் அறிந்திருக்கவில்லை. குடியிருப் பில் வசித்த எவர் கண்ணிலும் படாமல் வசித்து வந்தது.

அதே நகரின் மின்சார ரயில் ஒன்றின் கழிப்பறையில் இன்னொரு தவளை வசித்து வந்தது. ரயில் பயணிகள் அதன்மீது நாள் எல்லாம் மூத்திரம் பெய்தபடியே இருந்தனர்.

இந்த இரண்டு தவளைகளுக்கும் இடையில் விளக்கிச் சொல்ல முடியாத ஒரு நெருக்கமிருந்தது. ஒன்றையொன்று பார்த்தறியாத இந்தத் தவளைகள் பரஸ்பரம் ஒருவர் பேசுவது மற்றவர்க்குக் கேட்டது.

அது எப்படி என்று மனிதர்களைப் போல அந்தத் தவளைகள் யோசிக்க வில்லை. மாறாக தவளைகள் எங்கிருந்து பேசினாலும் இன்னொரு தவளைக்குக் கேட்பது இயல்புதானே என்று இரண்டும் பேசிக் கொண்டிருந்தன.

தண்ணீர்த்தொட்டித் தவளை சொன்னது,

'நகரம் என்பது மாபெரும் கல்லறை... வீடுகள் இறுக்கமாக மூடிக் கொண்டு மூச்சுவிடக்கூட முடியாத நெருக்கடியில்தானிருக்கிறது. நகரில் வசிக்கும் மனிதர்கள் கரப்பான்பூச்சிகள் போன்றவர்கள். எந்த நெருக்கடிக்குள்ளும் வாழ்ந்துவிடுவார்கள். என்னால் அப்படியிருக்க முடியவில்லை எனக்கு வானம் தெரியவேண்டும். காற்று வேண்டும். மழை என்மீது படவேண்டும்.'

உடனே ரயில்தவளை அலுப்புடன் சொன்னது,

'நீ பரவாயில்லை. நான் இருக்குமிடம் மிக மோசமானது. மனிதர்கள் விடிகாலை துவங்கி நாள் எல்லாம் மூத்திரம் பெய்தபடியே இருக்கிறார் கள். மனிதர்களைத் தவிர வேறு எந்த மிருகமும் மலஜலம் கழிக்க இவ்வளவு சிரமம் கொள்வதில்லை. இவ்வளவு நேரத்தை வீணடிப்ப தில்லை. மாநகர மனிதர்கள் மிக ஆபாசமானவர்கள். அவர்கள் மூத்திரம் அடிப்பதைக்கூட பெரிய சாதனையாக நினைக்கிறார்கள். மின்சார ரயில் என்பது ஓடிக்கொண்டேயிருக்கும் ஒரு அசுரமிருகம்.'

உடனே தொட்டித்தவளை ஆதங்கத்துடன் சொன்னது,

'நீயாவது மூத்திரத்தில் நனைந்தபடியே ஓடிக்கொண்டேயிருக்கிறாய். நானோ பிறந்தது முதல் தரையிறங்கி வந்து பார்த்ததேயில்லை. ஆகாசம் கூட தெரியாதபடி இரும்புப் பலகை கொண்டு தண்ணீர்த் தொட்டி பூட்டப்பட்டிருக்கிறது.'

'உலகில் தண்ணீரைப் பூட்டி வைக்கிறவர்கள் மனிதர்கள் மட்டும் தான். இந்த இரும்புக் கதவு வாரம் ஒரு நாள் திறக்கும். அப்போது ஒரு இயந்திரம் மிகுந்த இரைச்சலோடு இதைச் சுத்தம் செய்யும். அந்த இரும்புக் கைகள் ஒரு நாள் என்னையும் உறிஞ்சிவிடும் என்று பயமாக இருக்கிறது' என்றது.

அதைக்கேட்ட ரயில் தவளை சொன்னது,

'நல்லவேளை ரயிலின் கழிப்பறைகளை சுத்தம் செய்வதில் மனிதர்கள் அதிக அக்கறை கொள்ளவில்லை. அதனால் நான் தப்பித்தேன். எனக்குத் தேவை ஒரு நல்ல உறக்கம். மனித மூத்திரம் உடலில் படாமல் உறங்க மட்டுமே விரும்புகிறேன். அதற்குப் போக்கிடமே இல்லை.'

உடனே தொட்டித் தவளை, 'நீ விரும்பினால் என் இருப்பிடத்திற்கு வந்து சேரலாம் இங்கே நிம்மதியாக உறங்கலாம்' என்றது. உடனே ரயில் தவளை 'நீ விரும்பினால் என் ரயிலுக்குள் வந்துவிடலாம். அது நகரினை தானே சுற்றிகாட்டிவிடும்' என்றது. உடனே தொட்டித் தவளை 'சிக்கலான பாதைகள் கொண்ட நகரில் எங்கே நீயிருக்கிறாய் என்று எப்படி நான் கண்டுபிடிப்பது' என்று கேட்டது.

உடனே ரயில் தவளையும், 'உயர்ந்த கட்டிடங்கள் உள்ள இந்த நகரின் எந்த அடுக்குமாடிக் குடியிருப்பில் நீயிருக்கிறாய் என்று எப்படிக் கண்டுபிடிப்பது' என்றது. இரண்டும் ஒரு நாள் முழுவதும் யோசித்தன.

பிறகு தொட்டித் தவளை சொன்னது, 'என் அடுக்குமாடிக் குடியிருப்பு கண்ணாடியால் ஆனது. இங்கே படிக்கட்டுகளே கிடையாது. நிறைய கார்கள் முன்னால் நிற்கும்' என்றது. உடனே ரயில் தவளை, 'அப்படித் தான் நான் வசிக்கும் மின்சார ரயிலும். இந்த ரயிலுக்குக் கதவுகளே கிடையாது. இதைப் பார்த்தவுடன் மனிதர்கள் இடித்து நெருக்கிக் கொண்டு ஓடிவருவார்கள்' என்றது.

'இவ்வளவுதானா கண்டுபிடித்துவிடலாம்' என்று இரண்டு தவளை களும் ஒன்றையொன்று சந்திப்பதற்கான நாளைக் குறித்துக்கொண்டன. தண்ணீர்த்தொட்டியை சுத்தம் செய்யும் இயந்திரத்தின் குழாயில் ஒட்டிக்கொண்டு தொட்டித் தவளை வெளியேறியது. அதுபோலவே கழிப்பறைத் தவளையும் பிளாஸ்டிக் காகிதம் ஒன்றில் தன்னை நுழைத்துக்கொண்டு தாவிக் குதித்து வெளியேறியது.

இரண்டு தவளைகளும் நகரின் வேறுவேறு பகுதியில் ஒன்றையொன்று தேடி அலைந்தன. நகரின் இரைச்சல்களும் வாகன நெருக்கடியும், பதற்றம் நிரம்பிய முகங்களைக் கண்ட தவளை பயத்தில் 'நீ எங்கேயிருக்கிறாய்' என்றது. ரயில் தவளை பயத்துடன் 'நான் உன்னைப் பார்க்கிறேன் என்று நினைக்கிறேன். தாவிக் குதித்தால் என்னைப் பார்க்க முடியும்' என்றது.

உடனே தொட்டித் தவளை, 'நீயும் தாவிக் குதித்தால் என்னைப் பார்க்கலாம்' என்றது. இரண்டு தவளைகளும் நகரின் இரண்டு சாலை களில் நின்றபடியே தாவித் தாவிக் குதித்துக்கொண்டிருந்தன. ஆனால் இரண்டும் பார்த்துக்கொள்ள முடியவில்லை. முடிவில் அலுப்புடன் தொட்டித் தவளை சொன்னது, 'நாமும் மனிதர்களைப் போலவே நடந்துகொள்கிறோம். நம்மால் அருகில் இருந்தும் ஒருவரையொருவர் பார்த்துக்கொள்ள முடியவில்லை' என்றது.

உடனே ரயில் தவளை, 'எனக்கு பயமாக இருக்கிறது. எப்படியாவது அந்தக் கழிப்பறைக்கே நான் திரும்பிப் போய்விடுகிறேன்' என்றது. தொட்டித் தவளையும் 'நானும் தண்ணீர்த்தொட்டிக்குப் போய் விடுகிறேன்' என்றது.

இரண்டும் அவசரமாக சாலையின் குறுக்கே தாவின. அதிவேகமான காரின் சக்கரத்தில் சிக்கி இரண்டும் நசுங்கிப் போயின. மறுநாள் காரில் பள்ளிக்குச் செல்லும் குழந்தையொன்று சாலையில் நசுங்கிக் கிடந்த தவளையைக் காட்டி அது என்னவென்று கேட்டது. குழந்தையின் அப்பா 'அது சாலையைக் கடக்கத் தெரியாத முட்டாள் தவளை' என்றபடியே சிரித்தார். குழந்தை 'பாவம்' என்றது. உடனே அப்பா 'சாலை அசுத்தமாகிவிட்டது' என்று முகஞ்சுழித்தபடியே மகளோடு செல்லத் துவங்கினார்.

# காலிடை பறவை

அவனுக்கு இரண்டு வயதானபோது ஒருநாள் அருகாமை வீட்டில் உள்ள சர்வேயரின் மனைவி அவனை இடுப்பில் தூக்கி வைத்துக் கொண்டு மீன் வாங்கப் போனாள். சாலையில் நடக்கையில் அவளது இடுப்பில் அவனின் ஆண்குறி அழுத்திக் கொண்டேயிருந்தது. அதை உணர்ந்தவள்போல சிரிப்புடன் என்ன 'குஞ்சு வலிக்குதா' என்று கேட்டாள். அவன் பதில் சொல்லாமல் நெளிந்தான்.

அவளாகவே அவனது குஞ்சை விரலால் பிடித்து முத்திவிட்டு 'இது என்னனு உனக்குத் தெரியுமா' எனக்கேட்டாள். 'தெரியாது' என்றான். அவள் இது 'ஒரு பறவை. உன் கூடவே ஒட்டிக்கிட்டு வளருது' என்றாள். அன்றிலிருந்து அதை நம்பத் துவங்கினான். அடிக்கடி அவனது காலிடை இடுக்கில் ஒளிந்து வளரும் பறவையை அவன் உற்றுப் பார்க்கவும் அதன் அசைவுகளை கவனிக்கவும் துவங்கினான்.

அவனோடு படித்த பள்ளி மாணவி ஒருத்தியிடம் அதைப்பற்றிச் சொன்னபோது கேலியாக அவளும் 'அது பறவைதான்' என்று சொன்னாள். அவனது பதின்வயதில் அந்தப் பறவை அவன் விருப்பம் இல்லாமலே பறக்க எத்தனிப்பது போல அசைவு கொண்டது. அதைக் கட்டுப்படுத்த பெரிய முயற்சிகள் மேற்கொள்ள வேண்டியதாகியது.

இருபது வயதில் ஒரு இரவு பேருந்து நிலையத்தில் சந்தித்த வேசை அவனிடம் 'இந்தப் பறவை அமர்வதற்கு கிளை தேடிக் கொண்டிருக்கிறது' என்று சொல்லிச் சிரித்தாள். அவனுக்கு அது புரியவில்லை. ஆனால் காமம் அவனுக்குள்ளாக சுரக்க ஆரம்பித்த பருவம் என்பதால் அவன் தன் பறவையோடு ஏக்கத்துடன் சுற்றியலையத் துவங்கினான்.

எந்தப் பெண்ணைக் கண்டாலும் பறவை பறத்தலுக்காக துடிக்க ஆரம்பித்துவிடும். ஒருநாளிரவு அவன் முதன்முறையாக ஒரு பெண்ணை அறிந்தான். அன்று மழை நாள். அவள் ஈர உடையுடன் மழைக்கு ஒதுங்கி நின்றிருந்தாள். அவளாகவே வந்து பேரம் பேசினாள். அந்தப் பெண்ணை தன் அறைக்கு அழைத்துப் போனான். ஆடைகள் அற்ற பெண் உடலை வியப்போடு பார்த்தபடியிருந்தான். அவனது பறவை சிறகடிக்கத் துவங்கியது.

இருவரும் ஒன்றாக படுக்கையைப் பகிர்ந்துகொண்டார்கள். புணர்ச்சியின்போது அவன் தன் பறவையின் கொந்தளிப்பை உணர்ந்தான். இரையை உண்ணப் பாயும் பருந்துப் பாய்ச்சல் போலவும் தேன் எடுக்கும் சிட்டின் மிதத்தல் போலவும் மாறிமாறி உணர்வு எழுந்து அடங்கியது. முடிவில் அந்தப் பறவையிலிருந்து இன்னொரு பறவை அரூபமாக பறந்து போய்க்கொண்டிருப்பதை அவனால் உணர முடிந்தது. அந்த அரூப பறவையின் பெயர் என்னவென்று அவனுக்குத் தெரியவில்லை.

ஆனால் சிரிப்பாக வந்தது.

# கனவை விதைப்பவள்

அந்த வேலைக்கார பெண்ணிற்கு இருபது வயதே இருக்கக்கூடும். மெலிந்தவளாக இருந்தாள். அவளது கண்கள் பச்சை நிறமாக இருந்தன. அடர்ந்த கூந்த லிருந்தது. வெளிர்மஞ்சள்நிறச் சேலை கட்டியிருந் தாள். தயக்கமான குரலில் அவள் சொன்னாள், 'நான் இதுவரை பதினாறு வீடுகளில் வேலை பார்த்துவிட்டேன். எங்கும் இரண்டுவாரங் களுக்கு மேல் இருக்க முடிந்ததில்லை. நிச்சயம் அதற்கு காரணம் நானில்லை. நான் விசுவாசமாக இருக்கவே விரும்புகிறேன். நாள் முழுவதும் கடினமாக வேலை செய்யவே ஆசைப்படுகிறேன். ஆனால் என் விதி என்னைத் துரத்தியடிக்கிறது' என்றாள்.

'நிச்சயம் எங்கள் வீட்டில் அப்படி நடக்காது' என்றார் அப்பா. அம்மாவிற்கும் அந்த வேலைக்கார பெண்ணைப் பிடித்திருந்தது.

அன்றே வேலைக்குச் சேரும்படியாகச் சொன்ன தால் உடனே தன் வேலையை ஆரம்பித்துவிட்டாள். அவளைப் போன்று வீட்டினைத் தூய்மைப்படுத்தும் பெண் எவரையும் நாங்கள் கண்டதேயில்லை. ஒரு குழந்தையைக் குளிக்க வைப்பது போன்ற கவனத்துடன் பாத்திரங் களைக் கழுவி எடுத்தாள். வயதான வருக்கு மருந்து தேய்த்துவிடுவது போல அக்கறையுடன் வீட்டுச் செடிகளுக்குத் தண்ணீர்விட்டாள்.

சிறுவர்களை பொய்யாக அடித்து விளையாடுவது போல உடை களைத் துவைத்து எடுத்தாள். காய்கறிகளை வெட்டுவதற்கு முன்பு அவற்றைக் கொஞ்சி அனுமதி வாங்கினாள். தண்ணீரை அவள் தேனைப் பயன்படுத்துவதுபோல அறிந்து உபயோகித்தாள். ஒரு நாளில் அவள் மீது யாவருக்கும் அதீத ப்ரியம் கூடியது.

இரண்டாம் நாள் அவள் வந்தபோது வீட்டில் சின்ன மாற்றம் ஒன்றிருப்பதை அவள் உணர்ந்தாள். ஆனால் அதைக் கண்டுகொள்ள வில்லை. அன்றும் அவளது வேலையின் அக்கறை கூடியது. மூன்று நாட்கள் அவள் வேலை செய்த பிறகு நான்காம் நாளின் காலையில் அம்மா முதன்முறையாகச் சொன்னாள்.

'ராத்திரி ஒரே கெட்டகனவாக வருகிறது. தூங்கவே முடியலை.'

அண்ணியும் தன்னையும் கெட்ட கனவுகள் அமுக்கிப் பிடித்துக்

கொண்டன என்றாள். அப்பாவும் அண்ணனும் தங்கைகளும்கூட ஒரே துர்சொப்பனத்தைக் கண்டதாகப் பேசிக்கொண்டார்கள். ஓநாய் ஒன்று அவர்களைத் துரத்தி சாகடிப்பது போன்ற அந்த துர்சொப்பனம் எப்படி யாவருக்கும் ஒரே நேரத்தில் வந்தது என்று அவர்களுக்குப் புரியவில்லை.

இது நடந்த இரண்டு நாட்களின் பிறகு வீட்டில் யாவருக்கும் தண் ணீர் மகாபிரளயம் போல வந்து அடித்துச் செல்வது போன்ற துர் சொப்பனம் வந்தது. அடுத்த நாள் எண்ணிக்கையற்ற பாம்புகள் துரத்தும் கனா யாவருக்கும் வந்தது. ஒரு வாரத்தின் பின்பு அம்மா சொன்னாள், ‘இந்த வேலைக்கார பொண்ணு வந்தபிறகு தான் எல்லாருக்கும் இப்படி கெட்டசொப்பனம் வருது. இவதான் துர்சொப்பனங்களை நம்ம வீட்டுக்குள் கொண்டுவந்துவிடுகிறாள் போலும்.’ அதை உடனே மறுப்பில்லாமல் யாவரும் ஆமோதித்தார்கள்.

அன்று காலையில் வேலைக்காரி வந்துசேர்ந்தவுடன் அம்மா அவள் தினமும் சாமி கும்பிடுகிறாளா, எந்தக் கோவிலுக்குப் போகிறாள் என்று விசாரிக்கத் துவங்கினாள். அந்தப்பெண் வேலை முடிந்துசெல்ல இரவாகிவிடுவதால் தான் கடவுளை வணங்க நேரமிருப்பதில்லை என்றாள். அம்மா சற்றே கோபத்துடன் ‘நீ வந்த நாளில் இருந்து வீட்டில் யாவருக்கும் கெட்ட கனவாக வருகிறது’ என்றாள். அவள் அதற்கு ‘நான்தான் காரணம் என்று தெரியும்’ என்றாள். அம்மாவிற்கு அதிர்ச்சி யாக இருந்தது.

அந்த வேலைக்காரி சொன்னாள், ‘இதற்காகத்தான் முந்திய வீடுகளில் என் வேலை பறி போனது. நான் செல்லும் இடங்களில் எல்லாம் துர் சொப்பனங்கள் தானே வந்துசேர்ந்துவிடுகின்றன. அதை எப்படி விரட்டுவது என்று எனக்குத் தெரியவில்லை. அதில் என் தவறு எதுவுமில்லை. ஆனால் விதி வலியது. என் வழியே துர்சொப்பனங்களை வீடுகளில் தூவுகின்றன. நான் வெறும் கருவி. எப்படியும் என் வேலை போய்விடும் என்று தெரியும். நான் புறப்படுகிறேன். ஒன்றேயொன்றை மட்டும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இதுவரை எனக்கு ஒரு நாள் ஒரு கனவுகூட வந்ததேயில்லை. நான் துர்சொப்பனமாக இருந்தாலும் பரவாயில்லை என்று ஒரு கனவு காண விரும்புகிறேன். சாத்தியமாகவேயில்லை. இதுதான் விதியின் முரண் போலும்’ என்றபடியே தான் கொண்டுசென்ற சாப்பாட்டுப் பாத்திரத்தை சமையல் அறையில் வைத்துவிட்டு வேலையை விட்டு அவளாகவே வெளியேறிச் செல்லத் துவங்கினாள்.

# சித்திரமீன்

ஆறு வயதிருக்கும் அந்தச் சிறுவன் தனியே உட்கார்ந்து தனக்குத் தானே பேசியபடியே கலர் பென்சிலால் படம் வரைந்து கொண்டிருந்தான்.

“ஒரு வீட்டை வரையும்போது யாருமே அங்கே இருக்கிற மீன் தொட்டியை கவனிச்சி வரையுறதேயில்லை.”

“மீன் தொட்டியை வரையுறது ரொம்ப கஷ்டம்.”

“உலகத்திலயே தண்ணியை வரையுறதுதான் ரொம்ப ரொம்ப கஷ்டம். எப்படி வரைஞ்சாலும் அது தண்ணி மாதிரியே இருக்காது.”

“அந்தத் தண்ணிக்குள்ளே நீந்திக்கிட்டிருக்கிற மீனை வரையுறது முடியவே முடியாது. அந்த மீன் ஒரு இடத்தில நிக்கவே மாட்டேங்குது. எப்பாவது நின்னா அசைஞ்சிகிட்டே நிக்குது. பிறகு மீனு நினைச்சி நினைச்சி ஓடிக்கிட்டு இருக்கு.”

“படத்தில வரைஞ்ச மீனு அசையுறதேயில்லை. அதை அசைக்கிறதுக்காக நான்தான் பேப்பரை ஆட்ட வேண்டியிருக்குது. அப்போ கூட மீன் முன்னாடி போறதேயில்லை.”

“படத்தில் வரைஞ்ச மீன் ஏன் நீந்தமாட்டேங்குதுனு தெரியுமா. அதுக்கு ஒரு மேஜிக் பிரஷ் இருக்கு. அதை வச்சி வரையணும். அப்போ அந்த மீனு நீந்தும்.”

“மீனை வரையும்போது அதோட கண்ணை வரையுறது லேசில்லை. கண்ணுக்குள்ளே என்னமோ இருக்கு. அது சுத்திகிட்டே இருக்கு. அது நம்மளைப் பாத்துகிட்டே இருக்கு. சிரிக்குது. மீனுக்கு நிறைய ட்ரீம்ஸ் வரும். அந்த ட்ரீம்ல அது பஸ்மேல நீந்திகிட்டுப் போகும். ப்ளைட் மாதிரி ஆகாசத்தில நீந்திகிட்டு இருக்கும்.”

“எனக்கு வீட்டை வரையுறது பிடிக்காது.”

“அதுல கடல் இருக்காது.”

“மரம் இருக்காது.”

“பூ இருக்காது.”

“அணில் இருக்காது.”

“மேகம் இருக்காது.”

“சூரியன் இருக்காது.”

“ஒரு பறவைகூட இருக்காது.”

“ஒண்ணுமே இருக்காது.”

“எனக்கு எங்க வீட்டைத் தவிர வேற ஒண்ணுமே வரையத் தெரியாது.”

“ஆனா வீட்டை வரையும்போது யாருமே மீன் தொட்டியை வரையறதேயில்லை.”

# பெயரில்லாத கரப்பான்பூச்சி

ஜ ❁ ஞ

**கா**தலில் தோல்வியடைந்து கசந்து போயிருந்த கரப்பான் பூச்சி யொன்று உறக்கமில்லாமல் அவதிப்பட்டுக்கொண்டிருந்தது. துர் சொப்பனங்களும் ஏமாற்றத்தின் வலியுமே தன்னிடம் மிச்சமிருப்பதாகப் புலம்பியபடி அது படுக்கையில் கிடந்தது. விடிந்து எழுந்தபோது அது ஒரு மனிதனாக உருமாறியிருப்பதை உணர்ந்தது. இது என்ன புதிய தண்டனை என்று அதற்கு எரிச்சலாக இருந்தது. அது வரை இருந்ததுபோல சௌகரியமான உடல் அமைப்பு மாறி நீண்ட கைகால்களும் தலையுமாக தன்னைப் பார்த்துக்கொள்வது தனக்கே பிடிக்காமல் இருந்தது.

படுக்கையை விட்டு எழுந்த கரப்பான்பூச்சி தான் நிறைய மனிதர் களைப் பார்த்திருந்தபோதும் ஒருபோதும் மனிதனாக மாறுவதற்கு விரும்பியதேயில்லை என்று முணுமுணுத்துக்கொண்டபடியே நின்றது. அப்போது வெளியே கதவு தட்டப்படும் ஓசை கேட்டு கரப்பான்பூச்சி கதவைத் திறந்தது.

ஐம்பது வயதைக்கடந்த ஒரு ஆள் மிகக் கோபமான குரலில் 'உன் னிடம் எவ்வளவு காலமாக வாடகை பாக்கியைக் கேட்டுக்கொண்டி ருப்பது. இனிமேலும் என்னால் பொறுத்துக்கொள்ள முடியாது நான் காவலர்களை அழைக்கப் போகிறேன்' என்று கத்தினார். கரப்பான் பூச்சி தயக்கத்துடன் 'அவர் நினைப்பது போன்று நான் ஒரு மனித னில்லை. கரப்பான்பூச்சி' என்றது. அவர் அந்த பதில் தன்னை கேலி செய்வதாக நினைத்துக்கொண்டு ஆவேசத்துடன், 'நீ வாடகைக்குக் குடியிருக்கின்ற கரப்பான் பூச்சிதானே' என்றார். அவருக்கு என்ன பதில் சொல்வது என்று தெரியாமல் கரப்பான்பூச்சி வாயை மூடிக் கொண்டது.

அந்த வயதானவர் தன் ஆத்திரம் தீருமட்டும் கத்திக்கொண்டு விட்டு தன் அறைக்குப் போய் கதவை மூடிக்கொண்டார். குடியிருப்பின் வாசல் படிகளில் இருந்த குப்பை கூட்டிக்கொண்டிருந்த பெண்மணி அவனைப் பார்த்து சிரித்தபடியே, 'வாயில்லா பூச்சியா இருக்கியேப்பா' என்றாள். 'மனிதர்களாக இருப்பது அபத்தமானது' என்றபடியே

கரப்பான்பூச்சி திரும்பவும் அறைக்குள் சென்றது.

மறுநிமிடம் அந்த வேலைக்கார பெண்மணி உனக்கு போன் வந்திருக்கிறது என்று கதவைத் தட்டிச் சொன்னாள். கரப்பான்பூச்சி அது தனக்கில்லை என்று உணர்ந்தபோதும் தானாக போனை நோக்கிச் சென்று பேசியது.

எப்போது அலுவலகத்திற்கு வரமுடியும் என்று மறுமுனையில் உயர்அதிகாரி கடுத்த குரலில் கேட்டார். தான் வெறும் கரப்பான்பூச்சி என்று பதில் சொன்னபோதும் அவர் சம்பளம் வாங்குகின்ற கரப்பான் பூச்சியாக இருப்பதால் உடனடியாக வேலைக்கு வரும்படியாக கத்தினார். இன்னும் சில மணி நேரத்தில் அலுவலகம் வந்துவிடுவதாக சொல்லியபடியே கரப்பான்பூச்சி அறையின் கதவைப் பூட்டியபடியே வெளியே வந்தது.

பரபரப்பும் நெருக்கடியுமான சாலைகள். மிதமிஞ்சிய வாகனங்கள். நடைபாதை நிரம்பிய கடைகள். எந்தப் பக்கம் நடப்பது என்று தெரியாமல் கரப்பான்பூச்சி நடந்துகொண்டிருந்தது.

சாலையோரம் நீண்ட வரிசையொன்று காத்திருப்பதை அறிந்து தானும் அதில் நின்றுகொண்டது. அந்த வரிசை ஒரு கழிப்பறையில் போய் முடிந்தது. மனிதர்கள் சிறுநீர் கழிப்பதற்காகத்தான் அப்படி வரிசையில் நிற்கிறார்கள் என்று புரியவந்தபோது குமட்டலாக இருந்தது. தானும் அந்தக் கழிப்பறையில் அவசரமாக சிறுநீர் கழித்த போது காலடியில் மஞ்சள் ஆறு போல சிறுநீர் ஓடிக்கொண்டிருப்பதைக் கண்டது. உலகில் வேறு எந்த மிருகங்களும் இப்படி ஒன்று சேர்ந்து ஒரே இடத்தில் மூத்திரம் பெய்வதில்லை. எந்த விலங்கின் மூத்திரமும் இப்படி ஓடுவதில்லை என்றபடியே அது வெளியே வந்து சாலையின் குறுக்காக நின்றது.

ஒரு பேருந்து நிறுத்தத்தில் அழகான இரண்டு பெண்கள் நின்றிருந்தார்கள். அதில் ஒருத்தி தன்னைப் பார்த்துக்கொண்டிருப்பதை கவனித்த கரப்பான்பூச்சி அந்தப் பேருந்து நிறுத்தகில் நின்றுகொண்டது.

அந்தப் பெண் நீலநிற ஜீன்ஸ் அணிந்திருந்தாள். தலைமுடி காற்றில் பறந்துகொண்டிருந்தது. நல்ல பெரிய உதடுகள். அவள் அடிக்கடி கரப்பான்பூச்சியைப் பார்த்து சிரித்துக்கொண்டாள். அவளிடமிருந்து தான் லாவெண்டர் நறுமணம் வருவதை உணர்ந்த கரப்பான்பூச்சி அவள் பின்னாடியே சென்றது. அவள் சிரிக்கும்போதெல்லாம் அதன் மனது விம்மியது. அவள் பயணம் செய்த பேருந்தில் ஏறிக் கொண்டு அவள் பின்னாடியே நின்றது.

அவள் ஒரு ஐஸ்கிரீம் கடையின் அருகில் நின்றிருந்த இளைஞனுடன் கைகோர்த்துக்கொண்டு அவன் தலையைக் கோதிவிட்டபடியே சிரித்தாள். அது கரப்பான்பூச்சிக்கு தாங்கமுடியாத வலியை ஏற்படுத்தியது. இந்தப் பெண் என்னை கரப்பான்பூச்சி போல

அல்லவா நடத்துகிறாள் என்று முணுமுணுத்தது.

அந்தப் பெண் ஏற்படுத்திய வலியை மறைக்க சூடாக தேநீர் சாப்பிட வேண்டும் போலிருந்தது. தன் பேண்ட் பாக்கெட்டில் தேடியபோது சில்லறைக் காசுகள்கூட இல்லாமல் இருப்பதை உணர்ந்தது. மனிதராக இருப்பதை விடவும் கேவலமானது கையில் சில்லறை கூட இல்லாமல் இருப்பது என்றபடியே தேநீர்க் கடையின் முன்பாக நின்றபடியே பலரும் தேநீர் குடிப்பதை வேடிக்கை பார்க்கலாம் என்று நின்றது. அங்கே ஒருவன் தள்ளுபடி விற்பனை மையம் பற்றி துண்டறிக்கை ஒன்றினைத் தந்தான். அந்தத் தள்ளுபடி மையத்திற்கு கரப்பான்பூச்சி போனபோது உள்ளே நுழைய முடியாத கூட்டம். துணிகளையும், வீட்டுப் பொருள்களையும் அள்ளியபடியே ஆட்கள் அவன்மீது மோதிப் போனார்கள். மனிதர்கள் வாழ்வதற்கு இவ்வளவு பொருட்கள் தேவைப் படுகிறதா என்ற வியப்போடு அது கூட்டத்தில் சிக்கி நெரிசல் பட்டது.

பசியும் நெருக்கடியும் அதன் மனநிலையை மாற்றியது. கூட்டத்தில் தான் எதையாவது திருடலாம் என்று கரப்பான்பூச்சி முடிவு செய்தது. எதைத் திருடுவது என்று தெரியாமல் அங்குமிங்கும் பார்த்துவிட்டு குழந்தைகளின் விளையாட்டுப் பொருட்களில் ஒன்றாகக் கிடந்த விசில் ஒன்றினை யாரும் அறியாமல் திருடிக்கொண்டுவந்தது.

சாலையில் நின்றபடியே விசில் ஊதத் துவங்கியது. மனிதர்களின் கண்டுபிடிப்பில் அவர்கள் அறியாமலே அபத்தமான மனநிலை வெளிப் படுத்தும் கருவிகள் நிறைய இருக்கின்றன என்று சொல்லியபடியே அது விசில் ஊதியபடியே சாலையைக் கடந்தது. ஒன்றிரண்டு வாகனங் கள் அந்த விசில் சப்தம் கேட்டு தானாக நின்றுகொண்டது வேடிக்கை யாக இருந்தது.

பொது இடங்களில் விசில் அடிப்பது தடை செய்யப்பட்டிருப்பதால் கரப்பான்பூச்சியை காவலர்கள் கைதுசெய்து நீதிமன்றத்திற்கு அழைத்துப் போனார்கள்.

பொது இடத்தில் விசில் அடித்து குழப்பம் விளைவித்த குற்றத் திற்காக ஒரு நாள் காவலில் வைக்கும்படியாக நீதிமன்றம் உத்தரவிட் டது. அன்றிரவு கரப்பான் பூச்சி சிறையில் அடைக்கப்பட்டிருந்தது.

மனிதனாக வாழ்வதன் அபத்தம் சகித்துக் கொள்ள முடியாதது என்றபடியே அது உறக்கமில்லாமல் கிடந்தது.

விடிந்தபோது அது மறுபடியும் கரப்பான்பூச்சியாகியிருந்தது. சிறைக்குள் எப்படி ஒரு கரப்பான்பூச்சி வந்தது என்று ஒருவரும் கேள்வி கேட்கவேயில்லை. கரப்பான்பூச்சியும் தான் மனிதனாக இருந்தது ஒரு துர்சொப்பனம் என்றபடியே அவசரமாக வெளியேறி ஓடியது.

# வீட்டிற்குள் ஓடும் ஆறு

எனது பதினாறாவது வயதில் என் வீட்டிற்குள்ளாக ஒரு ஆறு ஓடிக்கொண்டிருப்பதைக் கண்டுபிடித்தேன்.

அந்த ஆறு என் வீட்டின் எல்லா அறைகளுக்குள்ளும் கண்ணிற்குத் தெரியாமல் ஓடிக்கொண்டிருந்தது. ஆங் காங்கே படித்துறைகள் இருந்தன. ஆற்றில் மிதந்து செல்வதற்கான சிறுபடகுகளும் இருந்தன. என்னால் நம்பவேமுடியவில்லை.

அன்றுவரை தாழ்பாள் இட்டு மூடிக்கொள்ளாத என் அறையை பதினாறாவது வயதின் பின்மதியத்தின் போது ஒரு சரோஜாதேவி புத்தகம் படிப்பதற்காக தாழ்ப்பாள் இட்டுக்கொண்டபோது அந்தப் படகு என் கண்ணில் பட்டது. நிம்மதியாக அதில் ஏறி அமர்ந்துகொண் டேன். படகு என் வீட்டிலிருந்து கிளம்பி ஆற்றின் முடிவற்ற போக்கில் என்னை அழைத்துச் சென்றது.

உதிர்ந்த இலையொன்று ஆற்றில் செல்வது போல எங்கெங்கோ சுற்றித் திரும்பி வந்தபோது அந்தப் படகு எனக்கு மட்டுமேயானது என்பதில் சந்தோஷமாக இருந்தது. அதன் பிந்திய நாட்களில் என்னைப் போலவே அப்பாவும் அம்மாவும் அக்காவும் ஏன் நோயாளியாக படுக்கையில் கிடக்கும் தாத்தாவும்கூட ஆளுக்கொரு படகை வைத்தி ருந்தார்கள் என்பதைக் கண்டுகொண்டேன். அந்தப் படகுகள் வெவ்வேறு வடிவங்களில் வெவ்வேறு வேகங்களில் பயணம் செய்தன. ஒருவரை யொருவர் ஆற்றில் கடந்து போகும்போது எவரும் எவருடனும் பேசிக் கொண்டதில்லை. அறிந்தவர்போல காட்டிக்கொள்வதும் இல்லை. ஆனால் மற்றவர் ரகசியமாக படகில் போகிறார்கள் என்பதை உள்ளூற அறிந்து மட்டுமிருந்தோம்.

அந்தப் பயணம் துவங்கிய பிறகு என் வீடு விசித்திரமானதொன்றா கத் துவங்கியது. ஒரு போதும் சப்தமிடாத அந்தத் தண்ணீரின் மீது எனக்கு விருப்பமாகவும் நெருக்கமாவும் இருந்தது. என் இளமைப் பருவம் முழுவதும் நான் அந்தப் படகில் அலைந்தேன்.

கரைகளே இல்லாத நதியாக அது இருப்பதை பயணத்தில் தான் கண்டுபிடித்தேன். இந்தப் பயணம் குறித்து ஒருபக்கம் சந்தோஷம்

கொண்டபோதும் உள்ளூற குற்றவுணர்ச்சியும் உருவானது. அதன் காரணமாக ஆற்றில் செல்ல ஆரம்பித்ததும் நான் கண்களை மூடிக் கொள்ளத் துவங்கினேன். ஒரு முறை கண்விழித்த போது படகில் சின்னச்சிறு கூழாங்கல் ஒன்று தென்பட்டது. யார் அதைப் படகில் கொண்டுவந்து போட்டார்கள். எப்படி அது படகிற்கு வந்தது என்று தெரியவில்லை. நானோ என் குற்றவுணர்ச்சிதான் கூழாங்கல்லாக விழுந்துகிடக்கிறதோ என்று நம்பத் துவங்கினேன்.

அந்தக் கல்லை நான் பார்க்கவில்லை. அதை என் கையால் தொட்டு உணர ஆசைப்படவில்லை. மாறாக அது படகைக் கவிழ்த்திவிடக்கூடும் என்று நம்பினேன். என் நம்பிக்கையை உறுதி செய்வது போல படகின் ஒரு பக்கம் அழுத்தத் துவங்கியிருந்தது. அந்தக் கூழாங்கல் சில நாட்களிலே வளர்ந்து பெரிய பாறை போலாகியிருந்தது. அந்தப் பாறையை ஒட்டிக் கொண்டு நான் உட்கார்ந்து செல்வது மிகச் சிரமமானதாக இருந்தது. ஆனாலும் பயணம் செய்துகொண்டிருந்தேன்.

பிறகொரு நாள் அந்தப் பாறையை படகிலிருந்து அப்புறப்படுத்திவிடும் முயற்சியில் இறங்கினேன். அசைக்க முடியவேயில்லை. இன்று வரை ஒவ்வொரு நாளும் படகில் ஏறியதும் அந்தப் பாறையை படகிலிருந்து அப்புறப்படுத்துவதில் என் நேரம் போய்விடுகிறது. பாறை வளரவும் இல்லை. தேயவும் இல்லை. அசைவற்று உறுதியாக இருந்தது.

என்னால் பாறையோடு பயணம் செய்வது இயலாது என்று உரக்கக் கத்தினேன். சப்தம் பாறையில் மோதி உனக்கு நாற்பத்திரெண்டு வயதாகிவிட்டது என்று எதிரொலித்தது. அது தான் பயமாக இருக்கிறது.

# பேச்சரவம்

தெற்கிலிருந்து காற்று வீசத் துவங்கும் காலத்தில் காடு விழித்துக் கொள்ளும் என்பது ஐதீகம். அந்த நாட்களில் காடு பகலும் இரவும் சப்தமிட்டபடியே இருக்கும். தென்றல் காலத்தில் காடு கொள்ளும் விசித்திரம் மனிதர்கள் அறியாதென்றார்கள். இதைக் காண்பதற்காக ஐந்து பேர் ஒரு காட்டிற்குள் சென்றனர். எங்கும் பூக்களும், விசித்திர மான செடிகொடிகளும் தென்பட்டன. ஒவ்வொரு விந்தையாக பார்த்துச் சென்றனர். நீரோடை ஒன்றைக் கடக்கும்போது வெண்கல மணியின் ஓசை போன்ற ஒரு குரலைக் கேட்டனர். என்ன சப்தமது என்று தேடி நடந்தபோது இலைகளுக்குள் மறைந்து நின்று குரலிடும் பறவையொன்றினைக் கேட்டனர்.

ஆர்வத்துடன் அடையாளம் கண்ட முதல் ஆள் சொன்னான் ‘அது இதுவரை கானகம் அறியாத அதிசயப் பறவை இது. இக்குரல் காட்டினை விழிக்கச் செய்கிறது.’

இரண்டாவது ஆள் சொன்னான், ‘அது ராக்குருவி இனமென்று.’

மூன்றாவது ஆள், ‘அபோதா மலைகளில் பல நூற்றாண்டின் முன்னே அதுபோன்ற பறவை இருந்து மறைந்ததைப் பற்றி தான் படித்துள்ளதாகவும் இந்த வகைக் குருவிகள் எப் போதும் பின்னோக்கிப் பறக்கக்கூடியது’ என்றும் சொன்னான்.

நான்காவது ஆளோ, ‘இதைப் பிடித்து நெருப்பில் சுட்டுத் தின்றால் மிகச் சுவையாக இருக்கும்’ என்றபடியே தனக்குத் தெரிந்த மாமிச ருசிகளை விளக்கினான்.

ஐந்தாவது ஆள் எதுவும் சொல்லவில்லை. அவன் பறவையைப் பார்த்தபடியே நின்றான். பேச்சரவம் கேட்டு பறவை சட்டென எழுந்து பறந்தது.

ஐந்தாவது ஆள் நிசப்தமாக தன் கைகளை விரித்து அசைத்தான்.

பின்பு குருவியோடு அவனும் பறந்து போனான்.

# நேற்று சம்பத்தின் நாவலில் வரும் தினகரனை வழியில் பார்த்தேன்

ராயப்பேட்டை அருகில் உள்ள மருந்துக்கடை ஒன்றில் நோவாமாக்ஸ் மாத்திரையை வாங்கிக்கொண் டிருந்தபோது அருகில் வந்து நின்ற ஒரு நபர் வேலியம் டென் வேண்டும் என்று கேட்டார். அந்த நபரை எங்கோ பார்த்த மாதிரி இருந்தது. அது தூக்க மாத்திரை ஆகவே மருந்துச் சீட்டு இல்லாமல் தர முடியாது என்று கடைக்காரர் மறுக்கவே, 'இதை எல்லாம் சாப்பிட்டு ஒருத்தரும் செத்துப் போக முடியாது ஒரு மாத்திரையாவது கொடு' என்று கேட்டுவாங்கி அங்கேயே தண்ணீர் வாங்கி மாத்திரையை கிழித்து போட்டபடியே நின்றுகொண் டிருந்தார் அந்த ஆள். அவரைப் பார்க்கும்போது சம்பத்தின் இடைவெளி நாவலில் வரும் தினகரன் போலிருக்கிறாரே என்று சந்தேகமாக இருந்தது. அவரும் என்னைப் பார்த்து விட்டு தெரிந்த மனிதரைப் பார்ப்பதுபோல மெலிதாகப் புன்னகை செய்தார். அவரது தோற்றமும் கலைந்த தலையும் முகத்தில் இருந்த படபடப்பையும் கண்டபோது அது தினகரன்தானோ என்றே தோன்றியது.

அவரிடம் அறிமுகம் செய்துகொள்ளலாமா என்று நினைத்தபடியே பார்த்துக்கொண்டிருந்தேன். அருகில் சலூன் ஏதாவது இருக்கிறதா என்று மருந்துக்கடைக்காரரிடம் கேட்டார். பின்பக்கம் உள்ள வீதியில் நியூ ஸ்டார் என்றொரு சலூன் இருப்பதாக நானாகச் சொன்னேன். அவர் என்னிடம் 'நீங்கள் அங்கே சவரம் செய்துகொள்வதுண்டா' என்று கேட்டார்.

'சாலையைக் கடந்து செல்லும்போது பலமுறை பார்த்திருக்கிறேன். எப்போதும் அது காலியாகவே இருக்கும்' என்றேன். 'அது பிரேத காப்பகத்தின் எதிரில் அல்லவா இருக்கிறது' என்று கேட்டார். 'ஆமாம்' என்று சொன்னேன். அவர், 'பிரேதங்களுக்கு முகச்சவரம் செய்துகொள்ள வேண்டிய அவசியமில்லை' என்று சொல்லியபடியே

எழுந்து நடந்து செல்ல ஆரம்பித்தார். அது தினகரன்தானா? நான் அவரிடம் சில வார்த்தைகளாவது பேசிவிட வேண்டும் என்று நினைத்தேன்.

அவர் பத்தடி நடந்துவிட்டு சாலையோரம் காகிதங்களைத் தின்று கொண்டிருந்த மாடு ஒன்றை வேடிக்கை பார்த்தபடியே நின்று கொண்டிருந்தார். மாடு வாலை உயர்த்தியபடியே மூத்திரம் பெய்தது. அவர் அதைப் பார்த்து சிரித்துக்கொண்டிருந்தார். நான் அவர் அருகில்போய் நின்றேன்.

அவர் அந்த மாட்டைச் சுட்டிக்காட்டி 'மூத்திரம் பெய்யும்போது மாடு ஒரு பரவசம்கொள்வதைப் பார்த்திருக்கிறீர்களா' என்று கேட்டார். எனக்கும் அந்த அனுபவம் இருந்தது. 'சிலவேளைகளில் நான் மூத்திரம் பெய்து முடிந்தபோது கால்கள் இல்லாமல் நின்று கொண்டிருப்பது போல உணர்ந்திருக்கிறேன்' என்றேன். அவர் ஆச்சரியத்துடன் 'நீங்களுமா' என்று கேட்டார். மாடு சாலையைக் கடந்து கொண்டி ருந்தது. வாகனங்கள் நின்றும் விலகியும் சென்றன. அந்த இடைவெளி யில் நாங்களும் சாலையின் எதிர்ப்புறம் சென்றோம்.

நான் தயங்கித் தயங்கி 'நீங்கள் சம்பத்தின் நாவலில் வரும் தினகரன் தானா' என்று கேட்டேன். அவர் மெதுவாக நடந்தபடியே 'உங்களுக்கு சம்பத்தைத் தெரியுமா' என்று கேட்டார். 'இல்லை நான் இடைவெளி நாவலை வாசித்திருக்கிறேன்' என்று சொன்னேன். அவர் 'இடைவெளி என்றா சொன்னீர்கள்' என்று கேட்டார். 'ஆமாம். எஸ்.சம்பத் எழுதியது' என்று சொன்னேன்.

அவர் சுவரில் ஒட்டப்பட்டிருந்த ஆங்கிலப்படம் ஒன்றில் காலை விரித்துக்கொண்டிருந்த பெண்ணைக் காட்டியபடியே கேட்டார். 'இந்தப் பெண்ணைப் பார்க்கும்போது உங்கள் மனதில் காமஇச்சை உண் டாகுமா' என்று கேட்டார். நான் பதில் சொல்லவில்லை. அவராக வே, 'நிஜமான பெண்களைவிட சொற்களின் வழியாகவும் பிம்பமாக வும் வெளிப்படும் பெண்கள் அதிகம் காம இச்சையைத் தூண்டுகிறார் கள்' என்றார்.

'நீங்கள் தினகரன்தானா' என்று திரும்பவும் கேட்டேன். அவர் தனக்கு நாவல் படிக்கும் பழக்கம் இல்லை என்று சொல்லியபடியே 'சம்பத் உயிரோடு இருக்கிறாரா' என்று என்னிடம் கேட்டார். 'இல்லை இறந்துவிட்டார்' என்று சொன்னேன்.

உடனே அவர் 'சம்பத்தை நீங்கள் பார்த்ததே கிடையாது. ஆனால் அவர் இறந்துவிட்டதை நம்புகிறீர்கள். இது ஆச்சரியமாக இல்லையா' என்று கேட்டார். அந்த உண்மை என்னை குழப்பத்தில் ஆழ்த்தியது. 'அப்படி நான் படித்திருக்கிறேன்' என்று சொன்னேன். உடனே அவர் 'சம்பத் உங்களைப் பொறுத்தவரை ஒரு சொல்தான் இல்லையா. அவர் பிறந்ததையும் நீங்கள் அறிந்ததில்லை, இறந்ததையும் நீங்கள் அறிந்ததில்லை. ஆனால் அவரை உங்களுக்குத் தெரியும் அப்படித் தானே' என்றார். நான் தலை கவிழ்ந்துகொண்டேன்.

அவர் தனக்கும் சம்பத்தைத் தெரியாது. ஆனால் தான் மரணத்தைப் பற்றி நிறைய யோசிக்கின்றவன் என்றபடியே சலூன் முன்னால் வந்து நின்றார். கடை திறந்திருந்தது. எப்போதும் போலவே யாரும் அங்கிருக்கவில்லை. சலூன் நாற்காலியில் ஏறி உட்கார்ந்தபடியே அவர் சுற்றத் துவங்கினார். கண்ணாடியில் அவரது உருவம் அலைந்தது. நான் அருகில் இருந்த பெஞ்சில் உட்கார்ந்துகொண்டேன்

அவரை நம்புவதா வேண்டாமா என்று குழப்பமாக இருந்தது. அவர் சப்தமாக சிரித்தபடியே 'நீங்கள் ஏன் தினகரனா இருக்கக் கூடாது' என்று கேட்டார்.

நான் திடுக்கிட்டபடியே 'நான் தினகரன் இல்லை. அது சம்பத் என்று தான் சொல்கிறார்கள்' என்று சொன்னேன். அவர் உடனே 'தினகரன் சம்பத் எல்லாம் புனைவுதானே' என்றார். 'உண்மைதான் எனக்கு அப்படியான பிரச்சினைகள் கிடையாது' என்று சொன்னேன். 'அப்படி யானால் நீங்கள் நாவல்களை நம்புவதில்லையா' என்று கேட்டார்.

'ஓரளவு நம்புவேன். சில நேரங்களில் நாவல்களை நம்புவதால் என் அடையாளம் அழிந்துவிடும் பயம் ஏற்பட்டுவிடுகிறது' என்றேன்.

அவர் சிரித்தபடியே, 'நான் நாவல்களே படிப்பதில்லை என்றபடியே உங்களுக்கு திருமணமாகிவிட்டதா' என்று கேட்டார். நான் 'இல்லை' என்று சொன்னேன். அவர் 'பெண்களைப் பற்றித் தெரிந்துகொள்வ தற்குத்தான் பலரும் நாவல் படிக்கிறார்கள்' என்று சொன்னார். அது உண்மை என்றே தோன்றியது.

நாவலில் வரும் ஆண்களை விடவும் எப்போதுமே எனக்கு பெண்கள் மீது அதீத கவனம் குவிந்துவிடுகிறது. அதிலும் வேசைகள், வேலைக்காரி கள், தனித்திருக்கும் பெண்களைப் பற்றிய வர்ணனைகள் மற்றும் சம்பவங்களைப் படிக்கையில் அதிக மனவெழுச்சி கொண்டிருக்கிறேன்.

மருத்துவமனையின் சுவரின் மீது ஒரு காகம் உட்கார்ந்திருந்தது. அதை அவர் சவரக்கண்ணாடியில் பார்த்திருக்கக்கூடும். குழந்தையைப் போல அருகில் அழைத்துக் காட்டினார். 'கண்ணாடிக்குள் உள்ள காகத்தை நாம் பார்க்கிறோம். ஆனால் காகம் நம்மைப் பார்ப்பதில்லை. எவ்வளவு விசித்திரம்' என்றபடியே தனக்குத் தூக்கம் வந்தால் அங்கேயே தூங்கிவிடக்கூடும் என்றார். அவர் தினகரன்தான் என்று உள்மனதில் தோன்றியது.

அவரிடம் நாவலைப் பற்றிக் கேட்பதற்கு என்ன கேள்வியிருக்கிறது என்று மனது துழாவிக்கொண்டிருக்கிறது. அவர் சாய்ந்து கண்களை மூடிக்கொண்டார். தஸ்தாயெவ்ஸ்கியை உங்களுக்குப் பிடிக்குமா என்று கேட்டேன். அவரிடமிருந்து பதில் இல்லை. அவர் உறங்கியிருக்கக் கூடும் போலிருந்தது. சலூன் நாற்காலியில் உறங்கும் மனிதனை கண்ணாடியில் பார்க்கும்போது பயமாக இருந்தது.

சில நிமிடங்களுக்கு மேல் அங்கிருக்க முடியவில்லை. வேகமாக வெளியேறி நடக்க ஆரம்பித்தேன். ஏனோ அவர் தினகரன் இல்லை

என்று மனது சொல்லிக்கொண்டிருந்தது. நானாக அவருக்கு சங்கர ராமன் என்று ஒரு பெயரைச் சூட்டி அவருக்கு மனச்சோர்வு பீடித் திருக்கிறது. மனைவியோடு சண்டை. வேலையில் இருந்து தூக்கி விட்டார்கள். ஆகவே இப்படி தூக்கமாத்திரையை சாப்பிட்டு கிடைத்த இடத்தில் உறங்குகிறார் என்று கற்பனை செய்துகொள்ள ஆரம் பித்தேன்.

அப்படிச் செய்யாமல் போயிருந்தால் அடுத்த நாவல் எதையும் என் னால் வாசிக்க முடியாது என்று எனக்குத் தெரியும். அவ்வளவுதான் என்னால் முடிந்தது.

# உபதேசியார்

**1892** ஆம் ஆண்டு இத்தாலியில் உள்ள புனித சேவியர் பதிப்பகத்தால் வெளியிடப்பட்டுள்ள திருச்சபை வரலாற்று ஆவணக்களஞ்சியம் தொகுப்பு 13. அத்தியாயம் 2இல் கீழ்க்கண்ட சம்பவங்கள் விவரிக்கப்படு கின்றன. இதில் குறிப்பிடப்படும் பாதிரி மதுரை மிஷனரியில் வேலை செய்த மெலோனியாக இருக்கக்கூடும் என்று திருச்சபை ஆய்வாளர்கள் கூறுகிறார்கள். அவரைக் குறிப்பேடு எம் என்று சுட்டு எழுத்தால் மட்டுமே அடையாளப்படுத்துகிறது.

பாதிரி எம் கிழக்கு ராமநாதபுரப் பகுதியின் பிரபலமான பிரசங்கி. அவரது நற்செய்திகளைக் கேட்க அருகாமை கிராமங்களில் இருந்து ஆயிரக்கணக்கான மக்கள் திரண்டுவிடுவார்கள். ஒவ்வொரு பிரசங்கத் தின்போதும் அவர் ஆவேசமாக கைகளை காற்றில் வீசியபடியே தனக்கு கடவுளின் கருணை பூரணமாக உள்ளது. அவரது வருகைக்காக பாதைகளை உருவாக்குகின்றவன் என்று கூறி மேடையில் மண்டி யிட்டு கண்ணீர் விடுவார். அவரது திருச்சபையில் ஞாயிற்றுகிழமை களில் கூட்டம் நிரம்பி வழியும். தன்னால் கடையனையும் நல்வழிப் படுத்திவிட முடியும் என்று உரக்கச் சொல்வார். அவரால் நல்வழிப் படுத்தப்பட்ட ஆத்மாக்கள் கடற்கரை கிராமங்களில் நிறைய இருந் தார்கள்.

பாதிரி எம்மின் வீடு சின்னக்கடைத் தெருவின் வலதுபக்கம் இருக் கிறது. அவர் வீட்டின் பின்பக்கவழியாக நடந்து வந்தால் தேவாலயத் திற்குப் போய்விடலாம். பாதிரிக்காக அந்த வீட்டை தேவகிருபை நாடார் ஒதுக்கித் தந்திருக்கிறார்.

பாதிரி எம்மின் பூர்வீகம் மட்டஞ்சேரி என்றும் திருப்பணிக்காக கடலூரில் பயிற்சி பெற்றவர் என்றும் சொல்லிக்கொண்டார்கள் பாதிரிக்கு மூன்று பெண்பிள்ளைகள் இருந்தார்கள். அதில் ஒருத்தி தேவாலயத்தின் பாடசாலையில் ஆரம்பப் பள்ளி ஆசிரியையாக இருந் தாள். அவளுக்குத் திருமணமாகி அவள் கணவனும் குழந்தைகளும் அதே வீட்டில் இருந்தார்கள். திருமண வயது வந்த மற்றப் பெண்களும் வீட்டிலே மெழுகுவர்த்தி தயாரித்துக்கொண்டிருந்தார்கள். பாதிரி

எம்மின் மனைவி கிளரா கர்த்தருக்குள் அடங்கி இருபத்திரண்டு வருடமாகிறது.

பாதிரி எம்மிற்கு வேறு எந்த விஷயங்களையும் விடவும் மதிய உணவு மிக முக்கியமானது. அதிலும் வாரம் இரண்டுமுறை வான்கோழி இறைச்சிவேண்டும். வான்கோழி முட்டைகளைச் சாப்பிடுவதிலும் அவருக்கு ஆர்வம் அதிகமுண்டு. மீதநாட்கள் கட்டாயம் புறாவோ, மீனோ, கோழியைச் சமைக்க வேண்டும்.

மதிய உணவு நேரத்தில் மட்டும் அவரது வீட்டு வாசல் அடைத்து சாத்தப்பட்டுவிடும். சாப்பிட்டதும் பகல்உறக்கம் கொள்ளச் சென்று விடுவார். மாலையில் துயில் கலைந்து அவர் எழுந்து திறக்கும் வரை அந்தக் கதவை யாரும் திறக்கக்கூடாது. அப்படியொரு நடைமுறை அந்த வீட்டிலில் கறாராக நடைமுறைப்படுத்தப்பட்டிருந்தது. அந்த வீட்டை ஊர்காரர்கள் உபதேசியார் வீடு என்று சொல்லி அழைத்தார்கள். மீனோ கறியோ காய்கறிகளோ பழங்களோ எதுவும் அவருக்கு இனாமாகவே கிடைத்தன.

பல வருடகாலமாகத் தொடர்ந்த இந்த நடைமுறை கடற்கரை தேவாலயத்தை உருவாக்கப் பொருளுதவி செய்த இத்தாலிய சீமாட்டி ஆனி சிசிலியின் நினைவுநாள் பிரார்த்தனை முடிந்த இரண்டு நாட்களுக்குப் பிறகு முதன்முறையாக சீர்குலையத் துவங்கியது.

அன்று அவர் கதவை அடைத்துத் தாழிட்டு பின்கட்டிலிருந்த தண்ணீரால் கைகால்களை சுத்தம் செய்தபடியே தரையில் அமர்ந்து வான்கோழி இறைச்சியின் மணத்தை நுகர்ந்துகொண்டிருந்தபோது வாசல்கதவு தட்டும் சப்தம் கேட்டது. எரிச்சலுடன் பாதிரி அதை கேட்காதவர் போல தட்டில் சாதம் போடும்படியாக மகளை கண்ஜாடை காட்டினார். மீண்டும் பலமாகக் கதவு தட்டப்பட்டது. அவர் முகம் ஆத்திரத்தில் கடுகடுக்க ஆரம்பித்தது. யாரோ சிறுவர்கள் விளையாடுகிறார்கள் என்ற நினைப்பில் இருந்த இடத்தில் இருந்தே ‘சாத்தானே விலகிப் போ’ என்று கத்தினார். ஆனால் கதவை தட்டும் ஒலி நிற்கவேயில்லை.

சாப்பாட்டை அப்படியே வைத்துவிட்டு ஆவேசத்துடன் கதவை திறந்தபோது வாசல்படியில் துருப்பித்த இரும்பு போன்ற நிறத்திலான தாடியும், செவ்வரி படிந்த கண்களும் உடைந்த முன்பற்களும் எண்ணெய் காணாத தலையுமாக மெலிந்த தோற்றத்தில் ஒரு பிச்சைக்காரன் நின்றிருந்தான்.

அவனை இதன் முன்பு அவர் பார்த்ததுகூட இல்லை. ஆத்திரத்தில் அவர், ‘சாத்தானே வீட்டுக் கதவைத் தட்டி பிச்சை எடுக்கும் அளவிற்கு உடம்பில் கொழுப்பு எடுத்துவிட்டதா’ என்று அவனது பிடறியைப் பிடித்துத் தள்ளினார். அவன் அப்படியே தடுமாறி தெருவில் போய் விழுந்தான். ஓங்கிக் கதவை அடைத்தபடியே வான்கோழி இறைச்சியை உண்பதற்காக உள்ளே சென்றார் பாதிரி. அன்றைக்கு அவரால் நிம்மதியாக மதிய உறக்கம்கொள்ள இயலவில்லை. மாலையில் கதவைத்

திறந்து வெளியே வந்து பார்த்தபோது அந்த மனிதன் வந்துபோனதற் கான அடையாளம் எதுவுமில்லை.

தேவாலயத்திற்கு, நடந்து செல்கையில் வேறு எங்காவது அது போன்ற பிச்சைக்காரன் வருகின்றானா என்று பார்த்தபடியே நடந்தார். ஆனால் அப்படியொருவனை காணவேயில்லை. அன்றைய பிரசங் கத்தின்போது பிச்சைக்காரர்கள் நரகத்திற்குப்போக சபிக்கப்பட்ட வர்கள் என்பதைப் பற்றிப் பேசினார்.

மறுநாள் அவர் மதிய உணவிற்காகக் கதவைச் சாத்தும்போது வெளியில் அந்தப் பிச்சைக்காரன் நிற்கிறானா என்று சுற்றிலும் பார்த்து விட்டே கதவை ஓங்கியடைத்தார். ஆனால் அவர் உணவை ஒரு கவளம் சாப்பிடத் துவங்கிய நேரத்தில் கதவு தட்டப்படும் ஓசை கேட்கத் துவங்கியது. அவர் ஆத்திரத்தில் விடுவிடுவெனக் கதவை நோக்கி ஓடி வந்து திறந்தார்.

நேற்று வந்த அதே பிச்சைகாரன் அதேபோல நின்றபடியே யாசகம் என்று கைகளைக் குவித்து கண்ஜாடையில் கேட்டான். அவர் கோபம் மிகுந்து 'வீட்டுப்படியேறிக் கதவைத் தட்டி யாசகம் கேட்கிறாயா... அறிவு கெட்டவனே. என் முன் நிற்காமல் ஓடிவிடு. இல்லாவிட்டால் உன் கைகால்களை முறித்துவிடுவேன்' என்று கத்தினார்.

அந்தப் பிச்சைக்காரன் முகத்தில் புன்னகை அரும்பத் துவங்கியது. அவன் கண்களில் பரிகாசம் துளிர்த்துக்கொண்டிருப்பதை பாதிரி எம். கண்டார். அவன் எவ்வித சலனமும் இன்றி அவரையே பார்த்த படி இருந்தான், அதை சகிக்கமுடியாமல் அவன் கழுத்தைப் பிடித்து பாதிரி தள்ளினார். அன்றைக்கும் அவன் தெருவில் போய் விழுந்தான்.

யாராவது இதைக் கவனித்துப் பார்க்கிறார்களா என்று திரும்பிப் பார்த்தார். தெருவில் ஒரு ஆள்கூட இல்லை. நல்லவேளை என்றபடியே கதவைப் பூட்டிவிட்டு சாப்பிடச் சென்றார். அந்த யோசனையோடு மீனை மெல்லாமல் விழுங்கிவிட அது தொண்டையில் சிக்கிக் கொண்டு பொறையேறியது. அதற்காக அவர் பிச்சைக்காரனை கேவல மான வசைகளால் திட்டினார்.

அன்று மாலை தன்னுடைய சபைக்கு வந்த உப்பு வியாபாரி எபினேசரிடம் ஊருக்குள் புதிதாக பிச்சைக்காரன் எவனாவது வந்திருக்கிறானா என்று விசாரித்து வரும்படியாகச் சொன்னார். அவனோ, 'நான் அறிந்தவரை புதிய பிச்சைக்காரர்கள் எவரும் வரவில்லை. அப்படி யாராவது வந்திருந்தாலும் தேவாலய வாசல்தானே அவர்களுக்குக் கருணை காட்டப்படும் இடம்' என்றான்.

பாதிரி 'இல்லை மெலிந்துபோன துருப்பிடித்த தாடிக்கார பிச்சைக் காரன் ஒருவனைப் பார்த்தேன். அவனைப் பற்றி விசாரித்துவா' என்று சொன்னார். எபி தெருத்தெருவாக பாதிரி சொன்ன பிச்சைக்கார னைத் தேடி அலைந்தான். அப்படியொருவனை எவருமே பார்க்க வில்லை என்றார்கள்.

அதன்பிறகு ஒவ்வொரு நாளும் பாதிரி மதிய உணவுக்கு வருவதற்கு முன்பு தெருவில் பிச்சைக்காரன் நிற்கிறானா என்று தேடிப்பார்ப்பார். சில வேளைகளில் அவன் எங்கோ மறைந்திருப்பது போன்றிருக்கும். கதவைச் சாத்தி அவர் சாப்பிட உட்காரும் வரை அனுமதிக்கும் அவன் பாதிச் சாப்பாட்டில் சில நாள் கதவைத் தட்டுவான். சில நாட்கள் அந்த ஓசையில் இருந்தே அது பிச்சைக்காரன்தான் என்று தெரிந்து கதவைத் திறக்காமலே இருந்திருக்கிறார். ஆனால் மதிய உணவு நேரத்தில் மட்டுமே வந்து போகும் அந்தப் பிச்சைக்காரன் யார் என்ற குழப்பம் அவருக்குள் வளரத் துவங்கியது.

இரண்டு வாரத்திற்குப் பிறகு ஒரு நாள் அவர் கதவை அடைத்து சாத்தாமல் திறந்து வைத்தபடியே உணவருந்த வந்தார். அவர் உட்கார்ந்து சாப்பாட்டைப் பிசைந்துகொண்டிருந்தபோது படியில் ஒரு நிழல் அசைவது தெரிந்தது. பல்லைக் கடித்தபடியே தன் இளைய மகளை அழைத்து 'வெளியில் நிற்கும் சாத்தானுக்கு உரியதைக் கொடுத்து வா' என்றார்.

அவள் தட்டில் ஒரு பிடியளவு உணவை அள்ளி வைத்துக்கொண்டு வாசலுக்கு வந்தபோது யாரையும் காணவில்லை. அவள் தெருவில் இறங்கி தேடிப்பார்த்தாள். யாரும் இல்லை. வீடு திரும்பி வந்து அப்பாவிடம் பிச்சைக்காரன் எவனையும் காணவில்லையே என்று சொன்னாள். ஆத்திரமான எம் 'அந்தச் சோற்றை எனக்கே போடு தின்கிறேன்' என்று கத்தினார். மூன்று மகள்களும் அன்றிரவு தந்தைக்காக நீண்ட நேரம் பிரார்த்தனை செய்தார்கள்.

அந்தப் பிச்சைக்காரனைக் கண்டுபிடிக்க வேண்டும் என்ற நெருக்கடி அவருக்குள் தீவிரமாகத் துவங்கியது. இதற்காக அவர் தேவாலயத்திற்குப் போகாமல் தெருவிலே ஒரு நாள் முழுவதும் நின்று கொண்டிருந்தார். வீட்டிற்குள் வைத்து உணவு அருந்தாமல் தெருவில் அமர்ந்து சாப்பிடப் போகிறேன் என்று சொல்லி ஒரு முறை தெருப்புழுதியில் அமர்ந்து சாப்பிட்டார்.

அந்தப் பிச்சைக்காரன் அதன்பிறகு வரவேயில்லை. முன்பு போல அவர் பகல் தூக்கம் கொள்வதில்லை, மாறாக பிச்சைக்காரனைப் பற்றியே நினைத்துக்கொண்டு படுத்துக்கிடந்தார். இரவில்கூட சில வேளை அவன் கதவைத் தட்டுவதுபோல அவருக்குத் தோன்றும், தானே கதவைத் திறந்து பார்ப்பார். தெருவில் இருள் மட்டுமே நடமாடிக்கொண்டிருக்கும்.

அந்தப் பிச்சைக்காரன் யார். எதற்காக தன் வீட்டின் கதவுகளை மட்டும் தட்டுகிறான் என்ற குழப்பம் அவரைப் பீடிக்கத் துவங்கியது. தெரிந்தவர்கள், திருச்சபையின் வெளியில் உள்ள முடமான பிச்சைக்காரர்கள் எனப் பலரிடமும் அந்த யாசகனைப் பற்றிக் கேட்டுக்கொண்டிருந்தார். எவரும் அப்படியொரு ஆளை அறிந்திருக்கவில்லை.

அதன் பிறகு அவர் நீண்ட நேரத்தை தேவலாயத்திலே கழிக்கத் துவங்கினார். இரவில்கூட பிரார்த்தனை செய்தபடியே இருந்தார்.

ஒரு நாள் அவர் தேவாலயத்திலிருந்து வெளியேறி தெருவில் நடந்து வரும்போது பின்னால் வந்த அந்தப் பிச்சைக்காரன் அவன் முதுகைத் தட்டி கைகளை யாசிப்பதுபோல தலைதாழ்த்தி வணங்கினான்.

அவரால் அந்தச் செய்கையைத் தாங்கிக்கொள்ள முடியவில்லை. அவன் கன்னத்தில் ஓங்கி அறைந்து சாத்தானே உனக்கு என்ன வேணும். என்னை ஏன் சுற்றிவருகிறாய் என்று கூச்சலிட்டார். அடிபட்ட யாசகன் சிரித்தபடியே மண்டியிட்டான். பாதிரி தன் வலது காலால் அவனை உதைத்தபடியே, போய்விடு. இனிமேல் உன்னைப் பார்த்தால் உயிரோடு திரும்பமாட்டாய் என்று உரக்கச் சொன்னார். பிச்சைக் காரன் சிரித்து விழுந்து கிடந்தான்.

வீடு திரும்பிய பாதிரி அன்றிரவில் அவன் தன்வீட்டுக் கதவை திரும்ப வும் தட்டுவதைக் கேட்டார். அவர் திறக்கவேயில்லை. அவரது மகள் கதவைத் திறந்து யாரோ ஒரு ஆளோடு பேசிக்கொண்டிருக்கும் சப்தம் கேட்டது.

மறுநாள் காலை அவர் கேட்காமலே அவரது மகள் சொன்னாள். நேற்றிரவு ஒரு ஆள் வந்திருந்தார். அவர் உங்களைச் சந்திக்க விரும்பி பலமுறை தேவலாயம் சென்றதாக உங்களைக் காண முடியாததால் வீடு தேடி வந்ததாகவும் சொல்லி இந்த நாணயத்தைத் தந்து போனார் என்று ஒரு வெள்ளியிலான காசை அவரிடம் கொடுத்தார்.

அந்த நாணயத்தை பாதிரி கையில் வாங்கிப் பார்த்தார். அதன் இரண்டு பக்கங்களிலும் தவளையின் உருவம் பொறிக்கப்பட்டிருந்தது. எதற்காக அப்படியொரு நாணயத்தைத் தன்னிடம் தந்தான் என்று புரியாமல் அந்த மனிதன் ஏதாவது சொன்னானா என்று கேட்டார்.

அதற்கு எம்மின் மகள் தவளைகளின் குரல் கேட்பதனால் மட்டும் மழை வருவதில்லை. அப்படி நம்புவது தவளைகளின் முட்டாள்தனம் என்று சொன்னதாகத் தெரிவித்தாள்.

அந்த மனிதன் எப்படியிருந்தான் என்று சொல்லமுடியுமா என்று கேட்டார். அவள் இருளில் நின்றதால் முகம் தெரியவில்லை என்று சொல்லியபடி வீட்டுப்பணிகளைச் செய்யச் சென்றாள்.

இது அதே பிச்சைக்காரன்தானா இல்லை வேறு மனிதனா? யாராவது தன் இறைநம்பிக்கைகளை சோதிக்கிறார்களா என்று புரியாமல் அந்த நாணயத்தை வீதியில் வீசி எறிந்தார் பாதிரி இம்மானுவேல்.

அதன் பிறகு அவருக்கு வான்கோழி இறைச்சியின் மீதான பிரியம் குறைந்துபோகத் துவங்கியது. ஆனால் அவர் வீதியில் வீசி எறிந்த நாணயம் அவரது படுக்கையின் அடியில் ஒவ்வொரு நாள் விழிக்கும் போதும் இருந்தது. அவரும் அதை கவனமாக எடுத்து ஓட்டுச்சில்லை வீசுவதுபோல வேலிப்புதர்களுக்குள் வீசி எறிவார். மறுநாள் காலை அது அவரது தலையணையின் அடியில் தூசிபடியாமல் அப்படியே இருக்கும்.

அதன் பிந்திய நாட்களில் அவரால் உரத்து பிரசங்கம் செய்யவோ, ஆயிரமாயிரம் பேர்களை வசியம் செய்யவோ முடியவில்லை. எல்லா கூட்டத்திலும் அவரது கண்கள் பிச்சைக்காரன் அதனுள் இருக்கிறானா என்றே தேடிக்கொண்டிருந்தது.

எதற்காக தன்னைத் தேடி பிச்சைக்காரன் வந்தான். ஏன் தான் வீசி எறிந்த நாணயம் தன்னிடமே வந்துவிடுகிறது என்பதை அவர் புரிந்துகொள்ளவே முடியவில்லை. முடிவில் ஒரு நாள் அவர் தன் வீட்டிலிருந்த யாரிடமும் சொல்லிக்கொள்ளாமல் ஒரு இரவு வெளியே கிளம்பிச் சென்றார். அதன்பிறகு அவர் வீடு திரும்பவேயில்லை.

# மதுக் கோப்பைகள்



*இரண்டு காலிக் கோப்பைகள் மது விடுதியில் மிக அருகாமையில் இருந்தன.*

*அந்தக் கோப்பையில் மது அருந்திய மனிதர்கள் வெளியேறிச் சென்றிருந்தனர். இரண்டு கோப்பைகளும் அடுத்த நாளின் இரவு வரை தனக்கு வேலையில்லை என்று முணுமுணுத்துக்கொண்டன.*

*முதல் கோப்பை சொன்னது,*

*'மனிதர்கள் குடிப்பது வெறும்பாவனை. அவர்கள் தனிமையை மறப்பதற்குத்தான் குடிக்கிறார்கள்.'*

*இரண்டாவது கோப்பை சொன்னது,*

*'அப்படியில்லை தனிமையை நினைவுபடுத்திக்கொள்வதற்கே குடிக்கிறார்கள்.'*

*முதல் கோப்பை சொன்னது,*

*'குடிப்பதற்காக மனிதர்கள் சொல்லும் காரணங்கள் உயர்ரக கவிதைகள் போன்றவை. கற்பனையின் எல்லையற்ற சாத்தியங்களை அவை நினைவுபடுத்துகின்றன.'*

*இரண்டாம் கோப்பை சொன்னது,*

*'குடித்த பிறகு மனிதர்கள் சொல்லும் கதைகள் மலினமான சுயபிதற்றல்கள். இயலாமையை மறைத்துக் கொள்ளும் விளையாட்டு. பார்வையாளன் இல்லாத மிகை நடிப்பு.'*

*முதல் கோப்பை சொன்னது,*

*'மதுக்கோப்பையாக இருப்பது நாக் கில்லாத பல்லி பூச்சியைப் பிடிக்க முயல்வது போன்றது.'*

*இரண்டாவது கோப்பை அலுப்புடன் சொன்னது,*

*'மதுக்கோப்பையாக இருப்பது கோபத்திற்கும் துயரத்திற்கும் இடையில் சொட்டி நிற்கும் துளிமழை போன்றது. எந்நேரமும் அது கைவிடப்படக்கூடும்.'*

*இரண்டு கோப்பைகளும் பெருமூச்சிட்டுக்கொண்டன. பிறகு இரண்டும் ஒரே குரலில் சொல்லின,*

*'தனிமை மிக பயங்கரமானது.'*

# கதை இல்லாத மிருகம்

கதை இல்லாத மிருகங்கள் உலகில் வாழ முடியாது என்று நம்பும் ஆதிவாசிகளான ஒட்டர்களைக் காண்பதற்காக பார்த்தலோமியா பாதிரி ஒரு வாரம் வனத்திற்குள்ளாகவே பயணம் செய்தார். வனவாசி களில் ஒருவன்கூட அவர் கண்ணில் படவேயில்லை. முடிவில் அவர் காட்டாற்றை படகில் கடக்க முற்பட்டபோது அவர் மீது முதல் அம்பு வீசப்பட்டது.

அவர் தோளில் குத்திக் குருதி வழிந்தபோது ஒட்டர்களில் ஒருவனைக் கண்டார். அவன் உரத்த குரலில் ஆற்றை படகில் கடப்பது அதை அவமதிப்பது என்ற பொருள்படும்படியாகக் கத்தினான். தன் படகிலிருந்து குதித்த பார்த்தலோமியா நீந்தி மறு கரைக்கு வந்து சேர்ந்தார். கரையில் தென்பட்ட ஒட்டனைக் காணவில்லை. அவன் தோன்றி மறைந்த இலைக்கூட்டத்தை விலக்கிக்கொண்டு அவர் இரண்டு நாள் பயணமாக நடந்து வனவாசிகளின் குடியிருப் பிற்கு வந்து சேர்ந்தார்.

அவர்கள் மரங்களில் பரண் அமைத்துத் தங்கியிருந்தார்கள். ஒட்டன்களில் ஒருவனுக்கு அவர் தன்னிடமிருந்த சிகரெட் ஒன்றைத் தந்து புகைக்கச் சொன்னார். அவனுக்கு அந்தப் புகை பிடித்திருந்தது போலும். பார்த்தலோமியாவை அவன் புகைக் கடவுளின் தூதன் என்று வாழ்த்தியபடியே அவர் வனத்திற்குள் எதற்காக வந்து சேர்ந்தது, தங்கள் ஆன்மாவை திருடிக்கொண்டு போவதற்குத்தானா என்று கேட்டான். பார்த்தலோமியா இல்லை என்று மறுத்தபடியே தான் அவர்களின் நலனிற்காக பிரார்த்தனை செய்வதற்காக மட்டுமே என்றார்.

அவன் பிரார்த்தனை என்றால் என்னவென்று கேட்டான். பார்த்த லோமியா அவனுக்கு எப்படிப் புரிய வைப்பது என்று தெரியாமல் மண்டியிட்டு பிரார்த்தனை செய்து காட்டினார். அவனுக்கு மிக வேடிக்கையான நிகழ்வாக அது அமைந்திருந்தது. பார்த்தலோமியா அவர்களின் அறியாமையை நினைத்து வருந்தியபடியே சில காலம் அங்கே தங்கியிருக்க முடிவு செய்தார்.

மான் இறைச்சியும் பழச்சாறுமாக பார்த்தலோமியா வனவாழ்க்கைக்குப் பொருந்தியிருந்தார். அவரை வனவாசிகள் அன்புடன் நடத்தினார்கள். அவரோடு சேர்ந்து குளித்தார்கள். ஆடிப்பாடினார்கள். ஆனால் ஒருவர்கூட பிரார்த்தனையில் நம்பிக்கை வைக்கவில்லை.

ஒருநாள் அவர்கள் காட்டிலிருந்து மானைவிட சிறிய மிருகம் ஒன்றைப் பிடித்து வந்தார்கள். அப்படியொன்றை பார்த்தலோமியா கண்டதேயில்லை. அதன் பெயர் என்னவென்று கேட்டார். ஒட்டன் கோபமடைந்து மிருகங்களுக்குப் பெயரிடும் உரிமையை அவர்கள் பெற்றிருக்கவில்லை என்று சொல்லி அதன் பெயரை மிருகமே வெளிப்படுத்தும் என்றான்.

பார்த்தலோமியா அந்த மிருகத்தை நெருக்கமாகச் சென்று பார்த்தார். அது முயலைவிட பெரியதாகவும் மானை விட சிறியதாகவும் இருந்தது. அதன் பச்சைநிறக் கண்கள் மினுங்கிக்கொண்டிருந்தன. அந்த மிருகம் பயத்தில் ஒடுங்கியிருந்தது.

ஒட்டர்களில் ஒருவன் அந்த மிருகத்தைப் பற்றி ஏதாவது ஒரு கதையை உருவாக்காவிட்டால் அது தங்களை விட்டுப் போய்விடும் என்று உறுதியான குரலில் சொன்னான். என்ன கதையை அந்த மிருகத்திற்குச் சொல்வது என்று தெரியாமல் அவர்கள் போராடினார்கள். யாவரும் நம்பும்படியாக ஒரு கதையை உருவாக்குவது எளிதானதில்லை என்று வயதான ஒட்டன் மறுபடி மறுபடி சொல்லிக்கொண்டிருந்தான்.

பார்த்தலோமியா அந்த மிருகம் ஒரு மனிதனாக இருந்தது. பிறகு அது தன் பாவத்தால் மறுபடி பிறந்து ஒரு மிருகமாகி இருக்கிறது. அதன் பாவம் தீர்ந்து போனதும் அது ஒரு பரிசுத்த உயிர் ஆகிவிடும். இது பாவத்தின் அடையாளம் என்றொரு கதையைச் சொன்னார். அந்தக் கதையைக் கேட்ட ஒட்டர்கள் மிரட்சியடைந்து போனார்கள். அவர்கள் தங்களுக்குள்ளாகவே இரவெல்லாம் பேசிக்கொண்டிருந்தார்கள்.

அந்தக் கதையை அவர்கள் முழுமையாக நம்பினார்கள் என்பது அவர்கள் முகங்களில் தெரிந்தது. இரவெல்லாம் வனவாசிகளின் கதை பேசல் தொடர்ந்தது. விடிகாலையின் போது உறங்கிக்கொண்டிருந்த பார்த்த லோமியாவை எழுப்பினார்கள். அவர் தூக்கம் கலையாமல் எழுந்தபோது அவர் கைகள் கட்டப்பட்டன. அவரையும் மிருகத்தையும் ஒன்றாகக் கொண்டுசென்று பாறையின் உச்சியில் கொண்டு நிறுத்தி அவர் உயிரை கல்ஈட்டிகள் கொண்டு குத்தி சரிக்கப் போவதாகக் கத்தினார்கள். எதற்காக என்று அவர் கேட்டபோது அந்தக் கதை நிஜமானது. இறந்துபோன ஒரு மனிதனை மிருகமாக்கி வர வழைத்தது அவர் தான் என்று தங்களுக்குத் தெரிந்துவிட்டது என்ற படியே ஒருவன் கல்ஈட்டியால் அவர் விலாப்புறத்தில் குத்தினான்.

பாதிரி பயத்துடன் மிக சப்தமாக அது வெறும் கட்டுக்கதை உண்மையில்லை என்று கத்தினார். நான்கு குத்தீட்டிகள் ஒரே நேரத்தில் பாய்ந்தன.

கதைகள் தானே உருவாவதில்லை. அதற்கு விதையிருக்கிறது. நீ சொன்ன கதை நிஜம் என்று மூத்த ஒட்டன் பதில் சொல்லியபடியே தன் குத்தீட்டியை பாதிரியின் அடிவயிற்றில் ஆழமாகச் செருகத் துவங்கினான். அது அவரையும் மிருகத்தையும் ஒரே நேரத்தில் குத்தி உள்ளே சென்று பாய்ந்தது.

# கண்ணீர்பூட்டு

மும்பை மாநகரின் அடுக்குமாடிக் குடியிருப்பில் இருபத்தி மூணாவது தளத்தில் வசித்த அந்த வங்கி அதிகாரி மிக நாகரிகமானவர். சொந்த ஜாதியில் அழகியாகப் பார்த்து திருமணம் செய்ய விரும்பி பல வருசம் காத்திருந்து ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார். அவள் பகலெல்லாம் தன்னை அலங்கரித்தபடியே இருப்பாள். காணும் எவரும் அவளை ஒரு நிமிடம் கண்களால் தழுவியே சென்றனர்.

அதிகாரி திருமணமாகி மூன்று ஆண்டுகள் ஆகியும் தன் மனைவியை நம்பவில்லை. அவளுக்கு வேறு காதலன் இருக்கக்கூடும் என்று உள்ளூர நினைத்தபடியே இருந்தான்.

இதற்காக அவளைக் கண்காணித்தான். சண்டை யிட்டான். அவளோ தன்னுடைய கடந்த காலக் காதல்களை அவனிடம் ஒரு போதும் மறைத்த தில்லை. இப்போது வீடும் தனிமையும் மட்டுமே கூட இருக்கிறது. இது வீண்சந்தேகம் என்று கத்தினாள்.

அதை நம்பமுடியாத கணவன் அவள் கைகால்களை இரும்புச் சங்கிலியால் கட்டி நூதமான பூட்டு ஒன்றை வைத்து பூட்டி விட்டு அலுவலகம் கிளம்பிச் சென்றான். அந்தப் பெண் ஜன்னலில் இருந்து வெளிவரும் வெளிச்சத்தையும் தொலைதூர விமான சப்தத்தையும் கேட்டபடியே அறைக்குள் கிடந்தாள்.

தன் கைகள் தன்னுடைய உத்தரவிலிருந்து விடுபட்டதையும் கால்கள் அசைவில்லாமல் ஒடுங்கிக்கொண்டதையும் கண்டு அவளுக்கு துக்கமாக இருந்தது. அவமானம் தாளமுடியாமல் கண்ணீர்விட்டாள்.

ஒரு சொட்டுக் கண்ணீர் அந்தப் பூட்டில் விழுந்தவுடன் பூட்டு திறந்துகொண்டுவிட்டது.

அவள் எதுவும் நடக்காதவள் போல குளியல் அறைக்குச் சென்றாள். குளித்து நறுமணத்தைலங்கள் பூசிக்கொண்டாள். வாசற்கதவைத் திறந்து வெளியேறினாள். கேளிக்கைகளின் ஒவ்வொரு கதவாகத் தட்டி தன்னைக் கரைத்துக்கொண்டாள்.

மாலை வீடு திரும்பும்போது பூட்டை எப்படி மாட்டிக்கொள்வது என்று அவளுக்குத் தெரியவில்லை. முதலில் கவலையாக இருந்தது. நடப்பது நடக்கட்டும் என்று பலமாகச் சிரித்தாள். பூட்டு தானே பூட்டிக் கொண்டது.

ஒரு துளி சிரிப்பு

ஒரு துளி கண்ணீர்

இரண்டும்தான் பூட்டும் திறப்புமாக இருக்கிறது என்று முணு முணுத்தபடியே அவள் மறுபடியும் படுக்கையில் ஒடுங்கிக்கொண்டாள் தன் அடிமைச்சங்கிலி பற்றி மனைவியிடம் சிறு முணுமுணுப்புகூட இல்லை என்பதை அறிந்த கணவன் மிகுந்த சந்தோஷம் கொண்டான்

இருவரும் ஒன்றாக உறங்கினார்கள். வேறுவேறு கனவு கண்டார்கள்.

தன் கட்டுப்பாட்டுக்குள் மனைவியை வைத்திருப்பதில் வெற்றி கண்ட அதிகாரி திருப்தி அடையத் துவங்கினான். சந்தேகம் அவனிட மிருந்து வடியத் துவங்கியது. அவள் அதற்கு பிறகு கணவனை விட்டு வெகு தூரம் விலகி தன் விருப்பத்தின் பாதையில் அலைந்து திரிந்தாள்.

இருவருக்கும் இரண்டு உலகம் உருவானது.

இப்போது அவர்கள் சந்தோஷமான தம்பதிகளாக வாழ்ந்து கொண்டி ருக்கிறார்கள்.

# மஞ்சள் பட்டம்

ஒரு மரம் தன் கிளையில் சிக்கியிருந்த மஞ்சள் நிறப் பட்டத்தை எடுத்து விளையாடுவதற்கு ஆசைப்பட்டது.

கிளை வளைத்து அது பட்டத்தை தன் கையில் எடுத்துப் பார்த்து சந்தோஷமுற்றது.

காற்றிற்கு எதிராக ஒருபோதும் தன்னால் எதுவும் செய்ய முடிந்ததில்லை என்றபடியே பட்டத்தை ஆகாசத்தில் பறக்கவிட்டது.

வானில் பட்டம் உயர்ந்து சுற்றிப் பறக்கையில் மரம் தாளாத சந்தோஷம் கொண்டது. காற்று பட்டத்தைத் துரத்துவதும் பட்டம் தப்புவதுமான விளையாட்டு தொடர்ந்தது.

வேர்கள் இல்லாமல் இருந்தால் நானும் ஆகாசத்தில் மிதந்தலை வேன் என்று மரம் ஆதங்கத்துடன் சொன்னது.

முடிவில் காற்றின் அசுரக் கரங்கள் பட்டத்தைச் சுழற்றி வீசி எறிந்தன.

மரம் மௌனமாக அதைப் பார்த்தபடியே இருந்தது.

பின்பு மெல்லிய குரலில் முணுமுணுத்துக்கொண்டது

சந்தோஷங்கள் சிறுநிமிடம் கூட நிலைத்திருப்ப தில்லை. உலகம் மிக மோசமானது.

# சுயபுலம்பல்

சாவை எதிர்கொள்வது பற்றி ஒரு சிகரெட்டும் தீக்குச்சியும் பேசிக்கொண்டன.

தீக்குச்சி சொன்னது,

'ஒரு நிமிடம் வாழ்ந்தாலும் ப்ரகாசமாக எரிந்து சாக வேண்டும்.'

சிகரெட் சொன்னது,

'தன்னை அழித்துக்கொள்வது ஒரு கலை. நான் எரிந்துகொண்டிருக்கும் நிமிடங்கள் யாரோ ஒருவன் சந்தோஷம் கொள்கிறான்.'

தீக்குச்சி சொன்னது,

'உலகில் எந்தத் தீக்குச்சியும் முழுமையாக எரிந்ததே யில்லை. பாதி எரிந்து போவது அவமானம்.'

சிகரெட் சொன்னது,

'நானும் அப்படித்தான். புகையும் நிமிடங்களில் எவரெவர் மீதுள்ள வெறுப்பும் கோபமும் என் மீது தான் காட்டப்படுகிறது. தனது எதிரியின் குரல் வளையை நெறிப்பதைப்போலத்தான் ஒவ்வொரு மனிதனும் சிகரெட்டை காலால் அழுத்தித் தேய்த்து அணைக்கிறான். அது தாளமுடியாத அவமதிப்பு.'

தீக்குச்சியும் சிகரெட்டும் சேர்ந்து சொன்னது

'சாவில்தான் இருப்பு அர்த்தம் பெறுகிறது போலும்.'

# மறக்கப்பட்ட தீவு

பறவையின் இரண்டு சிறகுகள் எனப்படும் அந்த இரண்டு தீவுகள் கடலில் ஒன்றோடொன்று அரு காமையில் இருந்தன. இரண்டும் ஒன்று போல நகர்ந்து கொண்டிருப்பதாகவும் ஒரு நாளில் அது பறந்து கடலின் மேற்குப் பகுதிக்குப் போய்விடும் என்றும் நம்பிக் கொண்டிருந்தார்கள்.

இதில் இடது சிறகு என்று அழைக்கப்படும் தீவிற்கு வேலைக்காக நான் சென்றிருந்தேன். தீவு விசித்திரமாக இருந்தது. என் வேலை பவளப்பாறைகளைப் பற்றிய ஆய்வு செய்வது. அந்தத் தீவில் மொத்தமே இருநூறு பேருக்கும் உள்ளாகத்தான் இருந்தார்கள். அவர்கள் பூர்வீக மாக தீவின்வாசிகள். நானும் இன்னும் இரண்டு பேரும் மட்டுமே வெளியில் இருந்து வந்தவர்கள். இடது சிறகு தீவில் ஆண்டில் எட்டு மாதம் மழை பெய்துகொண்டேயிருக்கும் என்பதால் அவர்கள் ஓடிக் கொண்டேயிருந்தார்கள். மழை என்ற சொல்லை அவர்கள் பயன் படுத்துவதேயில்லை. அதைக் குறிப்பிடுவதற்கு அவர்கள் அம்பு என்ற சொல்லைப் பயன்படுத்தினார்கள். நான் சென்ற மூன்றாவது வாரத்தில் மழை துவங்கியது.

அவர்கள் ஏன் மழையைக் கண்டு பயப்படுகிறார்கள் என்பதை அப்போதுதான் அறிந்துகொண்டேன். பலத்த இடிமின்னலுடன் கூடிய மழை. அவ்வளவு மிகுமிழையை நான் கண்டதேயில்லை. மழையின் வேகமும் மிக அதிமாக இருந்தது. அறைக்குள்ளாகவே இருந்தபடியே மழையை வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தேன். மழை என்ற சொல்லைப் பயன்படுத்த எனக்கே பயமாக இருந்தது. தனிமை, மின்சாரமில்லாத இருள், நினைவில் தோன்றி மறையும் சொந்த ஊர் என்று என் இருப்பு இறுக்கமடைந்துகொண்டிருந்தது. பெண் துணைக்காக மனம் ஏங்கத் துவங்கியது. யாராவது ஒரு பெண் கிடைப்பாளா என்று தீவுவாசிகளிடம் தயக்கத்துடன் கேட்டேன்.

தீவுவாசி பயத்துடன் சொன்னான், ‘இந்தத் தீவில் ஒரேயொரு நாள் மட்டுமே பெண்களுடன் ஆண்கள் பாலுறவு கொள்ள அனுமதிக்கப் படுவார்கள். அன்று நாள் முழுவதும் பாலுறவு கொள்ளலாம். ஆனால் அதன் பிறகு பெண்களும் ஆண்களும் சேர்ந்து உறங்குவதேயில்லை.’

'என்ன அபத்தமான செயல்' என்றபடியே 'அந்த நாள் எப்போது வரும்' என்று கேட்டேன். 'அந்த நாளை முடிவு செய்வது தங்களது குலகுருவின் கையிலிருக்கிறது' என்று சொன்னான்.

வலது சிறகு தீவில் இருப்பவர்கள் அதிர்ஷ்டசாலிகள் அவர்கள் பெண்களோடு தினமும் உறங்குகிறார்கள். அங்கே பகலை விட இரவு நீண்டது. அவர்கள் எதையும் நினைவு வைத்துக்கொள்வதே யில்லை. அன்றாடம் நடந்ததை மறந்துவிடுவார்கள் என்றான்.

'அதுதான் எனக்கு வேண்டியது' என்றபடியே என் ஆய்வை வலதுசிறகு தீவில் செய்ய உத்தேசம் கொண்டிருப்பதாக மேலிடத்திற்கு தகவல் அனுப்பினேன். 'அங்கிருந்து அப்படி இடம் மாற வேண்டாம்' என்று மறுமொழி வந்தது. நான் அதைப் பெரியதாக எடுத்துக்கொள் ளாமல் ஒரு நாள் நாட்டுப்படகில் ஏறி வலது சிறகு தீவிற்கு போய்ச் சேர்ந்தேன்.

அந்தத் தீவில் மிகச் சொற்பமான ஆட்களே இருந்தார்கள் என்ப தால் ஆட்களைக் காண்பதே அரிதாக இருந்தது. நான் சென்றிறங்கிய நாளில் பார்த்துக்கொண்டிருந்த போதே பகல் முடிந்து இரவாகியிருந் தது. நான் எங்கே தங்குவது என்று புரியாமல் தேடி அலைந்தபோது ஒரு ஆள் என்னை அடையாளம் கண்டுகொண்டவன் போல புன்சிரிப்பு டன் என்னை அழைத்துப் போனான். குனிந்து செல்லும்படியாக அமைக்கப் பட்ட குகையொன்றினுள் என்னை அழைத்துக்கொண்டு சென்றான்.

ஒரு பெண் இருட்டிற்குள்ளாகவே அமர்ந்திருந்தாள். அவளிடம் என்ன பேசினான் என்று புரியவில்லை. அந்தப் பெண் எழுந்து என் கையைப் பிடித்து உள்ளே அழைத்துக்கொண்டு போனாள். அந்த இருளுக்கு என் கண்கள் பழகவில்லை. ஆனாலும் அவளின் உடல் துடிப்பு என்னை காமமேற்றிக்கொண்டிருந்தது. மலைப்பாம்பு ஒன்று உடலில் பிணைந்து கொண்டது போன்ற மூர்க்கத்துடன் அவளது புணர்ச்சியிருந்தது.

நான் அயர்ந்து உறங்கியிருந்தேன். விடிந்து வெளிச்சம் வந்தபோது குகையின் வாசல் அடைக்கப்பட்டிருப்பதை உணர்ந்தேன். அந்தப் பெண் படுக்கையில் கிடந்தாள். நான் குகை வாசலை திறக்க முற் பட்ட போது அவள் ஆண்டின் சில நாட்கள் மட்டுமே குகையின் வாசல் திறக்கப்படும். அதுவரை இங்கேயேதானிருக்க வேண்டும் என்றபடியே அடுத்த பாலுறவிற்காக அழைக்கத் துவங்கினாள். என்னால் வெளியேற முடியவில்லை. நாட்களின் நீட்சியில் காமம் வடிந்து நான் உலர்ந்த திராட்சை போலாகியிருந்தேன். நடந்த எதுவும் எனக்கும் நினைவில் தங்க மறுத்து போனது.

மெல்ல என் மனதில் இருந்த என்னைப் பற்றிய பிம்பம் அழிந்து பசி உறக்கம் காமம் என்ற ஆதார உணர்ச்சிகள் மட்டுமே என்னிடம் மீதமிருந்தன. பின்பு ஒரு நாள் அந்தக் குகையின் கதவு திறந்தது. நான் வெளியே செல்ல ஆசைப்படவில்லை.

இரண்டு சிறகுகளும் சேர்ந்துகொண்டு தீவு பறந்து செல்லும் நாளுக்காக நானும் காத்துக்கொண்டிருக்கத் துவங்கிவிட்டேன்.

# காதில்லாத அரசன்

கடலும் மலையும் சூழ்ந்த ஒரு நாட்டை காதில்லாத அரசன் ஒருவன் ஆண்டுவந்தான். அவனது மூதாதையர்கள் காலத்திலிருந்தே அரச வம்சத்தில் பிறக்கும் எவருக்கும் காதிருப்பதில்லை. அது அவர்களுக்கு பெரிய குறையாகவும் இல்லை. அரசனுடைய காதுகளை உண்மை யான செய்திகள் எந்தக் காலத்திலும் எட்டியதேயில்லை என்பதால் காதை அவர்கள் பயன்படுத்தாமல் இருந்திருந்து காதற்றுப் போய் விட்டதாக ஒரு நம்பிக்கையிருந்தது.

அதை மெய்ப்பிப்பதுபோலவே அரசவம்சத்தில் பிறக்கும் குழந்தை களும் காதில்லாமலே பிறந்தன. காதில்லாத அரசன் அரண்மனையை விட்டு வெளியே வருவதுமில்லை. யாரையும் நம்பியதுமில்லை. மிகுந்த முன்கோபியாக இருந்தான். தன் அரண்மனையைச் சுற்றி பெரிய கோட்டை கட்டிக்கொண்டு ஆயிரம் பாதுகாவலர்கள் சூழ எப்போது மிருந்தான். மக்களோ பட்டினியும் பஞ்சமுமாக போக்கிடம் இன்றித் தவித்துக்கொண்டிருந்தார்கள்.

காதில்லாத அரசனுக்கு அவ்வவ்போது தன் நாட்டுமக்களின் நலன் பற்றி சந்தேகம் வந்துவிடும். அப்படியொரு நாள் தன் மந்திரியை அழைத்து 'மனிதர்களுக்கு முதுகு இருப்பதால் என்ன பிரயோசனம் இருக்கிறது' என்று கேட்டான்.

மந்திரி யோசித்துவிட்டு ஒரு பிரயோசனமும் இல்லை என்றதும் அரசன் ஆவேசத்துடன் 'பிரயோசனம் இல்லாத முதுகு மக்களுக்கு எதற்கு வேண்டும். உடனடியாக சவுக்கால் அடித்து முதுகை பிய்த்து எடுத்துவிடுங்கள்' என்றான்.

மந்திரி உடனே ராஜாவின் ஆணையை நாடெங்கும் செயல்படுத்த ஆணையிட்டான். ஆண்கள், பெண்கள், குழந்தைகள் பேதமின்றி முதுகை உறிக்கும் வேலை மும்முரமாக நடந்தது. ஆனால் ஒரு மனிதனின் முதுகைக்கூட முழுவதுமாக உறிக்க முடியவில்லை. நாடெங்கும் ஒரே ஓலமாக இருந்தது.

காதில்லாத அரசனுக்கோ பயங்கர கோபம் வந்தது. அவன் முதுகை உறிப்பதற்கான விசேஷ ஆயுதங்களைச் செய்யும்படியாக கஜானாவி

லிருந்து நிதியை அள்ளி அள்ளிக் கொடுத்தான். ரத்தம் சொட்ட சொட்ட மக்கள் அலறியபோதும் அவன் காதில் கேட்கவேயில்லை. மக்கள் ஓடி ஒளிந்து காட்டிற்குள் பதுங்கிக்கொண்டார்கள். மந்திரிகளோ ராஜ்ஜியத்தில் ஒருவனுக்குக்கூட இப்போது முதுகில்லை என்று அறிவித்து மன்னரை சந்தோஷம் கொள்ள வைத்தார்கள்.

மன்னரும் முதுகில்லாத மக்களைக் காண வேண்டும் என்று அரண்மனையை விட்டு பயணம் புறப்பட்டார். காட்டுவழியில் மன்னர் வருவதை அறிந்த கோபமுற்ற இளைஞர் கூட்டம் வண்டியைத் தாக்கியது. மன்னர் வழியிலே கொல்லப்பட்டார்.

மக்கள் உடனே தங்களுக்கு காதுள்ள ஒரு அரசன் வேண்டும் என்று கூச்சலிட்டார்கள். மந்திரி அவர்களை சமாதானப்படுத்தி தன் மகனுக்கு மூன்று காதுகள் இருப்பதாகவும் அப்படியொருவன் ஆட்சி செய்தால் நாடு சூபிட்சமாக இருக்கும் என்று அறிவித்தார்.

நாட்டிற்கு புதிதாக மூன்று காதுள்ள அரசன் ஆட்சிக்கு வந்தான். அவன் அரசன் ஆன பிறகுதான் தெரிந்தது அவனது மூன்று காது களும் புகழ்ச்சியுரையை மட்டுமே கேட்கும் என்று. யார் எந்தப் புகார் சொன்னாலும் காதுகளிலும் விழுவதேயில்லை.

சுற்றியிருப்பவர்கள் பகலிரவாக புகழ்ந்து பாராட்டிக்கொண்டே யிருந்தார்கள். அவனாலும் நாட்டிற்கு ஒரு பிரயோசனமும் இல்லை. இது என்ன நாட்டைப் பிடித்த சாபமா என்று மக்கள் திரண்டு ஒரு ஞானியைச் சந்தித்துக் கேட்டார்கள். அவர் சிரித்துக்கொண்டே சொன்னார்,

இந்த நாட்டில் மட்டுமில்லை, உலகில் எந்த நாட்டிலும் அதிகாரத் தில் இருப்பவனுக்குக் காது இருப்பதில்லை. அவன் ஒருவேளை மூன்று காதுள்ளவனாக இருந்தாலும் புகழ்ச்சி மட்டுமே அந்தக் காதில் ஒலிக்கும். இதற்குப் பெயர் அரசவியாதி. அதற்கு வைத்தியமே யில்லை.

எவன் காதுகள் உறக்கத்திலும் விழித்திருக்கிறதோ, எவன் காதுகள் அவலக் குரலுக்கு உண்மையாக செவிமடுக்கிறதோ, அவனைத் தேடிக் கண்டு அடையுங்கள். அவன் உங்களுக்குள்தான் இருப்பான் என்றார்.

மக்கள் தங்களைத் தானே அரசாளத் துவங்கியது அப்படித்தான் ஆரம்பமானது.

# நீலநிறத் தாடி

பள்ளிக்குச் செல்லும் வழியில் இரட்டையர்களான அந்தச் சிறுமிகள் நீலநிறத்தில் தாடி வைத்த முதிய வரைக் கண்டார்கள்.

அவர் சாலையின் ஓரமாக நின்றபடியே உதிர்ந்த இலைகளை மரத்தில் ஒட்ட வைத்துக்கொண்டிருந்தார். இது விந்தையாக இருக்கிறதே என்று அவர்கள் சொன்னபோது இது ஒன்றும் விந்தையில்லை என்றபடியே அவர் மறைந்து போனார்.

மறுமுறை அவரை சிறுமிகள் காய்கறி மார்க்கெட்டில் பார்த்தார்கள்.

அவர் காய்கறிகளை தண்ணீர் தெளித்து பூவாக மாற்றிக்கொண்டிருந்தார். சிறுமிகளின் கண்முன்னே கத்திரிக்காய் ஒன்று கத்திரிப் பூவானது.

விந்தையாக இருக்கிறதே என்றார்கள் சிறுமிகள். இது ஒன்றும் விந்தையில்லை என்றார் தாடிக்காரர்.

சிறுமிகளும் அவரும் ஒரே நேரத்தில் சிரித்தார்கள்.

அடுத்த முறை அவரை கடலின் அருகில் பார்த்தார்கள். அவரோ மணலில் விரலால் வரைந்த மீன் ஒன்றை கடலுக்குள் நீந்திச் செல்ல உதவி செய்துகொண்டிருந்தார்.

விந்தையாக இருக்கிறதே என்றார்கள் சிறுமிகள். இது ஒன்றும் விந்தையில்லை என்றார் தாடிக்காரர்.

சிறுமிகள் தங்களுக்கும் மணல்மீன் வேண்டுமென்று கூச்சலிட்டார்கள் பதில் சொல்லாமலே அவர் கடந்து போய்விட்டார்.

நான்காம் முறையாக அவரை சிறுமிகள் தங்கள் கனவில் பார்த்தார்கள்.

ஏன் அவர் நீலநிறத்தில் தாடி வைத்திருக்கிறார் என்று கேட்டார்கள். அதற்கு அவர் தன்னுடைய தாடி தன் விருப்பத்திற்கு கட்டுப்படுவதில்லை. அதன் நிறத்தை அதுதான் தேர்வு செய்துகொண்டது என்றார்.

இது விந்தையில்லையா என்று சிறுமிகள் அவரிடம் கேட்டார்கள். அவர் வியப்புடன் 'ஒரே வயிற்றில் ஒரே கருவில் பிறந்து ஒன்றாக வளரும், இரட்டைச் சிறுமிகளான நீங்கள் ஒரே கனவைக் காண்பதும்

ஒரே குரலில் பேசுவதும்தான் பெரிய விந்தை' என்றார்.

சிறுமிகள் அது ஒன்றும் விந்தையில்லை என்றார்கள்.

நீலத்தாடி கிழவன் சொன்னார்,

சிறுவர்கள் நட்சத்திரங்களைப் பார்த்து வியப்பதில்லை. கூழாங் கல்லைத்தான் வியப்போடு பார்க்கிறார்கள். சேகரித்து வைக்கிறார்கள். உண்மையில் எல்லா விந்தைகளும் அற்ப நிமிட சந்தோஷங்களே என்று சொல்லி மறைந்து போனார்.

# இயல்பு

அழைப்பு மணியின் சப்தம் கேட்டு கதவைத் திறந்தேன். வாசலில் ஒரு மனிதகுரங்கு நின்றிருந்தது. நீல நிறத்தில் கோடுபோட்ட சட்டை, தோளில் ஒரு லெதர் பேக், மெல்லிய பிரேம் உள்ள கண்ணாடி. ஒட்ட வெட்டப்பட்ட தலை. அகலமான கைகள். காலில் நைக் ஷு. உள்ளடங்கிய புன்னகை. சற்றே குழப்பமான நிலையில் என்ன வேண்டும் என்று கேட்டேன்.

அந்தக் குரங்கு இனிமையான குரலில் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டது. தான் ஒரு விற்பனை பிரதிநிதி என்றும், கொரியத் தயாரிப்பான அதிநவீன செல் ஃபோன் விற்பதற்காக தான் வந்துள்ளதாகச் சொல்லி, தயாராக கையில் வைத்திருந்த விளம்பர அறிக்கை ஒன்றை என் முன்நீட்டியது. நான் வியப்புடன் மனிதக்குரங்கை பார்த்துக்கொண்டிருந்தேன். அமெரிக்க உச்சரிப்புடன்கூடிய ஆங்கிலத்தில் மிக நளினமாக அது தன் விற்பனைப் பொருளின் மேன்மைகளைப் பற்றி எடுத்துச் சொல்லிக்கொண்டிருந்தது.

என் மனதிலே அது மனிதக் குரங்கு, மனிதக் குரங்கு என்ற ஒரு ஒற்றைக்குரல் ஓயாமல் எதிரொலித்தபடியே இருந்தது. என் குழப்பத்தை புரிந்துகொண்டது போல மெல்லிய வெட்கத்துடன் 'இதன் முன்பு என்னைப் போன்ற பிரதிநிதிகளை நீங்கள் கண்டதில்லையா' என்று ஆங்கிலத்தில் கேட்டது.

இல்லை என்று தடுமாறியபடியே சொன்னேன். 'விஞ்ஞான வளர்ச்சியின் அடுத்த கட்டத்திற்கு நாம் நகர்ந்துவிட்டோம் என்ற உண்மையை நீங்களும் ஏற்றுக்கொள்வீர்கள் என்று நம்புகிறேன். செயற்கை அறிவு கொண்ட ரோபோக்களை விடவும் எங்களைப் பார்த்துதான் அதிகம் பேர் வியப்படைகிறார்கள். அது ஏன் என்றே புரியவில்லை' என்றது.

'அப்படியெல்லாம் இல்லை. இது என்னுடைய தவறுதான்' என்று தயங்கியபடியே சொன்னேன்.

தான் ஹோமோசெபியன் வகை குரங்கு என்றும் தனது மூதாதையர்களான நியான்டர்தால், குரோமகனான் பற்றி நிச்சயம் நான் அறிந்திருப்பேன் என்றபடியே தனது குடும்பம் முப்பது வருசங்களுக்கு

முன்பாகவே அடர்ந்த வனத்திலிருந்து இடம்பெயர்ந்து நகரம் நோக்கி வந்துவிட்டதாகவும் தான் முறையாக பள்ளிக் கல்வி கற்று, நான்கு மொழிகளில் பயிற்சி பெற்றுள்ளதோடு, டெல்லி பல்கலைக்கழகத்தி லிருந்த விற்பனையுத்திகள் குறித்த சான்றிதழ் பட்டயமும் பெற்றி ருப்பதாகச் சொல்லியது.

நான் தயக்கத்துடன் 'இப்படி ஒருவரை நான் முன்பு சந்தித்ததே யில்லை' என்று சொன்னேன். அது தலையசைத்தபடியே, 'இந்த நகரில் என்னைப் போன்றவர்கள் அதிகமில்லை. ஆனால் என் நண்பர் களில் பலர் வெளிநாடுகளில் முக்கிய பொறுப்புகளை வகிக்கிறார்கள். பேராசிரியர்களாக, விமானியாக, ஏன் ஊடக விற்பன்னர்களாகக்கூட பணியாற்றுகிறார்கள். அங்கே அவர்களை எவரும் பேதமாக நடத்துவ தில்லை, கேலி செய்வதில்லை' என்றது.

'அது சரிதான்' என்றபடியே அதன் கைகளைப் பார்த்துக்கொண்டி ருந்தேன். அகலமான கைகள். விரல்நகங்கள் கவனமாக வெட்டப்பட்டி ருந்தன. மனிதக் குரங்கு என் வீட்டில் அலங்காரத்திற்கு வைக்கப்பட்ட பொருள்களைப் பார்வையிட்டபடியே 'உங்கள் ப்ரிட்ஜில் முட்டை யொன்று உடைந்து போயிருக்கிறது' என்றது. அவசரமாக குளிர்சாதனப் பெட்டியின் கதவைத் திறந்து பார்த்தேன். நிஜம். ஒரு முட்டை உடைந்து வழிந்து போயிருந்தது, அதை எடுத்து வெளியே வைத்தபடியே எப்படி அதற்குத் தெரிந்தது என்று கேட்டேன்.

மனிதக் குரங்கு சிரித்தபடியே 'தலைமுறை தலைமுறையாக காட்டில் தான் வாழ்ந்தோம். வாசனையை எங்கிருந்து கசிந்தாலும் அறிந்துவிட முடியும்' என்றது.'என்னால் சமையலறையில் இருந்து வரும் வாசனை யைக்கூட எது என்னவென்று பிரித்து அறிய முடியவில்லை' என்றேன். குரங்கு சிரித்தபடியே வாசனை, சிறு சப்தம், பயம் யாவும் அடிமனதில் அப்படியேதானிருக்கிறது. இன்னும் மறையவில்லை என்றபடியே 'உங்கள் வீடு இருக்குமிடம் ஒரு காலத்தில் பெரிய ஏரியாக இருந்தது என்றும் அதில் எண்ணிக்கையற்ற வாத்துகள் நீந்திக்கொண்டிருந்தது என்று வாசித்திருக்கிறேன். நீங்கள் எப்போதாவது ஒரு ஏரியின் மீது உறங்குவதைப் போல உணர்ந்திருக்கிறீர்களா' என்று கேட்டது.

அந்த மனிதக் குரங்கு சொல்வது உண்மை. இந்த இடத்தில் நாற்பது வருடங்களுக்கு முன்பு வரை பெரிய ஏரியிருந்தது. அதை மூடி அந்த இடத்தில்தான் புதிய கட்டிடங்கள் கட்டினார்கள். இன்றைக்கும் இதன் நிலப்பதிவுகளில் அந்த ஏரியின் பெயர் குறிப்பிடப்படுகிறது என்று சுட்டிக்காட்டினேன்.

மனிதக்குரங்கு சிரித்தபடியே 'மனிதர்களால் ஆகாசத்தையும் மேகங்களையும் மட்டும்தான் விலைக்கு வாங்க முடியவில்லை. நகரங்கள் அலுப்பூட்டுகின்றன. இங்கே இலைகள் உதிரும் ஓசை கேட்பதில்லை. வண்டின் சிறகொலியோ, பறவைகளின் றெக்கையடிப்போ, தவளை களின் புலம்பல்களோ கேட்பதேயில்லை. ஒரே வாகன இரைச்சல். உலகிலே தண்ணீரை விலைக்கு வாங்கும் ஒரே உயிரினம் மனிதர்கள்

தான்' என்றபடியே தனது பையில் இருந்த மாதிரி செல்போன் ஒன்றை எடுத்துப் பிரித்தது.

அதற்கு திருமணமாகிவிட்டதா என்று கேட்டேன். குரங்கு சிரித்த படியே தன்னைக் காதலிக்க இளம் பெண்கள் எவருக்கும் விருப்ப மில்லை என்பதால் உறவினர்களிலே ஒரு பெண்ணைத் திருமணம் செய்துகொண்டுவிட்டதாகச் சொல்லி தனது பர்ஸை திறந்து அதி லிருந்த பெண்குரங்கு ஒன்றின் புகைப்படத்தைக் காட்டியது. எனக்கு அந்தப் புகைப்படத்தை விடவும் பர்ஸில் வைத்திருந்த இரண்டு கிரிடிட் கார்டுகள் மற்றும் பிரபலமான கிளப் ஒன்றின் உறுப்பினர் கார்டு, வாகனம் ஓட்டும் லைசன்ஸ் யாவும் கண்ணில் பட்டது.

நான் அந்தத் திகைப்பை வெளிக்காட்டிக்கொள்ளாமலே ஏன் அது விற்பனை பிரதிநிதி வேலையை தேர்வு செய்தது என்று கேட்டேன். 'இதுதான் சவாலாக இருக்கிறது, ஒவ்வொரு நாளும் வாழ்க்கை எதிர் பாராமல் இருக்க வேண்டும். புதிய மனிதர்கள். புதிய சவால்கள் இல்லாத வாழ்க்கையை நினைத்துக்கூட என்னால் பார்க்க முடிய வில்லை. மனிதர்கள் அலுப்பூட்டும் வேலைகளில் தங்கள் வாழ்க்கை முழுவதையும் அர்ப்பணித்துக் கொள்கிறார்கள். அது என்னால் ஒருபோதும் இயலாது. அந்தந்த நிமிடத்தில் வாழ வேண்டும் அப்படி நம்மால் இயலாமல் போவதற்கு காரணம் நம் நினைவுகள் தான் என் கிறார் ஜே. கிருஷ்ணமூர்த்தி. அது சரியென்றே தோன்றுகிறது' என்றது.

நான் திகைப்போடு 'ஜே.கிருஷ்ணமூர்த்தி படித்திருக்கிறதா' என்று கேட்டேன். தனக்கு கிருஷ்ணமூர்த்தியை பிடிக்கும் என்றதோடு 'டேவிட் போம் என்ற இயற்பியல் அறிஞருடன் ஜேகே காலத்தின் முடிவின்மை பற்றி நிகழ்த்திய உரையாடல் அற்புதமானது' என்று சொல்லி வியந்தபடியே தனக்கு குடிப்பதற்கு கொஞ்சம் தண்ணீர் கிடைக்குமா என்று மிக அன்புடன் கேட்டது.

நான் பிரிட்ஜில் இருந்த குளிர்ந்த தண்ணீரை எடுத்து வந்து தந்த போது உதட்டிலிருந்து ஒரு சொட்டுத் தண்ணீர் வெளியே சிந்திவிடா மல் அது கவனமாகக் குடித்துவிட்டு தன்னுடைய பேண்ட் பாக்கெட் டில் இருந்து வெண்ணிற கைக்குட்டையை எடுத்து உதட்டைத் துடைத்துக் கொண்டது. பிறகு தன்னியல்பாக புதியரக செல்போன்களின் சாத்தியப் பாடுகளை விளக்கி சொல்லத் துவங்கியது.

அரை மணிநேர பேச்சிற்குப் பிறகு நான் அதனிடமிருந்து ஒரு புதிய போனை வாங்கிக்கொள்வது என்று முடிவானது. தன் தோளில் தொங்கிக்கொண்டிருந்த லெதர் பையை எடுத்து அதிலிருந்த பில் புத்தகத்தில் என் பெயர் விலாசம் மற்றும் சுயவிபரக்குறிப்புகளை எழுதிக்கொண்டிருந்தது. நான் அந்தத் தோள்பையினுள் பார்த்துக் கொண்டிருந்தேன். ஒரு புத்தகம், இசைகேட்பதற்கான சிறிய ஐபேடு. ஒரு பிஸ்கட் பாக்கெட் மற்றும் சிறிய வாசனை திரவியப்புட்டி காணப்பட்டது.

அழகான கையெழுத்துடன் சுயவிபரங்களை பூர்த்தி செய்துகொண்டி

ருந்த குரங்கு பையிலிருந்த புத்தகத்தை நான் கவனிப்பதை அறிந்து அதை எடுத்து என்னிடம் நீட்டியபடியே 'இது நீட்சே. மிக முக்கியமான சிந்தனாவாதி. சோர்வுறும்போது அடிக்கடி இதை வாசிப்பேன்' என்று சொல்லி சிரித்தபடியே படிவத்தில் என்னிடம் கையெழுத்து கேட்டது.

நான் கையொப்பமிட்டபடியே காசோலை ஒன்றினைத் தந்தேன். மிகுந்த அன்புடன் நன்றிதெரிவித்துவிட்டு தங்கள் கம்பெனி எனக்குரிய புதிய செல்போனை தபாலில் அனுப்பி வைக்கும் என்றபடியே என்னிடமிருந்து விடைபெற்றுப் போனது.

மனிதர்களிடம் கூட காணமுடியாத ஒழுங்கும் அன்பும் மிருதுவான பேச்சும் கொண்டிருந்த அந்தக் குரங்கை வியந்தபடியே இருந்தேன்.

மின்சாரம் தடைபட்டு இருந்ததால் லிப்ட் வேலை செய்யவில்லை போலும் எரிச்சலும் அலுப்புமாக மனிதக்குரங்கு லிப்டின் பொத்தான் களை அமுக்கியபடியே நின்றிருப்பது தெரிந்தது. நான் ஜன்னல் வழியாக பார்த்துக்கொண்டிருந்தேன். மனிதக்குரங்கு லிப்டை வெறித்துப் பார்த்தபடியே ஆத்திரத்துடன் முணுமுணுத்தது.

'மசிரானுங்க. இவங்க ஒவ்வொருத்தரையும் உருவி உருவி செல் போன் விற்கிறதுக்குள்ள நாக்கு தள்ளிப் போயிருது. இதுல கரண்ட் மசிரு வேற வேலை செய்யலை' என்று ஆத்திரத்துடன் சொல்லியபடியே லிப்டிலிருந்து விலகி நடந்து அங்குமிங்கும் பார்த்தது.

எவரும் தன்னைக் கவனிக்கவில்லை என்று உணர்ந்த மறுநிமிடம் எனது வீடிருந்த பனிரெண்டாவது தளத்திலிருந்து ஒரே தாவாக வெளியில் தாவி பூமியை நோக்கிக் குதித்து எதுவும் நடக்காதது போல தன் பைக்கை எடுத்துக்கொண்டு சாலையை நோக்கி போய்க் கொண்டிருந்தது.

# மிருகாமம்

டெல்லியை ஆண்ட சுல்தானுக்கு விருப்பமான மூன்று சுகப்பெண்களிருந்தார்கள். காபூலில் இருந்தும், சத்னாவிலிருந்தும், உத்கலாவிலிருந்தும் அந்தப் பெண் கள் விலைக்கு வாங்கி கொண்டுவரப்பட்டிருந்தார்கள்.

காபூல் நகர பெண் அவனை எப்போதும் வலப் பக்கமாகவே படுத்துக்கொள்ளச் செய்வாள். அவளோடு கூடியிருக்கும் நாட்களில் தண்ணீரில் நனைந்த காகிதம் போல அவன் தன்னை உணர்ந்தான். அவளது விருப்பமின்றி அவனால் எழுந்துகொள்ளவும் முடியாது. விடுபடவும் முடியாது. அவளது நேசம் அவனை பலவீனமாக்கியது. அவளோடு விடைபெறும்போது காமம் அரூபமான நீருற்று. அதன் ஈர்ப்பும், நனைதலும் நம்மை அடையாளமற்றுவிடச் செய்கிறது என்று புலம்பினான்.

சத்னாவிலிருந்து வந்தவள் அவனை எப்போதும் தன் ஸ்தனங்களுக்கு இடையில் உறங்கச் சொல்லுவாள். அவள் மார்பின் வெதுமையில் கிடப்பான். அப்போது அவளது விரல்கள் அவனது கேசத்தின் ஊடே எதையோ தேடிக்கொண்டிருக்கும். அவளது கேசத்தால் அவனை மூடிக்கொண்டுவிடுவாள். மார்பின் இடையில் துயிலும்போது மழை பெய்யும் சப்தத்தைக் கேட்பான்.

எங்கிருந்து அந்த மழை பெய்கிறது என்று அவனுக்குத் தெரியாது. அந்த மழையின் சீற்றம் அதிகமாகி அவன் முயங்கும்போது வேட்டையில் தப்பிய விலங்கினைப் போல பெருமூச்சும் மூர்க்கமும் அவனுக்கு உண்டாகும். அவளது ஸ்தனங்கள் ஈரக்களிமண்ணை பிசைவதைப் போல நெகிழ்வதானதாக இருந்தது. அப்போதெல்லாம் அவன் காமம் மிகுமழை போன்றது. அதன் உக்கிரம் நம்மால் அடங்காதது என்று முணுமுணுப்பான்.

உத்கலா பெண்ணோ அவனை எப்போதும் தன் மீது படுத்துறங்கச் சொல்வாள். அவள் மீது உறங்கும்போது அவளது உடல் தோணியாவதையும் அது நீர்பெருக்கெடுத்தோடும் ஆற்றில் செல்வதையும் உணர்வான். அந்தத் தோணியில் தான் உதிர்ந்த இலை போல கிடப்

பதாகத் தோன்றும். அந்தத் தோணி அவனை முன்காணாத புல்வெளிகளுக்கும், அதன் ஊடாக அமைந்த வனநகரங்களுக்கும். அந்த நகரங்களில் உள்ள விநோத மிருகங்களையும், அந்த மிருகங்களைத் துரத்தும் வேட்டைக்காரர்களையும், வேட்டைக்காரர்களிடமிருந்து தப்பி மறையும் விசித்திரக் குரங்குகளையும், பறவை போல குரலிடும் அருவியொன்றையும் அவனுக்கு அறிமுகப்படுத்தும். அவளிடமிருந்து விடைபெறும்போது அவன் தன்னை ஒரு கூழாங்கல் என உணர்ந்தான். எவ்வளவோ காலம் தான் நீரோட்டத்திலே கிடந்து ஊறி தன் அகத்தினுள் குளிர்ச்சி கொண்டது போல உணர்வான். அப்போதெல்லாம் காமம் துடுப்பில்லாத படகுப் பயணம். நம் விருப்பமின்றி நம்மை திசையறியாமல் இழுத்துச் செல்லும் கனவு என்று உணர்வான்.

இந்த மூன்று பெண்களும் சுல்தானைப் பற்றி ஒன்றே போல உணர்ந்தார்கள். செத்து ஊறிப்போன பிணம் போல எடையேறி நாறுகிறான் கிழட்டு முண்டம். காமம் வெறும் எச்சில். துப்பிவிட்டு மறப்பதைத் தவிர அதற்கு மேல் என்னவிருக்கிறது என்றார்கள் மூன்று சுகப்பெண்கள்.

# ஆலோசகன்

———— ஐ ❀ ஒ ————

ஏழு சுற்றுக் கோட்டை கட்டி வாழ்ந்த அரசனுக்கு ஒரு ஆலோசகன் இருந்தான். அவன் உண்டு கொழுத்த பெருவயிற்றுக்காரன். அவன் தன்னுடைய வாழ்நாளில் ஒரு முறைகூட சிரித்ததும் இல்லை அழுததும் இல்லை. பிறப்பிலே அவன் இரும்பில் அடித்தவன் போல உறைந்து போயிருந்தான்.

அவனிடம் ஒரு நாள் அரசன் தன்னுடைய ஆட்சி எப்படியிருக்கிறது என்று கேட்டான். அதற்கு ஆலோசகன் 'மக்கள் தங்கள் இஷ்டம் போலச் சிரிக்கிறார்கள். விருப்பம்போல வாழ்கிறார்கள். மிக மோசமாகத் தானிருக்கிறது உங்கள் ஆட்சி' என்று சலித்துக்கொண்டான்.

மன்னன் குழப்பத்துடன் நான் என்ன செய்ய வேண்டும் என்றதும் ஆலோசகன் 'முதலில் மக்கள் ஒருவரோடு மற்றவர் பேசிச் சிரிப்பதை நிறுத்த வேண்டும், அதற்கு அவர்கள் பேசும் மொழியைத் தடை பண்ணிவிடுங்கள். மொழியில்லாமல் எப்படி பேசிச் சிரிப்பார்கள் பார்க்கலாம்' என்றான்.

மறுநாளே அரசாணை பறந்தது. மக்களது தாய்மொழி தடை செய்யப்பட்டது. மீறிப் பேசுபவர்கள் தண்டிக்கப்பட்டார்கள். பேசிய நாக்குகள் துண்டிக்கப்பட்டன. அப்படியிருந்தும் மக்களிடமிருந்து சந்தோஷத்தைப் பறிக்க முடியவில்லை. அவர்கள் கண்களாலும் கையசைவிலும் சிரிக்கப் பழகியிருந்தனர்.

என்னடா எழவு இது என்று ஆலோசனைக்காரன் இனிமேல் யாரும் யாரையும் சந்திக்கக்கூடாது என்று சட்டம் கொண்டுவர வேண்டும் என்றான். மறுநாள் அப்படியொரு சட்டம் அமலுக்கு வந்தது. மக்கள் யாரும் யாரையும் சந்திக்கவில்லை. அப்படியிருந்தும் மனிதர்கள் சந்தோஷமாகவே இருந்தார்கள்.

அதை அறிந்த ஆலோசகன் எரிச்சலுடன் சொன்னான்.

'தனிமையில் இருப்பதைக் கூட சந்தோஷமாக மாற்றிக்கொள்ள மக்களுக்குத் தெரிந்திருக்கிறது. அதையும் அனுமதிக்கக்கூடாது, கசையடியும் சவுக்கடியும் தந்தால் வலி சந்தோஷத்தை விரட்டிவிடும்' என்றான்.

அடியும் உதையும் மக்களுக்கு தாராளமாகக் கிடைத்தது. அழுது கத்தினார்கள். ஆனால் சில நிமிடங்களில் அந்த வலியைத் தாங்கிக் கொண்டு தங்கள் இயல்பிற்கு மாறினார்கள்.

ஆலோசகனுக்கு அடுத்து என்ன செய்வது என்று தெரியவில்லை. அவன் சாலையில் அடிபட்டுக் கிடந்த ஒரு கிழவனை எழுப்பிக் கேட்டான்.

'இத்தனை அடிஉதை வாங்கியும் எப்படி உற்சாகமாக சிரிக்கிறாய்' என்று கேட்டான்.

அதற்கு கிழவன் சொன்னான்.

'அதிகாரத்திலிருப்பவர்களால் ஒருபோதும் சிரிக்க முடியாது. எளிய மனிதனின் ஆயுதம் சிரிப்பு. கோபத்தைவிட சிரிப்புதான் பலரையும் அழித்திருக்கிறது. சிரிப்பு ஒரு நாடகம். சிரிப்பு ஒரு விஷப்புகை. அது உங்களை நிம்மதியற்று அழித்துவிடும்.'

அப்படித்தான் பின்னாளில் நடந்தேறியது.

# நுனி நாக்கு

நாக்கில் நுனியில் நெருப்பைக் கொண்டிருந்த ஒரு பெண்ணை தற்செயலாக நேபாள எல்லையோர கிராமம் ஒன்றின் பயணியர் விடுதியில் சந்தித்தேன். சுகப்பெண்களில் ஒருத்தியாக இருந்த அவள் மிக அழகாக இருந்தாள்.

தனது முப்பது வயது வரை ஆணை அறிந்ததில்லை என்றும் அவளுக்குள் காமம் முற்றியபோது இச்சையை அணைப்பதற்கு இயலாமல் நெருப்பை அள்ளி வாயிலிட்டுக்கொள்ள முயன்றதாகவும் வெள்ளரிப்பழம் உடைவதுபோல மிருதுவாகவும் சதைப்பற்றுடனும் நெருப்பு அவள் நாவில் கரைந்து போனது என்றாள்.

அதன் மறுநாளில் அவள் எச்சில் உமிழ்ந்தபோது அதிலிருந்து நெருப்பு தெறித்து விழுந்ததைக் கண்ட தாகவும் அன்றிலிருந்தே அவள் நாவின் நுனியில் நெருப்பு சுரந்தபடியே இருக்கிறது என்றாள்.

என்னால் அதை நம்ப முடியவில்லை.

'நாக்கின் நெருப்பை அறிந்துகொள்ள வேண்டுமானால் என்னை முத்தமிடு' என்றாள் அந்த சுகப்பெண். நான் தயங்கி நின்றேன். அவள் என் கழுத்தைப் பிடித்து முகத்தை உரசி உதட்டை நெருங்கினாள்.

என் நாவும் அவளது நாவும் உரசியது. உதடுகள் கவ்விக் கொண்டன. என் நாவின் நுனியில் நெருப்பு பற்றிக்கொண்டது போலிருந்தது. நான் தலையை பதற்றத்துடன் அசைத்தேன்.

அதை அனுமதிக்காமல் என்னை இறுக்கினாள். உதடுகள் ஆவேசம் கொண்டன. என் உதட்டில் நெருப்பு வெற்றிலைச் சாறு போல நிரம்பி யது. அப்படியொரு வெம்மையை இதன்முன்பு நான் அறிந்ததேயில்லை. உடல் நரம்புகள் பூக்கத் துவங்கியிருந்தன.

அதை அறிந்தவள் போல சிரித்தாள். பிறகு ஆவேசத்துடன் கட்டிக் கொண்டு மாறிமாறி முத்தமிட்டாள்.

அவளிடமிருந்து விலகிய மறுநிமிடம் என் உதடுகள் அந்தநெருப்பிற் காக ஏங்கத் துவங்கியது. என் நாவை முன்நீட்டியபோது அதில் சுடர் ஒளிர்ந்துகொண்டிருந்தது.

இரவெல்லாம் அவள் உடலுக்குள்ளாகவே பதுங்கிக் கிடந்தேன். காலை விடை பெறும்போது அவள் சொன்னாள், 'நான் சொன்ன கதையை நம்பிவிட்டாய் அல்லவா. காமம் உருவாக்கும் கதைகள் எவரையும் நம்ப வைக்கக்கூடியவை' என்றபடியே தன் நாக்கை நீட்டினாள்.

அதன் நுனி ஈரமாக இருந்தது. அதில் நெருப்பின் தடமேயில்லை.

# காட்சிக் கூண்டு

மா நகராட்சியின் பொதுப்பூங்காவில் அப்படியொரு கூண்டினை உருவாக்க வேண்டும் என்றொரு யோச னையை யார் முன்மொழிந்தது என்று தெரியவில்லை. ஆறுமாதங்களாகவே நகரின் முக்கிய பூங்காக்கள் யாவும் மறுசீரமைப்பு செய்யப்பட்டு வந்தன. செயற்கை நீருற்றுகள், சிறார்களுக்கான சறுக்கு விளையாட்டுகள், அலங்கார விளக்குள், ஆள் உயர காற்றடைக்கப்பட்ட பொம்மைகள் மிகப்பெரிய தொலைக் காட்சிப் பெட்டி. இரவில் ஒளிரும் மின்விளம்பரப் பலகைகள் என்று பூங்காக்களின் தோற்றம் பொலிவு கண்டிருந்தது.

ஆனால் நகரின் வேறு எந்தப் பூங்காவிலும் இல் லாத தனிச்சிறப்பாக நூறடிச் சாலைச்சந்திப்பின் அருகில் இருந்த எம்டன் பூங்காவில் இரும்புக் கூண்டு ஒன்றை உருவாக்கியிருந்தார்கள். ஆறடிக்குப் பத்தடி அளவில் உருவாக்கப்பட்ட அந்தக்கூண்டு சர்க்கஸில் சிங்கம் அடைத்து வைக்கப்படும் கூண்டினை விடவும் சற்றே அகலமானதாக இருந்தது.

யாருடைய யோசனை அது என்று தெரியவில்லை. ஆனால் அந்த யோசனையைச் சொன்ன மனிதன் நிச்சயம் பல வருடம் அரசு ஊழியனாகப் பணியாற்றியிருப்பான் என்றார்கள் பூங்கா ஊழியர்கள்.

மின்சாரத்தால் இயங்கும் கதவைக் கொண்ட அக்கூண்டில் யார் வேண்டுமானாலும் உள்ளே சென்று நடக்கலாம். கூண்டினில் ஆள் சென்ற மறுநிமிடம் தானாக கதவு மூடிக்கொள்ளும்படியாக மின்சாரத் தால் உருவாக்கப்பட்டிருந்தது. சரியாக நான்கு நிமிடங்கள் கூண்டு மூடியிருக்கும். பிறகு கதவு தானே திறந்து கொண்டுவிடும்.

இன்னொரு கூடுதல் விசேஷம். கூண்டு மூடிக்கொண்ட மறுநிமிடம் அதிலிருந்து 'மியமிங்மியமிங்' என்று விசித்திரமானதொரு சப்தம் கேட்க ஆரம்பிக்கும். அது பார்வையாளர்களை தன் பக்கம் இழுக்கக் கூடியதாயிருந்தது. மற்ற நேரங்களில் கூண்டில் எந்தச் சலனமும் இருக்காது.

கூண்டினைப் பூங்காவில் பொருத்திய மூன்று தினங்களுக்கு அதில் எவரும் நுழையவேயில்லை. இவ்வளவிற்கும் அருகாமையில்

பெரியதாக வேடிக்கைக்கூண்டு என்று விளம்பரப் பலகை வைக்கப் பட்டிருந்தது.

முதன்முறையாக அந்தக் கூண்டில் ஓய்வு பெற்ற வங்கி அதிகாரி ஒருவர் உள்ளே நுழைந்தார். அவருக்கு கூண்டைப் பார்க்கும் போது அவரது அலுவலக அறை போன்று நினைவிற்கு வந்திருக்கக் கூடும். அன்றாடம் நடைப்பயிற்சிக்காக வருபவர் அவர் ஒரு நாள் கூட யாருடனும் பேசியதேயில்லை. தரையைப் பார்த்தபடியே நடப்பார். சில வேளைகளில் அவர் மூக்கை மட்டும் துணியால் மூடிக்கொண்டு நடப்பதும் உண்டு.

அன்று அவர் ஏதோவொரு யோசனையுடன் கூண்டின் அருகில் நின்றுகொண்டிருந்தார். அதன் வலிமையான இரும்புக் கம்பிகளை உற்று நோக்கினார். பிறகு தனக்குத் தானே ஏதோ சொல்லிக் கொண் டார். தன் முடிவிலிருந்து மாறிவிடக்கூடாது என்பதில் பதட்டம் கொண்டவரைப் போல விடுவிடுவென இரண்டு படிகள் ஏறிக் கதவைத் திறந்து உள்ளே போனபோது கூண்டு தானாக மூடிக் கொண்டது.

மறுநிமிடம் மியமிங்மியமிங் என்ற சப்தம் உரத்துக் கேட்கத் துவங் கியது. நடைப் பயிற்சியில் இருந்தவர்களும், பந்தாடும் சிறுவர்களும் அதைத் திரும்பி வேடிக்கை பார்க்க ஆரம்பித்தார்கள். வங்கி அதிகாரி கூண்டிற்குள் இருந்தபடியே வெளியே பார்க்க ஆரம்பித்தார். அப்படி அவர் ஒரு நாளும் பூங்காவைக் கண்டதேயில்லை. மரங்கள் வேறு ஏதோ ஒன்றுபோலத் தெரிந்தன.

கூண்டிற்குள் இருப்பது ரொம்பவும் பாதுகாப்பாகவும் இயல்பாகவும் இருந்தது. அவர் கூண்டின் வலுவான இரும்புக்கம்பிகளைப் பிடித்த படியே நின்று கொண்டிருந்தார். சிலர் நடைப்பயிற்சியின் ஊடாகவே அவரைப் பார்த்து சிரித்தபடியே போனார்கள். அவருக்கும் அவர் களைப் பார்த்து சிரிக்க வேண்டும் போலிருந்தது. கம்பியில் முகம் பதித்துக் கொண்டு வெளியே பார்த்துச் சிரித்தார்.

சிறார்கள் கூண்டின் அருகில் வந்து நின்றபடியே அவரைப் பார்த்து பரிகாசம் செய்தார்கள். வங்கி அதிகாரி கூண்டிற்குள்ளாகவே யோசனை யுடன் நடக்கத் துவங்கினார். அப்போது அவரது செல்போன் அடித்தது. தான் ஒரு கூண்டில் அடைபட்டிருப்பதைப் பற்றி உற்சாகமாகச் சொல்லியபடியே அவர் போனில் பேசிக்கொண்டிருப்பதைக் கண்ட ஒரு இளம்பெண் வியப்போடு அவருக்கு கையசைத்தபடியே போனாள்.

தான் கூண்டிற்குள் இருப்பது எப்படியிருக்கும் என்று தனக்குத் தெரியாதே என்பதால் அவருக்கு திடீர் யோசனை உருவானது. நடைப்பயிற்சி செய்யும் பெண்ணை கைதட்டி அழைத்து தன்னை ஒரு புகைப்படம் எடுத்துத் தரும்படியாக செல்போனை நீட்டினார். அந்தப் பெண் கூண்டிற்குள் அவர் நிற்பதை புகைப்படம் எடுத்துத் தந்தாள். அதைப் பார்க்கும் போது அவருக்கே சிரிப்பாக வந்தது. இரண்டு நிமிடங்களுக்குப் பிறகு அவரது கால்கள் வலிப்பது போல இருந்தன.

கூண்டிற்குள்ளாக உட்கார்ந்துகொள்ளலாமா என்று பார்த்தார். இருக்கைகள் எதுவும் இல்லை. எப்படி உட்காருவது என்று யோசித்துக் கொண்டிருந்தார். கடந்த முப்பது ஆண்டுகளில் அவர் ஒரு முறை கூட தரையில் உட்கார்ந்ததேயில்லை. அது தன்னைத் தானே அவ மதிப்பது போன்றது என்று உணர்ந்திருந்தார். அன்று குதிங்கால் வலி தாளமுடியாமல் வேறு வழியில்லை என்று தரையில் அவர் உட் கார முயன்றபோது தான் ஒரு குரங்கைப் போலிருப்பதாக உணர்ந்தார்.

மண்டியிட்டு காலை மடக்கி ஒருவழியாக உட்கார்ந்து தன்னை நிலைப்படுத்திக்கொள்ளும்போது கூண்டின் இசை நின்று கதவு திறந்துகொண்டது. அவ்வளவு தானா என்றபடியே அவர் கூண்டினை விட்டு வெளியே இறங்கி நடக்கத் துவங்கினார். அன்றைக்கு வேறு எவரும் கூண்டிற்குள் ஏறித் தன்னை அடைத்துக்கொள்ளவில்லை. அவர் கூண்டில் ஏறியதைப் பற்றி பெரிதாகக் கண்டுகொள்ளவும் இல்லை.

ஆனால் மறுநாள் இதைப்பற்றி கேள்விப்பட்ட ஒரு காதல்ஜோடி கூண்டிற்குள் தங்களை அடைத்துக்கொண்டார்கள். இருவருக்கும் அது வேடிக்கையாக இருந்தது. அந்தப் பெண் கூண்டின் கம்பியில் முகம்பதித்தபடியே அர்த்தமற்ற சப்தங்கள் எழுப்பிக்கொண்டிருந்தாள். காதலன் அவளை கூண்டிற்குள்ளாகவே முத்தமிடத் துரத்தினான். அது மிக அபத்தமான துரத்தலாக இருந்தது. பூங்காவின் பெஞ்சில் அமர்ந்திருந்த சிலர் கூச்சலிட்டு முத்தமிடு முத்தமிடு என்று கத்தினார் கள். அந்தப் பெண் அவனை அனுமதிக்கவேயில்லை. அதற்குள் மணி ஒலித்து கதவு திறந்துவிட்டது. கூண்டினை விட்டு வெளியே வந்த அவர்கள் ஆளுக்கு ஒரு பக்கம் ஏன் பிரிந்து போனார்கள் என்று எவரும் கேட்டுக்கொள்ளவேயில்லை.

அவர்களைத் தொடர்ந்து வணிகப்பிரதிநிதி ஒருவன், கிரிக்கெட் ஆடும் சிறுவர்கள் இரண்டு பேர் சீட்டாடும் நாலு பேர் என்று பலரும் கூண்டிற்குள் அடைத்துக்கொண்டார்கள். அன்றும் முந்தைய நாள் கூண்டில் ஏறிய வங்கி அதிகாரி கூண்டில் தன்னை அடைத்துக் கொண்டார். ஆனால் இந்த முறை அவர் கூண்டிற்குள் போனதும் தனது பற்றுவரவு நோட்டினை எடுத்து வைத்துக்கொண்டு கணக்கு பார்க்கத் துவங்கினார். இடையில் ஒருமுறை பெருமூச்சு விட்டார். பிறகு கணக்கில் விடுபடல் உள்ளது என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டார். கதவு திறந்ததும் என்றும் போல அவசரமாக வெளியேறிப் போனார்.

அதன் பிறகு நாள் ஒன்றுக்கு இருநூறு பேருக்கும் மேலாக கூண்டில் தன்னை அடைத்துக் கொள்ள ஆர்வம் காட்டினார்கள். நீண்ட வரிசை உருவானது. கூண்டின் உள்ளே இரண்டு விசேச இருக்கைகள் கூட உருவாக்கப்பட்டன.

ஞாயிற்றுக்கிழமை காலையில் முதன்முறையாக ஒரு குடும்பம் அந்தக் கூண்டிற்குள் ஏறித் தன்னை அடைத்துக் கொண்டது. அந்தக்

குடும்பத்தில் கணவன் மனைவி இரண்டு மகள்கள், ஒரு பையன் மற்றும் மகளின் கணவன் மற்றும் கைக்குழந்தை யாவரும் ஒரே நேரத்தில் உள்ளே ஏறியிருந்தார்கள்.

நாற்பது வயதைக் கடந்த அந்த அந்த வீட்டின் பெண்மணி கூண்டினைத் தொட்டுத் தொட்டுப் பார்த்தபடியே நல்ல காற்றோட்ட மாக இருக்கிறது. நான்கு பக்கமும் வெளிச்சம் வரும் ஒரு இடத்தை அப்போதுதான் பார்க்கிறேன் என்று ஆதங்கத்துடன் சொன்னாள். அவளது கணவரோ வீட்டிலிருந்து ஏதாவது சமைத்துக் கொண்டுவந் திருந்தால் அதற்குள் உட்கார்ந்து சாப்பிடலாமே என்று ஆதங்கப்பட்டுக் கொண்டிருந்தாள்.

அவர்களது இரண்டு மகள்களும் கம்பிகளைப் பிடித்தபடியே வெளியே நடந்து செல்லும் இளைஞர்களைப் பார்த்து சிரித்துக் கொண் டிருந்தார்கள். அதில் ஒருத்தி கூண்டில் முகம் பார்க்கும் கண்ணாடி மாட்டி வைத்திருந்தால் உதவியாக இருக்குமில்லையா என்று சலித்துக் கொண்டாள்.

அன்றைக்கு கூண்டிற்குள் தன்னை அடைத்துக்கொள்வதற்கு நூறு பேர்களுக்கும் மேலாகக் காத்திருந்து நேரமின்மையால் ஏமாந்து போனார்கள். யார் எப்போது கூண்டிற்குள் போவார்கள். கதவு மூடப்பட்டவுடன் கூண்டிற்குள் என்ன செய்வார்கள் என்று வேடிக்கை பார்ப்பது பூங்காவின் அன்றாட சுவாரஸ்யமாக இருந்தது. இதற்காகவே நிறைய கூட்டம் வரத்துவங்கியது. வயது வேறுபாடின்றித் தன்னைக் கூண்டில் அடைத்துக் கொள்வதில் மக்கள் ஆர்வம் காட்டினார்கள்.

கூண்டில் தங்களை அடைத்துக் கொள்வதில் மக்கள் காட்டும் ஆர்வம் அதிகமானதைக் கண்டு அதை ஒழுங்குபடுத்துவதற்காக இரண்டு காவலர்கள் நியமிக்கப்பட்டிருந்தார்கள். அவர்கள் கூண்டிற் குள் வரிசையில் காத்திருப்பவர்களுக்கான ஒழுங்கு விதிமுறைகளை உருவாக்கினார்கள்.

கூண்டின் பாதுகாப்பிற்காக வந்திருந்த சப்இன்ஸ்பெக்டர் ஒருவர் தன்னை ஒருமுறை கூண்டில் அடைத்துக் கொண்டார். அவருக்கு கூண்டு அவ்வளவு பெரியதாக இருப்பதில் உடன்பாடில்லாமலிருந்தது. நடக்க இடமில்லாமல் தலைமுட்டும்படியாக அடைக்கப் படும்போது தான் கூண்டின் முக்கியத்துவம் தெரியும் என்று அலுத்துக்கொண்டார்.

கூண்டின் வளர்ச்சியில் மிகுந்த அக்கறை கொண்ட மாநகராட்சி உறுப்பினர் ஒருவர் தன்னுடைய விசுவாசிகள், தொண்டர்கள் சகிதமாக நெருக்கடி ஏற்படும் அளவு நாற்பத்தி ஆறு பேர்களுடன் கூண்டினுள் தன்னைப் பூட்டிக்கொண்டார். அவரிடம் கூண்டிற்குள் குடிநீர் இணைப்புக் குழாய் ஒன்று பொருத்தப்பட வேண்டும் என்பதற்கான புகார் மனு ஒன்றும் அளிக்கப்பட்டது.

அந்தக் காட்சிக்கூண்டு பற்றிய செய்திகள் நாளேடுகள் வார இதழ் களில் பரபரப்பாக வெளியாகின. ஒரு வரலாற்றுப் பேராசிரியர் மனிதர்கள் நூற்றாண்டுகளாக தங்களைத் தானே கூண்டில் அடைத்துக்

கொள்வதில் ஆர்வம் கொண்டிருந்ததற்கான கல்வெட்டு சான்றுகள் இருப்பதாக நேர்காணலில் தெரிவித்தார். கூண்டு அவசியமானது. அது ஒரு சிகிச்சை போல நம் மனதின் நெருக்கடியை போக்குகிறது என்றார் உளவியல் அறிஞர்.

இரண்டு மாதங்களுக்குப் பிறகு நகரின் புகழ்பெற்ற சைவ உணவகம் ஒன்றின் உரிமையாளர் கூண்டின் அருகில் ஒரு துரித உணவகப்பிரிவை உடனடியாகத் துவங்க அனுமதி வாங்கியிருப்பதை அறிவித்தார். அது வரிசையில் நிற்பவர்களை அதிகம் சந்தோஷப்படுத்தியது. கூண்டிற் குள்ளாகவே காபியும் இட்லியும் சாப்பிட முடியும் என்பதில் மக்கள் கூடுதல் மகிழ்ச்சி கொண்டார்கள்.

அரசு இதில் தனியான அக்கறை கொண்டு தனித்துறையை உரு வாக்கி அந்தத் துறையின் கீழ் நகரெங்கும் இது போன்று காட்சிக் கூண்டுகள் உருவாக்குவதற்கு விசேஷ நிதியை ஒதுக்கியது. அதன் படி நாற்பது நாட்களுக்கு நகரில் நூற்றிப்பனிரெண்டு காட்சிக் கூண்டுகள் உருவாக்கப்பட்டன. கூண்டில் அடைத்துக்கொள்வதற்கு அடிப்படை கட்ட ணம் வசூலிக்கப்பட்டது. அதிக கட்டணம் செலுத்தினால் அதிக நேரம் தன்னை அடைத்துக்கொள்ளலாம் என்றும் சலுகைகள் அறிவிக்கப்பட்டன.

மாநகர மக்கள் இதில் தங்களை முழுமையாக ஈடுபடுத்திக் கொண் டார்கள். கூண்டு தங்கள் வகுப்பறையை நினைவுபடுத்துகிறது. இல்லை தங்களது ஒண்டுக்குடித்தன வீட்டினை நினைவுபடுத்துகிறது. மருத்துவ மனையின் படுக்கை அறையை ஞாபகம் கொள்ளச் செய்கிறது. அலு வலக அறையைப் போன்றிருக்கிறது, வழிபாட்டு ஸ்தலத்தினை ஒத்து இருக்கிறது என்று ஆளுக்கு ஒரு விதமாக தங்கள் அனுபவத்தைச் சொன்னார்கள்.

காதலர்கள், கஞ்சா புகைப்பவர்கள், குடும்பத்தவர்கள், அரசியல் வாதிகள், சாதாரண மக்கள், அதிகாரிகள், சுற்றுலாப் பயணிகள், சிறார்கள், அழகிகள் அழகன்கள் என்று மாறி மாறி தன்னை அடைத்துக் கொள்ள நகரெங்கும் கூண்டுகள் ஓய்வில்லாமல் கத்திக்கொண்டே யிருந்தது.

இந்தக் கூண்டுகளில் வெறுமனே ஒலிபரப்பாகும் மியமிங்மியமிங் இசைக்கு பதிலாக தங்களது குளிர்பான விளம்பரங்களை ஒலிபரப்ப லாமே என்று பன்னாட்டு நிறுவனம் முன்வந்த பிறகு கூண்டுகளின் நிறம் மற்றும் வடிவம் புத்துருவாக்கம் கொள்ளத் துவங்கின. மிக உரத்த இசை பீறிட்டது.

அடுத்த சில மாதங்களில் காட்சிக்கூண்டின் வழியாக தங்களுக்கு விளம்பர வருமானம் பதினெட்டு கோடி என்றும் மாநகராட்சி பெருமையாக அறிவித்தது. ஆனால் இதுவரை ஒருவர் கூட கூண்டிற்கு எதிர்ப்பு தெரிவிக்கவேயில்லை என்பதோடு யார் இந்த யோசனையை உருவாக்கியது என்பது குறித்தும் அறிந்துகொள்ளவேயில்லை.

பின்னொரு நாள் மனச்சோர்வு தீராத நாற்பது வயது மனிதன் ஒருவன் ஒரு இரவில் பூங்காவில் நுழைந்து காட்சிக்கூண்டில் பூச்சி

மருந்தைக் குடித்து தற்கொலை செய்துகொண்டான். அதன் காரண மாக நகரில் உள்ள அத்தனை கூண்டுகளுக்கும் உற்றுநோக்கும் கேமிரா பொருத்தப்பட்டது. அதைக் கண்காணிக்கும் அலுவலகம். அதற்கான பணியாளர்கள், பராமரிப்பாளர்கள், சோதனை அதிகாரிகள், என்று தனிப்பிரிவு உருவானது. கூண்டில் ஏறுபவர்கள் வீடியோவில் பதிவு செய்யப்பட்டார்கள். கண்காணிப்பு அதிகமானது.

எவ்விதமான முன் அறிகுறியும் இன்றி ஒரு நாள் கூண்டில் ஒருவர் கூட ஏறவில்லை. நகரம் முழுவதும் அப்படியே நடந்தது. எதனால் கூண்டில் தங்களை அடைத்துக் கொள்வதில் மக்கள் சோர்வு கொள் கிறார்கள் என்று கண்டுபிடிக்க சிறப்பு முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டன. கூண்டில் அடைத்துக்கொள்பவர்களுக்கான சிறப்பு சலுகை கள் அறிவிக்கப்பட்டன. ஆனால் எவரும் அந்தக் கூண்டிற்குள் பிரவே சிக்கவேயில்லை.

புறக்கணிப்பின் கரங்கள் பற்றிக்கொள்ள மழை வெயிலில் துரு வேறிய கூண்டு கவனிப்பாரற்று போகத் துவங்கியது.

ஆனால் இன்றும் அரசின் காட்சிக்கூண்டு பராமரிப்புத் துறை எப்போதும் போலவே நூற்றுக்கணக்கான அலுவலர்கள், உயர் அதிகாரி கள், பாதுகாவலர்கள் என்று ஆண்டுதோறும் தனித்த நிதி ஒதுக்கீட்டில் பரபரப்பாக இயங்கிக்கொண்டிருக்கிறது.

அவர்கள் எப்போதாவது கூண்டின் மீது வந்து அமரும் குருவியைக் கூட வருகைப்பதிவேடு பட்டியலில் சேர்த்துவிடுகிறார்கள் என்பது தான் சிறு முணுமுணுப்பாக இருந்தது. அதையும் ஒருவர்கூட உரத்துச் சொல்லவில்லை.

# மதியநேரத்து நாய்

ஃ❀ஃ

**வா**சலில் அமர்ந்துகொண்டிருந்தேன்.

இரண்டு நாய்கள் எதிரெதிராய் ஒரு வீதியைக் கடக்கின்றன.

ஒரு நாய் மற்றொரு நாயைத் திரும்பிப் பார்க்கவில்லை ஒரு நாயின் ஓட்டம் போல மற்றொரு நாயின் ஓட்டமில்லை. வீதியின் சிறுபள்ளத்தில் வழிந்தோடும் வெயிலை நாயின் நாக்கு சப்பிக் குடிக்கிறது.

ஏன் நாய்கள் வழியில் பேசிக்கொள்வதில்லை. ஏன் நாய்கள் வெயிலுக்கு குடை கொண்டுபோவதில்லை. ஏன் நாய்கள் நாய்களாகவே எப்போதும் நடந்துகொள்கின்றன.

ஒரு நாய் மற்றொரு நாயிடம் ஒருபோதும் அலுத்துக்கொள்வதில்லை. நேற்று சாப்பிட்ட மாமிசத்துண்டைப் பற்றி பெருமை பேசுவதில்லை, நாய்கள் எதிர்காலத்தைப் பற்றி கனவு காண்பதில்லை.

நாய்கள் கதை கவிதை எழுதுவதில்லை.

நாய்கள் குடித்துவிட்டு மனைவியிடம் தகராறு செய்வதில்லை.

நாய்கள் வங்கிக் கணக்குகள், கடன் அட்டைகள் வைத்திருப்பதில்லை.

மதிய நேரம் போலவே நாய்கள் பெரும்பாலும் மௌனமாகவே இருக்கின்றன.

துறவியைப் போல ஒரு நாய் மிக நிதானமாக வெயிலில் நடந்து சென்றது. மற்ற நாய் ஊர்ந்துகொண்டிருக்கும் நிழலைக் கண்டு ஏதோ முணுமுணுத்தது.

பிறகு சுதந்திர உணர்வோடு இரண்டும் வெவ்வேறு இடங்களில் காலைத் தூக்கிக்கொண்டு மூத்திரம் பெய்தன.

பார்க்கப் பார்க்க நாய்களின் மீது பொறாமையாக இருக்கிறது.

# தும்மலோசை

ஜெமினி பாலத்தின் அருகில் இருந்த சிலைதான் முதலில் தும்ம துவங்கியது. முதல்முறை தும்மும்போது அதன் சப்தம் வாகன இரைச்சலில் யாருக்கும் கேட்கவில்லை. ஆனால் அடுத்தடுத்த தும்மல்களின் வழியே அந்த சிலை தன் கவனத்தை ஈர்த்துக்கொண்டது. போக்குவரத்து காவலர் வியப்புடன் சிலை அருகே நின்றபடியே அது ஏன் தும்முகிறது என்று புரியாமல் பார்த்தார். சிலை அவசரத்துடன் குறைந்தபட்ச பவ்வியம்கூட இல்லாமல் ஹச்சென தும்மியது.

சூழல் சீர்கேடு அதிகமானதால்தான் சிலை தும்முகிறது போலும் என்றபடியே தானும் ஒரு முறை தும்மிக்கொண்டார். காவலர். வாகன பயணிகள் அதை வேடிக்கை பார்த்தார்கள். அந்தத் தும்மலோசை விசித்திரமானதாக இருந்தது. மனிதர்கள் தும்மும் சப்தத்திலிருந்து பெரிதும் வேறுபட்டு சில்லறை கீழே விழும் சப்தம் போலிருந்தது. காலை துவங்கிய சிலைகளின் தும்மல் இடைவிடாமல் நீண்டு கொண்டிருந்தது.

சிலைகளின் ஆரோக்கியம் குறித்து எவரும் எப்போதும் அக்கறை கொண்டதில்லை என்பதால் அந்தத் தும்மல் பெரிய விளைவுகள் எதையும் ஏற்படுத்தவில்லை. மாறாக அன்று மாலை கடற்கரையில் இருந்த இரண்டு தமிழ் அறிஞர்களின் சிலைகளும் தும்மத் துவங்கின. அதன் தும்மல் ஐம்பது ஆண்டுக்காலமாக உறைந்து கிடந்த சலனத்தை தூக்கி எறிவதுபோலிருந்தது.

இதைத் தொடர்ந்து வெல்லிபிரபுவின் சிலை பெரிய தும்மல் ஒன்றைப் போட்டது. அருகில் சிலையாக இருந்த வங்காள கவர்னர் கார்டன் நோபிள்ஸ் தன் குதிரையின் மீதிருந்தபடியே தும்மினார்.

கடலை விற்கும் சிறுமி சிலையின் தும்மலை கண்டு பரிகாசம் செய்தாள். நகரெங்கும் சிலைகள் அடுக்கு தும்மல் போடத் துவங்கியிருந்தன. சிலைகள் ஏன் தும்முகின்றன என்பதைப் பற்றிய ருசிகரமான விவாதங்கள் நடந்தன.

சிலைகளை மக்கள் நெருங்கி நின்று பார்த்தார்கள். புகைப்படம் எடுத்துக்கொண்டார்கள். சிலைகள் தும்முவதைத் தவிர வேறு ஒரு

வார்த்தைகூட பேசவில்லை. பொது இடமெங்கும் சிலைகள் போலவே தும்மிக் காட்டும் பரிகாசம் நடந்தேறியது. பேருந்தில் மின்சார ரயிலில் இந்த வேடிக்கையை எவராவது செய்து காட்ட பலரும் ரசித்தார்கள். பறவைகள் சிலைகளின் தும்மல் கண்டு பதறியோடின.

ஒரு வார காலம் நகரில் பகலிரவுகளாக தும்மி ஓய்ந்த சிலைகள் பின்பு எப்போதும் போல உறைந்து போயின. இப்போது கடற்கரை சாலையில் மட்டுமில்லாது நகரின் ஒவ்வொரு சிலையையும் கடந்து செல்லும் மனிதர்கள் அது தும்மப்போகிறதா என்று கவனமாக பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். சிலைகளின் மீது கவனம் கொள்கிறார்கள். காத்திருக்கிறார்கள்.

சிலைகள் அதைத்தான் எதிர்பார்த்தனவோ என்னவோ.

# சிறுசொல்

மகா பண்டிதமணி மைகோ எனும் மை.கோபாலன் பற்றி ஆய்வு செய்வதற்காக பெர்க்கலி பல்கலைக் கழகத்திலிருந்து வந்திருந்த லிண்டா தன் ஆய்வில் இந்த அரிய குறிப்பு ஒன்றினை தந்திருக்கிறார். அது தமிழ்வரலாற்றில் விசித்திரமானதும் எதிலும் பதிவு செய்யப்படாமலும் போன இரண்டு தமிழ் அறிஞர்களுக்குள் நடைபெற்ற ஒரு முரண்உறவு பற்றியது.

மைகோவின் தமிழ்இலக்கியபணி என்ற தலைப் பில் ஆய்வு செய்ய தமிழகம் வந்த லிண்டா மைகோ வின் சொந்த ஊரான காட்டுபரணை என்ற ஊரில் உள்ள அவரது குடும்பம் மற்றும் அவரது மாணக்கர்கள் பலரிடம் நேரில் ஆய்வு செய்தும் அவரது கட்டுரைகள், படைப்புகளை விரிவாக வாசித்தும் மைகோ பற்றி நிறைய அறிந்துகொண்டார். அப்போது மைகோ வின் ரங்கூன்பெட்டி ஒன்றில் எழுதி அனுப்பப்படாத இரண்டு கடிதங்களை லிண்டா கண்டு எடுத்தார். அவை நறும்பூரணார் என்ற தமிழ் ஆய்வாளருக்கு எழுதப்பட்டதாகும். அந்தக் கடிதத்தில் மைகோ தனது ஆய்வுபோக்கில் உள்ள தவறுகளை ஒத்துக்கொள்வ தாகவும், இருவருமாக இணைந்து ஒரை என்ற அந்த சொல் பற்றி ஆய்வை கைவிட்டுவிடலாம் என்றும் எழுதியிருந்தார்.

லிண்டாவிற்கு ஒரை என்ற சொல்லின் பின்னால் என்னவிருக்கிறது என்ற ஆர்வம் உண்டாகி அதைத் தேடி அலைய ஆரம்பித்தாள். அப்போது அவளால் நம்பமுடியாத புதிர்க்கதை போன்ற முடிச்சுகளுடன் மைகோ பற்றிய செய்திகளை அறியத் துவங்கினாள்.

1890களின் இறுதியில் இரண்டு தமிழ் அறிஞர்கள் தமிழகத்தின் வேறுவேறு நகரங்களில் வசித்துக்கொண்டிருந்தார்கள். மைகோ என்று சுருக்கமாக அடையாளம் காணப்படும் மைகோபாலன் அதில் ஒருவர். அவர் லண்டனில் டிலிட் படித்து பட்டம் பெற்றவர். மற்றவர் வேட்டவலம் கிராமப் பள்ளியொன்றில் கணித ஆசிரியராக வேலை பார்த்துக்கொண்டு தமிழியல் ஆய்வில் விற்பன்னராக இருந்த நறும்பூரணார்.

மைகோ லண்டனில் சரித்திரம் நிலவியல் மற்றும் உயர் விஞ்ஞானம் படிக்கச் சென்றவர். அங்கே சமஸ்கிருத பேராசிரியராக இருந்த மாண் டேகுவின் சிபாரிசின்படி தமிழ்மொழியின் வரலாற்றை ஆய்வு செய்யத் துவங்கி அதில் டாக்டர் பட்டம் வாங்கினார். மைகோவின் ஆய்வுப்படி தமிழ் சமஸ்கிருதம் வழியாகவே உருவானது என்றும், தமிழ் இலக்கியங்கள் சமஸ்கிருத தாக்கத்தால் உருவாக்கப்பட்டது அதற்கென எந்த விசேசமும் இல்லை என்றும் உறுதியாகத் தெரிவித்தார்

இவருக்கு மாறாக நறும்பூரணார் தமிழில் இருந்து தான் சமஸ்கிருதம் அதிகம் கடன்பெற்றது என்றும் தமிழ் இலக்கியங்கள் சமண பௌத்த தாக்கத்தால் பெரிதும் உருவானவை என்றும் விளக்கி கட்டுரைகள் எழுதிக்கொண்டிருந்தார்.

மைகோவும் நறும்பூரணாரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்ட தேயில்லை. ஆனால் ஒருவர் மீது மற்றவர் மோசமான வசைகளையும் கடுமையான தாக்குதல்களையும் தொடுத்தனர்.

மைகோ புதிதாக துவக்கப்பட்ட தென்னிந்திய பல்கலைக்கழகம் ஒன்றின் துணைவேந்தராக நியமிக்கப்பட்ட போது அதற்கு எதிராக கழுதைக்கு பூச்சூடி ஊர்வலம் நடத்தினார் நறும்பூரணார். மைகோ கைக்கு அதிகாரம் வந்தவுடன் அவர் தொடர்ச்சியாக ஆங்கிலத்தில் தமிழின் தொன்மை வெறும்பழங்கதை என்று கட்டுரைகள் எழுதி உலக அறிஞர் சபையில் அங்கீகாரம் பெற்றார்.

மறுபக்கம் நறும்பூரணார் சைக்கிளில் சுற்றியலைந்து கிராமம் கிராமமாக கல்வெட்டுகளைத் தேடி பிரதியெடுத்து மைகோவின் முயற்சிகளை முறியடித்தபடியே இருந்தார். காஞ்சியில் நடைபெற்ற தமிழ் அகில மாநாட்டில் கலந்துகொள்ள வந்த மைகோவும் நறும் பூரணாரும் வேறுவேறு சத்திரங்களில் தங்கியிருந்தனர். அவரவர் சார்பு ஆய்வாளர்களை தயார் செய்து சண்டைக்கு அனுப்பினர். நறும்பூரணார் அந்த அரங்கில் ஒரை என்ற ஒரு சொல் போதும் தமிழின் தொன்மையை விளக்க என்று ஆதாரமாக விளக்கினார்.

ஆச்சரியமாக அதே சொல்லை முன்வைத்து தமிழை விட சமஸ் கிருதமே மேலானது என்று மைகோவும் ஒரு கட்டுரை எழுதி அங்கே வாசித்தார். எப்படி இருவரும் ஒரே சொல்லைத் தேர்வு செய்தார்கள் என்ற விந்தை அரங்கில் திகைப்பை உண்டுபண்ணியது.

மைகோவும் நறும்பூரணாரும் அந்த அகிலத்திலும் ஒருவரையொரு வர் சந்தித்துக்கொள்ளவேயில்லை. ஆனால் அவர்களது ஆதரவாளர்கள் மாநாட்டில் பெரிய கூச்சல் குழப்பத்தை உருவாக்கினார்கள்

அன்றிலிருந்து பதினேழு ஆண்டுகள் இரண்டு ஆய்வாளர்களும் ஒரை என்ற ஒற்றைச் சொல் குறித்து திரும்ப திரும்ப பேசியபடியும் எழுதியபடியும் இருந்தார்கள். அவர்களுக்குள் முற்றுப்பெறாத பகைமை அதிகமாகியது.

முடிவாக நறும்பூரணார் நீதிமன்றத்தில் தமிழை அவதூறு செய்வ

தாக மைகோ மீது வழக்கு ஒன்றினை தொடுத்தார். ஆறு ஆண்டுகள் வழக்கு நடந்துகொண்டிருந்தது. இடையில் நறும்பூரணார் நோய்வாய் பட்டு இறந்துவிடவே மைகோ அவரோடு சேர்ந்து தமிழையும் ஒன்றாக புதைக்க வேண்டும் என்று கேலி செய்து அறிக்கை விட்டார்.

வழக்கு கைவிடப்பட்டது. மைகோ அதன் சில ஆண்டுகளின் பிறகு இறந்தபோது குலக்கோடாரி ஒழிந்தான் என்று கட்டுரை தீட்டினார்கள் நறும்பூரணாரின் வாரிசுகள்.

ஒருவரையொருவர் பார்த்துக்கொள்ளாமல் விரோதித்து இறந்து போன அந்த இருவருக்குள்ளும் உள்ள உறவைத்தான் என்னால் புரிந்துகொள்ள முடியவேயில்லை எனும் லிண்டா ஒரை என்ற சொல் ஒரு சுழல்போல அவர்களை இழுத்துக்கொண்டு போனது. இன்றும் அவர்களது வாரிசுகள் ரகசியமாக இதே பகைமையைக் கொண்டு வாதபிரதிவாதங்களை மேற்கொண்டு வருகிறார்கள் என்பது வியப்பாக உள்ளது என்றும் குறிப்பிடுகிறாள்.

பி.கு லிண்டா குறிப்பிட்ட மைகோவின் கடிதம் ஒரு கட்டுக்கதை என மைகோ ஆட்கள் மறுப்பதாகவும் தொடர்ந்து தான் ஆய்வை மேற்கொண்டபோது என்றும் ஒரை என்பதை முடிவு செய்வது தனிநபரின் வேலையில்லை. அது ஒரு சமூகத்தின் பொறுப்பு. இதற்கான தனியாக ஒரு இனக்குழு தன் வாழ்நாளை செலவழித்து ரகசிய ஆய்வை மேற்கொண்டு வருவதாக லிண்டா குறிப்பிடுகிறாள்.

# மர ஊஞ்சல்

இரவிலும் வெளிச்சம் மங்காத அந்த வீடு மாறன் மலையின் முத்துப்பாறையின் மீதிருந்தது. எப்படி என்று புரியவேயில்லை. அந்த வீட்டைக் கட்டிய கோலப்பன் பல ஆண்டுக்காலம் மலையின் ஊடாக அலைந்து திரிந்து அதன் சூட்சுமம் யாவையும் ஒன்று சேர்ந்து அந்த வீட்டினைக் கட்டியதாகவும் அது மழையில் நனையவே நனையாது என்றார்கள்.

அந்த வீட்டில் ஒரு விசித்திர ஊஞ்சலிருந்தது. அதில் ஏறி அமர்ந்தாடும் மனிதன் ஊஞ்சல் பின்னால் போகும்போது கடந்த காலத்திற்குள்ளும், முன்னால் போகும்போது எதிர்காலத்திற்குள்ளும் போய்விடுவான். ஒருமுறை ஊஞ்சலை வீசி ஆட்டினால் அது தன்னிலைக்கு வருவதற்கு பல வருசம்கூட ஆகக்கூடும் என்றார்கள்.

என்னால் அதை நம்ப முடியாமல் இருந்தது. அப்படி யாருக்காவது நடந்திருக்கிறதா என்று கேட்டேன். வாகன ஓட்டியாக இருந்த பக்கிரிசாமி சொன்னான், 'எனக்கே நடந்திருக்கிறது. ஒரு முறை ஊஞ்சலில் ஏறி உட்கார்ந்து ஆடிய போது என் பத்தாவது வயதின் மதியத்தில் போய் இறங்கினேன். அங்கே நானே பந்து விளையாடிக்கொண்டிருப்பதைப் பார்த்தேன். நம்பவேமுடியவில்லை. அதுபோலவே ஊஞ்சல் வேகமாக முன்னாடி போகையில் எண்பது வயதில் நான் நோய்மையுற்று நடுங்கிக் கிடப்பதைக் கண்டேன். பயமாக இருந்தது. இந்த ஊஞ்சல் காலத்தின் கயிறுகளால் கட்டப்பட்டிருக்கிறது' என்று.

நான் அதில் ஏறி ஆட விரும்பினேன். எனக்குள் அமிழ்ந்து கிடந்த பால்யத்தின் கரையில் இறங்க விரும்பினேன்.

வனக்காவலர்களின் எதிர்ப்பை மீறி ஊஞ்சலில் ஏறி உட்கார்ந்து ஆடத்துவங்கினேன். ஊஞ்சலின் வேகம் குத்தீட்டி காற்றில் செல்வது போன்றிருந்தது.

என் நினைவு அழிந்துகொண்டே வந்தது. நான் கண்விழித்தபோது பருத்த முலையொன்று என் உதட்டில் பொருந்தியிருந்தது. என் தலையை எவரது கைகளோ பற்றியிருந்தது. நான் முலைப்பாலை சுவைத்துக்கொண்டிருந்தேன். அது என் தாய் என்பதும் அக்குழந்தை

நான்தான் என்பதும் ஊஞ்சல் திரும்பி வரும்போது புரிந்தது.

எதிர்காலத்தை நோக்கி ஊஞ்சல் சென்றுகொண்டிருந்தது. நான் எதிர்கொள்ளப் போகும் முதுமையைப் பற்றிய விழிப்போடு ஊஞ்சலில் இருந்தேன். கல்லால் ஆன ஆயுதம் ஒன்று பறந்து பறந்து என் தொண்டைக் குழியில் இறங்கிட நான் குருதி பொங்க விழுந்தேன். உடல் நடுங்கியது. கனவிலிருந்து விடுபட்டதுபோல திடுக்கிட்டு கண்விழித்தபோது ஊஞ்சல் சமநிலைக்கு, வந்திருந்தது.

எந்த வயது அது. ஏன் அப்படி நடக்கப் போகிறது என்று புரியாமல் அங்கிருந்து விலகி நடக்கத் துவங்கினேன்.

இலை மறைவிலிருந்து ஒரு வனவாசி தன் கையில் இருந்த கல்லாயுதம் ஒன்றினை என்னை நோக்கி வீசிவிட்டு ஓடத் துவங்கினான்

ஆயுதம் என் தொண்டையை நோக்கி வந்து கொண்டிருந்தது. நான் கத்துவதற்குள் ஆயுதம் தொண்டையில் செருகி என் சப்தம் துண்டிக்கப் பட்டது.

ஊஞ்சல் எப்போதும்போல காற்றில் ஆடிக்கொண்டேயிருந்தது.

# பகலின் முதுகு

சீனாவில் பயணம் செய்துகொண்டிருந்த சத்வா என்ற இந்திய புத்த துறவி தூங்கா மூஞ்சி மர இலை ஒன்றை கடத்திக்கொண்டு வர முயன்றதற்காக எல்லையில் பிடிபட்டார். தூங்கா மூஞ்சி மரம் லிபோங் மடாலயத்தில் மட்டுமே இருந்தது. உண்மையில் அந்த மரம் ஒரு முதிய துறவி என்றும் அவரது பெயர் சாநோயூ என்றார்கள்.

சாநோயூ தன்னுடைய பனிரெண்டு வயதில் ஒரு துறவியின் பாதையை பின்தொடர்ந்ததாகவும் அவருக்கு வழிகாட்டிய குரு சாநோயூவிடம் ஒரு வார்த்தைகூட பேசியதேயில்லை என்றும் இருவரும் மௌன மாக நாற்பத்தி ரெண்டு வருடங்கள் சுற்றியலைந்ததாக வும் சொன்னார்கள். சாநோயூ ஒரு இரவில்கூட தூங்கியதேயில்லை. அவர் இரவானதும் பகலை விடவும் அதிக உற்சாகம் கொண்டு விடுவார்.

சில வேளைகளில் அவர் நிலா வெளிச்சத்தில் அமர்ந்தபடியே ஆற்றின் தண்ணீரைப் பார்த்தபடி இருப்பார். ஒரு நாள் அவர் புல் ஒன்றின் அருகில் படுத்தபடியே அதை இரவெல்லாம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

அவரைக் காண்பதற்காக வந்த அரசன் ஏன் சாவோயூ உறங்காமலே இருக்கிறார் என்ற கேள்வியை நாலு முறை கேட்டான்.

அதற்கு அவர் புற்கள் இரவில் உறங்குவதில்லை. வியப்பாக இருக் கிறது என்று பதில் தந்தார்.

ஒரு மழைக்காலத்தில் அவர் உறங்காமல் படகில் ஆற்றில் அலைந்த போது அவரைச் சந்தித்த வேசை ஒருத்தி சாநோயூ ஏன் தூங்குவதே யில்லை என்று கேட்டதற்கு இயற்கையில் எதுவும் உறங்குவதில்லை. இந்த நதி, ஆகாசம், நிலவு, நட்சத்திரம், மரங்கள் எதுவும் உறங்குவதே யில்லை என்று அவர் சொன்னார். வேசை அன்றோடு தனது சிகையை மழித்துக் கொண்டு பெண் துறவியாகிப் போனாள்.

சாநோயூ எதையும் போதிப்பதில்லை என்பதாலும் அவர் இரவெல் லாம் விழித்திருப்பவர் என்பதாலும் அவருக்கென சீடர்கள் குறை வாகவே இருந்தார்கள்.

ஒரு மழைக்கால இரவில் சாநோயூ ஆற்றின் கரைக்கு நடந்து செல்லத் துவங்கினார். வழி தெரியாத இருட்டு. சீடர்கள் பாதை மாறி நடந்து சென்றுவிட்டனர். தடுமாறி இருளுக்குள்ளாக நடந்து வந்தபோது சாநோயூ மண்ணில் விழுந்து கிடப்பதைக் கண்டு என்ன ஆனது என்று சீடர்கள் ஆதங்கத்துடன் கேட்டபோது அவர் சப்தமாக 'பகலின் முதுகைப் பார்த்துக்கொண்டிருக்கிறேன்' என்றார்.

அந்த நிகழ்ச்சியின் பிறகு சாநோயூ தன் இருப்பிடத்திலிருந்து வெளியேறி வரவேயில்லை. அடுத்த மழைக்காலத்தின் முன்பாக அவர் இறந்து போனார். அவரது உடலைப் புதைத்த இடத்திலிருந்து தான் தூங்கா மூஞ்சி மரம் உருவானது.

அந்த மரத்தின் இலைகள் இரவானதும் வேகமாக அசைய ஆரம்பித்துவிடும். இளந்துறவிகள் அந்த மரத்திலிருந்து ஒரு இலையைப் பறித்து தங்கள் மடியில் வைத்துக்கொண்டால் உறக்கமே வராது என்று நம்பினார்கள்.

தூங்கா மூஞ்சி இலையின் ஒரு பக்கம் வெள்ளையாகவும் அடிப் பக்கம் கறுப்பாகவும் இருந்தது. பகலிரவு தான் அப்படி உருமாறியிருப்ப தாகச் சொன்னார்கள். ஒவ்வொரு நாளும் அந்த மரத்தில் ஒரு இலை உதிர்ந்துவிடும் என்றும் அப்படி உதிர்ந்த இலையை இதுவரை எவரும் கையில் எடுக்க முடிந்ததில்லை என்றும் பேசிக்கொண்டார்கள்.

அப்படியொரு தூங்கா இலையை தன்னுடைய தேசத்திற்குக் கொண்டுபோய்விட வேண்டும் என்ற ஆசையில் பறித்து ஒளித்தபடியே சத்வா கடந்து போகையில் பிடிபட்டார்.

குற்றத்தை ஒத்துக்கொள்ளத் தயாரா என்று படைவீரர்கள் கேட்டபோது அவர் புன்சிரிப்புடன் சொன்னார்.

தூங்காமையைத் திருடிச் செல்வது எளிதானதில்லை. காரணம் தூக்கம் ஒரு விந்தை அதை மனிதர்களால் புரிந்து கொள்ளவே முடியாது. தூங்காமை வெறும் விழிப்பு அல்ல. அது தானறிதல். தூக்கம் எவ்வளவு பெரிய சுவரையும் ஊடுருவிடக்கூடியது. எந்த மனிதனையும் வீழ்த்திவிடக் கூடியது. தூங்காமை நீரூற்றைப் போல இயற்கையை மீறிய கொந்தளிப்பு. அது எளிதானதில்லை.

துறவியின் சொற்களால் எரிச்சலுற்ற வீரன் ஒருவன் வாளை அவர் மார்பில் செருகினான் அவர் சிரித்தபடியே சொன்னார்.

இனி உறங்க வேண்டிய அவசியமில்லை.

# தப்பித்த சொற்கள்

அந்த நகரில் பாலுறவு முழுமையாக தடை செய்யப் பட்டிருந்தது. கணவன் மனைவி காதலன் காதலி, ஒருபால், இருபால் என்று எல்லாவிதமான பாலுறவு களும் தடை செய்யப்பட்டிருந்ததுடன் அதை மீறிச் செயல்பட நினைப்போர்க்கு கடுமையான தண்டனை கள் தரப்பட்டன. ஆண்களும் பெண்களும் சேர்ந்து வாழ்வதற்கும், பணிபுரிவதற்கும் அனுமதிக்கப்பட்டபோதும் அவர்கள் பாலுறவு கொள்வதை அரசு அனுமதிக்கவில்லை.

இந்த நடைமுறையை ஒத்துக்கொள்ள மறுத்து ஆரம்பத்தில் சில எதிர்ப்புக் குரல்கள் உருவாகின. ஆனால் அந்தக் குரல்கள் அதிகாரத்தின் வன்முறை யால் அடக்கபட்டன. பாலுறவு தடை செய்யப்பட்டால் குழந்தைகள் பிறக்காது என்று அந்த நகரவாசிகள் புகார் தெரிவித் தார்கள். அரசோ 'குழந்தைகள் வேண்டும் என்பவர்கள் அந்த நகரிலிருந்து வெளியேறிப் போய்விடுங்கள்' என்றது. நகரவாசிகளுக்கு கிடைக்கும் விசேஷ சலுகைகள் மற்றும் கேளிக்கைகளுக்காக பாலுறவை விட்டுத்தருவதில் தப்பில்லை என்ற எண்ணம் சில வாரங்களிலே பெரும்பான்மையினருக்கு வரத்துவங்கியது.

இந்த சட்டம் நடைமுறைக்கு வருவதற்கு முன்னோட்டமாக முதலில் நகரில் முத்தமிடுவது தடைசெய்யப்பட்டது. யாரும் யாருட னும் முத்தமிடக்கூடாது என்று அரசு ஒரு அதிகாலையில் அறிவித்தது. ஒன்றிரண்டு காதலர்களைத் தவிர மற்றவர்கள் அதைப் பெரிதாக கண்டுகொள்ளவில்லை. முத்தம் மிகப் பழமையான வெளிப்பாட்டு முறை. சூயிங்கம் மெல்வதில் உள்ள சுகம்கூட அதில் கிடைப்பதில்லை என்று வெளிப்படையாக மக்கள் பேசிக்கொண்டார்கள். குறிப்பாக முத்தம் குறித்த கிளர்ச்சி கொண்டிருந்த நாற்பது வயதைக் கடந்தவர்கள் ஒரு முத்தத்திற்காக தாங்கள் நாட்கணக்கில் காத்துக் கிடந்ததை நினைவுபடுத்தினார்கள். இளைஞர்களோ முத்தம் ஒரு ஏமாற்றுவழி. அது நுரைக்கும் பியர்போத்தலின் மூடியைத் திறந்து காட்டிவிட்டு போத்தலை எடுத்துக்கொண்டுபோய்விடுவது போன்றது என்றார்கள்.

அடுத்தடுத்தாக ஆணும் பெண்ணும் கட்டிக்கொள்வதை அரசு

தலையிட்டு தடை செய்தது. ஆணும் பெண்ணும் ஏன் கட்டிக்கொள்ள வேண்டும். உலகில் எந்த ஜீவராசியும் மற்றொரு ஜீவராசியை கட்டித் தழுவி ஆலிங்கனம் செய்வதில்லை. தன் காமத்தினை அடுத்த உடலில் பற்ற வைக்க அந்த உடல் மீது தன் ஆதிக்கத்தை செலுத்துகிறது. அதை கட்டித் தழுவுவது என்று எடுத்துக்கொள்ளக் கூடாது என்றது அரசு. இளைஞர்களோ கட்டித் தழுவுவது பெண்கள் கண்டுபிடித்த எளிய உத்தி. ஆண் கட்டித் தழுவுவதை காமமாகக் கொள்வதில்லை என்று கைவிட்டார்கள்.

இப்படியாக பாலுறவு தடைசெய்யப்பட்ட நகரில் பாலுறவின் இடத்தை சொற்கள் பிடித்துக்கொண்டுவிட்டன. காமம் கொள்ளும் தருணங்களில் ஆண் பெண்ணை நோக்கி விசேஷமான சொல்லொன்றினை வீசி எறியத் துவங்கினான். அவளும் உரத்த சப்தத்துடன் ஆணை நோக்கி புதிய சொல் ஒன்றினை வீசி எறிந்தாள். சொற்கள் வழியாக காமம் சிதறுண்டது. இந்தச் சொற்களை ஆண்களும் பெண்களுமாக உருவாக்கிக்கொண்டார்கள். அதை ரகசியமாகவும் பாதுகாத்தார்கள்.

மிக நெருக்கமான நண்பர்களுக்குள் இந்தச் சொற்கள் பரிமாறிக் கொள்ளப்பட்டன. ஆனால் புதிது புதிதாக சொற்களைக் கண்டுபிடிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அரசாங்கம் அதை எப்படி எதிர் கொள்வது என்று தெரியவில்லை. பொது இடங்களில் அலுவலங்களில் ரயில் பயணங்களில்கூட ஆணும் பெண்ணும் ரகசியமாக சொற்களை வீசி எறிந்து தங்கள் காமத்தைத் தணித்துக்கொள்ளத் துவங்கினார்கள்.

நகரில் சில மாதங்களில் முன்னில்லாதபடி பல்லாயிரம் சொற்கள் பழக்கத்திற்கு வந்துவிட்டன. அரசாங்கம் அந்தச் சொற்களைக் கண்டு முதலில் திகைத்தபோதும் இப்போது அதை தனது தனித்துவமிக்க வணிகப்பொருளாக மாற்றி உலகெங்கும் பரப்ப ஆரம்பித்துள்ளது. பிறநகரங்களும் அவசரமாக பாலுறவை தடைசெய்யத் துவங்கியிருந் தார்கள்.

# படிக்கத் தெரிந்த தவளை

நீண்ட காலமாக கிணற்றுக்குள்ளாகவே இருந்த தவளை ஒன்றிற்கு திடீரென புத்தகம் படிப்பதில் ஆர்வம் அதிகமாகத் துவங்கியது. அதற்கு முக்கிய காரணம் பகல்நேரங்களில் கிணற்றின் படிக்கட்டுகளில் வந்து அமர்ந்து படிக்கும் ஒரு இளைஞன். அவன் புத்தகத்தை சப்தமாக வாசிப்பதுண்டு கண்ணீர் விட்டு அழுவதும் உண்டு. முதல் முறையாக படிக்கட்டு தண்ணீரில் இருந்தபடியே புத்தகம் படிப்பதைக் கேட்ட தவளை தானும் அழுதது.

மறுநாள் அவனிடம் தானும் படிக்க விரும்புவதாகச் சொன்னது. அவன் அதைக்கேட்டு வியப்படையவில்லை. அவன் தவளை எது போன்ற புத்தகத்தை வாசிக்க விரும்புகிறது என்று கேட்டான். கடந்த காலத்தைப் பற்றிய குறிப்புகள் இல்லாத புத்தகமாக இருக்க வேண்டும். கடந்த காலம் என்பதை நினைக் கும்போது எப்போதுமே பயமாக இருக்கிறது என்றது தவளை.

அவன் மறுநாள் வரும்போது நூலகத்திலிருந்து ஒரு புத்தகம் எடுத்துவருவதாகச் சொன்னான். தவளை சொன்னது போல கடந்த காலம் பற்றிய குறிப்புகள் இல்லாத புத்தகங்களைக் காண்பது மிக அரிதாக இருந்தது. அவன் சலித்துப் போய் மாயக்கண்ணாடி என்ற சிறார் புத்தகம் ஒன்றை எடுத்துக்கொண்டு சென்றான். தவளை அதைப் பகலெல்லாம் வாசித்தது. முடிவில் இரவில் தூக்கம் வராமல் அது தத்தளித்தபடியே இருந்தது.

மறுநாள் அந்த இளைஞன் தவளையிடம் புத்தகம் எப்படி இருந்தது என்று கேட்டான். தவளை ஆயாசத்துடன் 'மனிதர்கள் மிக அதிகமாக கற்பனை செய்கிறார்கள் அது எனக்கு பிடிக்கவில்லை' என்றது. உடனே அவன் 'வேறு என்னவிதமான புத்தகம் வேண்டும்' என்று கேட்டான். தவளை 'புத்தகங்களால் சிரிக்க வைக்கமுடியும் என்றால் அதுபோன்ற ஒன்றை வாசிக்க விரும்புகிறேன்' என்றது. மறுநாள் அவன் கலிவரின் யாத்திரை புத்தகத்தை எடுத்து வந்து தந்தான். அதைக் கண்ட தவளை 'படித்து முடிப்பதற்கு இரண்டு நாட்கள் ஆகும்' என்று சொல்லியபடியே வேகவேகமாக வாசிக்கத் துவங்கியது. உண்மையில் அது நினைத்தது போல இரண்டு நாளில் அதை வாசிக்க முடியவில்லை. ஒரு வார

காலமாகியது. முடிவில் தவளை மிதமிஞ்சிய கண்ணீருடன், 'ஒரு இடத்தில் கூட என்னால் சிரிக்க முடியவில்லை. பயங்கர துக்கமாக இருக்கிறது. முட்டாள்தனத்தினை கேலி செய்து மனிதர்கள் மட்டுமே சிரிக்க முடியும் போலும்' என்றது.

அதன் மறுநாள் அவன் எட்கர் ஆலன்போவின் சிறுகதைத் தொகுப்பைக் கொண்டுவந்து தந்தான். அதைத் தவளை பயந்துபோன மனதின் கற்பனை என்றது. புதுமைப்பித்தனின் சிறுகதைகளை வாசிக்கத் தந்தான். தவளை அந்த கேலிக்குப் பின்னால் சொல்ல முடியாத வலியும் துக்கமும் இருக்கிறது என்றது. இப்படியாக அந்தத் தவளை ஆக்டோவியா பாஸ் கவிதைகள் துவங்கி ஆத்மாநாம் வரை கவிதைகளையும், மார்க்வெஸ் போர்ஹேயில் துவங்கி ஒரான் பாமுக் வரையும் வாசித்துமுடித்தது.

அன்றிலிருந்து அது புத்தகங்களின் மொழியில் பேசத் துவங்கியது. யாரும் கேட்காதபோதும் அது புத்தகங்களைப் பற்றி சொல்லிக் கொண்டேயிருந்தது.

கிணற்றைப் பற்றி எவ்வளவுதான் கற்பனை செய்தாலும் கிணறு என்பது சிறிய வட்டம் மட்டுமே என்று அலுத்துக்கொண்டது,

படிக்க ஆரம்பித்த நாள் முதல் தான் காரணமில்லாமல் வருத்தப் படுவதாகவும் தவளையாக இருப்பதைப் பற்றி அதிகம் சிந்திப்பதாகவும் சொன்னது.

'தவளையாக இருந்தாலும் நீ படிக்கத் தெரிந்த தவளையாயிற்றே' என்று உற்சாகப்படுத்தினான். 'அதுதான் இன்னும் சோகமாக இருக் கிறது படித்ததை மறப்பதற்கு ஏதாவது வழியிருக்கிறதா' என்று ஆதங்கத்துடன் கேட்டது தவளை. 'இல்லை' என்றான் இளைஞன். 'ஏதாவது வழி கிடைக்குமா என்று தேடி வா' என்று விரட்டியது தவளை. அதன்பிறகு இளைஞன் அந்தக் கிணற்றிற்கு வரவேயில்லை தவளையும் படித்ததை எப்படி மறப்பது என்று புரியாமல் தனக்குத் தானே பேசியபடியே நாள் எல்லாம் யோசிக்கத் துவங்கியிருந்தது.

# புகையும் புத்தகம்

அந்தப் புத்தகத்தை ஐம்பது வருடமாக எவரும் எடுத்து புரட்டிப் படிக்கவேயில்லை. நூலகத்தின் அடுக்கில் இருந்து அது மாற்றி அடுக்கப்படகூடவில்லை. ஒரேயொரு முறை அந்தப் புத்தகத்தை நோக்கி ஒரு இளைஞன் நெருங்கி வந்தான். கையால் தொடாமலே அதன் பெயரைப் படித்துப் பார்த்தான். அலுப்பாகவும் சோர்வாகவும் வெறித்துப் பார்த்து பெருமூச்சிட்டபடியே நின்றான்

பிறகு அவனும் கடந்து சென்றுவிட்டான். படிக்கப்படாத புத்தகமாக இருப்பதன் வலியை அவன் உணர வேயில்லை. புத்தகம் எழுதிய மனிதன் இறந்து போய் முந்நூறு ஆண்டுகளுக்கு பிறகும் அந்தப் புத்தகம் உயிர்வாழ்ந்து கொண்டிருந்தது. அதற்காக இப்போது அந்தப் புத்தகம் அவமானப்பட்டது. எவர் நினைவிலும் தான் ஒற்றை வரியாகக் கூட தங்கவில்லை என்பதை அது மீளமுடியாத குற்றவுணர்ச்சி என்றது.

புத்தகங்களால் தற்கொலை செய்துகொள்ள முடியாது. என்று முணங்கியது பின்பு தன்னை முன்பின்னாக கலைத்துக்கொள்ளக் கூட முடியாதபடியே ஊழ் தன்னை ஒன்று சேர்ந்து பிணைத்திருக்கிறது என்று வருந்தியது கடைசியில் அது தன் ஆற்றாமையின் துயரத்தில் தனக்கு தானே சாபமிட்டுக்கொண்டது.

அதன்பிறகே அதிலிருந்து புகை வரத்துவங்கியது. அந்தப் புகை ஊதுபத்தியிலிருந்து கசிவதுபோல துவங்கி பின்பு அகிலின் தூபம் போல வேகமானது.

யாரோ ஒரு கடைநிலை ஊழியன் புத்தகம் புகைந்துகொண்டிருக்கிறது என்று எரிச்சல் அடைந்த குரலில் புகார் சொன்னான். யாரும் அதைக் கேட்டுக்கொள்ளவில்லை.

நீண்ட நாட்கள் தனக்குத் தானே புகைந்து பின்பு அந்தப் புத்தகம் அடங்கியது பின்பு அது வெறும்காகிதமாகி குப்பைக்குப் போய் அங்கிருந்து மக்கி மண்ணுக்குள் போய் அதிலிருந்து ஒரு விதை முளைத்து விருட்சமாகி அந்த விருட்சத்தின் இலைகளில் அசைந்தபடியே உலகை பார்த்துக்கொண்டிருக்கப் போகும் நாளைப் பற்றி கனவு காணத்துவங்கியது.

பின்பு அதற்கு யாரோடும் பேசவேண்டிய தேவையே ஏற்படவில்லை.

# உச்சாடனம்

பத்மவிகாரையில் இருந்த வயதான புத்த பிக்குவான தமரா தன் சீடர்களிடம் புத்தரின் பெயரை லட்சம் முறை உச்சாடனம் செய்யும் படியாகச் சொன்னார்.

அங்கிருந்த இளம்துறவிகள் இரவும் பகலும் புத்த நாமத்தை சொல்லியபடியே இருந்தனர்.

ஒரு நாள் அந்த மடாலயத்திற்கு வந்த பயணி ஒருவன் எதற்காக அவர்கள் இப்படி இடைவிடாமல் உச்சாடனம் செய்கிறார்கள் என்று கேட்டதும் ஒரு இளம்துறவி சொன்னான்,

'பஞ்சிலிருந்து நூல் வெளிவருவது போல சொல்லைத் திரிக்கையில் அதன் வழியாக புத்த சாரத்தின் சரடு வெளிப்படக்கூடும்.'

உச்சாடனத்தில் சலிப்புற்ற ஒரு இளம் துறவி எரிச்ச லுற்றபடியே சொன்னான்,

'புத்தன் என்ற சொல்லில் புத்தனில்லை.'

உடனே மற்றொரு இளந்துறவி சொன்னான்,

'சொல்லை திரும்ப திரும்ப சொல்வதன் வழியே அது ஒளிர்கிறது. ஒரு பூ மலர்வதைப் போல.'

பயணி அந்த இளந்துறவியைப் பாராட்டினார். ஆனால் சலிப்புற்ற துறவி 'மூத்த பிக்குவை சந்தித்து இந்த சந்தேகத்தைத் தெளிவு செய்துகொள்ளலாம்' என்று குரலிட்டான்.

இரண்டு இளம் துறவிகளும் மூத்த பிக்குவைச் சந்தித்தனர். நடந்ததைச் சொன்னார்கள். அவர் எவர் சார்பிலும் பதில் சொல்லவில்லை. மாறாக ஒராயிரம் முறை தினமும் புத்தன் பெயரை எழுதும்படியாகச் சொன்னார்.

பல மாதங்கள் அதே வேலை தொடர்ந்தது. எழுதுவதிலும் சலிப் புற்ற துறவி சொன்னான்.

'சாப்பாடு என்று எழுதினால் வயிறு நிறையாது. இது அபத்த மாயிருக்கிறது.'

உடனே இன்னொரு இளம்துறவி சொன்னான்,

'புத்தன் என்ற சொல்லை திரும்பத் திரும்ப எழுதும்போது சொல் அழிந்து போய்விடுகிறது. வெறும் நிசப்தம் மட்டுமே எஞ்சியிருக்கிறது. அதையும் கடந்தால் நிசப்தமற்ற அசப்தம் உருவாகிறது. அது தான் புத்தன் போலும்.'

இரண்டையும் கேட்டுக்கொண்ட மூத்த பிக்கு எப்போதும் போலவே மௌனமாக இருந்தார்.

'எது சரி' என இருவரும் கேட்டார்கள்.

'இரண்டுமே சரிதான்' என்றார் மூத்தபிக்கு.

# உலகின் குற்றங்கள்

அவனுக்கு நாளிதழ் படிக்கும் வழக்கம் பதினாறு வருசங்களாக உள்ளது. பள்ளியிறுதி ஆண்டு படிக்கும்போது அவனது அப்பா நாளிதழ் படிக்கும் வழக்கத்தை கட்டாயமாக்கினார். தினசரி காலையில் நாளிதழ் படிக்க வேண்டும் என்பது அவருக்கு அந்த நாட்களில் விருப்பமாக இல்லை ஆனால் சில மாதங்களிலே அது பழக்கமாகிப் போனது. பின்பு அவனாக விரும்பி ஆங்கில நாளிதழ் வாங்கத் துவங்கினான். கடந்த சில வருடங்களாக வெறும் பழக்கத்திற்காக மட்டுமே அவன் தினசரி பேப்பர்களை வாங்குகிறான். ஆனால் படிப்பதில் ஆர்வம் காட்டுவதில்லை எப்போ தாவது ஒரு ஞாயிற்றுக் கிழமையில் அவன் நாளிதழை அவசரமாக புரட்டுவான். சில நிமிடசங்களில் சலிப்பாகிவிடும்.

இரண்டு நாட்களின் முன்னால் ஒரு காலை அவன் நாளிதழைப் புரட்டும்போது ஒரு கொலை பற்றிய செய்தியைப் படித்தான். புகைப் படத்துடன் வெளியிடப்பட்டிருப்பது. அந்தக் கொலைக்கும் தனக்கும் ஏதாவது சம்பந்தமிருக்கிறதா என்று யோசித்துப் பார்த்தான். நேரடியாக இல்லை என்றபோதும் மறைமுகமாக சம்பந்தம் இருக்கத் தானே செய்கிறது என்று நினைத்தபடியே அடுத்த பக்கத்தைப் புரட்டினான். அதில் ஆறு கொலை செய்திகள் இருந்தன. அந்தக் கொலைகளுக்கும் தானே காரணமானவன் என்ற எண்ணம் அவனுக் குள் உருவானது.

அன்று ஒரு நாளில் அவன் தினசரியில் வந்திருந்த இருபத்தியொன் பது கொலைகளுக்கு அவன் தன்னைக் காரணமானவன் ஆன எண்ணிக் கொண்டான். அந்த எண்ணம் அவனை மிகவும் வருத்தியது. உலகில் நடைபெறும் குற்றங்களுக்கும் நமக்கும் நடுவில் எந்த சம்பந்தமும் இல்லை என்று எப்படி மனிதர்கள் நம்புகிறார்கள் என்று ஆச்சரியமாக இருந்தது. அவன் அன்று முதல் நாளிதழின் அத்தனை குற்றங்களுக்கும் தானே பொறுப்பாளி என்று எண்ணி வரத்துவங்கினான்.

அந்த எண்ணம் அவனது தினசரி வாழ்க்கையை புரட்டிப் போட்டது. எண்ணிக்கையற்ற கொலைகள், வன்முறைகள் செய்துவிட்டு எதுவும் அறியாதவன் போல நிம்மதியாக மெஸ்ஸில் சாப்பிட்டுவிட்டு வாழ்வது

அவனுக்கு குமட்டிக்கொண்டு வரத் துவங்கியது. அதற்காக அவன் நாளிதழ்களை வாங்குவதை நிறுத்தவில்லை. மாறாக தினசரி வெளி யாகும் எல்லா நாளிதழ்களையும் வாங்கி வரத் துவங்கினான். குற்றம் பற்றிய செய்திகளை மட்டும் தனித்து எடுத்து ஒன்றோடு ஒன்று ஒப் பிட்டுப் பார்த்து குற்றங்களின் பொது ஒழுங்கினை அறிந்து கொள்ளத் துவங்கினான்.

பிறகு ஒரு குற்றம் போல இன்னொரு குற்றம் ஏன் நடக்கிறது. சம்பந்தமில்லாத இரண்டு மனிதர்கள் இரண்டு ஊர்களில் ஒரே போன்ற குற்றத்தில் எப்படி ஈடுபடுகிறார்கள் என்று வியந்தான். இறந்துபோன மனித முகங்கள் யாவும் ஏன் ஒன்றுபோல இருக்கின்றன என்று துக்கம் கொண்டான்.

இந்த உணர்ச்சிநிலை பெருகப் பெருக தான் கடுமையாக தண்டிக்கப் பட வேண்டிய குற்றவாளி என்ற எண்ணம் மேலோங்கத் துவங்கியது. அதற்கு மன்னிப்பே கிடையாது என்றும் அவன் உணர்ந்தான். பின் னொரு நாள் கடற்கரையில் மனம்வெம்பி தனித்திருந்த போது இருட்டில் ஒருவன் சொன்னான்.

மனித விருப்பங்களில் மிக முக்கியமானது குற்றம். அது ஒரு ரகசிய விளையாட்டு. குற்றம்தான் மனித முன்னேற்றத்தின் முதல்படி.

இதைக் கேட்ட மறுநிமிடம் அவன் மனது காற்றுப்போன பலூன் போல சுருங்கத் துவங்கியது. அவன் தனக்கும் உலகிற்குமான அந்தத் தொடர்பிழை அறுந்து போவதை உணர்ந்தான்.

உடனே கிளம்பி தன் அறையில் சேகரித்து வைத்த அத்தனை குற்றச் செய்திகளையும் தீ வைத்து எரித்தான். இப்போது அவனாக நாளிதழ்களை வாங்குவதில்லை. ஆனால் நூலகங்களிலோ, பொது இடங்களிலோ யாராவது நாளிதழ் வைத்திருந்தால் மறக்காமல் கேட்டு வாங்கி படிக்கிறான். குற்றங்களிடமிருந்து அவன் கற்றுக் கொள்ளத் துவங்குகிறான். ஒருநாள் அவன் குற்றவாளியாகவோ அல்லது பெரும்சாதனையாளராகவோ இதே நாளிதழில் இடம்பெறக்கூடும் சாத்தியம் சமவிகிதத்திலிருக்கிறது.

# வளர்ப்பு மிருகங்கள்

பதினாறாவது வயதின் பிற்பகலில் அவன் படித்துக்கொண்டிருந்த காமப்பிரதியிலிருந்து ஒரு ஓநாய் வெளியே வந்தது. அது அவன் முகத்தைத் தன் நாவால் நக்கி அவனைத் தடவிக் கொடுக்க ஆரம்பித்தது

அவன் கண்களை மூடியபடியே ஓநாய்க்கு தன் உடலை ஒப்படைத் தான் வெறியோடு ஓநாய் அவனை தின்னத் துவங்கியது. இருபத்தி ரெண்டு வயது வரை அந்த ஓநாய் அவன் விரும்பும் நேரத்தில் விரும்பிய புத்தகங்களில் இருந்து வெளிப்பட்டது.

நீண்ட பற்களால் உடலை கிழித்து நாவால் அது அவன் குருதியை நக்கிக் குடித்தது.

அவன் ஓநாயோடு இருப்பதை முதலில் கண்டுபிடித்தவள் அம்மா தான்.

அவள் கோபத்துடன் அவனை வீட்டைவிட்டு வெளியேறிச் செல்லும்படியாகத் திட்டினாள்.

இருபத்திமூணாவது வயதில் அவன் மாநகருக்குச் சென்றான்.

தற்செயலாகக் கிடைத்த ஒரு புத்தகத்திலிருந்து வண்ணத்துப்பூச்சி களின் கூட்டம் ஒன்று அவன் அறைக்குள் நிரம்பியது. அதன் வர்ணங்கள் அவனுக்குக் கனவைத் தந்தது. அவன் உற்சாகமாக இருந்தான் ஆனால் வண்ணத்துப்பூச்சிகளின் சுயநலம் அவனைப்படுத்த ஆரம்பித்தது. அவன் உண்மையில் வண்ணத்துப்பூச்சிகளைத் தின்பதற்கே ஆசைப் பட்டான்.

இருபத்தி எட்டாம் வயதில் அவன் வேலைக்குச் சென்றான். சம்பாத்தியத்தில் வாங்கிய முதல் புத்தகத்தின் உள்ளேயிருந்து ஒரு துப்பாக்கி நழுவி விழுந்தது. அதைத் தன் கையில் எடுத்து தான் வெறுக்கின்ற அத்தனை பேரையும் சுட்டுத் தள்ளினான்.

முப்பதாவது வயதில் அவன் புத்தகங்களை விட்டு விலகி தனது அமெரிக்க கனவுகளில் மூழ்கத் துவங்கினான் அப்போது அறிமுகப் பெண் அவனுக்கு தியானம் பற்றிய இளநீல வர்ண புத்தகம் ஒன்றைத் தந்தாள். அதை வாசிக்கத் துவங்கியபோது அதிலிருந்து அவன்

முன்பார்த்திராத மிருதுவான ஒரு விலங்கு வெளி வந்தது. அது பேசியது. ஆறுதல் சொன்னது. அவனுக்காக மனம் வருந்தியது. அதைக் கட்டிக் கொண்டு உறங்க ஆரம்பித்தான். ஆராதிக்க ஆரம்பித்தான்.

தனக்காக துணையைத் தந்தமைக்கு அந்தப் பெண்ணுக்கு நன்றி சொல்ல சென்றபோது அந்த விலங்கு அவள் மடியில் இருப்பதைக் கண்டான்.

கதவைத் திறந்து உள்ளே போனபோது அது அவன் இளவயதில் பார்த்த ஓநாயாக மாறி அவளை தன் நாவால் நக்கிக்கொண்டிருப் பதைக் கண்டான். பெருமூச்சுடன் தான் வெளியே காத்திருப்பதாகச் சொல்லி கதவை மூடிவிட்டு நின்றான். அதற்கு மேல் அவனால் ஒன்றும் செய்ய முடியாது.

அப்போதே அவனுக்கு நாற்பது வயது நெருங்கிக்கொண்டிருந்தது.

# வஸ்திரம்

க்யூ வம்சத்தின் கடைசி அரசன் நோய்மையுற்ற போது அவனைக் காப்பாற்ற யாராலும் முடியவே யில்லை. வைத்தியர்கள் பகலிரவாக உடனிருந்து மருத்துவம் பார்த்தார்கள். ஆனால் அரசனின் நோய் தணியவேயில்லை.

ஒவ்வொரு நாளும் நோயுற்ற அரசனின் உடை களைத் தீயிட்டுக் கொளுத்திவிடும்படியாக ஒரு பணிப்பெண்ணை நியமித்திருந்தார்கள். அவள் ஒரு நாள் அரசாங்க வைத்தியரிடம் தயங்கித் தயங்கிச் சொன்னாள், 'நான் பல வருடமாக துணி துவைப்பவளாக இருக் கிறேன். எனக்குத் தெரிந்த சிறிய யோசனை ஒன்றிருக்கிறது. மன்னர் மீதான அன்பில் இதைக் கூறுகிறேன்' என்று பீடிகையிட்டாள். வைத்தியர் 'என்ன செய்ய வேண்டும்' என்று கேட்டார்.

'அவள் துறவியின் உடைகளை மன்னருக்கு அணிய வைத்தால் நோய் தீர்ந்துவிடும்' என்றாள். வைத்தியரால் நம்பமுடியவில்லை. ஆனாலும் அதையும் செய்து பார்த்துவிடலாமே என்று அவர் பிக்குவின் வஸ்திரங் களைக் கொண்டுவரச்செய்து அதை மன்னருக்கு அணிவித் தார். படுக்கையில் கண்விழித்த மன்னர் தன் தோற்றம் மாறியிருப்பதைக் கண்டு திகைத்துப் போனார்.

அந்த உடையில் தான் இதுவரை பார்த்தறியாத ஒரு மனிதனைப் போலிருப்பதை உணர்ந்தார். முந்திய நாட்களில் மருத்துவர்களை கோவித்துக்கொள்வதுபோல அன்று கத்தவில்லை. மருந்தைக் குடிக்கும் போதுகூட மிக நிதானமாக இருந்தார். வலியோடு படுக் கையில் புரண்ட போதும்கூட முந்தைய நாட்களைப் போல கத்தி அழவில்லை. அவரது மாற்றம் மிக வெளிப்படையாகத் தெரிந்தது. ஒரு உடை மனிதனின் அகத்தை மாற்றிவிடும் என்பதை அறிந்த வைத்தியர் அடுத்த நாளும் எளிமையாக துவைக்கப்பட்ட துறவியின் ஆடையொன்று அணிவித்தார்.

ஒரு வார காலத்தில் மன்னர் நோயிலிருந்து எழுந்துகொண்டதோடு அவரது பேச்சு, சிந்தனை யாவும் மாறியிருந்தது. பத்து நாட்களில் அரசன் தன் இயல்பிற்குத் திரும்பியிருந்தார். நீண்ட நாட்களுக்குப்

பிறகு அவர் தர்பார் மண்டபத்திற்கு வருகை தர இருக்கிறார் என்பதால் மக்கள் திரண்டிருந்தார்கள். மன்னர் முன்பு போல அலங்கார உடைகள் எதையும் அணியவில்லை. துறவியின் உடையில் மிக எளிமையாக தனியாக தர்பார் மண்டபத்திற்கு நடந்து வந்தார்.

மக்கள் தங்களை அறியாமல் கண்ணீர் விட்டார்கள். மண்டியிட்டு அவர் நலம் பெற்றதற்கு கடவுளுக்கு நன்றி சொன்னார்கள். அவர் தன் வாழ்வில் முதன்முறையாக மக்கள் தன்மீது இத்தனை அக்கறையும் அன்பும் கொண்டிருப்பதைக் கண்டார். சிம்மாசனத்தை விலக்கி தரையில் அமர்ந்துகொண்டார். ஒரு வார்த்தைகூட பேசவில்லை. கைகூப்பியபடியே இருந்தார். பிறகு எழுந்து அரண்மனையை விட்டு வெளியேறிச் செல்லத் துவங்கினார்.

# புனிதப்பூனை

பிறந்ததில் இருந்து தீவிர மதப்பற்று கொண்ட அந்தப் பூனைக் மிக கெடுபிடியான ஒழுங்கு நட வடிக்கை கொண்டிருந்தது. அன்றாடம் மதநூல்களைப் படிப்பது. வழிபடுவது. கடவுள் பற்றிய ஞான உபதேசங் களைச் செவிமடுப்பது. தியானம் செய்வது என்று அந்தப் பூனை கடவுளின் விரலை இறுக்கமாகப் பிடித்துக்கொண்டுவிட்டது போன்ற புனிதபிம்பமாகி யிருந்தது.

மற்றப் பூனைகள் இதனால் அதைக் கண்டதும் சேவித்துக்கொண் டன. சில நேரங்களில் இந்தப் பூனை மற்றப் பூனைகளுக்கு கதிமோட்சம் தரும் மார்க்கம் பற்றி நீண்ட உரையை நிகழ்த்தியது. இப்படியாக அந்தப் புனிதப்பூனையின் புகழ் ஊரெங்கும் பரவி யிருந்தது.

மீன்சந்தையின் அருகில் ஒளிந்து வாழும் எலியொன்று ஒரு நாள் புனிதப்பூனையின் பிரசங்கத்திற்குச் சென்றிருந்தது. கொழுத்த எலியைக் கண்டதும் பூனைக்கு அதைப் பிடித்துத் தின்ன வேண்டும் என்ற ஆசை உண்டானது. என்ன சொல்லி அதைப் பிடித்துத் தின்பது என்பதற்கான காரணங்களை அது தேடத்துவங்கியது. ஒரு குற்றச்சாட்டு கிடைத்தால் போதும் உடனே தண்டித்துவிடலாம் என்றபடியே அது கேள்வி கேட்கத் துவங்கியது.

முதலில் எலி நாள் தவறாமல் அது மதநூல்களைப் படிக்கிறதா என்று கேட்டது. பழக்கடை எலியோ தான் புனித நூல்களில் பதினெட்டை ருசித்துத் தின்றிருப்பதாகச் சொன்னது.

உடனே பூனை 'நாள் தவறாமல் தியானம் செய்கிறாயா' என்று கேட்டது. உடனே எலி 'ஒவ்வொரு நாளும் கடவுள் என்ற ஒற்றை வார்த்தையை மனதில் எண்ணி ஆழ்ந்து தியானிப்பதால் தனக்கு மனநிறைவு கிடைக்கிறது' என்றது.

பிடி கொடுக்காமல் நழுவுகிறதே என்றபடியே பூனை 'விரதம் உப வாசங்களை தவறாமல் கடைப்பிடிக்கிறாயா' என்று கேட்டது.

உடனே எலி 'மீன்வரத்து இல்லாத நாட்களில் அது ஒன்றுதானே வழி' என்றது.

புனிதர்களைப் போல இந்த எலியும் பேசுகிறதே என்றபடியே ஆத்திர மான பூனை முடிவில் கேட்டது.

'நீ எலி தானே?'

எலி தலையசைத்து 'அதில் என்ன சந்தேகம்' என்றது.

உடனே பூனை 'உன்னைக் கொல்வதற்கு இந்த ஒரு காரணம் போதுமே' என்றபடியே எலி மீது பாய்ந்து தின்னத் துவங்கியது.

# ரப்பர் பந்து

சிஎல்பி பள்ளியின் மைதானத்தில் தனது பனிரெண்டு வயதில் தொலைத்த பந்தைத் தேடி அறுபத்தி ஏழாவது வயதில் ஊருக்குச் சென்றார் நாராயணன்.

அதைப் பற்றி யாரிடமும் சொல்லவில்லை என்றபோதும் மனது அந்தப் பந்தை எப்படியாவது கண்டுபிடித்துவிட வேண்டும் என்பதில் அக்கறையாக இருந்தது. அந்தப் பந்தை அவர் அடித்தபோது மாலை நான்கு மணியிருக்கும். ரப்பர் பந்து பறந்து வேப்பமரத்தின் பின்னால் போய் விழுந்தது. பின்பு அது எவர் கண்ணிலும் படவேயில்லை.

என்னவாகியிருக்கும்.

யாராவது பந்தை எடுத்திருப்பார்கள். அல்லது அருகாமை கிணற்றினுள் விழுந்து கிடந்திருக்கக் கூடும். மரக்கிளையில் சிக்கி நின்றிருக்கவும் சாத்தியமுண்டு. அல்லது வானில் இருந்து அரூபத்தின் கை ஒன்று அந்தப் பந்தைப் பறித்து தனதாக்கிக்கொண்டிருக்க வேண்டும்

இந்த நான்கில் அரூபத்தின் கையைத்தான் அவர் அதிகம் நம்பினார்.

மைதானத்தில் தன்னுடைய பந்தைத் தொலைக்காத சிறுவர்கள் யாராவது உலகில் இருக்கிறார்களா என்ன?

அவர் தொலைத்த பந்தின் நிறம், அதில் ஒட்டியிருந்த தூசி வரை யாவும் நினைவில் அப்படியே இருந்தது. சிஎல்பி மைதானத்தில் புழுதி பறந்து கொண்டிருந்தது. அன்று தன்னோடு விளையாடிக் கொண்டிருந்தவர்களில் எவரையும் இன்றுவரை திரும்ப சந்திக்கவேயில்லை.

மைதானம் காலியாகக் கிடந்தது. முன்பு பார்த்த மரங்கள் இல்லை. கிணறுகூட மூடப்பட்டு அந்த இடத்தில் கழிப்பறைக் கட்டிடம் ஒன்றிருந்தது.

மைதானத்தின் வெற்றிடம் விளையாட்டினை நினைவுபடுத்தியது.

அவர் பந்து விளையாட்டிலிருந்து விடுபட்டு நாற்பது வருடங்களுக்கும் மேலாகியிருந்தது.

திடீரெனக் காற்றில் கைவீசி ஒரு பந்தை அடித்தார் அது காற்றிலே ஓடி மறைந்தது.

*நீண்ட பெருமூச்சின் நடுவே தூரத்துக் காட்சியொன்றைப் பார்த்தார்.*

*ஊதா நிற யூனிபார்ம் அணிந்த யாரோ ஒரு சிறுவன் தொலைந்த பந்தைத் தேடிக்கொண்டிருந்தான்.*

*மிக ஆறுதலாக இருந்தது. அவர் சந்தோஷத்துடன் வீடு திரும்பத் துவங்கினார்.*

# ஆல்பெர் காம்யூவிற்கான சிகரெட்

என் இருபத்திமூன்றாவது வயதில் ஆல்பெர் காம்யூ வுடன் சேர்ந்து புகைக்க வேண்டும் என்பதற்காக தினம் ஒரு சிகரெட்டை வாங்கி வரத் துவங்கினேன். படித்து வேலை தேடிக்கொண்டிருந்த நாட்கள் அவை.

புத்தகமும் தேநீரும் சிகரெட்டும் தனிமையும் கூட இருந்தன. வீடு அந்நியமாகியிருந்தது. நண்பர்களிடம் பேசுவது கூட கூச்சம் தருவதாக மாறியிருந்தது. சிகரெட் மட்டுமே துணை.

அந்த நாட்களில் நான் மிகத் தனியனாக இருந்தேன். அந்தக் கோபம் என் அறையில் வெளியில் வானில் உலவும் சூரியன் மீது குவிந்திருந்தது. சூரியனை நான் வெறுத்தேன். அதன் திமிர் மற்றும் சுதந்திரம் என்னை வெறுப்பேற்றியது.

உண்மையில் நான் காம்யூவோடு ஸ்நேகம் கொள்வ தற்கு சூரியனே காரணமாக இருந்தது. அறையின் தனிமையில் நானும் மரணத்தை ஒரு மாபெரும் அபத்தமாக உணர்ந்தேன். அந்த நிமிசங்களில் நான் தான் மெர்சோ என்றும் என் கதையை காம்யூ ரகசியமாக எழுதியிருப்ப தாகவும் உணர்ந்தேன்.

காம்யூ மிக அமைதியான மனிதர். அவர் புகைப்படத்தில் சிகரெட் பிடித்தபடியே என்னைப் பார்த்துக் கொண்டிருந்தார். அணையாத சிகரெட் அது. அந்தப் புகை என் அறைக்குள்ளாக சுற்றியபடியே வந்தது.

எனக்கு காம்யூ மிகத் தேவையாக இருந்தார். சாவு காமம் மற்றும் அன்றாட வாழ்வின் அபத்தம் இந்த மூன்றையும் பற்றி நிறைய நான் யோசிக்க காம்யூவே காரணமாக இருந்தார். நான் சில நேரம் குடிவெறியில் காம்யூவோடு சண்டையிட்டேன். காம்யூ நீங்கள் என்னைக் குற்றவுணர்ச்சி கொள்ள வைக்கிறீர்கள் என்று கத்தினேன்.

ஒவ்வொரு நாளும் அவருக்காக ஒரு சிகரெட் வாங்கி வரத் துவங் கினேன். அதை அறையின் மேஜையில் போட்டுவிட்டு அவர் விரும்பிய நாள் அதில் ஒன்றை எடுத்துப் புகைக்கக்கூடும் என்று காத்திருந்தேன்.

ஒரு இரவு சாலையோரக் கடையொன்றில் சாப்பிட்டு திரும்பும் போது ஒரு சிறுமி முதிய ஆண் ஒருவனின் காலைப்பிடித்து கெஞ்சிக் கொண்டிருப்பதைக் கண்டேன். யார்அவள் எதற்காக கெஞ்சுகிறாள் என்று தெரியவில்லை. ஆனால் அந்தப் பெண்ணின் கண்களில் இருந்த துக்கம் என்னை நடுங்கச் செய்தது. நான் அந்த ஆணை கொல்ல விரும்பினேன். அவன் சிறுமியை உதைத்துத் தள்ளிவிட்டு பைக்கை எடுத்துச் சென்றான். நான் சிறுமியின் அருகில் சென்ற போது அவள் தாங்கமுடியாத ஆத்திரத்துடன் என்னைத் தாக்கத் துவங்கினாள். அவளிடம் எப்படி நடந்துகொள்வது என்று எனக்குத் தெரியவில்லை.

நான் இதற்காக காம்யூவைத் தேடினேன். அன்றிரவு என் அறையில் நான் காம்யூவோடு பலத்த விவாதம் செய்தேன். காம்யூ மனிதனின் ஒரே பிரச்சினை அவனது இருப்புதான் என்று மறுபடி மறுபடி சொல்லிக் கொண்டிருந்தார்.

நான் முதன்முறையாக பயங்கொள்ளத் துவங்கினேன். அதன்பிறகு காம்யூவை மறந்து ஒரு பெண்ணைக் காதலிக்கத் துவங்கினேன். சில நேரம் அவளோடு பேசிக்கொண்டிருக்கும்போது காம்யூவின் நினைவு பீறிட்டபடியே இருக்கும். அதைக் காட்டிக்கொள்ள மாட்டேன்.

காதலிக்கும்போது தான் மனிதன் அதிகம் பயம் கொள்கிறான் என்ற பரிகாசமான காம்யூவின் குரல் எனக்குள் உரத்துக் கேட்கும்

அதேபெண்ணை திருமணம் செய்துகொண்டு அரசு ஊழியனாக உத்தியோகம் தேடிக்கொண்டு காம்யூவை மறந்து போனேன். பின்பு ஒரு நாள் அலுவலகம் விட்டு பேருந்து நிறுத்தத்திற்கு நடந்து வரும்போது காம்யூ நின்றுகொண்டிருப்பதைக் கண்டேன். அவரிடம் பேச வேண்டும் போலிருந்தது. ஆனால் பேசினால் என் இயல்புவாழ்க்கை குலைந்துவிடும் என்று பயமாக இருந்தது. நான் காம்யூவினைத் தெரியாதவன் போல நடந்து சென்றேன்.

அவர் என்னை நோக்கி 'தன்னைத் தானே ஏமாற்றிக்கொள்வது பெரிய கலை' என்று சப்தமாகச் சொன்னார்.

அன்றிரவு காம்யூவிற்காக ஒரு சிகரெட் வாங்கினேன். அதை என்றைக்கும் போலவே மேஜையின் இழுப்பறையில் போட்டு வைத்தேன்.

காம்யூ என்னைப் பரிகசித்தது எனக்கு வலித்தது. ஆனாலும் என்னால் அழ முடியாது. காரணம் மெர்சோ ஒருபோதும் அழுவதில்லை.

# சிறகுள்ள பொறியாளன்

வான் உலகில் தன் அழகால் எந்தப் பெண்ணையும் மயக்கிவிடும் தேவதூதன் ஒருவன் இருந்தான். அவனைத் தண்டிப்பதற்காக ஆறு மாத காலம் அவன் பூமியில் மென்பொருள் பொறியாளனாக வேலை செய்யும்படி கடவுள் கட்டளையிட்டார். அதன் படியே தேவதூதன் பழைய மகாபலிபுரம் சாலையில் உள்ள மென்பொருள் நிறுவனம் ஒன்றில் வேலைக்குச் சேர்த்துக்கொள்ளப்பட்டான்.

முதல்நாள் அவன் வானில் பறந்துவந்து அலுவலக வாசலில் இறங்கினான். கழுகின் சிறகு போன்ற வலிமை மிக்க றெக்கைகளும், அலங்காரமான தோற்றமும், அடர்ந்து தொங்கும் கூந்தலுமாக அவன் அலுவலகத் திற்கு வந்தபோது அவன் யாருடைய ப்ராஜெக்டில் இருக்கிறான் என்று பலரும் விசாரித்தார்கள்.

அவன் இன்றைக்குத்தான் புதிதாக வேலைக்குச் சேர்ந்திருப்பதாகச் சொன்னான்..அவனை லிசி தாமஸின் கீழே வேலை செய்யும்படியாக அனுப்பி வைத் தார்கள். லிசி தாமஸிற்கு முப்பத்திரெண்டு வயதாகி யிருந்தது. இரண்டு காதல் தோல்விகள் காரணமாக அவள் திருமணம் செய்துகொள்ளாமல் தனியாக வசித்து வந்தாள். பிரமாதமான அழகி. தேவதூதனின் அலங்காரத் தோற்றத்தை ஒரு நிமிசம் ரசித்து விட்டு அவனது அக்கறை முழுமையாக வேலையில் இருக்க வேண்டும் என்று அதிகாரத் தொனியில் கட்டளையிட்டாள் லிசி. தேவதூதன் லிசியை ரசித்தபடியே அவளது கட்டளைக்குக் கீழ்ப்படிவதாகச் சொன்னான்.

அவனது சிறகுகள் கொண்ட தோற்றத்தை ஒரு சிலர் முதல்நாள் வியப்போடு பார்த்தார்கள். மறுநாளில் அது பழக்கமாகிப் போயிருந்தது. அவன் மேன்ஷன் அறை ஒன்றில் தங்கிக் கொண்டு தினமும் அலு வலகத்திற்குப் பறந்து வரத் துவங்கினான்.

அவன் ஒரு தேவதூதன் என்பதாலோ, அவன் மற்றவர்களை விட வானில் பறந்து வருகிறான் என்பதாலோ ஒரு பெண்கூட அவனிடம் மயங்கவே இல்லை. அது ஏன் என்று தேவதூதனுக்குப் புரியவேயில்லை.

அவன் பணி செய்யும் இடத்தில் நாற்பது பெண்களிருந்தார்கள்.

அவர்களில் ஒருவரும் தேவதூதனைக் காதலிக்கவில்லை. மாறாக அவனிடம் தங்களது வேலைகளைத் தள்ளினார்கள், அவன் பகலிரவாக வேலை செய்து களைத்துப் போனான். தண்டனை இவ்வளவு கடுமை யாக இருக்கும் என்று அவன் நினைக்கவேயில்லை. அலுவலகத்தில் எப்போதும் சிடுசிடுப்புடன் இருக்கத் துவங்கினான். அவனை பெண்கள் பரிகாசம் செய்வது அவன் காதில் அடிக்கடி விழுந்தது.

குடிப்பது அவனுக்கு தற்காலிக சந்தோஷம் தரும் என்று அவனை பியர் குடிக்க வைத்தார்கள் நண்பர்கள். இரவு வேலை முடித்தபிறகு விடியும்வரை அவன் பியர் குடித்தான். சிறகுகள் பெரும்தொந்தரவாக இருப்பது போல உணரத் துவங்கினான். பூமியில் உள்ள பெண்களை புரிந்து கொள்ளவே முடியவில்லை என்று புலம்பினான்.

ஒற்றை ஆளாக வானில் பறந்து வருவது எரிச்சல் தருவதாக இருந்தது. ஆகவே அவன் ஆட்டோவில் போய்வரத் துவங்கினான். சிறகுள்ள ஒரு மனிதன் ஆட்டோவில் வந்து போவதை ஒரு ஆட்டோ டிரைவர் கூட வியப்பாகப் பார்க்கவேயில்லை.

பூமியில் எதுவும் விந்தையில்லை என்பது சில வாரங்களிலே அவனுக்கு நன்றாகப் புரிந்து போனது. இரண்டு மாதங்களில் அவன் வேலையைக் கற்றுக் கொள்ளத் துவங்கிவிட்டான். விடுமுறை நாட்களில் நண்பர்களுடன் சேர்ந்து நடனமாடவும், மதுவிருந்திற்குச் செல்வதற்கும் பழகியிருந்தான். புதிதாக வேலைக்கு வந்த பெண்களில் ஒருத்தி ஒரு நாள் மதிய உணவின் போது அவனைக் காதலிப்பதாகச் சொன்னாள். அவனால் நம்ப முடியவில்லை. அன்றிரவே அவர்கள் காதலைக் கொண்டாட பெரிய விருந்து கொடுத்தார்கள்.

அடுத்த நாளில் இருந்து அந்தப் பெண்ணோடு ஒன்றாக வேலைக்குப் போய்வரத் துவங்கினான். ஒன்றாக கடற்கரையில் சுற்றவும் சினிமா பார்க்கவும் ஆரம்பித்தான். வேலையில் மற்றவர்களுடன் போட்டியிட் டான். நீலாங்கரையில் வீடு வாங்குவதைப் பற்றி யோசிக்க ஆரம் பித்தான். அந்தப் பெண் 'இரண்டு வருடங்கள் சேர்ந்து வாழ்ந்துவிட்டு அப்புறம் திருமணம் செய்து கொள்ளலாம்' என்றாள். அது அவனுக் கும் பிடித்திருந்தது.

முடிவில் ஒருநாள் கடவுள் அவனை அழைத்து 'தண்டனை முடிந்து விட்டது. வான் உலகம் புறப்பட்டு வா' என்றார்.

தனக்கு நேரமில்லை. அலுவலகம் போகவேண்டும். காதலியை சந்திக்க வேண்டும். வீட்டுக்கடனுக்காக வங்கி அதிகாரியைச் சந்திக்க வேண்டும். ஆகவே என்றாவது ஓய்வு கிடைத்தால் வானுலகம் வருகிறேன் என்றபடியே அவன் அலுவலகம் கிளம்பிப் போனான்.

அன்றைக்குத் தான் கடவுளுக்கு மனிதர்களை நினைத்து முதன் முறையாக பயம் தோன்ற ஆரம்பித்தது.

# உறுமீன்

—— ல ❀ ல ——

தன்னால் ஒரு தேசத்தின் தலைவிதி மாறப்போகிறது என்று அந்த மீனிற்குத் தெரியாது. அன்று வெள்ளிக் கிழமை. வடகிழக்கை நோக்கி அந்த மீன் நதியில் அந்த மீன் நீந்திக்கொண்டிருந்தது. நதிக்கரை கிராமம் ஒன்றிலிருந்த மீனவர்கள் நாட்டுபடகில் மீன்பிடிப்பிற்காக கிளம்பிய போது அந்த மீன் வெகுதொலைவில் நீந்தி வந்து கொண்டிருந்தது. நதியில் வேகமில்லை.

பகல் வெளிச்சம் தண்ணீரில் ஒளிர்ந்துகொண்டிருந்தபோது அந்த மீன் ஒருமுறை நீரின் மேல்மட்டத்திற்கு வந்து துள்ளியது. மீனவன் கண்ணில் ஒரு நிமிசம் சந்தோஷம் மின்னி மறைந்தது. மீண்டும் அது கிழக்கு நோக்கியே போய்க்கொண்டிருந்தது.

நிபாசன் என்பவன் வலையில் அந்த மீன் விழுந்த போது அது துள்ளியது. அவன் மீன்களை அள்ளி படகில் போட்டான். ஆகாசத்தின் அகன்ற ப்ரகாசமும் உக்கிரமான காற்றையும் அந்த மீன் அறிந்தது. மீனவன் நாட்டுபடகை கரையை நோக்கித் திருப்பும்வரை அது படகிலே கிடந்து துள்ளியது.

கரையேறும் போது வீரர்கள் தயாராகக் காத்திருந்தார்கள். அரண் மனைக்குக் கொண்டுபோவதற்கு உகந்த மீன்கள் யாருடைய படகில் இருக்கிறது என்று வரிசையாக சோதனை செய்தார்கள். அதில் நிபாசன் படகில் இருந்த மீன்கள் மொத்தமாக அள்ளிக்கொண்டு போகப்பட்டன. அந்த மீன் முதன்முறையாக ஆற்றிலிருந்து வெளியேறி சாலைகளில் பயணம் செய்யத் துவங்கியது. நீண்ட பயணத்தின் பிறகு அது நாட்டை ஆளும் அரசனின் தங்கமாளிகைக்குள் நுழைந்தது.

காபூலில் இருந்து வந்த சமையற்காரன் மீன்களை தனித்தனியாகப் பிரித்து சமையலுக்கு உத்தரவிட்டுக்கொண்டிருந்தான். சுல்தானுக்காகப் பரிமாறப்படும் நான்கு விசேஷ மீன்களில் ஒன்றாக அந்த மீனும் தேர்வு செய்யப்பட்டது.

தனியே அந்த நான்கு மீன்களையும் பெர்சிய சமையல் ஆள் ஒருவன் சமைக்கத் துவங்கினான். தர்பார் மண்டபத்தில் படைமுகாம்களை தெற்கு நோக்கி புறப்படும்படியாக ஆணையிட்டுவிட்டு சுல்தான் மதிய

உணவிற்காக மாளிகை திரும்பிக்கொண்டிருந்தார்.

நான்கு மீன்களும் தங்கக் கிண்ணத்தில் வைத்து வாசனை பரிமளிக்க தனியே மாமன்னரின் உணவிற்காக மேஜைக்குக் கொண்டுசெல்லப் பட்டது.

மன்னரின் சகோதரி மகனும் வாரிசு உரிமை மறுக்கப்பட்டவனுமான வாசிம் மன்னரைப் பார்ப்பதற்காக இரண்டு நாட்களாக காத்துக்கிடந்தான். சுல்தான் அவனைக் காண்பதற்கு விரும்பவேயில்லை. அவன் உணவு வேளையில் அவரை சந்தித்துவிட முடியும் என்று காத்துக் கொண்டிருந்தான். சுல்தானிடம் வாசிம் வந்திருப்பதாக தகவல் தெரிவிக்கப்பட்டது. அவர் ஆத்திரத்துடன் 'அந்த சைத்தானை வெளியே அனுப்பு' என்று கூச்சலிட்டார். வாசிம் உடனே அங்கிருந்து துரத்தப்பட்டான்.

சுல்தான் உணவருந்தத் தயாரானபோது உணவைப் பரிசோதிப்பவனும் வாசிமின் விசுவாசியுமான அக்ரம் தங்கக் கிண்ணத்தில் இருந்த மீன்களில் இரண்டை தேர்வு செய்து தட்டில் வைத்தான். அதில் அந்த மீனும் ஒன்றாக இருந்தது. சில நிமிட யோசனைக்குப் பிறகு அவன் தன்னிடமிருந்த விஷக்குப்பியை எடுத்து மீனின் வாயிற்குள் கொட்டி அது வெளியே தெரியாமல் எலுமிச்சைச் சாற்றைப் பிழிந்துவிட்டு துருவிய வெங்காயத்தால் அலங்காரம் செய்தான்.

சுல்தான் சாப்பிட அமர்ந்தார். மானின் மாமிசத்தையும் முயல்களையும் ருசித்துசாப்பிட்டு அவர் கிண்ணத்தில் இருந்த மீனை எடுத்து ருசிக்க ஆரம்பித்தார். அவர் சாப்பிட்டு முடியும் வரை பரிசோதகன் துடிக்கும் இதயத்துடன் பார்த்துக்கொண்டிருந்தான்.

சுல்தான் மீனின் ஒற்றை முள்ளை உறிஞ்சி வெளியே போட்டுவிட்டு பழச்சாறு கொஞ்சம் குடித்துக்கொண்டார். மீனின் ருசி அலாதியாக இருப்பதாகத் தோன்றியது. ஆனால் சுல்தான் அதைப் பாராட்டவில்லை.

மதிய உணவிற்குப் பிறகு அவர் உறங்கச் செல்லும்வரை பரிசோதகன் சமையல் அறையிலே இருந்தான். பின்மதியத்தில் மன்னருக்கு வயிற்றுப் போக்கு கண்டது. இரவிற்குள் அவர் மரணமடைந்தார். ஆற்றில் பிடிபட்ட மீன்களில் ஒன்று வயிற்றுப் போக்கிற்கு காரணமாக அமைந்தது என்று அரண்மனை வைத்தியர் உறுதி செய்தார்.

மன்னரின் குடும்பமே அந்த மீனை சபித்தது. தன் வாழ்வின் விதியைப் புரிந்துகொள்ள முடியாமல் மீன் வெறும் முள்ளாக காகம் ஒன்றின் காலில் சிக்கி பறந்து சென்றுகொண்டிருந்தது.

# ஆப்தன்

—— ஐ ❀ ஞ ——

அந்த நகரில் எவர் வீட்டிலிருந்தும் எதையும் திருடிக் கொள்ளும் உரிமை ஆப்தனுக்குக் கொடுக்கப்பட்டிருந்தது. அவனைக் கண்டு எல்லோரும் பயந்தார்கள். நாற்பத் தைந்து வயதிருக்கும். குள்ளமான உருவம். கதர் வேஷ்டி சட்டை அணிந்திருப்பான்.

அவன் நகரின் தெற்கில் இருந்த தனிவீடு ஒன்றில் குடியிருந்தான். அவனுக்கு இரண்டு மகள்களிருந்தார்கள். ஆப்தனுக்கு காரோட்ட தெரியாது. பள்ளியில் படித்ததுமில்லை. ஆனால் ஆங்கிலம் பேசப் பழகியிருந்தான். வீட்டில் மூன்று கார்கள் இருந்தன. அவனது கை விரல் கள் நிறைய மோதிரம் அணிந்திருந்தான். அவனைப் பற்றி எண்ணிக்கையற்ற கதைகள் நகரில் இருந்தன.

ஒரு நாள் பள்ளிக்குச் செல்லும் என் மகளின் சைக் கிளை ஆப்தனின் ஆட்கள் திருடிக்கொண்டு போய் விட்டார்கள் என்பதற்காக அவனைத் தேடிப் போயிருந்தேன். அவன் வீட்டுவாசலில் பத்து பதினைந்து பேர் காத்திருந்தார்கள். அவர்களும் என்னைப் போலவே திருட்டுக் கொடுத்த வர்கள் என்று தெரிந்தது. எவரிடமும் கலக்கமில்லை. என் முறை வந்தபோது ஆப்தன் மிகுந்த அக்கறையுடன் என் மகளின் சைக்கிள் திருடு போனதைப் பற்றி கேட்டு அறிந்துகொண்டான். எனக்கு காபி தந்து குடிக்க வைத்தான்.

பிறகு புன்சிரிப்புடன், எனக்கு அந்த சைக்கிள் மீது உள்ள உரிமையை நிலை நிறுத்திக்கொள்வதற்காக அதைத் திருடினேன். இல்லாவிட்டால் நீங்கள் என்னை வந்து சந்திக்க மாட்டீர்கள் இல்லையா. நாம் எப்படி நண்பர்களாவது' என்று கேட்டான்.

நான் மௌனமாக இருந்தேன். அவன் மிக உரிமையாகச் சொன்னான்,

'முறையாக திருடுவதற்கு உரிமை பெற்ற ஒருவன் தனக்கு சொந்தமான பொருளை எப்போதும் எடுத்துக்கொள்ளலாம். அது சைக்கிள், பைக் மட்டுமில்லை. உங்கள் மனைவி பிள்ளைகள் உள்ளிட்ட யாவும் எனக்கு உரிமையானது. அவற்றைத் திருடும் நாளை இன்னமும் நான் முடிவு செய்யவில்லை' என்றபடியே என் மகளின் சைக்கிளைத் திருப்பித் தரும்படியாக உத்தரவிட்டான்.

எனக்கு பயமாக இருந்தது. நான் சைக்கிளை வாங்கச் சென்றபோது அங்கே நூற்றுக்கணக்கான பைக்குகள் சைக்கிள்கள், கார்கள் நின்றிருந்தன. நான் என் மகளின் சைக்கிளைத் தேடி எடுத்துத் திரும்பும்போது ஆப்தன் சொன்னான்,

'நாம் நண்பர்களாக இருப்போம் புரிந்துகொள்ளாமல் நடந்து என்னைத் திருடனாக்குவது உங்கள் கைகளில் தானிருக்கிறது.'

இப்போது என்மீதுதான் எனக்கு பயமாக இருக்கிறது.

# கைமூடி திறந்து

பள்ளிவகுப்பறைக்கு ஒரு மதிய நேரம் மாயவித்தைக் காரன் ஒருவன் தன்மேஜிக் திறமைகளைக் காட்ட வந்திருந்தான். சிறார்கள் உற்சாக மடைந்தார்கள்.

பார்த்துக்கொண்டிருந்தபோதே ஒரு ஆப்பிளை காற்றில் மறைய வைத்துக் காட்டினான் மாயவித்தைக் காரன்.

ஒரு குழந்தை சொன்னது:

'கண்ணை மூடிக்கொண்டால் போதும் ஆப்பிள் என்ன உலகமே மறைந்துவிடுமே இதில் என்ன விந்தை யிருக்கிறது?'

கைக்குட்டையிலிருந்து முயல் வரவழைத்தான் மாயவித்தைக்காரன். குழந்தை சொன்னது 'கைநிழலால் நானும் முயல் வரவைக்க முடியும். இது ஆச்சரியமில்லை' என்றது.

நாணயத்தைச் சுண்டிவிட்டு சாக்லெட்டை உரு வாக்கிக் காட்டினான் வித்தைக்காரன். குழந்தை சொன் னது : 'நாணயம் தந்தால் சாக்லெட் கிடைப்பது தினசரி நடப்பது தானே. இதில் என்ன விந்தை?'

தண்ணீரை அந்தரத்தில் மிதக்க வைத்தான் மாயக்காரன். 'மழை அதைவிட அதிசயம்தானே' என்றது குழந்தை.

காற்றில் காகிதக்கப்பல் விட்டான் வித்தைக்காரன். 'காகிதம் தானே பறக்கக்கூடியதுதானே' என்றது குழந்தை.

தன்னால் அந்த வகுப்பறையை மறையச் செய்துவிட முடியும் என்றான் மாயக்காரன். குழந்தை சொன்னது 'வீடு திரும்பியதும் வகுப்பறை மனதிலிருந்து தானே மறைந்துதானே விடுகிறது.'

'உனக்கு விருப்பமான விந்தையைக் கேள், செய்கிறேன்' என்றான் மாயவித்தைக்காரன்.

குழந்தை ஒரு பூவை நீட்டிச் சொன்னது,

'பூவிலிருந்து வாசனையை தனியே பிரித்து எடு, கொடு போதும்' என்றது.

குழந்தைகளை ஏமாற்றுவது எளிதில்லை என்று வெளியேறிப் போனான் மாயவித்தைக்காரன்.

# மழை எறும்பு

பாடலிபுத்திரத்தில் வசித்த அஜாதா என்ற வயதான பிக்கு ஒரு மழை இரவு தன் அறையில் பதட்டத்துடன் அலைந்துகொண்டிருக்கும் எறும்பை ஒன்று பார்த்தார். அது எதைத் தேடி அலைகிறது என்று தெரியாமல் அங்குமிங்கும் ஏறுவதும் இறங்குவதுமாக இருந்தது. எறும்புகள் நிம்மதியற்றவை. அவை பதட்டமும் பயமு மாக அலைந்துகொண்டிருக் கின்றன. அதில் ஒரு எறும்பையாவது தான் சாந்தப்படுத்தி தன் விருப்பப்படி வளர்த்து துறவியாக்குவது என்று தீர்மானித்தார்.

அதற்காக அவர் தன் மடாலயத்திற்குள் வரும் எறும்புகளில் இருந்து ஒன்றைத் தேர்வு செய்வது என்று முடிவு செய்துகொண்டார். மடாலயத் தின் சமையல் அறைகளில் எப்போதும் எறும்புகள் அலைவதைப் பார்த்திருக்கிறார். அதிலிருந்து ஒரு எறும்பை தான் தேர்வு செய்வது என்று முடிவு செய்து கொண்டபடியே பிக்கு அதிகாலையில் சமையல் அறைக்குள் சென்றார்.

ஒரு சாரை எறும்புகள் மிக வேகமாக ஒன்றையொன்று முண்டியடித்துக் கொண்டு கீழே போவதும் மேலே வருவதுமாக இருந்தது. அதன் அருகில் உட்கார்ந்தபடியே எறும்புகளை உற்று நோக்கத் துவங்கினார். எல்லா எறும்புகளும் ஒன்று போல தெரிந்தன. அவை சிறிய வெல்லத் துணுக்கு ஒன்றுக்காக சண்டையிட்டுக்கொண்டிருந்தன. அதன் போராட்டமும் பேராசையும் பிக்குவிற்கு வேடிக்கையாக இருந்தது.

கூட்டமாக வசிப்பதுதான் எறும்புகளின் முக்கிய பிரச்சினை. அதைத் தனிமைப்படுத்தி அதற்கு உரிய ஆகாரம் தந்தால் இந்தப் பதற்றம் குறைந்துவிடும் என்று தோன்றியது. நீண்ட நேரம் எறும்புகளை அவ தானித்துக் கொண்டிருந்துவிட்டு முடிவில் கால் வளைந்து போயிருந்த சிவப்பு எறும்பு ஒன்றை அவர் தேர்வு செய்தார். அதை தன் உள்ளங்கையில் ஏந்தி தன் அறைக்குக் கொண்டு சென்றார்.

தன் சீடர்களை அழைத்து இனி அந்த எறும்பும் அவர்களைப் போல ஒரு சீடரே என்று அறிமுகப்படுத்தி அதற்கு உபாலா என்று பெயரும் வைத்தார்.

எறும்பைப் பாதுகாப்பாகக் கவனித்துக்கொள்வதற்கு இரண்டு சீடர்களையும் நியமித்தார். பிறகு தன்னால் முடிந்த ஒரு நற்காரியம் ஒன்றை இன்று துவங்கியிருப்பதாக புத்தருக்கு நன்றி தெரிவித்தார். இது நடந்த சில மணி நேரங்களில் சீடன் ஒருவன் அஜாதாவிடம் வந்து எறும்பு காணாமல் போய்விட்டது என்று சொன்னான். அவரால் அந்தத் துயரைத் தாங்க முடியவேயில்லை. தேடிக்கண்டுபிடியுங்கள் என்று உத்தரவிட்டார்.

சீடர்கள் பகல் எல்லாம் அந்த எறும்பைத் தேடினார்கள். முடிவில் அது ஒரு அரசிலை மீது ஊர்ந்துகொண்டிருப்பதைக் கண்டுபிடித்துக் கொண்டுவந்தான் ஒரு சீடன். பிக்கு அந்த எறும்பு பசியோடு இருந்திருக்க வேண்டும் என்று சொல்லி இனிப்பும் பால்திரட்டும் கொண்டு வரச் சொன்னார். அடுத்த நிமிடமே ஒரு தட்டில் அவை கொண்டுவந்து வைக்கப்பட்டன. எறும்பை பிக்கு அந்தத் தட்டில் விட்ட படியே 'உன்னால் வேண்டிய மட்டும் சாப்பிடு. நன்றாக உறங்கு. விடிந்த பிறகு நமது அறவுரைகளை வைத்துக் கொள்வோம்' என்றார்.

எறும்பு அவசரமாக அந்த இனிப்பின் மீது ஏறிச் சென்றது. வேகவேகமாக சுற்றிஅலைந்தது. பிக்கு சிரித்தபடியே 'அதிகம் கிடைத்துவிடும்போது எறும்புகள் திகைத்துவிடுகின்றன பாவம்' என்று வருத்தம் தெரிவித்தார். எறும்போ அந்த இனிப்பில் எதையும் தின்னவில்லை. அது அவசரமாக தட்டிலிருந்து இறங்கி வெளியேறத் துவங்கியது. பிக்கு அதன் பின்னாடியே சென்றார். அது சுவரில் ஏறியது. இறங்கியது. முடிவற்று அங்குமிங்கும் ஓடியது. அதன் அலைச்சல் தாளமுடியாத பிக்கு 'அதற்குத் தேவை ஓய்வு. உள்ளங்கையில் மூடி அதை உறங்க வையுங்கள்' என்று உத்தர விட்டார்.

ஒரு சீடன் இரவெல்லாம் அதைத் தன் உள்ளங்கையில் வைத்து உறங்க வைத்தான். விடியும்போது அந்த எறும்பு மறுபடியும் அவன் கையிலிருந்து காணாமல் போயிருந்தது. மடாலயமே அந்த எறும்பைத் தேடியது. குளியல் அறையின் ஈரத்தில் அதை மறுபடி கண்டுபிடித்தார்கள். பிக்கு சொன்னார் 'எறும்புகளும்கூட இச்சையைத் துறப்பது எளிதான தில்லை' என்று அந்த எறும்பை தன் கையில் வாங்கிக்கொண்டபடியே, உபாலா வாழ்க்கை அரிதானது. அதை உன் பதற்றத்தால் வீணடித்துவிடாது. மனதை அடக்கப் பழகிக்கொள் என்றார்.

எறும்பு அவர் உள்ளங்கைக்குள்ளாகவே சுற்றிக்கொண்டிருந்தது. பிக்கு அன்று முழுவதும் அந்த எறும்பை தன் கையிலே வைத்திருந்தார். போதனை செய்தார். எறும்பு அவரிடமிருந்து தப்பிக்கவே முயற்சி செய்தது. தன்னால் ஒரு எறும்பைக்கூட நல்வழிப்படுத்த முடியாமல் போகிறதே என்று வருத்தப்பட்டு அதை நகரவிடாமல் அழுத்தி வைத்துக் கொண்டார். எறும்பு அவரைக் கடித்தது. விரல் இடுக்கின் வழியே ஊர்ந்து போக முயன்றது. பிக்கு அதை அனுமதிக்கவேயில்லை.

இரவில் அவர் அந்த எறும்பிற்காக ஒரு பட்டுத்துணியை கொண்டுவந்து அதில் படுக்க வைத்தார். அடுத்த நிமிசம் அது காணாமல் போனது.

இரவெல்லாம் அந்த எறும்பைத் தேடியலைந்து அதைக் கண்டுபிடிக்க முடியவேயில்லை.

மறுநாள் மடாலயமே அந்த எறும்பைத் தேடியது. உபாலா எங்கே போனது என்று அறிய முடியவேயில்லை. பிக்கு மன வருத்தம் கொண்டார். தன்மீது புத்தனின் கருணையில்லை என்று வருந்தினார். எறும்புகளின் மீது கோபப்பட்டார். சீடர்கள் ஏதேதோ எறும்புகளைப் பிடித்து வந்தார்கள். பிக்கு மனம் உடைந்து போனார். மழைக்காலம் வரை அவர் அந்த எறும்பைத் தேடுவதையே தன் பிரதான வேலையாக வைத்திருந்தார்.

மழைக்காலத்தில் அங்கே புத்தரின் சீடரான அனந்தர் வருகை புரிந்தார். அவரிடம் அஜாதா எறும்பைப் பற்றிச் சொல்லி சுய வருத்தம் கொண்டபோது அனந்தர் சிரித்தபடியே சொன்னார்,

'எறும்புகள் எப்போதுமே புத்தனாகத்தானிருக்கின்றன. அவை எந்த போதனைகளுக்காகவும் காத்திருப்பதில்லை. நிகழ்காலத்தை அவை உக்கிரமாகப் பற்றிக்கொள்கின்றன. அவை உயிர் இயக்கத்தில் முழுமையாக வாழ்கின்றன. சாகின்றன. நாம் தான் நினைவுகளைத் தூக்கிக்கொண்டே அலைகிறோம். பதற்றம் கொள்கிறோம்.'

அன்றிலிருந்து தான் அஜாதாவிற்கு மழை எறும்பு என்ற பெயர் உருவானது.

# தூர திருஷ்டி

லடாக் பள்ளத்தாக்கில் விடுமுறை நாட்களைக் கழிப்பதற்காக அமெரிக்காவிலிருந்து வந்து தங்கியிருந்தார் பிரபல தொழில் அதிபர் மைக் ரிச்சர்ட்ஸ். பரபரப்பான அலுவலகப் பணிகள், சந்திப்புகள், பொருளா தாரக் கவலைகள் யாவும் மறந்து அவர் குளிரும், தனிமையு மாக நீளும் இரவுகளையும், பசுமை பீறிடும் ஆள்அரவமற்ற மலைப் பாதையில் நடந்தலையும் பகலுமாக நாட்களை போக்கிக்கொண்டி ருந்தார். அவரிடமிருந்த ஒரே துணை சாடிலைட்போன் மட்டுமே. அது மிக நவீனமான போன் என்பதால் எந்த இடத்திலிருந்தும் அவரால் தேவைப்படுகின்றவரை தொடர்புகொள்ள சாத்தியமானது.

மைக்கின் வருட வருமானம் இரண்டாயிரம் கோடி யைத் தாண்டி வரத்துவங்கியுள்ள சூழலில் அடுத்து தனது மென்பொருள் நிறுவனம் எந்தத் துறையை நோக்கி நகர்வது என்பது குறித்து யோசிப்பதற்காகவே அவர் விடுமுறைக்கு வந்திருந்தார். அவரது கவனம் முழுவதுமே எதிர்காலத்தின் மீதிருந்தது.

லடாக்கின் கிராமப்புறங்களைக் காணும்போது இன்று தான் பயன்படுத்தும் தொழில்நுட்பம் இந்த கிராமங்களுக்கு வந்து சேர்வதற்கே இன்னமும் ஐம்பது வருடங்களுக்கு மேலாகிவிடும் போல தோன்றியது. காரணம் அங்கே இன்னமும் இன்டெர்நெட், டிஜிட்டில் புகைப்படக் கருவிகள், மென்பொருள்கள் எதுவும் அறிமுகமாகவேயில்லை. விவசாயக் கருவிகள்கூட நூறு வருச பழமையானவையாகவே இருந்தன.

தண்ணீரை இன்னமும் மரவாளிகளில்தான் தூக்கிக்கொண்டு போகிறார்கள். கிணறுகளில் மின்சார பம்புகள் வரவில்லை. ஏன் இந்த மக்கள் இவ்வளவு பின்தங்கியிருக்கிறார்கள் என்ற எண்ணம் அவருக்கு இருந்துகொண்டேயிருந்தது. அவர் தங்கியிருந்த கோடை விடுதியிலிருந்து கிழக்காகச் செல்லும் பாதை ஒரு பள்ளத்தாக்கை நோக்கிச் செல்கிறது. அந்தப் பள்ளத்தாக்கின் சிறகு போன்ற ஒரு பாறையின் மீது பௌத்த மடாலயம் இருந்தது. அங்கே நூற்றுக்கும் மேற்பட்ட துறவிகள் தங்கியிருப்பதாகச் சொன்னார்கள். ஆனால் அந்த மடாலயத்திலிருந்து சிறுசப்தம்கூட வந்ததேயில்லை. மௌனம்

பனி போல நிலவெளி எங்கும் உறைந்து போயிருந்தது.

ஒருநாள் நடைப்பயிற்சியின் போது சிவப்பும் ஊதாவுமான மிகப் பெரிய வண்ணத்துப்பூச்சியொன்றை மைக் கண்டார். அவ்வளவு பெரிய வண்ணத்துப்பூச்சியை அவர் முதன்முறையாக அன்று தான் பார்க்கிறார். அந்த வண்ணத்துப்பூச்சியின் பின்னாடியே செல்லத் துவங்கினார். அது காற்றில் மிக மெதுவாகச் சென்று கொண்டிருந்தது. நீண்ட நடைக்குப் பிறகு அந்த வண்ணத்துப்பூச்சி ஒரு செடியினுள் சென்று மறைந்து போனது. குனிந்து தேடியபோது அங்கே வண்ணத்துப்பூச்சியை காண வில்லை. ஏமாற்றத்துடன் அறைக்குத் திரும்ப முயன்றபோது வழி தெரியாமல் அவர் தடுமாறத் துவங்கினார். அவரது சாடிலைட் போனில் தொடர்பு கொண்டு வழி கேட்க முனைந்தார். ஆச்சரியம் அந்த போன் வேலை செய்யவில்லை. தொடர்ந்து முயன்ற போதும் அது வேலை செய்யவேயில்லை.

பகல் முழுவதும் பள்ளத்தாக்கில் அலைந்தபடியே இருந்தார். மாலையில் அவரை ஒரு பௌத்த பிக்கு வழியில் கண்டு தங்களது மடாலயத்திற்கு அழைத்துப் போனார். அங்கே கல்படுக்கைகளைக் கண்டார் மைக். மூடிய கண்களுடன் தியானக் கோலத்திலிருந்த நூறு பிக்குகளைப் பார்த்தார். முடிவில் மூத்த பிக்குவிடம் அழைத்துப் போகப்பட்டதும் பிக்கு இன்முகத்துடன் வரவேற்று அவர் குடிப்பதற்காக குளிர்ந்த தண்ணீரைத் தந்தார்.

மைக் அந்த மடாலயம் பற்றி நிறைய கேள்விகள் கேட்டார். பிக்கு எதற்கும் பதில் தரவில்லை. தன்னைத் தொடர்புகொள்ள முடியாமல் போய்விட்டால் மனைவி கவலைப்படுவாள். தனது சாடிலைட் போன் வேறு வேலை செய்யவில்லை. இங்கே ஏதாவது போன் இருக்கிறதா என்று கேட்டார் மைக்.

பிக்கு சிரித்தபடியே தான் பனிரெண்டு வயதில் இந்த மடாலயத்திற்கு வந்த பிறகு வேறு எந்த ஊருக்கும் போனதுமில்லை. விஞ்ஞானக் கருவிகள் எதையும் கண்ணால் பார்த்ததுகூட இல்லை என்றபடியே உங்கள் மனைவி எந்த நகரில் வசிக்கிறார் என்று கேட்டார்.

மைக் அமெரிக்காவின் நியூயார்க் நகரம் என்று சொல்லியதும் பிக்கு கண்களை மூடிக்கொண்டு 'உங்கள் வீட்டின் முன்னால் ஓக் மரம் ஒன்றிருக்கிறதா' என்றார். திகைப்புடன் 'ஆமாம்' என்றார் மைக். 'வீட்டின் நுழைவாசலில் உங்கள் மனைவி செய்த சுடுமண் சிற்பம் ஒன்று இருக்கிறதா' என்றார். மைக் அதற்கும் தலையாட்டினார். 'உங்கள் மனைவியின் பெயர் எலிசாதானே' என்றபடியே, 'வீடு அழகாக இருக்கிறது. பசுமையான தோட்டம். நீச்சல் குளம், சுவரில் மாட்டப் பட்டுள்ள ஓவியம் யாவும் அழகாக இருக்கின்றன. உங்கள் மனைவி மிக ரசனையானவர். நீங்கள் மடாலயத்தில் இரவு தங்கியிருக்கப் போவதைப் பற்றி உங்கள் மனைவியிடம் சொல்லியாகிவிட்டது. இனிக் கவலையில்லை. காலையில் நீங்கள் அவரோடு தொடர்பு கொள்ளலாம்' என்றார்.

மைக்கிற்கு எதுவும் புரியவில்லை. வெளியுலகம் தெரியாத இந்த நபர் எப்படி தன் வீட்டினை இவ்வளவு துல்லியமாக நேரில் கண்டது போல சொன்னார். எப்படி மனைவியிடம் தன்னைப் பற்றிய தகவலைத் தெரிவித்தார் என்று குழப்பமடைந்து போனார்.

பிக்கு புன்சிரிப்புடன் 'தூர திருஷ்டியை நீங்கள் அறிந்திருக்க மாட்டீர்கள். உங்களது விஞ்ஞான உபகரணங்கள் இல்லாமல் உலகின் எந்த மூலையில் இருக்கும் எந்த மனிதருடனும் தொடர்புகொள்ள முடியும். அது பெரிய விந்தையில்லை. எளிய அப்பியாசம் மட்டுமே என்றபடியே அவர் எதனால் வழி தவறிப் போனார்' என்று விசாரித்தார்.

மைக் தான் வழியில் பார்த்த வண்ணத்துப்பூச்சியைப் பற்றி சொன்னதும் பிக்கு சிரித்தபடியே 'அப்படியானால் நீங்கள் என்னைத்தான் பின்தொடர்ந்து வந்திருக்கிறீர்கள். நான் சில வேளைகளில் வண்ணத்துப் பூச்சியாக உருமாறி அலைவதும் உண்டு' என்றபடியே மைக்கின் கண் முன்னே தன் உரு கலைந்து ஒரு வண்ணத்துப்பூச்சியாகி மடாலயத்தின் ஜன்னல் வழியாக வெளியேறி காற்றில் பறந்துபோகத் துவங்கினார்.

மைக் தனக்குப் புரியாதது எதிர்காலமில்லை. கடந்த காலம் மட்டுமே என்ற முடிவுடன் வண்ணத்துப்பூச்சியின் பின்னால் ஓடத் துவங்கினார்.



வரலாறு, எதார்த்தம், புனைவு என்ற எல்லைகளைக் கடந்து செல்கின்றன எஸ். ராமகிருஷ்ணனின் சிறுகதைகள். மனித வாழ்வின் அழிவுகள், வீழ்ச்சிகளுக்கு இடையிலும் பெருகிடும் வாழ்வின் மகத்துவங்களை அடையாளம் காட்டுகின்றன இக்கதைகள்.

காலனியம் ஏற்படுத்திய மோசமான விளைவுகளைத் தொடர்ந்து எஸ்.ரா. தனது சிறுகதைகளில் பதிவு செய்து வருகிறார். அவை அழுத்தமான வரலாற்று நினைவுகள்.

குறுங்கதைகள், மிகைபுனைவுகள், அதிகதைகள், மாய யதார்த்தக் கதைகள், வரலாற்று மீள்புனைவுகள், நடப்பியல் கதைகள், உருவகக் கதைகள் எனப் புனைவின் எல்லையற்ற சாத்தியங்களை வெற்றிகரமாக நிகழ்த்திக் காட்டுவதே இவரது எழுத்தின் சாதனை.

எஸ். ராமகிருஷ்ணனின் சிறுகதைகள் ஆங்கிலம், மலையாளம், ஹிந்தி, வங்காளம், உருது, தெலுங்கு, கன்னடம், பிரெஞ்சு, ஜெர்மன் உள்ளிட்ட மொழிகளில் மொழிபெயர்ப்பு செய்யப்பட்டுள்ளன.



உயிர்மை
பதிப்பகம்

₹ 410



ISBN - 978-93-81975-74-9




www.uyirmmai.com